பணம் - சிறு விளக்கம்

— க்ரௌதர் (ஜியோஃப்ரி)

# பணம் - சிறு விளக்கம்

## (AN OUTLINE OF MONEY)

ஆசிரியர்

**ஜியோஃப்ரி கிரௌதர்**

தமிழாக்கம்

**கோ. இராதாகிருட்டினன், எம்.ஏ.,**

துணைப்பேராசிரியர் (பொருளாதாரம்)

மாநிலக் கல்லூரி, சென்னை.



**தமிழ் வெளியீட்டுக் கழகம்**

தமிழ்நாடு - அரசாங்கம்

First Edition — February, 1965.

B.T.P. No. 66.

# An Outline of Money

GEOFFREY CROWTHER

Translation

G. RADHAKRISHNAN



Price Rs. 10. 00

This translation of 'AN OUTLINE OF MONEY' By Geoffrey Crowther (1965) is Published by arrangements with M/s. Thomas Nelson and Sons Limited, Edinburgh, Scotland.

Printed by
THE IDEAL PRINTERS,
MADRAS.

# அணிந்துரை

(திரு. எம். பக்தவத்ஸலம், தமிழக முதலமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்விமொழியாக ஆக்கி ஐந்து ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்ல மெல்ல மறைந்துவருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம் [illegible]யே திருப்திகரமாக நடைபெற்று வருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான **பணம்—சிறு விளக்கம்** என்ற இந்நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் **66** ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான **35** நூல்களையும் சேர்த்து இதுவரை **101** நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலையாசனத்தில் அமர்ந்துள்ளாள். எனவே, இவ் அன்னையை வாழ்த்துவோமாக. உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை ஆதலின் உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெற வேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும், ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

எம். பக்தவத்ஸலம்

# முதற் பதிப்பின் (மூலநூலின்)

# முகவுரை

இந்நூலின் ஒரே நோக்கம் தற்போதைய நமது பணமுறை எவ்வாறு இயங்குகிறதென்பதனை விளக்குவதே யாகும். பணக் கோட்பாட்டில், புதிய கருத்துகள் அல்லது ஒரு குறிப்பிட்ட பணக் கைக்கோள் ஆகிய இவற்றைப்பற்றிக் கூறுவது இந்நூலின் நோக்கமல்ல. எனக்குத் தெரிந்தவரை சிக்கலான பிரச்சினை எதையும் இந்நூலில் நான் ஆராயாமல் விடவில்லை. இதனைப் படிக்கும் வாசகர்களும், நூலாராய்ச்சியாளர்களும் ஈண்டு ஒன்றை மனத்திற் கொள்வார்களென நம்புகிறேன். அதாவது பணத்தைப் பற்றி முழுவதையும் கூறுவது இந்நூலின் நோக்கம் அன்று. பண முறையைப்பற்றி நிரம்பத் தெரிந்திராத சாதாரண மனிதர்கள் புரிந்துகொள்ளுமளவிற்குப் பணக் கோட்பாட்டின் அடிப்படைகளை மட்டும் இந்நூல் சுட்டிச் செல்கிறது. பணமுறை முழுவதையும் முறையாகக் கற்க விழையும் மாணுக்கருக்கு மிகச் சிறந்த நூல்கள் எத்தனையோ இருக்கின்றன.

இந்நூலினை எழுத நெடுங்காலமாயிற்று. நூலின் முதற்பதிப்பு 1932ஆம் ஆண்டில் எழுதத்தொடங்கப்பெற்று 1935ஆம் ஆண்டில் முடிக்கப்பெற்றது. இப்பதிப்பு முடிவுறுந்தறுவாயில் போர் துவங் கியது. போரும் அதன் பின்னர் விளைந்த விளைவுகளும் பணத்தைப் பற்றி நமக்கு நிறையக் கூறுகின்றன. போருக்கு முன்னருள்ள சகாப்தத்தின் உதாரணங்களைக் கொண்டதொரு நூலை அச் சகாப் தம் முடிவடைந்த பின்னர் வெளியிடுவது அறிவீனமாகத் தோன்றக் கூடும். ஆயினும் ஒரே ஒரு நிகழ்ச்சி இந் நிலையைச் சமாளிக் கிறது. 1914-18ஆம் ஆண்டுகளில் நடந்த போரின்போதும் போருக்குப் பின்னரும் ஏற்பட்ட மாற்றங்களைப்போன்று தீவிர மான மாற்றங்கள் இச்சமயம் ஏற்படவில்லை. நெடுங்காலமாகச் சரளமாக இயங்கிக்கொண்டு வந்த ஒரு முறை அப்போது மாற்ற மடைந்துகொண்டிருந்தது. ஒரு பத்தாண்டுகளாகவே பண முறைக் குழப்பங்களால் நாம் சூழப்பட்டுள்ளோம். இதன் காரண மாக ஆழ்ந்த சிந்தனைகளை நிரம்பச் செய்யவேண்டியவர் களாக இருக்கிறோம். போருக்கு இணையான துன்பங்கள் நமக்கு ஏற்கெனவே ஏற்பட்டுள்ளன. இந்நூல், போருக்குப் படிக்கப்படும்போது, இதில் கூறப்பட்டுள்ள பல உ

வழக்கற்றுப் போனவைகளாகவும், இதில் காணும் பணக் கைக்கோள் சம்பந்தமான கூற்றுகள் முற்றுப்பெருதனவாகவும் தோன்றக் கூடும்; ஆயினும் அவைகள் தவருனவைகளாகத் தோன்றமாட்டா வென நான் நிச்சயமாக நம்புகிறேன்.

கடைசி அத்தியாயத்தின் ஒரு சில பகுதிகளைத் தவிர இந்நூலில் என் சொந்தமானவைகளெனக் கூறத்தக்கவை யொன்றுமில்லை. இந்நூலில் உள்ள அனைத்தையும் நான் கடன் வாங்கியுள்ளேன் என்பது இதனுல் தெளிவாகிறது. கருத்துகளைக் கடன் பெற்றமைக்கு நான் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன். கருத்துகளும் கைக்கோள்களும் பல்வேறு மூலங்களினின்றும் எடுத்தாளப்பட்டுள்ளமையால், எந்தக் கருத்து அல்லது எந்தக் கைக்கோள் எந்தக் குறிப்பிட்ட மூலத்தினின்றும் எடுத்தாளப்பட்டதெனக் கூறுவது இயலாததாகும். என்னுல் ஒரு சில மூலங்களை மட்டும் கூற இயலும். 'தி எக்கானமிஸ்ட்' என்னும் ஏட்டில் எனக்கு முன்பு இருந்த ஆசிரியர்களான திரு. வால்ட்டர் பேகட், திரு. ஹார்ட்லி விதர்ஸ், சர் வால்ட்டர் லேய்டன் ஆகியவர்களுக்கு நான் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன். இந் நூலினை எழுத அவர்கள் எனக்கு வழித்துணைகளாக இருந்தனர். பணக் கருத்துகளைச் சுவைமிக்கனவாகவும் அறிவுக்கு நல்விருந்தாகவும் வடித்தெடுக்கும் அரியதொரு கலையினை அவர்களிடமே நான் கற்றேன். திரு. ஜே. எம். கெயின்ஸ் அவர்களுக்கு எனது தலைமுறையைச் சார்ந்த ஒவ்வொரு பொருளாதார நிபுணரும் கடமைப்பட்டுள்ளதுபோன்று நானும் வெகுவாகக் கடமைப்பட்டுள்ளமையை இந்நூலே உணர்த்தும். பொருளாதார நிபுணர்கள் கெயின்ஸின் கருத்து ஒன்றினைத் தங்களது நூல்களில் அவ்வப்போது எடுத்துக் கையாளுவது வழக்கம். ஆனுல், நமது தற்போதைய பணக் கோட்பாட்டின் அடிப்பீடம், மற்றப் பொருளாதார நிபுணர்களைக்காட்டிலும், கெயின்ஸ் அவர்களால்மட்டுமே ஆக்கப்பட்டதாக வுள்ளது. கெயின்சின் நூலாகிய 'பணம்பற்றிய தனி நூல்' (Treatise on Money) 1930ஆம் ஆண்டில் வெளிவந்ததிலிருந்து அத்துடன் உடன்பட்டோ அல்லது முரண்பட்டோ பணம்பற்றிய கருத்துகள் பெரிதும் மாறுபடத் தொடங்கின. தற்காலப் பணக் கோட்பாட்டினை அமைப்பதில் கேம்பிரிட்ஜ் பொருளாதாரக் கருத்தினர் குழாத்தின் (Cambridge School of Economists) தற்கால அல்லது முன்னுள் அங்கத்தினர்களுக்குச் சமமாகப் பேராசிரியர் டி. எச். ராபர்ட்சன் அவர்களும் சளைக்காமல் தமது பங்கை ஆற்றியுள்ளார். கெயின்ஸ் பிரபு கூறியுள்ளதுபோல், கேம்பிரிட்ஜ் கருத்தினரில் யார் எந்தக் கருத் முதலில் அறிவித்தார், யார் எந்தக் கருத்தினைக் கூறவில்லை ால்ல இயலாதவாறு அத்தனைபேரும் ஒருவர்க்கொருவர்

சளைக்காமல் தமது பங்கைப் பணக்கோட்பாட்டிற்கு அளித்துள்ள னர். நான் பேராசிரியர் ராபர்ட்சன் அவர்களுடைய மாணுக்கன். மாணுக்கன் என்ற முறையில் எனது ஆசிரியருக்கான பிறிதொரு நன்றியையும் செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன். தக்க இடங்களில் எனக்கு உதவியாக இருந்த டாக்டர் தாமஸ் பாலோ, திரு. டக்ளாஸ் ஜாய், திரு. ஜே. டி. ஜி. கெல்லாக் ஆகியவர்களுக்கும் நான் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன். பார்வைப் படிகளைப் பார்வை யிட்டுத் திருத்தியும் பொருளடக்க அகரவரிசை யமைத்துத் தந்தும் அரும்பணியாற்றிய செல்வி பேட்ரிசியா, செல்வி லினட்டா ஆகிய இருவருக்கும் என் நன்றி. இந்நூலினை நான் தொடங்குவதற்குப் பெரிதும் காரணமாக இருந்த பேராசிரியர் ஜியார்ஜ் ஓ'பிரியன் (Prof. George O'Brien) அவர்களுக்கு நான் பெரிதும் கடமைப் பட்டுள்ளேன். அன்ஞர் எனக்கு ஊக்கம் அளித்திராவிட்டால் இந் நூலினை நான் தொடங்கியிருக்கமாட்டேன். அதுபோலவே என் மனைவிக்கும் நான் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன்; என் மனைவியின் அன்பு வற்புறுத்தலே இந்நூலை நான் எழுதி முடிப்பதற் குப் பெரிதும் துணை செய்தது.

லண்டன்,
செப்டம்பர், 1940.

ஜி.கி.

# இரண்டாவது பதிப்பின் (மூலநூலின்) முகவுரை

இந்நூலின் முதற் பதிப்பு மறக்க முடியாத 1940ஆம் ஆண்டில் கையெழுத்திடப்பட்டது. அப்போதே, வஞ்சப் போராட்டங்கள் நிகழ்ந்துகொண்டிருந்தன. இந்நிலையிலும், போருக்குப் பின்னர் இந்நூல் முழுவதும் காலங்கடந்த தொன்ருகப் போய்விடாதென நம்பினேன். எனவேதான், முதற் பதிப்பில், ‘போருக்குப் பின்னர் இதில் உள்ள பணத் தத்துவக் கூற்றுகள் முற்றுப் பெருதனவாக வேண்டுமாஞல் தோன்றலாம்; ஆனுல் தவருனவைகளாக இருக்க மாட்டா’ எனத் துணிந்து கூறினேன்.

இந்த நம்பிக்கை பெரிதும் ஈடேறியுள்ளதெனவே நான் கருதுகிறேன். முதற் பதிப்பில் கூறியுள்ள எடுத்துக்காட்டுகளையும் வினைச்சொற்களின் காலங்களையும் இப்பதிப்பில் திருத்தி யமைக் கப்படவேண்டியிருந்தது. புதியனவாகச் சில உட்பிரிவுகள் இணைக்கப்பட்டும் ஏற்கெனவேயுள்ள ஓரிரண்டு உட்பிரிவுகள் (Sections) நீக்கப்பட்டு முள்ளன. ஆனுல், மையக் கருத்துகள் எதுவும் மாற்றப்பெறவில்லை. முக்கியமாகவுள்ள கருத்துகள் எதனையும் மாற்றியமைக்கவேண்டும் என்ற எண்ணமும் எனக் கில்லை. அப்படியே, தேவையின் நிமித்தர், நான் செய்துள்ள மாற்றங்களும் பெருமளவு மாற்றங்களென்ரே அதிகப்படியானவை யென்ரே கூறுவதற்கில்லை. இந்நூலைப் புதுப்பிக்கும்போது உண்மையில் ஒரு பொதுவான எண்ணப் பிரதிபலிப்புமட்டும் என்னுள்ளே இருந்துகொண்டே யிருந்தது. அதாவது, 1947ஆம் ஆண்டில் நான் இந்நூலைப் புதுப்பிக்கும்போது இன்றும் 1940ஆம் ஆண்டின் (அதாவது போர் துவங்குவதற்கு முன்பு உடனடியாக உள்ள ஆண்டுகளில்—இந்நூல் முதல் முறையாக எழுதப்பட்ட போது) பிரச்சினைகளே என்னைச் சூழ்ந்துகொண்டிருப்பதைக் கண்டு வியப்புற்றேன். ஒப்பீடான அளவுகளின் பிரச்சினைகளைக் (problems of relative volumes) காட்டிலும் ஒப்பீடான மதிப்பு களின் பிரச்சினைகளே (problems of relative values) இந்த ஆண்டு களிலும் இருக்கக் கண்டேன். வாணிபச் சகடம் (trade cycle) விலைமாற்றங்களால்தான் ஏற்படுகின்றதென்றும் அது வேலை [illegible]ண்டி, அல்லது நாட்டு வருமானத்தின் அளவு ஆகியவற்றைப் [illegible] தாக [illegible]சேர்ந்ததன்று எனக்கூறுவதும், இதைப்போன்றே மாற்றங் [illegible]படவும் [illegible]

கட்டுப்பாடானது செலாவணிகளில் மிகைமதிப்பு (overvaluation) அல்லது குறைமதிப்பு செய்யப்படுவதால்தான் தேவைப்படுகிற தென்று கூறி அஃது அயல்நாட்டுச் செலுத்து நிலைகளில் ஏற்படும் இடைவெளியை நிரப்பக் கொண்டுவரப்படும் சாதனம் என்று கூறுதுவிடுவதும் ஓரளவிற்குப் பழைய நாகரிகமாகக் கருதப்படு கிறது. இந்நூலின் முதற்பதிப்பு வெளிவந்த காலம் கெயின்சின் தலைமையில், மாற்றமெதுவுமில்லாத நிலையான மதிப்புபற்றிய பொருளாதாரமானது (static value economics) காலத்திற்கேற்ற வாறு மாறுபாட்டினை யெய்தும் அளவுபற்றிய பொருளாதாரமாக (dynamic value economics) வளர்ச்சியடைந்துவரும் ஓர் இடை மாறுபாட்டுக் (transition) காலமாக இருந்தது. ஒருசிலவற்றை வலியுறுத்திக் கூறுவதை விடுத்து வேறு சிலவற்றை வலியுறுத்திக் கூறுவதொன்றே இப் பதிப்பில் செய்யவேண்டிய மாற்றமாக இருந்தது. கடந்த பத்தாண்டுகளில் பொருளாதாரப் பிரச்சினைகள் எவ்வளவு மாறுபாடடைந்துள்ளன என்பது முதற்பதிப்பைத் திருத்தி இப் பதிப்பை அமைக்கும்போதே தெரியவந்தது—நாம் அப் பிரச்சினைகளை ஆழ்ந்து ஆராயும் வகையினை மாற்றியமைக்க வேண்டியவர்களாக இருக்கிறோமென்பதை இப் பதிப்பே உணர்த் திற்று. தற்காலக் கருத்திற்கு ஒப்பாக—தற்காலக் கருத்துகளின் நாக ரிகத்திற் கொப்பாக என்று கூறவேண்டும்—இந்நூல் அமைந்துள்ள தெனக் கருதுகிறேன். மூன்றுவது பதிப்பு இந்நூலுக்குத் தேவைப் படும்போது அழுத்தம் திருத்தமாகக் கூறியிருப்பவைகள் சில வற்றை இன்னும் மாற்றியமைக்க நேரினும் வியப்படைவதற் கில்லை. முக்கியமாகச் செய்யப்பட்டுள்ள மாறுதல்களை ஈண்டு ஆராய்தல் நலம். முதல் அத்தியாயத்தில் அவ்வளவாக மாற்ற மில்லை. இரண்டாவது அத்தியாயத்தில் எடுத்துக்காட்டுகள் தற்காலத்திற் குகந்தவாறு மாற்றியமைக்கப்பட்டுள்ளன. பாங்கு முறையில் போரினுல் ஏற்பட்டுள்ள மாற்றங்களைப்பற்றிக் கூறும் சில பத்திகள் இத்துடன் இணைக்கப்பட்டுள்ளன. இவ் வத்தியாயத்தில் ‘பண அங்காடி’ என்னும் உட்பிரிவு கணிசமான அளவிற்கு விரிவாக்கப்பட்டுள்ளது—குறிப்பாக நாட்டுக்கடன் நிருவாகம் என்பது பணமுறையின் கீழ் அடங்குவதால் அதனை விளக்குமுகத்தான் இவ்வுட்பிரிவு விரிவாக்கப்பட்டுள்ளது. மூன் ருவது அத்தியாயத்தில் மாற்றம் எதுவும் தேவைப்படவில்லை. நான்காவது அத்தியாயத்திலும் அதிகமான மாற்றம் எதுவுமில்லை. ஐந்தாவது அத்தியாயத்தில் ஓரிரண்டு இடங்களில் கருத்தைத் தெளிவுபடுத்தவேண்டிச் சில மாற்றங்களைச் செய்துள்ளேன். ஆனால், கருத்துகளெதனையும் மாற்றவில்லை. பண அளவு (volume of money), ரொக்கநிலை விருப்பம், வட்டிவீதம் இவை களுக்கிடையேயுள்ள மும்முனை உறவைச் சற்று

விவரித்துள்ளேன். இவ்வத்தியாயத்தின் 'போர்ப் பொருளாதாரம்' என்னும் உட்பிரிவை முற்றிலும் மாற்றியமைத்து அதனைப் 'போர்க் காலப் பணம்' என்னும் உட்பிரிவின்கீழ் எழுதியுள்ளேன். இந் நூலின் முதற்பதிப்பு, இங்கிலாந்து பாங்கு கையாளும் ஆயுதங் களைப்பற்றிக் கூறும்போது, பண அளவின் அதிகரிப்பு-குறைப்பு (volume of expansions and contractions of money), வட்டிவீதங் களை அதிகரித்தல் அல்லது குறைத்தல் ஆகிய பணிகளைத் தனிப் பட்ட இரு வேறு பணிகளாகக் கூறியது. இந்தப் பதிப்பில் அப் பணிகள் ஒரு பொருளின் இரு முகப்புகளாகக் கூறப்பட்டுள்ளன. தற்போது அரசாங்கங்கள் முடிவானவையும் ஆழ்ந்தாராய்ந்தவையு மான கைக்கோள்களைக் கடைப்பிடிக்க ஆரம்பித்துவிட்டபடி யால்—இதனை அறுதியிட்டுக் கூறமுடியாதாயினும் 1939ஆம் ஆண் டிற்கு முன்பு அத்தகைய கைக்கோள்கள் இல்லையென்றே கூற வேண்டும்—மைய பாங்கை ஒரு தலைமைக் கட்டுப்பாட்டு அதிகாரி (Controller in Chief) என்ற நமது எடுகோளில் மாற்றம் தேவைப் பட்டது.

இந்நூலின் இரண்டாவது பாதியில் உள்ள ஏழாவது அத்தி யாயத்தில் மாற்றமெதுவும் தேவைப்படவில்லை யெனினும் முன் னோக்கிய மாற்று (Forward Exchange) பற்றிக் கூறும் உட்பிரிவை பின்னிணைப்பில் சேர்த்துள்ளேன். வருங்காலத்தில் இப் பகுதி அரும்பொருட்காட்சிசாலையில் (museum) வைப்பதற்குகந்தவாறு தான் இருக்குமெனக் கருதுவதால் (!) இதனைப் பின்னிணைப்பில் இணைத்துள்ளேன். எட்டாவது அத்தியாயத்தில் (மாற்று நிருவாக மும் கட்டுப்பாடும் என்னும் அத்தியாயம்) பல்வேறு பத்திகளைத் திருத்தி யமைக்கும்படி நேரிட்டது. அவ் வத்தியாயத்தின் கடைசி உட்பிரிவு மாற்றி வேறு வகையாக எழுதப்பட்டுள்ளது. ஆயினும் இவ் வத்தியாயத்தின் அமைப்பில் மாற்றம் ஒன்றும் ஏற்படவில்லை. ஒன்பதாவது அத்தியாயத்தின் பெரும் பகுதியும் வரலாறு சம்பந்தப்பட்டவையாகையால், அவ் வத்தியாயத்தின் கடைசிப் பகுதியில்மட்டுமே அடிப்படையான திருத்தம் தேவைப் பட்டது—பிரெட்டன் உட்ஸ் என்னும் புதியதோர் உட்பிரிவு சேர்க் கப்பட்டுள்ளது. பத்தாவது அத்தியாயத்தின் பெரும்பாலான பகுதியில் மாற்றம் எதுவுமில்லை; ஆரம்பப் பகுதியில்மட்டுமே மாற்றம் தேவைப்பட்டது. இந்த அத்தியாயத்தின் கடைசியில், ஐக்கிய அமெரிக்கா, ஐக்கிய அரசாங்கம் இந்நாடுகளின் போருக் குப் பிற்பட்ட அயல்நாட்டுச் செலுத்து நிலைகளால் ஏற்படும் பிரச் சினைகளைப்பற்றி சிறிது கூறவேண்டி யிருந்தது. சமுதாயக் கடன் (Social Credit) பற்றிக் கூறும் பின்னிணைப்பை இப் பதிப்பில் நீக்க வேண்டியதாயிற்று—அரும்பொருட்காட்சிசாலையில் வைக்கப்படு [illegible] வதற்குத் தகுதியில்லை.

முதற்பதிப்பில் பிழைகளைச் சுட்டிக் காட்டிய அன்பர்களுக்கும் இரண்டாம் பதிப்பிற்கான தங்களது கருத்துகளைத் தெரிவித்து உதவிய அன்பர்களுக்கும் நன்றி செலுத்த இவ்வாய்ப்பினைப் பயன் படுத்திக் கொள்கிறேன். முதற்பதிப்பில் அப்பட்டமான பிழை யொன்று சுட்டிக் காட்டப்பட்டது. இத்தகைய பிழை அச்சான பிறகு ஒருவர் பார்த்தாலொழிய அதற்கு முன்னர் நேரிடக்கூடும் என்று மனத்தாலும் எண்ண முடியாத அளவிற்குப் பெரியதொரு பிழையாகும். அன்பர்களின் இத்தகையதோர் அரும்பணி இடை யருது தொடரும் என நம்புகிறேன்.

லண்டன்,
டிசம்பர், 1947.

ஜீ.கி.

# தமிழாக்கியோன் முகவுரை

உலகத்தில், மனிதனின் படைப்புகளில், பணமே மிகவும் விநோதமானது. பண முறையைப்பற்றி முக்கியமாய்த் தெரிந்து கொள்ள வேண்டியவற்றை திரு. ஜியோஃப்ரிகிரௌதர் (Geoffrey Crowther) 'பணம்—சிறு விளக்கம்' (An Outline of Money) என்னும் இந்நூலில் சுருங்கச் சொல்லி விளங்க வைத்துள்ளார். பணமின்றி மகிழ்ச்சியில்லை; ஆயினும், பணத்தால்மட்டுமே மகிழ்ச்சியினைப் பெறுதல் இயலாது; மனிதனின் அறிவுத் திறம் அதனை வழி நடத்துதல் வேண்டும். பணத்திற்குத் தலைவன் மனிதனே. இந் நூலினைப் படித்து முடித்த பின்னர் இக் கருத்துகளே நமக்குத் தோன்றும்.

மூல நூலாசிரியரின் மனத்தோடு பின்னிப் பிணைந்தே அன்னாரின் கருத்துகளைப் பிறழாமல் தமிழில் வடித்துள்ளேன். பிழைகள் இருப்பின் இதனைப் பார்வையிடும் அன்பர்கள் அவற்றைச் சுட்டுமாறு பணிவன்புடன் வேண்டுகின்றேன். மறுபதிப்பில் தவறுகளைக் களைந்து செம்மைப்படுத்தலாம்.

தமிழாக்கம் செய்யும் இவ்வாய்ப்பினை அன்புடன் நல்கிய தமிழ் வெளியீட்டுக் கழகத்தினருக்கு நன்றியுடையேன்.

இத் தமிழாக்கம் தமிழன்னைக்கு மற்றுமோர் அணிகலனாக விளங்குமாயின் பேறு பெற்றவனாவேன்.

சென்னை,
6—2—65.

கோ. இராதாகிருட்டினன்

# பொருளடக்கம்

# 1. பணத்தின் தன்மை

## பணத் தோற்றம்

பணம் என்பதென்ன? அநேகமாக, ஒவ்வொருவரும் இவ் வினுவுக்குத் தாங்கள் விடையளிக்கக்கூடும் என்று நினைத்தபோதிலும், வெகு சிலரே விடையளிக்கக்கூடும். யானையை விவரிக்குமாறு கேட்கப்பட்ட ஒருவர், தான் அதைப் பார்த்தபிறகுதான் விவரிக்க இயலும் என்று விடையளித்ததே கருத்தானதாகும். நடைமுறையில், பணம் என்ருல் என்ன என்று அனைவருக்கும் தெரியும். ஆனுல், பணத்தின் அமைப்புப்பற்றி விளக்க வெகு சிலராலேயே முடியும். பணம், எவ்வாறு மற்றப் பொருள்களிலிருந்தும், பண்டங்களிலிருந்தும் வேறுபட்டதென்பதைத் தெளிவாகக் கூற ஒருசிலரால் தான் இயலும். இந்நூல் பணத்தைப்பற்றியதாகையால், பணத்தினை இன்னதென்று தெளிவாக விளக்குவது முதற் கடமையாகும். ஆனுல், இதற்கு நூலின் ஒரு முழு அத்தியாயமே தேவைப்படும். அப்படியும், சாதாரண மனிதர்களுக்குப் புரியும்படி செய்ய பணத்தை விரித்துரைத்தல்மூலந்தான் இயலும். யானையை, 'ஆஃப்ரிக்காவிலும் இந்தியாவிலும் காணப்படுகிற, வாயினூடே நீண்டு தொங்கும் துதிக்கையை உடைய, குட்டிபோட்டுப் பால் தரும் விலங்கு' என்று அகராதி விளக்குகிறது. இவ் விலங்கினை அடையாளங் கண்டுகொள்ள இவ்விளக்கம்சற்றேனும் பயன்தராது. பணத்திற்கு அகராதியின் விளக்கமாவது: 'எந்த ஒரு பொருளாவது ஒரு மாற்று மத்திமமாக (medium of exchange) அல்லது மதிப்பின் (value) அளவையாக (measure) அல்லது மதிப்பின் குறியீடாக, வழக்கமாக அல்லது மரபு வழக்கமாகப் (conventional) பயன்படுத்தப்படுவதாகும்.' இந்த விளக்கமும், முன் கூறியதைப்போலவே, தெளிவானதாகவோ அல்லது விவரிப்பதாகவோ இல்லை.

இனி, பண வளர்ச்சியின் வரலாற்றுத் துணைகொண்டு பணத்தினை விரித்துரைக்க முற்படுவோம். புராதன வரலாற்று ஆராய்ச்சி

இவ் வரலாற்றின் பெரும்பகுதியை உண்மை என்று உறுதிப்படுத்தியிருப்பினும், சில பகுதிகள் கற்பனேயே. நமக்கு நூலியல் புராதன சரித்திரத்தைவிடப் (scientific anthropology) பணத்தைப் பற்றிய வாதப்பொருத்தமான கருத்துகளின் வளர்ச்சியே முக்கியமாகும். இதில் கற்பனை சிற்சில இடங்களில் வரலாற்று நிகழ்ச்சிகளை ஆக்கிரமிக்க அனுமதிக்கப்படலாம்.

வணிக விலங்கான மனிதனின் பழைய நிலைகளில், அவன் வாணிபம் முழுமையும் பண்டமாற்ருகவே இருந்தது. வேடன், தன்னிடமுள்ள பச்சைத் தோல், தோல், மாமிசம் முதலியவற்றை உழவனுக்குப் பரிவர்த்தனைசெய்து, தானியம், வைக்கோல் முதலியவற்றைப் பெற்ருன். இன்னும் சற்று வளர்ச்சியடைந்த நிலையில், இவர்களிருவரும் தங்கள் பண்டங்களைக் கிராமத் தொழில் வினைஞனின் (craftsman) பண்டங்களுக்கு விற்றுவந்தனர். இப் பண்டமாற்றுமுறை வாணிபத்தில் பல பெருந்தீங்குகள் உண்டு. அவற்றில் ஒன்று வாணிப ஒப்பந்தத்தில் ஏற்படும் இடர்ப்பாடு. இவ் வாணிபத்தில் இரண்டு அல்லது மூன்று முக்கியப் பண்டங்களின் தராதர மதிப்பு நன்கு தெரிந்திருக்கக்கூடும். உதாரணமாக, பத்து மரக்கால் தானியம் ஒரு பசுவைப் பண்டமாற்ருகப் பெறக்கூடும் என்ற நியதி நீண்ட காலமான மரபு வழக்கமாக இருக்கிறதெனக் கொள்வோம். ஆனுல், வாணிபத்தில் அதிகம் ஆளப்படாத பண்டங்களின் மதிப்பை எவ்வாறு நிர்ணயிப்பது? ஒரு புலித்தோலுக்கு எத்தனை மரக்கால் தானியம் மாற்ருகக் (exchange) கொடுக்கப்படவேண்டும்? அதுபோல ஒரு வெள்ளாட்டிற்கு எத்தனை வாழைப் பழங்கள்? இளமனைவிக்கு எத்தனை பன்றிகள்? இவைகள் தனிப் பண்டமாற்றில் உள்ள, சுலபத்தில் களையமுடியாத பிரச்சினைகள். பணத்தின் முதற் பணி இப் பிரச்சினைகளுக்குத் தீர்வுகாணத் துணை புரிவதே. பண்டங்கள் யாவும் ஒரு பண்டத்தின் மதிப்பளவால் நிர்ணயிக்கப்படுகின்றனவென வைத்துக்கொள்வோம். அப்பண்டம் வெள்ளாடு (கிழக்கு ஆஃப்ரிக்கக் குடிகளிடையே இன்றும் அமலில் இருப்பதுபோல) எனக் கொள்வோம். எந்தப் பொருளும் வெள்ளாட்டினுல் மதிப்பளவை செய்யப்படும். இதன்மூலம் இரண்டு பண்டங்களின் மாற்றுப் பேரமும் சுலபமாக நிர்ணயிக்கப்படுகிறது. ஒரு வேட்டைக் கத்திக்குப் பத்து வெள்ளாடுகள், ஐம்பது வாழைப்பழங்களுக்கு ஒரு வெள்ளாடு, ஐந்து மரக்கால் தானியத்திற்கு இரண்டு வெள்ளாடுகள், அழகிய இளமனைவிக்கு ஆறுவெள்ளாடுகள்—இப்படி ஒவ்வொரு பொருளுக்கும் மாற்றுப் பேரம் நிர்ணயிக்கப்படுகிறது. இந்தப் புதிய அமைப்பு நமக்கு வெகு சாதாரணமாகத் தோன்றுகிறது. நீளத்தை அளக்க எவ்வாறு அடி அல்லது மீட்டரையும், நிறையை அளக்கப் பவுண்டு அல்லது கிராமையும், வெப்பத்தை

அளக்க டிகிரியையும் தோற்றுவித்ததைப்போன்றதே இப் புதிய கண்டுபிடிப்பும். சந்தேகமில்லாமல் அப்போதைய சூழ்நிலையில் இக் கண்டுபிடிப்பு, ஒரு புதுமைக் கருத்தாக இருந்தது. இந்தக் கண்டு பிடிப்பு ஒரு சோம்பலான திறமையாளருடையதாக இருக்கவேண்டும். மூன்று மரக்கால் தானியம் ஐந்து வாழைப் பழங்களுக்குச் சமம், இருபது வாழைப்பழங்கள் ஒரு வெள்ளாட்டிற்கு, இருபது வெள்ளாடுகள் ஒரு புலித்தோலுக்கு என்றால், ஒரு புலித்தோலுக்கு எத்தனை மரக்கால் தானியம்? இக் கணக்கினால் இடருற்ற மேற் குறிப்பிட்ட திறமையாளரின் தோற்றுவிப்பாக இது இருக்க லாம். ஆனால், சந்தேகமின்றி இது ஒரு புதிய கண்டுபிடிப்பே; சாதாரணப் பண்டமாற்று நிலையிலிருந்து பணக்கணக்கு முறையை மனிதன் அமைக்க உள்ளுணர்வுத் திறனைத் தோற்றுவித்ததும் இதுவே.

பணம் கணக்கலகாகப் பணி புரிகிறது. அதன் முக்கியப் பணிகளில் இது முதலாவதாகும். அது ஏனைய பொருள்களின் மதிப்பை ஒப்பிடும் அளவுகோலாக அல்லது பொது அளவையாகப் (standard measure) பணிசெய்கிறது. இந்நிலையிலும் வாணிபம் பண்டமாற்று முறையிலேதான் இருந்தது; வாழைப்பழங்கள் தானியத்திற்காகவும், எருமைத் தோல் வைக்கோலுக்காகவும் பண்டமாற்று செய்யப்பட்டது. ஆனால், பண்டமாற்று ஒப்பந்தங்கள் ஒரு குறிப்பிட்ட பொதுப் பண்டத்தின் அடிப்படையில் நிர்ணயிக்கப் பட்டன. இந்நிலையில் நாடு வெள்ளாட்டுத் திட்டத்தில் இருந்தது (goat-standard). பணம் இச் சமயத்தில் தோன்றியது.

இக் கணக்கலகின் தோற்றம் பண்டமாற்றின் குறைபாடுகளை நீக்கவில்லை. பண்டமாற்றில் சம்பந்தப்பட்ட இருதரப்பினரையும் ஒருங்கே கொண்டுவந்து நிறுத்துவது கடினமானது. தானியம் வைத்திருக்கும் ஜான் என்பவனுக்கு எருமைத் தோல் தேவைப் படலாம். ஆனால், அதேநேரத்தில் எருமைத் தோல் வைத்திருக்கும் ஹென்ரிக்கு தானியம் தேவைப்படாமல் இருக்கலாம். தானியம் தேவைப்படும் வில்லியம் என்பவனுக்கு அவனிடம் எருமைத்தோல் இல்லாமலிருக்கலாம். பண்டங்கள் குறைவாக உள்ள ஒரு சாதாரணச் சமுதாயத்தில் இந்த இடர்ப்பாடுகள் தவிர்க்கப்படலாம். வாணிபத்திலும், தொழிற் பகுப்பிலும் (division of labour), பண்டங்கள் விருத்தியாவதிலும் புதிய வளர்ச்சி ஏற்படும்போது, பண்டமாற்றுமுறை மேலும்மேலும் கடினமுள்ளதாக அமைகிறது. இவ் விடர்ப்பாடும் பணத்தால் தவிர்க்கப்படும். கணக்கலகு (unit of account) மாற்று மத்திமமாகவும் (medium of exchange) அமையும். தானியம் இனிமேல் எருமைத் தோலுக்கே 'பண்ட

மாற்றம்' செய்யப்பட வேண்டுவதில்லை; தானியம் வெள்ளாடு களுக்காக விற்கப்படுகிறது; வெள்ளாடுகள் எருமைத் தோலுக் காக விற்கப்படுகின்றன. எந்தப் பண்டமும் வெள்ளாட்டிற்குப் பரிவர்த்தனை செய்யப்படலாம்; அதுபோல வெள்ளாட்டுக்குப் பதிலாக எந்தப் பண்டமும் பண்டமாற்றாகப் பெறக்கூடும். வெள்ளாடுகளைக் கொடுத்துவிட்டுப் பதிலுக்கு எந்தப் பண் டத்தையும் பெறலாம்; எந்தப் பண்டத்தைக் கொடுத்துவிட்டும் வெள்ளாடுகளைப் பெறலாம். ஒவ்வொரு வாணிப பேரத்திலும், பணம் நிபந்தனைகளை நிர்ணயிப்பதோடல்லாது பரிவர்த்தனையையும் நிர்ணயிக்கிறது. முன்னர் தானியத்தைத் தோலுக்காகப் பண்ட மாற்று செய்யும் ஒற்றை மாற்றுமுறை (single exchange), தற்போது தானியத்திற்காக வெள்ளாடுகளும், வெள்ளாடுகளுக்குப் பதிலாகத் தோலும் பண்டமாற்று செய்யும் இரட்டை மாற்று முறை (double exchange) யாகின்றது. தானியத்தை விற்கும் ஒருவன் தோல் விற்கும் ஒருவனைத் தேடி அலையவேண்டியதில்லை. அவர்கள் ஓர் இடைத்தரகர்மூலம் தங்கள் வாணிபத்தை நடத்துகின்றனர். பணந்தான் முதல் தரகராக அமைந்தது.

கணக்கராகவும், மாற்று மத்திமமாகவும் பணிபுரிகின்ற பணத்தின் இவ்விரு பணிகளும் அடிப்படையான முக்கியப் பணி களாம். முக்கியத்தில் குறைவில்லாத மூன்றாவது பணியொன்றும் உள்ளது. பண்டமாற்று முறையில் எவனொருவன் தான் விரும்பும் பண்டங்களை நிறையச் சேகரித்துவைத்துள்ளானோ, அவனே பணக்காரன். அவன் தானியத்தை விளைத்தற்கு நிறைய நிலங் களைப் பெற்றிருக்கவேண்டும்; மிருக வேட்டைக்குக் காடுகளையும், சுமை சுமந்து செல்வதற்கும் பாலுக்கும் கால்நடைகளையும், நிலத்தை உழப் பணியாளர்களையும், மகசூல் தவறிப்போகும் ஆண் டிற்காகச் சேகரம்செய்யக் களஞ்சியங்களையும் அவசியம் பெற் றிருக்கவேண்டும். பணம் தோன்றியபிறகு செல்வத்தின் ஈட்டுதல்—குறைந்தது செல்வத்தைச் சேகரம் செய்துவைத்தல்—சுலபமான காரியமாகிவிட்டது. வெள்ளாடுகள் பணமாக இருப்பின், அவற் றைக் கொண்டு தானியம், வேட்டை—வீட்டு விலங்குகளையும் வாங்கமுடியும்; பணியாட்களை வேலைக்கமர்த்திக்கொள்ளவும், பஞ்சம் நேர்ந்த காலத்தில் பிறரின் சேகரிப்புகளை வாங்கவும் இய லும். எனவே, பணக்காரன் செய்யவேண்டுவதெல்லாம் தன் செல்வத்தை வெள்ளாடுகளாக நிறைய வைத்துக் கொள்வ தொன்றே. பணம் மதிப்பு நிலைக்களனாக (store of value) பணி யாற்றும். இது பணத்தின் மூன்றாவது பணியாகும்.

பணமாகப் பணியாற்றும் எந்தப் பொருளும் அல்லது பண்ட மும் இந்த மூன்று முக்கியப் பணிகளையும் செய்தாகவேண்டும். இப்

பணிகளின் சேர்க்கையே பணத்தின் கண்டுபிடிப்பிற்கு வழிவகை செய்தது. பணத்தின் ஏனைய வளர்ச்சி யாவும் இவ் வடிப்படை ஆதாரங்களினால் வடிக்கப்பட்டவையே. மனிதனின் கண்டுபிடிப்புகளில் பணம்தான் மிகவும் அடிப்படையானது. ஒவ்வோர் அறிவியல் துறைக்கும் ஓர் அடிப்படையான கண்டுபிடிப்பொன்று உண்டு. பொறித்துறையில் (mechanics) சக்கரமும், விஞ்ஞானத்தில் நெருப்பும், அரசியலில் வாக்குச் சீட்டும் அடிப்படையான கண்டுபிடிப்புகள். அதுபோன்று, பொருளாதாரத்தில்—மனிதனின் சமூக வாழ்வின் வாணிபத்துறை முழுமையும்—பணம் ஓர் இன்றியமையாத கண்டுபிடிப்பாகும். இதன் அடிப்படையில்தான் ஏனைய யாவும் அமைந்திருக்கின்றன.

## விலையுயர்ந்த உலோகங்களும் நாணயங்களும்

எடுத்துக்காட்டாக முன்னர் விவரிக்கப்பட்ட வெள்ளாட்டுப் பணம் (goat–money) என்பது வேடிக்கையன்று. வீட்டு விலங்குகளே ஆதி விவசாயக் குடிகளின் செல்வமாகக் காட்சியளித்தன. அவைகளே பணமாகப் பயன்படுத்தப்பட்டன. ஆனால், எம் மிருகமும் பணமாகப் பயன்படுத்தப்பட்டபோது பெரிய இடர்ப்பாடுகள் நேர்ந்தன. எல்லா வெள்ளாடுகளும் ஒரே மாதிரி இருப்பதில்லை. ஒருவன் ஒரு துண்டு நிலத்தை இருபது வெள்ளாடுகளுக்கு விற்கிறான் என்று வைத்துக்கொள்வோம். அவன் பெறும் வெள்ளாடுகள் மிகவும் இளைத்தவையாகவோ அல்லது வாங்குகிற மந்தையிலேயே மிகவும் பிணிபிடித்தவையாகவோ இருந்தால், தான் ஏமாற்றப்பட்டதாக நினைப்பான். மேலும், வெள்ளாடுகளில் இன்னும் மற்றக் குறைபாடுகளுமுண்டு. அவைகளுக்கு நோய் பரவினால், ஒருவன் செல்வம் முழுமையும் அழிந்துவிடும். அவைகளின் இனப்பெருக்கப் பருவத்தின்போது, சமுதாயத்தில் பண அளிப்பு மிக அதிகமாக இருக்கும். ஒருவனுடைய பணம் வெளியில் தப்பித்து ஓடிவிடாதபடிக்கும், மற்றைய விலங்குகளுக்கு இரையாகாமலுமிருக்க எச்சரிக்கையுடனிருக்க வேண்டும். வீட்டு விலங்குகளுக்கு மிக அதிகமான குறைபாடுகளிருப்பதைப்போல, மற்றப் பண்டங்களில் நிறைய நன்மைகள் இருக்கின்றன. எல்லாப் பண்டங்களைக் காட்டிலும் உலோகங்களே பணமாகப் பயன்படுவதற்குச் சாலச் சிறந்தவையென்பது சமீபத்தில்தான் கண்டுபிடிக்கப்பட்டது. உலோகங்களைக் கையாள்வது மிக எளிது. அவைகளின் அளவைச் சுலபமாக அறுதியிடலாம். அவைகள் அழிவதுமில்லை. அவைகளை வைத்துக் காப்பதும் எளிது; சேகரித்துவைப்பதற்கென்று பெரிய இடமொன்றும் தேவையில்லை. ஓர் ஆண்டில் உலோகங்களின் உற்பத்தி, புழக்கத்திலுள்ள உலோகங்களின் அளவில் ஒரு சிறிய உறுப்

புப் பகுதியே (fraction) யாகையால், அவ் வுற்பத்தியின் அளிப்பு (supply) ஒவ்வோர் ஆண்டிலும் அதிகமாக வேறுபடுவதில்லை. எனவே, இதற்கடுத்த நாகரிக காலத்தில் உலோகங்களே பெருவாரியாகப் பணமாகக் கையாளப்பட்டுள்ளதைக் காண்கிறோம்.

விலையுயர்ந்த உலோகங்கள் யாவற்றிலும் பொன்னும் வெள்ளியுமே சிறப்பான பணவுலோகங்களாகக் கருதப்பட்டன. ஏனைய உலோகங்களும் பணமாகக் கையாளப்பட்டன. இரும்பு, தாமிரம், வெண்கலம் ஆகிய இவையும் ஒவ்வொன்றும் ஒவ்வொரு சமயத்தில் ஆளப்பட்டன. ஆனால், குறைந்தது மேனாட்டு நாகரிகத்திலாவது, பொன்னும் வெள்ளியும் மற்ற உலோகங்களை விலக்கித் தாமே இடம்பெற்றன. இங்கே சற்று விலையுயர் உலோகங்களுக்கும் பணத்திற்குமுள்ள தொடர்பைச் சற்று ஆராய்வதும் பொருத்தமுடையதாகும்.

பணம் கண்டுபிடிக்கப்பட்டவுடன், அது மனிதர்களின் அடையவேண்டிய ஆசைப்பொருளானது. பணம் எப் பொருளையும் வாங்குமாகையால், கொள்ளுவதற்குரிய மிகச் சிறப்பான பொருளாகியது. உண்மையில், மனிதர்கள் விரும்பியதெல்லாம் பணத்தைக்கொண்டு வாங்கும் செல்வத்தையே; பணத்தின் உண்மையான மதிப்பும் இதில்தான் அடங்கியுள்ளது. பணத்தைப் பணம் என்பதற்காகவே பூட்டிவைத்து, அதனால் யாதொரு நற்பயனையும் அடையாத கஞ்சனொருவனை இயல்பு விதியைக் கடந்த ஒரு பிரகிருதியாகக் கருதுகிறோம். ஆனால், சாதாரண மனிதனும், கஞ்சன் செய்கிற தவற்றை முற்றிலும் தவிர்த்துக்கொள்வதில்லை; பணமே சுயமதிப்பு வாய்ந்த ஒரு பொருளாக அவன் கருதுகிறான். எந்தச் சமுதாயத்திலும், பணமாக இருக்கத் தேர்ந்தெடுக்கப்படும் பொருள், அநேகமாக எப்போதும் மதிப்புள்ள பொருளாகவே உள்ளது. மதிப்புள்ள பொருள்கள் பணமாக இருப்பதில் பல நன்மைகள் உண்டென்பதை இன்னும் சற்று நேரத்தில் ஆராயப் போகிறோம். பணத்தின் மதிப்பு, அதற்கு இந்த நன்மைகளை அளித்துவிடவில்லை. ஒரு மதிப்பும் இல்லாத ஒரு பொருளும் பொருத்தமாகவும் திறமையாகவும் பணமாகப் பணிபுரியலாம். அச்சடித்த காகிதத் துண்டுகளைப் பணமாகப் பயன்படுத்தும் நமக்கு இது தெரிந்தே இருக்கவேண்டும்.

ஏனைய செல்வத்திற்கெல்லாம் அடிப்படையான பணம் மதிப்பு வாய்ந்த ஒரு பொருளைத் தன்னகத்தே பெற்றிருக்கவேண்டும் என்கிற எண்ணம் மனித உளப்பாங்கில் ஆழமாகப் பதிந்திருக்கிறது. இன்றைக்கும் சாதாரண மனிதன் ஒருவனை, எது நல்ல

பணத்தை ஆக்கக்கூடுமென்று கேட்டால், அதன் மதிப்பென்றே அவன் பதிலளிப்பான். மிகவும் மதிப்புவாய்ந்த பணம் பொற்பணமாக இருப்பதால், அதனையே அவன் யாவற்றிலும் சிறந்த பணமெனக் கருதுகிறன். பின் எவ்வாறு பயனற்ற காகிதத் துண்டுகளை நாம் பணமாகக் கொள்கிறோம் என்று அவனைக் கேட்டால், அவை இங்கிலாந்து பாங்கியிலுள்ள பொன்னால் தாங்கப்பட்டுள்ளன (backed) என்று விடையளிப்பான். பணம் மதிப்புள்ள ஒன்றால் ஆக்கப்பட்டிருக்கவேண்டும் அல்லது குறைந்தது தாங்கப்பட்டிருக்கவேண்டுமென்னும் இந்த நம்பிக்கை சில சமயங்களில் நெடிது செல்லும். உதாரணமாக, 1923-ஆம் ஆண்டில் ஜெர்மனியில் ஏற்பட்ட பணவீக்கம் ஜெர்மானியர்கள் பணத்தின்மீது கொண்ட நம்பிக்கையைத் தகர்த்தெறிந்தது. உடனடியாக 'நல்ல' பணத்தை உண்டுபண்ணுவதற்கு உடனடியான தேவை ஏற்பட்டது. அரசினர் ரென்டென்மார்க்கு (Rentenmark) என்னும் புதிய செலாவணியைத் (currency) தோற்றுவித்தனர். இந்த ரென்டன்மார்க்கு நாட்டின் நிலத்தால் 'தாங்கப்படுகிறது' என்று கூறப்பட்டது. இதன்படி நாட்டிலுள்ள நிலங்கள் யாவற்றிற்கும் ஒரு சட்டபூர்வமான விலை நிர்ணயிக்கப்பட்டது. ஆனால், ரென்டென்மார்க்கு காகிதப் பணமே; நிலமன்று. அதேபோல ரென்டென்மார்க்கை வைத்திருக்கும் ஒருவன் அது தாங்கப்பட்டிருக்கும் நிலத்தை அடைவதற்கும் இயலாது. இப் பெரிய பித்தலாட்டம் நடைமுறையில் நன்கு இயங்கியே வந்தது. எந்த ஒரு பணமும் மதிப்புள்ள ஒரு பொருளைத் தன்னகத்தே பெற்றோ அல்லது உணர்த்தியோ (represent), அது ஒரு செம்மையான பணம் என்னும் இந்த நம்பிக்கை ஜெர்மானியர்களிடம் வலுப்பெற்றிருந்தமையால், ரென்டென்மார்க்கு ஏற்றுக்கொள்ளப்பட்டது.

ஆனால், இந்த நம்பிக்கை தவருனதாகும். பணத்தின் உறுபொருளின் (substance) மதிப்பு நல்ல பணத்தை உண்டாக்குகிறதென்றால், ஒவ்வொரு சமுதாயத்திலும் மிக உயர்ந்த உறுபொருளையே பணத்தை உண்டுபண்ணுவதற்குக் கொள்வர் என்று எண்ண இடமிருக்கிறது. உண்மையில், ஒரு சமுதாயமும் அவ்வாறு செய்வதில்லை. விலையுயர்ந்த உலோகங்களைக்காட்டிலும் விலையுயர்ந்த கற்கள்—வைரம், இரத்தினம், முத்து போன்றவை—தொன்றுதொட்டு எடைக்கு எடை மதிப்பு மிக்கனவாக இருந்து வந்துள்ளன. விலையுயர்ந்த உலோகங்களிலும் அதிவிலையுயர்ந்த உலோகம்தான் பணமாகப் பயன்படுத்தப்படுமென்பதும் அவசியமில்லை. பொன் எப்போதும் வெள்ளியைவிட மதிப்பில் உயர்ந்ததாகவே இருந்துவந்திருக்கிறது. ஆனால், வெள்ளிதான் பெரும்பாலும் பணமாக ஆளப்பட்டுவந்துள்ளது. உண்மையில், ஃபிரஞ்சு

மொழியிலும், இன்னும் சில பகுதிகளில் பேசப்படும் ஆங்கில மொழியிலும் 'பணத்தையும்', 'வெள்ளியையும்' குறிக்க ஒரே சொல்லையே ஆளுகின்றனர்.

ஏன் குறைந்த மதிப்புடைய உலோகம் தேர்ந்தெடுக்கப் படுகிறதென்பதை நாம் ஆராய்ந்தால், முழுப் பிரச்சினைக்கும் தீர்வு காண வழிபிறக்கும். வரலாற்றில், நமக்குத் தெரிந்த அளவு பெரும்பகுதியில், நமக்குப் பழக்கமானதும் வெள்ளியைவிட உயர்ந்த தெனக் கருதப்படுவதுமான பொன் பணமாக ஆளப்பட்டதில்லை. சாதாரணமாக அதற்குக் காரணம் என்னவென்றால், பணமாகப் பயன்படுத்த அது இடைஞ்சலாக இருக்குமென்பதே. உண் மையில், அது மதிப்பு உயர்ந்ததாக இருந்தது; ஒரு ரொட்டித் துண்டு வாங்குவதற்குத் தேவைப்பட்ட பொன்னின் அளவு மிகச் சிறியதாக இருந்தது. உலோகத்தின் இச்சிறிய அளவுகள் புழக்கத் திற்கு இடைஞ்சலாக இருக்கும். அவைகள் தொலைந்துபோகவும் கூடும். பெரிய அளவில் செய்யப்படும் வணிக நடப்பே பொன்னால் நடத்தப்படும். நமது தந்தையர்கள் நாளிலும் பொன்னே தலைமை யான நாணயமாக இருப்பினும், நாம் வெள்ளி, செம்பு நாணயங் களைக்கொண்டே சிறு வணிக நடப்புகளை நடத்தவேண்டி யிருந்தது.

இடைக்காலத்திலிருந்தே மதிப்பு மிகுந்த பொன் பணமாகப் பணிபுரிய இயலாததற்குக் காரணம், அது மிகவும் அரிதாகக் கிடைத்தமையே. இந்நூலில் பெரும்பகுதியைப் பெற்றிருக்கும் சரியான பணக்கணியம் (quantity of money) என்னும் பிரச்சினை யைத் தற்போது நாம் அணுகுகின்றோம். தற்போது நாம், பணம் கிடைப்பருமையாக (scarce) இருக்கக்கூடாதென்றும், அப்படி இருந்தால் அது இடர்ப்பாடான சிறிய அளவுகளில் கைம்மாறி வந்துகொண்டிருக்குமென்றும் பார்த்தோம். அதன் காரண மாகத்தான் இரும்பு (iron) பணத்தின் இடத்தில் நிலைக்க வில்லை. அன்றாடத் தேவைப்பொருள்களை வாங்குவதற்குப் பல பவுண்டுகள் நிறையுள்ள இரும்பு நாணயங்களைச் சுமந்துசெல்ல யாரும் தயாராக இருக்கமாட்டார்கள். எனவே, பணத்தின் உறு பொருள் கிடைத்தற்கருமையாக இருக்கவேண்டும்; ஆனால், அக் கிடைத்தற்கருமை அதிகமாகவும் இருக்கக்கூடாது. உலோகங்கள் பணமாகப் பணிபுரிவதற்கு மிகவும் உகந்தவை. அதிலும் மிகவும் ஏற்ற உலோகம் விலையுயர்ந்ததாகவும், ஆனால் அதிக விலையுயர்ந்த தாக இல்லாமலும் இருக்கவேண்டும். எனவேதான், இதற்கு வெள்ளி தேர்ந்தெடுக்கப்பட்டது. பின்னால் பொன்னும் பயன்படுத்தப் பட்டது. பிளாட்டினமும் (கிடைப்பருமை அதிகமாக உள்ளதால்),

இரும்பும் (கிடைப்பருமை இல்லாமல் ஏராளமாய்க் கிடைப்பதால்) பயன்படுத்தப்படவில்லை.

எவ்வாறு உலோகத்தின் கிடைப்பருமை அவ்வுலோகம் பண உறுபொருளாகத் தேர்ந்தெடுக்கப்படுவதைத் தீர்மானிக்கிறதென்பதும், உலோகத்தின் மதிப்பு இதனைத் தீர்மானிக்கவில்லையென்பதும் ஈண்டுக் கவனிக்கத்தக்கது. ஆனால், இது ஒரு புதிராக இருக்கிறது. ஏனெனில், கிடைப்பருமையாக உள்ள பொருள்கள்தாமே மதிப்பு உடையனவாக இருக்கின்றன? அதேபோன்று மதிப்புடைய பொருள்கள்தாமே கிடைப்பதற்கும் அருமையாக இருக்கின்றன? பணவரலாற்றின் பெரும்பகுதி முழுவதும் இந்த மறுப்புச் சரியானதாகவே தோன்றுகிறது. ஆனால், அந்த நிலை இன்று இல்லை. ஏனெனில், நாம் தற்போது காகிதப் பணம் (paper money) முறையில் ஒரு புதிய பண உறுபொருளைக் கண்டுபிடித்திருக்கிறோம். அதற்குக் கிடைப்பருமை இருக்கிறது; ஆனால், மதிப்பில்லை. கள்ள நாணய ஒழிப்புச் சட்டங்கள் தாள் நாணயங்களை மலியச் செய்யாமல் பாதுகாத்துவருகின்றன. எனினும், அவைகள் அச்சடிக்கப்பட்டிருக்கும் தாள்கள் அநேகமாகமாக மதிப்பொழிந்தவையே. அவைகளின் கிடைப்பருமை அவைகளைச் சிறந்த பணமாக்குகிறது; அவைகளின் மதிப்பொழிந்த தன்மை இச்சிறப்பைத் தடுத்துவிடுவதில்லை.

தாள் நாணயத்தை இங்கே குறிப்பிடுவது, பின்னால் நாம் சொல்லப்போவதை முன்னரே அறிவித்துவிடுவதற்குச் சமமாகுமாகையால், மீண்டும் விலையுயர்ந்த உலோகங்கள் பணமாகப் பணிபுரியும் வரலாற்றுக் கட்டத்திற்கே செல்வோம். இடையிலே வழியினைவிட்டு இறங்கிக் காகிதப் பணம்வரை சென்றமைக்குக் காரணம், ஏன் பணம் விலையுயர்ந்த உலோகங்கள் அல்லது விலையுயர்ந்த உறுபொருள்களால் ஆகியிருக்கவேண்டுமென்பதன் காரணத்தை நிலைநிறுத்தவே. பொன்னும் வெள்ளியும் தேர்ந்தெடுக்கப்பட்டதற்குக் காரணம் அவைகள் இவ்வேலைக்குப் பொருத்தமாக இருப்பதே; அவைகள் சுலபமாகப் புழங்கப்படுகின்றன; அவைகளைச் சேகரித்துவைப்பதும் சுலபம்; அவைகள் அழிந்துபோவதில்லை; தேவையான அளவிற்கு அவை கிடைப்பருமையாகவும் இருக்கின்றன; மிக நிதானமாக அளவில் வளர்வதோ அல்லது குறைவதோ இருக்குமே தவிர, பொதுவாக அளவில் வளர்வதோ குறைவதோ இல்லை. மிகவும் ஆரம்பநிலையில் விலையுயர்ந்த உலோகங்களுக்கு இரண்டு குறைபாடுகள் இருந்தன. முதலாவதாக, அவைகளின் 'மாற்று' இவ்வளவு என்று கண்டுபிடிப்பது மிகக் கடினமான முறை என்பதில்லாவிட்டாலும், தொந்தரவானதே.

சாதாரண மனிதர்கள் தங்கள் கையிலே கிடைக்கும் பணம் ஒவ்வொன்றையும் 'மாற்று'ப் பார்க்க விரும்புவதில்லை. இரண்டாவதாக, வசதியான அலகுகளாகப் பகுத்தலும் உலோகத்தில் சுலபமானதல்ல. ஒருவன் ஒரு பசுவை இரண்டு அவுன்சு பொன்னுக்கு வாங்கும்போது, பொற்கட்டியின் முனையிலிருந்து அதே அளவு வெட்டியெடுப்பதில் சிரமமுண்டாகும். பண வரலாற்றில் இதற்கடுத்த கண்டுபிடிப்பினால் இவ்விடர்ப்பாடுகள் தவிர்க்கப்பட்டன. அதுதான் நாணயமுறையாகும் (coinage). ஒரு நாட்டில் அரசன் ஒருவன் ஒரே நிறையும், மாற்றுமுள்ள உலோக நாணயங்களை வெளியிட்டான். அவற்றில் தன் உருவத்தையும் அவன் பதித்தான். இதுவே நாணயத்தின் தோற்றமாகும். அரசனது நேர்மையிலும், எடை குறைந்த அல்லது மட்ட உலோகத்தாலான கள்ள நாணயங்கள் மற்றவர்கள் வெளியிடுவதைத் தடுக்கும் ஆற்றலிலும் மக்களுக்கு நம்பிக்கை இருக்கும்வரையில், அரசனுடைய நாணயங்கள் தடையின்றி ஏற்கப்படும். ஆனால், அரசனது நேர்மையிலும், அவனது காவல்துறையினரின் (police) நிருவாகத்திலும் ஐயம் ஏற்படும்போது, அவன் நாணயங்கள் சாதாரணமான மற்ற உலோகங்களைப்போல் கருதப்பட்டு நிறுத்துப் பார்க்கப்படும்; 'மாற்றும்' சரிதானா என்று பார்க்கப்படும்.

நாம் தற்போது வரலாற்றுக் காலத்திற்கருகில் வந்திருக்கிறோம். நவீன காலம்வரையில் பண அமைப்பில் எந்தவித வேறுபாடுமில்லை. ஆனால், நாணய வரலாற்றில் சில நிகழ்ச்சிகள்மட்டும் நிச்சயமாக இருந்தன. நாணயங்களின் உலோகங்களும், அவைகளின் இனங்களும் (denominations) மாறின. அவற்றின் பழைய பெயர்கள் மாறின.[1] அவைகள் அடிக்கடி தேய்மானம் அடைந்தன (தேய்மானமாவது நாணயத்தின் உலோகம் குறைந்து தேய்தலாகும்). சில சமயங்களில் நாணயங்கள் முழு நம்பிக்கையுடன் ஏற்றுக்கொள்ளப்படுவதும் அரிதாக இருந்தது. ஆனால், கடந்த நூற்றாண்டுகள் முழுமையும் நடைமுறையில் பணம் நாணயங்களை உடையதாகவே இருந்தது.

இருப்பினும், முகப்பின்கீழ் செய்யப்பட்ட மாற்றம் கவனிக்கத்தக்கதாகும். பொன்னும் வெள்ளியும் ஆரம்பத்தில் பணத்திற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டதற்குக் காரணம், அவைகள் மற்றப்

1 அவ்விதமே இங்கிலாந்தின் பவுண்டு (Pound) ஆரம்பநிலையில் சாதாரணமாக ஒரு பவுண்டு வெள்ளியாகவே இருந்தது. ஆனால், இந்தப் பவுண்டிற்கும் ஒரு பவுண்டு வெள்ளிக்கும் உள்ள தொடர்பு வெகு காலத்திற்கு முன்னரே சபையினரால் (Board) நீக்கப்பட்டது. ஃபிரஞ்சு ஃபிரான்கானது (Franc), லீவ்ரா (Livre) விலிருந்து தோன்றியது. லீவ்ரா முன்னர் இங்கிலாந்து பவுண்டிற்குச் சமமாக இருந்தது. தற்போது ஒரு பவுண்டிற்கு இது 864 ஃபிரான்குகளைப் (அரசாங்க வீதப்படி) பெறுகிறது.

பொருளைக்காட்டிலும் கிடைப்பருமையாக இருந்தமையே. அவைகளின் கிடைப்பருமை அவைகளை மதிப்புடையனவாகவும் செய்தது. கிடைப்பருமை என்று நாம் சொல்லும்போது, தேவைக்கேற்ப அவைகள் கிடைப்பருமையாக உள்ளன என்பதையே கூறுகிறோம். மதிப்பானதுதேவை, அளிப்பு இவைகளால் நிர்ணயிக்கப்படுகிறது. ஒரு பொருள் மதிப்புடையதாக இருப்பதற்கு அதிகமான தேவை மட்டுமே இருந்தால் போதாது; மதிப்பானது தேவை, அளிப்பு ஆகிய இரண்டினாலும் தீர்மானிக்கப்படுகிறது. பொன்னும் வெள்ளியும் பணத்திற்காகத் தேர்ந்தெடுக்கப்படுமுன்னரே மதிப்புடையனவாக இருந்தன. அதாவது, அவைகளின் இருப்பைக் காட்டிலும், ஆபரணங்கள் முதலியவற்றிற்காகத் தேவை அதிகப்பட்டதால், அவைகள் கிடைப்பருமையாகவும் மதிப்புடையனவாகவும் இருந்தன. நாம் ஏற்கெனவே பார்த்ததுபோல, கிடைப்பருமையும் மதிப்புமே அவைகள் பணமாகத் தேர்ந்தெடுக்கப்படுதற்குப் பெரிதும் காரணமாயிருந்தன.

பணத்திற்காகப் பொன்னும் வெள்ளியும் பயன்படுத்தப்படுவதாவது அவைகளின் தேவையை மிகவும் அதிகமாக்கிவிட்டது. நாணயம் தயார்செய்வதற்காக அதிக அளவு பொன்னும் வெள்ளியும் தேவைப்பட்டபோது, அதற்கொப்ப ஆபரணத்திற்காகவும், பின்னால் கண்டுபிடிக்கப்பட்ட பல தொழில்களுக்காகவும், பல்கட்டும் வேலைகளுக்காகவும் அவை கிடைப்பது குறைவாக இருந்தது. உதாரணமாக, தற்காலத்தில் தங்கச் சுரங்கங்களிலிருந்து ஆண்டுதோறும் கிடைக்கும் தங்கத்தில் பாதிக்குமேல் பணம் அச்சடிப்பதற்கே தேவைப்படுகிறது. எச்சமாக உள்ள பாதியில் பெரும் பகுதி, ஒரு சாதாரண ஆண்டில், கீழ்த்திசை நாடுகளால் சேமித்து வைக்கும் நோக்கத்திற்குப் பயன்படுத்தப்படுகிறது. அநேகமாக இப்பயனையும் ஒரு பணப்பயன் எனக் கொள்ளலாம். தொழில், பல்மருத்துவம் முதலியவைகளுக்காகத் தேவைப்படும் பொன்—அதாவது, பொன் பணம் என்பதற்காகவோ அல்லது மதிப்பு வாய்ந்த பொருள் என்பதற்காகவோ அல்லாது உலோகத்தன்மைக்காகத் தேவைப்படுவது—பொன்னின் மொத்தத் தேவையில் ஒரு சிறு பகுதியேயாகும். எனினும், பொன்னின் மதிப்பு இன்னும் தேவை, அளிப்பு இவற்றினால்தான் நிர்ணயிக்கப்படுகிறது. பொன் தொழிலுக்காகமட்டும் தேவைப்பட்டுப் பணமாகப் பயன்படுத்தப்படுவது[1] நிறுத்தப்படுமேயானால், அது மிகக் குறைந்த

1 'பணமாகப் பயன்படுத்தப்படுவது' என்பது பொதுமக்கள் கையில் பண வடிவில் புழங்கப்படுவதைமட்டும் உணர்த்தாது. சாதாரண மனிதனின் கண்ணில் பொற்பணம் அரிதாகத் தென்பட்டாலும், பொன் இன்னும் பணமாகப் பயன்படுத்தப்படுகிறது. அத்தியாயம் 10-ல் இது நன்கு விளக்கப்பட்டுள்ளது.

மதிப்புடையதாக இருக்கும். இங்கு ஒரு வேடிக்கையான நிலை ஏற்படுகிறது. காரணங்கள் பலவற்றுள்ளும், பொன் பணத்திற்காகப் பயன்படுத்தப்பட்டதற்குக் காரணம் அது மதிப்புடையதாக இருந்தமையே! ஆனால், தற்போது அது மதிப்புடையதாக இருப்பதாலேயே பணத்திற்காகப் பயன்படுத்தப்படுகிறது. வெள்ளிக்கு ஏற்பட்ட நிலையைக்கொண்டும் இவ்வுண்மையினை விளக்கலாம். எழுபது ஆண்டுகட்கு முன்னர், வெள்ளி பணத்திற்காகப் பெரிதும் பயன்படுத்தப்பட்டது. அப்போது ஓர் அவுன்சு வெள்ளியின் மதிப்பு, பதினாறில் ஒரு மடங்கு பொன்னின் மதிப்பிற்குக் கிட்டத்தட்டச் சமமாக இருந்தது. ஆனால், அதற்குப் பின்னர் வெள்ளி பணத்திற்காகப் பயன்படுத்தப்படுவதைப் (ஆங்கில ஷில்லிங்கு போன்ற முக்கியத்துவம் இல்லாத உபநாணயங்கள் தவிர) பிற நாடுகள் ஒன்றன்பின் ஒன்றாக நிறுத்திவிட்டன. இதன் விளைவாக வெள்ளியின் தேவை குறைந்தது! அதன் மதிப்பும் 1939 ஆம் ஆண்டு, சண்டை துவக்கமான காலம்வரையில் குறைந்து கொண்டே வந்தது. அப்போது ஓர் அவுன்சு பொன்னிற்கு ஈடாகத் தொண்ணூற்றாறு அவுன்சு வெள்ளி கொடுக்கவேண்டியதாக இருந்தது.

## காகிதப் பணம்

பணவரலாற்றில் நாணயத்திற்குப் பிறகு காகிதப் பணமே அடுத்த வளர்ச்சியாகும். உண்மையில் பணம் கண்டுபிடிக்கப்பட்டதிலிருந்து இதுவே மிகவும் முக்கியமான கண்டுபிடிப்பாகும். இடையில் கண்டுபிடிக்கப்பட்டவை எல்லாவற்றிலும் இதுவே நன்மைகளையும் தீமைகளையும் அதிகமாகப் பயக்கவல்லது. ஆனால், காகிதப் பணம், தன் எல்லா உள்ளியல்புகளுடனும் (potentialities) எந்த ஒரு தனி மனிதன் அறிவுக்கூர்மையின் விளைவுமல்ல. இதற்கு நேர்மாறாக, அது நான்கு தனித்த நிலைகளைக்கொண்ட நிதானமான வளர்ச்சியை உடையது.

உலோகப் பணம் எடுத்துச் செல்வதற்குச் சுலபமாக இருக்கின்ற ஒரு நன்மை உடையதாக இருப்பதுடன், சுலபமாகத் திருடப்பட்டுவிடக்கூடுமாகையால், அத்தீங்கினையும் உடையது. வெகு காலத்திற்கு முன்பு வணிகர்கள் தங்கள் பயணத்தின்போது உண்மையான பணத்தைத் தங்களுடன் எடுத்துச் செல்லாமல், தங்களிடம் உள்ள பணத்தைக் குறிக்கும் எழுதப்பட்ட சான்றுகளை எடுத்துச் செல்லும் வழக்கத்தினைக் கைக்கொண்டிருக்க வேண்டும். இந்த எழுத்துப் பத்திரங்கள் [பயணச் செக்குகள் (traveller's cheque), கடன் கடிதங்கள் (letter of credit) ஆகியவை இவற்றின்

சந்ததிகள்] பணமாக மாட்டா—அவைகளைக் கொண்டு யாதொன்றையும் வாங்கமுடியாது—ஆனால், ஒருவகையில் அவைகள் பிரதி பணமாகவும் (substitutes for money), தாற்காலிகப் பிரதி பணமாகவும் இருந்தன. அவைகள் தொலைந்துபோனாலோ அல்லது திருடப்பட்டாலோ, தீங்கு நேரவில்லை; பணம் அப்படியே பத்திரமாக இருக்கும். வணிகரின் கையெழுத்தின்றி அப்பணத்தை ஒருவர் கூடத் தொட முடியாது. இந்தப் பத்திரங்கள் வணிகரின் சொந்த ஊரிலுள்ள பிரபலமான ஒருவரோ அல்லது ஒரு சபையோ வழங்கும் சான்றிதழ்களாக அமைந்தன. வணிகர் தம்மிடம் இவ்வளவு தொகையை வைப்பாக (deposit) வைத்திருக்கிறார் என்றும், அவர்களது கடன்காரர்கள் சரியான சான்றின்பேரில் திருப்பிக் கேட்டால் கொடுப்பதற்குச் சம்மதம் தெரிவித்துள்ளார் என்றும் இப்பத்திரங்கள் கூறும். இந்த மனிதர் அல்லது சபைதான் ஆரம்ப பாங்கர். இதுதான் தாள் நாணயத்தின் முதல் நிலையாகும். இந்தப் பத்திரம் பணத்திற்கு ஒரு பதிலிப் பொருள் (substitute) ஆகும்.

இருந்தபோதிலும், நாளடைவில் இப்பத்திரங்கள் இயற்கையாகவே பணமாகப் பயன்படுத்தப்படும். சுவிட்சர்லாந்தில் (Switzerland) விடுமுறையைக் கழிப்பதற்காகச் செல்லும் ஆங்கிலேயன் ஒருவன் பிரயாணிகளின் செக்குகளை எடுத்துச் செல்வதாக வைத்துக்கொள்வோம். முறைப்படி அவன் தன்னுடைய உணவு விடுதிக்குப் (hotel) பணம் கொடுப்பதற்கு முன்னால், அவ்வூர் பாங்கு ஒன்றிற்குச் சென்று தன் செக்குகளை சுவிஸ் பணமாக மாற்றிக்கொள்ளவேண்டும். ஆனால், நடைமுறையில் அவ்வுணவு விடுதியே அப்பயணியின் செக்குகளை ஏற்றுக்கொள்வதற்குத் தயராக இருப்பதை அவன் காண்பான். அப்படியானால் அவைகளும் பணமாகப் பணிபுரிகின்றன. இந்நாளைய இவ்வுதாரணம், எவ்வாறு வாணிப சரித்திரத்தின் ஆரம்ப காலத்திலேயே பாங்கரின் வாக்குறுதிச் சீட்டு பணத்தின்மேல் உள்ள உரிமையாகமட்டும் அல்லாது பணமாகவும் பயன்பட்டது என்பதை எடுத்துக்காட்டுகிறது. வாக்குறுதிப் பத்திரம் ஒரு குறிப்பிட்ட மனிதன்பேரில் அவன் எவ்வளவு தொகையை வைப்பாக (deposit) வைத்துள்ளானோ அத்தொகைக்குச் சரியாகக் கொடுப்பதை விட்டு, அதைக் கொணர்பவனுக்கே (bearer)—அதாவது எவன் அதை அடைகிறானோ அவனுக்கு—சார்பு செய்தலும் ஒரு புதிய வளர்ச்சியாகும். இம்மாதிரி கொடுக்கப்படும் வாக்குறுதிச் சீட்டு வசதியான முழுத்தொகைகளுக்கு வெளியிடப்படும். உதாரணமாக, ஜான் ஸ்மித் வைத்துள்ள வைப்புத் தொகை 283 பவுண்டு 17 ஷில்லிங் 5 பென்சுக்குச் சான்றிதழாக இருப்பதைக்

காட்டிலும், அத்தொகையின் அளவிற்கு டிராஃப்டுகளை (drafts) நன்மதிக்க (honour) அளிக்கப்படும் வாக்குறுதி கீழ்க்கண்டவாறு வளர்ச்சியடைந்தது. இவ்வாக்குறுதி வசதியான ஒரு பவுண்டு, ஐந்து பவுண்டு, பத்து அல்லது நூறு பவுண்டு (அல்லது இன்னும் வசதியான அளவுகளில்) யாருக்கு அளிக்கப்படுகிறதோ, அவருக்கு அது ஒருவாக்குறுதிச் சீட்டாகும். இதனை வைத்திருப்பவரே இதன் சரியான உரிமையாளர் என்று கருதப்பட்டது. இதுதான் முற்றுருப் பெற்ற (fully pledged) பாங்கு நோட்டு (banknote) என்று பெயர். தற்போது உள்ள நமது பாங்கு நோட்டுகள் இவ்வாரம்ப நிலையினுக்குச் சான்றுகூறுவதுபோல் அமைந்துள்ளன. உதாரணமாக, இங்கிலாந்து பாங்கின் ஒவ்வொரு நோட்டும், 'இதைக் கொணர்பவன் தேவைப்படும்போது நான் இத்தொகையாகிய ஒரு பவுண்டைக் கொடுக்க வாக்குறுதி செய்கிறேன்' (அல்லது 10 ஷில்லிங்குகள் அல்லது 5 பவுண்டுகள் என வகைக்கு ஏற்ப) என்னும் வாசகத்தைத் தாங்கி, அதனடியில் இங்கிலாந்து பாங்கின் கட்டுப்பாட்டு அதிகாரிக்காக (comptroller) என்று தலைமைப் பொருட்கணக்கரால் கையொப்பம் இடப்பட்டிருக்கும். காகிதப் பணத்தின் வளர்ச்சியில் இது இரண்டாவது நிலையாகும். பணமாக இது பயன்படுத்தப்பட்டாலும், பொதுப்படையாக இது பணமென்று கருதப்படவில்லை. சுவிஸ் உண்டி விடுதியின் உரிமையாளன் எவ்வாறு தன் கட்டணத்தைப் பயணியின் செக்குகளாக ஏற்றுக்கொண்டாலும் (அவற்றைப் பணமாகப் பாவித்து), அவற்றைப் பணம் என்றே கருதாமல் பணத்தின்மேல் உள்ள உரிமைகளாகவே கருதி, தன்னுடைய பாங்கிற்கு அவற்றை ரொக்கமாக மாற்ற விழைவான்.

பாங்கு நோட்டுகள் மிகவும் பழக்கத்தில் வரவர, அவைகள் பணத்திற்குப் பதிலாகப் பயன்படுத்தப்பட்டதுமட்டுமல்லாமல், பணமாகவே பாவிக்கப்பட்டன. இந்த பாங்கு நோட்டு ஒரு பேரத்திற்குமட்டும் பயன்படுத்தப்பட்டு உடனடியாக ரொக்கமாக மாற்றப்படுவதில்லை. அது மனிதர்கள் கைமாறிக்கொண்டே சென்று பல வணிக பேரங்களை நடத்திவைக்கிறது. இது எப்படி இருக்கின்றதென்றால், சுவிஸ் உணவு விடுதி உரிமையாளன், பயணியின் செக்கை உடனடியாக மாற்றுவதற்குப் பதில் பணியாளரின் கூலியைக் கொடுப்பதற்கு இவற்றைப் பயன்படுத்தினன். பணியாளர் அவற்றைத் தங்கள் மனைவிமார்களின் வீட்டுச் செலவிற்குக் கொடுப்பார். இவ்விதமே அவை சென்றுகொண்டிருக்கும். இது அவற்றை வெளியிட்ட பாங்கருக்கு ஒரு மிக முக்கிய விளைவைத் தருகிறது. அவை இப்படிக் கைமாறிப் புழங்கிக்கொண்டேயிருந்தால், பாங்கரிடம் ரொக்க மாற்றுதலுக்குத் திரும்பிவருவதில்லை. அவர் வெளியிட்ட நோட்டுகளில் சில அசல் ரொக்கமாகத் (அதா

வது நாணயங்களாக) திரும்பப்பெறுவதற்கு நிச்சயமாகக் கொண்டு வரப்படும். ஆனால், பாங்கர்கள்—தாங்கள் பாங்கு வணிகத்திற்கு மிகவும் இன்றியமையாத, கடன் தீர்க்கும் ஆற்றலில் நற்பெயர் எடுத்தவுடன்—தாங்கள் வெளியிட்ட நோட்டுகளின் ஒரு சிறு பகுதியே ரொக்கமாக மாற்றப்படுவதற்குத் திரும்பிவந்தமையைக் கண்டனர். அப்படி ஏதாவது நோட்டு திரும்பி பாங்கரிடம் (பொதுமக்கள் நம்பிக்கையைத் தொடர்ச்சியாகப் பெற்றுள்ளோம் என்று எண்ணும் பாங்கரிடம்) வந்தால், அவற்றிற்குப் பல புதிய நோட்டுகளை அளிப்பது இயல்வதாக இருந்தது. இவ்வாறு எப்படி இதனைச் செய்யமுடிகிறது என்பதை அடுத்த அத்தியாயத்தில் விவரித்துள்ளோம். இங்கே நாம், பாங்குகள் தங்களிடம் வைக்கப்பட்டுள்ள அசல் ரொக்கத்தின் அளவைக் காட்டிலும், கூடுதலாகப் பாங்கு நோட்டுகளை வெளியிட இயலும் என்பதனைக் காண்கிறோம். இது ரொக்க வைப்புக்களைவிட அதிகமான அளவில் வெளியிடப்படுவதோடுகூட, வைப்புகளைக் காட்டிலும் பல மடங்கு அதிகமாக வெளியிடப்படக்கூடும் என்பதையும் நாம் தெரிந்துகொள்ள வேண்டும். உதாரணமாக, பாங்கர்கள் புழக்கத்திலிருக்கும் அவர்களின் 20 நோட்டுகளில் ஒரு நோட்டை ரொக்கமாக மாற்றுவதற்குத்தான் அணுகப்படுகிறார்கள் என்பதைத் தெரிந்துள்ளனர். இதனால் அவர்கள் வெளியிடும் நோட்டின் அளவில் 5 சதவிகிதம் ரொக்கப் பணம் வைத்திருந்தால் போதும் என்பது புலனாகிறது. சாமர்த்தியமான ஒரு பாங்கர், பாதுகாப்பாக இருக்கும்பொருட்டு இந்தக் காப்புத் தொகையை இருமடங்காக ஆக்கிக்கொள்வதும் உண்டு. அப்படியும் அவன் வெளியில் புழக்கத்திலிருக்கும் ஒவ்வொரு நூறு பவுண்டு அளவு நோட்டுகளுக்கும் பத்துப் பவுண்டு வீதம் ரொக்கம் வைத்திருந்தால் போதுமானது. வேறுவிதமாகச் சொல்லப்போனால், அவனுக்கு எங்கிருந்தாவது பத்துப் பவுண்டு ரொக்கம் தனியாகக் கிடைத்தால் அவன் 100 பவுண்டு அதிகமாக நோட்டுகளை வெளியிடக்கூடும்.

காகிதப் பணவரிசையில் இது மூன்றாவது நிலையாகும். இது முன்னேற்றம் என்று கொள்ளப்படவேண்டிய நிலை என்பது தெளிவாகிறது. முதல், இரண்டாவது நிலைகளில், பாங்கு நோட்டு பணமாக இல்லாமலோ அல்லது உலோக நாணயத்திற்கு ஒரு வசதியான காகிதப் பதிலிப் பொருளாகவோ (substitute) இருந்து வந்தது. இரண்டாவது நிலையிலேயும், சில பாங்குகளில், வெளியில் உலவும் ஒவ்வொரு பவுண்டு நோட்டுக்கும் ஒரு பவுண்டு உலோக நாணயங்கள் பாங்கியின் இருப்பறையில் (vault) வைக்கப்பட்டிருக்கும். எனவே, பாங்கு நோட்டுகளின் புழக்கத்திலிருக்கும் பணத்தின் அளவில் எந்தவிதமான கூடுதலையும் அவை செய்வ

தில்லை. ஆனால், மூன்றும் நிலையில், பாங்கு நோட்டுகள் வெறும் உபபணமாக (அல்லது பணத்திற்குப் பதிலிப் பொருளாக) இருக்கும் நிலையைவிட்டு மாறியது. அவை பண அளிப்பில் உண்மையான பெருங் கூடுதலை உண்டுபண்ணின.

பதினேழாம் பதினெட்டாம் நூற்றுண்டுகளில், பாங்கு நோட்டு தன் கூட்டுப்புழு நிலையிலிருந்து வெளிவந்தது. பெருவாரியான ஏனைய கண்டுபிடிப்புகளைப்போலவே, பாங்கு நோட்டும் ஆரம்பத்தில், அதனைக் கண்டுபிடித்தவர்களால் தவறான வழிகளில் பயன்படுத்தப்பட்டுப் பொதுமக்களிடம் வெறுப்பைச் சம்பாதித்தது. பாங்கர் ஒருவிதப் பொருளுமின்றி பாங்கு நோட்டுகளை உண்டு பண்ணக்கூடுமானால், அவன் ஓர் ஆபத்து வாய்ந்த நாணயமற்ற வனாகச் சாதாரண மனிதனால் கருதப்பட்டான். [பாங்கு நோட்டு களை வெளியிடுதல் உண்மையாகப் பணம் உண்டுபண்ணுவ தாகுமா (creation of money), அம்முறை நாணயமும் நேர்மையு மானதுதானா என்பதை அடுத்த அத்தியாயத்தில் ஆராய்வோம்.] ஆரம்பத்தில் ஏற்படுத்தப்பட்ட பாங்குகளில் சில, தங்கள் ரொக்க இருப்புக்கு அதிகமாக நோட்டுகள் வெளியிட்டது கண்டுபிடிக்கப் பட்டுக் கட்டாயமாக மூடும்படி நேர்ந்தது. அவைகளில் நோட்டு கள் வைத்திருந்தவர்கள் அப் பாங்குகள் நாணயமானவைதாமா என்பதை நிச்சயமாகத் தெரிந்திராவிடினும், அவைகள் வகையுள் ளவை (solvent) அல்ல என்பதை உறுதியாக உணர்ந்தனர். எனவே, அவர்கள் தங்கள் நோட்டுகளை ரொக்கமாக மாற்று வதற்கு விரைந்தனர். இப்போது மக்கள் நம்பிக்கையின்மைகூட அவ்வளவு கொடூரமான விளைவுகளைத் தரவில்லை. பாங்கர்கள் நோட்டுகளை வெளியிடும் இந்த விநோதமான புதிய அதிகார வெறிக்கு அடிக்கடி இரையாயினர். அவர்கள் தங்கள் ரொக்க இருப்புக்குமேல் நோட்டுகளை வெளியிட்டதோடல்லாமல், ரொக்க இருப்புக்குப் பல மடங்கு அளவு அதிகமாகவும் நோட்டுகளை வெளி யிட்டனர். எனவே, அவர்கள் ரொக்க மாற்றின்போது, நோட்டு களின் ஒரு பகுதிக்குக்கூட ரொக்கம் பெற இயலவில்லை. ஒரு பாங்கு தன்னுடைய நோட்டுகளில் ஒன்றின் வாக்குறுதியைக் காப்பாற்ற இயலவில்லையென்றால், அந் நோட்டுகளை வைத்திருக் கின்றவர்கள் பயந்து எல்லா நோட்டுகளையுமே மீட்சிக்கு (redemption) பாங்கினிடம் கொண்டுவருவர். பாங்கினிடம் ரொக்க மாற்றுக்காக வரும் சிறிதளவு நோட்டுகளைத் தயக்கமில்லா மல் உடனுக்குடன் பாங்கு ரொக்கம் தருமாயின், பெருவாரியான நோட்டுகள் ரொக்க மாற்றுதலுக்கு வராமலேயே இருக்கும். பதி னெட்டாம் நூற்றுண்டு ஆரம்பத்தில், ஜான் லா (John Law) என்ற வணிகக் கம்பெனிபோன்ற மிகப் பெரிய குதர்க்கமான வணிகத்

திட்டங்களுக்குப் பணவுதவியளிக்க பாங்குகள் வரையறையின்றி நோட்டுகளை வெளியிட்டதன் பயஞக அடிக்கடி முறிந்தன. பாங்கு நோட்டிற்கு இழிவை இந்நிலை தேடித்தந்தது. நிலையை மாற்றியமைக்க அரசாங்கம் தலையிட வேண்டியிருந்தது. இத் திட்டம் தவருகப் பயன்படுத்தப்படாமலிருந்திருந்தாலும், பன் மடங்கு பண அளிப்பைப் பொதுமக்களுக்கு அளித்து, அதன்மூலம் கொடூரமான விளைவுகளை உண்டுபண்ணும் இந்தப் புதிய கண்டு பிடிப்பைக் கண்டு அரசாங்கம் வாளா இருக்க முடியவில்லை. இருநூறு ஆண்டுகட்கு முன்னர், பணத்திற்கான கோட்பாடு (theory) எதுவும் இருக்கவில்லை. அரசியல் வல்லுநர்களுக்கு, வரையறையின்றி வெளியிடப்படும் நோட்டுகள் நாட்டின் பொரு ளாதாரக் கட்டுக்கோப்பு முழுவதையுமே நிலைகுலையச் செய்யு மென்பதைப் புரிந்துகொள்ள ஒரு கோட்பாட்டுச் சாதனம் தேவை யில்லாமலிருந்தது. அரசாங்கத்தின் தலையீட்டின் வகை இடத் திற்கும் காலத்திற்குமேற்ப வேறுபட்டது. ஆனுல், பொதுப் படையாக நோட்டுகளின் வெளியீடு பாங்கின் மூலதனத்தின் அளவிற்கோ (அதாவது பாங்கின் உரிமையாளர்களால் செலுத் தப்பட்ட ரொக்கம்) அல்லது அதன் நாணய வைப்புகளின் (அதாவது வாடிக்கைக்காரர்களால் செலுத்தப்பட்ட ரொக்கம்) அளவிற்கோ அல்லது இவ்விரண்டின் அளவிற்கோ கண்டிப்பாக வரையறுக்கப்பட்டே வந்தது. கையிருப்பு ரொக்கத்திற்குமேல் நோட்டுகள் வெளியிடப்படுதல் அடியோடு தடைசெய்யப்படா விட்டாலும், மிகவும் கண்டிப்பாகக் குறைக்கப்பட்டது.

இங்கிலாந்தில், ஆரம்பம் முதற்கொண்டே இங்கிலாந்து பாங்குக்கு (Bank of England) ஒரு பேருரிமைப் (privilege) பதவி வழங்கப்பட்டிருந்தது. நோட்டு வழங்குவதில் இந்த அரைகுறைச் சர்வாதீனம் இப் பாங்கிற்கு ஏறத்தாழ இருநூறுண்டுகளாக இருந்து வருகிறது. நாளடைவில் இவ்வரைகுறைச் சர்வாதீனம் வளர்ந்து முற்றுப்பெற்றது. ஸ்காட்லாந்து, அயர்லாந்து, மனிதத் தீவு (Isle of man) இவைகளில் ஏனைய பாங்குகள் நோட்டுகளை வெளியிட்டபோதிலும், இங்கிலாந்து பாங்கிற்கே இங்கிலாந்திலும் வேல்ஸிலும் நோட்டுகள் வெளியிடும் சட்டபூர்வமான அதிகாரம் இருந்தது. இந்த ஓர் அதிகாரம்மட்டும் இங்கிலாந்து பாங்கிற்கு இருக்கவில்லை. 1833ஆம் ஆண்டு முதற்கொண்டு இங்கிலாந்து பாங்கின் நோட்டு, கடனை ஈடுசெய்யும் 'சட்டச் செலுத்தாக' (legal tender) உள்ள உரிமையைச் சட்டப்படி பெற்றுள்ளது. வழக்கமாக அது பணமாகப் பயன்படுத்தப்பட்டதல்லாமல், அதுவே பண மென்றும் சட்டத்தால் அறிவிக்கப்பட்டது.

இங்கிலாந்து பாங்கின் நோட்டைப் பொறுத்தமட்டில், பாங்கு நோட்டு வளர்ச்சியடைந்தபிறகு, தனது பழைய நிலையான உலோக நாணயங்களைப் பெறும் சாதாரண உரிமையாகவோ அல்லது உலோக நாணயங்களுக்குப் பதிலியாகவோ இருந்த நிலையினின்றும் தெளிவாக மாறுபட்டது. எனினும், அதன் தோற்றத்திலிருந்த சூழ்நிலைகள் அதனை ஒட்டிக்கொண்டன. தேவையின் போது பொன் நாணயமாக மாற்றப்படுகிறவரையில், பாங்கு நோட்டு நம்பத்தகுந்த 'நிறைவான' (sound) பணமாகக் கருதப்படவில்லை. 1797—1819-ல் நடந்த நெப்போலியப் போரின் போது, இங்கிலாந்து பாங்கின் நோட்டுகளின் நாணயமாற்று நிறுத்திவைக்கப்பட்டதென்னவோ உண்மை. நிறுத்திவைக்கப் பட்ட இந்தக் காலம், போரின் ஒரு தற்காலிக வேண்டப்படாத பக்க விளைவாகக் (byproduct) கருதப்பட்டது. அது தவறான நிதியக் கொள்கைகளுடனும் (financial practices), பொருளாதாரக் குழப்பங்களுடனும் இருந்தது. காகிதச் செலாவணி நம்பிக்கை வைக்கத்தகுந்ததாக இருக்க எச்சமயத்திலும் பொன்னாக மாற்றக்கூடியதாக இருக்கவேண்டுமென்ற விதிக்கு இது ஒரு விலக்காக இருந்தது. 1914-ல் மீண்டும் போர் நிகழ்ந்தபோது, நாணயமாற்று மீண்டுமொரு முறை நிறுத்திவைக்கப்பட்டது. இங்கிலாந்து பாங்கு தனது நோட்டுகளுக்குத் தேவையின்போது நாணயமாற்றாகப் பொன் கொடுக்கவேண்டுமென்ற சட்டம் சட்டப் புத்தகத்தில் இடம் பெற்றிருந்தமையால், இந்த ஒத்திவைப்பு (deference) நாணயமாற்றுக் கோட்பாட்டிற்குக் காட்டப்பட்டது. பொன் ஏற்றுமதியும், பொன்னை உருக்குதலும் இச்சமயத்தில் தடைசெய்யப்பட்டிருந்ததால், நோட்டுகளைப் பொன்னாக மாற்றும் வேலை அர்த்தமற்றதாக இருந்தது. ஏனெனில், பொன்னை நீங்கள் அடைந்தாலும், அதனை வைத்துக்கொண்டு ஒன்றும் செய்ய இயலாதல்லவா? 1925ஆம் ஆண்டில் நாணயமாற்று மீண்டும் கொண்டுவரப்பட்டது. ஆனால், காகிதப் பணத்தின் மீதிருந்த நீண்ட கால அவநம்பிக்கை மறைய ஆரம்பித்தது. ஏனெனில், புதிய சட்டத்தின்படி இங்கிலாந்து பாங்கு, தன்னிடம் கொண்டு வரப்பட்ட ஒவ்வொரு பவுண்டுக்கும் நாட்டிற்கு ஒரு சவரன் பொன் கொடுக்கவேண்டும் என்ற கட்டாய நிலையிலில்லை. தற்போதும் உங்கள் நோட்டுகளுக்குப் பொன்னை நீங்கள் பெறலாம்; ஆனால், ஒரு பாளம் (bar) பொன்னைப் பெறக் குறைந்தது 1,700 பவுண்டு கொடுத்துப் பெறத் தயாராக இருக்கவேண்டும். பொது மனிதன் தன்னிடமுள்ள நோட்டுகளுக்குப் பொன்னைப் பெற இயலாது போயிற்று. அவனும் அதைச் சிறிதளவும் பொருட்படுத்தவில்லை.

ஆனால், நெடிதில் உண்மை தலைநீட்ட ஆரம்பித்தது. ஆரம்பத்தில் வெளியான பாங்கு நோட்டுகள் பொன்னாக அவை மாற்

றப்படக்கூடுமென்பதற்காகவே ஏற்கப்பட்டன. இங்கிலாந்து பாங்கின் நோட்டுகள் வெளிவந்த இருநூருண்டுகட்குப் பின்னர், பொதுமக்கள் அவைகளின் நோட்டு மதிப்புக் குறித்தே அவைகளை ஏற்க முன்வந்தனர். பொதுமனிதன் இங்கிலாந்து பாங்கின் நோட்டுகளில் திருப்தியடைந்தான். ஏனெனில், தன் விருப் பத்திற்கேற்ற வகையில் தனது பணத்தின் வேலைகளை இங்கிலாந்து பாங்குக்காரர்கள் நிறைவேற்றுவரென்பது அவனுக்குத் தெரிந்திருந்தது. 1833 ஆம் ஆண்டு முதற்கொண்டே, சொல்லப் போனல் இன்னும் நீண்ட காலமுன்பே, நோட்டுகள் சட்டச் செலுத்தாக ஏற்படுத்தப்பட்டபோது, இந்நிலை உண்மையானதாக இருந்தது. ஆனல், சட்டம் இவ்வுண்மை நிலையினை அங்கீகரிப் பதற்கு ஒரு நூற்றுண்டாகியது. 1931ஆம் ஆண்டில் பொன் திட்டம் மீண்டும் நிறுத்திவைக்கப்பட்டபோது, இம்மாற்றம் முற்றுப்பெற்றது. அதுவரையில் இங்கிலாந்து பாங்கு நோட்டுகள் முழுமையும் மாற்றக்கூடாத நிலையில்தான் இருந்தன. அவை களின் மீதுள்ள 'செலுத்தும் வாக்குறுதி' (promise to pay) தற் போது முற்றிலும் அர்த்தமற்றதாக இருக்கிறது. 1700 பவுண்டு கள் வீதத்தாலும் நோட்டுகளைத் தற்போது பொன்னுக்கு ரொக்க மாற்றுச் செய்ய இயலாது. நோட்டு எவ்வித உள்மதிப்பு (intrinsic value)மின்றி ஒரு காகிதத் துண்டாகியது. அது மீட்சிக்குக் (redemption) கொண்டுவரப்பட்டபோது, வெள்ளி நாணயங்களையோ[1] அல்லது இன்னெரு நோட்டையோ கொடுத்து, இங்கிலாந்து பாங்கு தன்னுடைய 'செலுத்து வாக்குறுதி'யை (promise to pay) ஏற்றது. ஆனல், அது பிரிட்டிஷ் தீவுகள் முழுதும் பணமாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. பாங்கு நோட்டு வளர்ச்சியில் இதுதான் நான்காவது—கடைசி—நிலையாகும். இந்நிலை வந்த பிறகு, பொன் நாணயமும் அதன் துணையான வெள்ளி நாணய முமே பணமாக இருக்கத்தகுந்தவை என்ற எண்ணம் மறைந்தது. விலையுயர்ந்த உலோகங்களின் ஆட்சி நீண்ட காலமாக இருந் தமையால், அவைகள் ஒரு தெய்வீக உரிமையையே அடைந்து

1 தற்போதுள்ள நமது வெள்ளி செம்பு நாணயங்களை நாம் ஏற்கனவே இந்த அத்தியாயத்தில் கூறியுள்ள பொன் வெள்ளி நாணயங்களென வைத்துத் தவருகக் கருதக்கூடாது. போருக்குமுன் இருந்த சவரனிலிருந்த பொன் சரியாக 1 பவுண் டுக்குச் சமமான மதிப்புடையதாக இருக்கும். நாணயங்களின் வரலாற்றில், நாணயங்கள் பெரும்பாலும் அவைகளுடைய உலோக உட்கிடையின் (content) அளவிற்கே மதிப்பிடப்பட்டன. ஆனல், தற்காலத்தில் உள்ள ஷில்லிங்கில் (shilling) உள்ள வெள்ளி 1 ஷில்லிங்கிற்கும் குறைவே. நாணயம் அதனுள் இருக் கும் வெள்ளியினுல் மதிப்புப் பெறவில்லை; அரசாங்கம் 1 பவுண்டுக்கு 20 ஷில்லிங்கு நாணயங்களை ஏற்றுக்கொள்ளுகிறது என்கிற காரணத்தால்தான், அது மதிப்புப் பெறுகிறது. உண்மையில் ஷில்லிங்கும்வசதியை உத்தேசித்து உபயோகத்தின்பேரில் அச்சிட்ட நோட்டேயாகும். இப்படிப்பட்ட நாணயங்கள் குறிநாணயங்கள் என்றே பழக்கமாக அழைக்கப்படுகின்றன.

விட்டிருந்தன. ஆனால், கடைசியாக இந்நிலை முடிந்துவிட்டது. காகிதப் பணத்திற்கு உதவிப்படையினராக உள்ள குறிநாணயங்கள் (token coins) வடிவில் தவிர, உலகத்தில் எந்த நாட்டிலும் உலோக நாணயங்கள் புழக்கத்திலில்லை.

பொன்னாக மாற்றப்படும் இந்தக் கடமையை நீடிக்கவேண்டும் என்ற பொதுவான நம்பிக்கையுடன், உண்மையில் சற்று அதிக மான காரணமும் ஒன்றுண்டு. பண வரலாற்றில், அநேகமாக மாற்ற இயலா (inconvertible) பாங்கு நோட்டுகள் பண நிலையின்மை (monetary instability) யுடன் தொடர்பு கொண்டுள்ளன. மாற்றுரிமைக் கடமை நீடித்தவரையில், அது நோட்டுகளை வெளியிடும் அதிகாரத்தின்மீது கண்டிப்பான ஒரு தடையை விதித்தது. அது நீக்கப்பட்டவுடன், பேரளவு நோட்டுகளை வெளியிடும் ஆசை அதிகமாகியது. மாற்றுரிமையின் நீக்கம் என்றால், அதிக அளவு நோட்டு உற்பத்தி யென்பது எதிர் பாராததொன்றாக இல்லை. வெளியிடுதலே தொல்லையை விளைத் தது; மாற்றுரிமையின் நீக்கம் அல்ல. தொல்லையை விளைத்தது அதிகப்படியான நோட்டுகள் வெளியீடே தவிர மாற்றுரிமையின் நீக்கமல்ல. இத்தீய விளைவுகளை நீக்கும் வழி, மாற்றுரிமையை வற்புறுத்துவதில் இல்லை; வெளியிடும் நோட்டுகளின் எண்ணிக்கையைக் கட்டுபடுத்தும் ஏற்பாடு ஒன்றால்தான் முடியும். இது செய்யப்பட்டால், மாற்றுரிமையற்ற காகிதச் செலாவணியும், 1931 ஆம் ஆண்டிலிருந்து கிரேட் பிரிட்டனின் அநுபவம் உணர்த்துவதுபோல், திருப்தி நிறைந்த பணமாக அமையும். இது பல பிரிவுகளையுடைய நீண்ட தலைப்பு ஆகையால், இதனை இங்கே ஆராய்வது சரியல்ல. ஒன்பதாவது அத்தியாயத்தில் இதனை முழுதும் ஆராய்வோம்.

புழக்கத்திலுள்ள தற்காலத்திய இன்னொரு வகையான பணம் இன்னும் விவரிக்கப்படவில்லை. அதுதான் மனிதர்களுடைய கைகளில் மாறிமாறிச் சுற்றிக்கொண்டிருக்கும் 'செக்குகள்' (cheques) என்னும் பணமாகும். முதன் முதலில் இது மற்றப் பணங்களினின்றும் வேறுபட்டதுபோல் தோன்றியது. அதன் அடிப்படைத் தத்துவத்தில் அதுவும் பாங்கு நோட்டின் மற்றொரு திரிபேயாகும். காகிதப் பணத்தின் மிக ஆரம்ப நிலையிலிருந்த வசதிகளில் ஒன்றை இங்கு நாம் நினைவுபடுத்திக்கொள்ளவேண்டும். (முதல் நிலை என்று நாம் அழைத்த நிலை) அதாவது காகிதப் பணம் தானே பணமாக இல்லாமல், பணத்திற்கு உரிமைப் பொருளாகமட்டுமே இருந்ததால், திருட்டு, இழப்பு எனும் இவ்வாபத்துகளின்றி எடுத்துச்செல்ல முடிந்தது. ஆனால், பாங்கு நோட்டே

பணமாக வந்தபிறகு, இந்த வசதி மறைந்துபோயிற்று. இன்றைக்கும் ஒரு பொன் நாணயத்தைத் தொலைத்துவிட்டு எவ்வளவு ஏழ்மையடைவீர்களோ, அதுபோலவே இங்கிலாந்து பாங்கின் நோட்டொன்றைத் தொலைத்தாலும் அடைவீர்கள்.

செக்கின் கண்டுபிடிப்பு இந்த இடர்ப்பாட்டினைக் களைகிறது. பாங்கு நோட்டென்பது அதை வெளியிடும் பாங்கு அளிக்கும் சிறந்த கடன் அத்தாட்சியாகும். அது கடன் கொடுத்தவர் பெயர் எழுதப்படாத ஐ. ஓ. யூ. (IOU)—கடன் வாக்குறுதி—ஆகும். பொதுமக்கள் இவ்வாக்குறுதி நிச்சயமாக நிறைவேற்றப்படும் என நம்புவதாலேயே, இந்த நோட்டு பணத்தைப்போல் புழங்குகின்றது. புழங்கப்படுவது உண்மையில் பாங்கின் கடனே. ஸ்மித் என்பவன் ஜோன்ஸ் என்பவனுக்கு 1 பவுண்டு நோட்டு கொடுத்தால்,இங்கிலாந்து பாங்கு ஸ்மித்துக்குக் கொடுக்க வேண்டிய 1 பவுண்டு கடன் ஜோன்ஸுக்கு மாற்றப்படுகிறது. திட்டவட்டமாக இதே வேலையைத்தான் செக்கும் செய்கிறது. உதாரணமாக,ஸ்மித் பாங்கில் £ 1 வைப்பு(deposit) வைத்திருக்கிறனென்று வைத்துக்கொள்வோம். இதன்படி ஸ்மித்திற்கு £ 1 கடன்பட்டிருக்கும் பாங்கு, அவனிடம் இன்னொருவர் பேருக்கு மாற்றக்கூடிய கடன் வாக்குறுதி (IOU) ஒன்றினைக் கொடுப்பதற்குப் பதில், அவன் பெயருக்கு பாங்கு புத்தகங்களில் வரவு வைக்கின்றது. தற்போது ஸ்மித் ஜோன்சின் பெயருக்கு£1செக்கை அளித்தால், அந்த £ 1 ஸ்மித்தின் கணக்கிலிருந்து ஜோன்சின் கணக்கிற்கு அந்த பாங்கிலேயோ அல்லது வேறு பாங்கிலேயோ மாற்றப்படும். பாங்கு நோட்டு கைம்மாறும்போதும் திட்டவட்டமாக இதுபோலவே நடக்கிறது. பாங்கின் கடன் ஒருவரிடமிருந்து மற்றவருக்கு மாற்றப்படுகிறது. செக்கு, பாங்கு நோட்டினின்றும் மாறுபட்டதென்பது உண்மையே; அது உடனடியான பேரத்தின் இருதரப்பினரையும்,மேலாக உள்ள கடன்காரராகிய பாங்கையும் தெளிவாகக் குறிப்பிடுகின்றது; அதில் இவ்வளவு தொகைக்கு எனத் தெளிவாக எழுதப்பட்டுள்ளது. யாவற்றிற்கும் மேலாக அது வழக்கம்போல் ஒரு பேரத்துடன் (transaction) முடிவடைந்துவிடுகிறது. ஆனால், செக்குபேரத்தை நிறைவேற்றும்பணமல்ல. பாங்கில் வைப்பாக வைத்துள்ள (அதாவது, பாங்கு ஒப்புக்கொண்ட கடன்தொகை) உண்மைப் பணத்தை மாற்றும் சாதனமாக அது அமைந்துள்ளது. செக்கிற்கீடாக வைப்புத் தொகை பாங்கில் இல்லாமலிருந்தால்,செக்குகள் ஏற்றுக்கொள்ளப்பட (honouring) மாட்டா. வணிகர்கள் செக்குகளை ஏற்றுக்கொள்வதற்குப் பல சந்தர்ப்பங்களில் தயங்குவதற்குக் காரணம், அவைகள் 'நல்லவைகளா' 'கெட்டவைகளா' என்பது தெரியாதிருப்பதேயாகும்.

பாங்கு வைப்பை மாற்றித்தருவதென்ருல், அதனை ஏற்றுக்கொள்ள ஒருவருமே தயங்கமாட்டார்கள். ‘பணம்’ என்னும் பெயருக்கு பாங்கு வைப்பே பொருத்தமாக இருக்கிறது. பாங்கு நோட்டிற்கும் பாங்கு வைப்பிற்குமுள்ள ஒரே வித்தியாசம் யாதெனில், ஒன்றில் பாங்கின் கடன் ஒரு காகிதத்தில் குறிக்கப்பட்டு, அக்காகிதம் கைமாறும்போது பாங்கின் கடன்பட்டிருத்தலும் அதைப் பெறுகின்றவருக்குச் செல்கிறது; மற்ருென்றில் பாங்கின் கடன் புத்தகங்களில் குறிக்கப்பட்டு, கடன் கொடுத்தவர் கையொப்பமிட்ட எழுத்து உத்தரவின்பேரில் பிறருக்கு மாற்றப்படுகிறது. இவ்விரு முறைகளிலும் பாங்கின் கடன் மாற்றமே பேரத்தை நிறைவேற்றுகிறது. இவ்விரு முறைகளுமே வசதியானவைதாம்; தற்காலத்தில் இவ்விரு முறைகளையும் நாம் பயன்படுத்துகிருேம்.

செக்கின் தோற்றத்திற்கு வசதியே காரணமாக இருக்கப் போதுமானது. ஆனல், இங்கிலாந்தில் பாங்கு நோட்டுகள் வெளியீட்டில் உள்ள கட்டுப்பாடும் இதற்குத் துணைசெய்தது. 1844 ஆம் ஆண்டின் பாங்கு சட்டத்திற்குப் (Bank Act) பிறகு, இங்கிலாந்து பாங்கோ,ஏனைய பாங்குகளோ நோட்டுகள் வெளியிடுவது பெரிதும் வரையறுக்கப்பட்டது. ஆனல், அளவிலும் செல்வத்திலும் வளர்ந்துகொண்டிருக்கும் சமுதாயத்திற்கு அதிகமான அளவில் பணத்தின் அளிப்பு தேவைப்பட்டுக்கொண்டே யிருந்தது. மேலும், பாங்குகள் அடுத்த அத்தியாயத்தில் காணும் காரணங்களால், தங்களின் கடன் வாக்குறுதிகள் (IOUs) பணம் போன்று புழங்கப்படுவது ஓர் இலாபகரமான தொழிலாக இருப்பதை உணர்ந்தன. முறையாக நோட்டுகள் வடிவில் அச்சடிக்கப்பட்ட ஐ ஓ யூக்களை (கடன் வாக்குறுதிகளை) வெளியிடுதலில் அவைகள் கட்டுப்படுத்தப்படவே, அவற்றிற்குப் பதிலாக உள்ள செக்குகள், வைப்புகள் முறைக்கு இயற்கையாகவே அவை மாறின.செக்குகள், கிட்டத்தட்ட அவைபோன்றவை பதினேழாம் நூற்ருண்டின் பிற்பகுதியிலிருந்தே புழக்கத்திலிருந்துவருகின்றன. ஆனல், 1844ஆம் ஆண்டின் பாங்கு சட்டம், இன்னும் இது போன்று நோட்டுகள் வெளியிடுதலைக் கட்டுப்படுத்திய சட்டங்களின் காலம்முதற்கொண்டுதான் நோட்டுகளின் புழக்கம் அதிகமாகப் பெருகியது. ஒத்த சூழ்நிலைகளுள்ள ஐக்கிய அமெரிக்காவையும், கிரேட் பிரிட்டனிடம் பணவழக்கங்களைக் கற்றுக்கொள்ளும் பிரிட்டிஷ் டொமினியன் நாடுகளையும் தவிர்த்த மற்ற வெளிநாடுகளில் இன்றும் செக்குகள் மிகக் குறைந்த அளவில்தான் பயன்படுத்தப்படுகின்றன.

இதற்கு மாருக கிரேட் பிரிட்டனில் தற்போது செக்குகள், பணமாற்றத்திற்குக் மிகவும் அடிக்கடி பயன்படுத்தப்படும் சாதன

மாக அமைந்துள்ளன. பாங்கு வைப்புகளின் எண்ணிக்கை, புழக்கத்திலிருக்கும் பாங்கு நோட்டுகளின் மொத்த எண்ணிக்கையைப்போல் நான்கு மடங்கு அதிகமாயும், ஏனைய பணவகைகளைப் போல் பல மடங்காயுமிருக்கிறது. ஆயினும், வைப்புகள் அவற்றின் வளர்ச்சியில் இன்னும் மூன்ருவது நிலையில்தான் உள்ளன. அவைகள் சட்டச் செலுத்தாக இல்லை. பாங்கு வைப்பை மாற்றி எழுதிவைப்பதன் மூலம் கடன் திருப்பிச் செலுத்தப்படுமானல், கடன் கொடுத்தவர் அதனை மறுக்கச் சட்டப்படி உரிமையுண்டு. பாங்கு வைப்புகள் நாணயமாற்றுச் செய்ய இயலாதனவுமல்ல. இங்கிலாந்து பாங்கு நோட்டுகளின்மீது அச்சிட்ட தனது வாக்குறுதியை மீட்க மறுக்கலாம். அதனுடைய வாக்குறுதியை இது புறக்கணிப்பதாகாது. பிரிட்டிஷ் அரசாங்கக் கான்சல்களைப் (British Govt. Consols) போலவே, இது முதிர்வு அடைவதில்லை. ஆயினும், மற்ற பாங்குகள் தங்களது வைப்புக் கடன்களை (deposit-debts) மீட்சி செய்வதற்குக் (redemption) கடமைப்பட்டுள்ளன. அவ்விதம் மீட்சி செய்ய வேண்டப்படும்போது, சட்டச் செலுத்தும் பணத்தின்[1] வாயிலாகத்தான் செய்யவேண்டும். வருங்காலத்தில் எப்போதாவது, தற்போதுள்ள பாங்குகள் நாட்டுரிமையாக்கப்பட்டு (nationalised), அரசாங்கத்திற்குச் சொந்தமான ஒரே அமைப்பாக மாறினல், அவைகளின் வைப்புகள் (deposits) சட்டச் செலுத்தாகவும், மாற்றப்படக்கூடாதனவாகவுமிருக்கும். இது விரும்பக்கூடாத முறை யென்பதற்குக் காரணங்கள் இருக்கலாம்; ஆனல், இம்முறை நன்கு இயங்கக்கூடியதொன்ருகும். நிச்சயமாக இது நன்கு வேலை செய்யும். அப்படியானல், பாங்கு வைப்புகள் வளர்ச்சியின் நான்காவது நிலையினை அடைந்துவிட்டன எனலாம்.

விவரமான வரலாறு, கோட்பாடு இவற்றின் துணைகொண்டு இதுகாறும் நாம் பணத்தை விவரித்தோம். ஆனல், பணம் இன்னதென்று நாம் விளக்கவில்லை. பணம் என்ருல் (மேற்கண்ட எல்லா விவாதத்திற்கும் பிறகு) என்ன?

இவ்வினுவிற்கு விடையளிக்க, நாம் ஆரம்பித்தபடி, பணத்தின் மூன்று பணிகளை மீண்டும் நினைவுபடுத்திக்கொள்ளவேண்டும். பணம் மதிப்பளவையாகவும் (measure of value), மாற்று மத்திமமாகவும் (medium of exchange), செல்வத்தின் நிலைக்களனுகவும் (store of wealth) பணிபுரிய வேண்டும். இம் மூன்று பணிகளில் இரண்டாவது பணியே மிகவும் இன்றியமையாததாகும். மற்றப்

[1] கிரேட் பிரிட்டனில் எல்லா நடைமுறைக் காரியங்களுக்கும் ஒரே வகையான சட்டச் செலுத்து பணமாக இருப்பது இங்கிலாந்து பாங்கு நோட்டுகள் என்பது அறியற்பாலது.

பொருள்களும் மதிப்பளவைகளாக அல்லது செல்வத்தின் நிலைக் களன்களாகப் பணிபுரியலாம். அதுபோலவே கிரேட் பிரிட்டனில், பல பண்டங்களின் மதிப்பு கினி (guinea) என்னும் நாணயத்தால் மதிப்பளவை செய்யப்படுகின்றன. ஆனால், நீண்ட காலத்திற்கு முன்பே கினி நாணயமாகவோ அல்லது கினியின் பெயர் தாங்கிய எந்தவிதமான பணமாகவோ இருப்பது வழக்கற்றுவிட்டது. பங்குமாற்றுச் சந்தையின் பத்திரங்கள் (Stock Exchange Securities) செல்வத்தை நிலைக்களன் செய்ய ஐயமின்றிப் பயன்படுகின்றன. ஆனால், நீங்கள் பங்கு அல்லது பங்குப் பத்திரத்தினால் ஒரு தீப் பெட்டிகூட வாங்கமுடியாது. கினியோ, கான்சல்களோ (Consols) பணமல்ல. பணமென்பது மூன்று பணிகளைச் செய்யவேண்டும்; சிறப்பாக, மாற்று மத்திமமாக இருக்கும் பணியைச் செய்யவேண் டும். இந்த நூலின் காரணங்களுக்காக—உண்மையில் இன்னும் பல காரணங்களுக்காக—பணம் மாற்று மத்திமமாகவும்(அதாவது, கடனை அடைக்கும் சாதனமாக), அதே சமயத்தில் மதிப்பளவை யாகவும், மதிப்பின் நிலைக்களனாகவும் பொதுவாக ஏற்றுக்கொள் ளப்படுகிற (generally acceptable) ஏதாவதொரு பொருள் என்று விளக்கப்படலாம்.

இவ்விளக்கத்தில் சாய்வாக எழுதியுள்ளவை முக்கியமான வார்த்தைகளாகும். பணமாக இருக்கும் எப்பொருளும் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படத்தக்கதாக இருக்கவேண்டும். பல பொருள்கள் குறிப்பிட்ட நோக்கங்களுக்காக ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. உதாரணமாக, பலவிதமான பொருள்களுக்கு விலையாகப் பரிசுக் கூப்பன்கள் (gift coupons) ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. ஆனால், அவைகள் 'எந்தவிதமான பொருளுக்கும்' (anything) விலையாகப் 'பொதுவாக' ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை; எனவே, அவை பணமல்ல.

இரண்டாவதாக, பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படுகிற எப் பொருளும் பணமென்று கூறப்படுகிறது. இவ்விளக்கம் இப்பொருள் பற்றி எழுதும் எல்லா ஆசிரியர்களுக்கும் திருப்தியாக இருக்கமுடி யாது. அவர்களில் சிலர்—குறிப்பாக, சட்ட மனப்பான்மை கொண் டவர்கள்—பணமெனச் சட்டபூர்வமாக அங்கீகரிக்கப்பட்ட பொருள் கள் யாவும் பணம் என்று இவ்விளக்கத்தை வரையறை செய்ய முனைந்தனர். ஆனால், இவ்விளக்கம் கேவலமான தனிப் பண்பையே சுட்டுகிறது. ஏனெனில், பாங்கு வைப்புகள் (சட்ட பூர்வமாக அங்கீகாரம் செய்யப்படாத பணம்), பாங்கு நோட்டு களைப்போன்றே (சட்டபூர்வமாக அங்கீகாரம் செய்யப்பட்ட பணம்) பயன்படுத்தப்பட்டு, அவைகளின் பொருளாதார விளைவுகளையும் தெளிவாகப் பயக்கின்றன.

வழக்கறிஞர் எப்படி நினைத்தாலும், கடன்களைத் திருப்பிச் செலுத்தப் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படும் எப்பொருளும் பணமென்று கருதுவதைவிடப் பொருளாதார நிபுணருக்கு வேறு வழியில்லை. வேறுபடுத்திக் கூறவேண்டிய அவசியம் நேரும்போது, சட்டபூர்வமாக அங்கீகரிக்கப்பட்ட பாங்கு நோட்டை நாணயம் (currency) என்றும், சட்டத்தால் அங்கீகரிக்கப்படாத பாங்கு வைப்பை பாங்கு பணம் (bank-money) என்றும் அழைக்கலாம். ஆனால், இவ்விரண்டுமே பணந்தான். எனவே, எப்பொருளாயினும், அது பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்டுப் பல்வகைப் பொருள்களையும் பணிகளையும் வாங்கப் பயன்படுமானால், அது பணமெனப்படும். அது குறிப்பிட்ட பொருள்களைமட்டும் எப்போதாவது வாங்கப் பயன்படுவதோடு நின்றுவிடாமல், எல்லாப் பண்டங்களையும் எப்போதும் வாங்கப் பயன்படுகிறது. உதாரணமாக, அது தேயிலை, டிராம் சவாரி (tram-rides), வெடிமருந்து ஆகிய பல திறப்பட்ட பண்டங்களையும் பணிகளையும் எப்போதும் வாங்கப் பயன்படுகிறது.

பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படுவதே பணத்திற்கு இன்றியமையாததொன்றாகும். அது எப்போதுமே முறையுடன் அரிதாகவே இருக்கவேண்டும். மரத்திலிருந்து பறித்துக்கொள்வது போன்று இருக்கக்கூடாது. பணம் முறையாக, அரிதாக வைக்கப்பட்டாலொழிய—இன்னும் சொல்லப்போனால் அதன் ஒப்பான அளவு மாற்றப்படாமலிருந்தாலொழிய—பணம் பயனற்ற துண்டுக் காகிதம் எனவோ அல்லது பாங்கு புத்தகங்களில் எழுதுவோருடைய பேனாவின் கீறல் எனவோ கருதப்படும்.

# 2. பாங்குகள்

## பாங்கின் தன்மை

சென்ற அத்தியாயத்தில் பாங்குகளைப்பற்றிச் சிறிதளவு கூறப்பட்டது. புழக்கத்திலுள்ள பணத்தின் பெரும்பகுதியும் வாக்குறுதிகளாகத் (ஐ. ஓ. யூக்களாக) தற்போது இருப்பதால், பாங்குகளைப் பற்றி ஆராயாமல் தற்கால உலகத்திலுள்ள பணத்தின் தன்மையை விவரிக்க இயலாது. பண ஏற்பாட்டிற்கு அச்சாணியாயும், சமுதாயத்திற்குப் பணத்தை அளிப்பவையாகவும் உள்ள காரணத்தால், நாணயசாலையைக் கொஞ்சங்கொஞ்சமாக வெளியேற்றிய இந்த நிலையங்களை மீண்டும் நெருங்கி ஆராய்வோம். நமது கதையின் முதல் அத்தியாயத்தில் கதாநாயகனை (அல்லது வில்லனை—கதை மெல்லச் செல்லும்போதுதான் கதாநாயகனா வில்லனா என்பது தெரியவரும்) அவனுடைய ஓரிரண்டு செயல்களின்மூலம் விவரித்தோம். இப்போது அவனுடைய குடிப்பிறப்பு வழியையும், அவனுடைய குணத்தின் சிறு குறிப்பொன்றையும் இங்கே நாம் தரவேண்டும்.

இந்நாளைய பாங்கருக்குக் குறிப்பிட்ட குணநலனை உடைய மூன்று முன்னோர்கள் உண்டு. ஒருவரை நாம் ஏற்கெனவே பார்த்தோம். அவர்தாம் வணிகர். அவருடைய பிரபலமான உயர்ந்த நன்மதிப்பு அல்லது நாணயம், உலகத்தின் பல பாகங்களுக்கும் பணத்திற்கு உரிமையான பத்திரங்களை வெளியிடுவதற்குப் பெரிதும் துணை செய்தது. இன்றைக்கும் ‘வணிக பாங்கர்’என்னும் சொல் மிகப் பழைமையான பரந்த நோக்குடைய மிகவும் தனியுரிமைப்பட்ட பாங்கு நிறுவனங்களால் கையாளப்படுகிறது. இந்த பாங்குகள் தமது முன்னோர்களின் மரபை (ancestry) ஆராய்ந்தால், பணத்தைக்காட்டிலும் அதிகப் பெறுமானப் (ஆனால், அதிக இலாபமற்ற) பண்டங்களை விற்கும் ஒரு வணிகராக இருப்பார்.

பாங்கரின் மற்ற இரண்டு முன்னோர்கள் லேவாதேவிக்காரர்களும், பொற்கொல்லர்களுமாவர். கடன் கொடுப்பதும், கடன் வாங்குவதும் பணத்தைப்போன்றே பழமையானவை. ஆதி சமுதாயங்களிலும் கிராம லேவாதேவிக்காரர்கள் இருந்தனர். எப்போதும் லேவாதேவிக்காரர்கள் விரும்பப்பட்டதில்லை; அதிக வட்டி வாங்குபவன் (usurer) என்னும் சொல்லே மிகப் பழமையான இழிசொல்லாகும். கடன் கொடுத்தற்கீடாக அவன் வாங்கும் ஊதியம் (reward) வழக்கமாகக் கொடுங்கொள்ளையாக இருந்தபோதிலும், அவன் செய்யும் சேவை நிச்சயமாகப் பயனுடையதும் தேவையானதுமாகும். வருவாய் சமமாக இருப்பினும், சிலரிடம் அதிகப் பணமும், சிலரிடம் பணம் பற்றுக்குறையாயுமிருக்கும். வருவாய் சமமாக இருப்பதில்லையாகையால், மூலதனத்தை ஒருவரிடமிருந்து மற்றொருவருக்கு மாற்றும் சாதனம் தேவைப்படுகிறது. லேவாதேவிக்காரர், தன் சொந்த முதலைக்கொண்டே தொழில்நடத்தினர். சமுதாயத்தில் பணத்தை நிறைய வைத்திருந்தவர்கள், வட்டி வாங்கும் துறையில் திறமையும் அனுபவமும் வாய்ந்த லேவாதேவிக்காரரிடம் அப்பணத்தை வட்டிக்கு விடும்படி கொடுக்கலாயினர். இந்த நிலையில், லேவாதேவிக்காரர் பாங்கரின் முன்னோடியானார். அவர் கடன் கொடுப்பவரும், கடன் வாங்குபவருமானார். முதலில் அவர்கள் தற்காலத்திலுள்ள தரகரைப்போல் தம் வாடிக்கைக்காரர்களின் பணத்தை வட்டிக்கு விட்டுக் கூலியாகத் தரகுபெற்றிருப்பார். ஆனால், பின்னர் தம்முடைய அதிக லாபத்தைக் கருதியும், வாடிக்கைக்காரர்களின் வசதியை உத்தேசித்தும் அவர்களுடைய பணத்தைக் குறைந்த வட்டிக்கு வாங்கித் தம்முடைய பணத்தையும் சேர்த்து, மொத்தப் பணத்தையும் அதிக வட்டிக்கு விட்டு இலாபம் சம்பாதிக்க ஆரம்பித்தார்.

மத்திய காலம் (middle ages) முழுதும் கிறிஸ்துவ ஆலயம், வட்டி நெறிமுறையைப்பற்றி (ethics of interest) அதிகக் கவனம் செலுத்தியது. பொதுவாகச் சொல்லப்போனால், அமித வட்டி கண்டிக்கப்பட்டது. ஆனால், நியாயமாக வாங்கப்படும் வட்டி அமித வட்டியாகக் (usury) கருதப்படவில்லை. எப்படியும் புனிதச் சட்டத்தினால்(Canon Law) அதிக வட்டி வாங்குதலைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. இன்றைக்கும் ஒவ்வோர் அரசாங்கமும் சிறு லேவாதேவிக்காரர்கள் வாங்கும் உயர்ந்தபட்ச (maximum) வட்டி வீதத்தை நிர்ணயிக்கும் சட்டங்களின் அவசியத்தை நன்கு உணர்ந்திருக்கின்றன. எந்த வட்டி வீதம் நியாயமானது, பொருளாதார வளர்ச்சிக்குத் தேவையானதென்பது சுவையான ஆராய்ச்சியெனினும், இந்நூலில் நாம் அதை ஆராயவேண்டியதில்லை.

தன்னுடைய அமைப்பில் பாங்கு லேவாதேவிக்காரரையே பெரிதும் தழுவியிருக்கிறது. சேமிப்புமூலம் பணம் வைத்திருப்ப வர்களிடமிருந்து பணத்தை வாங்கி, வட்டிக்கு அதனைத் தேவை யானவர்களுக்குக் கடன் கொடுக்கிறது. சமுதாயத்தில் இது அவசியமான உயர்ந்த பணியாகும். இந்நூலில் பின்னுல் இதனை நாம் காணப்போகும் விதமாகச் சிக்கலான நவீன பொருளாதார அமைப்புச் சரிவர இயங்குவதற்கு இப்பணி மிகவும் இன்றியமை யாத தனிச் சிறப்பு வாய்ந்தது. எல்லா பாங்குகளுமே இவ்வேலை யைத்தான் செய்கின்றன. உதாரணமாக, சேமிப்பு பாங்கும் இவ் வேலையைத்தான் செய்கின்றது. ஆனுல், அதனுடைய பணம் முத லீடுகளை (investments) வாங்குவதற்குப் பெரிதும் பயன்படுத்தப் படுகிறது; கடன் கொடுப்பதற்கு நேரடியாகப் பயன்படுத்தப்படுவ தில்லை. அடைமான பாங்கும்—இது கிரேட் பிரிட்டனில் கட்டடச் சங்கம் (Building Society) என்றழைக்கப்படுகிறது—இதனை யொத்தே இருக்கிறது. அதனுடைய பணி, பிறரிடமிருந்து பணத்தை வசூலித்து வீடு கட்டுவதற்கோ அல்லது வாங்கு வதற்கோ கடன் வாங்க விழைபவர்களுக்குக் கடன் கொடுப்ப தாகும். மூலை முடுக்குகளில் கிளைகளை நிறுவியுள்ளனவும், 'பாங்கு' என்னும் பெயரைத் தாங்கியுள்ளனவுமான பெருஞ் செல்வ நிலையங்களத்தனையுமே, சேமிப்பை வசூலித்துப் பிறருக்கு வழங்கும் இப் பணியில்தான் தங்கள் உழைப்பையும் நேரத்தையும் செலவிடு கின்றன.

இந்த ஒரு பணிமட்டுமே இருக்குமானுல், இந்த அத்தியாயம் இங்கு முடிந்துவிடும். ஆனுல், அது அப்படியன்று. நாம் இதுவரை யில் பணத்தைப் பிறருக்குக் கொடுத்துதவத் தயாராக இருப் பவர்களை—அதாவது பணத்தை அன்ருட வாழ்க்கைத் தேவை களுக்குச் செலவு செய்வதற்குக் கையில் ரொக்கமாக வைத்துக் கொள்ளாமல் அதனைப் பிறருக்கு வட்டிக்குக் கொடுத்துச் சம்பாதிப் பவர்களை—பற்றிப் பேசிவந்தோம். ஆனுல், தற்காலத்தில் பாங்கு கள் இதைவிட அதிகமான வேலைகளைச் செய்கின்றன. சாதாரண மாக பாங்கில் வைப்புகள் வைத்திருக்குமொருவன் தன் பணம் முழுவதையும் பாங்கியில்தான் வைத்துள்ளான். தனது அன்ருடச் செலவுகளுக்கு வைப்புகளினின்றும் பணத்தை எடுத்துச் செலவு செய்கின்ருன். மேலும், பாங்குகள் பிறர் பணத்தை வசூலித்து அதனை வட்டிக்கு விடும் வேலையைமட்டுமே செய்ய விரும்பவில்லை. சென்ற அத்தியாயத்தில் நாம் கண்டவாறு, அவைகள் சமுதாயத் தில் உள்ள பணத்தைச் சிருட்டிப்பதில் (create) அல்லது செய்வதில் (manufacture) ஈடுபடுகின்றன. எனவே, பாங் கிற்கும் (பொதுவாக வழங்கும் கருத்தில்), லேவாதேவிக்

காரர்களின் வழித்தோன்றல்களாக உள்ள கடன் கொடுக்கும் நிலையங்களுக்கும் (அவைகள் தங்களை பாங்குகள் என்று சொல்லிக்கொண்டாலும், கொள்ளாவிட்டாலும்) தெளிவான வேறுபாட்டுக் கோடு ஒன்றை அமைக்கலாம். சேமிப்பு பாங்கு அல்லது கட்டடச் சங்கத்தின் கடன் வாக்குறுதிகள் (IOUs) பணமாகப் புழங்கப்படுவதில்லை. ஆனால், பாங்கியின் கடன் வாக்குறுதிகள் அவ்வாறு புழங்குகின்றன. இதுவே முக்கிய வேறுபாடாகும். பணம் இருவித வடிவங்களை உடையதெனச் சிலேடையாகக் கூறுவர். அது தட்டையானது; அடுக்கிவைத்துச் சேமிப்பதற்குகந்தது. அது வட்டமானது; உருண்டோடிப் புழங்குவதற்குகந்தது. லேவாதேவிக்காரரின் சந்ததிகள் இவ்வடுக்கி வைக்கும் பணமான(சேமிப்பு) தட்டைப் பணம் சம்பந்தப்பட்டவர்கள். பொற்கொல்லரின் சந்ததிகள் வட்டப் பணம் (புழக்கத்திலிருக்கும் பணம்-ரொக்கம்)சம்பந்தப்பட்டவர்கள். தற்காலப் பெரிய பாங்குகள் இவ்விருவர் பணிகளையுமே செய்கின்றன. அவைகளின் சந்ததி வரலாற்றை(descent)ஒருபுறம் லேவாதேவிக்காரரிடமிருந்து ஆராய்ந்தோம். அவைகளின் இன்னொரு மூதாதையரான பொற்கொல்லரைப்பற்றித் தற்போது ஆராய்வோம்.

தற்கால பாங்கிற்கு மூதாதையர் பொற்கொல்லரென்பது, முற்றிலும் ஆங்கில நாட்டு நிகழ்ச்சியாகும். உண்மையில், புழக்கத்தாலுள்ள பணத்தை அளிக்கும் நிலையமாக பாங்கு இருக்கின்ற நிலை, முற்றிலும் ஓர் ஆங்கிலக் கண்டுபிடிப்பாகும். மற்றைய நாகரிக உலகத்திற்கு இக் கண்டுபிடிப்பு இன்னும் பரவவில்லை. பொற்கொல்லரின் வாணிகச் சரக்குகளில் (stock-in-trade) பாதுகாப்பு அறையும் ஒன்று. பாதுகாப்பறையின்றிப் பொற்கொல்லர் வாணிபம் செய்ய இயலாது. இன்றைக்கும் பொற்கொல்லர், வாடிக்கைக்காரர்கள் தங்களுடைய பொன் வெள்ளிக் கலங்களைத் தன் பாதுகாப்பறையில் வைத்துக்கொள்ளத் தாராளமாக அனுமதிப்பதுண்டு. பணம் பொன்வெள்ளியாக இருந்த காலத்திலும், நிலத்தைத் தவிர வேறு முதலீடுகள் செய்ய வழியில்லாதபோதும், தனிப்பட்டவர்கள் கையில், தற்காலத்தில் உள்ளதைவிடப் பொன் வெள்ளி இவற்றை அதிக அளவு வைத்திருந்தனர். அவற்றைப் பொற்கொல்லரிடம் பாதுகாத்துவைப்பதற்காகக் கொடுத்துவிட்டு ரசீது பெற்றுக்கொள்ளுவதும் இயற்கையாக இருந்தது. முன்னர் லண்டன் நகரத்திய வணிகர்கள் தங்கள் பொன்னை லண்டன் கோட்டையில் (Tower of London) வைப்பது வழக்கம். ஆனால், முதலாவது சார்லஸ் என்ற அரசன் ஒரு பண இக்கட்டில் 1640-ல் இந்தப் பொன்னைக் கைப்பற்றிக்கொண்டதனால், பொற்கொல்லரே பாதுகாக்கும் இவ்வணிகத்தை மேற்

கொண்டனர். பொற்கொல்லர் முதலில் வைப்புக்கு அடையாள மாக ரசீது கொடுத்தனர். வேண்டும்போது ரசீதைக் காட்டிப் பொன்னைப் பெற்றுக்கொள்ளலாம். ஆரம்பத்தில் இவ்வணிகம் முற்றிலும் பாதுகாப்பு-வைப்பு (safe-deposit) வணிகமாகவே இருந்தது. பொற்கொல்லர், வைப்புக்கு அடையாளமாக ரசீது கொடுத்தனர். வேண்டும்போது ரசீதைக் காட்டிப் பொன்னைப் பெறலாம். வெகு சீக்கிரத்தில் இந்நிலை வளர்ச்சியடைந்து தற் காலத்தில் உள்ள முழுமையான (full-grown) பாங்காகியது. முதலில் வைப்பு ரசீதுகள் பணமாகக் கைக்குக் கை மாற லாயிற்று. இம்முறை கடனைத் திருப்பி அடைப்பதற்கும் வசதியாக இருந்தது. ஏனெனில், பொன்னை பாங்கியிலிருந்து எடுத்துக் கடன் அடைத்தது போக எச்சத்தை மீண்டும் திரும்பி பாங்கியில் வைப்பாக வைப்பதைவிட வைப்பு ரசீதுகொடுத்துக் கடன் அடைப் பது எளிதாகவே இருந்தது. பொற்கொல்லரின் புகழ் பரவ ஆரம் பித்ததும், அவருடைய பாங்கின் வைப்பு ரசீது பணத்தின் முன் னேடியாக அமைந்தது. இரண்டாவது, வைப்பு ரசீது தேவையற்ற தாகிவிட்டது. ஏனெனில், வைப்பு வைத்தவர் தமக்குக் கடன் கொடுத்தவருக்குத் தாம் வைத்துள்ள பொன்னை மாற்றப் பொற் கொல்லருக்கு ஒரு கடிதம் எழுதி அதன்மூலம் மாற்றமுடிந்தது. இதுவே செக்கின் (cheque) பிறப்பாகும். (லண்டன் பொற்கொல்ல ருக்கு முதன்முதலில் எழுதப்பட்ட 1675ஆம் ஆண்டு தேதியிட்ட செக்கு ஒன்றை எடுத்துவைத்திருக்கின்றனர்.) கடைசியாக, பொற் கொல்லர்தமது பொன் இருப்பைக்காட்டிலும் அதிகமான அளவிற்கு வைப்பு ரசீதுகளை வெளியிடலாம் என்பதையும் உணர்ந்தார். பொற்கொல்லர் தேவைப்பட்டவர்களுக்கு உதவும் பொருட்டு அதிகமான அளவு வைப்பு ரசீதுகளை அச்சிட்டு வெளியிட்டாரா (அல்லது தமது வீட்டுச் செலவுகளுக்காகப் பயன்படுத்தும் பொருட்டு வெளியிட்டாரா) அல்லது வாடிக்கைக்காரர்களுக்குத் தாங்கள் வைப்பாக வைக்கும் பொன்னின் மதிப்பளவுக்குமேல் அதிகமான அளவிற்கு வைப்பு ரசீதுகளைப் பெறும்படி (செக்குகள் மூலம் அவ் வைப்பு ரசீதுகளின் அளவிற்குப் பணம் பெறலாம்) அதிக அளவிற்கு வைப்பு ரசீதுகளை வெளியிட்டாரா என்ற ஆராய்ச்சி இங்குத் தேவையில்லை. இரண்டு விதத்திலும் தீர்மான மான வழியே கையாளப்பட்டுள்ளது. அதாவது, பணம் 'சிருட்டித் தல்' (creation) முறையே கையாளப்பட்டுள்ளது. ஆரம்பத்தில் இப் பணம் சிருட்டித்தலில், பொற்கொல்லர் எச்சரிக்கையாகவே இருந்தார். பின்னர், நம்பிக்கை அதிமாக வளரவே, அதிக அளவு பணத்தைச் சிருட்டித்தார். ஆனால், நாளடைவில் பணம் சிருட்டிக்க இவ்வளவு அளவு பொன் காப்பாக (reserve) வைத்துக் கொள்ளவேண்டும் என்ற அனுபவம் அவருக்கு வரலாயிற்று.

தற்போதுள்ள பாங்கரிடம் தன் மூன்று மூதாதையர்கள் ஒவ்வொருவருடைய பண்பும் காணப்படுகிறது. வணிகரைப்போல் வெளிநாட்டு வியாபாரத்திற்குப் பணம் கடன் கொடுத்து உதவுகின்ருர். இப்படிக் கடன் கொடுப்பதற்கு மாற்று உண்டியல்களை (Bills of exchange) வெளியிடும் முறைகளைக் (இம் மாற்று உண்டியல்களைப்பற்றிப் பிறகு பார்ப்போம்) கையாள்கிருர். லேவாதேவிக்காரரைப்போலவே பொற்கொல்லரும் ஒரு சாராரின் பணத்தை வாங்கி மற்ருெரு சாராருக்கு அதனைக் கடன் கொடுக்கிருர். அவரிடமுள்ள வைப்புகளில் பெரும்பகுதியும் 'வைப்புக் கணக்குகள்' அல்லது 'சேமிப்பு வைப்புகள்' என்று சொல்லப் படுபவையே. அவைகளிலிருந்து பணம் பெறுவதென்ருல் செக்குகள்மூலம் பெறமுடியாது. பணம் பெறுவதை முன்கூட்டியே எழுத்துமூலம் அறிவித்தால்தான் பணம் பெறமுடியும். இந்த வைப்புகள் 'புழக்கத்திலிருக்கும் பணமல்ல' (circulating money); அவை பணத்தின் சொந்தக்காரரால் லேவாதேவிக்காரரிடம் சேமித்துவைக்கும்பொருட்டுக் கொடுக்கப்பட்ட 'தட்டைப் பணமா'கும் (flat money). மேலே கூறிய பாங்கரின் இரு பணிகளுமே முக்கியமானவைதாம். இந்நூலில் பாங்கர் முக்கியத்துவம் பெறுவதற்குக் காரணமாக உள்ள, ஒப்பற்ற ஒரு பணி மூன்ருவதாக உள்ளது. அதாவது, மக்கள் ஒருவருக்கொருவர் பணம் கொடுக்க வேண்டிய நிலை இருக்கும்போது பணத்தைப் பைகளில் சுமந்து கொண்டு வீடுகளுக்குச் சென்று நேரில் கொடுக்கவேண்டிய நிலைமையை நீக்கி, சுலபமான முறையொன்றை அளிக்கும் பணியாகும். இம் முறையை அளிக்குமுகத்தான், பாங்கர் பணத்தைச் சிருட்டிக்கிருர். மத்திய காலத்தில் இரசவாதிகள் முயன்ற பணவுற்பத்திமுறை இரகசியத்தை அவர் கண்டுபிடித்தார். எனவே, பணம் சிருட்டித்தல் விநோதத்தைத் தற்போதாவது நாம் ஆராய வேண்டும்போல் தோன்றுகிறது.

## பணம் சிருட்டித்தல்

சாதாரணக் கடன் பெறுபவர் ஒருவர் £100 கடன் வாங்குவதற்கு பாங்கிற்குச் செல்லுகிருரென்று வைத்துக்கொள்வோம். தான் முதலையும் வட்டியையும் செவ்வனே திருப்பித்தர இயலுமென்றும், தன்னிடம் கொடுக்கப்பட்ட பணம் பத்திரமாகத் திரும்பிச் சேருமென்றும் பாங்கரை நம்பவைக்கிருர். அதன்பிறகு, பாங்கர் £100 ஐ எடுத்துக் கடன் வாங்குபவரிடம் கொடுக்கத் தனது இருப்பறைக்குச் செல்வதில்லை. தன் நாட்டு அரசாங்கச் சட்டம் இடமளிக்குமானல்தான் அச்சிட்ட £100 நோட்டுகளை எடுத்துக் கடன் கொடுப்பார். ஆனல், மிகவும் வழக்கமாகக் கையாளும் முறை இதுதான்.

பாங்கு £100 ஐக் கடன்வாங்குபவர்பேரில் ஒரு கணக்கு ஆரம்பித்து, அதில்£100 ஐ வரவு வைத்துக் கொடுக்கும்(தன்கணக்கில் £100க்கு மேல் அவன் பணம் பெறக்கூடாதென்பதையும் இது குறிக்கும்). கடன் பெறுபவர் இந்த £ 100 ஐயும் ரொக்கமாகப்(உதாரணமாக, கூலி முதலியவற்றைக் கொடுப்பதற்கு) பெறலாம். ஆனால், செக்குகளாக அப் பணத்தைப் பயன்படுத்தவே பெரிதும் விரும்பலாம். அப்போது தன்னுடைய கணக்கினின்றும் £ 100 எடுக்கப்பட்டுப் பிறருடைய கணக்கில் வரவு வைக்கப்படுகிறது. பாங்கருடைய கடன்களை அதிகரித்தே கடன் பெறுபவருக்குக் கடன் வழங்கப்படுகிறதென்பது இங்கே குறிப்பிடத்தக்கது. (கடன் பெறுபவர் கடன் தொகையை நோட்டுகளாகப் பெற்றுக்கொண்டாலும் அல்லது வைப்பாகப் பெற்றுக்கொண்டாலும் இது நிகழ்கிறது.) பாங்கர் கடனுக்கீடாகக் கடன் பெறுபவரின் வாக்குறுதியையும், கடன் தொகைக்கான வட்டியையும் பெறுகிறார். பிறருக்குக் கடன் கொடுப்பதால் தன் கடன்களும் அவருக்கு அதிகரிக்கின்றன. ஒவ்வொரு கடனும் ஒரு வைப்பைத் தோற்றுவிக்கிறதென்பது (every loan creates a deposit) ஒரு பாங்கு பழமொழி. பாங்கரின் கடன்கள் (நோட்டுகளானாலும் அல்லது வைப்புகளானாலும்) நாம் மேலே கண்டதுபோல, பணமெனப் பணிபுரிகின்றன. இக் கடனால், அதிகமாக £ 100 பணம் தோன்றியுள்ளது. கடன் திருப்பி அடைக்கப்படும்போது, £ 100 கடன் வாங்கியவர் கணக்கில் வரவு வைக்கப்பட்டுக் கடன் தள்ளுபடி செய்யப்படும்போது, £ 100 பணம் புழக்கத்தினின்றும் மறைந்துபோகிறது.

வைப்புகள் 'சிருட்டி' செய்யப்படுதல் கடன் கொடுப்பதால் மட்டும் நேர்வதன்று. பாங்கர் ஒருவர் £ 100-க்குப் பங்குமாற்று நிலையத்தில் (Stock Exchange) பத்திரங்கள் (securities) வாங்குகிறாரென்று வைத்துக்கொள்வோம். அதை விற்பவர் கணக்கில் £ 100-க்கு வரவு வைத்து அதன் விலையைச் செலுத்துவார். இதன் மூலம் £100 அளவுக்கு அவர்தம் வைப்புகளை அதிகரித்துவிடுகிறார். பணமும் அதே அளவுக்கு அதிகரிக்கிறது. பத்திரங்களை விற்பவர் அவற்றை வாங்கும் பாங்கியினுடைய வாடிக்கைக்காரராகத்தான் இருக்கவேண்டுமென்ற அவசியமில்லை. ஏனெனில், பத்திரங்களுக்குக் கிரயமாக அவர் பெற்ற செக்கை எந்த பாங்கொன்றிலாவது அவர் வைப்பாக வைப்பார். எனவே, இந்த £ 100 பத்திரங்களை எந்த பாங்கர் வாங்கினாலும், அது அந்த பாங்கு அல்லது வேறு எந்த பாங்கியின் வைப்புகளையும் £ 100-க்கு அதிகமாக்கும். பத்திரங்களை வாங்குதலிலுள்ள நிலைபோன்றதே சொத்துகளை (assets) வாங்குதலிலும் உள்ளது. தான் விரும்பும் பொருளைத் தன்னுடைய கடன் வாக்குறுதிகளைக் (ஐஓயூ) கொடுத்துப் பெறு

வதற்கு ஒரு பாங்கு மகிழ்ச்சியுடன் தயாராக இருக்கும். அதன் கடன் வாக்குறுதிகள் பணமாக்கப்படுவதற்கு அதிகமாக வேண்டப்படுவதில்லை யாகையால், அம்மாதிரி பாங்கு பெறக்கூடும். ஒருவன் எப்படித் தனது சொந்தக் கடன் வாக்குறுதிகளைச் சிருட்டிக்க முடிகிறதோ அதுபோலப் பணத்தையும் சிருட்டித்துத் தான் விரும்பும் பொருள்களை வாங்குவதற்குப் பயன்படுத்திக்கொள்ள இயலும்.

ஆனால், பாங்கர் 'சிருட்டிக்கும்' பணம் ஒரு பொறுப்பு (liability) என்பதை மறந்துவிடக்கூடாது. இந்த அமைப்பு முழுவதுமே, பாங்கர்களின் வெகுசில கடன்வாக்குறுதிகளே (ஐஓயூக்கள்) பணமாக்கப்படுகின்றன என்னும் நியதியில்தான் இயங்குகின்றது. ஆனால், சில கடன் வாக்குறுதிகளாவது பணமாக்குவதற்கு பாங்கரிடம் வருமல்லவா? சமுதாயம் ஒரு குறிப்பிட்ட அளவு ரொக்கப்பணத்தைத் தேவைப்படும்போது பாங்கிலிருந்து பெறவேண்டும். இதனுடன் வைப்புகள் ஒரு பாங்கிலிருந்து மற்றொரு பாங்கிற்குச் சென்றுகொண்டேயிருக்கின்றன. ஒவ்வொரு நாளும் மிட்லண்ட் பாங்கு (Midland) வாடிக்கைக்காரர்கள் லாயிட்ஸ் பாங்கு (Lloyds Bank) வாடிக்கைக்காரர்களுக்குச் செக்கு எழுதுகின்றனர். அதைப்போலவே லாயிட்ஸ்பாங்கு வாடிக்கைக்காரர்கள் மிட்லண்ட் பாங்கு வாடிக்கைக்காரர்களுக்குச் செக்கு எழுதுகின்றனர்.

இந்த எல்லாச் செக்குகளும் செக்குத் தீர்வகத்தின் (Clearing House) மூலம் ஒவ்வொருவர் கணக்கும் நேர்செய்யப்படுகின்றன. ஆனால், ஒவ்வொருநாளும் இந்த ஏற்பாட்டில் ஒரு பாங்கு மற்றொரு பாங்கிற்குக் கொடுக்கவேண்டிய நிகர நிலுவைப்பாக்கி (net balance) இருந்துகொண்டே யிருக்கும். பாக்கி கொடுக்கவேண்டிய பாங்கு இக்கடனைத் தீர்க்கத் தயாராக இருக்கவேண்டும். பணம் வேண்டப்படுதலை (claims) பாங்கு இரு தரப்பினின்றும் நிறைவேற்ற வேண்டும். தங்கள் அன்றாடத் தேவைப் பொருள்களை வாங்குவதற்காகப் பணம் விரும்பும் பொதுமக்களிடமிருந்தும், செக்குத் தீர்வக நிலுவைகளைச் சரிக்கட்டத் தன்னொத்த பாங்குகளிடமிருந்தும் இதனை நிறைவேற்றவேண்டும். இதுபோன்ற செலுத்துகள் (payments) நாட்டின் மொத்தப் பண பேரத்தில் (transaction) ஒரு சிறு பகுதியே இருக்கும். இவ்விரு காரணங்களுக்காகவும் பாங்கின் மொத்த வைப்புகளில் ஒரு சிறு பகுதியையே ரொக்கமாக வைத்திருந்தால் போதுமானது என்று அனுபவத்தின் பேரில் தெரியவருகிறது. ஆனால், பாங்குகள் செலுத்துகளில் இரட்டிப்பு நிச்சயமாக இருக்கும்பொருட்டுத் தேவைக்கு அதிக

மாகவே ரொக்கம் வைத்துள்ளன. அப்படியும் தற்போது இங்கிலாந்தில் மொத்த வைப்புகளில் 8 சதவீதமே (per cent) ரொக்கம் வைக்கப்பட்டுள்ளது.

என்ன இருந்தபோதிலும், ரொக்கக் காப்புநிதி வைத்திருக்க வேண்டிய அவசியம் (எவ்வளவுதான் குறைவாக இருந்தபோதிலும்) பாங்கு தன் விருப்பம்போல் பணம் 'சிருட்டிக்கும்' அதிகாரத்திற்கு ஒரு கட்டுப்பாட்டையே விதித்தது. பணம் 'சிருட்டித்தல்' பாங்கினுடைய வைப்புப் பொறுப்புகளை அதிகரிக்கின்றது. பாங்கும் தன் மொத்த வைப்புப் பொறுப்புகளில் 8 சதவீதத்திற்குக் குறைவில்லாமல் ரொக்கக் காப்புநிதி (cash reserve) வைத்திருக்க வேண்டும். இந்த ரொக்கவிகிதம் சற்றுக் குறைந்து 6 அல்லது 5 சதவீத அளவிற்கு வைக்கப்படுதலும் உண்மையில் நலமாகவேயிருக்கும். ஆனால், பொதுமக்கள் அதிக விகிதத்திற்கே பழக்கப்பட்டுவிட்டதால் பாங்கு ரொக்க விகிதத்தை வழக்கமான விகித அளவிற்கும் குறைத்துவிட்டால் அதனைச் சந்தேகக் கண்கொண்டு நோக்குவர். மற்ற மனிதர்களைப்போல் பாங்கர் தன்னிலைமைக்கு ஆபத்து வரக்கூடிய செயல்களைச் செய்ய இயலாது; அதைப் போலத் தனக்குத் தீங்குவரும் என்று மக்கள் 'கருதும்' செயல்களையும் பாங்கர் செய்ய இயலாது. தேவைப்படும்போது கடன் பொறுப்புகளைத் தீர்க்கும் பாங்கரின் திறமையைப் பொதுமக்கள் நம்புவதில்தான் பாங்கருடைய பாங்கு நடத்துதல் முழுமையும் அடங்கியிருக்கிறது. அவருடைய காப்புநிதி அதிகமாக இருக்குமானல், 'தேவைப்படும்போது பணம்கொடுக்கும் அவருடைய திறனை' யாரும் ஐயுற மாட்டார்கள். காப்புநிதி, பொதுமக்கள் பழக்கப்பட்ட அளவுக்கும் குறைந்துவிடுமானல், பயந்த சுபாவமுடைய வைப்பாளிகள்(depositors),பாங்கர் தன் பொறுப்புகளை எல்லாம் தீர்க்கமுடியுமா என்று ஐயுற்று, தங்கள் வைப்புகளை பத்திரமாக இருக்கும்பொருட்டு ரொக்கமாக மாற்ற முனைவர். பாங்கு வணிகத்தில் இவ்விதமான முரண்பாடுகள் பலஉண்டு. ஒரே சமயத்தில் எல்லாத் தேவைகளுக்கும் ரொக்கம் கொடுக்க எந்த பாங்கராலும் முடியாது. இந்தக் கருத்தின்படி ஒவ்வொரு பாங்கரும் ஒரு வக்கற்றவரே (insolvent). பாங்கருடைய வணிகம் முழுதுமே, அவர் வகையுள்ளவர் என்னும் பெருமையைப் பொறுத்தே கேள்வியின்றி,தயக்கமின்றி ஒவ்வொரு தேவையும் உடனுக்குடன் ரொக்கமாக மாற்றப்படுமென்று பொதுமக்கள் அவர்பால் கொண்டுள்ள நம்பிக்கையையும் பொறுத்தேயுள்ளது. பாங்கர் அதிகப்படி காப்புநிதியைப் பெற்றிருக்கும்போது அதன் தேவை அவருக்குக் குறைவாகவே யுள்ளது; குறைவாகக் காப்புநிதியைப் பெற்றிருக்கும்போது அதன் தேவை அதிகமாயுள்ளது.

விவேகமுள்ள பாங்கர் எவரும், தன்னுடைய வைப்புப் பொறுப்புகளை ஒரு குறிப்பிட்ட அளவிற்குக் கீழ் ரொக்க இருப்புப் போகாதபடி ஓர் உறுதியான வணிகக் கோட்பாட்டினை அமைத்துக் கொள்வார். சில நாடுகளில் இக் காப்புநிதி வைத்துக்கொள்ளு வதை பாங்கருடைய விவேகத்திற்கே விட்டுவிடாமல், அரசாங் கம் குறைந்தபட்ச விகிதத்தை (minimum ratio) நிர்ணயிக்கிறது. உதாரணமாக, ஐக்கிய அமெரிக்காவில் ஐக்கிய ரிசர்வு முறையில் (Federal Reserve System)ஒன்றியுள்ள பாங்கு ஒவ்வொன்றும் தனது 'தவணை வைப்புகள்' (time deposits) அளவில் 3 சதவீதத்திற்கு மற்றைய வைப்புகளின் அளவில் 7-லிருந்து 13 சதவீதம் வரை யிலும் ரொக்கம் வைத்துக்கொள்ளவேண்டுமென்று சட்டத்தின் மூலம் கட்டாயப்படுத்தப்படுகிறது. இக் குறைந்தபட்ச சட்டபூர்வ மான காப்பு விகிதங்கள் ஐக்கிய ரிசர்வு போர்டாரால் (Federal Reserve Board), அவர்கள் சரியென்று கருதினல், அதிகரிக்கப் படலாம். பல ஆண்டுகட்கு இதுபோல அதிகரித்தே காப்பு விகி தங்கள் வைக்கப்பட்டிருந்தன.

எனவே, பாங்குகள் தங்கள் மொத்த ரொக்கக் காப்புநிதியைப் போல் பன்னிரண்டு மடங்குப் பணத்தைச் 'சிருட்டிக்கலாம்'. இவ் அத்தியாயத்தின் பின்னெருபகுதியில் 'ரொக்கம்' என்று குறிப் பிடப்படுவதெது என்பதனை ஆராய்வோம். இப்போது எவையெல் லாம் ரொக்கமென்பதில்லை யென்று ஆராய்வதே போதுமானது. பாங்கின் 'ரொக்கமென்பது' (cash) அது சிருட்டிக்கும் அல்லது அதிகரிக்கும் எவ்வகைப் பணமுமன்று. பாங்கு 'ரொக்கமாவது' பாங்கு தன்னுடைய கடனைத் திருப்பி அடைக்க நேரிடும்போது பயன்படுத்தும் பணமாகும். ஆனல், பாங்கு 'சிருட்டிக்கும்' வைப்புப்பணம் (deposit money) அதன் கடனை அடைக்கப் பயன் படாது. ஏனென்றல், இவ் வைப்புகளும் பாங்கின் 'கடனே'. பாங்கு தன்னிடமுள்ள ரொக்க அளவை (இன்னும் சரியாகச் சொல்லப்போனல், பாங்குகள் தங்களிடமுள்ள ஒன்றுபட்ட ரொக்க அளவை) நிர்ணயித்துக்கொள்ள இயலாது. எனவே, பாங்கின் பணம் 'சிருட்டித்தல்' அதன் கையிலுள்ள ரொக்கத்தின் அளவைப் பொறுத்து வரையறுக்கப்பட்டுள்ளது. £ 1 ரொக்கம் பாங்கு பெறுமானல் £ 12 கூடுதலாகப் பணத்தை பாங்கு சிருட்டிக் கக்கூடும். ஆனல், £ 1 ரொக்கம் தொலைந்துபோய்விட்டதென்றல், பாங்கு £ 12 அளவு வைப்புகளை அழித்துவிடவேண்டும். பாங்கின் பணம் சிருட்டித்தலுக்கு இதுவே முதல் வரையறையாகும் (limitation).

இரண்டாவது வரையறை வைப்புகள் தோன்றும் முறையா லுள்ளது. நாம் ஏற்கெனவே பார்த்ததுபோல் சில சொத்துகளைப்

பெறுவதன்மூலமே வைப்புகள் தோன்றுகின்றன—பாங்கிற்குக் கடன்பட்டிருப்பவனுடைய கடன், அல்லது ஒரு பத்திரம், அல்லது ஒரு கட்டடம் அல்லது எவ்வகையான சொத்தாகவுமிருக்கலாம். பத்திரங்கள், பங்குகள், கட்டடங்கள் ஆகியவற்றைப் பொறுத்த வகையில் இவ்வுண்மை எளிதிற் புலப்படும். பாங்கு கொடுக்கும் கடன் ஒவ்வொன்றும் யாதானுமொரு மதிப்புள்ள ஈட்டின்பேரில் தான்கொடுக்கப்பட்டிருக்கும். ஈடே இல்லாமல் கடன் கொடுக்கப் பட்டிருந்தாலும், கடன் பெறுபவருடைய சம்பாத்தியத் திறனும் (earning capacity) ஒருவகைச் செல்வமாகையால் அதுவும் ஒரு ஈடேயாகும். எனவே, பாங்கு ஒன்றுமே யில்லாமல் பணத்தைச் சிருட்டி செய்துவிட வில்லை. மற்றவகைச் செல்வத்தைப் பணமாக அது மாற்றுகிறது. இடைக்காலத்து இரசவாதிகளும் (alchemists) ஒன்றுமில்லாமல் பொன்னை வரவழைக்க முனையவில்லை; ஈயத் தைப் பொன்னுக மாற்றவே பெருவிழைவு கொண்டனர். பாங்க ருடைய அதிகாரம் இதைப்போன்று இவ்வளவு பெரியதுமன்று. ஏனெனில், மதிப்பற்ற ஒரு பொருளை மதிப்புள்ளதாக்க பாங்கரால் இயலாது. ஆனுல், அசையாத செல்வத்தை அசையும் செல்வ மாக (அல்லது 'நீர்மை'ச் செல்வமாக) அதாவது, பணமாக மாற்ற இயலும். அசையாச் செல்வத்தைத் தனக்குச் சொத்தாகப் பெற்றுக் கொண்டு அதற்கு மாற்ருகத் (exchange) தன் வாக்குறுதிகளை (ஐஓயூ) அளிக்கின்ருர். இதுவே பாங்கு வணிகத்தின் சாராம்ச மாகும்.

பாங்கின் திண்மை குறித்துப் பொதுமக்கள் வைக்கும் நம்பிக் கையே பாங்கின் வாக்குறுதிகளுக்குப் பணத்தன்மைகளை உண்டு பண்ணுகின்றது. அதாவது, பொதுமக்கள் இந்த வாக்குகளைத் தங்களுடைய தேவையான பொருள்களை வாங்குவதற்கும், தங்கள் கடன்களை அடைக்கவும் பயன்படுத்துகின்றனர். பாங்கைப் பொறுத்த அளவில் இது பணமன்று என்பதைத் தெளிவாகப் புரிந்து கொள்ளவேண்டும். பொதுமக்களைப் பொறுத்த அளவில் பாங்கு நோட்டுச் சொத்தின் பிரதிநிதியாகும். ஆனுல், பாங்கிற்கு அது பொறுப்பின் பிரதிநிதியாகும் ஒரு பாங்கு தனது நோட்டு களையோ அல்லது வைப்புகளையோ அதிகரிக்கும்போது, தன் பொறுப்புகளையும் (liabilities) அதிகரிக்கின்றது. எனவே, அவ்வாறு அதிகரிப்பதற்கு அது ஈடு செய்யப்படுதல் (compensate) முறையேயாகும். இவ்வுண்மையைத் தவருகப் புரிந்துகொள்ளுத லானது, பாங்குமுறை அமைப்பைப்பற்றித் தாறுமாருன கருத்தின் அடிப்படையாகும். பாங்கின் வைப்புகள் அல்லது நோட்டுகள் அதி கரித்தால் அதன் இலாபமும் அதிகரிக்கும் என்பது உண்மையே. எனவே, பாங்குகள் எப்பொழுதும் தங்களது பொறுப்புகளை

அதிகரிக்கவே விழைகின்றன. எனினும், பாங்கு தன் பொறுப்பு களினின்றும் இலாபமடைவதில்லை; தனது பொறுப்புகளுக்கு மாருகத் தான் பெற்ற சொத்துகளினின்றே இலாபம் அடைகிறது. அது ஒரு கடனைக் கொடுக்கும்போது, நாம் ஏற்கெனவே பார்த்தது போல், தனது வாக்குறுதிகளை அதிகரிப்பதன்மூலமே கடனைக் கொடுக்கிறது. ஆனுல், அது இலாபம் அடைவதோ, கடன் பெறு பவரின் கடனைத் திருப்பி அளிக்கும் வாக்குறுதிகளினுல்தான், தன்னுடைய வாக்குறுதிகளாலல்ல. இவ்விரண்டும் ஒரே பேரத் தினுல்தான் நிகழ்கின்றன; ஆனுல் வேறுபட்டவை. சொத்து மறைந்தபோதும் (உதாரணமாகக் கடனுளி வக்கற்றவராகிவிட் டால்) நோட்டுகள் அல்லது வைப்புகளின்மீதுள்ள பொறுப்பு நிற்கின்றது. பொறுப்பு மறைந்தபோதும் (உதாரணமாக, நோட்டு கள் அழிக்கப்படுகின்றனவென்று கொள்வோம்) சொத்து நிலைத்து நிற்கும். வேடிக்கையான பழைய சம்பவமொன்று இக் குழப்பத்தி னைப் போக்க உதவும். எட்டாம் நூற்றுண்டில் ஐரிஷ் (Irish) மக்கள் கூட்டமொன்று, தாங்கள் வெறுத்த பாங்கர் ஒருவரின் தோல்வியை உண்டுபண்ணுவதற்காக, அவர் வெளியிட்ட நோட்டுகளைக் குவித்து மூட்டம்போட்டு ஆர்ப்பரித்தனர்!

'சிருட்டித்தல்' என்னும் சொல்லே பாங்குப்பணம் உண்டா வதற்குத் தகுந்த விளக்கமாக அமைந்துவிடாது; நாம் ஆராய்ந்த இலக்கணத்திற் கொப்பவே இச்சொல்லைக் கையாள வேண்டுமே தவிர மற்றச் சமயங்களில் இதனைக் கையாளக் கூடாது. பாங்கு புதிதாகப் பணம் சிருட்டிக்கு முன்னர், தான் 'சிருட்டிக்க'ப் போகும் பணத்தில் 8 சதவீத அளவிற்காவது ரொக்கம் வைத்துக் கொள்ள வேண்டும். இப்படியும் பணம் வெளிவந்துவிட முடியாது. பாங்கு வெளியிடும் பணத்திற்குச் சொத்துகளை ஈடாகப் பெற்றி ருக்க வேண்டும். அப்படியில்லாவிடில், ரொக்கமாக மாற்றக் கூடிய அல்லது தேவைப்படும்போது ரொக்கம் பெறக்கூடிய பொறுப்புகளை (liabilities) அதிகரிக்க வேண்டும். இவ்விரு வழி களால்தான் பணத்தை வெளியிடமுடியும். இத் தகுதிகள் முழுமை யும் வைத்துப் பார்த்தாலும், பாங்குகளின் அதிகாரம் அதிக அள வில்தான் இருக்கிறது. அவைகளின் அதிகாரத்திற்குக் கட்டுப் பாடுகள் இருப்பினும், அக்கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டு அவைகள் எவ்வளவு பணம் புழக்கத்திலிருக்க வேண்டும், யார் கையில் அவைகள் கொடுக்கப்பட வேண்டும் என்ற இது போன்ற முடிவு களை எடுக்க நிரம்ப அதிகாரத்தைத் தங்களிடமே வைத்துக் கொண்டுள்ளன.

மேற்சொன்ன கூற்றுகள் பல, போர்க்காலங்களில் பாங்குகள் இயங்கும் விதத்திற்குப் பொருந்தாதன வாகையால், அச் சமயங்

களில் இவைகள் கையாளப்படுமுன்னர்த் திருத்தங்களுடன் ஆளப் படவேண்டும். போர்க்காலங்களில் பாங்குப்பணம் அதிகமாக சிருட்டிக்கப்படும், உதாரணமாக, லண்டன் தீர்வகத்தில் அங்கம் வகிக்கும் பாங்குகளின் (அதாவது, இங்கிலாந்தின் பெரிய பாங்குகள் முழுமையும்) 1939 ஆம் ஆண்டின் மொத்த வைப்புகள் £ 2,250 மில்லியன். 1947 ஆம் ஆண்டு அவைகள் £ 5,500 மில் லியனாக அதிகரித்தன. £ 3,250 மில்லியன் அளவிற்குப் பாங்குப் பணம் சிருட்டிக்கப்பட்டது. இந்தச் சிருட்டிப்பு ஏற்பட்ட முறை, நாம் முன் பத்திகளில் (paragraphs) பார்த்தவாறு—பாங்குகள் சொத்துகளைப் பெற்று அவற்றிற்கு ஈடாகத் தங்களுடைய வைப்பு களுக்குப் பணம் கொடுக்கும் வாக்குறுதிகளை அளித்ததன் மூலமே யாகும். ஆனால், இந்தச் சொத்துகளை 'உண்மைச்செல்வம்' (real wealth) என்று சொல்லிவிடமுடியாது. ஏனெனில், அவைகள் பெரும் பகுதியும் அரசாங்கத்தின் வாக்குறுதிகளாக (ஐ ஓ யூக்கள்) இருக் கும். தன் வாக்குறுதிகளை நிறைவேற்ற அவைகளைப் பணம் கொடுத்து அரசாங்கம் மீட்டுக்கொள்ளுமாகையால், பாங்குகளைப் பொறுத்தவரை அவ்வாக்குறுதிகள் மிகவும் உத்தரவாதமானவை (gilt-edged). ஆயினும், அவைகள் போரொழிப்பைக் (destruction of war) குறிக்கின்றனவே தவிர உண்மையான செல்வத்தை உணர்த்துவதில்லை. அடுத்தபடி, இவ்விஷயத்தில் பாங்குகள் எந்தவித முயற்சியும் எடுப்பதில்லை; அவைகள் எப்படிச் சொல்லப் படுகின்றனவோ அந்தக் கடமைகளையே செய்கின்றன. போர் நிதியம் (finance of war) பற்றிப் பிறிதோர் அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளது. போரிடும் அரசாங்கம் பெருஞ் செலவிற்குப் பணம் திரட்டவேண்டிய நெருக்கடியிலிருக்கும் என்று தெரிந்து கொள்வதே தற்போதைக்குப் போதுமானது. தன்னாலியன்ற அளவு வரிகளின்மூலமும் கடன் மூலமும் அரசாங்கம் பணம் திரட்டுகிறது. இவ்வெல்லா வழிகளும் தீர்ந்துவிட்டால், இதை முன்னிட்டுப் பணம் சிருட்டிக்கும் பாங்குகளிடமிருந்துதான் கடன் பெறவேண்டும். போரில் வெற்றிபெறுவதே மற்றையக் கொள்கை களுக்கெல்லாம் தலையாயதாகையால், பாங்குகள் கேட்ட தொகையை அளிக்கின்றன.

போரில்லாத சாதாரணக் காலத்திலும் பாங்குகள் அரசாங்கத் தின் கொள்கைக்குத் தடையாக இருப்பதில்லை. உண்மையில், 1945 ஆம் ஆண்டில் இங்கிலாந்து பாங்கு நாட்டுடைமைச் சட்டம் (Bank of England Nationalisation Act in 1945) நிறைவேறிய பிறகு அவைகளுக்கு அவ்வாறு செய்யவும் அதிகாரமில்லை. ஆனால், அரசாங்கத்தைத் தவிர மற்றக் கடன் பெறுபவர்களுக்கு பாங்கு பணம் சிருட்டிக்கவோ, அல்லது சிருட்டித்துத்தர மறுக்

கவோ உள்ள அதிகாரம் முக்கியமானது. இவ்வதிகாரமிருப்பினும், அவைகள் மிகைப்படுத்திக் கூறப்படுவதாகத் தனிப்பட்ட பாங்குகள் குறைகூறுகின்றன. ஒரு நாட்டில் ஐந்து பாங்குகள் இருக்கின்றன வென்று வைத்துக்கொள்வோம். 'A' என்னும் பாங்கர் ஒருவருக்கு £ 8 அதிகப்படியாக ரொக்கம் கிடைத்தது எனக் கொள்வோம். இந்த அத்தியாயத்தை இதுவரையில் படித்துவிட்டு, அந்த பாங்கர் தமது வைப்புகள் £ 100 அதிகரிக்கும்வரை கடன் கொடுக்கத் தலைப்படுகிறார் என வைத்துக்கொள்வோம். இந்த மட்டில் நல்லமே. ஆனால், கடன் பெற்றவர்கள் அப்பணத்தைப் பிறருக்கு வழங்க முற்படுவர். இதில் விந்தை என்னவெனில்,பணத்தைப் பெறுவதில் ஐந்தில் நான்குபேர் B, C, D, E, இந்த பாங்குகளில் அப்பணத்தை வைப்பு வைக்கின்றனர். இந்த நான்கு பாங்குகளும் A பாங்கினிடம் £ 80-க்கு உரிமை கொண்டாடும். எனவே, A பாங்கு £ 100 பணம் சிருட்டித்ததால் தான் அதிகமாகப் பெற்றிருந்த £ 8 ரொக்கத்தையுமிழப்பதல்லாமல் £ 72 ரொக்கத்தையுமிழக்கும். எனவே, 'சிருட்டித்தல்' என்றும் அர்த்தமற்றதென்று அனுபவமுள்ள பாங்கர் ஒருவர் கூறுகிறார். ஒரு பாங்கு அதிகப்படியாக £8 ரொக்கம் வைத்திருந்தால், £ 8 அதிகப்படியாக அது கடன் கொடுக்கக்கூடும். இதற்கு அதிகமாகவோ குறைவாகவோ இருக்காது. பாங்குகள், அதாவது, பாங்கர்கள் பணம் சிருட்டிப்பதில்லை; வைப்பாளிகள் கொடுக்கும் பணத்தையே அவர்கள் கடனுக்குக் கொடுக்கின்றனர்.

இதற்கு இரண்டு விடைகள் உள; ஒன்று கருத்தியலானது; மற்றொன்று செயல்வகையானது. கருத்தியலான விடையின்படி, செயல்வகை பாங்கர் தன்னுடைய ஆராய்ச்சியை ஆழ்ந்து செய்யவில்லை என்பதாகும். B, C, D, E பாங்குகள் தாங்கள் ஆளுக்கு £ 20 தனித்தனியே A யிடமிருந்து கிடைக்கப் பெற்றதும், அந்நிலையில் அவர் தம் வேலையை நிறுத்திவிடுகிறார். இது மற்ற பாங்குகளைக் கடன் கொடுப்பதன்மூலம் பணம் சிருட்டிக்கத் துணைசெய்கிறது. அவைகள் 'சிருட்டித்த' பணம் சில A யின் பாங்கிற்குத் திரும்பி வரும்போது, A தன்னுடைய ரொக்கத்தில் ஒரு பகுதியைத் திரும்பப் பெறக்கூடும். ஆனால், தொடக்கத்திலிருந்த அவருடைய £ 8 அதிகப்படியான ரொக்கம் பாங்குமுறை ஒழிந்த ஏனைய வழிகளினின்றும் வந்திருக்குமேயானால் (உ-தாரணம், தென் ஆப்பிரிக்கப் பொற்சுரங்கங்களினின்றும்) அது ஏதானும் ஒரு பாங்கின் ரொக்க இருப்பு நிதியை அதிகரித்திருக்கும். எங்காவது £ 100 அளவிற்குப் புதிய வைப்புகள் சிருட்டிக்காதவரை, இந்த ஐந்து பாங்குகளின் ரொக்க இருப்பு விகிதங்கள், பொதுப்படையாக, இந்த ஐந்து பாங்குகளிலும் வழக்கமான அளவிற்கும் கூடுதலாக

இருக்கும். அதிகப்படியாக இந்த £ 100 சிருட்டிக்கப்படும் வரை வைப்புகளின் அதிகரிப்பும், ரொக்கம் பெற்றுக்கொள்ளப்படுவதும், கொடுப்பதும் இருந்துகொண்டே இருக்கவேண்டும்.

இரண்டாவது விடை கண்டிப்பாகச் செயல்வகையானது. இந் நூல் எழுதப்படும்போது பிரிட்டிஷ் பாங்குகளின் மொத்த வைப்பு களின் தொகை ஏறக்குறைய £ 6,000 பில்லியன். ஆனால், இந்த நாட்டின் ரொக்கத்தின் மொத்த அளவு (உ-ம் பாங்கு வைப்புகள் தவிர்த்த பணம்) £ 1,600 மில்லியனுக்குமேல் அதிகரித்ததில்லை. மேலும், எந்தச் சமயத்திலும் நாட்டின் ரொக்க முழுமையும், அநேகமாக எல்லா ரொக்கமும் பாங்குகளில் செலுத்தப்பட் டிருந்ததில்லை. உண்மையில் பாங்குகள் £ 250 மில்லியனுக்கு மேல் ரொக்கம் வைத்திருந்ததில்லை. பாங்குகள் பணம் 'சிருட்டி'ப் பதில்லையென்றால், £ 5,750 மில்லியன் எங்கிருந்து வரக்கூடும்? ஒரு பாங்கின் அல்லது எல்லா பாங்குகளின் மொத்தக் கணக்கு விவரத்தை எடுத்து ஆராய்ந்தால், ரொக்கத்தில் ஏற்ற இறக்கம் எவ்வாறு அதைப்போன்று ஏறக்குறைய ஒன்பது அல்லது பத்து மடங்கு வைப்புகளில் ஏற்படும் ஏற்ற இறக்கங்களி னால் தொடரப்படுகிறதென்பது விளங்கும். இதனைக் கருத்திய லாகவோ, அல்லது செயல்வகையாகவோ (practical) முதல் நிலைக்குப் பிறகும் ஆராய்பவருக்கு பாங்குகள் வைப்புகளை 'சிருட் டிக்கின்றன' என்பதில் ஐயம் நேராது. இருக்கின்ற ரொக்கத் தின் அளவே செயல்வகையிலுள்ள கட்டுப்பாட்டை ஏற்படுத்து கிறது.

## இருப்புநிலைக் குறிப்பு

இதுவரை ஆராய்ந்ததில் பாங்குமுறையின் இரண்டு முக்கியக் கொள்கைகளைக் கண்டோம். அவற்றில் ஒன்று விகி தங்களின் கொள்கை. இது போன்று சட்டத்தினால் அல்லது வழக்கத்தினால் ஏற்படும் வைப்புகளை—ரொக்கக் குறைந்தபட்ச விகிதத்தை நாம் ஏற்கெனவே கண்டோம். மற்றொரு கொள்கை சொத்துகள், பொறுப்புகளில் சமநிலை யாகும். ஒருவகையில், பின்னர்ச் சொல்லப்பட்ட இக் கொள்கை பாங்கு முறைக்கே தனிப் பட்டதன்று. ஒவ்வோர் இருப்புநிலைக்குறிப்பும், மிட்லண்டு பாங் கின் இருப்புநிலைக் குறிப்பாயினும், அல்லது கற்பலகைச் சங்க (slate club—கற்பலகைச் சங்கமென்பது அங்கத்தினர் வாரத்திற்கு ஒரு குறிப்பிட்ட தொகையைச் சங்கத்திற்குச் செலுத்தி, தங்கட்கு ஏதாவது இடர்ப்பாடு நேரிடும்போது சங்கத்திலிருந்து உதவி பெறும் சங்கம்) இருப்புநிலைக் குறிப்பாயினும் இருப்புநிலையைக்

காட்டும். ஆனால், பாங்கு வணிகத்தில் சிறப்பான வகையில் சொத்துகள், பொறுப்புகளின் இருப்புநிலையை அது உணர்த்துகிறது. பாங்கு தன் பொறுப்புகளை (liabilities) அதிகரித்துச் சொத்துகளைப் (assets) பெறுகிறது. மற்றத் தொழிலிலுள்ளது போல் மறைமுகமாக வாணிபத்தால் இது பெறப்படுவதில்லை; நேரிடையாகவே பெறப்படுகிறது. பாங்கின் சொத்துகள் நேரிடையாகவே அதன் பொறுப்புகளுக்கு ஈடாகப் பெறப்படுகின்றன. நீங்கள் ஓர் எஃகு கம்பெனியின் வணிகநிலையை ஆராய எண்ணினால், முதலில் அக்கம்பெனி எவ்வளவு எஃகு உற்பத்தி செய்கிறது என்பதைத் தெரிந்துகொள்ளத்தான் விரும்புவீர்கள். அடுத்தபடி அதன் உருக்கு உலைகளையும், தகடுகளாக்கும் தொழிற்கூடங்களையும் பார்க்க விழைவீர்கள். இருப்புநிலைக் குறிப்புப் பிறகே ஆராயப்படும். ஆனால், கொடுக்கல் வாங்கலில் பேரம் நிகழ்த்தும் பாங்கு விஷயத்தில் அப் பாங்கு எவ்வளவு கடன்பட்டிருக்கிறது, எவ்வளவு கடன் பிறருக்குக் கொடுத்திருக்கிறது என்பவற்றை முதலில் ஆராயவே விரும்புவீர்கள். பாங்கு வணிகம் முழுதுமே அதன் இருப்புநிலைக் குறிப்பில்தானுள்ளது. பாங்கு எந்த விகிதத்தில் நடந்து வருகிறது என்ற கண்ணோட்டத்தையும் அது எடுத்துக்காட்டுகிறது. பாங்குகளைப்பற்றி மேலும் விளக்குவதற்கு முன்னர், அவைகளின் இருப்புநிலைக் குறிப்புகளைப்பற்றி ஆராய்ந்தேயாக வேண்டும். பக்கம் 42-43-ல் இரண்டு மாதிரி இருப்புநிலைக் குறிப்புகள் தரப்பட்டுள்ளன. முதலாவது, 1946ஆம் ஆண்டு, நவம்பர் மாதத்தில் லண்டன் தீர்வகத்தின் பதினோர் அங்கத்தினர்களின் மொத்த இருப்புநிலைக் குறிப்பு. அடுத்தது, 1946ஆம் ஆண்டு, செப்டம்பர் 30ஆம் தேதி அமெரிக்க ஐக்கிய ரிசர்வு முறையில் அங்கம்வகிக்கும்

சுலபமான வகையில் அச்சிடப்பட்டுள்ளன.

மிகவும் எளி
ன் பங்குதாரர்
த்தில் செலுத்
கயும்) இடம்
றுப்பு இனம்,
ன்று குறிக்கப்
க்கவேண்டிய
ம்பகுதி பண
அமெரிக்காவில்
துகளினின்றும்
தன்மையைப்

இருப்புநிலைக் குறிப்பின் பொறுப்புகள் பகுதி
தானது. முதலாவதாக, அதில் பாங்குகள் அவைகளி
களுக்கு கொடுக்கவேண்டிய பொறுப்புகள் (ஆரம்ப
தப்பட்ட மூலதனமும், கொடுபடாத இலாபத் தொ
பெற்றுள்ளன. மிக அதிகத் தொகையுள்ள பொ
நோட்டுகள் (ஏதாவது இருப்பின்), வைப்புகள் என
பட்டுள்ள பொதுமக்களுக்கு பாங்குகள் கொடு
பொறுப்பாகும். இந்த இனமே நாட்டின் பெரு
அளிப்பைக் (money supply) குறிக்கிறது. ஐக்கிய அ
மூன்றாவதாக உள்ள இனம் 'ஐக்கிய ரிசர்வு பாங்
பெறப்பட்ட கடன்கள்'. ஐக்கிய ரிசர்வு பாங்குகளின்

**லண்டன் தீர்வக பாங்குகளின் மாதாந்தர அறிக்கை, நவம்பர், 1946**

| பொறுப்புகள் | | சொத்துகள் | |
|---|---|---|---|
| மூலதனமும் காப்பு நிதியும் ... | £145,671,000 | இங்கிலாந்து பாங்கினிடம் இருப்பாகவுள்ள பாங்கு நோட்டுகளும் நாணயமும் ... ... | £573,825,000 |
| வைப்புகள் ... ... | 5,502,513,000 | வசூலிப்பு ஆகியவை மூலம் பெற்ற செக்குகள் ... ... | 195,785,000 |
| புழக்கத்திலுள்ள நோட்டுகள் ... | 1,102,000 | அழைப்புக் கடன் (கைம்மாற்றுக் கடன்), குறுந்தவணைக் கடன் (Money at call and short notice)... | 323,818,000 |
| இதர இனங்கள் ... ... | 180,816,000 | கழிவு செய்யப்பட்ட உண்டியல்கள் (Bills discounted) ... ... | 497,051,000 |
| | | கருவூல வைப்பு வரவுகள் (Treasury Deposit Receipts) ... | 1,628,000,000 |
| | | முதலீடுகள் (Investments) ... | 1,410,083,000 |
| | | முன்பணம் (Advances) ... ... | 955,185,000 |
| | | இதர இனங்கள் ... ... ... | 246,355,000 |
| | £5,830,102,000 | | £5,830,102,000 |

**ஐக்கிய ரிசர்வு முறையில் அங்கம் வகிக்கும் பாங்குகள், 1946ஆம் ஆண்டு, செப்டம்பர் 30ஆம் தேதி**

| பொறுப்புகள் | | சொத்துகள் | |
|---|---|---|---|
| மூலதனமும் காப்பு நிதியும் ... | $8,077,000,000 | இருப்பறையிலுள்ள ரொக்கம் (Cash in vault) | $1,382,000,000 |
| வைப்புகள் ... ... | 119,680,000,000 | ஐக்கிய ரிசர்வு பாங்குகளிலுள்ள காப்புநிதி (Reserves in the Federal Reserve Banks) ... | 15,792,000,000 |
| ஐக்கிய ரிசர்வு பாங்குகளிலிருந்து பெற்ற கடன்கள் ... | 77,000,000 | மற்ற பாங்குகளிலுள்ள இருப்பு (Balances in other banks) ... | 5,660,000,000 |
| | | முதலீடுகள் ... ... ... | 74,931,000,000 |
| | | முன்பணம் ... ... ... | 24,775,000,000 |
| | | இதர இனங்கள்... ... ... | 5,294,000,000 |
| | $127,834,000,000 | | $127,834,000,000 |

பற்றிப் பிறிதோர் இடத்தில் ஓரிரண்டு பக்கங்களில் விவரிப்போம்; தற்போதைக்கு இந்த இனத்தை பாங்குகள் தாற்காலிகமாகக் கடன் வாங்கிய ரொக்கத்திற்கு அளிக்கப்பட்ட பொறுப்புகள் என்று கொள்வதே போதுமானது. கடைசியாக இதர பொறுப்புகள் என்று ஓர் இனம் காட்டப்பட்டுள்ளது. இவைகள் பாங்குகளில் வணிகவாயிலாக ஏற்பட்டவை. தற்போதைய நோக்கங்களுக்கு இதை ஆழ்ந்து விளக்கத் தேவையில்லை.

இருப்புநிலைக் குறிப்பின் சொத்துகளின் பகுதி நிறையக் குழப்பமானது; ஆனால், சுவைகொள்ளச் செய்வது. பலவித சொத்துகளில் முதலீடு செய்யும் பாங்கு முக்கியமாக இரண்டு சிந்தனைகளை மனத்தில் கொள்ளவேண்டும். முதலாவது, அவைகளின்மீது ரொக்கம் தேவைப்படும்போது உடனடியாகக் கொடுக்கத் தயாராக இருக்கவேண்டும். இதன் காரணத்திற்காகவே, நாம் ஏற்கெனவே பார்த்ததுபோல் ஓரளவு ரொக்கக் காப்பு நிதியை வைத்துள்ளது. மேலும், தன்னிலையைப் பத்திரப்படுத்திக்கொள்வதற்காகத் தன்னிடமுள்ள பணத்தின் ஒரு பகுதியைக் குறுந்தவணைக் கடனுக்குக் கொடுக்கின்றது. ஒரு நாள் முன்னறிவிப்பில் திரும்பிக் கொடுபடக் கூடிய குறுந்தவணைக் கடன்கள் உண்டு. சாதாரண உற்பத்தியாளர்களுக்கும் வியாபாரிகளுக்கும் 24 மணி நேர அறிவிப்பில் திருப்பித் தரக்கூடிய கடன்களால் எத்தகைய பலனுமில்லை. ஆனால், பண அங்காடியில் (money market) உள்ள பலதிறப்பட்ட வணிகர்களால் இக் கடன்கள் பெறப்படுகின்றன.

இரண்டாவதாக, பாங்கர் மனத்தில் கொள்ளவேண்டிய பொருள் வருவாயாகும். அவருடைய சொத்துகளினின்று வரும் வருவாய், தனது பாங்கில் வேலை செய்பவர்களுக்குக் கூலி, தான் வாங்கும் கடன்களுக்குச் செலுத்தவேண்டிய வட்டி, காப்பு நிதிக்குத் தேவையான பணம், பங்குதாரர்களுக்கு ஈவாகக் (dividend) கொடுப்பதற்கென எஞ்சியுள்ள பணமுமாக இவற்றையெல்லாம் அளிக்கவேண்டும். தனது காப்பு நிதியினின்றும் எந்தவித வருவாயையும் பாங்கர் அடைவதில்லை. குறுந்தவணைக் கடன்கள் கடன் வாங்குபவருக்கு சிறிய அளவு நன்மையே பயப்பதால் அதற்கான வட்டி விகிதங்களும் குறைவாகவே யிருக்கின்றன. எனவே, எச்சமாகவுள்ள பாங்கு நிதியைத்தான் நல்ல வருவாய் கிடைக்குமாறு பயன்படுத்தவேண்டும். பொதுப்படையாகச் சொல்லும்போது, அதிக வருவாய் கிடைக்குமானால் அது உங்கள் பணத்தைச் சீக்கிரம் திரும்பப்பெறுவதைச் சற்றுக் கடினமாக்கவே செய்யும். பாங்கர் தம் ஒவ்வொரு சொத்திற்கும் பொறுப்புகளுண்டென்பதை மறந்துவிடக்கூடாது. எனவே, அவைகளை மீட்கப்படாதவாறு பாங்கர் வைக்கக்கூடாது. ஏறத்தாழ இதுவே பாங்கரின் குறிக்

கோளாக இருக்கவேண்டும். ஆனால், நடைமுறையில் இது இயலாத காரியமாகும். பாங்கின் சில சொத்துகள் மீட்கப்படுவதற்கு பல ஆண்டுகளாவதுமுண்டு. தம்முடைய தற்காப்பிற்கு பாங்கர் தாற்காலிகக் கடனை வழங்குவதையே பெரிதும் கையாள்கிறார். உண்மையில், இவ்விதக் கடன்கள் பெரிதும் தவணை முடிவடையும்போது புதுப்பித்துக் கொள்ளப்படுகின்றன.

ரொக்க நிலையும் (இதனை 'நீர்மை' எனவும் கூறலாம்) இலாபத் தன்மையும் எதிரிடையான பொருள்கள். ரொக்கத்திற்கு நீர்மை (liquidity) உள்ளது. ஆனால், எவ்வித வருவாயையும் அது அளிப்பதில்லை. அதே சமயத்தில் சிலவகைக் கடன்கள் அதிகமான வட்டியை அளிக்கின்றன. ஆனால், அவைகள் ரொக்க நிலை உடையதாக இல்லை. இலாபகரமாக பாங்கு நடத்தும் இரகசியமே கீழ்க் கண்ட முறையில்தானிருக்கிறது. பாங்கு தன் மூலதனத்தைக் கொண்டு சொத்துகள் வாங்கும்போது, ஒவ்வொரு தேவைக்கும் பணம் கொடுப்பதற்கு ரொக்கத்தையும் (கையிலுள்ள ரொக்கமாயினும் அல்லது சீக்கிரம் வரக்கூடிய ரொக்கமாயினும் சரி), அதே நேரத்தில் பாங்கின் செலவுகளைச் சமாளிக்கவும், பங்குதாரர்களுக்கு இலாபம் கொடுக்கவும், நிறைய வருமானத்தைப் பெற ரொக்க நிலையும் இலாபத் தன்மையும் செம்மையான நிலையிலிருக்கும்படி பார்த்துக்கொள்ள வேண்டும். நாம் ஏற்கெனவே குறிப்பிட்ட ரொக்கம், அன்றாடம் கொடுக்கப்படும் கடன்கள் தவிர, முக்கியமான நான்கு வகை சொத்துகள் உண்டு. கீழே அவை வருவாயின் ஏறு வரிசையிலும் ரொக்க நிலையின் இறங்கு வரிசையிலுமாகக் கொடுக்கப்பட்டுள்ளன. அவையாவன: உண்டியல்கள் [சில சமயங்களில் கழிவுகள் (discounts) என்று அழைக்கப்படுகின்றன], கருவூல வைப்புப் பற்றுச்சீட்டுகள் (Treasury Deposit Receipts) —இவைகள் வழக்கமாக TDR என அழைக்கப்படும்; முதலீடுகள், கடன்கள் (சில சமயங்களில் அட்வான்சுகள் எனவும் அழைக்கப்படும்), மாற்று உண்டியல்கள் (Bills of Exchange) எனப்படுபவை பிரபலமான பாங்குகள் அல்லது வணிகர்கள் அல்லது அரசாங்கம் வெளியிடும் மூன்று அல்லது ஆறு மாதங்களுக்குள் முதிரும் (maturity) வாக்குறுதிகளாகக் (IOU's) கருதப்படலாம். லண்டனிலும், ஓரளவிற்கு இன்னும் மற்ற நிதிய மையங்களிலும் (Financial Centres) உண்டியல்கள் அவற்றின் முக மதிப்பை (Face Value) விடத் தள்ளுபடிசெய்து வாங்கவோ, விற்கவோ படும். இத் தள்ளுபடி அல்லது கழிவுசெய்தல் அமலிலிருக்கும் வட்டி விகிதத்தையும் உண்டியல் முதிரும்[1] காலத்தையும் பொறுத்திருக்கும். மற்ற முதலீடு

1 கழிவு வீதம் ஆண்டொன்றுக்கு 4 சதவீதமாக இருக்கும்போது, மூன்று மாதத்திற்குப் பிறகு முதிர்வடையக்கூடிய £ 1000 முகமதிப்புடைய ஓர் உண்டி

களில் குறைத்துப் பெறப்பட்டாலும், உண்டியல்களில் கிடைக்கும் கழிவு வீதம், அன்றுடம் வழங்கும் கடன்களுடையதைவிட அதிகமாகவே யிருக்கிறது. ஆனால், உண்டியல்கள் மிகவும் 'ரொக்கநிலை' வாய்ந்தன. அவைகளுக்கு அங்காடியில் நல்ல கிராக்கி இருப்பதுடன், கொஞ்ச மாதங்கள் வைத்திருந்த பிறகு அவைகள் முதிர்வடையுங்கால், உடனுக்குடன் பணம் பெறுகின்றன. மேலும், இங்கிலாந்து பாங்கு முதல்தர உண்டியல்களின் ('Prime' bills) மீது ரொக்கமாகக் கடன் கொடுக்க எப்போதும் தயாராக இருக்கும் [அதாவது, புறக்குறிப்பைத் (Endorsement) தாங்கியுள்ளதும், அதன்மூலம் பொறுப்பைப் பெற்றதுமான ஒரு முதல்தர லண்டன் பாங்கின் உண்டியல்].

பல ஆண்டுகளாகவே லண்டன் பண அங்காடியில் கிடைக்கும் உண்டியல்கள் பெரிதும் கருவூல உண்டியல்களாகவே (Treasury Bills) உள்ளன—அதாவது, அவை அரசாங்கத்தின் வாக்குறுதிகள் (IOUs). கருவூல உண்டியல்கள் வாரந்தோறும் ஏலம்போடப்படுகின்றன; அவைகள் மூன்று மாதத்தில் முதிர்வடையும். ஆரம்பத்தில் இக்கருவூல உண்டியல்கள் கழிவு அங்காடியில் (Discount Market) அரசாங்கத்தின் நலனுக்காகக் குறைந்த அளவு வட்டிவீதங்களைப் பெறுவதற்காக வெளியிடப்பட்டன. முதல் ஜெர்மன் போருக்கு முன்னர் அவைகள் மொத்த உண்டியல்களின் அளிப்பில் ஒரு சிறு பகுதியாகவே யிருந்தன. மற்ற உண்டியல்கள் வாணிபத்திற்கு நிதியளிக்கப் பயன்படுத்தப்பட்டன. சில சமயங்களில் கிரேட் பிரிட்டன் எல்லை கடந்த அந்நிய நாட்டு வாணிபத்திற்கும் பயன்படுத்தப்பட்டன. இரண்டு போர்களின் விளைவும், இடையே ஏற்பட்ட செலாவணி இடர்ப்பாடுகளும் கருவூலஉண்டியல்கள் பெருகுவதற்கும், வாணிப உண்டியல்களின் (Trade Bills) அளிப்பு குறைவதற்கும் காரணமாயிருந்தன. இதுநாள்வரை, முன்னர்ச் சொல்லப்பட்டனவே அதிக அளவில் இருந்தன. பிரிட்டிஷ் பாங்குகளின் இருப்புக் குறிப்புகளில் 'கழிவு செய்யப்பட்ட உண்டியல்கள்' எனக் காணப்படும் இனம், பெரிதும் அரசாங்கத்திற்குக் கொடுக்கப்பட்ட மூன்று மாத அழைப்புக் கடன்களையே குறிக்கும். கருவூல உண்டியல்களையும், வாணிப உண்டியல்களைப்போல, அவைகள் முதிர்வதற்கு முன்னர் பணம் அவசர நிமித்தம் தேவைப்பட்டால் இங்கிலாந்து பாங்கில் அவற்றை ஈடாகவைத்துப் பணம் பெறலாம்.

கருவூல வைப்புப் பத்திரங்கள் 1939-45 போரின்போது, அரசாங்கத்திற்குக் கடன் கொடுக்கும் ஒரு நேரிடை வழியாக

---

யலை £ 990-க்கு வாங்கலாம். £ 10 வேறுபாடு, £ 990 மூலதனத்தை வட்டிக்கு விட்டால் மூன்று மாதத்தில் கிடைக்கும் வட்டியைக் குறிக்கிறது.

ஏற்படுத்தப்பட்டன. பாங்குகள், கருவூலத்திற்குப் பணத்தை 'வைப்பாக' வரவு வைத்துக் கொடுத்து அதற்குப் பதிலாக ஒரு 'பத்திரத்தை'ப் பெற்றுக்கொள்ளும். கருவூல வைப்புப் பத்திரங்களுக்கு (TDRs) ஆறு மாதம் கெடுவு காலமாகும். கருவூல உண்டியல்களைவிட இவைகளுக்குச் சிறிதளவு வட்டி வீதம் கூடுதலாகக் கிடைக்கும்.

பிரிட்டிஷ் பாங்கிற்கு முதலீடுகள் என்றால் பெரும்பாலும் உத்தரவாதம் அளிக்கப்பட்ட பிரிட்டிஷ் அரசாங்கப் பத்திரங்கள்தாம் (British Govt. Securities). இப் பத்திரங்கள் அரசாங்கத்திற்குக் கடனாக அளிக்கப்பட்ட பணத்தைக் குறிக்கும். மற்றைய நாடுகளில் பாங்குகள் தேர்ந்தெடுக்கும் முதலீடுகளின் எல்லை இன்னும் சற்று விரிவுபட்டதாக இருக்கும். செம்மையாக இயங்கும் எந்த பாங்கு முறையிலும் முதலீடுகள் முதல்தர அதிபத்திரமான பத்திரங்களாக இருக்கும். உண்டியல்களைவிட அவைகள் சற்றுக் கூடுதலாக வட்டி கொடுப்பன; ஆனால், மிக அதிகமான வட்டி வீதத்தையும் அவை கொடுப்பதில்லை. கடைசியாக, பாங்கு வாடிக்கைக்காரர்களுக்கு அளிக்கும் கடன்கள். இக் கடன்கள், ஒருவருக்கு பாங்கில் வைத்துள்ள வீட்டுச் செலவுக் கணக்கில் (house-keeping account) ஒருசில ஷில்லிங்குகள் அதிகப் பற்றுகக் கடன் கொடுப்பதிலிருந்து ஒரு பெரிய தொழில் நிறுவனத்திற்குப் பல மில்லியன்கள் கடன் கொடுப்பதுவரை பலவகைப்படும். கடைசியாகச் சொல்லப்பட்ட சொத்துகள் பெறும் வகையிலும், பாங்கு நீர்மையைப் புறக்கணித்து விடுவதில்லை. பாங்குகள் இயல்பாகவே நெடுந்தவணைக் கடன்கள் கொடுப்பதை வெறுக்கின்றன. அவைகள், ஓர் ஆண்டுக்குமேல் நீடிக்கும் நெடுந்தவணைக் கடனை ஓர் ஆண்டில் ஒன்று கொடுப்பதே அரிது. பெரும்பாலும் அவைகளுடைய கடன்கள் மாதத் தவணைக் கடன்களாகவே யிருக்கும். நடைமுறையில் அவைகள் ஒரு கடன் முதிரும்போது அதைப் புதுப்பிப்பதற்கு விரும்பும். நடைமுறையில்கூடக் கடனாளி, இக்கட்டிலிருக்கும்போது கடனைத் திருப்பி அளிக்கத் தவணை கேட்கலாம். ஆனால், கருத்தியலில் கடன்களும் ஏறக்குறைய 'நீர்மை' உடையனவே.

1946 ஆம் ஆண்டில் பாங்குகள் எந்த அளவுகளில் இந்த ஐந்து வகைகளில் சொத்தை நிரவின என்பது மையபாங்கு அத்தியாயத்தில்வரும் அட்டவணையில் தெரியவரும். ஆனால், இந்தக் கணக்கு விவரங்கள் ஒரு போரின் முடிவுக்குப் பின்னர் ஏற்படும் விளைவையே பிரதிபலிக்கின்றன. போருக்குப்பின் பாங்குகள் அரசாங்கக் கடன் பத்திரங்கள், கருவூல உண்டியல்கள் இன்னும் மற்ற

வகை அரசாங்கப் பத்திரங்கள் இவைகளை அதிகமாகப் பெறுகின்றன. 1946 ஆம் ஆண்டின் புள்ளிவிவரங்கள் சாதாரண காலத்தவையுமல்ல; பாங்கர்களால் விரும்பப்பட்டவையுமல்ல. 1929ஆம் ஆண்டில் மாக்மில்லன் கமிட்டி (Macmillan Committee) முன்பு அபிப்பிராயம் தெரிவித்த மிகப் பெரிய பிரிட்டிஷ் பாங்கின் நிருவாக இயக்குநர் (Managing Director) ஒருவர் கீழ்க்கண்ட, எடுத்துக்காட்டையும், தனது பாங்கு அதை நோக்கி முயன்றது மான ஒரு பகிர்வு (distribution) முறையையும் கூறினர்:[1]

| | | | | |
|---|---|---|---|---|
| ரொக்கம் (Cash) | ...... | 11 சதவீதம் | | (ஒன்றுமில்லை) |
| அழைப்புக்கடன் (Call Loans) | ...... | 7 | ,, | (3½ சதவீதம்) |
| உண்டியல்கள் (Bills) | ...... | 15 | ,, | (4 சதவீதம்) |
| முதலீடுகள் (Investments) | ...... | 12 | ,, | (4½ சதவீதம்) |
| முன்பணம் (Advances) | ...... | 55 | ,, | (5½ ,, ) |

அடைப்புகளில் இருக்கும் எண்கள் பல்வேறு சொத்துகளில் அச் சமயத்தில் கிடைத்த சராசரி வருமானத்தைத் தோராயமாக (approximate) உணர்த்துகின்றன. அச்சமயத்திலும் பாங்குகள், தாங்கள் விழைந்த அளவுகளில் சொத்துகளைப் பகிர்வு செய்வதில் வெற்றி காணவில்லை. 1929 ஆம் ஆண்டு முதற்கொண்டே இந்தக் குறிக்கோளினின்றும் அவைகள் வெகுதூரம் விலகிச் சென்றன. முதலாவதாக 1931-ல் பொன் திட்டம் (Gold Standard) முடிவடைந்தது முதற்கொண்டும், 1932-ல் பெரிய போரின் கடன் மாற்றம் (Great War Loan Conversion) முதற்கொண்டும், பலதிறப்பட்ட சொத்துகளினின்றும் பெறக்கூடிய வட்டி வீதங்களைக் குறைப்பதற்கு ஒருமித்த கிளர்ச்சி இருந்துகொண்டே யிருந்தது. 1946 ஆம் ஆண்டு இறுதியில் அழைப்புக் கடன்கள் ½ சதவீத முதல் ¾ சதவீதம் வரையிலும், கருவூல உண்டியல்கள் ½ சதவீதத்திற்குச் சற்று அதிகமாக வட்டியையும் பெற்றன. குறுந்தவணைக் கடன்களினின்றும் 2 சதவீதத்திற்கு அதிகப்படாமல் வட்டி கிடைத்தது. கடன்களுக்குப் பொதுவில் என்ன சதவீதம் வசூலிக்கப்பட்டதென்பதையறிவது கடினமென்ருலும், ஏறக்குறைய 4 சதவீதமளவுக்கு வட்டியிருந்திருக்கும்.

இரண்டாவதாக, ஏற்கெனவே 38 ஆம் பக்கத்தில் கூறியுள்ளபடி அரசாங்கத்திற்குக் கடன் கொடுக்கப்பட்ட பாங்குப் பணம் அளவில் பெருகியது. இதற்கிணங்க உண்டியல்களும்

[1] தொழில் - நிதிக் கமிட்டி (Finance and Industry Committee) முன்பு அளிக்கப்பட்ட அபிப்பிராயங்கள். தொகுதி 1, பக்கம் 56.

முதலீடுகளும் அதிகரித்தன. புதியதாகக் கருவூல வைப்புப் பத்திரங்கள் (Treasury Deposit Receipts) தோற்றுவிக்கப்பட்டன. இவைகளுக்கொப்பாகக் கடன்களில் அதிகரிப்பு ஒன்றும் ஏற்படவில்லை. கீழ்க்கண்ட அட்டவணையில் இம் மாற்றங்களை நன்கு காணலாம். 1929ஆம் ஆண்டின் இலட்சிய எண்களுடன் 1938, 1946ஆம் ஆண்டுகளில் நடப்பிலிருந்த சொத்துகளின் பகிர்வுஎண்களும் அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ளன :[1]

| | 1929-ல் இலட்சியம் % | 1938-ல் நடப்பிலுள்ளது % | 1946-ல் நடப்பிலுள்ளது % |
|---|---|---|---|
| ரொக்கம் | 11 | 11 | 11[2] |
| அழைப்புக் கடன் | 7 | 7 | 6 |
| உண்டியல்கள் | 15 | $12\frac{1}{2}$ | 9 |
| கழிவூல வைப்புப் பத்திரங்கள் | — | — | 31 |
| முதலீடுகள் | 12 | 29 | 26 |
| முன்பணம் (advances) | 55 | 44 | 18 |

1946ஆம் ஆண்டில் பாங்குச் சொத்துகளில் மூன்றில் இரண்டு பகுதிக்குமேல் ஏதாவது ஒரு வகை அரசாங்கக் கடனாகவே இருந்தமை கவனிக்கத்தக்கது. ரொக்கமென்பது அரசாங்கத்திற்குச் சொந்தமான இங்கிலாந்து பாங்கியின் வைப்புகளாகவும் நோட்டுகளாகவு மிருப்பதாலும், அழைப்புக் கடன்கள் கொடுக்கப்படும் பண அங்காடியிலுள்ள வணிக நிறுவனங்கள் அவ்வழைப்புக் கடன்களைக்கொண்டு அரசாங்கப் பத்திரத்தைப் (government paper) பெறுவதாலும், உண்மையில் ஐந்தில் நான்கு பங்கு, பாங்குகளின் சொத்துகள் நேரிடையாகவோ, மறைமுகமாகவோ அரசாங்கத்திற்குக் கடன் கொடுக்கப்பட்டனவாகவே யிருக்கின்றன. இவ்வாறு பலதிறப்பட்ட சொத்துகளினின்றும் கிடைக்கப்பெறும் வருவாய் ஒரே மாதிரியாக இல்லாமல் பலவிதமாக இருக்கும். வட்டி வீதங்கள் பொதுவாகக் குறைந்துள்ள காலங்களில் ('மலிவான பணமுறை') சொத்துகளிலிருந்து கிடைக்கும் வருவாயும் குறைவாகவே யிருக்கும். பண இக்கட்டான காலங்களில் வருவாய் அதிகமாக இருக்கும். சமீப

[1] எண்கள் ஒவ்வொரு வகையிலும் 100 சதவீதமாகக் கூடுதலடைவதில்லை. காரணம், அவைகள் பாங்குகளின் பலதிறப்பட்ட எல்லாச் சொத்துகளையும், எல்லா வைப்புகளையும், பொறுப்புகளையும் உணர்த்தவில்லை.

[2] இந் நூல் முழுதும் கூறப்பட்டுள்ள 8 சதவீத ரொக்கவிகிதம் வைத்திருப்பதன் முடிவு, 1947ஆம் ஆண்டு ஜனவரிவரை அமலிலில்லை.

ஆண்டுகளில் வருவாய் 1929 ஆம் ஆண்டிலிருந்ததைவிட அதிகமாகக் குறைந்துவிட்டது.

'கேட்கும்போது தருகிறேன்' என்ற வாக்குறுதிகளினுல் (promises) தான் இந்தச் சொத்துகள் பெறப்பட்டன வென்பதை இங்கே மீண்டுமொருமுறை வலியுறுத்திக் கூறவேண்டும். பாங்கர் ஒரு கடன்பட்ட வியாபாரி; அவரது சொத்துகளும் பொறுப்புகளும் கடன்களாலாகியவை; இந்த அமைப்பு முழுதுமே சிறிதளவு ரொக்கம் வைத்துக்கொண்டு மிகுதியும் திருப்பித் தரும் வாக்குறுதிகளால் கட்டப்பட்டவையே. ஆயிரமாயிரம் பாங்குகளுள்ள ஒரு நாட்டில் (ஐக்கிய அமெரிக்கா போன்ற நாட்டில்) முன் கவனமுடன் சொத்துகளைப் பெற்ற பாங்கு ஒன்று எல்லாச் சொத்துகளையும் நினைத்தபோது ரொக்கமாக மாற்றமுடியும்—அதாவது, அச் சொத்துகளை விற்றுப் பணம் பெறமுடியும். ஆனுல், எல்லா பாங்குகளும் ஒரே சமயத்தில் சொத்துகளை விற்றுச் செலாவணியைப் பெற முனைந்தால் அது இயலாது. ஏனென்ருல், அவ்வளவு செலாவணி நாட்டில் இருக்காது.[1] பிரிட்டனிலுள்ள ஐந்து பெரிய பாங்குகளில் ஒரு பாங்கின் சொத்துகளை முழுதுங்கூட ரொக்கமாக்கிவிட இயலாது. எனவே, 'நீர்மை' (liquidity) என்பது ஒரு முறையான கருத்தேயாகும். அதனுடைய பயன் நெருக்கடியான (crisis) நேரத்தில் பாங்கு தன் எல்லாக் கடன்களையும் திருப்பி அளிக்க உதவுமென்பதில்லை. ஆனுல், 'நீர்மை'க்கு மதிப்புள்ளதற்குக் காரணம் அது பாங்கை முன்னெச்சரிக்கையுடன் நடத்தத் துணைசெய்வதேயாகும்.

'நீர்மையின்' வரம்புகளுக்குட்பட்டும், வீதப்படி காப்புநிதி வைத்துக்கொள்ளவேண்டிய தேவையினுலும் ஒரு பாங்கு (இன்னும் ஆழ்ந்து சொல்லப்போனுல் ஒரு பாங்கு முறை) தன் விருப்பப்படி இருப்புநிலைக் குறிப்பின் மொத்தத்தை (total) அமைத்துக்கொள்ள இயலும். 1931 ஆம் ஆண்டு இறுதியிலிருந்து 1938 ஆம் ஆண்டு இறுதிவரை லண்டன் தீர்வகப் பாங்குகள் தங்கள் சொத்துகளை £ 1,974 மில்லியனிலிருந்து £2,523 மில்லியனுக அதிகரித்தன. தங்களது வாக்குறுதிகளை (promises) அளித்ததன் மூலம் (அதாவது, வைப்புகளை அதிகரித்ததன்மூலம்) £ 339 மில்லியன் அளவுக்கு முதலீடுகளை வாங்கி மேற்சொன்னவாறு சொத்துகளை அதிகரித்தன. அவைகளிடம் அதிகமான அளவிற்கு

1 உதாரணமாக இங்கிலாந்தில் 1946 ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் லண்டன் தீர்வகத்தில் அங்கம் வகிக்கும் பாங்குகளின் மொத்தச் சொத்துகள் கிட்டத்தட்ட £ 6.000 மில்லியன். ஆனுல், அப்போது நாட்டிலிருந்த செலாவணி (இங்கிலாந்து பாங்கின் நோட்டுகளும் நாணயங்களும்) ஏறக்குறைய £ 1,620 மில்லியனே.

ரொக்கம் கிடைத்ததால், அவைகளால் மேற்சொன்னவாறு செய்ய இயன்றது. 35ஆம் பக்கத்தில் ரொக்கத்திற்கு விளக்கத்தை எதிர்மறையான வழியில் விளக்கினேம். அது பாங்குகளின் அதிகாரத்திற்குட்படாத ஒருவகைச் சொத்தென்றும், பாங்குகள் 'சிருட்டிக்க' இயலாத பணமென்றும் விளக்கினேம். முன்கூறிய விளக்கத்தால் இந்த ரொக்க இனமே இம் முறையின் உண்மையான பிரச்சினையாகத் திகழ்கிறதென்பது தெளிவாகிறது. இதனை அதிகரித்தால் பாங்குமுறை முழுவதும், அதனுடனுள்ள பண அளிவும் அதிகரிப்பு வீதப்படி பெருகும். இதனைக் குறைத்தால் பாங்கு முறையும் குறுகும். 1931ஆம் ஆண்டுக் கணக்கு விவரங்களுடன் 1958ஆம் ஆண்டுக் கணக்கு விவரங்களை ஒப்பிடும்போது, எவ்வாறு புதிய ரொக்க உட்செலுத்தினுல் தூண்டப்பட்டு பாங்குகள் முறை விரிவடைகின்றதென்பதைப் பார்த்தோம். அதனுடைய சொத்துகளைச் சம வீதங்களில் விரிவடையச் செய்யாவிட்டாலும், அவைகளில் சிலவற்றைப் பலவிதமாக விரிவடையச் செய்கிறது. ரொக்கம் சுருங்கும்போது எதிரிடையான விளைவுகள் ஏற்படுகின்றன. பாங்குமுறை திடீரென ரொக்கத்தில் சிறிதளவை இழந்துவிட்டால், அந்த வீதப்படி அதன் சொத்துகளையும் அது குறைத்துக்கொள்ளவேண்டும். எடுத்த எடுப்பிலேயே கடன்களைக் குறைத்துவிட முடியாது. ஆனுல், உண்டியல்கள் முதிர்வடைந்தபோது மீண்டும் புதுப்பிக்கப்படமாட்டா; முதலீடுகள் விற்கப்படும்; நடைமுறையிலிருக்கும் கடன்கள் திருப்பி அடைக்கப்படுமாறு கேட்டுக்கொள்ளப்படும். கடன்கள், கொஞ்சங்கொஞ்சமாகப் புதிப்பிக்கப்படுவதற்கு வருங்காலையில் அவற்றில் சில புதுப்பிக்கப்படுவதற்கு மறுக்கப்படும். எனவே, சுருக்கத்தின் (contraction) விளைவுகள் பாங்குமுறை முழுதும் பரவியிருக்கும். பாங்குகளிலிருந்தும் பணம் கடன் பெறுவது கடினமாயிருக்கும். மக்கள் கையிலிருக்கும் மொத்த வைப்புகள்—அவைகளின் பண அளிப்பு—சுருங்கும்.

எனவே, பாங்குகளின் ரொக்கம் என்னும் நெம்புகோலினுல் மிகப் பிருமாண்டமான இம்முறை முழுதும் திறமையாக நடத்திச் செல்லப்படுகிறது. தக்க சமயத்தில் நாம் பாங்குகளின் ரொக்கத்தின் தன்மையைப்பற்றி ஆராய்ந்தோம்.

## மைய பாங்கு

பாங்குகளின் ரொக்கத்தின் ஒரு பகுதி செலாவணியாலானது—அதாவது, நோட்டுகளாலும் நாணயங்களாலுமானது. செக்குகளை ரொக்கமாக மாற்ற வரும் வாடிக்கைக்காரர்களுக்காக பாங்கு

எப்போதும் தனது கல்லாப் பெட்டியில் ஒரு குறிப்பிட்ட அளவு செலாவணி வைத்திருக்கவேண்டும். தற்காலத்துப் பெரும்பான்மை நாடுகளில் (எல்லா நாடுகளிலுமல்ல) செலாவணியானது பெரும் பாலும் வெளியீட்டு பாங்கு (Bank of Issue) அல்லது மைய பாங்கு (Central Bank) என்று சொல்லப்படுகிற நிலையத்தால் வெளியிடப்பட்ட நோட்டுகளாகத்தானிருக்கும். கிரேட்பிரிட்டனில் இங்கிலாந்து பாங்கும் (Bank of England), ஃபிரான்சில் ஃபிரான்சு பாங்கும் (Bank of France), ஸ்வீடனில் (Sweden) ரிக்ஸ் பாங்கும் (Riks Bank) மைய பாங்காக உள்ளன. ஐக்கிய அமெரிக்காவில் செலாவணியின் பெரும்பகுதியும் (செலாவணி முழுதுமல்ல) பன்னிரண்டு ஐக்கிய ரிசர்வு பாங்குகளால் வெளியிடப்படுகின்றது. ஒவ்வொரு பாங்கும் தன்னுடைய மாவட்டத்திற்கு (district) வெளியீட்டு பாங்காகும். நோட்டுகளை வெளியிடும் உரிமை, குறிப்பாகச் 'சட்டச் செலுத்து' (legal tender) உரிமைபெற்ற நோட்டுகள், அநேகமாக ஒவ்வொரு நாட்டிலும் இந்த ஒரு நிலையத்திற்கே உள்ளது.

பாங்குகளின் எல்லா ரொக்கமும் வெளியீட்டு பாங்கு அல்லது மத்திய பாங்கு வெளியிட்ட நோட்டுகளாலானதல்ல. உதாரணமாக, இங்கிலாந்தில் 1946ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் £ 575 மில்லியன் பாங்கு ரொக்கத்தில் £ 245 மில்லியனே நோட்டுகளாலும் நாணயங்களாலுமானவை. பாக்கி மைய பாங்கில் வைக்கப்பட்ட வைப்புகளாலானவை.

பாங்குகள் தொடர்ந்து ஒன்றுக்கொன்று தங்களுடைய உரிமைகளை (claims) ரொக்கத்திற்காக சமர்ப்பித்துக்கொண்டேயிருப்பதாகச் சொல்லப்படுகிறது. A பாங்கில் பெறப்பட்ட செக்குகள் B பாங்கில் வைப்புகளாக வைக்கப்படும்போது, B பாங்கில் பெறப்பட்டு A பாங்கில் வைக்கப்பட்ட செக்குகளால் சரிக்கட்டப்படும். பாக்கியுள்ள தொகைதான் ரொக்கத்தால் ஈடுசெய்யப்படும். இந்த பாக்கித் தொகைகள் செலாவணி கொடுத்தும் தீர்க்கப்படலாம். சில நாடுகளில் ஒரு பாங்கு மற்றொரு பாங்கிற்குச் செலாவணியைக் கொடுப்பதன்மூலமே தீர்க்கின்றது. ஆனால், பெரும்பான்மை நாடுகளில் பாங்குகள் இத் 'தீர்வு பாக்கிகளை' (clearing differences) 'பாங்கர்களின் பாங்கான' (Banker's Bank) மைய பாங்கில் பெற்ற செக்கினால் தீர்த்துக்கொள்ளுகின்றன; இம்முறை இங்கிலாந்தில்தான் முதன்முறையாக ஏற்பட்டது. பெரும்பாலும் இதன் காரணமாகத்தான், இங்கிலாந்து பாங்கு கடந்த 150 ஆண்டுகளாக நாட்டின் எல்லா பாங்குகளைவிடப் பெரியதாகவும் செல்வமிக்கதாகவுமுள்ளது.

ஆரம்பத்தில் இங்கிலாந்து பொதுப்படையான பாங்கு வணி கத்தையே செய்து வந்தது. பல தனிப்பட்ட வாடிக்கைக் காரர்களும் அப்போதுண்டு. அந்த வாடிக்கைக்காரர்களில் சிலர் தற்போதும் இருக்கின்றனர் (அவர்களில் ஒரு வாடிக்கைக் காரர் பிரிட்டிஷ் அரசாங்கம்—யாரையும்விட மிக முக்கியமான வாடிக்கைக்காரர்). நாளடைவில் பொதுமக்களிடமிருந்த நேரடித் தொடர்பை அது குறைத்துக்கொண்டதோடு பாங்கர்களின் பாங்காக மாறியது. இங்கிலாந்தின் ஏனைய பாங்குகள் ஒவ் வொன்றும் அதனிடம் கணக்கு வைத்திருக்கின்றன. எந்த நாளி லாவது கணக்குத் 'தீர்த்தலில்' (clearing) மேற்சொன்ன பாங்கு களிலொன்று மற்ற பாங்குகளுக்கு பாக்கி கொடுக்கவேண்டிய நிலை ஏற்பட்டால், அப் பாங்கு, செலாவணியைக் கொடுத்து பாக்கியைத் தீர்ப்பதைவிட, இங்கிலாந்து பாங்கில் தான் வைத்துள்ள வைப்புத் தொகையினின்றும் செக்குப் பெற்று வசதியாக பாக்கி யைத் தீர்த்துக்கொள்ளும். மேலும், 'கூட்டுப் பங்கு' (Joint-Stock) அல்லது 'அங்கத்தினர்'(Member) பாங்குகள்[1] இங்கிலாந்து பாங்கிலுள்ள தங்களது நிலுவைகளை (balances) எச் சமயத்திலும் செலாவணி வடிவத்தில் பெற்றுக்கொள்ளலாமாகையால் (இங்கி லாந்து பாங்கில் வைக்கப்பட்டுள்ள வைப்புகள் மற்ற பாங்கு களின் வைப்புகளைப் போலவே தேவைப்படும்போது செலா வணி கொடுக்கும் வாக்குறுதிகளாகையால்) அவைகள் அந் நிலுவைகளை ரொக்கமாகவே கருதுகின்றன.

ஏறக்குறைய சந்தர்ப்பவசத்தால் தோன்றிய இம்முறையே மற்ற நாடுகளாலும் பின்பற்றப்பட்டது. அநேகமாக எல்லா நாடு களிலும் அங்கத்தினர் பாங்குகள் தங்களின் வைப்புகளில் ஒரு குறிப்பிட்ட சதவீதத்தை, மைய பாங்கில் வைக்கவேண்டு மென்று சட்டத்தால் கட்டாயப்படுத்தப்படுகின்றன.

எனவே, அங்கத்தினர் பாங்குகளின் ரொக்கமானது மைய பாங்கால் வெளியிடப்பட்ட நோட்டுகளாலும், மைய பாங்கி லுள்ள வைப்புகளாலுமானது. இவ்விரண்டிலும்—இதுதான் மிகவும் முக்கியமானது—அங்கத்தினர் பாங்குகளின் ரொக்கம் மைய பாங் கின் பொறுப்புகளாகவே உள்ளது.[2] இவ்விருவகை பாங்கர்களின்

1 மைய பாங்கு தவிர மற்றைய பாங்குகள் அனைத்தும் கிரேட் பிரிட் டனில் 'கூட்டுப் பங்கு பாங்குகள்' என்றும், ஐக்கிய அமெரிக்காவில் அவை 'அங்கத்தினர் பாங்குகள்' என்றும் அழைக்கப்படுகின்றன. (அங்கத்தினர்கள் பாங்கு என்றால் ஐக்கிய ரிசர்வு முறையில் அங்கத்தினர்களென்று பொருள்). 'அங்கத்தினர்கள் பாங்கு' என்ற பெயர் மிகவும் பொருத்தமாக இருப்பதால் அதனையே கையாள்வோம்.

2 இது பாங்குகள் ரொக்கக் காப்புநிதியாக வைத்துள்ளதும், அரசாங் கத்தின் பொறுப்புகளுமான (liabilities) நாணயங்களைக் கருதுவதில்லை.

ரொக்கத்தில், மைய பாங்கின் வைப்புகளே மிகவும் இணக்கமான தோன்றும் (flexible). அங்கத்தினர் பாங்குகளின் ரொக்க இருப்பில் ஏற்படும் மாறுதல்களைப்பற்றி எண்ணும்போது அவைகள் மைய பாங்கில் வைத்திருக்கும் வைப்புகளின்மீதே நாம் கவனம் செலுத்தவேண்டும்.

மைய பாங்கிற்கும் அங்கத்தினர் பாங்குகளுக்குமுள்ள உறவே அங்கத்தினர் பாங்குகளுக்கும் பொதுமக்களுக்கு மிருக்கிறது. பொது மனிதன் பாங்கு வைப்பை ரொக்கம் அதாவது, பணமென்றே கருதுகிறன். ஏனெனில், அவைகளைக் கொண்டு பாங்குகளின் சக வாடிக்கைக்காரர்களுக்கு அவன் பணம் கொடுக்கமுடியும். பஸ் கட்டணத்திற்கோ அல்லது ஊழியர்களுக்குக் கூலி கொடுப்பதற்கோ அசல் நாணயம் அவனுக்குத் தேவைப்பட்டால், தனது பாங்குக் கணக்கிலிருந்து அவற்றைப் பெற்றுக்கொள்ள முடியும். இதே உறவுதான் அங்கத்தினர் பாங்குகளுக்கும் மைய பாங்கிற்கு மிருக்கிறது. அவைகள் மைய பாங்கிலுள்ள தங்களுடைய வைப்புகளை ரொக்கமாகக் கருதுகின்றன. தங்களுடனிருக்கும் சக பாங்குகளுக்குப் பணம் செலுத்தவேண்டி யிருப்பின் அவ் வைப்புகளைக் கொண்டு பணம் செலுத்தலாம்; தங்களுக்குத் தேவையான சட்டபூர்வமான செலாவணியை அவைகளிலிருந்தும் பெறலாம்.

இந்த ஒப்புமை முக்கியமாக மேலும் ஒருபடி நீட்டிக்கலாம். அங்கத்தினர் பாங்குகள், இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் நாம் ஆராய்ந்ததுபோலச் சில வரம்புகட்குட்பட்டு (அவைகளில் ஒன்று ஒரு குறிப்பிட்ட அளவு ரொக்கம் வைத்துக் கொள்வதாகும்), தங்களிஷ்டம்போல் சொத்துகளையும் அதன்மூலம் பொறுப்புகளையும் அதிகரித்துக்கொள்ளவோ குறைத்துக்கொள்ளவோ இயலும். அதாவது, பொதுமக்களுக்குக் கிடைக்கும் பணத்தின் அளிப்பை அவைகள் அதிகரிக்கவோ குறைக்கவோ இயலும். மைய பாங்கு ஒரு வினேதமான பாங்காகும்; அதற்கு முக்கியப் பணிகளுண்டு. அதனுடைய துறையில் அதற்குப் போட்டியே இல்லை. மற்ற பாங்குகளைப் போலத் தன்னுடைய வாக்குறுதியால் சொத்துகளை வாங்கவும் முடியும். ஆனல், மைய பாங்கு சொத்துகளையும் பொறுப்புகளையும் அதிகரித்துக்கொள்ளுமாயின், அதன்மூலம் அங்கத்தினர் பாங்குகளின் ரொக்கத்தையும் அதிகரிக்கின்றது. இதனல் அவைகள் சொத்துகளையும் பொறுப்புகளையும் அதிகரிக்க வழி ஏற்படுவதுடன் நாட்டின் பண அளிப்பும் பெருக வழி செய்கிறது. அங்கத்தினர் பாங்குகள் போதுமான அளவுக்குக் காப்பு ரொக்கம் (cash reserves) வைத்திருந்தால், பணம் 'சிருட்டிக்க'

இயல்வதுபோல, மைய பாங்கும் அங்கத்தினர் பாங்குகளின் காப்பு ரொக்கத்தைச் 'சிருட்டிக்க' இயலும். ஆனால், எதைச் 'சிருட்டிக்க' அதனால் இயல்கிறதோ அதனை அழிக்கவும் அதனால் இயலும்.

பாங்குமுறை அமைப்பு எவ்வாறு இயங்குகிறதென்பதை நன்கு புரிந்துகொள்ள இவ்வேலை அமைப்பு முழுமையையும் ஆராய்வது அவசியமாகும். ஒரு மைய பாங்கு கடன் கொடுக்கும்போது மற்ற பாங்குகள் செய்வதுபோலவே கடன் பெறுவோர் கணக்கில் தன் புத்தகங்களில் பற்று எழுதிக் கொடுக்கின்றது. கடன் பெறுபவர் அங்கத்தினர் பாங்குகளில் ஒன்றாக இருப்பின், அதனுடைய 'ரொக்கத்தை' இது தானாக அதிகப்படுத்தும். கடனாளி அங்கத்தினர் பாங்காக இல்லாவிட்டால் (உ-ம். அரசாங்கம்), அவர் தனது இருப்பு அதிகரிப்பதற்காகக் கடன் வாங்கியிருக்கமாட்டார். வாங்கிய கடனை யாருக்காவது கொடுப்பதன் மூலம் செலவு செய்வார். மைய பாங்கிலுள்ள தனது இருப்பில் அவர் செக்கு எழுதிப் பிறருக்குப் பணம் கொடுக்கும்போது, அந்தச் செக்குகளைப் பெறுவோர், அவைகளை அங்கத்தினர் பாங்குகளுக்கு பணமாக்கும்பொருட்டு ஒப்படைக்கின்றனர். அவைகள் அச்செக்குகளைப் பணமாக்க மைய பாங்கிற்குக் கொண்டுவரும். இங்கிலாந்து பாங்கு ஆரம்பத்தில் கடன் பெற்றவரின் கணக்கிலிருந்து அங்கத்தினர் பாங்குகளின் கணக்குக்கு மாற்றுவதன்மூலம் பணத்தைக் கொடுக்கிறது. இதனால் அங்கத்தினர் பாங்குகளின் ரொக்கத்தின் இருப்பு நிலையிலும் ஏற்றமான ஒரு மாற்றத்தை உண்டுபண்ணுகிறது. மைய பாங்கு கடன் கொடுப்பதன் மூலமல்லாது பத்திரங்களை (securities) வாங்கியதன்மூலம் சொத்துகளை (assets) அதிகரித்துவிட்டதென்று வைத்துக் கொள்வோம். பத்திரங்களை விற்பவர்களுக்கு, அவர்கள் மைய பாங்கியில் கணக்கு வைத்திருந்தால், அக் கணக்கில் பற்று எழுதிக் கொடுப்பதன்மூலம் பணம் கொடுக்கும். அப்படியும் இல்லாவிடில் (ஏனெனில், மிகவும் வெகு சிலரே மைய பாங்கில் கணக்கு வைத்துக்கொள்வதால்), மைய பாங்கு தன்னுடைய பாங்கில் பணம் பெறக்கூடிய செக்கை அளிப்பதன்மூலம் பணம் கொடுக்கும். இந்தச் செக்கு ஏதாவது ஓர் அங்கத்தினர் பாங்கினிடம் பணம் பெறும்பொருட்டு ஒப்படைக்கப்படும். அந்த அங்கத்தினர் பாங்கு அந்தச் செக்கை மைய பாங்கினிடம் பணம் பெறும்பொருட்டு ஒப்படைத்துத் தன்னுடைய ரொக்கத்தை அதிகரித்துக் கொள்ளும். எனவே, எவர் மைய பாங்கு தன்னுடைய சொத்துகளை அதிகரித்துக்கொள்ளுவதற்காகக் தொடுக்கும் வாக்குறுதிகளைப் பெற்றபோதிலும் அவைகள் கடைசியில் அங்கத்தினர்

பாங்குகளுக்கே வந்து சேர்ந்து, அவைகளின் காப்பு ரொக்கத்தை அதிகரிக்கின்றன. மேலும், மைய பாங்கின் சிறிய அளவு 'சிருட்டித்தல்' அங்கத்தினர் பாங்குகளின் அதிக அளவு சிருட்டித்தலை விளைவிக்கும். உதாரணமாக, மைய பாங்கு தன் சொத்துகளை £ 1 மில்லியன் அளவிற்கு அதிகரிக்கின்றதென்றால் (பத்திரங்களை வாங்குவதன்மூலம் அல்லது அந்த அளவிற்குக் கடன் கொடுப்பதன்மூலம்) அங்கத்தினர் பாங்குகளின் ரொக்கமும் £ 1 மில்லியன் அளவிற்கு அதிகரிக்கும். அங்கத்தினர் பாங்குகள் 8 சதவீத[1] ரொக்க விகிதத்தைக் கடைப்பிடிக்குமானால் அவைகள் £ 11 மில்லியன் அளவிற்கு அதிகமாகச் சொத்துகளை (ரொக்கம் தவிர) அதிகரிக்கும். அவைகளின் வைப்பும் இதன்மூலம் £ 12 மில்லியனாக அதிகரிக்கும்.

எனவே, மைய பாங்கிற்குப் பொதுமக்களிடமுள்ள பணத்தின் அளவை அதிகரிக்கவோ குறைக்கவோ இயலும் முக்கியமான அதிகாரம் இருக்கிறது. இவ்வதிகாரம் வரம்புகளுக்குட்பட்டதா? சாதாரண பாங்கைப்பற்றி நாம் ஆராய்ந்தபோது, தான் வைத்திருக்கும் ரொக்கத்தின் வீத அளவிற்கே அது தன் சொத்துகளையும் பொறுப்புகளையும் அதிகரிக்கக்கூடுமென்று கண்டோம். மைய பாங்கும் இதே வரம்புகளுக்குட்பட்டதே. ஏனெனில், அதனுடைய வாக்குறுதிகளும், தேவைப்படும்போது செலாவணியைக் கொடுக்கக் கடமைப்பட்டன. செலாவணியாகவுள்ள அவைகளின் நோட்டுகளும் ஒரு வகை வாக்குறுதிகளே. முன்சொல்லப்பட்ட கருத்து, மைய பாங்கு தன் வாக்குறுதிகளை, மீண்டும் வாக்குறுதிகளைக் கொடுத்தே நிறைவேற்ற முடியுமென்பதையே கூறுகிறது. உண்மையில், இந்த நிலைதான் எல்லா நாடுகளிலுமுள்ளது. இங்கிலாந்து பாங்கின் £ 1 நோட்டு ஒவ்வொன்றும் தன் முகப்பின்மேல், அப் பாங்கின் தலைமைப் பொருட்கணக்கர் (Chief Cashier) கையொப்பமிட்ட 'கொடுக்க நான் வாக்களிக்கிறேன்' (I promise to pay) என்னும் வார்த்தைகளைத் தாங்கி நிற்கின்றன. உண்மையில் கூறப்போனால், 1 £ நோட்டிற்கு இன்னொரு ஒரு £ நோட்டு அல்லது இரண்டு 10 ஷில்லிங் நோட்டுகள் அல்லது £ 1 மதிப்புள்ள கொஞ்சம் சில்லறை கொடுப்பதைத் தவிர, மற்றெவ்வகையிலும் கொடுப்பதற்கு எதுவும் கட்டுப்படுத்தவில்லை. எல்லா

1 எல்லாச் சமயங்களிலும் இந்த விகிதம் கடைப்பிடிக்கப்படுமென்று ஊகிக்க முடியாது. சட்டமும், பொதுவான எச்சரிக்கையும் இந்த சட்ட அல்லது மரபு வழக்கான அளவிற்கும் கீழே போகாதபடி பார்த்துக்கொள்கின்றன. கடன் கொடுப்பதற்கு அங்கத்தினர் பாங்குகள் இக்கட்டான நிலையிலிருக்கும்போதோ அல்லது பாதுகாப்பான சொத்துகளை வாங்குவதில் இடர்ப்பாடிருக்கும்போதோ, நிறைய அளவு ரொக்கம் பெற்றிருந்தால், அவைகள் தங்களது ரொக்க விகிதத்தை இயல்பான அளவிற்கும் அதிகமாகச் சிறிது காலத்திற்கு உயர்த்தக்கூடும்.

வாக்குகளையும் மீட்கக்கூடிய முடிவான பணமே, மைய பாங்கின் கொடுப்பதற்கான வாக்குகளில் ஒன்ருக இருப்பதால், மொத்தப் பண அளவை அது அதிகரிக்கும் அதிகாரம் கட்டுக் கடங்காமலேயே உள்ளது.

பண வரலாற்றில் சில சமயங்களில், குறிப்பாக, ஜெர்மனியில் 1923ஆம் ஆண்டில் மைய பாங்குகள் அதிக அளவு பணத்தை வெளியிட்டதன் காரணமாகப் பல கேடுகள் விளைந்தன. ஆனல், பெரும்பான்மையான நாடுகளில் அதன் அதிகாரங்கள் கட்டுப்படுத் தப்பட்டே உள்ளன. பொன் திட்டத்தைக் (Gold Standard) கடைப் பிடிக்கும் நாடுகளில் மைய பாங்கின் பொறுப்புகள் தேவைப்படும் போது செலாவணியாக மட்டுமன்றிப், பொன்னுகவும் கொடுக்கப்பட வேண்டுமென்று சட்டம் செய்யப்பட்டிருக்கிறது. பொறுப்புகளை அதிகரிப்பதை இது கட்டுப்படுத்துகிறது. ஏனெனில், மைய பாங்கு கூடப்பொன்னைச் சிருட்டிக்க முடியாதே. மையபாங்கைப் பொறுத்த மட்டில் பொன் அங்கத்தினர் பாங்குகளில் ரொக்கம் வேலை செய்வதுபோல் செய்கிறது. பொன் திட்டத்திலிருந்தாலும் இல்லா விட்டாலும்[1] பல நாடுகளில் மைய பாங்கு தான் வைத்துள்ள பொன் இருப்பில் ஒரு குறிப்பிட்ட மடங்கிற்குமேல் பொறுப்புகளை பெறக்கூடாதெனச் சட்டம் செய்யப்பட்டுள்ளது. [உ-ம். போருக்கு முன்னர் ஃபிரான்சில் ஃபிரெஞ்சு பாங்கு (Bank of France) தன் மொத்த நோட்டுகள், வைப்புகள் ஆகியவற்றின் மொத்த அளவில் 35 சதவீதம் பொன்னை வைத்துக்கொள்ளவேண்டியிருந்தது.]

இதுபோன்ற நேரடியான கட்டுப்பாடுகள் இல்லாத நாடுகளி லும் மைய பாங்கின் நோட்டு வெளியிடும் அளவு மறைமுகமாகக் கட்டுப்படுத்தமுடியும். ஏனெனில், மைய பாங்கு அங்கத்தினர் பாங்குகளிடமுள்ள பொதுமக்களின் வைப்புகள் அதிகரிப்பதற்கு உடன்படுமேயானல், பொதுமக்கள் அவ் வைப்புகளுக்கிணங்க அதிகமான செலாவணியை (அதாவது, மைய பாங்கின் நோட்டு களை)ப் பெற்றுச்செல்ல முனைவர். இதன் விளைவாக அங்கத்தினர் பாங்குகள் மைய பாங்கிலிருந்து அதிக அளவு நோட்டுகளின் அளிப்புத் தேவைப்படும். மையபாங்கு 'கடனை அதிகரிக்கும் போது' (expand credit) இதனைக் கவனத்தில் வைக்கவேண்டும். அது வெளியிடும் நோட்டுகளின் மொத்த அளவு கட்டுப்படுத்தப் படும்போது, அதனுடைய கடன் அதிகரிப்பு அதிகாரங்களும்.

1 பொன் திட்டமானது 10வது அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளது. தற்போதைய ஆய்விற்கு, பொன் திட்டமென்ருல் நாட்டில் மைய பாங்கு தனது நோட்டுகளுக்கு ஈடாகப் பொன்னைக் கொடுக்கவேண்டிய ஓர் திட்டமெனக் கொள்வோம்.

அதனுடன் ஒரு முடிவான அளவிற்குக் கட்டுப்படுத்தப் படுகின்றன,

நடப்பிலிருக்கும் மொத்தப் பண அளவை அதிகரிக்கும் மைய பாங்கின் அதிகாரங்கள் இவ்வகையில் கட்டுப்படுத்தப்படுகின்றன. இந்த அளவைக் குறைக்கும் அதிகாரம் கட்டுப்படுத்தப்படுவ தென்னவோ சட்டத்தின் கையிலில்லை; ஆனால், இயற்கையின் கையிலுள்ளது. கடன் கொடுப்பதற்கு எதிராக உள்ளது கடனழைப் பாகும்(calling a loan); பத்திரத்தை(security)வாங்குவதற்குஎதிராக வுள்ளது அதனை விற்பதாகும். மைய பாங்கு தான் கொடுத்ததை விட அதிகமான அளவு கடன்களை அழைத்துவிட முடியாது; வாங்கியதைவிட அதிகமான அளவு பத்திரங்களை விற்றுவிடவும் முடியாது. அதனுடைய கைவசத்திலுள்ள பத்திரங்கள் முழுவதை யும் அது விற்றுவிட முடியாது, அல்லது கடன்களைக் கொடுக்காமல் நிறுத்திவிடவும் முடியாது. ஏனெனில், அவைகளிலிருந்து பெறும் வட்டியே அதனுடைய வருமானத்திற்குள்ள ஒரே வழி. எனவே, மைய பாங்கு கடனைக் குறைத்துக்கொள்ளும் அதிகாரத்திற்கும், நடப்பிலுள்ள பண அளவைக் குறைத்துக்கொள்ளும் அதிகாரத் திற்கும் ஒரு அறுதியான வரையறை ஏற்பட்டுள்ளது.

இயற்கையாகவும் சட்டத்தினாலும் ஏற்பட்டுள்ள கட்டுப் பாடுகள் ஒருபுறமிருக்க, மைய பாங்கும் நாட்டின் நலனை எண்ணி மதித்துத் தனது அதிகாரங்களைப் பயன்படுத்துகிறது. மைய பாங்கு உண்மையில் பெரும்பாலும் ஒரு தனிப்பட்ட நிலையமாகும். ஆனால், ஈவுத் தொகைகள் (dividends) சட்டத்தினாலோ அல்லது வழக்கத் தினாலோ வரையறை செய்யப்பட்டு அடிக்கடி மாறாமலும் இருக் கின்றன. மேலும், அது தனிப்பட்ட இலாபம் ஈட்டுவதற்கும் அது முக்கியமாக நடத்தப்படவில்லை. 1946ஆம் ஆண்டு அரசாங்கம் இங்கிலாந்து பாங்கைத் தன்னிடமுள்ள மூலதன முழுதையும் கொடுத்துவிடும்படி வேண்டுகோள் விடுத்தது. அவ் வேண்டு கோளுக்கிணங்கியபோதும்எப்போதையும்விட அதிகமான அளவிற் குப் பொதுநலத்தைக் கடைப்பிடித்தலை அது கைக்கொள்ளவில்லை. இயன்ற அளவு அதிகமாக இலாபத்தைப் பெறும் நோக்கத்துடன் பெரும்பான்மையான மைய பாங்குகள் தங்களது காப்புத் தொகையை அதிகமாக வைத்துக்கொள்ளும். அங்கத்தினர் பாங்குகளின் காப்பு ரொக்கம் 8 சதவீத அளவிற்குக் குறைவாக இருப்பதை நாம் ஏற்கெனவே பார்த்தோம். உண்மையில் அவை பெரும்பாலும் குறைவாகவேயிருக்கும். 1939-45ஆம் ஆண்டுகளில் நடந்த போர் வரை பெரியநாடுகளிலுள்ள மைய பாங்குகள் தங்கள் பொறுப்புகளில் 30 சதவீதத்திற்கும் குறைவாகப் பொன் காப்பு

நிதியை வைத்திருப்பது அரிதாக இருந்தது. இந்த வீத அளவு சில சமயங்களில் 70 சதவீதம் அல்லது இன்னும் அதிகமாகவு மிருந்தது. போரானது, போரில் ஈடுபட்ட அரசுகளைத் தங்களிட மிருந்த பணத்தையெல்லாம் திரட்டிச் செலவுசெய்யவைத்ததால், அந் நாடுகளுடைய மைய பாங்குகளின் பொன் காப்பு நிதி மிகுதி யாக வறண்டு போயிற்று. ஆனல், இன்றுவரையில், ஐக்கிய அமெரிக்கா, கானடா, தென் ஆப்பிரிக்கா, இன்னும் சில உதவி பெற்ற நடுநிலை நாடுகள் பொன் காப்பு நிதியை ஏராளமாக வைத்திருக்கின்றன. 1946ஆம் ஆண்டின்போது இங்கிலாந்து பாங்கின் பொன் இருப்பு அதனுடைய பொறுப்புகளில் 0.01 சதவீத மாகத்தானிருந்தது. இனிமேல் நாட்டிலுள்ள பொன் காப்பு ரொக்கத்தை அரசாங்கம்தான் வைத்துக்கொள்ளவேண்டும், இங்கிலாந்து பாங்கு வைத்துக்கொள்ளக்கூடாதென்ற கருத்து இதனல் வெளிப்படையானது. இதுவரையில் இங்கிலாந்து பாங்கு சொத்துகளையும் பொறுப்புகளையும் அதிகரிப்பது அதனுடைய பொன்இருப்பினல் கட்டுப்படுத்தப்பட்டது; தற்போது அது சட்ட பூர்வமாக எவ்வளவு நோட்டுகள் வெளியிடமுடியுமோ அதைப் பொறுத்திருக்கிறது. இங்கிலாந்து பாங்கைப் பொறுத்தமட்டில், புறக்கட்டுப்பாடா (External Limit)கையால், பாங்கே அதை மாற்றி அமைக்க இயலாது. ஆனல், இக் கட்டுப்பாடு பொன் காப்பு நிதியினல் ஏற்படும் கட்டுப்பாட்டினின்றும் முற்றிலும் வேறு பட்டது. ஏனெனில், இது மனிதனல் இயற்றப்படும் கட்டுப்பாடு. அரசாட்சி நடத்தும் அரசாங்கம் இக் கட்டுப்பாட்டினை மாற்றி அமைக்கக்கூடும். சுருக்கமாகச் சொல்லப்போனல், இங்கிலாந்து பாங்கின்மீதுள்ள கட்டுப்பாடுகள் எந்த ஒரு பொருளினலும் தற்போது ஏற்படுவதில்லை—அதனலும் அரசாங்கத்தாலுமே ஏற்படுகின்றது. அதுதான், நாம் பின்னர் பார்க்கப்போவதைப் போல மிக முக்கியத் தனிச் சிறப்பாகும்.

இவ்வளவு அளவு, இத்தன்மையான காப்பு ரொக்கம்தான் வைத்துக்கொள்ளவேண்டுமென்று சட்டத்தினல் தீர்மானிக்கப் பட்ட கட்டுபபாட்டிற்குள், மையபாங்கு பொதுமக்களுக்கு கிடைக் கக்கூடிய பணத்தின் அளவை தன்னிச்சையாகத் தன்னதிகாரத் தைக்கொண்டு தீர்மானிக்கலாம். அங்கத்தினர் பாங்குகளின் வைப்புகளின் மொத்த எண்ணிக்கையை அது நிர்ணயிக்கிறது. பல இனங்களையுடைய சொத்துகளின் (assets) அளவை மாற்றி அமைப்பதன்மூலமும், அல்லது வாடிக்கைக்காரர்களைப் பெறுதற்கு அவைகளுக்குள்ள போட்டியினலும், யார் அதிக வைப்புகளை வைத்துக்கொள்ளுவ தென்பதைத் தீர்மானிப்பது அங்கத்தினர் பாங்குகள் கையில்தானிருக்கிறது. எனவே, மைய பாங்கு பண

அளிப்பின் அளவைத் தீர்மானிக்கிறது; அங்கத்தினர் பாங்குகள் பணத்தின் தன்மையைத் (quality) தீர்மானிக்கின்றன.

பண அளவைத் தீர்மானித்து முடிவுசெய்யக்கூடியது மைய பாங்கேயாகும். இதனுல் மைய பாங்குதான் எந்த மாற்றத்திற்கும் முயற்சி எடுக்கவேண்டுமென்பதில்லை. இடையே மைய பாங்கின் சில மாதிரி (sample) இருப்புநிலைக் குறிப்புகளைப் பார்ப்பது பொருத்தமாக இருக்கும். 61, 62ஆம் பக்கத்தில்1939-45-ல் நடந்த போருக்குச் சற்று முன்னுல் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு தேதியினுடைய இருப்புநிலைக் குறிப்பு எளிய முறையில் கொடுக்கப்பட்டுள்ளது. போர்நிதியின் விளைவுகளைக் கொள்ளாத ஒரு தேதியின் இருப்புநிலையைக் காட்டவேண்டுமென்பதற்காகவே மேற்படி தேதி தேர்ந்தெடுக்கப்பட்டது. போருக்குப் பின்னர் ஒரு தேதியைத் தேர்ந்தெடுத்து அதனுடைய இருப்புநிலைக் குறிப்பை விரைவில் காட்டுவோம். 61, 62ஆம் பக்கம் பன்னிரண்டு ஐக்கிய ரிசர்வு பாங்குகளின் கூட்டு இருப்புநிலைக் குறிப்பின் தொகுப்பையும் காட்டுகிறது. இந்த இருப்புநிலைக் குறிப்பிற்குத் தேதியானது 1928ஆம் ஆண்டில் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது. இதற்குக் காரணமுண்டு. 1920ஆம் ஆண்டில் பெரிய மந்தம் (great depression) ஆரம்பமாகியது. பத்து ஆண்டுகட்குப் பின்னர் நடந்த போருக்கு அடுத்தபடியாக இதுவே அமெரிக்கப் பொருளாதாரத்தில் மிகவும் நெருக்கடி ஏற்படுத்தியதால், அந்த ஆண்டிற்கும் முன் ஆண்டில் ஒரு பகுதியை தேர்ந்தெடுத்து அதன் இருப்புநிலைக் குறிப்பிடப்பட்டுள்ளது.

இந்த இருப்புநிலைக் குறிப்புகள் 42-43ஆம் பக்கங்களில் கொடுக்கப்பட்டுள்ள அங்கத்தினர் பாங்குகளின் இருப்புநிலைக் குறிப்புகளைப் பெரிதும் ஒத்தே உள்ளன. முக்கியமான வேறுபாடு யாதெனில், பொறுப்புகள் பக்கத்தில் நோட்டுகள் என்னும் பெரிய இனம் காணப்படுகிறது. ஆனுல், ஏற்கெனவே விளக்கப்பட்டதுபோல் வைப்புகளுக்கும் இவைகளுக்கும் அடிப்படையில் வேறுபாடொன்றுமில்லை. அங்கத்தினர் பாங்குகளின் இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புகள் பக்கத்தில் முக்கியமாக உள்ள இனம், பொது மக்களுடைய ரொக்கமாக உள்ள வைப்புகளாகும். அதேபோன்று மைய பாங்குகளின் இருப்புநிலைக் குறிப்பில் முக்கியாக உள்ள இனம் அங்கத்தினர் பாங்குகளின் வைப்புகளாகும் (இங்கிலாந்து பாங்கு அழைப்பதைப்போல பாங்கர்களின் வைப்புகள்). இவ் வைப்புகள், நோட்டுகளின் ஒரு பகுதியுடன் சேர்ந்து அங்கத்தினர் பாங்குகளின் ரொக்கமாக உள்ளன.

## இங்கிலாந்து பாங்கு, ஜூன் 14, 1939

| பொறுப்புகள் | | சொத்துகள் | |
|---|---|---|---|
| நோட்டுகள் | £ 494,951,865 | தங்கம், வெள்ளி ... ... | £ 227,563,372[1] |
| பொதுமக்கள் வைப்புகள் (அதாவது, பிரிட்டிஷ் அரசாங்கத்தாருக்குச் சொந்தமானவை) ... ... | 22,078,770 | அரசாங்கப் பத்திரங்கள் ... | 415,407,389 |
| பாங்கர்களின் வைப்புகள் (அதாவது, பிரிட்டிஷ் கூட்டுப்பங்கு பாங்குகளுக்குச் சொந்தமானவை) ... | 100,296,915 | இதர பத்திரங்கள் ... ... | 22,995,500 |
| இதர வைப்புகள் (அதாவது, பிரிட்டிஷ் பாங்குகளை அல்லது பிரிட்டிஷ் அரசாங்கத்தைச் சாராத ஏனைய மக்களுக்குச் சொந்தமானவை) ... | 36,399,320 | கழிவுகளும் (Discounts) முன்பணமும் (Advances)... | 5,631,795 |
| மூலதனமும் உபரியும் ... ... | 17,871,186 | | |
| | £ 671,598,056 | | £ 671,598,056 |

1 அநேகமாக முழுதும் பொன்னாக இருக்கும்.

### ஐக்கிய ரிசர்வு பாங்குகள், டிசம்பர் 31, 1928

| பொறுப்புகள் | | சொத்துகள் | |
|---|---|---|---|
| நோட்டுகள் ... ... | $ 1,809,000,000 | பொன் ... ... | $ 2,584,000,000 |
| அரசாங்க வைப்புகள் ... | 23,000,000 | மற்றவகை ரொக்கம் ... | 205,000,000 |
| அங்கத்தினர் பாங்கு வைப்புகள்... | 2,389,000,000 | அங்கத்தினர் பாங்குகளுக்குக் கொடுக்கப்பட்டகடன்கள்... | 1,056,000,000 |
| இதர வைப்புகள் ... ... | 27,000,000 | பத்திரங்கள் ... ... | 238,000,000 |
| மூலதனமும் உபரியும் ... ... | 401,000,000 | மாற்று உண்டியல்கள் ... | 489,000,000 |
| இதர பொறுப்புகள் ... ... | 13,000,000 | இதர சொத்துகள் ... ... | 90,000,000 |
| | $ 4,662,000,000 | | $ 4,662,000,000 |

இருப்புநிலைக் குறிப்பின் சொத்துகளின் பகுதி அங்கத்தினர் பாங்குகளுக்குள்ளதைப்போன்றே யிருக்கிறது. ரொக்கம், முதலீடுகள், கடன்கள் என்று மூன்று முக்கிய இனங்கள் உள்ளன. ரொக்கம் பொன் கட்டி வடிவில் உள்ளது. மேலும், 1939ஆம் ஆண்டில்தான் மற்ற அங்கத்தினர் பாங்குகளுக்குள்ளதைவிட மொத்தச் சொத்துகளில் அதிக அளவு வீதமாக இருந்திருக்கிறது என்பதும் இங்குக் கவனிக்கத்தக்கது. முதலீடுகள் அரசாங்கப் பத்திரங்களாகவோ அல்லது மாற்று உண்டியல்களைப் போன்ற குறுங்கால அரசாங்கப் பத்திரங்களாகவோ இருந்தன. கடன்களாவன, மைய பாங்குகளின் வாடிக்கைக்காரர்களுக்கு அளிக்கப்படும் கடன்களாம். அமெரிக்க ஐக்கிய ரிசர்வு பாங்குகளைப் பொறுத்தமட்டில் அவைகளின் வாடிக்கைக்காரர்கள் அங்கத்தினர் பாங்குகளே. இங்கிலாந்தில் கூட்டுப் பங்கு பாங்குகள் (அங்கத்தினர் பாங்குகள்) நேரிடையாகக் கடன் வாங்குவது வழக்கமில்லை. அவைகளுக்குப் பணம் தேவையானபோது அழைப்புக் கடன்கள்மூலம் பண அங்காடியில் அவைகள் கொடுத்துள்ள கடனைத் திரும்பப் பெறுகின்றன. இப்படிக் கூட்டுப் பங்கு பாங்குகள் திருப்பி எடுத்துக்கொண்ட பணத்தைப் பெறுவதற்காகப் பண அங்காடி இங்கிலாந்து பாங்கிற்கு மனுச்செய்து கொள்ளும். நிகர விளைவென்னவோ, அமெரிக்க முறைபோன்ற நேரடியான கடன் பெறுவது போன்றதுதான்.

மைய பாங்கு தன் சொத்துகளை அதிகரிப்பதன்மூலமோ, அல்லது குறைத்துவிடுவதன்மூலமோ அங்கத்தினர் பாங்குகளின் காப்பு ரொக்கத்தை அதிகரிக்கவோ கட்டுப்படுத்தவோ செய்கிறது. இதே முறையைத்தான் நாம் பணம் 'சிருட்டித்தல்' என்னும் தலைப்பின்கீழ்ப் படித்தோம். இதனை 1947ஆம் ஆண்டு தேர்ந்தெடுத்த ஏதோ ஒரு தேதியின் இருப்புநிலைக் குறிப்பை 1939ஆம் ஆண்டின் இருப்புநிலைக் குறிப்புடன் ஒப்புமை செய்தல் மூலம் விளக்கலாம்.

இருப்புநிலைக் குறிப்பின் மொத்தம் இருமடங்காக இருப்பது இங்குக் கவனிக்கத்தக்கது. போரானது இன்னொரு அத்தியாயத்தில் முழுவதும் விளக்கியுள்ளதுபோலப் பேரளவுப் பணம்'சிருட்டித்தலை'த்தோற்றுவிக்கிறது. 1939ஆம் ஆண்டிலிருந்து 1947ஆம் ஆண்டு செப்டம்பர்வரை(இரண்டு இருப்புநிலைக் குறிப்புகளது தேதி இங்குக்குறிப்பிடப்படவில்லை) பிரிட்டிஷ் பொதுமக்களுக்கு அளிக்கப்பட்டபணத்தின்அளிப்பு,நோட்டுகளும் பாங்கு வைப்புகளுமாகச் சேர்ந்து £ 2,707 மில்லியனிலிருந்து £ 6,974 மில்லியனாக உயர்ந்தது. இவ்வளவு அதிகமான அளவு பணத்தை அளிக்கும் பொறுப்பு

### இங்கிலாந்து பாங்கு, 15 அக்டோபர், 1947
(மில்லியன் பவுன்களில்)

| பொறுப்புகள் | | 1939ஆம் ஆண்டு ஜூன் 14ஆம் தேதியிலிருந்து ஏற்பட்ட மாற்றம் | சொத்துகள் | | 1939ஆம் ஆண்டு ஜூன் 14ஆம் தேதியிலிருந்து ஏற்பட்ட மாற்றம் |
|---|---|---|---|---|---|
| நோட்டுகள் ... | £ 1,368.6 | + 873.6 | பொன், வெள்ளி ... | £ 2.4 | — 225.2 |
| பொது வைப்புகள் (Public Deposits) ... | 11.5 | — 10.6 | அரசாங்கப் பத்திரங்கள் | 1,759.9 | +1,344.5 |
| பாங்கர்களின் வைப்புகள் | 295.8 | + 195.5 | இதர பத்திரங்கள் ... | 20.1 | — 2.9 |
| இதர வைப்புகள் ... | 94.6 | + 58.2 | கழிவுகளும் முன்பணமும் | 5.8 | + 0.2 |
| முதலும் உபரியும் ... | 17.7 | — 0.2 | | | |
| | £1,788.2 | + 1,116.6 | | £ 1,788.2 | + 1,116.6 |

இங்கிலாந்து பாங்கின் தலைமீது விழுந்தது. £ 900 மில்லியன் கூடுதலாக அச்சிட்டுத் தேவையான அதிக அளவு நோட்டுகளை அது வழங்கியது [இப் பணத்தில் சிலவற்றை பாங்குகள் பேழை ரொக்கமாகத் (till money) தேவைப்பட்டன]. இங்கிலாந்து பாங்கிலுள்ள பாங்கர்களின் வைப்புகளை (Bankers' Deposits) £ 200 மில்லியன் அதிகரித்ததன்மூலம், அங்கத்தினர் பாங்குகளிலுள்ள பொது வைப்புகளை அதிகரிக்கமுடிந்தது. இந்த அதிகரிப்பு, அங்கத்தினர் பாங்குகளுக்கு ரொக்கமாகப் பயன்பட்டதால் அவைகள், தங்கள் வகையில் வைப்புகளை, £ 3,350 மில்லியன் அளவிற்கு அதிகரித்துக் கொள்ள முடிந்தது.[1] இந்த முழுக்கட்டுக்கோப்பிற்கும் அடிப்படை இங்கிலாந்து பாங்கின் சொத்துகளில் £ 1,000 மில்லியன் அதிகரித்தமையேயாகும். பாங்கு அரசாங்கப் பத்திரங்களை வாங்குவதன்மூலமே இந்த அதிகரிப்பு சாத்தியப்பட்டது. ஏற்கெனவே விளக்கப்பட்டதுபோல் அது அரசாங்கத்திற்குத் தன்னுடைய பொன்னிருப்பைக் கொடுத்துவிட்டு அதற்குப் பதிலாகப் பத்திரங்களைப் பெற்றது முதற்கொண்டு, கணக்கு எண்கள் காட்டுவது போல், உண்மையில் £ 1,300 மில்லியன் அளவிற்குப் பத்திரங்களை வாங்கியது.

இதைப்போன்ற பணப்பெருக்க முறையே ஐக்கிய அமெரிக்காவிலுமுள்ளது. பக்கம் 66-ல் உள்ள ஒப்புமை விளக்குவதுபோல், அந்நாட்டில் இம்முறை போருக்கு முன்னதாக இருந்தது.

பக்கம் 66-ல் உள்ள கணக்குகள் பெரிய மந்தம் (Great Depression), புதிய ஏற்பாடு (New Deal) இவைகளைச் சார்ந்த பத்தாண்டுகளைச் சேர்ந்தது. மந்த ஆண்டுகளில் பணச்சுருக்கமிருக்கும். ஆனால், ஜனாதிபதி ரூஸ்வெல்ட் பதவிக்கு வந்ததும் கடன் அதிகரிப்பு (expansion of credit) மூலம் மந்தத்திற்கு முடிவு காண ஒரு துணிச்சலான திட்டத்தைக் கொண்டுவந்தார். பணம் பலவகையாலும் அப் பொருளாதார அமைப்பிற்கு இறைக்கப்பட்டது. பக்கம் 66-ல் உள்ள அட்டவணையில் அதன் விளைவுகளை நன்கு காணலாம். அங்கத்தினர் பாங்குகளின் காப்பு ரொக்கமான வைப்புகள் $ 2,389 மில்லியனிலிருந்து $ 8,577 மில்லியனாக உயர்ந்தது—அதாவது, மூன்று மடங்காகப் பெருகியது. மேலும், ஆரம்பத்தில் குறைந்த எண்ணிக்கையுள்ள தொகைகளில் பாதி அளவு நேரடியாக ரிசர்வு பாங்கிலிருந்து கடன் வாங்கப்பட்டது (62ஆம் பக்கத்தில் 'அங்கத்

1 அங்கத்தினர் பாங்குகளின் ரொக்க விகிதம் அவ்விதமாக சிறிது குறைக்கப்பட்டிருந்தது. சராசரியாக 1939ஆம் ஆண்டில் 'இங்கிலாந்து பாங்கின் நாணயங்கள், நோட்டுகள், இருப்புகளின்' விகிதம் மொத்த வைப்பில் 10.85 சதவீதமாக இருந்தது. 1946ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் 8.28 வீதமாக இருந்தது.

### ஐக்கிய ரிசர்வ் பாங்குகள், டிசம்பர் 29, 1938
(மில்லியன் டாலர்களில்)

| பொறுப்புகள் | | 1928ஆம் ஆண்டிலிருந்து ஏற்பட்ட மாற்றம் | சொத்துகள் | | 1928ஆம் ஆண்டிலிருந்து ஏற்பட்ட மாற்றம் |
|---|---|---|---|---|---|
| நோட்டுகள் ... | $ 4,470 | + 2,661 | பொன் சான்றிதழ் (Gold Certificate)... | $ 11,788 | + 9,204 |
| அரசாங்கப் பத்திரங்கள் | 941 | + 918 | மற்ற வகை ரொக்கம் | 335 | + 130 |
| அங்கத்தினர் பாங்கு வைப்புகள் ... | 8,577 | + 6,188 | அங்கத்தினர் பாங்குகளுக்குக்கொடுக்கப் பட்ட கடன்கள் ... | 7 | — 1,049 |
| இதர வைப்புகள் ... | 505 | + 478 | கடன் பத்திரங்கள் (Securities) ... | 2,564 | + 2,326 |
| மூலதனமும் உபரியும் ... | 310 | — 91 | மாற்று உண்டியல்கள் | 1 | — 488 |
| இதர பொறுப்புகள் ... | 708 | + 695 | இதர சொத்துகள் ... | 816 | + 726 |
| | $ 15,511 | + 10,849 | | $ 15,511 | + 10,849 |

தினர் பாங்குகளுக்குக் கொடுக்கப்பட்ட கடன்' என்று காட்டப் பட்டுள்ள $ 1,056 மில்லியன்); 1938ஆம் ஆண்டு செயலளவில் இக் கடன்கள் முழுமையும் திருப்பி அடைக்கப்பட்டுவிட்டன. அங்கத்தினர் பாங்குகள் காப்பு ரொக்கத்தை அதிகரித்ததோடு, ஐக்கிய ரிசர்வு பாங்குகளும் புழக்கத்திலுள்ள அவைகளின் நோட்டு களை இருமடங்கிற்குமேல் அதிகரித்தன. எனவே, ரிசர்வு பாங்கு களின் பொறுப்பு மும்மடங்காகப் பெருகியது.

இப் பணவசதிகள் எவ்வாறு அளிக்கப்பட்டன என்பதை வலப்புறமிருக்கும் பத்தி காட்டுகிறது. 1928ஆம் ஆண்டு $ 2,584 மில்லியனிலிருந்து 1938ஆம் ஆண்டு $ 11,788 மில்லியனுகை அதிக அளவு, உயர்ந்த பொன் இனத்தினுல்தான் வந்தது. ['பொன்' என்பது பொன் சான்றிதழ்களாக (Gold Certificates) தற்போது மாறியதை இங்குக் கவனத்தில் கொள்ளவேண்டும்; அதாவது, அசல் பொன் இவ்விடைக்காலத்தில் ஐக்கிய அமெரிக்க அரசாங்கத்திற்கு மாற்றப்பட்டுவிட்டது. இதற்குப்பதிலாக அரசாங் கம் ரிசர்வு பாங்குகளுக்குப் பொன் சான்றிதழ்களைக் கொடுத்தது; 'பொன்சான்றிதழாவது' 100 சதவீதம் பொன்னுல் தாங்கப் பட்ட ஒருவகை நோட்டாகும்]. இந்த ஆண்டுகளில், ஐக்கிய அமெரிக்காவில் மிகப்பெரிய அளவில் பிற நாடுகளினின்றும் பொன் உட்புகுந்தமையும் ஆராயத்தக்க ஒரு நிகழ்ச்சியாகும். பத்தாவது அத்தியாயத்தில் இது ஆராயப்பட்டிருக்கிறது. ஐக்கிய ரிசர்வு பாங்குகள் பண அளவை அதிகரிக்க இது பெரிதும் துணை செய்தது என்று குறிப்பிடுதல் மட்டும் இங்குப் போதுமானது. ரிசர்வு பாங்குகள் $ 2,326 மில்லியன் பெறுமான கடன் பத்திரங்களை வாங்கியதிலிருந்து அவைகளும் பொன் நாட்டிற்கு வந்துகொண்டி ருப்பதைப் பார்த்துக்கொண்டு வாளாயிருக்கவில்லை என்பதைக் காட்டுகிறது. அவைகளின் நோக்கம் கடனை அதிகரிப்பதேயாகும். சந்தர்ப்பவசமாக பொன் அவர்களுக்குத் துணைசெய்யாமலிருந் திருப்பினும், தங்களுடைய நோக்கத்தை இன்னும் அதிகமான அளவு கடன் பத்திரங்களை வாங்குவதன்மூலம் (அதே அளவில் நிறைவேற்றிக்கொள்வது கடினம்தான் என்றுலும்) நிறைவேற்றிக் கொண்டிருக்கமுடியும்.

இவ்வத்தியாயத்தில் பாங்குமுறை அமைப்பைப்பற்றி மட்டும் தான் நாம் ஆராயக் கடமைப்பட்டிருக்கிறேம். பண அளவை அதிகரிக்கும் இக் கைக்கோள்(policy)ஒரு பகுதி வெற்றியைத்தான் தர இயலும் என்று சுட்டிக்காட்டுவது, இவ்விடத்தில் பொருத்த மானதே. முதன்முதலில் சொல்லப்போனுல், அங்கத்தினர் பாங்குகள், தங்களது பொறுப்புகளை ஐக்கிய ரிசர்வு பாங்கு

களால் கொடுக்கப்பட்ட காப்பு ரொக்கங்களின் அதிகரிப்பு அளவு வீதத்திற்கு அதிகப்படுத்தவும் இயலாது; அவ்வாறு விரும்புவது மில்லை. 1938ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 29ஆம் தேதியிலிருந்த அங்கத்தினர் பாங்குகளின் காப்பு ரொக்கமாகிய $ 8,577 மில்லியனில், $ 3,000 மில்லியன் 'தேவையளவிற்குமேல் அதிகமாக இருந்தது'—அதாவது, அவை கூடுதலாக வைப்புகளை சிருட்டிப்பதற்குக் காப்பு ரொக்கமாக பயன்படுத்தப்படாமலிருந்தன. இரண்டாவதாக அமெரிக்காவில் புதிய ஏற்பாட்டு ஆண்டுகளில் (New Deal Years) வணிகத்திலும் தொழிலிலும் சற்று மீட்சி காணப்பட்டாலும், கடன் அதிகரிப்பால் மீட்சி ஏற்படும் என்னும் சித்தாந்தத்தைத் தோற்றுவித்தவர்கள் எதிர்பார்த்த அளவிற்கு ஏற்படவில்லை.

ஐக்கிய ரிசர்வு முறையில், போருக்கு முன்பே சொத்துகளும் பொறுப்புகளும் ஓரளவு அதிகரித்தே இருந்தன. ஆனால், 1928-38ஆம் ஆண்டுகளில் ஏற்பட்ட அதிகரிப்பு போர் நடந்த ஆண்டுகளில் நடந்தவற்றால் மறைக்கப்பட்டுவிட்டது (அட்டவணை, பக்கம் 69-ல் பார்க்கவும்).

இப் போர்க்கால அதிகரிப்புகளை, 64ஆம் பக்கத்தில் காட்டப்பட்டுள்ள அட்டவணையில் கண்டவாறுள்ள கிரேட் பிரிட்டனின் அதிகரிப்புகளுக்கு ஒப்பிடுதல் சுவையானதாக இருக்கும். பிரிட்டிஷ் நோட்டுகளின் புழக்கம் மூன்று மடங்கிற்கும் சற்றுக் குறைவாகவே அதிகரித்தபோதிலும், ஐக்கிய ரிசர்வு பாங்குகளின் நோட்டுகள் (புழக்கத்திலுள்ள அமெரிக்க நோட்டுகள் முழுமையும் இவைகளே அல்ல) ஆறு மடங்காக அதிகரித்தன. பிரிட்டனில் அங்கத்தினர் பாங்குகளின் காப்பு ரொக்கம் மூன்று மடங்கிற்கும் சற்றுக் குறைவாகவே அதிகரிக்கப்பட்டது. ஆனால், அமெரிக்காவில் இது இருமடங்காகத்தான் அதிகரிக்கப்பட்டது. (அமெரிக்காவில் ரொக்கக் காப்பாகப் பயன்படுத்தப்பட்ட அங்கத்தினர் பாங்கு வைப்புகள்—அதாவது 'அதிகப்படியான ரொக்கம்' கழிக்கப்பட்ட மொத்தம்—மூன்றுமடங்கிற்கும் சற்றுக் குறைவாக அதிகரித்தன. இதுவே பிரிட்டிஷ் கணக்கு விவரத்துடன் ஒப்புமை செய்வதற்குப் பல வழிகளில் பொருத்தமுடையதாகும்.) ஏன், போர்க்காலங்களில் இவ்வளவு அதிகப்படியான பண அளிப்பு தேவைப்படுகிறதென்பதை இந் நூலின் பிறிதொரு பிரிவில் ஆராய்வோம். இங்கு நாம் பாங்குகளின் அமைப்புப்பற்றியே அறிந்துகொள்ளவேண்டும். எவ்வாறு இவ்வதிகரிப்பு உண்டாக்கப்படுகிறதென்பதை அட்டவணை தெளிவாகக் காட்டுகிறது. ரிசர்வு பாங்குகளின் மொத்த அதிகரிப்பான 31 பில்லியன் (billion) டாலர்களில் கால் பகுதிக்குமேல் பத்திரப்படுத்தும்பொருட்டோ, அல்லது தளவாட

## ஐக்கிய ரிசர்வு பாங்குகள், 1947ஆம் ஆண்டு, அக்டோபர் 29
(மில்லியன் டாலர்களில்)

| பொறுப்புகள் | | 1938ஆம் ஆண்டிலிருந்து ஏற்பட்ட மாற்றம் | சொத்துகள் | | 1938ஆம் ஆண்டிலிருந்து ஏற்பட்ட மாற்றம் |
|---|---|---|---|---|---|
| நோட்டுகள் ... | $ 24,453 | + 19,983 | பொன் சான்றிதழ்கள் | $ 20,363 | + 8,575 |
| அரசாங்கக் கடன் பத்திரங்கள் ... | 1,355 | + 414 | மற்ற வகை ரொக்கம் | 947 | + 612 |
| அங்கத்தினர் பாங்கு வைப்புகள் ... | 16,859 | + 8,282 | அங்கத்தினர் பாங்குகளுக்களிக்கப்பட்ட கடன்கள் ... | 373 | + 366 |
| இதர வைப்புகள் ... | 916 | + 411 | கடன் பத்திரங்கள் ... | 22,129 | + 19,565 |
| மூலதனமும் உபரியும்... | 717 | + 407 | மாற்று உண்டியல்கள் | 2 | + 1 |
| இதர் பொறுப்புகள் ... | 2,352 | + 1,644 | இதர சொத்துகள் ... | 2,838 | + 2,022 |
| | $ 46,652 | + 31,141 | | $ 46,652 | + 31,141 |

சாமான்கள், இன்னும் மற்ற முக்கியப் பொருள்களுக்காகக் கிரய மாகப் பிற நாடுகளால் அமெரிக்காவிற்கு அனுப்பப்பட்ட பொன் இருப்பு அதிகரிப்பால் ஏற்பட்டதாகும். பாக்கி உள்ளவை ரிசர்வு பாங்குகள் ஐக்கிய அமெரிக்க அரசாங்கத்தின் கடன் பத்திரங் களைப் பெரிதும் வாங்கியதால் ஏற்பட்டவை.

சில குறிப்பிட்ட காலங்களில் நடந்தவற்றை இந்த ஒப்புமைகள் காட்டுகின்றன. ஆனால், அவைகள் மைய பாங்கின் முயற்சியால் ஏற்பட்ட விளைவுகளால் ஏற்பட்டன என்பதைக் காட்டவில்லை. அரசாங்கம் போரிடும்போது கடைப்பிடிக்கும் கொள்கையே எல்லாவற்றிற்கும் மேலாக உள்ள சக்தியாகும். அக் கொள்கையை அமல்நடத்துவதில் மைய பாங்கு தன்னுடைய சொந்த முயற்சியைக்கொண்டு நடத்துகிறதா, அல்லது மற்றவை களின் செயல்களுக்கு இணையாகச் செயல்படுவதற்குக் கீழ்ப்படிந்து கொண்டிருக்கிறதா?

பொன் இருப்பு வைத்துக்கொள்வதைப் பொறுத்தமட்டில் மைய பாங்குகள் முழுவதும் கீழ்ப்படிதலாகவே உள்ளன. பாங்கின் பொன்னைத் தான் இரகசியமாகவும், பாங்குமுறைக்கு யாதொரு உடனடியான மாறுதல்களையும் உண்டுபண்ணாத வகையில்தான் வைத்திருக்கலாமாதலால், அரசாங்கம் பொன்னைத் தன் வசத்தில் வைத்துக்கொள்ள விரும்பியது. இதனால்தான் இங்கிலாந்தில், இங்கிலாந்து பாங்கினிடமிருந்த பொன் ரொக்கக் காப்பு வெகு வாகக் குறைந்தது. வெளிநாட்டு அரசாங்கங்களும் தனி மனிதர் களும் பத்திரமாக இருக்கும்பொருட்டும், அமெரிக்கப் பொருள்களை வாங்குவதற்காக டாலர்களைப் பெறும்பொருட்டும் அமெரிக்கா விற்குப் பொன்னை அனுப்பியதால், அமெரிக்காவில் ஐக்கிய ரிசர்வு பாங்குகளின் பொன்னிருப்பு அதிகமாகியது. இந்த இரு நாடு களிலும் மைய பாங்கு கீழ்ப்படிதலான ஒன்றாக இருந்தது. அதே சமயத்தில் மைய பாங்கின் முதலீடுகளில் ஏற்படும் மாறுதல்கள் அதனுடைய முயற்சியின் விளைவே. அரசாங்கக் கடன்பத்திரங்களை இருப்பாக வைத்திருப்பதிலும் இது முற்றிலும் உண்மையாக இருக் கிறது. இவைகள் அதிகரித்தோ குறைவாகவோ இருந்தால், அது மைய பாங்கு அவைகளை வேண்டுமென்றே அங்காடியில் விற்றோ வாங்கியோ இருக்கவேண்டும். மாற்று உண்டியல்களைப் பொறுத்த விதத்தில் மைய பாங்கு தனது விருப்பப்படி அவைகளை வாங்கவோ விற்கவோ செய்யும். ஆனால், அவைகளை வாங்கும் விஷயத்தில் பண அங்காடியினாலும் (Money Market) மைய பாங்கு வேண்டப் படலாம்.

கடன்கள் கடன் பெறுபவரைப் பொறுத்தேயிருக்கும். ஏற்றுக் கொள்ளத்தக்க ஈடுகட்டினால் மைய பாங்கு தன் வாடிக்கைக்காரர்

களுக்குக் கடன் கொடுக்கத் தயங்காது என்பது மைய பாங்கு முறையின் முதுமொழியாகும். இதனுல், மைய பாங்கிற்குத் தான் இவ்வளவு அளவுதான் கடன் கொடுக்கவேண்டுமென்று தீர்மானிக்கும் சக்தியில்லையென்று பொருளல்ல. கடன்களைக் குறைக்கவேண்டுமாயின் அது அதிக அளவு வட்டி வீதத்தை விதிப்பதன்மூலம் குறைத்துவிடக்கூடும் (அதாவது, அது பாங்கு வீதத்தை அதிகரிக்கக்கூடும்); கடன்களை அதிகரிக்க விழைந்தால், அது பாங்கு வீதத்தைக் குறைக்கும். குறைந்த வட்டி வீதத்திலுல் ஏற்படுவதைவிட அதிக வட்டி வீதத்திலுல் ஏற்படும் விளைவு உடனடியானதாக இருக்கும். மைய பாங்கின் வாடிக்கைக்காரர்கள் 6 சதவீதம் வட்டி கொடுப்பதைவிடச் சீக்கிரம் கடனிலிருந்து தப்பித்துக்கொள்வதே மேல் என்று நினைப்பார்கள். கடன்பெறும் பணத்தால் எந்தவிதமான இலாபகரமான பயனும் இல்லையென்ருல் குறைந்த வட்டி வீதமும் கடனை வாங்குவதற்கு ஊக்குவிக்காது.

தன் சொத்துகளையும், அங்கத்தினர் பாங்குகளின் காப்பு ரொக்கத்தின் அளவையும், பொதுமக்களுக்குரிய பண அளிப்பையும் தீர்மானிக்கும் பெரும் அதிகாரங்கள் மைய பாங்கினிடம் இருக்கின்றன. அதன் முதலீடுகளைத் தீர்மானித்தலும் அதன் கையிலேதான் இருக்கிறது. பாங்கு வீதத்தால் அதனுடைய கடன்கள் வெகுவாகப் பாதிக்கப்படுகின்றன. கீழ்க்கண்ட இரண்டு அதிகாரங்களும், மைய பாங்கிற்கு இரண்டு ஆயுதங்களாக இருக்கின்றன: வெளி அங்காடி நடவடிக்கைகள் (Open Market Operations) என்றழைக்கப்படுகிற கடன் பத்திரங்களை வாங்கவோ விற்கவோ செய்யுமதிகாரம்; பாங்குவீதக் கைக்கோள் என்றழைக்கப்படுகிற தான் கொடுக்கும் கடன்களுக்கு விதிக்கும் அதிக அல்லது குறைந்த வட்டி வீதம்.

ஆனுல், இவ்வாயுதங்களைப் பயன்படுத்துவது முழுமையும் வரையறுக்கப்படாமலுமில்லை. மைய பாங்கு பொன் ரொக்கக் காப்பு வைத்துக்கொள்ளவேண்டுமென்ற நியதி இருக்கும் வரையில், தன் பொன்னிருப்பின்மீது கவனம் வைத்தேதான் செயலாற்றும். நாடு பொன் திட்டத்திலிருக்கும்போது இது முற்றிலும் உண்மையாக நடக்கும். பொன் திட்டத்தில் மைய பாங்கின் பல்வகை வேலைகளை 10ஆம் அத்தியாயத்தில் காண்போம். நாடு பொன் திட்டத்தில் இல்லாதபோது மைய பாங்கு தன் நோட்டுகளுக்குப் பதிலாகப் பொன் கொடுக்கக் கடமைப்பட்டதன்று. ஆனுல், அது வெளியிடும் நோட்டுகளுக்கு ஒருவீத அளவு பொன்னை வைத்துக்கொள்ளும்படி சட்டத்திலுல் கட்டாயப்படுத்தப்படும். எனவே, ஐக்கிய ரிசர்வு பாங்குகளின் நோட்டுகள் பொன்

அல்லது பொன் சான்றிதழ்கள் (Gold Certificates) இருப்பில் 2½ மடங்கிற்குமேல் அதிகமாக இருக்கக்கூடாது. போர்க் கொள் கையின் காரணமாக, அதிலுள்ள பொன் யாவும் காலியாக்கப் பட்டிருந்தாலும் (உலகிலுள்ள பல மைய பாங்குகளிலுள்ள நிலை யைப்போல்) அதனுடைய நோட்டுகளின் அளவை ஒரு குறிப் பிட்ட அளவிற்கும்கீழே வைத்திருக்கவேண்டும் என்று சட்டத் தினல் கட்டாயப்படுத்தப்படும். ஆகையினல், மைய பாங்கு நாட்டின் கடன் அமைப்பை விரிவாக்குவதில் மிகவும் எச்சரிக்கை யுடன் இருக்கவேண்டும். பொதுமக்கள் பாங்குகளில் நிறையப் பணம் வைத்திருந்தால், ஏனையவற்றின் நிலை சமமாக இருக்கும் போது நிறைய நோட்டுகளை பாங்கினின்றும் பெறுவார்களாத லால், மைய பாங்கு சட்டத்தையும் மீருதவண்ணம் அதிக அளவு நோட்டுகளை அளிக்கத் தயாராக இருக்கவேண்டும். இது பின்னல் வரும் அத்தியாயங்களில் விளக்கப்படவேண்டிய பொருளாகும். எனினும், இது மைய பாங்கின் செயல்களைக் கட்டுப் படுத்துகிறதென்பதைமட்டும் தற்போது அறிந்து கொள்ளுதல் போதுமானது.

சமாதான காலத்திலும், அரசாங்கத்தின் நிதி நடவடிக்கைகள் (Financial Operations) மைய பாங்கின் கைக்கோள்களை (policies) பாதிக்கக்கூடும். போர்க்காலத்தில் அவைகளே ஆதிக்கம் செலுத்தும். அரசாங்கத்தின் பாங்கு நடவடிக்கைகள் மைய பாங்கினிடமே உள்ளன. வரிகள் வசூல் செய்யப்படும்போது நாட்டு மக்களில் பெரும்பான்மையோர் அங்கத்தினர் பாங்குகளில் உள்ள தங்கள் கணக்கிலிருந்து அரசாங்கத்தின் பெயருக்குச் செக்கு எழுதி வரி செலுத்துகின்றனர். இச் செக்குகளைப் பெறுவதானது, மைய பாங்கிலுள்ள அரசாங்கத்தின் வைப்புகளை அதிகரிக்கச் செய்து அங்கத்தினர் பாங்குகளின் வைப்புகளை குறையச் செய் கின்றது. ஆனல், அங்கத்தினர் பாங்குகளின் வைப்புகளே பணம் 'சிருட்டித்தலுக்கான' ரொக்க அடிப்படையாக உள்ளன. அர சாங்கத்தின் வைப்புகள் அவ்வாறிருப்பதில்லை. பொதுமக்களிட மிருந்து அரசாங்கத்திற்குப் பணத்தைத் திருப்பிவிடும் எதுவும் பண அளிப்பைச் சுருங்கச்செய்யும். இதற்கு எதிரிடையாக, அரசாங்க சிவில் ஊழியர்களுக்கு (civil servants) சம்பளம் கொடுக்கவோ, அல்லது நாட்டுக் கடனுக்கு (National Debt) வட்டி கொடுப்ப தற்கோ தன்னுடைய கணக்கில் செக்குகளை வழங்கும்போது, அவற்றைப் பெறுவோர் அவைகளை அங்கத்தினர் பாங்குகளுக்குக் கொடுத்துப் பணம் பெறுவர். அங்கத்தினர் பாங்குகள் இச் செக்கு களை மாற்ற அரசாங்கத்தினிடம் கொடுக்கும். இதனல் மைய பாங்கில் அங்கத்தினர் பாங்குகளின் வைப்புகள் அதிகரிக்கும்.

இங்கிலாந்தில் இது முக்கியமான நிகழ்ச்சியன்று. ஏனெனில், அரசாங்கம் ஒரு சமயத்தில் மிக அதிகமான அளவு இருப்பு வைத்துக் கொள்வதும், மற்றொரு சமயத்தில் அவ்விருப்பைக் காலிசெய்து விடுவதுமில்லை. பிரிட்டிஷ் கருவூலம் (British Treasury) வெளியில் செலுத்தும் தொகையைவிடத் தான் பெறுகின்ற தொகை அதிகமாக இருப்பின், உபரித் தொகையைத் (surplus amount) தன்னுடைய கடன்களைத் திருப்பி அடைக்கப் பயன்படுத்தும். தன்னுடைய வருமானத்தைவிடச் செலவு அதிகமாக இருக்கும்போது தாற்காலிகமாகக் கடன் வாங்குவதன்மூலம் தன் ரொக்க இருப்பை ஒரு நிலையானதாக வைத்துக்கொள்ளும். எனினும், ஐக்கிய அமெரிக்காபோன்ற சில நாடுகளில் அரசாங்கத்தின் ரொக்க இருப்பில் மிக அதிக அளவு ஏற்றமும் இறக்கமும் இருந்துகொண்டே இருக்கும். கருவூலத்தின் நடவடிக்கைகளின் விளைவுகளை மட்டுப்படுத்தும் அதிகாரம் மைய பாங்கினிடம் எப்போதும் உள்ளது. கருவூலம் அதிக அளவு தன் இருப்பை அதிகரித்துக்கொண்டு அதன் மூலம் அங்கத்தினர் பாங்குகளின் ரொக்கத்தைக் கட்டுப்படுத்துமாயின், மைய பாங்கு அச்சமயத்தில் கடன் பத்திரங்களை வாங்க ஆரம்பிக்கும், அல்லது பாங்கு வீதத்தைக் குறைக்கும். கருவூலம் தனது இருப்பைக் குறைத்துக்கொள்ளும்போது, மைய பாங்கு கடன் பத்திரங்களை விற்கும் அல்லது பாங்கு வீதத்தை (bank rate) அதிகரிக்கும்.

நாட்டிலுள்ள பணஅளவை நிர்ணயிக்கும் மைய பாங்கின் அதிகாரத்திற்கும் சில வரையறைகள் உண்டு. ஆனால், அவ் வரையறைகள் (limitations) பரந்தனவாயும், வளைந்துகொடுக்கக் கூடியனவாயும் (elastic) உள்ளன. சாதாரண சந்தர்ப்பங்களில் மைய பாங்கு, அங்கத்தினர் பாங்குகளின் காப்பு ரொக்கத்தின் அளவைப் பூரணமாக நிர்ணயிக்கிறது. அங்கத்தினர் பாங்குகளிடமுள்ள பொதுமக்கள் வைப்புகளின் அளவை ஓரளவிற்கு முழுமையும் நிர்ணயிக்கிறது. நவீனகாலத்து நாட்டில் பண அளவைத் தன்மைகளைப் (quantitative aspects) பொறுத்தவற்றில் மைய பாங்கின் அதிகாரம் அதிக அளவில்தான் இருக்கிறது. 'எது நாட்டிலுள்ள பணஅளவை நிர்ணயிக்கிறது?' என்னும் கேள்விக்கு 'பரந்த வரையறைகளுக்குட்பட்டுத் தன்னிச்சையான முடிவைப் பயன்படுத்தும் மைய பாங்கின் கைக்கோள்' என்பதே விடையாகும். இது மிகவும் சமூக முக்கியத்துவம் வாய்ந்த ஓர் அதிகாரமாகும். மேலும், இவ்வதிகாரம் போட்டியின்றியும் அதிகார எண்ணங்கொண்டும் நிறைவேற்றப்படுகிறது. தனக்குரிய துறையில் மைய பாங்கர் ஒரு சர்வாதிகாரியாவார். அவருடைய பேரரசு எது வரையில் பரவியுள்ளதென்பதை அடுத்து வரும் அத்தியாயங்கள் தாம் தீர்மானிக்க வேண்டும்.

## மைய பாங்கின் வளர்ச்சி

மைய பாங்கென்பது கடந்த சில பத்தாண்டுகளில் ஏற்பட்ட வளர்ச்சியேயாகும். தற்செயலாக அது முதன்முதல் இங்கிலாந்தில் தான் ஆரம்பிக்கப்பட்டது. ஏனெனில், இங்கிலாந்து பாங்கைத் தவிர்த்த ஏனைய பாங்குகள் தங்களது நிலுவைகளைத் தீர்த்துக் கொள்வதற்கு இங்கிலாந்து பாங்கு செக்குகளைப் பயன்படுத்திக் கொண்டமையால், அவைகள் இங்கிலாந்து பாங்கிலுள்ள தங்கள் நிலுவைகளை ரொக்கமாகவே கருதின. இம்முறை மிகவும் ஆரம்ப நிலையில்தான் இயங்கியது. 1844ஆம் ஆண்டின் பாங்குச் சட்டம் இங்கிலாந்து பாங்குமுறையைச் சட்டபூர்வமாக அமைப்பதற்கு முன்னரே, இங்கிலாந்து பாங்கின் இயக்குநர்களுக்கு பாங்கு வீத ஏற்றத்தாலும் இறக்கத்தாலும் ஏற்படும் விளைவுகள் தெளிவற்ற முறையில் தெரிந்தே இருந்தது. ஆனால், மைய பாங்கின் கடன் நிருவாகக் கட்டுப்பாடுகள் (credit control), 1873ஆம் ஆண்டில் வால்டர் பேகட் (Walter Bagehot) எழுதிய லொம்பார்டு தெரு (Lombard Street) என்னும் நூல் வெளியாகும்வரையிலும் கண்டு பிடிக்கப்படாமலும், கடைப்பிடிக்கப்படாமலுமிருந்தன. இதற்குப் பிறகும்—அதாவது 1914-18-ல் ஏற்பட்ட போருக்கு முன்பும்—பாங்குக் கோட்பாடுகள் எதுவுமின்றி அனுபவ வாயிலாகவே இயங்கிக்கொண்டிருந்ததுமன்னியில் ஒரு திடமான கொள்கையைக் கொண்டுவர எவ்வித முயற்சியுமில்லாமலிருந்தது.

ஃபிரான்சும் ஜெர்மனியும் பத்தொன்பதாம் நூற்றுண்டு முழுதும் அல்லது பெரும்பகுதியிலும் மைய பாங்குகளைப் பெற்றிருந்தன. இந் நாடுகளுக்கு லண்டன் பண அங்காடியைப்போல் புரந்த நெகிழ்வுடைய பண அங்காடிகளில்லாததாலும், அவைகளின் மக்கள் பிரிட்டிஷ் மக்களைப்போல் பெருமளவு செக்குப் பழக்கம் (cheque habit) இல்லாததாலும், ஃபிரான்சு பாங்கும் (Bank of France)ரிச் பாங்கும்(Reichs Bank)இங்கிலாந்துபாங்கைப் போல் அங்கத்தினர் பாங்குகளிடமும் அரசாங்கத்தினிடமுமே தங்களது நடவடிக்கைளை வைத்துக்கொள்ளாமல், நாடு முழுவதும் மற்ற பாங்குகளுடன் தாராளமாகப் போட்டி கொண்டிருந்ததாலும், ஆங்கிலக் கடன்முறையைப்போன்ற (english credit systems) ஓர் அறிவுக்கூர்மையான நுண்ணிய முறையை நிருவாகத்திற்குக் கொண்டுவர இயலவில்லை. ஐரோப்பாவின் வணிக நாடுகளான மற்ற நாடுகளுக்கும்—ஹாலந்து, ஸ்வீடன், டென்மார்க் போன்றவை—சில பத்தாண்டுகளாக அதிக அல்லது குறைந்த அளவில் மைய பாங்குகளைப் பெற்றுள்ளன.

ஐக்கிய அமெரிக்காவில் 1930-க்குப் பிறகு பத்தாண்டுகளில் ஏற்பட்ட இரண்டாவது பாங்கு முறிவுக்குப் பிறகு மைய பாங்கு என்று எதுவுமிருக்கவில்லை. 1907ஆம் ஆண்டு ஏற்பட்ட கடன் நெருக்கடி—பாங்குகள் தங்கள் பொறுப்புகளுக்கு (liabilities) ரொக்கம் கொடுக்க இயலாது 'தீர்வகச் சான்றிதழ்கள்' என்ற சிறப்புச்சட்டபூர்வ நெருக்கடிச் செலாவணி (extra legal emergency currency)யைக் கொடுக்கவேண்டிய நிலையிலிருந்தபோது, நல்லவையும் கெட்டவையும் வேறுபட்டவையுமான ஆயிரமாயிரம் இணைப்பற்ற பாங்குகளில் வரும் கேடுகளைத் தெளிவாக எடுத்துக் காட்டியது. பெரிய பாங்குகளைச் சிறிய பாங்குகள் நெருக்கடி நேரத்தில் உதவி கோரியிருக்கலாம்; ஆனால், பெரிய பாங்குகளும் பீதியினால் (panic) பாதிக்கப்படவே, தாற்காலிகமாகக் கொஞ்சம் அதிக அளவு ரொக்கத்தைப் பெறச் சிறிய பாங்குகளுக்கு யாதொரு துணையும் இல்லாமற்போயிற்று. பல ஆண்டுகள் ஆய்வின் விளைவாக, 1913-ல் ஐக்கிய ரிசர்வு சட்டம் (Federal Reserve Act) ஏற்படுத்தப்பட்டது. இச் சட்டத்தால் கொண்டுவரப்பட்ட முறை இங்கிலாந்து பாங்கு அமைப்பு முறையின் கோட்பாடுகளைப் பின்பற்றியிருந்தது. அதாவது, அங்கத்தினர் பாங்குகள் தங்கள் வைப்புகளின் மொத்தத்தில் ஒரு குறிப்பிட்ட வீதம் காப்பு ரொக்கத்தை ஐக்கிய ரிசர்வு பாங்குகளில் இருப்பாக வைத்துக் கொள்ள வேண்டும். ரிசர்வு பாங்குகள் தங்கள் பாங்கு வீதத்தை அடிக்கடி மாற்றுவதன்மூலமும் (அவைகள் அங்கத்தினர் பாங்குகளுக்கு மறுகழிவு செய்யும் அல்லது கடன் கொடுக்கும் வீதம்) வெளி அங்காடியில் கடன் பத்திரங்களை வாங்குவது அல்லது விற்பதன்மூலமும் இந்தக் காப்பு ரொக்க இருப்புகளின் அளவைத் தீர்மானிக்கின்றன. இந்தச் சட்டத்தில் இன்னும் பல சுவைமிக்க புதிய அம்சங்கள் உண்டு. அமெரிக்கப் பொதுவாழ்வின் ஐக்கிய உணர்ச்சிகளுக்கொப்ப இச்சட்டம் நியூயார்க்கில் (New York) மட்டும் ஒரு மைய பாங்கை ஏற்படுத்தியதுடன் நின்றுவிடவில்லை; நாடுமுழுதும் பன்னிரண்டு ஐக்கிய ரிசர்வு பாங்குகளை நிறுவியது. இப்பாங்குகள் ஒருங்கு இணைந்த தன்மை வாய்ந்தன. அவைகள் வாஷிங்டனிலுள்ள ஐக்கிய ரிசர்வு போர்டின் (Federal Reserve Board) அதிகாரத்திற்குட்பட்டிருந்தன. எனினும், சென்ற கால்நூற்றாண்டில் நடந்த இம்முறையின் வரலாறு இதன் சிறப்பைக் கூறுவதாக இல்லை. ஐக்கிய ரிசர்வுமுறை முழுதும் ஒரே நிலையமாக அமைவதற்கான வழிவகைகள் செய்யப்பட்டுக்கொண்டேயிருந்தன. மற்ற ஐக்கிய ரிசர்வு பாங்குகளுடைய தனிப்பட்ட சுதந்திரத்தின் அளவு மிகக் குறைந்த எல்லைக்குட்படுத்தப்பட்டது. இம்முறையில் அதிக அளவு கையாளப்பட்ட, கடன் பத்திரங்களை வாங்குதலும் விற்

றலும், தொலைவிலுள்ளதும் மிகப் பெரியதுமான நியூயார்க்கு அங்காடியில்தான் விற்கப்படவேண்டுமென்று கட்டாயப்படுத்தப் பட்டது. மேலும், ஐக்கிய ரிசர்வு போர்டே பாங்குகளின் கைக்கோள்களைத் தானே உருவாக்கி அவற்றை ரிசர்வு பாங்குகள் அமல் நடத்தும்படி செய்ய ஆரம்பித்தது. ஒரே நாட்டில் பல கடன் கைக்கோள்கள் இருப்பதும் சாத்தியமற்றிருந்தது. மேலும், அமெரிக்காவில் சுங்கவரிகளில்லாமலிருந்ததாலும், ஒரே செலாவணி இருந்தமையாலும் பல்வேறு நிலப்பகுதிகள் (regions) ஒன்றுக்கொன்று சார்புள்ளனவாகவே இருந்தன. ஐக்கிய ரிசர்வு பாங்கு முறைச் சோதனை இவ்வாறு நடத்தப்பட்டபோதிலும், அல்லது அதன் காரணமாகவே, நாம் ஒரே நாணயம், ஒரே மைய பாங்குக் கோட்பாட்டைப்பற்றி ஆராய்வோம்.

1914-18-ல் ஏற்பட்ட போருக்குப்பிறகு இக் கைக்கோள் மாறி, ஒவ்வொரு மைய பாங்கிற்கும் ஒருவகைச் செலாவணி என்று ஆயிற்று. போர்க்காலத்தில் ஐரோப்பாவின் பல்வேறு நாடுகளின் செலாவணிகளுடனிருந்த தொடர்பு அறுந்துபோயிற்று. விலைவாசிகளின் உயர்வும், பரிவர்த்தனைகளில் ஏற்பட்ட மாறுதல்கள் பாங்கு முறையைக் குழப்பத்திற்குள்ளாக்கின. இதனுடன் சில புதிய நாடுகள், புதிய செலாவணிக் கொள்கையுடன் புதிய செலாவணியையும் தோற்றுவித்தன. 1920ஆம் ஆண்டும் 1922ஆம் ஆண்டும் கூடிய பிரஸ்ஸல்ஸ் (Brussels) மாநாடும், ஜெனோவா (Genoa) மாநாடும் ஒவ்வொரு நாடும் ஒரு மைய பாங்கை நிறுவி, அதன் கையில் பாங்கு நாணய நடவடிக்கைகளை ஒப்படைத்தால், இக் குழப்பங்களைத் தவிர்த்துச் சீரான நிலைமையை உண்டுபண்ணலாம் என்று அறிவித்தன. இம் மைய பாங்குகளுக்குள் ஏற்படும் ஒற்றுமை ஒருமித்த ஒரு கைக்கோளை ஏற்படுத்தும். பன்னாட்டுச் சங்கத்தின் (League of Nations) வல்லுநர்களின் தலைமையிலும், இங்கிலாந்து பாங்கின் தலைமையிலும் இம்முறை, போருக்குப் பிந்திய பத்தாண்டுகளில் கொஞ்சங்கொஞ்சமாகப் புகுத்தப்பட்டு, மிகச் சிறிய நாடுகளான எஸ்டோனியா (Estonia), டான்சிக் (Danzig), அல்பேனியா (Albania) ஆகியவற்றிலும் மைய பாங்குகள் ஏற்பட்டன. இம்முறை அமெரிக்காவினால் ஊக்குவிக்கப்பட்டுத் தென்அமெரிக்க நாடுகளுக்கும் பரவியது. 1939ஆம் ஆண்டு போர் ஆரம்பமாகும் சமயத்தில் அநேகமாக எல்லா நாடுகளிலும் மைய பாங்கு ஏற்படுத்தப்பட்டோ அல்லது கொண்டுவரத் தீர்மானிக்கப்பட்டோ இருந்தது.

எல்லா நாடுகளிலும் மைய பாங்கிற்கு அதிகாரமும், பாங்கு முறையைக் கட்டுப்படுத்தும் அதிகாரமும் ஒரேவிதமாக இருக்குமென்று எண்ணுதல் தவறு. ஆங்கிலம் பேசப்படும் நாடுகளில்

உள்ளதுபோல் பாங்குமுறை, மைய பாங்குகளையுடைய பல நாடு களிலில்லை. இந்நாடுகளில் முன் ஓர் அத்தியாயத்தில் கூறியுள்ளதுபோல் பாங்குகள் இன்னும் லேவாதேவிக்காரர் நிலையில் தாம் (money-lender stage) உள்ளன. அவைகளின் வேலைகள் நாட்டின் சேமிப்பைச் சேகரிப்பதும், அதனைப் பிறருக்குக் கடனாக வழங்குதலுமாகவே உள்ளன. பணபேரங்கள் பெரும்பகுதியும் இப் பாங்குகளில் செக்குகள்மூலமல்லாது நோட்டுகள் வாயிலாகவே நடக்கின்றன. இச் சூழ்நிலைகளில் மைய பாங்கின் கட்டுப்பாட்டின் கீழ் எந்தக் கடனமைப்பும் இல்லாது, அதனுடைய வேலைகள் நோட்டுரிமைப் பாங்கின்(Bank of Issue) வேலைகளாகவே இருந்து வருகின்றன.

முன்னேற்றமுள்ள நாடுகளிலும் மைய பாங்கின் அதிகாரங்களில் முக்கியமான வேறுபாடுகள் காணப்படுகின்றன. உதாரணமாக, இங்கிலாந்து பாங்கு ஐக்கிய ரிசர்வு முறையைவிட முழுயதேச்சாதிகாரம் வாய்ந்ததாகக் காணப்படுகிறது. ஐக்கிய ரிசர்வு பாங்குகள் ஒருவிதத்தில் அங்கத்தினர் பாங்குகளுக்குச் சொந்தமானதாகையால், அவைகள் அங்கத்தினர் பாங்குகளின்மீது வன்மையான நெஞ்சத்துடன் நடந்துகொள்வதியலாது. மேலும், இங்கிலாந்து பாங்கு அங்கத்தினர் பாங்குகளுக்கு நேரடியாகக் கடன் கொடுப்பதில்லை. அது கடன் பத்திரங்களை விற்பதன் மூலமோ (தன் முயற்சியினாலேயே எப்போதும் அது விற்கக்கூடும்) அல்லது மாற்று உண்டியல்களை அடைமானமாகப் பெற்றுக் கொண்டு பண அங்காடிக்குக் கடன்கொடுப்பதன்மூலமோ, பண அங்காடிக்கு நிதியளிக்கிறது. அங்காடியில் அமலிலிருக்கும் மாற்று உண்டியல்களின் கழிவுவீதத்தைவிட பாங்கு வீதம் எப்போதுமே அதிகமாக இருப்பதால், இங்கிலாந்து பாங்கில் கடன் பெறுவோர் கடனைத் திருப்பி அடைக்கும்வரை தொடர்ந்து நஷ்டத்தையே பெறுவர். மிகவும் சீக்கிரத்தில் கடனை அடைப்பதற்கும் இது வழிவகை செய்கிறது. ஐக்கிய அமெரிக்காவில் ஐக்கிய ரிசர்வு பாங்குகள் அங்கத்தினர் பாங்குகளுக்கு நேரடியாகக் கடன்கொடுக்கின்றன. குறிப்பிட்ட சொத்துகளின் அடைமானத்திலிருந்துவரும் வருமானம் பாங்கு வீதத்தைவிடக் குறைவாக இருந்தால், இதர செலவுகளையும் வட்டிவீதத்துடன் சேர்த்துத் தாங்கள் ரிசர்வு பாங்குகளிடம் கடன்வாங்கிய வட்டிவீதத்தைவிட அதிகமாக இருக்கும்படி அங்கத்தினர் பாங்குகள் வட்டிவீதம் பெற அனுமதிக்கப்பட்டன. அங்கத்தினர் பாங்குகள் ரிசர்வு பாங்குகளினின்றும் கடன்வாங்காத சமயங்களில் இந்தப் பரிகாரம் தனிப்பட்ட பாங்கிற்குக் கிடைக்காது. ஏனெனில், அங்கத்தினர் பாங்குகளும் கடன்கொடுப்பதில் போட்டியிடும்போது, தனிப்பட்ட பாங்கு

வட்டிவீதத்தைத் தன் வாடிக்கைக்காரர்களுக்கு உயர்த்த முடியாது. இலாபம் கருதி அங்கத்தினர் பாங்குகள் கடன் பெறும் போது, ரிசர்வு பாங்குகளின் அதிகாரம் (அதாவது, ரிசர்வு பாங்கு களின் அதிகாரம் மிகவும் தேவைப்படும் இச்சமயத்தில்) குறைவு படுகிறது.

ஒவ்வொரு நாட்டிலும் மைய பாங்கு தற்போது முக்கியமான பணி ஒன்றைச் செய்துவருகிறது. மைய பாங்கு இறுதிக் கட னீவோஞக (lender of the last resort) இருந்துவருகிறது. எந்தப் பணமுறையும் சில சமயங்களில் பொதுமக்கள் திடீரெனப் பீதி யடைந்து ரொக்கம் கோரும் நிலையால் மிகவும் பாதிக்கப்படுகிறது. பொதுமக்கள் தங்கள் முதலீடுகள் பயனற்றுப்போகுமோ என்று எண்ணும்போதும், அல்லது அவர்களுடைய பாங்கில் வைக்கப் பட்ட வைப்புகள் பாங்குகள் மூட நேர்ந்தால் திரும்ப அடையப் பெருமற்போகக்கூடும் என்று எண்ணும்போதும் பீதியடையக் கூடும். அல்லது பல காரணங்களுள், தங்கள் செல்வத்தை ரொக்க வடிவில் எப்போதும் வைத்துக்கொள்ள வேண்டுமென்று விரும்புவதும் ஒன்ருக இருக்கக்கூடும். இந்த ரொக்க விருப்பத் திற்குப் (liquidity preference) பின்தங்கிய நாடுகளைவிட முன்னேறி யுள்ள நாடுகளே அதிகம் இலக்காகின்றன. ஆனுல், எந்த நாடும் இதிலிருந்து தப்புவதில்லை. எல்லாப் பொறுப்புகளுக்கும் ரொக்கம் கொடுக்கக்கூடிய நிலையில் இவ்வுலகத்தில் எந்த நாடும் இருக்காது. பொதுமக்களின் நம்பிக்கையைப் பாதிக்கும் அளவில் பெரிய அதிர்ச்சியுடன் கடன் முறை முறிந்துபோகாதவரையில், அவசர நிலைக்குத் தாற்காலிகமாக ரொக்க அளிப்பை அதிகப்படுத்தச் சில வழிகள் இருந்தேயாகவேண்டும். இவ்வழிகளை மைய பாங்கு கையாளக்கூடும். அங்கத்தினர் பாங்குகளின் வைப்புகளைத் தன் னுடைய புத்தகங்களில் அதிகமாகக் காட்டுவதன்மூலம் அதிகப் படுத்தக்கூடும். பொதுமக்களுக்கு அதிகமாக நோட்டுகள் தேவைப் படும்போது, அவைகளை அதிக அளவு அச்சிட்டுக் கடன் கொடுக்க வும் அதனுல் இயலும். பெரும்பான்மையான நாடுகளிலுள்ள சட் டங்கள் மைய பாங்கின் மொத்த நோட்டு வெளியீட்டைக் கட்டுப் படுத்தும்போது, சில சமயங்களில் தாற்காலிகமாக அதிக அளவு நோட்டுகளை வெளியிடுவதற்கும் அனுமதிக்கின்றன. இதுபோன்ற ச்மயங்களில், இங்கிலாந்தில் பாங்குச் சட்டம் (Bank Act) தாற்கா லிகமாக நிறுத்திவைக்கப்படுவது வழக்கம். அதாவது, அரசாங்கம் பாங்குச் சட்டத்தால் ஏற்பட்ட நோட்டு வெளியிடும் உரிமைக் கட்டுப்பாட்டினை இங்கிலாந்து பாங்கு மீறுவதற்கு அனுமதிக்கும். சட்டம் இதுபோன்று நெகிழ்ந்துகொடுப்பதற்கு ஏதாவது வழி வகைகள் அவசியம் இருந்தேயாகவேண்டும். ஏனெனில், அப்படி

யில்லாவிடில், வக்கற்ற நிலைகள் (bankruptcies) பெருவாரியாக ஏற்படும். இந்நிலை உண்மையான வக்கற்ற நிலையால் ஏற்படுவ தில்லை; சொத்துகளும் பொறுப்புகளும் சமமாக இல்லாததாலும் ஏற் படுவதில்லை. ஆனால், சட்டபூர்வப் பணம் திடீரென விரிவடையும். தேவைக்கேற்பத் தாற்காலிகமாக விரிவடையாமலிருப்பதே இத் தகைய நிலைக்குக் காரணமாகும். இந்த நிலை 1907ஆம் ஆண்டு ஏற்பட்ட அமெரிக்கப் பீதியினால் (American panic) ஏற்பட்டது. அப்போது செலாவணியின் அளிப்பை அதிகப்படுத்த இயலாததால் நியூயார்க்கு பாங்குகள் 'தீர்வகச் சான்றிதழ்களை' (Clearing House Certificates) வெளியிடும்படி நேரிட்டது. சட்டத்தினால் அவைகள் நோட்டுகளென அறிவிக்கப்படாவிட்டாலும், அவைகளும் நோட்டுகளே. இம்மாதிரியான தந்திரங்களைக் கையாள்வதைக் காட்டிலும் மைய பாங்கை 'இறுதிக் கடன்கொடுப்போனாக' (lender of the last resort) அமைத்துக்கொள்வது நலம். இவ்வமைப்பு மூலம் மைய பாங்கு பெறுமானமுடைய (solvent) கடன் வாங்கு பவர்களுக்கு ரொக்கத்தைக் கடன்கொடுத்து அதன்மூலம் பீதிகளைக் களைய இயலுகிறது.

நாம் தற்போது மைய பாங்கின் பணிகள் பலவற்றைப் பார்த் தோம். அது பாங்கர்களின் பாங்கு (Bankers' Bank); அரசாங்கத் தின் பாங்காகவுமிருக்கிறது.[1] காகிதப் பணத்தை வெளியிடும் நிலையமாகவும் மைய பாங்கு உள்ளது; இறுதிக்கடன்கொடுப்போனா கவுமுள்ளது. பின்னர்சொல்லப்பட்ட இரு பணிகளையும் செய்வதற்கு அது பாங்காகத்தான் இருக்கவேண்டுமென்ற அவசியமில்லை. ஏனெனில், அரசாங்கமே நோட்டுகளை வெளியிடும் தகுதி வாய்ந் தது. அவசர காலங்களில் பொதுமக்களுக்கும் நோட்டுகளைக் கடனாக வழங்குகிறது. பாங்குமுறையின் வளர்ச்சி ஒருபடி அதிகம் சென்று செக்குமுறை தோன்றும்போது, பொதுமக்களின் பெரும் பகுதிப் பணம் பாங்கு வைப்புகளாக வரும்போதுதான் பாங்கர் களின் பாங்கு (Bankers' Bank) அவசியமாகிறது. இச் சந்தர்ப்பங் களில்தான் பாங்கர்களின் பாங்கு தன் முழுத் தோற்றத்துடன் தலைகாட்ட ஆரம்பிக்கிறது.

அரசாங்கத்தைப்பற்றிக் குறிப்பிடும்போது, எவ்வளவு தூரம் மைய பாங்கு அரசாங்கத்தின் கையை எதிர்பார்க்காமல் சுதந்திர மாக இருக்க இயலும் அல்லது வேண்டும் என்னும் கேள்வி எழு கின்றது. மைய பாங்கை அரசியல் கருத்துகளின் கட்டாயத்தி லிருந்து விடுவிக்கவேண்டுமென்பதற்குப் பல காரணங்கள்

1 அமெரிக்கக் கருவூலம் (American Treasury) நிதிகளை இதர பாங்குகளில் வைப்புகளாக வைக்கின்றது. ஆனால், கருவூலத்தின் பெரும்பகுதி பாங்கு வணி கத்தை ஐக்கிய ரிசர்வு பாங்குகள் நடத்துகின்றன,

கூறலாம். 1914-18-ல் நடந்த போருக்குப் பிந்திய ஆண்டுகளில், அரசாங்கத்தின் ஆபத்து வாய்ந்த நிதிக்கொள்கைகளால் யதேச்சாதிகாரம் செய்யப்பட்ட மைய பாங்குகள் பல உண்டு. இதைப் பற்றி விவாதித்த பன்னாட்டு மாநாடுகள் மைய பாங்கின் சுதந்திரத்திற்கான ஒரு சித்தாந்தத்தையே (dogma) தயாரித்தன. மைய பாங்குகள் தனியார் உரிமைக்குப் பாடுபடவேண்டுமென்று சொல்லுமளவுக்கு அவைகள் இச் சித்தாந்தத்தைக் கடைப்பிடித்தன. இக் கருத்துகளுக்கு எதிர்விளைவாக மாருன கருத்துகளும் இருந்து வந்தன. மைய பாங்குகள் தனியார் உரிமையாவதென்ருல், செல்வமிக்க பாங்கர்களாலும் தொழிலதிபர்களாலும், அவர்கள் நன்மையை உத்தேசித்து, மைய பாங்கு நடத்தப்படும்; நாட்டின் நன்மை புறக்கணிக்கப்படும். 1945ஆம் ஆண்டு பதவிக்கு வந்த தொழிற் கட்சியினுல் அமைக்கப்பட்ட அரசாங்கம் செய்த முதல்வேலை, இங்கிலாந்து பாங்கில் தனிப்பட்ட அங்கத்தினர்களுடைய பங்குகளை முழுதும் வாங்கியதுதான். இந்த நடவடிக்கைக்கு எதிர்ப்பெதுவுமில்லாதிருந்தது. ஆனுல், மைய பாங்குகள் அரசாங்கத்திற்குச் சொந்தமாக இருக்கவேண்டுமா, அல்லது தனியார் உரிமையாக இருக்கவேண்டுமா என்னும் பிரச்சினை இன்னும் பல நாடுகளில் ஓர் அரசியல் வாத எதிர்வாதமாக இருப்பதால், அரசாங்கம் மைய பாங்கைச் சொந்தமாக்கிக்கொண்டாலும் இல்லாவிட்டாலும், மைய பாங்கின்மீது அரசாங்கத்திற்கு அதிகாரம் இருக்கவேண்டுமென்று கூறுவதே இங்குப் போதுமானது. மைய பாங்கு நிறைய அதிகாரங்களை உடையதாக இருப்பதால்தான் இவ்வாருன கருத்துக் கிளம்புகிறது. உண்மையில் அரசாங்கம் மைய பாங்கைச் சொந்தமாக்கிக்கொள்ளவேண்டுமென்கிற எண்ணம் தற்காலத்தில் நிலவி வருகிறது. ஆனுல், மைய பாங்கின் அதிகாரம் நியமிக்கப்பட்ட கவர்னர் அல்லது ஒரு சபையினரின் (Board) கையில் குறிப்பிட்ட ஆண்டுகளுக்கு அரசியல் அதிகாரத்திற்குட்படாவண்ணம் இருக்கவேண்டுமென்ற எண்ணமும் அதனுடன் நிலவிவருகிறது. மேற்கண்ட வாக்குவாதம் ஓரளவிற்குச் செயற்கையானதே. தற்காலத்தில் நாடு முழுதையும் பாதிக்கும் பாங்குக் கைக்கோளின் முக்கியத்துவம் தற்காலத்தில் நன்கு உணரப்படுகிறது. பொறுப்புள்ள எந்த அரசாங்கமும், அது எந்த அரசியல் கட்சியைச் சார்ந்ததானுலும், இவ்வளவு பெரிய அரசுரிமை (sovereignty) அதிகாரங்களை ஒரு தன்னுட்சி உரிமையுள்ள (autonomous) ஒரு சபைக்கு அளித்துவிட விரும்பாது. கண்டிப்பாக அரசாங்கத்தின் மேலான ஆளுகை இருக்கவேண்டும். மேலான அதிகார நிலையிலிருந்து மைய பாங்கின் சுதந்திரமே பிறந்த அவ்வப்போதைய தலையீடு, ஓர் அவசர நிமித்தம் ஏற்பட்டதேயொழிய ஒரு தத்துவமாக விளங்கவில்லை.

## பணமும் நெருங்கிய பணமும் (Money and Near-Money): பண அங்காடி (Money Market)

ஏற்கெனவே நாம் பாங்குமுறை வேலை அமைப்பை விவரிக்கும் போது, 'பண அங்காடியை' உண்டுபண்ணும் பாங்குகளுடன் சேர்ந்த சில நிலையங்களைப்பற்றிக் கூறவேண்டியிருந்தது. இம் முறை முழுதிலுமுள்ள வேலைகளில் அவை முக்கியப் பங்கு பெறுவதால், அவைகள் தற்போது கிரமமாக விளக்கப்படவேண்டும்.

முதலாம் அத்தியாயத்தில் மாற்று மத்திமமாக ஏற்றுக்கொள்ளப் படும் எந்தப் பொருளும் பணமென்று விளக்கப்பட்டது. இவ்விளக் கத்தினுல் எது பணம், எது பணமாக இல்லாதது என்று தெளி வான எல்லைக்கோடு வரையமுடியாது. சட்டச் செலுத்து செலாவணி (legal tender currency) நிச்சயமாகப் பணமே. பொதுவாக எல்லோராலும் ஏற்கப்படுவதால், பாங்கு வைப்புகளும் சாதாரண மாகப் பணமாகவே கருதப்படுகின்றன. ஆனுல், பாங்குகளின் மீதுள்ள இந்த நம்பிக்கை ஆட்டங்கண்டால் (பத்தொன்பதாவது நூற்ருண்டின் ஆரம்பத்தில் ஐக்கிய அமெரிக்காவில் பாங்குகள் தோல்வியுற்றபோது இருந்ததைப் போல்), பாங்கு வைப்புகள் ஏற்றுக்கொள்ளப்படுதல் நின்றுவிடும். எச்சரிக்கையாக உள்ள ஒருவரிடம், அவருக்குத் தெரியாத ஒரு பாங்கின் செக்கைக் (cheque) கொடுத்தால், அதற்குப் பதில் செலாவணியையே அவர் கேட்கலாம். இத்தகைய சந்தர்ப்பங்களில் பாங்கு வைப்புகள் பணத்திற்கு மிக நெருங்கியவொன்ருகக் காணப்படுகின்றன. ஆனுல்,பணத்தின் விளக்கத்திற்குட்பட்டவைகளாக இவை இல்லை. அவைகள் 'நெருங்கிய பணம்' என்றழைக்கப்படலாம். நெருங்கிய பணத்திற்கு இன்னுமோர் உதாரணம், நாம் ஏற்கெனவே பார்த்த மாற்று உண்டியலாகும்(Bill of Exchange).மாற்று உண்டியலாவது, பிரிட்டிஷ் அரசாங்கத்தின் (அவ்வாறு இருப்பின், அது கருவூல உண்டியலாகும்) அல்லது லண்டன் நகர பிரபல நிறுவனத்தின் குறிப்பிட்ட நாளையில் குறிப்பிட்ட தொகையைக் கொடுப்பதற்கான வாக்குறுதியைத் தாங்கிய பத்திரமாகும். வாக்குறுதி அளிக்கப் படும் காலம் மூன்று மாதங்களுக்கு மேலிராது. தவணைத் தேதி யன்று உண்டியல் பணமாக இருக்கும். ஆனுல், அதற்கு முன்னர் அது பணமல்ல. உண்டியலை வைத்திருப்பவர் தவணைத் தேதிக்கு முன்னர் அதனைப் பணமாக்க நினைத்தால், அவர் ஒரு சிறிதளவு கழிவுத்தொகையைக் (discount) கொடுத்துப் பணம் பெறலாம்— அதாவது, உண்டியலில் குறிப்பிட்டுள்ள பணத்தைவிடச் சற்றுக் குறைவாக அவர் பெறுவார்.

இவ்வத்தியாயத்தின் ஆரம்பத்தில் அங்கத்தினர் பாங்கின் இருப்புநிலைக் குறிப்பின் சொத்துகள் பகுதியைப்பற்றி நாம் ஆராயும்போது, ரொக்க நிலைக்கும் வருமானத்திற்குமுள்ள(income) வேறுபாடு ஒன்றைக் குறிப்பிட்டோம். சில வகைச் சொத்துகள் மிகவும் ரொக்கநிலை வாய்ந்தவை—அதாவது, அவைகளைச் சுலபத்திலும் விரைவாகவும் பணமாக்கமுடியும். ஆனால், அவை குறைந்த வருமானத்தை அளிக்கக்கூடியவை. மற்ற வகைச் சொத்துகள் ரொக்கநிலை குறைந்தும், ஆனால் வருவாய் அதிகமாக அளிக்கக் கூடியனவாயும் இருக்கின்றன. பணத்திற்குச் சமீபமாக வரவர, அந்த நெருங்கிய பணத்தின் வருமானம் குறைந்துகொண்டே செல்லும். பணத்தைவிட்டு அப்பால் செல்லச்செல்ல, வருமானம் ஈனும் திறனும் அதிகமாகிக்கொண்டே செல்லும். இவ்வாறு பல்திறப்பட்ட நெருங்கிய பணத்தில் பேரம் நிகழ்த்தும் பல்வகை நிறுவனங்களுக்கும் நிலையங்களுக்கும் பொதுவாகப் 'பண அங்காடி' (Money Market) என்று பெயர்.

இவைகளை ஒன்றன்பின் ஒன்றாக விளக்குவதற்கு முன்னர், பணஅங்காடி முழுதும்பற்றிய பொதுவான இரு கருத்துகளைக் கூறலாம். பாங்குகள் பிழைப்பு நடத்துவதே தாங்கள் பொறுப்புகளுக்குச் செலுத்தும் வட்டிவீதத்திற்கும் (சராசரியில்), சொத்துகளினால் பெறும் வட்டிவீதத்திற்கும் (சராசரியில்) உள்ள வேறுபாட்டினால்தான். இந்த வேறுபாடு உள்ளதற்குக் காரணம், பாங்குகளின் பொறுப்புகள் (அவைகளின் வைப்புகள்) பணமாக உள்ளன (அல்லது பணமாக இல்லாவிட்டாலும், அவைகள் எல்லா வகை நெருங்கிய பணத்தைக் காட்டிலும் மிகவும் நெருக்கமானவை) என்பதே. அவைகளின் சொத்துகளில் சில பணமாகவும், சிலநெருங்கிய பணமாகவும், ரொக்கநிலை இல்லாமலிருப்பதால் சில பணமாக எண்ணத்தகாத வகையிலும் இருக்கும். வேறுவிதமாகச் சொல்லப்போனால், பாங்குகள் குறுங்காலத்திற்குக் கடன் வாங்கி, நெடுங்காலத்திற்குக் கடன் கொடுக்கின்றன. பாங்குகள் தங்கள் சொத்துகளைத் திரும்பப் பெறும் கால அளவைவிடத் தங்கள் பொறுப்புகளின் தவணைத் தேதி குறைந்த காலமாக இருப்பதையே முன் வாக்கியம் விளக்குகிறது. இதில் ஆபத்து இருக்கவே செய்கிறது. ஆனால், இவ்வாபத்தைத் திறமையும் அனுபவமும் வாய்ந்த பாங்கரால் சமாளிக்கமுடிகிறது. பண அங்காடியின் ஒவ்வோர் அதிக அல்லது பகுதியும் குறைந்த அளவில் இந்தப் பண்பைப் பெற்றுள்ளது. அவைகள் கடன் கொடுப்பதைவிடக் கடன் வாங்குவது சற்றுக் குறைந்த கால அளவிற்கே இருக்கும். அவைகளின் பொறுப்புகள், சராசரியில், அவைகளின் சொத்துகளைவிடச் சிறிதளவு இன்னும் நெருங்கிய பணமாக இருக்கும்.

இத்தகைய தனிச் சிறப்பு வாய்ந்த ஆபத்தைத் தாங்கிச் சுமப்பதால் தான் அவைகள் பிழைப்பு நடத்துகின்றன. இந்த ஆபத்தைச் சுமப்பதற்கு ஈடாக இருவகை நெருங்கிய பணவகைகளுக்கும் உள்ள வட்டிவீத வேறுபாட்டுத் தொகையை (மீதியை)ப் பெறுகின்றன. இவ்வழிகளால் அவைகள் சட்டச் செலுத்து செலாவணியிலிருந்து ரொக்கநிலை குறைவாக உள்ள முதலீடுகள் வரையிலும் உள்ள பலதிறப்பட்ட நெருங்கிய பணத்தை எப்படி ஒருங்கே அளிக்கின்றன என்பதைப் பார்ப்போம்.

இரண்டாவதாகச் சொல்லக்கூடிய அடிப்படையான குறிப்பு, பல்வேறு நிலைகளில் தரகர்களுக்கும் (brokers), வணிகர்களுக்கும் (dealers) சிறப்பான வேறுபாடொன்று காணப்படுகிறதென்பதே. தரகர் என்பவர் தான் கையாள்கிற எப்பொருள்களையும் தானே வாங்கவோ, அல்லது இருப்பு வைத்துக்கொள்ளவோ செய்யாத ஒரு மனிதர் (அல்லது ஒரு நிறுவனம்). உதாரணமாக, 'பணத்தரகர்' என்பவர் அன்றாடக் கடன்கள் கொடுப்பதற்காகப் பணம் வைத்துள்ள பாங்குகளுக்கும், 'ஒரு நாள் கடன்'(ஒரு நாள் தவணையில் பெறும் கடன்) தேவைப்படும் பண அங்காடியிலுள்ள நிறுவனங்களுக்கும் தொடர்பு ஏற்படுத்துகிறார். பணத்தரகர் தான் கடன் கொடுப்பதோ வாங்குவதோ இல்லை; அவர் சிறிதளவு தரகு அளிக்கப்படுகிற ஓர் இடையாளே (intermediary) ஆவார். அது போலவே, கழிவுத் தரகர் (discount-broker) 'கழிவுகளை' (discounts—மாற்று உண்டியல்கள் இவ்வாறு அழைக்கப்படுகின்றன; ஏனெனில், அவைகளுக்கு வட்டிவீதம் எதுவுமில்லை. அவை கழிவுசெய்து வாங்கவோ விற்கவோ படுகின்றன—45ஆம் பக்கத்திலுள்ள அடிக்குறிப்பைக் காண்க) வாங்குவதோ விற்பதோ இல்லை. அவர் உண்டியல்களை விற்பனைக்கு வைத்திருப்பவர்களுக்கும், உண்டியல்களை வாங்க இருப்பவர்களுக்கும் தொடர்பு ஏற்படுத்துகின்றார். அதுபோலவே, பங்குத் தரகர், தான் பங்குகளையும் (shares), தொகுப்புப் பங்குகளையும் (stocks) வாங்குவதோ விற்பதோ கிடையாது. அவர் தன் வாடிக்கைக்காரர்களை விற்போரிடம் அல்லது வாங்குவோரிடம் தொடர்பேற்படுத்துகிறார். இந்த மூன்று வகையான தரகர்களைப்போலவே, கடன் கொடுப்பதற்கும் கடன் வாங்குவதற்கும், கொள்முதலுக்கும் விற்பனைக்குமாக மூன்று வகை நிலையங்கள் உள்ளன. பங்குகளையும் பங்குத் தொகுப்புகளையும் வாங்கி விற்பனை செய்பவருக்குப் பங்கு வர்த்தகர் (stock-jobber) என்று பெயர். மாற்று உண்டியல்களை வாங்கி விற்கும் நிறுவனம் ஒரு கழிவகமாக (Discount House) இருக்கிறது. [ஒரு நிறுவனம் வெறும் கழிவுத் தரகரா (discount-broker) அல்லது உண்டியல்களைத் தன் கணக்கில் இருப்பாக வைத்துள்ளதா

என்று தெரியவில்லையானால், 'அவைகள் தங்களுக்கென்று கணக்குப் புத்தகம் வைத்திருக்கின்றனவா?' என்னும் கேள்வி கேட்கப்படும்.]

தற்போது நாம் பண அங்காடி வழியாகப் பயணம் செய்வோம். நமது பயணத்தை முதலில் பணத்திலிருந்தே தொடங்குவோம்; பின்னர் மெதுவாக ரொக்கநிலை குறைவாக உள்ள நெருங்கிய பண வகைகளுக்குச் செல்வோம். முதல் வகைப் பணம் சட்டச் செலுத்து செலாவணியாகும். இது நாணயசாலையில் அச்சிடப்பட்டு இங்கிலாந்து பாங்கால் வெளியிடப்படுகிறது. இரண்டாவது வகைப் பணம் பாங்கு வைப்புகளாகும். இவைகளைத் தேவைப்படும்போது செலாவணியாக மாற்றிக்கொள்ளலாம். சாதாரணமாக எல்லா வகைக் கடன்களையும் திருப்பி அடைப்பதற்கு இவை ஏற்றுக் கொள்ளப்படும். சாதாரணமாக எல்லா நேரங்களிலும் இவை இரண்டும் நிறைவுப் பணமாகவே (full money) உள்ளன. இவைகளைப்பற்றி நாம் ஏற்கெனவே ஆராய்ந்துள்ளோம்.

நெருங்கிய பணத்திலும், பண அங்காடியிலும் மூன்றாவதாக வருவது 'குறுந்தவணை அழைப்புப் பணமாகும்' (money at call and at short notice). பாங்குகளின் ரொக்கநிலைக் குறிப்பில், காப்பு ரொக்கத்திற்கு அடுத்தபடியாக உள்ளது ரொக்கநிலையிலுள்ள இனமாகும். 'குறுந்தவணைப் பணம் அத்தனையுமே இருபத்துநான்கு மணிநேரத் தவணையில் கடன் கொடுக்கப்படுபவை அல்ல. இதில் பலதிறப்பட்ட மரபு வழக்கங்கள் உள. ஆனால், ஒவ்வொரு முறையிலும் தவணை குறுகிய கால அளவாகவே உள்ளது. இந்த வகையில் நாள் தவணைக் கடன் (day-to-day loan) ஓர் எடுத்துக்காட்டான இனமாகும். இவ்வரிகளை எழுதும் நேரத்தில், லண்டனில் அன்றாடக் கடனுக்கு ஆண்டொன்றுக்கு ½ சதவீதம் பாங்கு வட்டிவீதமாக இருந்தது—அதாவது, ஒரு நாளைக்கு £ 1,000,000-க்கு £ 20-க்கும் குறைவான வட்டிவீதம். இவ்விதம் நல்ல ஈட்டின்பேரில் கொடுக்கப்பட்ட கடன் தொகையும் (நல்ல ஈடு கொடுக்கப்படவில்லையென்றால், அன்றாடக் கடன் கொடுக்கப்படமாட்டாது) பணத்தைப் போன்றதே. அவை அடுத்த தினம் பணமாக்கப்படும். லண்டனில் ஒவ்வொரு நாளும் இந்தக் குறுந்தவணைக் கடன்கள் ஏராளமாகக் கொடுக்கப்படுகின்றன. இக்கடன் கொடுப்பில் பாங்குகள் தங்கள் பணநிலையைச் சரிசெய்து கொள்ளுவதாலும், தங்கள் விகிதங்களை எப்போதும் சரியாக வைத்துக்கொள்ளுவதாலும் இவ்வாறு அதிக அளவில் குறுந்தவணைக் கடன் பேரம் இருந்துவருகிறது. எந்த நாளிலும் பாங்குகளில் சில தாங்கள் கொடுத்த கடனைத் திருப்பி அடைக்குமாறு

வேண்டும். சில பாங்குகள் கடன்களைக் கொடுத்துக்கொண்டிருக்கும். இவ்வாறு 'அழைப்பு'ச் (calling) செய்துகொண்டிருக்கும் பாங்குகளுக்குக்கடனைத் திருப்பி அடைப்பதற்காகக் கடன்வாங்கியவர்கள் மற்ற பாங்குகளிடமிருந்து கடன் பெறுவர். இங்குதான் பணத்தரகரின் பணிகளும் பிழைப்பும் உள்ளன. சில சமயங்களில் கடன் கொடுக்கப்படுகின்ற தொகையைக் காட்டிலும், திருப்பி அடைக்கும்படி அழைக்கப்படும் தொகை அதிக அளவில் இருக்கலாம். அச் சமயங்களில் லொம்பார்டு தெருவில் (Lombard Street) பணம் முடையாக (tight) உள்ளதெனக் கூறுவர். அப்பணத்திற்குக் கொடுக்கப்படும் வட்டிவீதமும் உயரும். மற்றச் சமயங்களில் கேட்பதற்குமேல் அதிகமான அளவில் கடன் கொடுப்பதற்குப் பணம் தயாராக இருக்கும். அச் சமயங்களில் பணம் 'தாராளமாகவோ' (easy) அல்லது 'பயன்படுத்தப்படாமலோ' (unusable) இருக்கும்.

பொதுவாகப் பற்றுக்குறையான காலங்களோ அல்லது தாராளமான காலங்களோ—இவை இரண்டும் மற்ற பாங்குகளுக்கும் இங்கிலாந்து பாங்கிற்கும் உள்ள தொடர்பின் விளைவுகளாகும். உதாரணமாக, வருமானவரி கட்டவேண்டிய தேதி அதிக அளவில் ஜனவரி முதல் தேதியே வருகின்றது. ஆண்டின் முதல் காலாண்டில் பாங்குகளின் வாடிக்கைக்காரர்கள் உள்நாட்டு வருவாய்த் துறையினருக்கு (inland revenue) வரி செலுத்துவதற்காக அத்துறையின் பேருக்குச் செக்குகள் எழுதுவதில் மும்முரமாக இருக்கின்றனர். இங்கிலாந்து பாங்கு அரசாங்கத்தின் பாங்காகையால், இந்தச் செக்குகள் நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ இங்கிலாந்து பாங்கை அடைகின்றன. தீர்வின்போது அவைகள் அங்கத்தினர் பாங்குகளுக்குக் கொடுக்கப்படும். வேறு விதத்தில் சொல்லப் போனால், வரிகள் செலுத்துவதானது இங்கிலாந்து பாங்கிலுள்ள 'பாங்கர்களின் வைப்புகளை'க் குறையச் செய்கின்றது. நாம் ஏற்கெனவே பார்த்ததுபோல், இப்பாங்கு வைப்புகள் அங்கத்தினர் பாங்குகளின் காப்பு ரொக்கமாக (cash reserves) இருக்கின்றன. அங்கத்தினர் பாங்குகளின் ரொக்க விகிதம் குறைவதால், அவைகள் தங்கள் நிலையைச் சமாளிக்கத் தாங்கள் கொடுத்துள்ள குறுந்தவணைக் கடன்களைத் திரும்பப்பெற முற்படுகின்றன. எனவே, வரிகள் செலுத்துதலானது பண அங்காடியில் 'பணமுடையை' (tight money) ஏற்படுத்துகின்றன. வழக்கமாக வரி செலுத்தப்படுகின்ற பணம் முழுமையும் அப்படியே எடுத்துக்கொள்ளப்படுவதில்லை. அரசாங்கம் வரி செலுத்துவோரிடமிருந்து பெறுகின்ற பணத்தை இங்கிலாந்து பாங்கில் இருப்பு அதிகரித்துக்கொள்வதற்குப் பயன்படுத்துவதில்லை. அதனுடைய கடன்களில் சிலவற்றைத் திருப்பித்

தரவே பயன்படுத்துகிறது. அரசாங்கத்திற்குப் பணம் செலுத்தப்படுவது எவ்வாறு அங்கத்தினர் பாங்குகளின் காப்பு ரொக்கத்தைக் குறைக்கின்றதோ, அதுபோல அரசாங்கத்தினல் செலுத்தப்படும் பணம் (கடனைத் திருப்பி அடைப்பதைப்போன்ற செலுத்துகள்) அங்கத்தினர் பாங்குகளின் காப்பு ரொக்கத்தை அதிகரிக்கும். இங்கிலாந்து பாங்கும் அரசாங்கக் கருவூலமும் இவ்விரு முறைகளையும் ஒன்றுக்கொன்று ஒத்து இருக்கும்படி செய்வதற்கான திறன் படைத்திருக்கின்றன. இப்படிச் செய்வதால், நாள் தவணைக் கடன்களுக்குப் பயன்படும் பண அளிப்பில், குறுங்காலத்தில் அதிக அளவு ஏற்றஇறக்கங்களில்லாமல் பார்த்துக்கொள்ள முடிகிறது. அதாவது, இங்கிலாந்து பாங்கு அதிக முடையை அல்லது தாராள நிலையை விரும்பினலன்றி அதில் ஏற்ற இறக்கமிருக்காது. இதற்குப் பின்னர் என்ன நடக்கிறதென்பதை இன்னும் ஒரு மணித்துளியளவில் நாம் பார்ப்போம்.

முதலில் நாள் தவணைக் கடன்களுக்கே மீண்டும் செல்வோம். பாங்குகளே இவ் விதிகளின்படி கடன் கொடுப்பவர்களாவர். ஆனல், கடன் பெறுகின்ற மக்கள் யாவர்? கழிவுத் தீர்வகங்களே (discount houses) இது சம்பந்தமாக மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவை. அவைகள் (இவ்வரிகளை எழுதிய நேரத்தில்) $\frac{1}{2}$ சதவீத வட்டிக்குக் கடன் வாங்கின. மாற்று உண்டியல்கள் $\frac{9}{16}$ லிருந்து $\frac{5}{8}$ சதவீதக் கழிவு வீதத்தில் வாங்கவோ அல்லது விற்கவோ முடிந்தன. ஓராண்டிற்கு £ 1,000,000 க்கு $\frac{1}{8}$ சதவீதம் £ 1,250 அளவே இருப்பதால், கழிவுத் தீர்வகம் திருப்திகரமான அளவிற்கு இலாபம் சம்பாதிக்கவேண்டுமானல் பெருமளவுத் தொகையில் பேரம் நடத்தவேண்டும். சாதாரணமாகத் தனது மூலதனச் சாதனங்களைப் (capital resources) போல் 30 மடங்கு அளவுள்ள தொகை அளவிற்கு ஒரு கழிவுத் தீர்வகம் கடன் வாங்குவது, உண்டியல்களில் முதலீடு செய்வது ஆகியவை நியாயமெனக் கருதப்படுகின்றன.

மாற்று உண்டியல்களைப்பற்றி (Bills of Exchange) நாம் ஏற்கெனவே பார்த்துள்ளோம். இது ஆரம்பத்தில் வணிக பேரங்களினல் ஏற்பட்டதாகும். உதாரணமாக, டெக்சாஸிலுள்ள (Texas) பருத்தி வியாபாரி ஒருவர் தமது பருத்தியைக் கப்பலில் ஏற்றிவிட்டு, அதை வாங்குகின்ற லிவர்பூல் வியாபாரியின் பெயருக்கு ஓர் உண்டியலை ஏற்படுத்துகிருர். இந்த உண்டியல்படி, லிவர்பூல் வியாபாரி உண்டியலில் குறிப்பிட்ட தொகையைக் 'கண்ணுற்ற 90 நாட்களுக்குப் பிறகு' கொடுக்கவேண்டும். அதாவது, உண்டியலைப் பெற்றபின்னர் மூன்று மாதங்களுக்குப் பிறகு கொடுக்கவேண்டும்.

இப்போது இந்த உண்டியல் அங்காடியில் விற்கப்படுவதற்குத் தயாராக இருக்கும். உண்டியலைப் பெற்றதும், தான் அந்த உண்டியலை 'ஏற்றுக்கொண்டதை' (accepts) உணர்த்தும் பொருட்டு உண்டியலின் பின்னர் அவர் தன் கையெழுத்தை இடுவார். ஆனால், பண அங்காடி இறக்குமதி செய்கின்ற ஒவ்வொரு வியாபாரியின் பெயரையும், அவர் தன் கடனை ஒழுங்காகக் கொடுக்கும் பண்பு வாய்ந்தவரா என்பதையும் தெரிந்துவைத்துக் கொள்ள முடியும் என எதிர்பார்க்கமுடியாது. எனவே, வழக்கமாக லண்டன் பாங்குகளில் ஒன்றுடன் அல்லது தனிப்பட்ட பாங்குகளில் பெரிய நிறுவனம் ஒன்றுடன் தனக்குள்ள உண்டியலை ஏற்றுக்கொள்ளுவதற்கு ஒப்பந்தம் செய்துகொள்வார். உண்டியலில் ஒரு பாங்கின் பெயர் அல்லது ஓர் 'ஏற்பு அகத்தின்' (Acceptance House) பெயர் எழுதப்பட்டவுடனே, அது அங்காடியில் உடனுக்குடன் விற்கப்படக்கூடிய முதல்தர (prime bill) உண்டியலாகின்றது. (மாற்று உண்டியல்கள் இறக்குமதி, ஏற்றுமதிக்கு எவ்வாறு துணைசெய்கின்றன என்பதைப்பற்றி ஏழாவது அத்தியாயத்தில் விளக்கப்படும்.)

முன்னுள்ள பத்தி (paragraph) தற்காலத்துச் சூழ்நிலைக்கொப்ப எழுதப்பட்டது. ஆனால், தற்காலத்தில் வணிக உண்டியல்கள்—எந்த வகை வாணிபத்திலாவது தோன்றும் உண்டியல்கள்—கழிவு அங்காடியில் (Discount Market) மிகச் சிறுபான்மையாகவே உள்ளன. மொத்த விற்பனையில் பெரும்பகுதி கருவூல உண்டியல்களாகவே (Treasury Bills) உள்ளன. கருவூல உண்டியலானது குறிப்பிட்ட தொகையை உண்டியல் வெளியிட்ட தேதியிலிருந்து மூன்று மாதம் கழிந்து கொடுப்பதற்கு அரசாங்கங்கள் அளிக்கும் வாக்குறுதியாகும். ஆரம்பத்தில் அது மாற்று உண்டியலின் அமைப்புப்போலவே வேண்டுமென்று ஏற்படுத்தப்பட்டது. இதன் மூலம் கருவூலம் கழிவு அங்காடியில் நிலவும் குறைந்த வட்டி வீதத்திற்குத் தனக்கு வேண்டிய கடன் தொகையைப் பெற முடிகின்றது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் கருவூல உண்டியல்கள் வணிக உண்டியல்களைவிடக் குறைவாக இருந்தன. ஆனால், இருபதாம் நூற்றாண்டில் வாணிபம் பல வழிகளால் பணவுதவி அடையப்பெறுவதால், அரசாங்கமும் உண்டியல்களின்மூலம் நிறைய அளவிற்குக் கடனைப் பெற்றது. இந்நாள்வரையில் கருவூல உண்டியல்களே அங்காடியில் அதிகமாக உள்ளன. கருவூல உண்டியல்கள் ஒவ்வொரு வாரமும் டெண்டர்மூலம் வெளியிடப்படுகின்றன. அரசாங்கம் ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் தான் எவ்வளவு அளவு கருவூல உண்டியல்களை வெளியிடப் போகிறதென்பதை அறிவிக்கும். வாரந்தோறும் கருவூல உண்டி

யல்கள் டெண்டர் முறையில் வெளியிடப்படுகின்றன. ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் அரசாங்கம் இவ்வளவு உண்டியல்களை வெளியிடப்போகிறதென்பதை அறிவிக்கும். உதாரணமாக, அரசாங்கம் £ 150 மில்லியன் அளவிற்கு உண்டியல்களை வெளியிடப்போகிறதென்று வைத்துக்கொள்வோம். டெண்டரில் பங்குபெறும் உரிமையுள்ள கழிவகங்கள் (discount houses) தாங்கள் இவ்வளவு மில்லியன்கள் பெறுமான உண்டியல்களை இன்ன விலைக்கு வாங்கத் தயாராக இருக்கின்றனரென்ற அளிப்புக்கூற்றை (offer) வெளியிடுவர். ஆண்டொன்றுக்கு இவ்வளவு கழிவுவீதமென்று விலை கூறப்படும். தற்போது சில வாரங்களாகச் சராசரி கழிவுவீதம் ½ சதவீதத்திற்குச் சிறிதளவு அதிகமாக உள்ளது. சில கருவூல உண்டியல்கள் டெண்டர் கோரியதற்கு வெளியிலேயும் விற்கப்படுகின்றன. அதாவது, இங்கிலாந்து பாங்கின் சலுகைக்குட்பட்ட வாடிக்கைக்காரர்களான லண்டனில் நிதிகளை வைத்துள்ள பிற நாட்டு மைய பாங்குகளுக்கு இவ்விதம் விற்கப்படுகின்றன.

சாதாரணமாக ஒரு கழிவகம் தொந்தரவற்று நிம்மதியான—சிலர் மந்தமான என்றுகூடச் சொல்லுகின்றனர்—வாழ்க்கையுடையதென்று கூறுகின்றனர். அது நாள் தவணைக் கடன்களை எப்போதுமே பெறக்கூடும். கருவூல உண்டியல்களை வாங்குவதற்கு அது இப்பணத்தைப் பயன்படுத்துகிறது. வாரந்தோறும் நடக்கும் டெண்டரில் அதன் பங்கு கிடைத்துவிடுகிறது. ‘தனது சொந்தக் கணக்கில்’ வைத்துக்கொண்டது போக, எஞ்சியவற்றை பாங்குகளுக்கும் (பாங்குகள் டெண்டர் கோருவதில்லை) இதர வாடிக்கைக்காரர்களுக்கும் (ஒருசிறிதளவு இலாபம் வைத்து) விற்றுவிடுகிறது. ஆனால், தற்போது ஏதோ சில காரணங்களுக்காக இங்கிலாந்து பாங்கு, அங்கத்தினர் பாங்குகளின் வைப்புகளால் பெருக்கப்பட்ட பணத்தின் அளவைக் குறைத்துவிட விரும்புகிறதெனக் கொள்வோம். வரி செலுத்துதலால் வரும் பணத்தை நிறுத்தமுடியாதாகையால், பாங்கு அதனிடமுள்ள பாங்கர்களின் வைப்புகளின் அளவைக் குறைக்க முற்படும். இப்போது பாங்குகளின் ரொக்க விகிதம் குறையும். எனவே, நிலைமையைச் சரிக்கட்ட பாங்குகள் நாள் தவணைக் கடன்களைத் திரும்பப்பெறும். எல்லா பாங்குகளுமே இவ்விதம் கடன்களைத் திரும்பப்பெறுவதால், கழிவகங்கள் ஒரு பாங்கிற்கு மற்றொரு பாங்கிலிருந்து கடன் வாங்கிக் கடனைத் திருப்பி அடைக்க இயலாது. அவைகள் அங்கத்தினர் பாங்குகளல்லாத மற்ற இடத்திலிருந்துதான் பணம் பெற வேண்டும். அந்த இடம் இங்கிலாந்து பாங்கு ஒன்றுதான். இங்கிலாந்து பாங்கு, அங்கீகரிக்கப்பட்ட கழிவகத்திற்கு, அதுவும் அக்கழிவகத்தின் உண்டியல்களை ஈடாக வைத்துக்கொண்டு

கடன் கொடுக்கும்; அல்லது கழிவகத்தின் உண்டியல்களைத் தான் வாங்குவதன்மூலம் அதற்குப் பணம் கொடுக்கும். இவ்விதம் செய்வதற்கு பாங்கு ஒரு தண்டத்தொகையினை (penalty) மறைமுகமாக வசூல் செய்துகொள்ளுகிறது. ஏனெனில், அது விதிக்கும் வட்டி வீதமும், உண்டியலை வாங்குகின்ற கழிவு வீதமும் பாங்கு வீதத்தில் (bank rate) உள்ளன (அதாவது பாங்கு வீதம் எனப் பிரபலமாகக் கூறப்படுவது). இப்பாங்கு வீதம் (bank rate) அங்காடியிலுள்ள வட்டிவீதங்களைவிட அதிகமாக இருக்கும். உதாரணமாக, தற்போது நாள் தவணை வீதம் $\frac{1}{2}$ சதவீதமாகவும், அங்காடியில் அமலிலிருக்கும் கழிவு வீதம் (அங்காடியில் அமலிலிருக்கும் உண்டியல்களின் விலை) $\frac{5}{8}$ சதவீதமாகவும், பாங்கு வீதம் 2 சதவீதமாகவும் உள்ளன. 'அங்காடி 'பாங்கின் கட்டாயத்தின்கீழ்' இருக்கும் போது, கழிவகங்கள் தங்கள் உண்டியல்களுக்கு $\frac{1}{8}$ சதவீத இலாபம் அடைவதற்குப் பதிலாக $1\frac{3}{8}$ சதவீதம் நஷ்டத்தை அடைகின்றன. இது இருவித விளைவுகளைத் தரும்.

முதலில் இது கழிவகங்களைத் தங்கள் கடனைவிட்டு விரைவில் விலகிக்கொள்ளச் செய்கிறது; ஆகையினால், எங்கும் ஒருவித முடக்கமும் வாணிபச் சுருக்கமும் (contraction of business) ஏற்படுகிறது. இரண்டாவதாக கழிவகங்கள் ஏற்கெனவே வாங்கிய உண்டியல்களை நஷ்டத்திற்கு வைத்துக்கொண்டிருப்பதைத் தவிர வேறொன்றும் செய்ய இயலாது. அவைகள் புதியதாக உண்டியல்களை இலாபந்தரக்கூடிய வீதத்தில் தவிர—அதாவது, பாங்குவீதத்திற்கு மேல்—மற்ற வீதத்தில் டெண்டர் கோரவோ அல்லது வாங்கவோ மாட்டா. அவைகள் இங்கிலாந்து பாங்கினிடம் சென்று கடன் கேட்கும் ஆபத்தான நிலையுள்ளவரையில் இந் நிலைமை நீடிக்கும். கழிவு அங்காடி மிகவும் மென்மையாகவும் வேகமாக இயங்கும் தன்மையுடையதாகவுமுள்ளது. எனவே, இங்கிலாந்து பாங்கு அவ் வங்காடியில் நிலவும் கடன் அளவையும் (volume of credit) வட்டி விகிதங்களையும் பாதிக்க இயலும். பின்னால் நாம் காணப்போவதைப்போல், இவைகள் யாவும் மிகவும் முக்கியமான அதிகாரங்களாகும்.

கருவூல உண்டியல் என்பது பணத்திலிருந்து நெருங்கிய பணம்வரை ஏற்பட்ட வளர்ச்சியில் நான்காவது நிலையாகும். முதல் மூன்றும் செலாவணி, பாங்கு வைப்புகள், நாள் தவணைக் கடன்கள் ஆகியவைகளாம். ஐந்தாவது நிலையை ஆராயப்புகுமுன் 4 (a) என்னும் ஒரு நிலையையும் பார்ப்போம். இதுதான் பாங்குகளின் இருப்புநிலைக் குறிப்புகளில் காணப்படுகின்ற கருவூல வைப்பு ரசீதாகும். இது போர்க்காலத்துக் கண்டுபிடிப்

பாகும். பாங்குகள் கருவூல உண்டியல்களை வாங்கும்போதோ அல்லது கருவூல உண்டியல்களை வாங்கும் கழிவகங்களுக்குக் கடன் கொடுக்கும்போதோ, அவைகள் உண்மையில் அரசாங்கத்திற்கு மூன்று மாதத் தவணையில் கடன்கொடுக்கின்றன—ஆனால், அப்படிச் செய்வதையே அவைகள் விரும்பினால், ஒருநாள் முன்னறிவிப்பின்பேரில் அவைகளினின்றும் தப்பித்துக்கொள்ள வழிவகையைச் செய்கின்றன. கருவூல வைப்பு ரசீதுகள் இதைப்போன்று நேரடியானவையே. பாங்குகள் குறிப்பிட்ட தொகையை ஆறு மாதத் தவணையில் கருவூலத்திற்குக் கடன்கொடுக்கின்றன. ஏறக்குறைய கருவூல உண்டியல்களுக்குள்ள வட்டிவீதத்திற்கே பாங்குகள் கருவூலத்திற்கு ஆறு மாதத் தவணைக்குக் கடன்களைக் கொடுக்கின்றன. ஒரு பாங்கிற்கு இந்த ஆறு மாதத்திற்குள் ரொக்கம் குறைந்தால், தன்னுடைய கருவூல வைப்பு ரசீதுகளை (Treasury Deposit Receipts) இங்கிலாந்து பாங்கிற்கு அது விற்கலாம். ஆனால், அவசியமில்லாதபோது இம் முறையைப் பயன்படுத்தக்கூடாதென்பதும் இவ்விதியில் அடங்கியுள்ள கருத்தாகும். கருவூல வைப்பு ரசீதுகளுக்கு அங்காடியென்பதில்லை. எனவே, இந் நூலைப் பொறுத்தவரையில் இதைப்பற்றி நாம் மேலும் ஆராயவேண்டுவதில்லை.

நெருங்கிய பணத்தில் ஐந்தாவதுநிலை, குறுந்தவணைப் பத்திரங்களாகும் (short bonds). இதை என்னவென்று விளக்குவதற்கு நாம் தற்போது கூறிக்கொண்டிருப்பதைவிட்டு, வேறொரு செய்தியான நாட்டுக் கடனைப்பற்றிக் ((national debt) கூறவேண்டும். பலவகைக் கடன்களால்தான் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்குக் கடன் சுமை அதிகமுள்ளது. ஒரு முனையில் மூன்று மாதங்களில் கொடுபடவேண்டிய கருவூல உண்டியல்கள், ஆறு மாதங்களில் கொடுபடவேண்டிய கருவூல வைப்பு ரசீதுகள் ஆகிய கடன்கள் உள்ளன. (கடன் கொடுத்தவர்கள் இக் கடன்களை மீண்டும் புதுப்பிக்கத் தயாராக இருப்பார்கள். ஆனால், அவர்கள் அவ்வாறு புதுப்பிக்கத் தவறினால், கருவூலம் அவைகளுக்குப் பணத்தைக் கொடுக்க வேண்டும்.) இவையிரண்டும் இங்கிலாந்து பாங்கினால் கருவூலத்திற்கு அளிக்கப்படும் வழிவகைக் கடன்களுடன் (Ways and Means Advances) சேர்ந்து 'சிறுகாலக் கடன்' (floating debt)என்றழைக்கப்படுகிற கடன்களாகின்றன. இன்னொரு முனையில் கான்சல் (Consols) கடன் பத்திரங்கள் உள்ளன. இவைகள் முதிர்ந்த பிறகுதான் பணம் பெறலாமென்பதில்லை. முதிராமுன்னும் இப் பத்திரங்களுக்குப் பணம் பெறலாம். இதற்கிடையே பலவித கால அளவுகளில் முதிரும் கடன் பத்திரங்களுக்குப் பணம் தந்தாகவேண்டும். பெருவாரியான இத்தகைய கடன்களைத் திருப்பி அடைப்பதற்கு

விருப்பமான தேதிகளே உள்ளன. உதாரணமாக, தற்போது £ 807 மில்லியன் அளவிற்கு $2\frac{1}{2}$ சதவீத நாட்டுப் போர்க் கடன் பத்திரங்கள் (National War Bonds) உள்ளன. அரசாங்கம் இவைகளை எப்போது வேண்டுமானாலும் அல்லது 1952ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 1ஆம்தேதி அல்லது 1954ஆம்ஆண்டு மார்ச்சு 1ஆம் தேதிக்குமுன் மீட்கப்படலாம். எனவே, இவைகள் '$2\frac{1}{2}$ சதவீத 52/54' என்று அழைக்கப்படுகின்றன. சில சமயங்களில் கடன் திருப்பித்தரவேண்டிய தேதி அவைகளில் குறிப்பிடப்படாமலிருந்தால், அரசாங்கம் விரும்புகிறவரையில் கொடுக்கப்படவேண்டியதில்லை. எனவே, பலதிறப்பட்ட 'வாழ்நாட்களை' உடையவைகளாக அவைகள் உள்ளன. அவைகள் குறுகிய காலத்திற்கே வெளியிடப்பட்டமையாலோ (முதன்முதலில் 1944ஆம் ஆண்டு நவம்பர் 7ஆம் தேதியன்று வெளியிடப்பட்ட 1950ஆம் ஆண்டு பிப்ரவரியில் முதிர்வடையும் $1\frac{3}{4}$ சதவீத £ 327 மில்லியன் கருவூலப் பத்திரங்கள் போன்றவை) அல்லது நெடுங்காலத்திற்கு அளிக்கப்பட்டுச் சமீபத்தில் முதிர்வடையும் தேதியை நெருங்கிக்கொண்டிருப்பதாலோ, எப்போதுமே சில பத்திரங்கள் சமீபத்தில் முதிருந்தறுவாயில் இருந்துகொண்டேயிருந்தன. ஐந்தாண்டுகளுக்குள் முதிர்வடையும் பத்திரங்கள் குறுந்தவணைப் பத்திரங்கள் (short bonds) எனப்பட்டன. ஐந்தாண்டுகளிலிருந்து இருபது ஆண்டுகளில் முதிர்வடையும் பத்திரங்கள் நடுத்தரப் பத்திரங்களெனப்பட்டன. இருபதாண்டுகளுக்குமேல் முதிர்வடையும் பத்திரங்கள் நெடுந்தவணைப் பத்திரங்களெனப்படும்.

முதிர்வடையுந் தேதியில் பிரிட்டிஷ் அரசாங்கப் பத்திரம் ஒவ்வொன்றிற்கும் அங்காடி எங்கும் பத்திரத்தில் கண்டுள்ள முழுத்தொகை கிடைக்கும். பிரிட்டிஷ் அரசாங்கம் உலகத்திலேயே நாணயத்திற்கு ஈடிணையற்றது என்பதுமட்டுமல்ல இதற்குக் காரணம்; அரசாங்கம் தன் கடனைத் தீர்த்துக்கொள்வதற்கு இயலுமானால் பணத்தைச் சிருட்டிக்கலாமென்பதுமாகும். எனவே, இப் பத்திரங்கள் எல்லாம்—கான்சல் (Consol) பத்திரங்களைப் போன்றவைகளைத் தவிர, அவைகளுக்கும் ஒழுங்காக அவ்வப்போது வட்டி செலுத்தப்படவேண்டும்—ஏதாவது ஒருநாளில் நிச்சயமாகப் பணமாகின்றன. ஆனால், தற்போது கையிலுள்ள பணத்திற்கும், ஏதாவதொரு நாளில் கிடைக்கப்போகிற பணத்திற்கும் வேறுபாடுண்டு. இவ் வேறுபாடு அவ்வப்போது அங்காடியில் ஏற்படும் ஏற்ற இறக்கங்களால் நேரும் விபத்தினால் (risk) ஏற்படுவதாகும். முதிரும் தறுவாயில் இருக்கும் ஒரு பத்திரத்தின் முகப்பு மதிப்பினின்றும் (par value) அதிகமாக வேறுபடாது. 3 சதவீதப் பத்திரமொன்று இன்னும் சரியாக இரண்டாண்டுகளில்

முதிர்வடைகிறதெனக்கொள்வோம். அங்காடியில் அப் பத்திரத்தின் விலை £ 101 என்று இருக்கும்போது, அதனை வாங்குவோர் 6 சதவீத வட்டியை இலாபமாகப் பெறுவர். அதே நேரத்தில் அவர் முதலின் மதிப்பில் £ 1 ஐ அவர் இழப்பார்—அதாவது, 'மீட்சி வருவாய்' ஆண்டொன்றுக்கு $2\frac{1}{2}$ சதவீதமாக உள்ளது.[1] பத்திரத்திற்கு இரண்டாண்டுகள் சென்றபிறகு (அதாவது, இரண்டாண்டுகளில் அப்பணத்திற்கு) $2\frac{1}{2}$ சதவீதம் வருவாய் கிடைக்குமானல், அப் பத்திரம் 101 என்று நிலவும். அப் பத்திரத்தை வாங்கியபிறகு, இரண்டாண்டுப் பத்திரங்களுக்கு 4 சதவீதமே சரியானதென்று அங்காடி தன் எண்ணத்தை மாற்றிக்கொள்கிறதென வைத்துக் கொள்வோம். இப்போது நாம் குறிப்பிட்ட பத்திரத்தின் விலை 98ஆக இறங்கும். இதனை வாங்குகின்றவர் இரண்டாண்டுகளில் £ 6 வட்டியும், £ 2 மூலதன இலாபத்தையும் (capital profit) பெறுவார். (நடைமுறையில் அடியிற் காணும் குறிப்பில் கண்டுள்ளபடி விலையில் மாற்றம் இருப்பதில்லை.) எனவே, குறுந்தவணைப் பத்திரத்தை இருப்பாக வைத்திருப்பதில் எவ்வித விபத்துமில்லை. அதனைவைத்திருப்பவர் அது முதிருவதற்குமுன்னரே (முதிர்வதற்கு இன்னும் நீண்ட நாட்களிருப்பினும்) பணம் பெறக்கூடும். இதற் கிடையே அவர் அப் பத்திரத்தை விற்க விருப்பப்பட்டாலும், விற்க வேண்டிய ஒரு நிர்ப்பந்தம் அவருக்கு ஏற்பட்டாலும், அப் பத்திரத் தின் அங்காடி மதிப்பு (market value) ஒரு புள்ளி (point) அல்லது இரண்டு புள்ளிகளுக்குமேல் இறங்கிவிடுவதில்லை.

தற்போது இதே 3 சதவீதப் பத்திரம் இன்னும் இருபத்தைந் தாண்டுகள் கழிந்து முதிர்வடையுமென்ருல் என்ன நடக்குமென் பதை ஆராய்வோம். இருபத்தைந்தாண்டுப் பத்திரத்திற்கு அங் காடி $2\frac{1}{2}$ சதவீத வட்டியே சரியான வட்டியென்று நினைத்தால், அது $107\frac{1}{2}$ என்ற அளவில் நிலவும் (இருபத்தைந்து ஆண்டு களுக்கு வட்டி வரவு £ 75-ம், மூலதன நஷ்டம் £ $7\frac{1}{2}$-ம் ஆக நிகர வருமானம் £ $67\frac{1}{2}$. இத் தொகை £ $107\frac{1}{2}$-க்கு $2\frac{1}{2}$ சதவீத வட்டி வீதம் கணக்குப் பார்த்தால், 25 ஆண்டுகளில் கிடைக்கும் வட்டித் தொகைக்குக் கிட்டத்தட்டச் சமமாகவேயிருக்கும்). அங்காடி வட்டிவீதத்தை 4 சதவீதமாக மாற்றிஞல், பத்திரத்தின் மதிப்பு $87\frac{1}{2}$ ஆகக் குறையும். (வட்டி வரவு £ 75-ம் மூலதன இலாபமும் சேர்ந்து £ $12\frac{1}{2}$ = £ $87\frac{1}{2}$ = 25 ஆண்டுகட்கு 4 சதவீத அளவில்

1 இது மீட்சி வருவாயை உணர்த்தும் எளிதான கருத்தாகும் (redemption yield) இதற்குப் பெரும்பாலோரும், நிறுவனங்களும் (ஆனல், அனைவருமல்ல) தங்களின் வருமானங்களிலிருந்து செலுத்தக்கூடிய வருமானவரியின் சுமையும், கூட்டு வட்டியின் சுமையும் இல்லை. ஆனல், இந்தச் சலுகை மூலதன நஷ்டங்களுக் குக் கொடுப்பதில்லை. மேலே கொடுக்கப்பட்டுள்ள புள்ளிவிவரங்கள் இக் கைக்கோள்களைத் தழுவியேயுள்ளன.

£ 87½க்கு வட்டி.)[1] கடைசியாக, பத்திரம் முதிர்வு தேதியற்று நீடித்திருக்குமாஞல், அது 2½ சதவீத வட்டியுடைய 120 ஆக அங்காடியிலிருக்கும். அதற்கு வட்டி 2½ சதவீதமாக இருக்கும். அல்லது 4 சதவீத வட்டி வீதமுடைய 75ஆக இருக்கும். எனவே, வட்டியானது 2½ சதவீதத்திலிருந்து 4 சதவீதத்திற்கு மாறும்போது முதிரும் முடிவு தேதியற்ற பத்திரத்தில் 45 புள்ளிகளும் (points), 25 ஆண்டுப் பத்திரமாக இருப்பின் 20 புள்ளிகளும், இரண்டாண்டுப் பத்திரமாக இருந்தால் 3 புள்ளிகளும் குறைகின்றன.

பத்திரத்தை எந்த நேரத்திலும் பணமாக மாற்றிக்கொள்ளலாமென்பதில் சிறிதளவும் ஐயமேதுமில்லையெனினும், நீண்ட தவணைத் தேதியுள்ள பிரிட்டிஷ் அரசாங்கப் பத்திரம்; அதனை வைத்திருப்போர் அது முதிர்வடைதற்கு முன்னல் விற்கவோ, அடைமானமாக வைத்துக் கடன் பெறவோ விரும்பாதிருந்தால் தவிர (அம்மாதிரி விரும்பாமலிருப்பவர்கள் அரியர்), மற்றபடி ஆபத்தான முதலீடேயாகும். இவ்வித விபத்து உள்ளதன் காரணமாகவே முதிர்வடையும்போது அதிக வருவாயினைப் பத்திரம் பெறுகிறது. வட்டி, மூலதன நஷ்டம் அல்லது இலாபம் இவைகளைக் கணக்கிட்டு, இவ்வதிக வருமானம் விபத்தினைத் தாங்குதற்குச் சன்மானமாக (reward) அமைக்கப்பட்டுள்ளது. எந்தச் சமயத்திலும் (அங்காடிகள் இயல்பு கடந்த நிலையிலிருக்கும்போது தவிர) குறுந்தவணைப் பத்திரங்களிலிருந்து நெடுந்தவணைப் பத்திரங்கள் வரையிலும் வருவாயில் சீரான வளர்ச்சி இருந்துகொண்டேயிருக்கிறது. ரொக்கநிலைக்கும் வருவாய்க்குமுள்ள வேறுபாடுகளை மீண்டுமொரு முறை தற்போது ஆராய்வோம். பிரிட்டிஷ் அரசாங்கப் பத்திரங்கள் ஏதாவதொரு விலைக்கு விற்கக்கூடுவனவாதலால், அவைகளை 'ரொக்கநிலை' உடையனவெனக் கூறலாம். குறுந்தவணைப் பத்திரங்கள்மட்டுந்தாம் அவைகளை விற்கும்போது அதிக நஷ்டத்தை உண்டுபண்ணுமலிருக்கின்றன. எனவே, அவைகள் 'நஷ்டமற்ற ரொக்க'மாக (liquid–without-loss) உள்ளன. அதற்கேற்ப அவைகள் குறைந்த வட்டிவீதத்தையே தருகின்றன. நடுத்தவணை (mediums), நெடுந்தவணை (longs), நாள்தவணைப் (perpetuals) பத்திரங்கள் 'விலையுள்ள ரொக்கமாக' (liquid-at-a-price) இருப்பதால், அவைகள் வழக்கமாக அதிகப் பலனைத் தருகின்றன.

1 இந்தக் கணக்கு விவரங்கள் கொஞ்சமும் சரிநுட்பமானவையல்ல (inaccurate) என்று மீண்டும் இங்கு வலியுறுத்தப்படல்வேண்டும். அவைகள், தொடர் வட்டி உள்ளது என்பதையும், வரி உள்ளது என்பதையும் கவனத்தில் கொள்ளவில்லை. கணக்கில் இவைகளைச் சேர்ப்பதென்ருலும், கணக்குக் கரடுமுரடானதாக இருக்கும்.

எனினும், நாம் ஐந்தாந்தர வரிசையிலுள்ள (fifth grade) நெருங்கிய பணமாகிய குறுந்தவணைப் பத்திரத்தைப்பற்றி மீண்டும் ஆராயவேண்டும். சமீப ஆண்டுகளில் ஐந்தாண்டுக் குறுந்தவணைக் கடன் பத்திரங்களும் கழிவகங்களின் ஆளுகைக்குக்கீழ்க் கொண்டுவரப்பட்டுள்ளன. கழிவகங்கள் அவைகளை (பாங்குகளினின்றும் பணம் கடனாகப் பெற்று) வாங்கிக் கருவூல உண்டியல்களை இருப்பு வைத்துக்கொள்வதுபோல் வைத்துக்கொள்கின்றன. இந்தக் குறுந்தவணைப் பத்திர இருப்புகளை வைத்துக்கொண்டு, இங்கிலாந்து பாங்கிலும் அவைகள் தங்களுக்குக்கடன் தேவைப்பட்டால் கடன் பெறலாம். இருப்பினும், கருவூல உண்டியல்களுக்கும், இக் குறுந்தவணைக் கடன் பத்திரங்களுக்கும் சில வேறுபாடுகள் இருக்கின்றன. அங்காடி விலை இறக்கத்தால் ஏற்படும் விபத்து (risk) குறைந்த அளவில் இருந்தபோதிலும், கருவூல உண்டியல்களில் ஏற்படுவதைவிட அதிகமாகவே உள்ளது. ஆகவே, கழிவகங்கள் உண்டியல்களில் செய்வதுபோல் தங்களது சொந்த மூலதனத்தைக் கொண்டு இருப்புகளின் உயர்ந்த கோபுரத்தை எழுப்பமுடியாது. எடுத்துக்காட்டான ஒரு கழிவகத்தின் உண்டியல் இருப்புகளில் ஒவ்வொரு £ 100லும் £ 97 கடன் வாங்கிய பணத்தால் கொள்ளப்பட்டவை. பத்திரங்களைப் பொறுத்த அளவில், கிட்டத்தட்ட £ 100க்கு £ 90 இவ்வாறு கொள்ளப்பட்டவையாக இருக்கும். இதன் காரணமாகவே கருவூல உண்டியல்களில் ஏற்படுவதைவிட இவற்றில் அடிக்கடி அங்காடி விலையில் ஏற்ற இறக்கம் காணப்படும். எனவே, கருவூல உண்டியல்களைவிடக் குறுந்தவணைக் கடன் பத்திரங்களை வாங்கி விற்பதில்தான் இலாபம் அடைவதற்கு வழிவகைகள் இருக்கின்றன.[1]

ஆறுந்தர வரிசையிலுள்ளவை நடுத்தரப் பத்திரங்கள். ஆனால், இதை ஆராயும்போது, நெருங்கிய பணத்தின் எல்லையை விட்டு நாம் சென்று, பொது முதலீடுகள் என்ற தலைப்புக்கு வரவேண்டியுள்ளது. இத் தலைப்பைப்பற்றி இந்நூல் ஆராயப்போவதில்லை. பாங்குகள் இவ்விதப் பத்திரங்களை வாங்குகின்ற காரணத்தால் தான், நடுத்தரப் பத்திரங்களையும் நாம் இவ்வரிசையில் வைத்துள்

1 கழிவகங்கள் மற்ற முதலீடு செய்பவர்களைக் காட்டிலும் குறுந்தவணைப் பத்திரங்களை அவைகளின் மீட்சி விலையைவிட அதிகம் கொடுத்து வாங்கக்கூடுமென்பதைக் கூறுவது இங்குப் பொருத்தமானது. கழிவகம் தனது மூலதன இலாபத்திற்கு வருமானவரி செலுத்துகிறது. ஆகவே, தனது மூலதன நஷ்டத்திற்கு (capital loss) ஒரு வரியைத் தான் விதிப்பதற்கும் கோரலாம். அதாவது, இப்பத்திரங்களை இருப்பாக வைத்திருக்கும் சாதாரண மனிதரைவிடக் கழிவகத்திற்குத், தவணைத் தொகைகளைத் தள்ளுபடி செய்யும் நிகரச் செலவு குறையும். இதன் காரணமாக முதிர்வடையும் காலத்தை நெருங்கிக்கொண்டிருக்கிற பத்திரங்களின் பெரும் பகுதியும் பண அங்காடிக்கு வருகின்றன. பண அங்காடியில் அவைகளுக்கு அளிக்கப்படும் விலை, பத்திர இருப்பு வைத்துள்ளோரனைவரையும் விற்கும்படி தூண்டுகிறது.

ளோம். அங்கத்தினர் பாங்குகளின் இருப்புக் குறிப்புகளில் 'முத லீடுகள்' என்று காணப்படுபவை பெரும்பகுதியும் பிரிட்டிஷ் அர சாங்கக் கடன் பத்திரங்களே. இதற்கு முந்திய ஆண்டுகளில், பாங்கு இருப்பாக வைத்துக்கொள்வதற்குகந்த பத்திரத்தின் கால உச்ச அளவு பத்து ஆண்டுகளாக இருக்கவேண்டுமெனக் கருதப் பட்டது. ஆனால், சமீப ஆண்டுகளில் இக் கால வரையறையை உயர்த்தி, இருபது ஆண்டுகளே உச்சமான கால அளவு என்று நம்பப்படுகிறது. இன்னும் அதிகப்படியான கால அளவுள்ள பத்தி ரங்களையும் பாங்கு வைத்துக்கொள்ளலாம்.

'பாங்குகள்' என இங்குக் கூறப்படுவது அங்கத்தினர் பாங்கு களேயாகும்: இங்கிலாந்து பாங்கு பிரிட்டிஷ் அரசாங்கப் பத்திரங் களை நிறைய இருப்பு வைத்திருக்கிறது. அதன் பாங்குத்துறையில் (Banking Department) இருப்பாக வைக்கப்பட்டுள்ள பத்திரங்கள், அங்கத்தினர் பாங்குகள் தங்கள் இருப்பில் வைத்துள்ள பத்திரங் களை ஏறக்குறைய ஒத்தேயுள்ளன. ஆனால், அதன் பெரும்பகுதி இருப்புகளும் வெளியீட்டுத்துறையில்தான் (Issue Department) உள்ளன. நோட்டுகளை வெளியிடுதற்கு அவை அத்துறையில் துணை செய்கின்றன. கருவூலத்தின் கணக்கு நடைமுறைக் காகவே 'வெளியீட்டுத்துறை' இயங்குகின்றது. எனவே, இதி லுள்ள அதிக அளவு இருப்புகள் கருவூலத்தை அங்காடியில் தலை யிடுவதற்கு வழிவகை செய்கின்றன. கருவூலத்திற்கு இன்னும் மற்ற நிதிகளும் (funds) உள்ளன. உதாரணமாக, வேலையின்மைப் பாதுகாப்பு நிதிகளும் (Unemployment Insurance Funds), உடல் நலப்பாதுகாப்பு நிதிகளும் முதலீடு செய்வதற்கு நிறைய அளவு நிகர இருப்புகளைப் பெற்றுள்ளன. இதுபோலவே, கருவூலத்தின் ஆளுகையின்கீழுள்ள அல்லது வழக்கமாக அதனுடைய ஆலோ சனையை ஏற்று நடக்கின்ற பல்வகைப்பட்ட நிதிகளும் மன்றங் களும் நிறைய அளவு இருப்புகளைப் பெற்றுள்ளன. இந்த நிதி களைக்கொண்டு, கருவூலம் அங்காடியில் விலைகளின் போக்கைக் கணிசமான அளவிற்கு இயக்கக்கூடும். ஒரு பத்திரம் முதிரும் போது கருவூலம் அதனை எப்போதும் பண அங்காடியின் விலைக்குக் குறைவாகவே வாங்கிக்கொள்ளும். தான் செலுத்தவேண்டிய தொகையின் அளவைக் குறைக்கும் முயற்சியே இது. வேறொரு வழியும் உள்ளது. கருவூலம் புதிதாகப் பத்திர வெளியீடு செய்வதாக இருந்தால், தன்னிடமுள்ள நிதிகளை அவற்றை வாங்குவதற்காகவே பண அங்காடியில் ஒருமுகப்படுத்தக்கூடும்.

இப்படிச் செய்வதன் நோக்கம், கருவூலம் ஏற்படுத்தும் புதிய வெளியீட்டை மற்றப் பத்திரங்களைவிடச் சிறப்பான நிலையில்

வைத்து, அதனை உடனடியாக வாங்குகின்றவர்களைத் தூண்டுவதேயாகும். இத்தகைய தலையிடுகின்ற அதிகாரங்கள் தவருகப் பயன்படுத்தவும் படலாம். இதற்குமுன் பல சமயங்களில் கருவூல வேந்தர் (Chancellor of the Exchequer) 'அங்காடியைத் தவருக நடத்திச்செல்வதாக'க்(improperly rigging the market) குற்றம் சாட்டப்பட்டுள்ளார். ஆயினும், பொதுப் படையாக அவைகள், கருவூலம் நாட்டுக் கடனை (national debt) நிருவகிப்பதற்கும் கடன்வாங்குவதற்கும் முதலீடு செய்பவர்கள் தங்கள் பணத்தை இலாபகரமாக முதலீடு செய்வதற்காகவும், இந்நூலில் நம் கவனத்தை மிகவும் கவரும் பலதிறப்பட்ட நெருங்கிய பணத்தின் பாங்குமுறைக்காகவும் இன்றியமையாதனவாக இருக்கின்றன.

## பாங்கு என்ருல் என்ன ?

பாங்குக்குப் பாராளுமன்றம் சட்டவாயிலாக விளக்கம்தர நேரிட்டபோது, 'உண்மையாக' பாங்கு தொழில் நடத்துகிற ஒரு நிறுவனம் அல்லது நிலையம் என விளக்கியது. இவ்வத்தியாயத்தின் கடைசியிலும் இதைவிடஅதிகமாக நாம் விளக்கம் தந்துவிட இயலவில்லை. பாங்கைப்பற்றி நாம் விவரித்தோம். பல்வேறுபட்ட பாங்குகளைப்பற்றியும் கூறினேம். ஆனல், பாங்கு என்பதற்கு ஒரு நல்ல விளக்கத்தைமட்டும் கூறவில்லை. பாங்கர், தனக்கும் பிறருக்கும் கடன் வழங்கும் தொழில் நடத்துகிறவர் என்று கூறுவது ஏறக்குறைய பொருத்தமானதாக இருக்கும். கடன்களுக்குள் பலதிறப்பட்ட முக்கிய வேறுபாடுகளிருந்தாலன்றிக் கடன்களைப் பரிவர்த்தனை செய்துகொள்ளுவதுமட்டில் எந்தவிதப் பயனையும் தந்துவிடாது. பாங்கருடைய கடன்கள், பொதுவாகப் பொது மக்கள் தங்களுடைய கடன்களைத் தீர்த்துக்கொள்ளுவதற்கு ஏற்றுக்கொள்வதன் காரணமாகப் பணமாக அமைவதால், தனது நோக்கத்தை பாங்கு நன்கு உணருகிறது. அதே சமயத்தில் ஒரு சமூக முக்கியத்துவத்தையும் பாங்கு அடைகின்றது. எனவே, பாங்கருடைய வணிகமாவது, பிறரிடமிருந்து கடன்களைப் பெற்று, அதற்கு ஈடாகத் தன்னுடைய கடன்களைக் கொடுத்து, அதன்மூலம் பணம் 'சிருட்டித்தலே' யாகும். பாங்கர் கடன் தொழில் நடத்துபவராயிருக்கலாம்; ஆனல், கடன் செல்வத்திற்கு எதிரிடையான தொன்றேயாகும். எனவே, பாங்கரை 'செல்வத்தைக் குடிப்பவர்' (liquefier of wealth) எனப் பொருள் கூறுவதும் பொருத்தமுடையதொன்ரும்.

பாங்கு முறை முழுதுமே, பொதுமக்கள் பாங்கின்மீது, அது தன்னுடைய கடன் பொறுப்புகளைத் தீர்த்துவிடும் என்று கொண்

டுள்ள நம்பிக்கையின் அடிப்படையில்தான் இயங்கிவருகிறது. இது முற்றிலும் ஒரு கடன் முறையே (credit system)யாகும். கிரேட் பிரிட்டனில் வெகு சிலரே பாங்கு முறையின் தொந்தரவுகளை அறிந்தவர்களாதலால், இது ஒரு வறட்டுவாதமாகக்கூடத் தோன்றும். ஆனால், மற்ற நாடுகளில், குறிப்பாக ஐக்கிய அமெரிக்காவில், பொதுமக்களின் நம்பிக்கை பாங்குகளின்மேல் தளர்ந்துவிட்டால் என்ன நேருமென்பதற்குக் கண்கூடான நிகழ்ச்சிகள் சமீப ஆண்டுகளில் நடந்திருக்கின்றன. இந்த நம்பிக்கையை எதிர்நோக்கியுள்ள காரணத்தால், பாங்கர் பல சமயங்களில் முரண்பாடாகவும் நடக்க நேரிடுகிறது. ஆக்கமான காலங்களில் நிறையக் கடன் வசதிகள் பெருகியுள்ளபோது, பாங்கர் இக் கடன் வசதிகளை இன்னும் அதிகரிப்பதற்கு முற்றிலும் தயாராக இருப்பார். ஆனால், ஆக்கமற்ற காலங்களில், பயமானது அங்காடியை முடக்கும் தறுவாயில், பாங்கர் மிகவும் கவனமாகவும், எச்சரிக்கையுடனும், நிதானமாகவும், கண்டிப்புடனும் இருக்கவேண்டும். அவருடைய வாணிபத்தை, இரம்மியமான இளவேனிற் காலத்தில் குடைகளைக் கடன் கொடுத்து மாரிக்காலத்தில் அவற்றைத் திரும்பப்பெற முன்வரும் வியாபாரி ஒருவரின் வாணிபத்திற்கு ஒப்பிடலாம்.

பாங்கர்களும் பாங்கு முறையும் சமீப காலங்களில் நிறைய அளவு குறைகூறப்படுகின்றன. இந்தக் குறைகளில் சில, பாங்கர் பொதுமக்களின் நம்பிக்கையை எதிர்நோக்கியிருக்கும் தன்மையால் எழுந்தவை. (பொதுமக்கள் நம்பிக்கையென்பது பொதுமக்களின் புகழ்ச்சியன்று). இதைவிட இன்னும் சில உருப்படியான குறைகூறுதல்களுமிருக்கின்றன. பாங்குமுறையின் அக் குறைகூறுதல்களில் முக்கியமாக உள்ள இரண்டைச் சுருங்கச் சொல்லி இவ் வத்தியாயத்தை முடித்துவிடலாம்.

பிரிட்டிஷ் பாங்குமுறை, வணிகத்தை வளர்க்க, குறிப்பாக வெளிநாட்டு வாணிபத்தை வளர்க்க ஏற்பட்டதென் அடிக்கடி குறைகூறப்படுவதுண்டு. தற்காலத்தில், இவ் வாணிபத்திற்கு உள்நாட்டுத் தொழிலுக்குத் (domestic industry)தரப்படுவதுபோல் அவ்வளவாகக் கடன் தரப்படாததால், வாணிபம் முக்கியமாகக் கருதப்படவில்லையெனக் குறைகூறப்படுகிறது. ஆனால், இங்கிலாந்திலுள்ள பாங்குகளுக்குத் தொழிலின் கடன் தேவைகளைப்பற்றி எதுவும் தெரியாது; அவைகள் தொழிலின்மீது தனி இரக்கமும் காட்டுவதில்லை. அவைகள் ஒரு கடனை வழங்கும்போது அக் கடனை மிகக் குறைந்தகால அளவில் திருப்பியடைக்கும்படி வலியுறுத்துவ

தால், எந்தத் தொழில் நிறுவனத்திற்கும் இக் கடனால் யாதொரு பயனுமில்லை. வாணிபத்தில் புழங்கும் பண்டங்களை ஈடாகப்பெற்றுக் கொண்டு அவை கடன் கொடுக்கின்றன. ஆனால், உற்பத்தியில் இருந்துகொண்டிருக்கிற பண்டங்களை ஈடாகப் பெற்றுக்கொள்வதில்லை. கடைசியாகப் பணத்தை எளிதான வட்டி வீதத்தில் கடன் பெறக்கூடிய இடமும், லண்டன் பணஅங்காடிக்கே ஆதாரமுமான கழிவு அங்காடியை (discount market) தொழிலதிபர் சுலபத்தில் நெருங்கமுடிவதில்லை.

இக் குறைகூறுதல்களில் சில மிகைபடுத்தப்பட்டவையே. பிரிட்டிஷ் பாங்குகள், குறைகூறப்படுவதைப்போலல்லாது, கணிசமான அளவிற்கு பிரிட்டிஷ் தொழில்களுக்கு உதவிபுரிகின்றன. ஆனால், இந்தக் குறைகூறுதலிலும் சற்று உண்மை இருக்கிறது. கடந்த காலங்களிலெல்லாம், பிரிட்டிஷ் பாங்குகள் ஜெர்மனி அல்லது ஐக்கிய அமெரிக்காவின் பாங்குகளைவிடக் குறைவாகவே நேரடி உதவியைச் செய்துவந்துள்ளன. ஜெர்மனியில் பாங்குகளுக்கும் தொழிலுக்கும் நேரடியான நெருங்கிய தொடர்பு இருந்தது. பாங்குகள், தொழில் நிறுவனமொன்றுக்கு, அது எவ்வளவு தொகை கடனாகக் கேட்கின்றதோ அத் தொகையினைக் கொடுக்கும். அந் நிறுவனங்களிலுள்ள இயக்குநர் குழுக்களிலும் தங்களது பிரதிநிதிகளை நியமிக்கின்றன. ஐக்கிய அமெரிக்காவிலும் இம்மாதிரியான வினைவுகளே—ஆனால், சற்றுக் குறைந்த அளவில்—ஏற்பட்டன. பெரிய பாங்குகள், தங்களுடைய துணைக் கம்பெனிகள்மூலம், தொடங்கிய நிறுவனங்கள் தங்கள் கடன் பத்திரங்களை வெளியிட்டுப் பொதுமக்களிடமிருந்து முதல் திரட்டுவதற்குஉதவின. பாங்குகள் இவ் விவகாரங்களத்தனையையும் இயக்கிவந்ததுடன் நிறைய இலாபத்தையும் பெற்றன. சம்பந்தப்பட்ட தொழிற் கம்பெனிகளை நடத்திச்செல்லுவதிலேயும் அவைகள் நிறையப் பங்கு பெற்றன.

பிரிட்டிஷ் பாங்கர்கள் எப்போதுமே இம்மாதிரியான நடவடிக்கைகளை வேண்டுமென்றே மேற்கொள்வதில்லை. ஜெர்மனியிலும், அமெரிக்காவிலும் சமீபத்தில் நடந்த நிகழ்ச்சிகள் பிரிட்டனின் இந்தச் செயல் எவ்வளவு புத்திசாலித்தனமானதென்பதை நினைவூட்டுவனவாக இருக்கின்றன. தொழில் நிறுவனங்களுக்குக் கொடுக்கப்படும் கடன்கள் 'ரொக்கநிலை' உடையன அல்ல. ஒரு தடவை அத்தகைய கடன் கொடுக்கப்பட்டால், சில வருடங்கள் கழிந்தே அதனைத் திரும்பப் பெறமுடியும். இத் தன்மையைப் பொறுத்தமட்டில், 'இவைகள் பிரிட்டிஷ் பாங்குகள் அளிக்கும் கடன்களைப்போன்றே இருக்கின்றன. ஆனால், பலதிறப்பட்ட

'ரொக்கநிலையற்ற' (illiquid) சிறு கடன்களுக்கும், நன்ருக நடத்தப்படாத ஓரிரண்டு தொழில் நிறுவனங்களுக்குப் பகிரங்கமாகக் கொடுக்கப்படும் கடன்களுக்கும் ஓரளவு வித்தியாசம் இருக்கவே செய்கிறது. தொழில் பாங்குமுறை அமெரிக்க பாங்கு முறையைப் போல நேரடியாகக் கடன் கொடுக்காமல் தொழிற் கம்பெனிகளின் கடன் பத்திரங்களை வாங்குவதன்மூலம் கடன் கொடுக்குமேயாளுல், இத்தகைய இடர்ப்பாடுகள் தவிர்க்கப்படலாம். ஏனெனில், பாங்கு இக் கடன் பத்திரங்களை எச் சமயத்திலும் பங்கு அங்காடியில் விற்றுவிடமுடியும். ஆனுல், இந்தக் கடன் பத்திரங்களிலும் சில தொல்லைகள் உள்ளன. அவைகளின் விலை அடிக்கடி மாறுமாகையால், அவைகளை 'ரொக்கநிலை'க்குக் கொண்டுவரவேண்டுமானுல், அவைகளை நஷ்டத்திற்கு விற்றே கொண்டுவர இயலும்.

தொழில் நிறுவனங்களுக்கு நிதியளிக்கும் பாங்குமுறை, நாட்டின் தொழிலுக்கு நிறைய மூலதனம் கிடைக்கச் செய்து, அதன்மூலம் நாட்டின் பொருளாதார நிலையை உயர்த்தவேண்டுமென்கிற எண்ணமுடையவர்களால் சிபாரிசு செய்யப்பட்டதாகும். ஆனுல், பாங்கருக்குத் தொழிலைப் பேணவேண்டிய எந்தத் தனிப் பொறுப்பும் இல்லை. அவரது முதல் கடமை, வைப்பாளிகளின் (depositors) நம்பிக்கையைப் பாதுகாப்பதே. நாட்டிற்கு ஒரு நல்ல பொருளாதார நிலையை உண்டுபண்ணும் கடமை அரசாங்கத்தையே சார்ந்தது. பீதியினுலும், வைப்பாளிகள் பணத்தைத் திருப்பித் தருமாறு போடும் கூக்குரலினுலும், சீர்குலைகின்ற ஒரு பாங்கினுல், அது தொழிலுக்கான பாங்குமுறைத் தத்துவங்களைப் பின்பற்றினுலும் பின்பற்ருவிட்டாலும், நாட்டின் சுமுகமான பொருளாதார வளர்ச்சிக்குத் தடையாக இருக்கமுடியுமே தவிர, வேறு எவ்விதத்திலும் உதவியாக இருக்கமுடியாது.

இந்நூலின் நோக்கம் குறைகூறுவதன்று; விளக்கம் தருவதேயாகும். ஆகையால், தொழில் பாங்கு முறை சிறந்ததா அல்லது வைப்புகள் பாங்கு முறை சிறந்ததா என்னும் வறட்டுவாதத்திற்கு முடிவுகாண்பது இங்குத் தேவையில்லை. ஆனுல், ஒன்றுமட்டும் கூறலாம். பல்வேறு வாதங்களுக்கிடையே, உண்மை என்பது இருவகைத் தீவிரக் கருத்துகளுக்குமிடையே உள்ளது. தொழிலுக்கான மூலதனத்தை அளிப்பதற்கு ஒரு சாதனம் கிரேட் பிரிட்டனில் அவசியம் தேவைப்பட்டது. எனவே, பாங்குகள், முன்பு ஐக்கிய அமெரிக்கா, ஜெர்மனிபோன்ற நாடுகளின் பாங்குகளைப்போல் அதிக அளவில் சிக்கிக்கொள்ளாமல், மேற்சொன்னவாறு தொழில் மூலதனத்தை அளிக்கும் சாதனமாக இருக்கும்படி கேட்டுக்கொள்

ளப்பட்டன. எனவே, 1945ஆம் ஆண்டில் தொழில் நிதியக் கார்ப்பொரேஷன் (The Finance Corporation for Industry), தொழில் வாணிபக் கார்ப்பொரேஷன் (The Industrial and Commercial Finance Corporation) என இரண்டு நிதிய்க் கார்ப்பொரேஷன்கள் ஏற்படுத்தப்பட்டன. இவ்விரண்டும் பாங்குகளால் நிதியளிக்கப் பட்டன. தொழிலுக்கும் வர்த்தகத்திற்கும் பாங்கு கடன்கொடுக்க இயலாத வழிகளிலும், இக் கார்ப்பொரேஷன்கள் நிதியளித்தன. பாங்கின் பல்வேறு பணிகளில் எது முக்கியமானதென்று ஆராய்ந்தால், அது நிரந்தரமானதும் வசதியானதுமான கடனளிக்கும் சாதனத்தைப் பெற்றிருப்பதுதான் என்று சொல்ல நேரிடும். தொழிலுக்கு மூலதனமளிக்கப் பல்வேறு வழிகளிருக்கின்றன. ஆனால், தற்காலத்தில் பாங்கு வைப்புகளினால் மூலதனமளிக்கும் முறையைவிடச் சிறந்ததாகவேறு எம்முறையும் கருதப்படுவதில்லை.

பாங்கு முறையின்மீது சுமத்தப்படும் மற்றொரு வகைக் குற்றச் சாட்டு, இவ்வளவு அதிகமான அதிகாரங்களைக்கொண்ட பாங்குகள் தனியார் உரிமையின்கீழ் விட்டுவைக்கப்பட்டுள்ளன என்பதாகும். இவ் வாதம் இருதிறப்பட்டது. முதலாவது வாதம் பாங்கு பணம் 'சிருட்டித்த' பணமாகையால் அதற்கு வட்டி வாங்குதல் தவறு என்பதும், பாங்கின் கடனைப் பணமெனக் கொள்வது பொதுமக்களின் நம்பிக்கையாதலின் அக் கடன்களில் வரும் இலாபத்தை பாங்கரைவிடப் பொதுமக்களே அடைய வேண்டும் என்பதுமாம். பாங்கர் தான் 'சிருட்டித்த' பணத்திற்கு வட்டி பெறுவதை அனுமதிக்கலாம். ஆனால், பாங்கு தொழிலை, அத்தொழில் நாட்டின் பொருளாதாரக் கொள்கையையே பாதிக்கின்ற அதிமுக்கியத்துவம் பெற்றுள்ளதால், தனியார் ஆளுகையிலிருந்து உடனடியாக மாற்றவேண்டுமென்பது மற்றொரு வாதமாகும்.

மேற்சொன்ன இருவகை வாதங்களில் எது சிறந்ததெனக் கூறும் வேலை நமக்குத் தற்போது வேண்டியதில்லை. ஆனால், இவ்வத்தியாயத்தின் முற்பகுதிகள் முதல் வாதத்திற்கு ஓரளவு பதிலளிப்பதுபோன்று உள்ளன என்பதைமட்டும் கூறலாம். பாங்கர்கள் வரையறையின்றியோ அல்லது யாதொரு செலவுமின்றியோ பணத்தைச் சிருட்டித்துவிடமுடியாது. ஏற்கெனவே நாம் விளக்கியதுபோல், அவர்களுடைய வணிகம் முழுமையும் தங்கள் கடனை மற்றவர்கள் கடனுக்குப் பரிவர்த்தனை செய்துகொள்வதிலேயே அடங்கியுள்ளது. தாங்கள் பிறரிடமிருந்து வாங்கும் கடனுக்குச் சொற்ப வட்டி கொடுப்பதாலும், தங்களிடம் கடன்பட்டிருப்பவர்களிடம் அதிக அளவு வட்டி வாங்குவதாலுமே

அவைகள் இலாபம் பெறுகின்றன. மற்றவர்களுக்குப் பற்றுளராக (creditor) இருப்பதைக் காட்டிலும் பாங்கரிடம் பற்றுளராக இருப்பது விரும்பத்தக்கது. ஏனெனில், பாங்கரின் கடன்கள் பணமாக உள்ளன; மற்றவர்களின் கடன்கள் அவ்வாறிருப்பதில்லை. எனவே, இந்த நலனை உடைய கடன்களுக்கு மற்றவைகளைவிடக் குறைந்த வட்டி கொடுக்கப்படுவது நியாயமானதாகவே தோன்றுகிறது. ஆனால்,பாங்கர் நியாயமாகச் சிறிது இலாபம் பெறலாமென்று கூறுவது, விருப்பப்பட்ட அளவிற்கு இலாபமடையலாமென்பதாகாது. பாங்குகள் பொதுவசதிக்கான நிறுவனங்களாதலால்(public utility), அரசாங்கம் அவைகள் அதிக வட்டி வாங்காவண்ணம் பார்த்துக் கொள்வது அதன் கடமையாகும்.

பாங்குகளை அரசாங்கம் எடுத்துக்கொள்ளவேண்டுமென்பதற்கு இரண்டாவது வாதம், நாம் ஏற்கெனவே அரசாங்கம் ஏன் மைய பாங்கை ஏற்று நடத்தவேண்டுமென்பதற்குக் கூறிய வாதத்தை ஒத்தது. இவ்வாறு பொதுமக்கள் நன்மைக்கான ஒரு தொழிலை அரசாங்கம் தன் ஆளுகையின்கீழ்க் கொண்டு வரவேண்டுமென்னும் வாதம் நியாயமானதாகவே தோன்றுகிறது. ஆனால், அரசாங்கம் பாங்குகளை நாட்டுரிமையாக்கவேண்டுமா என்பதும், எந்த அளவிற்கு அரசாங்கத்தின் சரிநுட்பமான கட்டுப்பாடு பாங்குகளின்மீது இருக்கவேண்டுமென்பதும் விருப்பத்தின் பாற்பட்டதேயொழிய கோட்பாட்டின்பாற்பட்டதல்ல. பாங்குகளை எப்போதுமே தனியார் உடைமையாக வைத்திருக்க தெய்விகச் சட்டம் ஒன்றும் இருக்கவில்லை. அவைகளை நாட்டுரிமையாக்குதல் கவனமுடன் சிந்திக்கப்பட்டு நிதானமாகக் கொண்டுவரப்பட்டால், தீங்கு ஒன்றும் நேராது. ஆனால், நாட்டுரிமையாக்கப்படுதலானது பாங்குகளை பத்திரமானவைகளாகவும், மலிவானவைகளாகவும் ஆக்காவிட்டால் (இவ்விரண்டு விளைவுகளும் உடனடியாக நேரிடா), அது சற்றேனும் நன்மை தராது. இப் பிரச்சினையை ஆராய்வது பொருளாதார நிபுணருக்கோ அல்லது பணமுறையைப் பற்றிய மேல்விவரங்களையல்லாது அடிப்படைகளை அறியவிரும்புபவருக்கோ யாதொரு பயனையும் தராது. எனவே்,இதனை அரசியல் சிந்தனையாளர்களுக்கு விட்டுவிடுவோம்.

# 3. பணத்தின் மதிப்பு

## விலை மட்டம் (Price Level)

பணத்திற்கு மற்றப் பொருள்களினின்றும் தனிப்பட்ட இன்றியமையாத பண்பொன்றுண்டு. அதாவது, பணம் பணமாக இருக்கிறதென்பதற்காகவே விரும்பப்படுவதில்லை. அஃது ஒரு மாற்று மத்திமமாக அல்லது சாதனமாக அல்லது கருவியாக இருப்பதால்தான் விரும்பப்படுகிறது. யாரும் (கஞ்சனைத் தவிர) பணத்தினுல், பின்னுல் அவற்றைக்கொண்டு உண்மையான மதிப்புள்ள பொருள்களையும் பணிகளையும் வாங்கலாமென்பதற்காகவே தவிர வேறு காரணத்திற்காகப் பணத்தைச் சேர்த்து வைக்க விரும்புவதில்லை. பணம் தானுகவே ஒருவிதப் பயனுமற்றது. ஒரு £5 நோட்டு, கசங்கிய காகிதம்தானே என்று மதிக்கப்பட்டால், அதற்கு யாதொரு மதிப்புமில்லை அல்லவா? மாற்று மத்திமமாக ஏற்புத் தன்மையைப் (acceptability) பெற்றிருக்கிற காரணத்தால்தான் அதற்கு மதிப்பு ஏற்படுகிறது.

அடிக்கடி வலியுறுத்தப்படும் இப்பணக் கோட்பாடு, மெய்யானதும் முக்கியமானதுமான ஒரு முடிபாகும். ஒரு பொருளின் விலையானது அப் பொருளைப் பணத்திற்கு மாற்றுச் செய்யும் விகிதத்தை உணர்த்துகிறது. நிலக்கரியின் விலை ஒரு டன் 60 ஷில்லிங்காக இருக்கும்போது, மாற்று விகிதம் 60 ஷில்லிங்கு = 1 டன்னுக அல்லது 3 ஷில்லிங்கு = 1 அந்தராக இருக்கும். பணம் ஒரு மாற்று இடைக் கருவியாகவே இருப்பதால், உண்மையில் அடிப்படையாக உள்ளது. அது நிலக்கரியை மற்றப் பண்டங்களுக்கும் பணிகளுக்கும் மாற்றுச் செய்யக்கூடிய விகிதமேயாகும். 1 டன் நிலக்கரியை விற்கப் போகும் ஒருவனுக்கு, அதனுடைய விலை 60 ஷில்லிங்கு என்ருல், அவன் 60 ஷில்லிங்கைக்கொண்டு தான் என்ன பொருள்களை

வாங்கக்கூடுமென்பதையே எண்ணுகிருன். இஃது அவனுக்குத் தெரியவில்லையானுல், விலே, அவனுடைய ஒரு டன் நிலக்கரியின் மதிப்பு என்ன என்பதை அவனுக்கு உணர்த்தாது. சுருக்கமாகச் சொல்லப்போனுல், விலேயென்பது ஒரு பொருளின் மதிப்பன்று.

இக்கருத்தினைக் கீழ்க்கண்டவாறு விளக்கலாம். திடீரென்று ஒரு நாளில் எல்லாப் பொருள்களின் விலேயும்—நிலக்கரி, ரொட்டி, தபால்தலேகள், தொழிலாளியின் ஒரு நாளேய உழைப்பு, வீடுகளின் வாடகை, இன்னும் மற்றவைகள்—இரட்டிப்பாக அதிகரிக்கின்ற தென வைத்துக்கொள்வோம். விலேகள் பல்வேறு பொருள் களுக்கும் பலவிதமாக மாற்றமடையும். ஆனுல், அப்பொருள் களின் மதிப்புமட்டும் மாருமல் அப்படியே இருக்கும். தற்போது ஒவ்வொருவருடைய வருமானமும் இரண்டு மடங்காக ஆனுலும், ஏற்கெனவே வாங்கிய பொருள்களேத்தான் அவ்வருமானத்தைக் கொண்டு வாங்க இயலும். ஒரு டன் நிலக்கரி, அதற்கு முன்னுல் எத்தனே ரொட்டித் துண்டுகளுக்குச் சமமாக இருந்ததோ, அப்படித்தான் தற்போதுமிருக்கும். மாற்றமடைந் துள்ள ஒரே மதிப்புப் பணமதிப்பு ஒன்றுதான். ஏற்கெனவே £ 1 நோட்டுதான் வாங்க இயலும்; பண்டங்கள், பணிகளில் தற்போது பாதிதான் வாங்க இயலும்.

பணத்தின் மதிப்புப்பற்றிய இக்கருத்து பணப் பொருளாதாரத் தின் (Monetary Economics) முக்கியக் கருத்துகளில் ஒன்ருகும்—இலேசில் அகப்படாமல் நழுவிச் செல்லும் கருத்தும் இதுவே. பணத்தின் மதிப்பு அதனுடைய வாங்கும் திறனேப் பொறுத்த தெனச் சுலபமாகச் சொல்லிவிட முடியும். அடுத்தபடியாக, விலே கள் உயரஉயரப் பணத்தின் மதிப்புக் குறைந்துகொண்டே செல்லும் என்று சுலபமாகக் கூறிவிடலாம். ஆனுல், இங்குதான் சுலபமாக விளக்கந்தருவதும் இயலாததாகின்றது. ஏனெனில், இங்கு ‘எந்த விலேகள்?’ என்னும் கேள்வி எழுகின்றது. இதற்கு விடையாக ‘எல்லா விலேகளும்’ என்று சொல்லத் தோன்றும். ஆனுல், சாதாரணக் குடிமகன் பணத்தின் மதிப்பு என்ருல் என்ன என்று வினவும்போது அவரிடம், அவர் £ 1-க்கு வாங்கும் டங்ஸ்டனின் தாதுப் பொருள் (wolfram) அல்லது ஆண்டிமனி என்னும் உலோகம் (antimony) அல்லது வெடிமருந்தின் மூலப் பொருள் (trinitrotoluene) இவைகளின் அளவுகளால் பாதிக்கப்படு வதே ‘பணமதிப்பு’ என்று கூறுவதில் சற்றேனும் பொருளில்லே அல்லவா? அவன் வாங்குகிற அல்லது நியாயமாக வாங்கும்படி எதிர்பார்க்கப்படுகிற பொருள்களில் £ 1-க்கு எவ்வளவு பொருள் களே அவன் வாங்க இயலும் என்பதை அறிய உள்ளபடி அவனுக்கு

விருப்பமாகவே இருக்கும். இந்த ஆராய்ச்சி மேற்கண்ட பொருள்களில்மட்டுமே மேற்கொள்ளப்பட்டாலும், ஏறக்குறைய எல்லையற்ற மாறுதல்களை நாம் காணலாம். ஜெர்மனியின் சாதாரணக் குடிமகன் ஒருவனுக்கு ரை (rye) தானியத்தில் செய்யப்பட்ட ரொட்டியின் விலையைப்பற்றித் தெரிந்துகொள்ள ஆசை இருக்கும்; இங்கிலாந்தின் சாதாரணக் குடிமகனுக்கு அதைப்பற்றித் தெரிந்துகொள்ளும் தேவை இராது. திருமதி ஸ்மித், மார்கரின் (margarine) என்று சொல்லப்படும் செயற்கை வெண்ணெயின் விலை மாற்றத்தால் பாதிக்கப்படலாம்; இதைச் சாப்பிடப் பயன்படுத்தாத பக்கத்து வீட்டில் வசிக்கும் திருமதி ஜோன்ஸ் பாதிக்கப்படமாட்டார். சுருக்கமாகச் சொல்லின், பணத்தைச் செலவிடும் எந்த இரு மனிதர்களுக்கும் பணம் ஒரே அளவு மதிப்பு வாய்ந்ததாக இருப்பதில்லை. மேலும், சாதாரண ஆணும், பெண்ணும் செலவழிப்பதை ஆராய்வதில்மட்டும் நாம் நின்றுவிடக்கூடாது. எல்லோரும் தாங்கள் விற்கும் பொருள்களில் ஏற்படும் மாறுதல்களைப்பற்றித் தெரிந்துகொள்ளவும் விரும்புவர் — இதில் பெரும்பாலோருக்குத் தங்களது 'உழைப்பே' விற்கும் பொருளாக இருக்கும். பணத்திற்கு மதிப்பை ஏற்படுத்தும் பல்வேறு பொருள்களில் கூலியும் (wage) ஒன்றும். வியாபாரிக்குத் தன்னுடைய பணம் எவ்வளவு பஞ்சுக் கட்டுகளை அல்லது எத்தனை மரக்கால் கோதுமை அல்லது எத்தனை டன் எஃகை வாங்கக்கூடும் என்பதை அறிவதில் விருப்பமிருக்கும்.

எனவே, 'பணத்தின் மதிப்பு' என்னும் சொற்றொடர் வரையறுக்கப்படாத வகையில் பொருள் கொள்ளப்படுமானால், அச்சொற்றொடரே பொருளற்ற சொற்றொடராகிவிடும். பயன்படுத்துவதற்குத்தகுந்தாற்போலப் பணத்திற்குக் கணக்கிடமுடியாதவாறு பலவிதமான மதிப்புகள் இருக்கின்றன. இதிலிருந்து தப்புவதற்கான ஒரே வழி, பணத்தின் தரப்படுத்தப்பட்ட மதிப்புகள் (standard values) சிலவற்றைத் தன்முனைப்பாக (arbitrarily) அறுதியிட்டுக் கொள்வதேயாகும். இவ்விதம்தரப்படுத்தப்பட்ட மதிப்புப் பலவற்றில் வழக்கமாக மூன்றினைச் சிறப்பாகக் கூறலாம். இவற்றில் முதலாவதாகப் பொது அங்காடிகளில் (public markets) விலை எழுதப்பட்டு விற்கப்படுகிற பொருள்களை வாங்குவதில் பணத்திற்குள்ள மதிப்பைக் கூறலாம். இப்பண்டங்களுக்குத் தனிப்பட்ட சிறப்பு ஏதுமில்லை. இவைகளின் விலை இன்னதென்ற விவரம் உடனடியாக நம்க்குக் கிடைப்பதால்தான், இப்பண்டங்களை நாம் ஆராய்கின்றோம். மேலும், அவ்விலைகள் சரிநுட்பமாக (precisely) பதிவு செய்யப்படுகின்றன. அடிக்கடி குறிப்பிடப்படுகிற 'பணமதிப்பு' என்பது இதுதான். 'பணத்தின் மதிப்பு' என்ற இச்சொற்றொடர் வரையறுக்கப்படாத பொருளில் எடுத்தாளப்படும்போது இதனையே

குறிக்கும். இப்படி விலை சொல்லப்படுகிற பெருவாரியான பண்டங்கள், நுகர்வோருக்கு அளிக்கப்படுகிற செய்பொருள்களைக் காட்டிலும் கச்சாப் பொருள்களாகவே (உதாரணமாக, கோதுமை, ஆனால், ரொட்டியல்ல) உள்ளன. மேலும், இப்பண்டங்கள் பெரும் அளவில் பேரம் நடத்தப்படும் பண்டங்களாகவுமிருக்கின்றன. இதன் காரணமாகத்தான் பணத்தின் இம்மதிப்பை மொத்த வியாபார மதிப்பு (wholesale value) என்றும் கூறலாம்.

இரண்டாவதாகச் சிறப்பித்துக் கூறப்படுகிற பணமதிப்பு, சாதாரணக் குடும்பம் நுகருகின்ற பண்டங்களையும் பணிகளையும் வாங்குவதில் உள்ள பணமதிப்பாகும். இஃது இருவகை இடர்ப்பாடுகளைக்கொண்டதாகும். ஒரு பொதுப்படையான (average) குடும்பம் தன் வருமானத்தைக்கொண்டு எவ்வளவு பொருள்களை வாங்க இயலும் என்று கண்டுபிடிப்பதே உண்மையில் சிரமமான காரியமாகும். ஏனெனில், இதைக் கண்டுபிடிப்பதற்குப் பல்வேறு விவரங்களை ஆராயவேண்டும். இரண்டாவது இடர்ப்பாடு, பண்டங்களின் ஒரு நிலையான பட்டியலைத் தயாரித்த பின்னர் அவைகளின் விலை என்னவென்று கண்டுபிடிப்பதிலுள்ளது. கோதுமைக்கு ஒரு நிலையான விலை (standard price) இருப்பதுபோல், ரொட்டிக்கு இருப்பதில்லை; நகரத்திற்கு நகரம், கடைக்குக் கடை ரொட்டியின் விலை மாறிக்கொண்டிருக்கும். இறைச்சியிலும் இம்மாதிரி விலையில் நிறைய மாற்றங்கள் இருக்கும். வீடுகளின் வாடகையிலும் (பெருவாரியான குடும்பங்களின் செலவில் இது ஒரு முக்கிய இனமாகும்) ஒரே மாதிரியான வாடகை இருக்காது என்று கூறுதலும் மிகையாகாது.[1]

மூன்றாவது முக்கியமான வகை, தொழிலாளரை வேலைக்கு அமர்த்திக்கொள்ளுவதில் பணத்திற்குரிய மதிப்பைக் குறிப்பதாகும். ஒரு நாள் வேலைக்குத் தரப்படும் கூலி வீதத்தினால் இது நிர்ணயிக்கப்படுகிறது. இங்கும் சரியாக விளக்கம் தருவதற்குப் பல இடர்ப்பாடுகளிருக்கின்றன. ஏனெனில், உழைப்பில் பல வகை உண்டு. இப்படி உழைப்பைப் பொறுத்து பணத்தின் மதிப்பைக் கணக்கிடுதற்குப் பணத்தின் உழைப்பு மதிப்பு என்று (labour value of money) அழைக்கலாம். இங்கு வேறுபடுத்திக் கூறப்பட்ட மூன்று வகைப் பணமதிப்பு விளக்கங்களும் நமக்கு மிகவும் பழக்கப்பட்டவை. சில சமயங்களில் சில தனி ரகமான பண

1 இயல்பான காலங்களைவிடக் கண்டிப்பான விலைக் கட்டுப்பாடு (rigid price control) இருக்கும்போது, இக்கூற்று உண்மையற்றதாகவோ அல்லது உண்மை குறைந்ததாகவோ தோன்றும். ஆனால், என்றாவது ஒரு நாள் இயல்பான காலம் வரும் என்று நம்புவதும் முறையானதே. ஆகையால், இந்நூலின் முதற் பதிப்பில் கூறியிருப்பது இங்குப் பொருந்தும்.

மதிப்பு வகைகளையும் நாம் ஆராயவேண்டியிருக்கிறது. உதாரணமாக, ஒவ்வொரு நாட்டிலும் சில சமயங்களில் பணமதிப்புப்பற்றி விவசாயிகளுக்குக் கூறவேண்டியிருக்கிறது. இப் பண மதிப்பு அந்த நாட்டின் விவசாயிகள் வாங்குகிற அல்லது விற்கிற பொருள்களின் தனிப் பட்டியல்களால் (special lists) பெரிதும் நிர்ணயிக்கப்படுகிறது.

எனவே, பணமதிப்புப்பற்றிச் சரியாக விளக்கம் தருவதென்பது சற்றுக் குழப்பமான காரியமேயாகும். மொத்த வியாபாரப் பணமதிப்பு (wholesale value of money) என்பது, பொது அங்காடியில் மொத்த வியாபாரம் செய்யப்படும் பண்டங்கள் சம்பந்தப்பட்ட ஒருவருக்குப் பணமதிப்பின் பொருளை உணர்த்தும். பொது அங்காடியில் மொத்த வியாபாரம் செய்யப்படும் பண்டங்கள் சம்பந்தப்பட்ட ஒருவருக்குப் 'பணமதிப்பு' என்ருல், மொத்த வியாபாரப் பணமதிப்பாக இருக்கும். ஒரு சாதாரணக் குடும்பம் எந்தப் பொருள்களை வாங்குகிறதென்று ஆராய்ந்து முடிவுசெய்யப்பட்டிருக்கிறதோ அந்தப் பொருள்களையே வாங்குகின்ற ஒரு குடும்பத்திற்குப்'பணமதிப்பு'என்பது சில்லறை வியாபாரப் பணமதிப்பாகத் தோன்றும். ஒவ்வொரு விதமான தொழிலையும் வேலைக்கமர்த்திக் கொள்ள விழையும் ஒரு மனிதன் அல்லது நிறுவனத்திற்குப் 'பணமதிப்பு' உழைப்புப் பணமதிப்பாகத் (labour value of money) தோன்றும்.

இவ்விதமான தன்முனைப்பான (arbitrary) எடுகோள்களின் (assumptions)மீதுதான் நம்முடைய'பணமதிப்பு'ப்பற்றிய விளக்கம் அமைக்கப்பட வேண்டும்—இன்னும் தெளிவாகக் கூறப்போனுல், மூன்று வேறுவகைப் பணமதிப்புகளுமே இவ்வெடுகோள்களின் அடிப்படையில்தான் அமையவேண்டும். இவ்விளக்கங்களில் உள்ள இடர்ப்பாடுகளோ இன்றும் இருக்கத்தான் செய்கின்றன. மொத்த வியாபாரப் பணமதிப்பினை ஆராய்ந்தோம். நாம் அம்மதிப்பினை அளக்கவேண்டும். £ 1 ன் மொத்த வியாபாரப் ப்ணமதிப்பு என்பதென்ன? இதற்கு விடையளிப்பதற்கு ஒரே வழி, £1-க்கு இவ்வளவு மரக்கால் கோதுமை, இத்தனை கட்டுகள் (bales) பஞ்சு, இத்தனை டன்கள் எஃகு, இத்தனை காலன்கள் எண்ணெய், இத்தனை மூட்டைகள் சிமிட்டி என்று நீண்டதும் நிறைந்ததுமான பட்டியல் ஒன்றுதான். அப்படியும் இந்தப் பட்டியல் நம்முடைய குறிப்பிட்ட நோக்கத்திற்கு யாதொரு பயனையும் தராது. இவ்வாறு பணமதிப்பின் பல்வேறு வகைகளில் எந்த ஒன்றைப்பற்றிக் குறிப்பிட நேரினும், அது நீண்ட வேலையாக இருக்கும். இது சம்பந்தமான நீண்ட அறிக்கையும், சரியாக இருந்தபோதிலும், முற்றுப்பெருத தொன்ருகவே இருக்கும்.

ஆகவே, 'பணமதிப்பு' அளக்கப்பட இயலாததென்பது ஒப்புக்கொள்ளப்பட வேண்டியதொன்ருகும். அதிர்ஷ்டவசமாக அதை அளக்கவேண்டிய தேவையும் நமக்குப் பெரும்பாலும் ஏற்படுவதில்லே. உண்மையில், அளவிடப்படக்கூடிய வகையில் நாம் தெரிந்துகொள்ள விரும்புவது பணத்தின் முழுமையான மதிப்பை அல்ல; ஏனெனில், பணத்தின் மதிப்பே காலத்திற்குக் காலம் மாறுந் தன்மையுடையது. £ 1 நோட்டிற்குச் சென்ற மாதம் அல்லது சென்ற ஆண்டு அல்லது பத்து ஆண்டுகட்கு முன்னர் இருந்த மதிப்பைக் காட்டிலும் தற்போதுள்ள மதிப்பு அதிகமாக உள்ளதா அல்லது குறைவாக உள்ளதா? அளக்கப்படவேண்டியது பணத்தின் மதிப்பு அல்ல; பணத்தின் மதிப்பில் ஏற்படும் மாறுதல்களே.

குறியீட்டு எண்கள் (index number) என்று அழைக்கப்படும் ஒருவிதப் புள்ளிவிவர முறையின்மூலம் இதனை அளக்கக்கூடும். குறியீட்டு எண்களை அளப்பதும், அவைகள் இன்னவை என விளக்கம் தருவதும் சற்றுச் சிக்கலான அறிவியலே (science) யாகும். ஆனல், அதிர்ஷ்டவசமாக நாம் அவைகளை மேலெழுந்தவாரியாகத்தான் பார்க்கப்போகிருேம். தற்போது நாம் மொத்த வியாபாரப் பணமதிப்புப்பற்றி ஆராய விரும்புகிருேம் என்று வைத்துக்கொள்வோம். இம்மதிப்பு, பட்டியலில் விளக்கப்பட்டுள்ள மொத்த வியாபாரப் பண்டங்களின் விலேகளால் நிர்ணயிக்கப்படுகிறது. இவ்விலேகள் அதிகரிக்கஅதிகரிக்க, மொத்த வியாபாரப் பணமதிப்புக் குறைந்துகொண்டே செல்லும். இதைப்போலவே விலேகள் குறையக்குறைய, மொத்த வியாபாரப் பணமதிப்பு அதிகரித்துக்கொண்டே செல்லும். எனவே, இம் மொத்த வியாபாரப் பணமதிப்பிற்கு ஒரு குறியீட்டெண்ணைக் கண்டுபிடிக்கவேண்டும். இதனைக் கண்டுபிடிப்பதற்கு முதற்படியாகக் கடந்த காலத்தில் ஒரு காலத்தை அடிப்படைக் காலமாகத் தேர்ந்தெடுத்துக்கொள்ளவேண்டும். எந்தக் காலத்தையும் இம்மாதிரித் தேர்ந்தெடுத்துக்கொள்ளலாம். ஆனல், தரைப்படம் தயாரிப்பவர் ஒருவர் அப்படத்தில் குத்துயரங்களை (altitudes) உணர்த்துவதற்கு ஓர் அடிப்படையான உயரம் உணர்த்தும் கோடு ஒன்றை (datum-line) அவசியம் பயன்படுத்தவேண்டும். குத்துயரங்கள் 'கடல் மட்டத்திற்குமேல் இத்தனை அடி உயரம்' என்று குறிப்பிடப்படும்போது, கடல் அடிப்படையான உயரம் உணர்த்தும் கோடாகக் கொள்ளப்படுகிறது (கடல் மட்டம் ஒரே அளவான உயரத்தைக் கொண்டதாக இல்லாவிட்டாலும்). ஆனல், அவைகள் இஃப்பல் கோபுர உச்சிக்கு மேல் (அல்லது கீழ்) இவ்வளவு அடி உயரம் என்று தெளிவாக ஓர் உயரத்தைக் காட்டுவதுபோல் அவ்வளவு

சரிநுட்பமாக இருக்கும். விலைகளுக்குக் கடல்மட்டத்தைப்போன்று அடிப்படையான கோடு ஒன்றுமில்லை. குறியீட்டெண்ணைத் தொகுக்கும் ஒவ்வொருவரும் ஓர் அடிப்படையான கோடுஒன்றினைத் தாங்களே ஏற்படுத்திக்கொள்கின்றனர். பழக்கமாக அவர்கள் சில ஆண்டுகளை அடிப்படை ஆண்டாக வைத்துக்கொள்ள உகந்தவைகளாகக் கருதுகின்றனர். இதேபோன்று, கிரேட் பிரிட்டனில் 1935ஆம் ஆண்டு அடிக்கடி அடிப்படை ஆண்டாகக் கையாளப்படுகிறது. ஏனெனில், மற்ற ஆண்டுகளைவிட இந்த ஆண்டிற்கே புள்ளிவிவரங்கள் நிறையக் கிடைத்துள்ளன. 1929ஆம் ஆண்டும் இதுபோன்று அடிப்படை ஆண்டாக அடிக்கடி கையாளப்படுகிறது. ஏனெனில், இந்த ஆண்டு பெரிய மந்தத்திற்கு (பெரிய பொருளாதார மந்தம்—Great Depression) முந்திய ஆண்டாகும். இதைப்போலவே 1913ஆம் ஆண்டும், 1938ஆம் ஆண்டும் பயன்படுத்தப்படுகின்றன; ஏனெனில், அவ்விரண்டு ஆண்டுகளும் இருபெரும் யுத்தங்களுக்கும் முன்னுள்ள ஆண்டுகளாகும்.

அடிப்படை ஆண்டு தேர்ந்தெடுக்கப்பட்டதும், அந்த ஆண்டின் சம்பந்தப்பட்ட பண்டங்களின் விலைகளைப் பட்டியலாகத் தயாரிக்கவேண்டும். நாம் 1913ஆம் ஆண்டை அடிப்படை ஆண்டாகத் தேர்ந்தெடுத்து, அந்த ஆண்டின் விலைகளைப் பட்டியல்படுத்துகிறோமெனக் கொள்வோம். தற்போது நாம் 1937ஆம் ஆண்டிற்கு ஒரு குறியீட்டெண்ணைக் கண்டுபிடிக்க வேண்டுமெனக் கொள்வோம். அதே பொருள்களின் 1937ஆம் ஆண்டின் விலைகளை ஓர் இரண்டாவது பட்டியலாகத் தயாரித்துக்கொள்ளவேண்டும். ஒரு வகையாகச் சொல்லப்பட வேண்டுமென்பதற்காக 1913ஆம் ஆண்டு விலையின் அடிப்படையில் இத்தனை சதவீதம் என்று அவ்விலைகளைக் குறிப்பிடுகிறோம். 1913ஆம் ஆண்டு 1 டன் 15 ஷில்லிங்காக இருந்த நிலக்கரி 1937ஆம் ஆண்டு 1 டன் 30 ஷில்லிங்காக விற்கிறதென வைத்துக்கொள்வோம். அப்போது 1913ஆம் ஆண்டின் விலையை 100 என்றும், 1937ஆம் ஆண்டின் விலையை 200 என்றும் குறிப்பிடுவோம். சில பண்டங்களுக்கு 1913ஆம் ஆண்டின் விலைகள் 100 ஆகவும், 1937ஆம் ஆண்டின் விலைகள் 60 ஆகவுமிருக்கக்கூடும். இம்முறையில் கடைசியாகச் செய்யவேண்டியது, 1937ஆம் ஆண்டின் எல்லா விலைகளுக்கும் சராசரி[1] கண்டுபிடிக்கவேண்டியதேயாகும். அச் சரா

1 சராசரி கண்டுபிடிப்பதில் பல வழிகளுண்டு. மிகச் சுலபமானது அல்லது கணக்குமுறையானதான முறை, இனங்களத்தனையையும் கூட்டி அவ்வினங்களின் எண்ணிக்கையால் வகுப்பது. வடிவகணித வாயிலாக (geometrical method) மூன்று எண்களுக்குச் சராசரி கண்டுபிடிப்பதற்கு அம்மூன்று எண்களையும் பெருக்கி வந்த தொகைக்கு மூன்றும் மூலம் (cube root) கண்டுபிடிக்கவேண்டும். அதேபோல், நான்கு எண்களின் சராசரியைக் கண்டுபிடிப்பதற்கு அவைகளைப் பெருக்கி

சரி எண்ணே குறியீட்டு எண்ணுகும். 1937ஆம் ஆண்டின் மொத்த விலைகளின் குறியீட்டெண் 107 என்று நாம் கூறினுல் (1913=100), இப்பண்டங்களின் விலை 1937ம் ஆண்டில் 1913-ல் இருந்ததைவிடச் சராசரியில் 7 சதவீதம் அதிகரித்துவிட்டதென்று பொருள். ஆனுல், பல்வேறு பொருள்களின் விலைகள் தனித்தனியே இதற்குக் குறைந்தோ அல்லது அதிகரித்தோ இருக்கலாம்.

குறியீட்டெண்களை அமைக்கும் முறையின் நீண்ட விளக்கம் இதுதான். பல்வேறு வரையறைகளிலும், குழப்பங்களுக்கிடையேயும் ஒன்றுமட்டும் இங்குக்குறிப்பிட வேண்டியதாகும். பட்டியலில் அடங்கியுள்ள பண்டங்கள் யாவும் சமமான முக்கியத்துவம் வாய்ந்தவை என்றும், உள்ளடங்கிய எடுகோளின் (tacit assumption)மீதுதான் இம்முறை இயங்குகிறது. உண்மையில் பண்டங்கள் யாவும் சமமான முக்கியத்துவம் வாய்ந்தவைகளாக இருப்பதில்லை. குண்டூசிகளின் விலையில் அதிகமான உயர்வு ஏற்பட்டபோதிலும், அது ரொட்டியின் விலையில் சிறிதளவு அதிகரிப்பைக் காட்டிலும் குறைந்த முக்கியத்துவமே வாய்ந்தது. இந்த இடர்ப்பாட்டினை 'பளு உண்டுபண்ணுதல்' (weighting)என்னும் முறையினுல் களையலாம். 'பளு உண்டுபண்ணுதலில்' மிகவும் சுலபமான முறை, குறியீட்டில் மூன்று அல்லது நான்கு வகை மிக முக்கியமான பண்டங்களைச் சேர்த்துக்கொள்ளுதலாம். இதன்படி ஒரு மொத்த விலைக் குறியீட்டில் கானடா, ஆஸ்திரேலியா, அர்ஜென்டினு, இங்கிலாந்து ஆகிய நாடுகளின் கோதுமை குறிக்கப்பட்டிருக்கலாம். இந்த நான்கு வகைக் கோதுமையும் ஏறக்குறைய ஒரே மாதிரியானவையாதலால், இதன் விளைவு, கோதுமையில் எந்த ஒரு விலைமாற்றம் ஏற்பட்டபோதிலும், அது கடைசிக் குறியீட்டில் (final index) குறைந்த முக்கியத்துவம் வாய்ந்த பண்டத்தில் ஏற்படுவதைப் போல் நான்கு மடங்கு 'பளுவை' (weight) உண்டுபண்ணும். ஒரே வகையான கோதுமையை நான்கு மடங்காகக் குறியீட்டில் சேர்த்துக் கணக்கிட்டாலும் இதே விளைவைப் பெறலாம். நேரடியான இந்த முறையே வழக்கமாகக் கையாளப்படுகிறது. சில வகைக் குறியீட்டெண்களுக்குப் 'பளு உண்டுபண்ணுதல்' (weighting) மிக இன்றியமையாததாகும். ஆனுல், குறியீட்டெண்ணை அமைப்பவரின் கருத்தைப் பொறுத்ததாகையால், இது

---

வந்த தொகைக்கு நான்காம் மூலம் (fourth root) கண்டுபிடிக்கவேண்டும். இப்படியே மற்ற எண்களின் சராசரிக்கும் கண்டுபிடித்துவிடலாம். எனவே, பாடத்தில் கொடுத்துள்ள கணித சராசரியானது $\frac{1}{2} \times (200+60)$ அல்லது 130; வடிவகணித சராசரியானது $\sqrt{200+60}$ அல்லது ஏறக்குறைய $109\frac{1}{2}$. இம்முறைகளில் எது சரியெனக் கூறுவது சற்றுக் குழப்பமான காரியம்; இங்கே அப்பிரச்சினையை ஆராயாமல் விட்டுவிடுவோம்.

ஒரு தன்முனைப்பான (arbitrary) முறையேயாகும். 'பளு உண்டு பண்ணுதற்கு'ப் பயன்படுத்தப்படும் பொருள்கள் ஒரு சமயம் 'பளு' வாக இருப்பதுபோல் மற்றொரு சமயமிருப்பதில்லை. உதாரணமாக, இங்கிலாந்தில், பணத்தின் மொத்த வியாபார மதிப்பில் கச்சாப் பருத்தி மிகவும் முக்கியம் குறைந்த ஓர் உறுப்பாகத் தற்போது கருதப்படுகிறது. இதற்குமுன்னால்—அதாவது, பருத்தித் தொழிலே நாட்டின்மிகப்பெருந் தொழிலாகவிளங்கியபோது, அது பணத்தின் மொத்த வியாபார மதிப்பில் (wholesale value of money) முக்கியம் வாய்ந்த ஓர் உறுப்பாகவே இருந்தது. சில பழைய மொத்த வியாபாரக் குறியீட்டெண்கள், பருத்திக்குத் தற்போதுள்ள முக்கியத்துவம் குறைந்துள்ள நிலையால், உருக்குலைந்து மாறியுள்ளன.

## விலையின் ஏற்ற இறக்கங்கள்

குறியீட்டெண் என்னும் இத்தனித்துறைச் சாதனத்தின் (technical device) மூலம் பணமதிப்பின் மாற்றங்களை அளவிடுதல் இயலும். இன்னும் சரிநுட்பமாகச் சொல்லப்போனால், பண மதிப்பின் பல்வேறு வகை மாற்றங்களையும் குறிப்பிட இயலும். பண மதிப்பின் இப் பல்வேறு வகைகள் ஒவ்வொன்றும் ஒரு வகைப்பட்ட நோக்கத்திற்குப் பொருத்தமானவை. 'பணத்தின் மதிப்பு' (value of money) என்னும் கருத்தை விளக்குவதுபோன்று, ஒரு புள்ளிவிவரத்தைக்கொண்ட சாதனத்தை விளக்குவது அவ்வளவு சுலபமல்ல. இம்முறையைப் பயன்படுத்தியே மற்ற எந்தப் பொருள்களின் மதிப்பில் ஏற்படும் மாற்றத்தையும் பின்னல் ஊசிகளோடு சம்பந்தப்படுத்தி அளவிட்டுவிட இயலும். 'பின்னல் ஊசிகளின் மொத்த வியாபார மதிப்பையும்', அவைகளின் 'சில்லறை வியாபார மதிப்பையும்', 'பின்னல் ஊசிகளின் உழைப்பு மதிப்பையும்' அளவிட முடியுமென்றாலும், இக்கருத்தில் உண்மை இருக்கிறதென்பதைமட்டும் நிலைநிறுத்த இயலாது. இதேபோன்று, விலைகள் கண்மூடித்தனமாகத் தாறுமாறாக ஏறிக்கொண்டோ அல்லது இறங்கிக்கொண்டோ செல்லுமாயினும், அப்போது கணிக்கப்படுகிற எந்தக் குறியீட்டெண்ணும் வெறும் கணிதச் சூனியங்களாகவோ (arithmetical ciphers) அல்லது குருட்டுக் கணக்குகளாகவோ இருக்கும். விலைகள் (எல்லா விலைகளுமல்ல; ஆனால், பெருவாரியான விலைகள்) ஒருமித்து இயங்கினால்தான்—அதாவது, ஒரே வழியில் ஒரே நேரத்தில்—நாம் உண்மையாகப் 'பணமதிப்பு' என்று ஒன்று உள்ளதென்று கூற இயலும்.

அன்றாட வாழ்க்கையிலுள்ள விலைகளின் தன்மையில் சற்றே பரிச்சயமிருக்குமாயினும், அவ்விலைகள் வியக்கத்தக்க வண்ணம் ஒழுங்காக இயங்கிச் செல்வதைக் கண்கூடாகப் பார்க்கக்கூடும்.

ஒவ்வொரு குறிப்பிட்ட விலையும் அதற்கே சொந்தமான விளைவு களுக்குட்பட்டதே. உதாரணமாக, பார்லியின் விலை அந்த ஆண் டின் பார்லி விளைச்சலின் தன்மையைப் பொறுத்தது. வேறு எந்த விலையும் இதே தன்மையான விளைவுகளைக் கொண்டிருக்காது. சில பண்டங்களின் குறிப்பிட்ட விளைவுகள் மற்ற எல்லாப் பொருள்களின் விலைகளினால் ஏற்படும் பொதுவான விளைவுகளையும் மிஞ்சும்படியாக இருக்கும். பெருவாரியான விலைகள் அதிகரித்துக்கொண்டு செல்லும் போது, சில விலைகள் எப்போதும் குறைந்துகொண்டே செல்லும். இதைப்போன்றே பெருவாரியான விலைகள் குறைந்துகொண்டே செல்லும்போது, சில விலைகள் எப்போதும் ஏறிக்கொண்டே போகும். ஆனால், இச் சில விலைகள் விலக்கானவைகளே. பெரு வாரியான விலைகள் யாவும் ஒத்தியங்குவதால், விலை ஏறும் காலங் களையும் இறங்கும் காலங்களையும், இவ்வார்த்தைகளின் பொருள் குன்றாதபடி கூறமுடிகிறது. மேலும், எந்த ஒரு விலையும் சில சமயத் தில் சராசரி நிலையைவிட்டு விலகியும், மற்றொரு சமயத்தில் அந் நிலையை வந்தடையும் தன்மையைப் பலமாகப் பெற்றுள்ளது. ஆனால், இஃது ஒரு புதிய கண்டுபிடிப்பு அல்லது படைப்பினால் ஒரு பண்டம் நிரந்தரமாக விலை குறைக்கப்படும்போதோ அல்லது அப் பண்டங்களை அளிக்கும் முக்கியச் சாதனம் (source) வறண்டுபோன தால் விலை ஏறும்போதோ உண்டாவதில்லை. மேலும், இவைகள் விதிவிலக்கானவைகளே. எந்தப் பண்டங்களின் விலை மற்றப் பண்டங்களின் சராசரியான விலையைவிட்டு விலகியிருக்கின்றன என்று கவனித்து, அப்பண்டங்களின் விலை விரைவில் சராசரி விலைக்கு வந்துவிடும் என்னும் எடுகோளின் (assumption) மீது அவைகளில் யூகபேரம் (speculation) நடத்தப்பட்டு நிறையப் பணம் ஈட்டப்படுகிறது. பண்டங்களின் இத்தகைய தன்மையைக் கீழ்க்கண்டவாறுதான் விளக்க இயலும். அதாவது, எல்லா விலை களையும் ஒரு சக்தி இயக்குகின்றது. ஏதோ ஒருசில குறிப்பிட்ட பண்டங்களின் தனிப்பட்ட பண்புகள்தாம் இச் சக்தியை ஓங்க வொட்டாமல் செய்யும். இச் சக்திதான் விலைகளின் சராசரி மட்டத்தைத் தோற்றுவிக்கின்றது. இதுவே பணமதிப்பை ஆளு வதும் தோற்றுவிப்பதுமாக இருக்கிறது. ஒவ்வொரு விலையும் ஒரு பக்கம் குறிப்பிட்ட பண்டம் அல்லது பணிக்கும், மற்றொரு பக்கம் பணத்திற்குமிடையேயுள்ள விகிதமாக (ratio) இருக் கிறது. அப்படியானால், எல்லா விலைகளுக்கும் பொதுவான ஒரு சக்தி இருந்துகொண்டு, அவைகளின் ஏற்றத்திற்கும் இறக் கத்திற்கும் காரணமாக இருந்துகொண்டிருக்க வேண்டும். அச் சக்தி என்னவென்று நாம் ஆராய்வோமானால், எல்லா விலைகளுக்கும் பொதுவானதாக உள்ள பணத்தையே நாம் காணலாம்,

பணத்தின் தன்மையில் இஃது ஒரு புதிய தன்மையைப் புகுத்து கின்றது. நாம் ஏற்கெனவே பார்த்ததுபோல், அதனுடைய நோக்கம் ஓர் இடையீட்டுப் பொருளாகப்(intermediary) பணிபுரிவ தென்பதே. ஓர் அந்தர் நிலக்கரி மூன்று ஷில்லிங்கிற்குச் சமம் என்று கூறும்போது, அதுவே நிலக்கரியின் மதிப்பை ரொட்டிக்கும், அணியிழைகளுக்கும் (ribbons),இன்னும் ஆயிரமாயிரம் பொருள் களுக்கும் சம்பந்தப்படுத்திக் கூறச் சிறந்த சாதனமாகவுமிருக் கின்றது. இங்குதான் தானே சொந்தமாக வாழ்க்கையை நடத்திக்கொண்டுவருகிற பணம் என்னும் இடையீட்டுப் பொருளை நாம் கண்டுபிடித்தோம். வெறும் கணக்கிடும் சாதனமாக இருப்பதைவிட்டுப் பணம் தன் செல்வாக்கை எல்லா விலைகளின் மீதும் செலுத்துகிறது. இது எப்படி இருக்கிறதென்றால்,நீளங்களைப் (lengths) பார்த்துக் காப்பி அடித்து கெஜக்கோல் (yardstick) தோன்றியிருப்பது போன்றிருக்கிறது. வெறும் நடுநிலையாக மட்டும் இருப்பதில் பணம் தோல்வியடைகின்ற காரணத்தாலும், தனக்குரிய பணியை நிறைவேற்றுவதில் விடாப்பிடியாக இருப்ப தாலும்—உண்மையில் பணமதிப்பென்பது உண்மையானதொன் றாகும்; அது வெறும் கணிதத்தின் தற்செயலான விளைவல்ல—அது பணப் பொருளாதாரத்தில் அநேகமாக எல்லாப் பிரச்சினைகளையும் இடர்ப்பாடுகளையும் தோற்றுவிக்கின்றது. இந் நூல் இப் பணப் பொருளாதாரம் சம்பந்தப்பட்டதே.

விலைகள் பெரும்பாலும் ஒரே திசையில் ஒரு சமயத்தில் சென் றாலும், அவைகள் ஒரே அளவில் செல்லுகின்றன என்று கூற முடியாது. அதற்கு மாறாகப் பல்வேறு விலைகளின் வேகமாற்றத் தில்(volatility) பல திறப்பட்ட மாறுதல்கள் உண்டு. இவ்வேக மாற்றத்தை ஒரே சீரானதாகத் தற்போது நாம்அமைக்கவேண்டும். மிகவும் அதிகமான வேகமாற்றத்தையுடைய பண்டங்கள் யூக பேரத்தில் வர்த்தகம் செய்யப்படும் கச்சாப் பொருள்களே. ரப்பர்—அது 1939-45ஆம் ஆண்டுகளின் போரின்போது அரசாங்கத்தின் கையில் முழுமையும் வருகின்றவரையில்—இப்பொருள்களில் ஒன்றாக இருந்தது. குறுங்காலத்தில் (short period) ரப்பரின் அளிப்பில் மாறுதல் ஏற்படுத்துதல் கடினம். அதனுடைய அளிப்பை அதிகரிப்பதுங்கூடக் குறைந்த காலத்தில் கடினமாகும். ஏனெனில், ஒரு ரப்பர் மரம் வளர்க்கப்பட்டுப் பயன்தருவதற்கே ஐந்தாண்டு களாகும். மேலும், ரப்பருடைய தேவையிலும் பல கொடூரமான மாற்றங்கள் இருக்கும். இதனால், ரப்பரின் விலை இறங்கிக் கொண்டே யிருக்கிறது. ரப்பரின் விலை சில நேரங்களில் மற்ற நேரங்களில் விற்கும் விலையில் பாதியாகக்கூட இருக்கும். இம் மாதிரியான விலைமாற்றம் இல்லாத ஆண்டே இருக்காது. வேக

மாற்றத்தை உடைய பண்டங்களுள் ரப்பர் ஒரு திலகம்போன்றது. ஆனால், ரப்பரைப்போன்றே வேகமாற்றத்தை உடைய பல பண்டங்கள் உள்ளன. போர்களுக்கிடையே யுள்ள ஆண்டுகளில் ரப்பர், வெள்ளீயம், சர்க்கரை, தேயிலை போன்ற கச்சாப் பொருள்களில் ஏற்படும் விலைமாற்றங்களைக் கட்டுப்படுத்தும் பல்வேறு திட்டங்கள் போதுமான அளவு வெற்றியைத் தரவில்லை. தொழிலுக்கும் உணவுக்கும் தேவையான தாதுப்பொருள்களிலும், விவசாயப் பொருள்களிலும் விலைகளின் ஏற்ற இறக்கங்கள் இன்னும் இருந்துகொண்டே யிருக்கின்றன.

செய்பொருள்களின் (manufactured goods) விலைகளில் ஏற்ற இறக்கங்கள் கச்சாப் பொருள்களின் விலைகளிலிருப்பதை விடக் குறைவாகவே இருக்கின்றன. செய்பொருள்களின் விலைகள், அவைகளை உற்பத்தி செய்தவர் அல்லது ஒரு வர்த்தக சங்கத்தால் கட்டுப்படுத்தப்பட்டிருப்பதும் இதற்கு ஒரு காரணமாகும். விலைக் கட்டுப்பாடே இல்லாவிட்டாலும், செய்பொருள்களின் உற்பத்தியில் ஏற்படும் செலவுகள் பெரும்பாலும் மாருமல் நிலையாக இருப்பதால், இந்நிலை உள்ளது. விலைகள் இறங்கும் காலங்களில், செய்பொருள் உற்பத்தியாளர்கள் (manufacturers), தங்கள் பண்டங்களை மிகவும் குறைந்த விலைக்கு விற்கும்போது, அப்பொருள்களைத் தாங்கள் நஷ்டத்திற்கு விற்றுக்கொண்டிருக்கிருேமென்பதை உணர்வர். இம்மாதிரியான சமயங்களில், அவர்கள் விற்பனையை நடத்தாமலிருக்கவே விரும்புவர். அல்லது அவர்களால் விலையை நிர்ணயிக்க முடியுமானல், நஷ்டத்தைத் தவிர்க்கும் ஒரு விலையை, அது விற்பனையைக் குறித்தபோதிலும், அவர்கள் நிர்ணயம் செய்வார்கள். இம்மாதிரியான ஒரு வழி விவசாயிக்கில்லை. காரணம் என்னவெனில், சில்லறை வியாபார விலைகளின் ஏற்றமோ அல்லது இறக்கமோ மொத்த வியாபர விலைகளிலுள்ளதைப்போன்று அவ்வளவு கொடூரமாக இருப்பதில்லை.

கூலிகள் (wages) இன்னும் மெதுவாகவே இயங்கும். தொழிற் சங்க இயக்கம் (Trade Union movement) வலுப்பெற்றுள்ள கிரேட் பிரிட்டன்போன்ற நாடுகளிலாவது கூலிகள் இவ்வாறே இயங்கி வரும். கூலிகளில் இறக்கத்தை உண்டுபண்ணுவதென்பது மிகவும் கடினமானதும், வருத்தந்தரக்கூடியதுமான ஒரு செயலாகும். குறிப்பாக இக்காரணத்தால்தான், விலைகள் ஏறி விற்கும்போதும், முதலாளிகள் கூலிகளை உயர்த்துவதில் நிதானமாகவே இருப்பர். இம்மாதிரியான தடைகளிருந்தபோதிலும், கூலி வீதங்கள், நீண்ட காலமாக விலைகள் இறங்கியிருக்கும்போது

குறைந்தும், ஏனைய பண்டங்களின் விலைகள் உயரும்போது இன்னும் மும்முரமாக உயர்ந்தும் காணப்படுகின்றன. ஆனால், மற்றப் பொருள்களின் விலைகளைவிட அவை சற்றுக் காலதாமத மாகவும், குறைந்த அளவிலுமே மாற்றமடைகின்றன. சம்பளங் களனைத்தும் (salaries) இன்னும் சற்று நிதானமாகவே மாற்றமடை கின்றன. வழக்கறிஞரின் 'ஆறு-எட்டு பென்சு கட்டணம்', 'வைத்தியரின் கினிக்கள்' (guineas) போன்ற பல்வேறு தொழில் வழிக் கட்டணங்கள் (professional fees) பணமதிப்பில் புரட்சிகர மான மாற்றம் ஏதும் ஏற்பட்டால்தான், மாற்றமடையும்.

ரப்பரினின்றும் வேறுபட்ட, வேகமாற்றத்தின் மற்றொரு முனையிலுள்ள (அதாவது, வேகமாற்றம் சுலபத்தில் அடையாத) பொருள்களில் சில, ஒப்பந்தங்களினால் (contract) நிர்ணயிக்கப் படும் செலுத்துகளும் (payments), விலைகளுமாகும். உதாரணமாக, வீடுகளின் வாடகை பல ஆண்டுக்காலத்திற்கு ஒப்பந்தம் செய்யப் படுகிறது. வீடுகட்டும் சாமான்கள் விலை உயரும்போதும், கூலி அதிகமாகும்போதும் புதிய கட்டடங்களின் செலவு (cost) கூடுத லாகுமாகையால், சில ஆண்டுகளில் பழைய கட்டடங்களின் வாடகையும் உயரும். ஆனால், இவ்வதிகரிப்பு நிதானமா கவும், தவக்கமாகவுமே ஏற்படும். வாடகை ஒப்பந்தங்களை விட, மற்ற ஒப்பந்தங்கள் இன்னும் நீண்ட கால அளவிற்குச் செய்யப்படுகின்றன. உதாரணமாக, ஆயுள் காப்புறுதிச் சீட்டுகள் (Life Insurance Policies), ஒப்பந்தம் செய்யப்பட்ட தேதிக்குப் பிறகு நாற்பது, ஐம்பது, அறுபது ஆண்டுகள் கழித்தே மீட்கப் படுகின்றன. இதேபோன்று கடன்களும் நீண்ட நாட்களுக்கு நீடிப்பன. உதாரணமாக, கடன் பத்திரங்களில் (bonds) நூறாண்டுக் காலமுடையனவுமுள்ளன. அரசாங்கக் கடன் பத்திரங்கள் பெரும் பாலும் மிக நீண்டகாலங்களைக் கொண்டவையே.

இவ்வாறே பல்வேறு அளவுகளுள்ள வேகமாற்றத்தினால் நாம் அறிந்துகொள்வதென்ன? பணமதிப்பின் மாற்றத்தினால் பலதிறப்பட்ட மக்கள் பலவிதமாகப் பாதிக்கப்படுகின்றனரென் பதே. உதாரணமாக, பயிர்த் தொழில் செய்வோர் உடனடியாகவும், தங்கள் வருமானம் முழுமைக்கும் பாதிக்கப்படுகின்றனர். அரசாங் கங்கள் விவசாயத்திற்கு உதவியளிக்கின்றன வென்றாலும், விலைகள் அதிகரிக்கும் காலங்களில் விவசாயி தன் பொருள்களை இயல்பான விலைக்கு மிக அதிகமாகவும், விலைகள் இறங்கும் காலங் களில் இயல்பான விலைக்கு மிகக் குறைவாகவும் விற்கவேண்டி யிருக்கிறது. விவசாயி தன்னுடைய வருமானத்தில் செலவிடு வது செய்பொருள்களை வாங்குவதற்கும், குத்தகை (rent)

கொடுப்பதற்கும், வாங்கிய கடனுக்கு வட்டி கொடுப்பதற்குமே. வேகமாற்றத்தின்போது செய்பொருள்கள் அதிகமாக மாற்றமடைவதில்லை; குத்தகையும் மிகமிகக் குறைந்த அளவில்தான் மாற்றமடையும். அடைமானம் அல்லது இதர கடன்களுக்குச் செலுத்தும் வட்டியும் மாற்றமடைவதில்லை. எனவேதான், விவசாயி விலைகளின் இறக்கத்தால் படுமோசமாகப் பாதிக்கப்படுவார். விலைகள் உயரும்போது நிறைய இலாபத்தைப் பெற இயலும்.

நகரத்திலுள்ள, கூலிபெறுபவரின் நிலை இதற்கு நேர்மாருக உள்ளது. தான் வாங்கும் பொருள்களின் விலைமாற்றத்திற்கொப்பத் தனது வருமானம் மாறுவதில்லை. விலைகள் இறங்கும்போது, கூலி 10 சதவீதம் குறையும்; அதே நேரத்தில் வாழ்க்கைச் செலவு 25 சதவீதம் குறையும். எனவே, முன்னுல் £ 100 கூலி பெற்றவர் தற்போது விலை இறங்கிய காலத்தில் £ 90 தான் பெறுவாரெனினும், இந்த £ 90 ஆல் ஏற்கெனவே £ 120 வாங்கிய அளவுக்குப் பொருள்களை வாங்க அவரால் இயலும். எப்படியெனில்$(\frac{100}{75} \times 90)$. இவ்வாறு வேலையிலிருந்துகொண்டிருக்கும் கூலி பெறுபவர் ஒருவர் (விலை மாற்றமடையும் காலங்களில் இவ்வாறு வேலையிலிருந்து கொண்டிருப்பதென்பதே ஒரு முக்கியமான தகுதி எனலாம்), விலைகள் இறங்கும்போது இலாபமடையவும், விலைகள் அதிகரிக்கும் போது நஷ்டமடையவும் கூடும்.

நிலையான வருமானத்தைக் கொண்ட ஒவ்வொருவரும் இம்மாதிரியே பாதிக்கப்படுவார். கடன் பத்திரங்களினின்றும் வரும் வட்டியின் மூலம் அல்லது ஓய்வுச்சம்பளம் (Pension), ஆண்டுத் தொகை (annuities) இவற்ருல் வாழ்க்கை நடத்துபவர்கள் இம்மாதிரி நிலையான வருமானத்தைக் கொண்டவர்களே. வாழ்க்கைச் செலவு (Cost of living) காற்பங்கு குறையுமாணுலும் இவர்களால், தங்களுடைய நிலைமாரு ரொக்க வருமானத்தைக்கொண்டு முன்பு வாங்கியதைப்போல் மூன்றிலொரு பங்குப் பொருள்களை அதிகமாக வாங்க இயலும். இக்கருத்துப்படி அவர்கள் எவ்விதத்திலும் $23\frac{1}{3}$ சதவீதம் அதிகமாகப் பயனடைகின்றனர். இதற்கு எதிரிடையாக, விலைகள் ஏறும்போது, நிலையான பணவருவாய்களையுடைய மக்கள் நஷ்டமடைவர். நிலைத்த வருமானமுடையவர்களுக்கு இது கவனிக்கத்தக்க தொன்ருகும். சமுதாயம் முழுமைக்கும் இது முக்கியமானதொன்று. கடன் கொடுக்கப்பட்ட பெருந்தொகைகள் எச்சமயத்திலும் திருப்பி அடைக்கப்படாமல் இருக்கலாம். இக்கடன் தொகைகளில் சில, தொழிற்சாலைகள், வீடுகள், கப்பல்கள், இருப்புப் பாதைகள் முதலிய இலாபகரமான முதலீடு

களுக்கு கடனுதவி செய்வதற்குக் கொடுக்கப்பட்டிருக்கலாம். எஞ்சியுள்ளவை அரசாங்கம் அல்லது தனிப்பட்டவர்களின் மிதமிஞ்சிய செலவிற்குக் கடனுகக் கொடுக்கப்பட்டவைகளாக இருக்கும். இவ்விருவகைப்பட்ட கடன்களையும் தனித்தனியே வேறுபடுத்திக் கூற இயலும். இலாபகரமான சொத்துக்களை (assets) வாங்குவதற்குப் பயன்படும் கடனை 'ஆக்கக்கடன்'(living debt) அல்லது மூலதனம் (Capital) என அழைக்கலாம். இவ்வாறு சொத்துக்களை வாங்குவதற்காக அல்லாமல் மற்றச்செலவுகளுக்குக் கொடுக்கப்படும் கடன்களை 'பாரக்கடன்' (Dead weight debt) என்றழைக்கிருேம். விலைவாசிகள் ஒவ்வொரு தடவை இறங்கும்போதும் கடன் கொடுக்கப்பட்ட £ 100 களால் வாங்கக் கூடிய பண்டங்கள், பணிகளின் எண்ணிக்கை குறைகின்றன. கடன் கொடுக்கப்பட்ட அம்மூலதனத்தால் கட்டப்பட்ட தொழிற்சாலை விலையிறக்கத்தின்போது சிறிதளவு பண்டங்களை மட்டும் உற்பத்தி செய்வதோடு நின்று விடுவதில்லையாதலால் அப்பண்டங்கள் குறைந்த விலைக்கே விற்கப்படுகின்றன. எனவே கடன்களில் ஒருபகுதிதான் மூலதனமாக நாட்டில் பயன்படுகிறது.

கடனின் சுமை அதிகரித்துக்கொண்டே செல்லுகின்றது. நிலையான வருமானமுடையவர்களின் இலாபம் அவருக்குக் கடன் கொடுத்தவருக்கு நஷ்டமாக உள்ளது. விலைகள் பரவலாகவும் வேகமாகவும் இறங்க ஆரம்பித்தால் கடன் சுமையை, தாள முடியாத அளவிற்கு அதிகப்படுத்தும். இது வக்கற்ற நிலைகளை (Bankruptcies) அதிக அளவிற்கு உண்டு பண்ணும்; அல்லது இன்னும் மோசமாக சமூகக் கேட்டினை உண்டு பண்ணும். தொன்று தொட்டே விலைகள் சீராக ஏறிக்கொண்டே இருந்தமைக்கு இதுவே தகுந்த காரணமாகும். (வெற்றி வீரர் வில்லியம் ஆட்சியில் 6 பென்சுக்கு விற்ற ஒரு மரக்கால் கோதுமை 1939-45ஆம்போரின்போது 3 ஷில்லிங் 6 பென்சுக்கு விற்றது). அவ்வப்போது ஏற்படும் விலை ஏற்றங்களினுல்தான் (அதாவது பணமதிப்புக் குறையும்போது தான்) நாடு அதிகவட்டியினுல் திணறுவதினின்றும் தப்புவித்துக் கொள்ளமுடியும். விலைகள் இறங்கிக்கொண்டு செல்லும்போது கடன் கொடுத்தவருக்கு ஏற்படும் நன்மைகளைப்பற்றி ஆராயும் போது இதனைக் கவனத்தில் கொள்வோம்.

வணிகருக்கு விலைகளின் அதிகரிப்பே உகந்ததாகும். செய்பொருள் உற்பத்தியின் வகைகள் பெரும்பாலும் கச்சாப் பொருள்களை வாங்குவதிலும் உற்பத்தி செய்து முடித்த பொருள்களை விற்பதிலுமே அடங்கியுள்ளன. விலைகள் இறங்கியுள்ள காலத்தில் வணிகர் தமக்குத் தேவையான பொருள்களை மலிவாக வாங்கிக்

கொள்ள இயலும். இதனுல் வருகின்ற இலாபம், கூலிகள், வட்டி, வரிகள் போன்ற நிலையான அல்லது அரைகுறையாக நிலையான (Semi fixed) செலவினங்கள் உயர்வதால் ஏற்படும் 'உண்மையான' சுமை (இச்சுமை, பண்டங்களாலும் பணிகளாலும் உணர்த்தப்படுகின்றன) யால் விஞ்சப்படுகிறது. மேலும் செய்பொருள் செய்வதற்கு நிறையக் காலமாகின்றது. விலைகள் இறங்கும்போது, செய்பொருள் வினைஞர் (Manufacturer) தாம் அப்பொருள்களைச் செய்வதற்காக வேண்டிய பொருள்களை பல மாதங்களுக்கு முன்னர் வாங்கியபோது, தாம் என்ன விலைக்கு அச்செய்பொருள்களை விற்க வேண்டுமென்று திட்டமிட்டாரோ அந்த விலைக்கு விற்க முடியாத ஒரு நிலையில், செய்பொருள்களைச் செய்து முடித்த பின்னர், தானிருப்பதை உணர்வார். இலாபமென்பது ஓர் எச்சமான (Residual) இனமாகும். நிலம், உழைப்பு, மூலதனம் இன்னும் மற்றப் பொருள்களுக்குச் செலவழிந்தது போக எது எச்சமாக இருப்பதோ அதுவே இலாபமாகும். விலைகள் ஏறிச்செல்லும்போது எந்தப் பொருள்களின் விலைகள் சராசரி அதிகரிக்காமலிருக்கின்றனவோ அவற்றினுல்தான் இலாபம் அடைகின்றவர் இலாபத்தைப் பெறுகின்றனர். அதேபோன்று விலை இறங்கும் காலங்களில், தான் எந்தப் பொருள்களின் விலைகள் சராசரி இறக்கத்திற்கும் கீழ் இலாபம் பெறுபவரால் குறைக்கமுடியாமல் இருக்கின்றனவோ அவற்றில் அவருக்கு நஷ்டம் ஏற்படும்.

விலைகளின் இறக்கம் கூலி பெறுவோருக்கும் (Wage earners) சம்பளம் வாங்குவோருக்கும் (அவர்கள் அத் தொழில்களில் இருக்கும்வரை), கடன் கொடுத்தவர்களுக்கும், இன்னும் ஏனைய நிலையான பண வருமானத்தைக் கொண்டவர்களுக்கும் உகந்ததாக இருக்கும். இதேபோன்று விலைகளின் ஏற்றம் வணிகர்களுக்கும், கடன் பெற்றவர்களுக்கும், சிறப்பாக அடிப்படையான பொருள்களை (Primary materials) உற்பத்தி செய்பவர்களுக்கும் வரவேற்கத்தக்கனவாக இருக்கும். விலைகளின் இறக்கம் இவைகளில் எது சிறந்ததென்று முடிவு செய்யவேண்டுமானுல், விலைகளின் இறக்கத்தையே சிறந்ததெனக் கூறவேண்டும். விரைவில் வளர்ச்சி பெற்றுவரும் ஒரு நாட்டிற்கு விலைகளின் இறக்கமே சிறந்ததாகக் கருதப்படும். ஏனெனில் விலைகளின் இறக்கத்தின் மூலந்தான் நாட்டில் வளர்ந்துவரும் சுபிட்சத்தில் (Prosperity) நிலையான வருமானத்தைக் (பண அளவில் கணக்கிடும்போது) கொண்டவர்களுக்குச் சிறிதளவு பங்கு கொடுக்கவியலும்.

சமூக நீதி (Social justice)யைக் கொண்டு பொருளாதாரப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணமுடியாது. தொடர்ந்து தான்

வேலையிருந்தால் தான், கூலிபெறுபவர் விலைகளின் இறக்கத்தினால் இலாபமடையக்கூடும். பொருளாதார வரலாற்றில், விலைகள் இறங்கியுள்ள காலங்கள் வேலையின்மையை (Unemployment) அதிகமாக உடைய காலங்களாகவும், விலைகளின் அதிகரிப்பைக் கொண்ட காலங்கள் நிறைய அளவு தொழில்களை உண்டு பண்ணும் காலங்களாகவும், வேலையின்மை குறைந்துமுள்ள காலங்களாகவும் பெரும்பாலும் இருப்பதையே பார்க்கின்றோம். உண்மையில், விலைகளின் இறக்கம் பொருளாதார இறக்கத்தையும் (Slumps) விலைகளின் ஏற்றம் பொருளாதார ஏற்றத்தையும் (Boom) ஏற்படுத்துகின்றன.

விலைகளுக்கும் வேலைக்கும் நெருங்கிய தொடர்புண்டு. உண்மையில் இதைவிட நெருக்கமான தொடர்பு பொருளாதாரத்தில் வேறு எவற்றிற்குமில்லை. விலைகளின் ஏற்ற இறக்கங்கள் தான் வேலை வாய்ப்புக்களிலும் ஏற்ற இறக்கத்தை உண்டுபண்ணுகின்றனவென்பது இங்குக் கவனிக்கத் தக்கது. விலைகளின் ஏற்ற இறக்கம் அவைகளுக்கீடான ஏற்ற இறக்கத்தை பொருள்களின் உற்பத்தியில் ஏற்படுத்துவதையும் எளிதாகக் கண்டு கொள்ளலாம். வணிகர்களும் ஏனையோரும் விலைகள் இறங்கும் காலத்தில் தங்கள் கொள்முதலை நிறுத்திவிடுவர். தாங்கள் கைவசம் வைத்துள்ள இருப்பிலிருந்தே தேவைகளைப் பூர்த்தி செய்வர். விலைகள் மிகக் குறைந்த அளவுக்கு இறங்கும்போது தங்கள் இருப்பை மீண்டும் நிரப்பிக் கொள்வதற்கு அக்காலத்தை எதிர்நோக்கியிருப்பார்கள். விலைகளின் இறக்கத்தின்போது உற்பத்தியாளர்களுக்கு (Producers) மிகக் குறைவாகவே பண்டங்களின் தேவை கோரப்படுகின்றது. ஆனால் விலைகளின் இறக்கம் அடிமட்டத்தைத் (Bottom) தொட்டுவிட்டு மீண்டும் ஏற ஆரம்பிக்கும்போது அனைவரும் தங்கள் இருப்பை, பண்டங்கள் இன்னும் அதிகமாக விலை ஏறுமுன், நிரப்பிக்கொள்ள அவசரமாக முனைவர். நீண்டகால விலை இறக்கத்திற்குப் பிறகு ஏற்படுகின்ற, விலைகளின் முதல் அதிகரிப்பு, குறிப்பிடத்தக்க வகையில் உற்பத்தியில் உடனடியான அதிகரிப்பை யுண்டுபண்ணும். விலைகளின் ஏற்ற இறக்கங்கள், உற்பத்தி, வேலை இவைகளில் இம்முறையால்தான் தற்செயலான நேர்விளைவை உண்டுபண்ணுகின்றன. மற்றொன்று, விலைகளின் மாற்றங்களின்மூலம் இலாபத்தில் ஏற்படுகின்ற விளைவு. விலைகள் ஏறும்போது இலாபங்கள் அதிகரிக்கின்றனவென்றும், விலைகளின் இறக்கத்தின்போது இலாபங்கள் தேய்கின்றனவென்றும் நாம் ஏற்கனவே கூறினோம். நிறைய இலாபம் வரும்போது, வணிகர்கள் தங்களது உற்பத்தியை இயன்ற மட்டும் விரிவுபடுத்துவர். அதனுடன் நில்லாது, தங்களது உற்பத்தி விரிவுக்கான பொருள்களை

அளிக்குமாறு புதிய தொழிற்சாலைகளைக் கோருவர். இவ்வாய்ப்பினால் புதிய தொழிற்சாலைகள் கட்டப்பட்டு, அதிகமான வேலை வாய்ப்புகளும் ஏற்படுகின்றன. ஆனால், இலாபமானது போதிய அளவில் இல்லாதபோது தொழிற்சாதனங்களின் தேவை மிகக் குறைந்த அளவிலே கோரப்படுவதால், கட்டிடங்களையும் தொழிற் கருவிகளையும் அளிக்கும் தொழில்கள் முடங்கும்.

எனவே விலைகளின் ஏற்ற இறக்கங்கள் வேலையிலும் ஏற்ற இறக்கங்களை இவ்வழிகளில் உண்டுபண்ணுகின்றன. ஆனால் மேற்சொன்ன கருத்திற்கு எதிரிடையாகவே பெரும்பாலும் நடந்து வருகிறது. வேலைகளில் ஏற்படும் மாறுதல்களே விலைகளிலும் மாறுதல்களை உண்டுபண்ணுகின்றன. பெரும்பாலும், வியாபாரம் இல்லாதபோதுதான் விலைகள் குறைக்கப்படுகின்றன. தேவை அதிகமாக இருக்கும்போதுதான் விலைகள் அதிகரிக்கின்றன. மந்தம் (Depression) எவ்வாறு பல்வேறு தொழில்களைப் பலவழிகளில் பாதிக்கின்றதென்பதை நாம் ஆராய்வதன் மூலம் இதனை நன்குணரலாம். நாட்டில் பொதுவாக சுபிட்சம் (Prosperity) குறையும்போது (சுபிட்சம் குறைவதற்கான காரணங்கள் பிறகு இந்நூலில் விளக்கப்படும்) பண்டங்களின் தேவையும் குறையும். தொழில்களுக்கான செய்பொருள்களை உற்பத்தி செய்வோர், தங்கள் செய்பொருள்களை, சற்றுக் குறைவான விலையில், குறைவாகவே விற்பனை செய்வர், தொழிலில் மந்தமானது குறைந்த விலைகளின் வாயிலாக வருவதைக் காட்டிலும் வேலையின்மையினால் தான் (Unemployment) ஏற்படும். ஆனால் ஒரு விவசாய நாட்டில் வேலையின்மை என்பதற்கே இடமில்லை. ஒரு பயிரைப் பயிர் செய்ய ஆரம்பித்துவிட்ட பிறகு அதன் உற்பத்தியைக் கட்டுப்படுத்துவதென்பது இயலாத காரியம். விளைந்த உற்பத்தி அத்தனையையும் விற்றேயாக வேண்டும். மந்தத்தினால் ஏற்பட்ட குறைவான விலைகளால் அதிகமாகப் பாதிக்கப்பட்டாலும், விவசாயிக்கு எப்போதுமுள்ள வேலை இருந்துகொண்டேயிருக்கும். இப்போது, விவசாயி உற்பத்தி செய்யும் பொருள்களின் விலை குறைவால், குறைந்த அளவு பண்டங்களையே அவர் வாங்க இயலுமாதலால் தொழிலில் வேலையின்மை அதிகரிக்கும். தொழிலில் வேலையின்மை, உணவின் தேவையைக் குறைப்பதால் விவசாயியின் பொருள்களின் விலைகளை இன்னும் குறையச் செய்கின்றன. எனவே குறைவான விலைகளும் குறைவான வேலையும் ஒன்றுக்கொன்று காரணமாகவும் விளைவாகவுமிருக்கின்றன. ஆனால் இரண்டுமே மந்தத்தைத் தோற்றுவிக்கும் விளைவுகளில் ஒரே மாதிரியாகவேயிருக்கின்றன.

கடந்த பத்து ஆண்டுகளாகத்தான், பொருளியலறிஞர்கள் (Economists) விலைகளின்மீது அதிக கவனம் செலுத்தி, அவைகள் விளைவுகளுக்கு அதிக முக்கியத்துவம் தந்து வருகின்றனர். ஆனால் தற்போது நாம் வேலையில் ஏற்படும் மாறுதல்களுக்கு அதிகமான முக்கியத்துவம் கொடுத்தல் என்னும் நேர்மாறான ஒரு தவறைச் செய்கிறோம். விலைகள், வேலை—இவ்விரண்டுமே அடிப்படையில் நோக்குமிடத்து விளைவுகளுக்கு அறிகுறிகளே (Symptoms) தவிர காரணங்கள் (Causes) ஆகமாட்டா. இந்நூலின் முதற்பகுதியின் முக்கியக் கருத்தை நாம் அடைந்து கொண்டிருக்கிறோம். தற்போதைக்கு விலைகளும் வேலையும் ஒருமித்தனவாக ஏறி இறங்கும் தன்மை வாய்ந்தன என்று தெரிந்துகொள்ளுதல் மட்டும் போதுமானது. அவைகள், ஆழமான சக்திகளால் உண்டாக்கப்படும் ஏற்ற இறக்கங்களின் வெளித் தோற்றங்களாகவுள்ளன.

## வாணிபச் சகடம் (The Trade Cycle)

விலைகளின் இயக்கத்தையும் வேலையின் இயக்கத்தையும் 'ஏற்ற இறக்கம்' (Ebb and flow)என்று குறிப்பிடுவது பொருந்தும். அவைகளின் மாற்றங்கள் தாறுமாறாக இல்லாமல் ஒழுங்கான சகடங்களாகவே (Cycles) உள்ளன. பல ஆண்டுகளாக அதிகரித்துள்ள விலைகளும் வேலையும் குறைவான விலைகளாலும் வேலைகளாலும் தொடரப்படும். அவைகள் செல்லும் திசை மாறியதும், இப்புதிய திசை அநேகமாகப் பல ஆண்டுகளுக்கு நீடிக்கும். ஒரு முழுச் சகடத்தின் நீளம், ஓர் உச்சிப் புள்ளியிலிருந்து மற்றோர் உச்சிப்புள்ளி முடிய ஒரே வகையான நீளத்தை உடையதாகவே இருக்கிறது. இது ஐந்தாண்டுகளுக்குக் குறைவாக இருப்பதில்லை—பெரியதொரு போர் குறுக்கிட்டாலொழிய—பத்து ஆண்டுகளுக்கு அதிகமாகவுமிருப்பதில்லை. வழக்கமாக இது ஏழு அல்லது எட்டு ஆண்டுகளாகத்தானிருக்கும். சகடங்கள் அத்தனையும் ஒன்றைப் போலவே மற்றொன்றுமிருப்பதில்லை. அவைகள் ஒன்றுக்கொன்று மாற்றத்தை உடையனவாக இருப்பது, அவைகள் உண்மையான சகடத்தின் அசைவுகளைக் கொண்டன என்பதைச் (அவைகள் சில குறிப்பிட்ட ஒழுங்கு விதிகளுக்குட்பட்டு இயங்குகின்றன என்று கூறுவதை) சிலர் மறுத்துக் கூறுவதற்குக் காரணமாக இருக்கிறது. ஆனால், நடைமுறையில் சகடங்களின் அமைப்பைப் பார்க்கும்போது, அது அவர்கள் கூற்றுக்கெதிராகவே இருக்கின்றது.

பல ஆண்டுகள் கொண்ட ஒரு நீண்ட காலத்தில் (ஒரு நூற்றாண்டு காலத்தில்) விலைகளின் போக்கைக் கவனித்தால்

தனித்தனியான இரண்டு வித ஏற்ற இறக்கங்கள் (Fluctuation) இருப்பதைக் காணலாம். முதலாவதாக, நாம் ஏற்கெனவே குறிப்பிட்டுள்ளபடி, ஏழு அல்லது எட்டு ஆண்டுகள் சராசரி நீளமுடைய, வாணிபச் சகடங்களுள்ளன. இன்னும் நீண்டகால அளவுடைய வாணிபச் சகடங்களுமுள்ளன. சில சமயங்களில் அடுத்துவரும் ஒவ்வொரு வாணிபச் சகடமும், அதற்கு முன்னுலுள்ளதைவிட விலைகளின் மட்டத்தை உச்சத்திற்குக் கொண்டு செல்லுகின்றன. மற்றச் சமயங்களில் ஒரு சகடத்தின் விலைகளின் உச்சமான எல்லை, அதற்கு முன்னுலுள்ள வாணிபச் சகடத்தின் உச்சமான எல்லையை (Peak) விடக் குறைவானதாகவுள்ளது. சகடம் முழுமைக்கும் சராசரியில் உள்ள விலைகளைக் கணக்கிட்டுப் பார்த்தால் முதலாவதாக உள்ள ஒரு வகைக் காலத்தை விலைகள் ஏறும் காலம்(இந்த ஆண்டுகளில் விலைகள் குறைந்த ஆண்டுகளாக இருப்பினும்) என அழைக்கலாம். இரண்டாவதாக உள்ள ஒரு வகைக் காலத்தை விலைகள் இறங்கும் காலம் என (இந்த கால அளவில் சில ஆண்டுகள் விலை ஏறும் ஆண்டுகளாக இருந்த போதிலும்) அழைக்கப்படலாம். இத்தகைய காலங்கள் பல பத்தாண்டுகளுக்கு (Decades) நீடிக்கும்.எனவே 19ஆம் நூற்ருண்டில் 1820-1849-க்குமிடையே உள்ள ஆண்டுகள் விலை இறக்கக்




19ம் நூற்ருண்டின் விலை மட்ட ஏற்ற இறக்கங்கள் (Fluctuations)
[100 = 1900 ம் ஆண்டு]

(இக்கருத்தின்படி) காலமாகும். தொடர்ந்து 1849—லிருந்து 1874—வரையிலுள்ள 25 ஆண்டுகள் விலை ஏற்றக் காலமாக இருந்தன. இதனைத் தொடர்ந்த 1849-லிருந்து 1896-வரையுள்ள

22 ஆண்டுகள் விலை இறக்கக் காலமாக இருந்தன. கடைசியாக 1896-லிருந்து 1914-ல் போர் துவங்கியது வரையிலுள்ள 18 ஆண்டுகள் விலை ஏற்றக் காலமாக இருந்தன. மேலேயுள்ள விளக்கப் படத்தில் (Diagram) இவ்விலைகளின் போக்குக் காட்டப் பட்டுள்ளது (Long term movements). விலைகளின் பல்வேறு நீண்ட காலப் போக்குகள் (அதாவது அவைகளின் சராசரிப் போக்கு) நேர்க்கோடுகளால், படத்தில் காட்டப்பட்டுள்ளன. இந்த நீண்டகாலப் போக்கு மேல்நோக்கி இருந்தாலும் அல்லது கீழ்நோக்கியிருந்தாலும் வாணிபச் சகடத்தின் குறுங்கால ஏற்றத் தாழ்வுகள் (Short term fluctuations) தொடர்ந்து நீடித்துக் கொண்டேயிருக்குமென்பது இங்குக் கவனிக்கத்தக்கது.

வேலை, உற்பத்தி ஆகியவைகளின் போக்கு விலைகளின் போக்கை ஒத்திருப்பதில்லை. வாணிபச் சகடத்தைப் பொறுத்த மட்டில் வேலை, விலைகள் ஆகிய இவ்விரண்டும் ஏறக்குறைய ஒன்ருக இயங்குகின்றன. வேலைகள் குறையும்போது விலைகளும் குறைகின்றன; வேலைகள் அதிகரிக்கும்போது விலைகளும் அதிகரிக் கின்றன. ஆனல் இருபது ஆண்டுகள் அல்லது அதற்கும் அதிகப் பட்ட ஆண்டுகளைக்கொண்ட காலங்கள் எதிலும் விலைகள் சீராக இறங்கியதில்லை. இதற்கு மாருக, உற்பத்தி சீராக அதிகரிக்கும் தன்மை வாய்ந்ததாகவுள்ளது. விலைகளின் நீண்ட காலப்போக்கு மேல் நோக்கிச் செல்லும் காலத்தைவிட, கீழ்நோக்கிச் செல்லும் போதுதான் அதிகமான மந்த (Depression) ஆண்டுகளும், வேலை யின்மை ஆண்டுகளும், குறைவான நடவடிக்கைகள் கொண்டன வும் குறைந்த சுபிட்சத்தைக் கொண்டனவுமான ஆண்டுகள் நிறைந்துள்ளன. இருவகையான இந் நீண்டகால அளவுகளிலும் (Long-term periods) சற்றுப் பொருளாதார விருத்தி ஏற்படுகிறது. விலைகள் உயரும்போது இவ்விருத்தி அதிகரிக்கின்றது.

விலைகளின் நீண்டகால ஏற்ற இறக்கங்களுக்கும் குறுங்கால ஏற்ற இறக்கங்களுக்குமிடையே முக்கிய வேறுபாடுள்ளதெனக் கொள்ளவேண்டும். உண்மையில், மூன்ருவதாக இன்னும் அதிக மான ஒரு காலப் போக்குகளையும் இதனுடன் நாம் சேர்த்துக் கொள்ளவேண்டும். சில நூற்ருண்டுகள் முழுவதுமே விலைகள் தொடர்ந்து அதிகரித்துள்ளன. அவைகளின் உதாரணங்கள் இந் நூலின் 116ஆம் பக்கத்தில் சுட்டப்பட்டுள்ளன. இம்மாதிரியான நீண்டகால விலைகளின் போக்கை மூன்ருவது இனமாக நாம் கொள்ளுதல் வேண்டும். ஒவ்வொரு நூற்ருண்டிலும் விலைகளின் சராசரிப் போக்கு அதற்கு முன்னிருந்த நூற்ருண்டிலிருந்ததை விட அதிகரித்துக் கொண்டேயிருக்கிறது. பத்தொன்பதாம்

நூற்ருண்டுதான் இதற்கு விதிவிலக்காக இருக்கின்றது. உலகம், கடுவட்டி (Usury) என்றும் தானே மாட்டிக்கொண்ட விலங்கினின்றும் தப்ப வேண்டுமானுல், கண்ணுக்குத் தெரியாத சீரான, பணமதிப்பிறக்கம் (நாம் ஏற்கெனவே கூறியுள்ளதைப் போன்று) இருக்கவேண்டும் என்ற நியதிக்குப் பத்தொன்பதாம் நூற்ருண்டை உதாரணமாகக் கூறலாம். ஈடு இணையற்ற செல்வ வளர்ச்சியினுலும் மக்கள் தொகை வளர்ச்சியினுலும் சிறந்த பத்தொன்பதாம் நூற்ருண்டு இத்தகைய சமூகக் கொடுமையினின்றும் தன்னை விடுவித்துக் கொண்டது. முன்னுள்ள கடன்களின் 'உண்மையான' சுமை (Real Burden) பத்தொன்பதாம் நூற்ருண்டிற்கில்லையாயினும், கடனைத் தாங்குவதற்கான உண்மையான திறன் நிச்சயமாக அதிகரித்தே யிருந்தது.

எனவே பணமதிப்பின் மீது (அதாவது விலைகளின் மட்டம்) எச்சமயத்திலும் உண்மையில் மூன்றுவித சக்திகள் வேலை செய்து கொண்டுவருகின்றன. முதலாவதாக இருப்பது, பணமதிப்பு நீண்டகாலத்திற்குக் குறைந்துகொண்டே செல்வதாகும். அதற்கடுத்தபடியாக உள்ளது நீண்டகால ஏற்ற இறக்கங்கள் (Long term fluctuations) என்று நாம் அழைக்கும் (சென்ற நூற்ருண்டில் இதைப்போன்ற காலங்கள் இருபது ஆண்டுகளுக்கும் நீண்டவை எனக் கண்டுபிடிக்கப்பட்டது) காலங்கள்; எனவே ஒரு முழுமை பெற்ற நீண்டகால வாணிபச் சகடம் (ஒரு கீழ் நோக்கிய போக்கும் ஒரு மேல் நோக்கிய போக்கும் சேர்ந்து) அரைநூற்ருண்டிற்கு நீடிக்கும் தன்மை வாய்ந்தது. மூன்ருவதாக உள்ளவை ஏழு அல்லது எட்டு ஆண்டுகள் கால அளவு கொண்ட வாணிபச் சகடங்கள் (தற்செயலாக நாளுக்குநாள் ஏற்படும் விலை மாற்றங்களுமுள்ளன; அவற்றை நாம் பொருட்படுத்துவதில்லை). இம் மூன்று வகை விலைப் போக்குகளில் ஒவ்வொன்றும் சில நோக்கங்களுக்கு முக்கியமானவையாகும். உதாரணமாக, நாம் பணவீக்கக் கைக்கோளின் (Monetary policy)முடிவான நோக்கங்களைப்பற்றிக் கூறிக்கொண்டிருக்கும்போது, உலகம் இதற்கு முன்பெல்லாம் பணமதிப்பைக் காலந்தோறும் குறைக்கவேண்டிய அவசியத்திலிருந்ததென்பதை இங்கு நம் கவனத்துக்குக் கொண்டு வருதல் வேண்டும். கடன் கொடுத்தவர்களுக்கும் கடன் வாங்கியவர்களுக்கும், கூலி பெறுவோருக்கும் இலாபமடைவோருக்குமிடையே நாம் நியாயம் என்பது எது என்பதைப்பற்றிப் பேசும்போது, இருபத்தைந்தாண்டுகள் நீடிக்கும் போக்குகளே முக்கியமானவையாகத் தோன்றுகின்றன. ஏனெனில் இந்தக் கால அளவைவிடச் சிறியனவாக உள்ள கால அளவுகளின் போக்குகள் மீண்டும் பழைய நிலையைச் சீக்கிரத்தில் அடைந்து விடுகின்றன. மிக நீண்டதாக

உள்ள காலத்தின் போக்கை மனிதன் தன் வாழ்நாளுக்குள் அறிந்து கொள்வதென்பதும் சந்தேகமே!

வாணிபச் சகடத்தின் ஏற்ற இறக்கங்களே நடைமுறைக் கைக்கோளின் பெருவாரியான நோக்கங்களுக்கு மிகவும் முக்கிய மானவை. இதற்கு இரண்டு காரணங்களுமுண்டு. முதலாவதாக, வாணிபச் சகடமே வேலையின்மைத் தீங்கிற்கும், உற்பத்தியாகும் பொருள்கள், செல்வம் ஆகியவற்றின் விரயத்திற்கும், சமூகக் கொந்தளிப்புக்கும் காரணமானதாகும். இரண்டாவதாக நெடுங் கால விலைகளின் போக்குகள் வாணிபச் சகடங்களின் மீதே அமைக்கப்படுகின்றன. இருபத்தைந்தாண்டு காலத்திற்கு விலைகள் ஏறிக்கொண்டே செல்லும்போது என்ன நடக்கிறதென்றால் வாணி பச் சகடத்தின் ஏறுமுகம் (rising phase) நீண்ட ஆண்டுகள் கொண்டதாயும் சிறிது அதிகமான வேகமுடையதாகவும் இருக் கிறது. நெடுங்கால விலைகளின் இறக்கத்திற்குப் பிறகு, மீட்சி (recovery) ஆண்டுகள் மந்த ஆண்டுகளில் இழந்தவற்றை முழு வதையும் திரும்பப்பெறுவதில்லை. வாணிபச் சகடத்தின் இயங்கு முறையை நாம் தெரிந்து கொள்வோமானால் நெடுங்காலப் போக்கு களுக்கான காரணங்களை நாம் தெரிந்துகொண்டவர்களாவோம். அடுத்த சில அத்தியாயங்களில், இந் நெடுங்காலப் போக்குகளை நாம் மறந்துவிடப்போவதில்லை யெனினும், வாணிபச் சகடத்தின் குறுங்காலப் போக்குகளின் மீதே நமது கவன முழுவதும் செறிந் திருக்கும்.

பொருளாதார வளர்ச்சியின் உச்சநிலை மந்தநிலை ஆகிய இவற் றின் ஏற்ற இறக்கங்கள் ஒரு தொடர்ந்த நிகழ்ச்சியாக இருக் கின்றன. எனவேதான் வர்த்தகச் சகடம் எங்கே 'ஆரம்பிக்கின்ற' தென்று கூற இயலாது. எங்கே 'உச்ச நிலை' ஆரம்பிக்கிறதென்று கூறவேண்டுமேயானால் சகடத்தின் மந்த நிலையின் அடிப்பாகத்தி லிருந்து ஒரு புள்ளியால் குறிப்பிட்டுத்தான் விளக்க இயலும். இப் புள்ளியுள்ள நிலையில் விலைகள் மிகவும் கீழே இறங்கியிருக்கும்; வேலையின்மையும் இந் நிலையில்தான் அதிக அளவிற்கு இருக்கும். கண்ணுக்குத்தெரியாத வகையில் இந்நிலையில் ஒரு மாற்றம் ஏற்படு கிறது. விலைகள் இறங்குவதினின்றும் நின்று மீண்டும் அதிகரிக்க ஆரம்பிக்கின்றன; வேலையின்மையும் குறைய ஆரம்பிக்கிறது. ஏன் இந்த மாற்றம் தோன்றுகின்றதென்பதைத்தான் விரிவாக அடுத்து வரும் அத்தியாயங்களில் நாம் ஆராயப்போகிறோம். தற்போது மாற்றம் ஏற்படுகிறதென்பதைமட்டும் நாம் தெரிந்துகொள்வதே போதுமானது. இப் புதிய மாற்றம் எழும்போது பல சக்திகளும் இதற்கு வலிமையை உண்டுபண்ணுகின்றன. விலைகள் அதிகரிக்க

ஆரம்பிக்கின்றன என்பதே அவைகள் தங்களது இறக்கத்தின் அடி மட்டத்தைத் தொட்டுப் பின் கடந்திருக்கின்றன என்று பொருள். விலை இறக்கம் நீடித்தபோது தங்களது சரக்குகளை எடுக்காமல் அங் காடியைச் சலனமில்லாமல் செய்தவர்களனைவரும் இப்போது அங்காடிக்கு வந்து சரக்குகளைக் கொள்முதல் செய்ய ஆரம்பிப்பர். உற்பத்தித் தொழிலுக்கு இது ஊக்கமளிக்குமாதலால், அத் தொழில் களில் வேலையற்றவர்கள் வேலைக்கமர்த்தப்படுவர். எனவே வேலை யற்றிருப்பவர்களின் தேவை அதிகப்படும். விலைகள் குறையும் போது இலாபங்களும் குறையும். விலைகளின் கடைசி இறக்கம் வணிகர்களுக்கு நம்பிக்கை யூட்டி அவர்கள் சேமித்துவைத்துள்ள காப்புநிதியைச் செலவழித்தும் அல்லது கடன் வாங்கியும், தாங்கள் நெடுங்காலமாக தள்ளிவைத்துக்கொண்டேயிருந்த இயந்திரங்கள், ஆலைகள் இவற்றின் புதுப்பித்தலையும் புதியதாக உண்டுபண்ணு தலையும் செய்யத் தூண்டும். இது, கட்டடங்கள், இயந்திரங்கள் ஆகியவைகளை உற்பத்தி செய்யும் தொழில்களுக்கு வேலை கொடுப் பதனுல் வேலையின்மையும் குறையும். திரும்பவும் வேலை கிடைக்கப் பெற்றவர்கள் தற்போது நிறையச் செலவழிக்கக் கூடுமாதலால், அவர்களின் செலவழித்தல், உணவு, உடை, தட்டுமுட்டுப் பொருள்கள் இவைகளின் தேவையை அதிகப்படுத்தும். மந்த முள்ள காலத்து வேலையின்மை வரக்கூடுமோ என்பதற்காகப் பயந்து மிகக் குறைவாகச் செலவழித்துத் தங்கள் பணத்தைச் சேமித்த வேலையிலிருந்தோர், தற்போது சற்றுத் தாராளமாகச் செலவழிக்க ஆரம்பிப்பர். அவர்கள், தாங்கள் சிலகாலமாகக் கற்பனை செய்துகொண்டிருந்த பெரியதும் கவர்ச்சிகரமானதுமான வீட்டைக் கட்டுவது சாத்தியமென எண்ண ஆரம்பிப்பர். இம் மாதிரியான காரணங்களால் தேவை அதிகரிக்கின்றது. விலைகள் அதிகரித்து வேலையின்மை குறையும். அதிகரித்துக்கொண்டு வரும் தேவைக்கேற்பப் பொருள்களை அளிப்பதற்கு, இருக்கும் ஆலைகளைப் புதுப்பித்தல் மட்டும் போதாது, அவைகளை இன்னும் விரிவுபடுத்தவேண்டுமெனச் சில வணிகர்கள் சிந்திக்க ஆரம் பிப்பர். எனவே, அமைப்புத் தொழில்களுக்கு (construction trades) அதிக வேலை இருக்கும்; அதுபோல அத்தொழில்களில் வேலைக் கமர்த்திக்கொள்ளப்படுவோரது செலவும் அதிகரிக்கும். இந்தப் பொதுவான போக்கிற்கு ஒவ்வொரு வளர்ச்சியும் வலுவூட்டு கின்றது. மீட்சியானது திரளாக முன்னேக்கிச் செல்லும். இந்தக் காரணங்களால் தான் மீட்சி ஆரம்பித்துவிட்ட பிறகு, அது பல ஆண்டுகளுக்குத் தொடர்ந்து நீடிக்கின்றது.

மீட்சி முடிவடைந்ததும், ஒரு குறிப்பிட்ட காலத்தில் விலைகள் அதிகரிப்பது நின்றுவிடுகின்றது; வேலையின்மை குறைவதும் நின்று

விடுகின்றது. ஏன் இவ்வாறு ஏற்படுகிறதென்பதை ஆராய்வதை மீண்டும் நாம் ஒத்திவைத்தே ஆகவேண்டும். ஆனல், இந்நிலை ஆரம்பித்ததும், சென்ற பத்தியில் (Paragraph) கூறியுள்ள சக்திகள் யாவும் எதிர்த்திசையில் வேலை செய்ய ஆரம்பிக்கும். விலைகள் குறைகின்ற காரணத்தால், வணிகர்களும், இன்னும் சற்று விலை இறங்கிய பிறகு கொள்முதல் செய்துகொள்ளலாமென் றெண்ணிக் கொள்முதலை நிறுத்திவிடுவர். இதனுல் மக்கள் வேலையிழப்பர்; அவர்களது குறைவான வருமானங்கள் தேவையில் மற்றொரு குறைப்பை ஏற்படுத்துகிறது. இலாபங்கள் குறைதலும், வேலையின்மை அதிகரித்தலும் வணிகர்களையும், சாதாரண நுகர்வோரையும் அச்சுறுத்துகின்றன. இன்றியமையாததல்லாத செலவுகளத்தனையையும் இவ்விரண்டும் நிறுத்திவிடுகின்றன. கட்டடத் தொழில்களையும், அமைப்புத் தொழில்களையும் இது வெகுவாகப் பாதிக்கின்றது. அவைகளில் உண்டாகும் வேலையின்மையினுல் பொதுப்படையான கீழ்நோக்கிச் செல்லும் போக்கு இன்னும் சற்று அதிகரிக்கின்றது. மீண்டும் ஒவ்வொரு சக்தியும் இத்தகைய போக்கிற்கு வலுவூட்டுகின்றன. எனவே இந்த இறக்கம், குவிதலாகத் தலைப்படுகின்றது. மீட்சியைப் போலவே, மந்தமும் பல ஆண்டுகளுக்குத் தொடர்ச்சியாக எவ்விதத் தடைகளுமின்றி இயங்குகின்றது.

எடுத்துக்காட்டானதொரு வாணிபச்சகடத்திற்கு, இது ஒரு சுருக்கமான விளக்கமாகும். ஆனல், வாணிபச் சகடம் நமது மையக் கருத்தல்ல; அதில் பணம் ஆற்றுகின்ற செயலே நமது மையக் கருத்தாகும். நம்முடைய இந்த நோக்கத்திற்கு வாணிபச் சகடத்தின் நீண்ட விளக்கத்தைவிட, குறிப்பிட்ட ஓரிரண்டு பண்புகளை மட்டும் குறிப்பிடுதலே போதுமானது.

இங்கே முதலாவதாகக் கவனிக்கப்படவேண்டியதொன்று—பின்னுல் வரப்போகும் இந்நிகழ்ச்சி சற்று முக்கியம் வாய்ந்ததே—வாணிபச் சகடம் பொருளாதார அமைப்பிலுள்ள பலம் வாய்ந்த சக்திகளால் இயக்கப்பட்டாலும் சில சந்தர்ப்பங்களில் அச்சக்திகளும் மனிதருடைய நடவடிக்கைகளால் தள்ளுபடி செய்யப்படுகின்றன என்பதாகும். உதாரணமாக 1914ஆம் ஆண்டு துவங்கிய போர் ஒரு வாணிபச் சகடத்தின் முழுப் போக்கைத் தடைசெய்தது. அப்போது விலைகளின் நெடுங்காலப் போக்கு மேல் நோக்கியிருந்தது. 1913ஆம் ஆண்டில் மொத்த வியாபார விலைகளின் குறியீட்டெண்ணின் சராசரி 1896ஆம் ஆண்டின் சராசரியைவிட 40 சதவீதம் அதிகரித்தது—அதாவது ஆண்டொன்றுக்கு 2 சதவீத நெடுங்கால அதிகரிப்பு என்பதாகும். போருக்குச்

சற்று முன்பாக உள்ள ஆண்டுகளிலும் வாணிபச் சகடம் மேல் நோக்கியே சென்றுகொண்டிருந்தது. வேலையின்மை 1908ஆம் ஆண்டிலும் 1909ஆம் ஆண்டிலும் அந்த நாட்களில் அதிகமாக இருந்தது. ஆனால் அடுத்த மூன்று ஆண்டுகளில் நிலைமை விருத்தியடைந்தது. இந்த ஆண்டுகளில் 1913ஆம் ஆண்டே, பதிவேடுகளில், மிகச் சிறந்த ஆண்டுகளில் ஒன்றாக இருந்தது. சாதாரணமான சூழ்நிலை இருந்திருந்தால் இந்தப் போக்கு 1914 அல்லது 1915ல் மாற்றமடைந்திருக்கும். ஆனால் போர், இந்தச் சாதாரண நிகழ்ச்சிகளின் போக்கு முழுவதையுமே மாற்றியமைத்துவிட்டது. வேலையின்மை மறைந்து, விலைகளும் வேகமாக அதிகரித்தன. 1920ஆம் ஆண்டு இளவேனிற்காலத்தில், விலைகள் 1913ஆம் ஆண்டு இருந்ததைப்போல் மூன்று மடங்காக (மொத்த வியாபாரக் குறியீட்டெண்ணால் அளக்கப்பட்டது) அதிகரித்தது. அந்த நிலையிலிருந்து, அவைகள் மீண்டும் மந்தமடைந்தன. இந்த மந்தம், 1922ஆம் ஆண்டில் மீண்டும் 150 சதவீதம் உயர்ந்து நிலைமை சரியானது வரையில் நீடித்தது. 1914ஆம் ஆண்டிலிருந்து 1922ஆம் ஆண்டு வரையிலுள்ள ஆண்டுகளில் சுபிட்சம், மந்தம் என்று மாறி மாறி வருகின்ற ஒரு இயல்பான நிலை மாறியது. உண்மையில், ஒரு போர்க்கால சுபிட்சமும் (boom) ஒரு போரின் பிற்கால மந்தமும் இருந்தது. ஆனால் இவ்விரண்டில் ஒன்றுகூட இயல்பான பண்புடையதாக இல்லை. போர்ச்சமயத்தில் அரசாங்கம் மேற்கொள்ளும் பிரமாண்டமான நடவடிக்கைகள், வாணிபச் சகடத்தை இயங்கா வண்ணம் நிறுத்திவைக்கப் போதுமானவையாக இருந்தன.

1939—45-ல் ஏற்பட்ட போர் இதைப்போலவே ஒரு சீர்குலையச் செய்யும் விளைவை உண்டுபண்ணியது. 1937ஆம் ஆண்டு கோடையில் ஓர் வாணிபச்சகடம் ஒரு இயல்பான உச்சநிலையை அடைந்த பின்னர் மெதுவாக கீழ்நோக்கிச் செல்ல ஆரம்பித்தது. இந்த இறக்கம் ஓராண்டு காலம் சென்ற பிறகு, அப்போது போரின் பல பகுதிகளை நெருங்கிக்கொண்டிருந்ததும், போர்க் காலச் சாதனங்களால் பண உதவி அளிக்கப்பட்டதுமான படைக் கருவி திரட்டும் திட்டத்தினால் (armament), தடுத்து நிறுத்தப்பட்டது. 1938ஆம் ஆண்டு இலையுதிர் காலத்தில் (autumn) விலைகள், வேலை ஆகியவற்றின் விலை வளைகோடுகள் (price curves) மேல் நோக்கிச் சென்றன. போரின் சுழற்காற்றால் சிக்கப்படும் வரையில் இம்மாதிரி மேல்நோக்கிச் சென்றுகொண்டிருந்தன. வாணிபச் சகடம் இன்னும் அதிக வலுப்பெற்ற சக்திகளால் இயங்காமல் நிறுத்திவைக்கப்படுதல் குடிபரவு நாடுகளில் தான் என்று எண்ணக்கூடாது. தனி மனிதர்களின் செயலுரிமையற்றதும்

பொருளாதார முறைகள் அரசாங்க ஆட்சியின் கீழுள்ளதுமான யதேச்சாதிகார நாடுகளில்,வாணிபச்சகடத்தின் இயல்பான இயக்கம், சமாதான காலத்திலும் நிறுத்திவைக்கப்படும். மேற்சொன்ன நிகழ்ச்சிகளால் நாம் தெரிந்துகொள்வதென்ன? வாணிபச் சகடத்தின் ஊசலி(Pendulam)யின் இயக்கம் வலிமை வாய்ந்ததாக இருப்பினும் அது, அரசாங்கத்தின் நடவடிக்கையால் (அந் நடவடிக்கை பெருமளவில் இருக்குமானுல்) நிறுத்திவைக்கப்படக்கூடும்.

இரண்டாவதாகக் கவனிக்கப்படவேண்டியது, வாணிபச் சகடத்தின் மேல்நோக்கியதும் கீழ்நோக்கியதுமான தோற்றங்கள் எல்லாவிதத்திலும் ஒன்ருக இருப்பதில்லே. வேறுவிதத்தில் சொல்லப் போனுல், வாணிபச்சகடம் முழுமையும் செவ்வொழுங்காக (symmetrical) இருப்பதில்லே. உதாரணமாகக் கீழ்நோக்கிய தோற்றம் அல்லது மந்தம், மேல்நோக்கிய தோற்றம் அல்லது மீட்சி (recovery)யைவிட எப்போதும் மிகக் குறைவாகவேயிருக்கிறது. கீழ்நோக்கிய இயக்கம், இரண்டு அல்லது அதிகபட்சம் மூன்று ஆண்டுகளுக்குமேல் நீடிப்பதரிது. ஆனுல் மீட்சி ஐந்தாண்டுகளுக்கு மேலேயும் நீடிக்கும். எனவே, கிரேட்பிரிட்டனில் சென்ற முடிவடைந்த சகடத்தின், கீழ்நோக்கிய தோற்றம், 1929ஆம் ஆண்டின் கடைசிக் காற்பகுதியில் ஆரம்பித்தது. 1932ஆம் ஆண்டுக் கோடைவரையிலுங்கூட சகடத்தின் அடித்தளம் (bottom) அடையப்படவில்லேயாயினும், 1931ஆம் ஆண்டு கடைசிக் காற்பகுதியிலேயே சகடத்தின் கீழ்நோக்கிய தோற்றம் முடிவடைந்துவிட்டது. ஆனுல் இதற்கப்பால் ஆரம்பித்த மீட்சியானது 1937ஆம் ஆண்டுவரையிலும் தாராளமாகத் தங்குதடையின்றிச் சென்றது (மார்ச் மாதம் விலேகள் உச்சநிலேயை அடைந்தன; உற்பத்தி செப்டம்பர் மாதம் உச்சநிலேயை அடைந்தது). திருப்ப முனேகளில் மற்ருெரு மாற்றமுள்ளது. மீட்சியானது பெரும்பாலும் பண நெருக்கடியால்தான் தடைப்படும். இதனுல் போக்கில் ஒரு சரியான ஐயமற்ற மாற்றம் உண்டாகும். ஆனுல் மேல்நோக்கிய போக்கு எந்தப் புள்ளியில் ஆரம்பமாகிறதென்பது இச்சமயத்தில் தெரியாது. இறக்கமானது மெதுவாக இறங்கிச் செல்வதுடன் அவ்விறக்கம் மட்டமானதாகவும் (flattens) இருக்கிறது. விலேகளும் உற்பத்தியும் மிக மெதுவாக மேல்நோக்கிச் செல்ல ஆரம்பிக்கின்றன. எடுத்துக்காட்டானதொரு வாணிபச் சகடத்தின் வடிவம் எதிர்ப்பக்கத்தில் கண்டவாறு இருக்கும்.

இவ்விரண்டு தோற்றங்களுக்குமிடையே இன்னுமொரு முக்கிய வேறுபாடொன்றுண்டு. மந்தம் காலத்தாலும், பண்பாலும் மீட்சியைவிடச் செறிந்திருக்கும். விலேகளும் வேலேயும் சேர்ந்தே இறங்கிக்




கொண்டு வரும்; அவை இறங்கும்போது வேகமாகவும் இறங்கும். ஆனால் மீட்சியின்போது இரண்டு துணைக் காலங்களை (sub-periods) வேறுபடுத்திக் கூறுவது வழக்கம். மீட்சி ஆரம்பித்த ஓரிரண்டு ஆண்டுகட்குப் பின்னர் உண்மையில் விலைகள் நிதானமாக மேல் நோக்கிச் செல்கின்றன. மீட்சியின் பெரும்பாலான விளைவு வாணிபத்தின் அளவையும் உற்பத்தியின் அளவையும் அதிகப்படுத்துதலேயாகும். ஆனால், மீட்சியின் இறுதிக் காலத்தில்—உற்பத்தியை இனிமேல் அதிகமாகப் பெருக்குவது கடினம் என்ற நிலை ஏற்படும் போது—விலைகள் மிக அதிகமாக ஏறும். யூகபேரக் கொள்முதல் (speculative buying) என்னும் புயலால் இவ்விலைகள் இன்னும் அதிவேகமாக உந்தப்பட்டு, யூகபேரம் நிகழும் பொருள்களின் விலைகளை விநோதமான அளவு உயரத்துக்குக் கொண்டு செல்லும்.

வாணிபச் சகடத்தைப் பற்றிய மூன்றாவதான ஒரு கருத்தும் இங்குக் கவனிக்கத்தக்கது. சென்ற சில பக்கங்ளில் 'விலைகள்' அல்லது 'வேலை' இதனைச் செய்கின்றன, அதனைச் செய்கின்றன என்று சொல்லி வந்தோம். சென்ற அத்தியாயத்தின் கடைசிப் பகுதியில் சொல்லப்பட்டிருப்பதுபோல எல்லா விலைகளும் ஒருங்கே இயங்குவதில்லை என்பது தெற்றென விளங்குகிறது. மொத்த வியாபார விலைகள் (wholesale prices) இவ்வாறு இயங்குந் தன்மையன; சில்லரை வியாபார விலைகள் இவ்வாறு, சற்றுக்குறைவாக இயங்கும், கூலிகள் (உழைப்பின் விலை) இன்னும் குறைவாக இயங்கும், ஒப்பந்தத்தினால் நிர்ணயிக்கப்பட்ட விலைகள் இவ்வாறு எப்போதுமே இயங்கா. இவ் விலை அமைப்பின் சீர்குலைதல் மேலே விவரித்த விளைவுகளை உண்டுபண்ணுகின்றன—வாணிபச் சகடத்தில் ஏதாவது ஒரு மாற்றம் ஏற்பட்டால் அது முழு அமைப்பையும் சீர்குலையச் செய்து, எதிர்மறையான சீர்குலைவை உண்டுபண்ணும்.

பல்வேறு தொழில்களினால் ஏற்படும் உற்பத்திக்கும் வேலைகளுக்கும் இதேவிதமான சீர்குலைவே உண்டாகிறது. இவைகளில் சில மிகவும் கொடூரமான மாற்றங்களுக்குள்ளாகின்றன; மற்றவை மிகக் குறைந்த மாற்றங்களுக்கே உள்ளாகின்றன. இது ஏன் இப்படி யுள்ளதென்பதைப் புரிந்துகொள்வது சுலபம். உணவு உற்பத்தித் தொழில்களின் மொத்த உற்பத்தியில் 10 சதவீதம் குறைந்துவிட்டாலும் அது மிகவும் கவனிக்கத்தகுந்த விளைவை யுண்டுபண்ணும். நாடு, விரைவில் வாழ்க்கையின் இன்றியமையாத் தேவையொன்றினை குறைவாகப் பெறப் போகிறதென்பதை உணர்த்தும். ஆயினும், வீடுகட்டும் தொழில் முழுமையும் நிறுத்தப்பட்ட போதிலும், அது அந்தத் தொழிலில் ஈடுபட்டவர்களைப் பாதிக்குமேயல்லாது நாடு முழுவதையும் பாதிக்காது, நாடு ஓரிரண்டு ஆண்டுகளுக்கு இருக்கும் வீடுகளை வைத்துக்கொண்டு சமாளித்துக் கொள்ளமுடியும். போர்ப் பொருளாதாரம் (Economics of war) இக் கருத்தினைத் தெள்ளத் தெளிவாக விளக்கும். 1939-45 ஆகிய ஆண்டுகளில் நடைபெற்ற போரின்போது, பங்கீடு முறைகளனைத்தும் இருந்தபோதிலுங்கூட, கிரேட்பிரிட்டனில் உணவு நுகர்ச்சியின் அளவு (volume of food consumptions) 10 சதவீதத்திற்கு மேல் குறைக்கப்படவில்லை. ஆனால், வீடுகள் கட்டுவது ஐந்து ஆண்டுகள் முழுதும் நிறுத்திவைக்கப்பட்டது. இத்துடன் வானூர்தித் தாக்குதல்களினால் (air raids) ஏற்பட்ட வீடுகள் சேதமும் சேர்ந்து மிகக் கடுமையான இடர்ப்பாட்டினை விளைவித்ததென்றாலும், உணவளிப்புகளில் ஏற்படுத்தப்படும் பெரிய குறைப்பினால் ஏற்படும் பேரிழப்பைப் போல் அவ்வளவு பெரிய இடர்ப்பாட்டினை உண்டுபண்ணிவிடவில்லை. மந்தத்தின் போது, பொதுமக்கள் ஓரிரண்டு ஆண்டுகளுக்குப் பண்டங்களை வாங்குவதினின்றும் நிறுத்திவிடுவதால் அவைகளை உற்பத்தி செய்யும் தொழில்கள் கடுமையாகப் பாதிக்கப்படுகின்றன. ஏனெனில் போர்க் காலத்தில் இத் தொழில்கள் நிறுத்திவைக்கக்கூடும். இவ்வாறு தள்ளிவைக்கப்பட்ட கொள்முதல் சுபிட்சத்தின் சில ஆண்டுகட்குள்ளாகவே கொள்முதல் செய்யப்படுவதால் இத் தொழில்கள் சுபிட்ச காலத்தில் நன்கு ஓங்குகின்றன. பெரும்பாலும், இத் தொழில்கள், நெடு வாழ்வுப் பண்டங்களை (dumble goods) உற்பத்தி செய்யும் தொழில்களாகவேயுள்ளன (நெடு வாழ்வுப் பண்டங்களாவன ஓராண்டுக்கும் மேலாக நீடித்து உழைக்கக்கூடிய பொருள்களாம்). நெடுவாழ்வுப் பண்டங்களை உற்பத்திசெய்யும் தொழில்களில்தான் அதிக ஏற்ற இறக்கங்கள் உள்ளன வென்பதில் தான் வாணிபச் சகடம் இப்படிப்பட்டதென்பதற்குத் தகுந்த விடையுள்ளது.

வாணிபச் சகடத்தை விளக்கிய பிறகு, அதனால் பொருளாதார முறைக்கு வரும் கேடுகளைப்பற்றிக் குறிப்பிடத் தேவையில்லை.

மந்தங்களினால் வரும் நஷ்டங்களே இதனை நன்கு எடுத்துக் காட்டும். ஒருபுறம் துன்பமும், வேலையின்மை என்னும் மனக் கேடும் தனிப்பட்டவரின் ஏழ்மையும், சமூகக் கொந்தளிப்புடன் கலந்து வெளிப்படும். மற்றொருபுறம், தொழில், முதல் இவைகள் பயன்படுத்தப்படாமையால் விரயத்தால் ஏற்படுகின்ற செல்வத்தின் நஷ்டமும் ஏற்படுகின்றது. பூரிப்புக் காலங்களால் (boom periods) அவ்வளவு சேதம் ஏற்படுவதில்லை. ஆனால் உண்மையில் பார்க்கப் போனால் பூரிப்புக் காலமே மந்தக் காலத்தை ஏற்படுத்துகின்றது. சற்றுமுன் குறிப்பிட்ட, நீடித்து உழைக்கக்கூடியப் பொருள்களைத் தயார் செய்யும் தொழில்களே அதிகமான கொடூர ஏற்ற இறக்கங் களால் பாதிக்கப்படுகின்றன என்பது மேற்சொன்னதற்கு ஓர் உதாரணமாக உள்ளது. பல ஆண்டுகள் கொண்ட ஒரு நீண்ட காலத்திற்கு, நாட்டில் ஆண்டொன்றுக்கு 200,000 வீடுகள் தேவைப்படுகிறதென்று வைத்துக்கொள்வோம். ஓர் ஆண்டில் ஒரு வீடு கட்டுவதற்கு ஒரு மனிதன் தேவை எனவும் வைத்துக்கொள் வோம். எனவே கட்டடத் தொழிலில் 200,000 மனிதர்களுக்கு நிரந்தரமாக வேலை கிடைக்கும். ஆனால் வாணிபச் சகடத்தின் சுழற்சியால், நாடு 200,000 வீடுகளை ஒரேசீராக வேண்டுவதில்லை. உதாரணமாக ஓர் எட்டாண்டுச் சகடத்தில் மூன்றாண்டுகளுக்கு ஆண்டொன்றுக்கு 100,000 மும், அடுத்த மூன்றாண்டுகளுக்கு 200,000ம் அதற்கடுத்த இரண்டாண்டுகளுக்கு ஆண்டொன்றுக்கு 350,000மும் தேவைப்படும். இந்த இரண்டு பூரிப்பு ஆண்டுகளும் கட்டடத்தொழிலுக்கு 350,000 மனிதர்கள் தேவைப்படுவர். ஆனால் இந்த350,000 மனிதர்களில், 150,000 பேர் இந்த எட்டு ஆண்டு களில் ஆறு ஆண்டுகட்கு வேலையிழக்கக்கூடும். இந்த எட்டாண்டு களில் இன்னும் மூன்று ஆண்டுகளுக்கு100,000பேர் வேலையிழப்பர். இத் தொழிலில் இந்த எட்டாண்டுக்கால அளவில் (period) சராசரி வேலையின்மை 43 சதவீதமாக இருக்கும். பூரிப்பாண்டுகளில் மிகக் குறைந்த மனிதர்களே இத் தொழிலால் கவரப்படுகின்றனர்; கடின ஆண்டுகளில் இதுபோலக் குறைவான மனிதர்களே வேலையிழப்பர். இதுபோலவே பூரிப்புக்காலத்தின் வரம்பு கடந்தவைகள் (excesses) மந்தகாலத்தில் தங்களது தண்டனையைப் பெறுகின்றன.

மனித இனம் மூன்று பிரமாண்டமான பிரச்சினைகளைச் சமாளித்தாக வேண்டுமென்றும், இம் மூன்றனுள் ஏதாவது ஒன்றிற் குத் தக்க வழி காண்பதும் மனித சமூகத்தின் நன்மையை அதிகப் படுத்தும் என்றும், இம் மூன்றனுள் யாதொன்றைத் தீர்க்க முடியாமற் போனாலும் அது அழிவையே தருமென்றும், மிக வுண்மையாகக் கூறப்பட்டது. இம் மூன்று பிரச்சினைகள் யாதெனில், ஒன்று நாடுகளுக்குள் நடக்கும் ஆயுதப் போரைத்

தடை செய்தல், நிறைய மக்களை உற்பத்தி செய்வதன்மூலம் மனித இனத்தை வாழவைக்கும் பிரச்சினை, மூன்றாவதாகவுள்ளது வாணிபச் சகடத்தை நீக்குவது. கடைசியில் சொல்லப்பட்டது எவ்வகையிலும் குறைவானதொரு பிரச்சினையல்ல.

## பணவீக்கமும் (Inflation) பணவாட்டமும் (Deflation)

இவ்வத்தியாயம் விளக்கந் தருவதற்கெனவே எழுதப்பட்டதாகும். அதிகமாகப் பயன்படுத்தப்படும் இரண்டு சொற்களுக்கும் அதிகமாகத் தவறாகப் பயன்படுத்தப்படும் இரு சொற்களுக்கும், மேற்சொன்ன விளக்கத்தை ஆழ்ந்து ஆயுமுன்னர், உருப்படியான விளக்கத்தைக் காண்போம். அவ்விரண்டு சொற்களாவன ஒன்று பணவீக்கம் (Inflation) மற்றொன்று பணவாட்டம் (Deflation). இவ்விரண்டு சொற்களுக்கும் ஒவ்வொரு எழுத்தாளரும் தங்களது சொந்தமான விளக்கத்தைப் புகுத்துவதால், நிறையக் குழப்பங்கள் ஏற்படுகின்றன. இந்தக் காரணத்திற்காகவே, இங்கே குறிப்பிட்டுள்ள விளக்கங்களே முற்றிலும் சரியென்று வாதிடுவதற்கில்லை. பணவீக்கமாவது பணத்தின் மதிப்புக் குறைவதாகும்; அதாவது விலைகள் ஏறிக்கொண்டே செல்லும். மேற்சொன்ன விளக்கமே மிக எளிதானதும் பயனுள்ளதுமான விளக்கமாகும். இதைப் போன்றே பணவாட்டமென்பது பணத்தின் மதிப்பு அதிகரிப்பதாகும். அதாவது விலைகள் குறைதலாகும். இவ்விரண்டு சொற்களுமே விலைகளின் போக்கைப் பற்றி விவரிப்பன என்றும் அவைகள் பணத்தைப் பற்றிய சொற்களென்றும் இங்குக் குறிப்பிடத் தக்கவை, பணவீக்கமானது, ஏற்கெனவே நாம் விவரித்தது போல், வழக்கமாக நடவடிக்கைகள் வளர்ச்சியடைதலையும், வேலைகள் அதிகரிப்பதையும் தன்னோடு கொண்டது. பணவாட்டமானது இதற்கு நேர்மாறான விளைவுகளைக் கொண்டது. தொடர்புடைய இவ்விளைவுகள் வரம்பில்லாதனவுமல்ல. ஏனெனில், பண வீக்கமில்லாமலேயே நடவடிக்கைகளையும் வேலையையும் அதிகரிக்க முடியும் (இதற்கு 'மீட்சி' என்னும் சொல்லைப் பயன்படுத்துவோம்); அதுபோலவே மீட்சியின்றியே பணவீக்கத்தைக் கொண்டுவர இயலும். இதுபோலவே 'மந்தத்தை' (மீட்சிக்கு எதிரிடையானதை) பண வாட்டமின்றியே கொணரலாம், பணவடிப்பையும் மந்தமின்றியே கொணரலாம். மந்தம், பணவடிப்பு ஆகிய இரண்டும் பிரிந்தே காணப்படுவதில்லையாகையால் மந்தத்தை (மீட்சிக்கு எதிரிடையானதை) பணவடிப்பின்றியே கொணரலாம்; பணவாட்டத்தை மந்தமின்றிக் கொணரலாம்.

போருக்குட்பட்ட ஆண்டுகளில் 'பணவீக்கம்' மிகவும் மதிப்பிழந்தது. இதற்கு முக்கிய காரணம் சில நாடுகளில், அதிலும் குறிப்பாக ஜெர்மனியில், விலைகளின் உயர்வு கட்டுக்குமீறி இருந்தது. விலைகள் தலைதெறிக்கும் வேகத்தில் உயர்ந்து சென்றன. போருக்கு முன்னிருந்த விலைமட்டத்தைப் போல் ஒரு மில்லியன் மில்லியன் மடங்கு விலைகள் ஒரு சமயம் உயர்ந்து இருந்தன. இதற்குத்தான் பழிவாங்குமியல்புள்ள மீட்சியில்லாப் பணவீக்கம் (Inflation without recovery) என்று பெயர். ஐரோப்பாக் கண்டத்திலுள்ள மக்கள் துயரத்துடன் உணர்ந்த வாறு, இது எந்த பகுத்தறிவுள்ள சமூகத்திற்கும் அழிவையே தர வல்லது. ஒரே இரவில் நிலைத்த மதிப்பையுடைய சொத்து அல்லது வருமானம் அல்லது கடன் பத்திரங்கள், காப்புறுதிச் சீட்டுகள் (Insurance policies), அடைமானங்கள், ஓய்வுச் சம்பளங்கள், சேமிப்புகள், சம்பளங்கள் முதலியன தங்களது மதிப்பை இழக்கின்றன. இப் பணவீக்கம், ஜெர்மனியில் நூறுயிரக்கணக்கான மக்களைப் பாழாக்கியது. இது நடுத்தர வகுப்பினர் என்பவரையே இல்லாமற் செய்துவிட்டபடியால்தான் நாசிகளின் புரட்சி (Nazi Revolutions) தோன்றியது. இப் பணவீக்கத்தின் கொடுமைகள் அவ்வளவு பயங்கரமானதாக இருந்ததால் 'பணவீக்கம்' என்பது பல நாடுகளுக்கும் ஒரு பூச்சாண்டியாக இருந்தது! இந்த ஒரு பொருளாதார நிகழ்ச்சி எவ்விதத்தாலும் ஒழிக்கப்பட வேண்டிய தொன்றாக இருந்தது.

இம்மாதிரியான அழிவுதரும் நிகழ்ச்சிகளினின்றும் வேறுபட்ட பணவீக்கமொன்றுண்டு. அதாவது வாணிபச் சகடம் மேல் நோக்கிச் சென்று கொண்டிருக்கும்போது ஏற்படும் பணவீக்கம். இதனைப் 'பணவீக்கம்' என்றழைக்காது 'மீட்சிப் பணவீக்கம்' (Reflation) என்றழைப்போம். தற்போதைக்கு 'மீட்சிப் பணவீக்கம்' என்பதை முன்னிருந்த நிலைக்குக் கொண்டுவரும் விலைகளின் அதிகரிப்பு என்று மட்டும் அழைப்போம். முன்னிருந்த நிலையாவது முன்புள்ள பணவாட்டம் (Deflation) ஆரம்பித்த நிலைக்கும் சற்று முன்னுள்ள நிலை என்பதாம். இந்தப் புள்ளிக்குப் பிறகு ஏற்படுகின்ற விலை உயர்வுகள் பணவீக்கம் என்றழைக்கப்படும். ஐந்தாவது அத்தியாயத்தில் நாம் இன்னும் சரிநுட்பமாக இதனை வேறுபடுத்திக் கூறலாம். 1947ம் ஆண்டில் இதற்கு நேர் மாறான ஒரு சூழ்நிலை ஏற்பட்டது. எனவே 'பணவீக்கம்' என்னும் வார்த்தைக்கு நேர்மாறான ஆனால் பணவாட்ட அளவிற்கும் இல்லாத ஒரு நிலைக்கு ஏற்றதொரு சொல்லைக் கண்டுபிடிக்க வேண்டிய ஒரு நிலை ஏற்பட்டது. 'வீக்க நீக்கம்' (disinflation) என்னும் சொல் இந்நிலையைக் குறிக்க ஏற்படுத்தப்பட்டது.

# 4. பணத்தின் கணியம்

## (The quantity of Money)

### பரிவர்த்தனைச் சமன்பாடு (The Equation of Exchange)

பணத்தின் மதிப்புப் பற்றியும், அதன் மதிப்பில் அடிக்கடி ஏற்படும் ஏற்றத் தாழ்வுகளைப் பற்றியும், இவைகளினால் வரும் விளைவுகளைப் பற்றியும் சென்ற அத்தியாயத்தில் கூறினோம். பண மதிப்பில் ஏற்படும் மாற்றங்களுக்குரிய காரணங்களைத் தற்போது நாம் ஆராயவேண்டும்.

எந்த ஒரு பொருளின் மதிப்பும் அதன் தேவை, அளிப்பு ஆகிய இவற்றைப் பொறுத்தே உள்ளது. பணம் இவ்விதிக்கு ஒரு விலக்காக இருக்கிறது. எப்படியெனில் அதனுடைய மதிப்பில் ஏற்படும் மாற்றங்கள் ஏதாவதொரு விலையில் மட்டும் மாற்றத்தை ஏற்படுத்துவதோடு நின்று விடுவதில்லை; எல்லா விலைகளிலும் ஒருங்கு சேர்ந்து ஏற்ற இறக்கங்களை உண்டுபண்ணுகிறது. பணத்தின் தேவை அதிகரித்து, அதற்கிணையாக அதன் அளிப்பு (Supply) அதிகரிக்கவில்லையென்றால், அதனுடைய மதிப்பு உயரும் —அதாவது பொதுவாக விலைகளில் இறக்கம் ஏற்படும். அது போன்றே, பணத்தின் அளிப்பில் அதிகரிப்பு ஏற்பட்டு, அதனுடைய மதிப்புக் குறைவடையும்—அதாவது பொதுவாக விலை மட்டத்தில் உயர்வு ஏற்படும்.

இதுவரையில் விளக்கப்பட்டவை தெளிவாகவே உள்ளன. ஆனல் பணத்தின் தேவை, அளிப்பு என்பன யாவை? அளிப்பு (Supply) என்பது எளிதாக விளங்கக்கூடிய கருத்தாகும். எந்த ஒரு குறிப்பிட்ட நேரத்திலும் உள்ள பணத்தின் அளிப்பு, அப்போதுள்ள பணத்தின் மொத்தக் கணியமாகும். பணமாவது வெறும்

நாணயங்களோ, பாங்கு நோட்டுகளோ மட்டுமல்ல; பணப்பொறுப்புகளை தீர்த்துக்கொள்வதற்கு ஏற்றுக்கொள்ளப்படும் எப்பொருளும் பணமெனக் கொள்ளப்படும் என்பதையெல்லாம் முதலாம் அத்தியாயத்தில் பார்த்தோம். செயல்முறையான எல்லா நோக்கங்களுக்கும் 'பணம்' என்பது 'நாணயமும் பாங்கு நோட்டுகளும் பாங்கு வைப்புகளும் சேர்ந்ததென'க் கொள்ளலாம். (இதன்படி பார்க்கும்போது நடைமுறைக் கணக்கு வைப்புகளையே—அதாவது செக்குகளைச் செலுத்திப் பணம் பெறும் கணக்கு முறை—பணம் என்று கணக்கிட வேண்டும்). இதன்படி எந்த ஒரு குறிப்பிட்ட நேரத்திலும் உள்ள பண அளிப்பு (Money supply) அப்போதுள்ள இம் மூன்றுவகைப் பணத்தின் மொத்த எண்ணிக்கையைக் குறிக்கும் எனக் கொள்ளுதல் வேண்டும். 1946ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் ஐக்கிய அரசியல் (United Kingdom) பொதுமக்கள் கைவசமிருந்த மூன்று வகைப் பணத்தின் மொத்த எண்ணிக்கை (அதாவது பாங்குகள் தங்களிடையே வைத்துக் கொண்டிருந்த இருப்புத் தவிர்த்து) பின்வருமாறு: நோட்டுகளும் நாணயங்களும் சேர்ந்து £ 1350 மில்லியனும் நடைமுறைக் கணக்கு வைப்புகளிலிருந்தும் £ 3750 மில்லியனும் சேர்ந்து பண அளிப்பின் மொத்த எண்ணிக்கையை £ 5,100 மில்லியனைச் செய்தன.

எந்த ஒரு நேரத்திலும் இதுவே பணத்தின் அளிப்பாகும். ஆனால் ஒரு குறிப்பிட்ட காலஅளவில் எவ்வளவு பண அளிப்பு இருக்கிறதென்று அறிய ஆரம்பிக்கும்போதுதான்—உதாரணமாக ஓராண்டு காலத்திற்குக் கண்டுபிடிக்கப் போகிறோம் என வைத்துக் கொள்வோம்—மற்றொரு காரணி தோன்றுகிறது. பணத்தின் ஒவ்வொரு 'நாணயமும்' திரும்பத் திரும்பப் பயன்படுத்தப்படுகிறது. நாணயங்கள் அதிசயிக்கத்தக்க வகையில் சுற்றி வருகின்றன. சராசரியில், ஒருவருடைய சட்டைப் பையில் அல்லது பணப்பையில் அல்லது பணப் பேழையில் (Till) ஒரு சில நாட்களே அவை தங்கியிருக்கின்றன. பாங்கு நோட்டுகள் இதைவிடச் சற்றுக் குறைவான வேகத்தில்தான் புழங்குகின்றன. ஆனால் அவைகளும் ஓராண்டுக் காலத்தில் பல்வேறு கைகள் மாறுகின்றன. இக் கருத்தினுக்குச் சற்று அதிகமான கற்பனை (Imagination) தேவையெனினும், பாங்கு வைப்புகளும் இதைப் போன்றே 'புழங்குகின்றன' (Circulating) என்று கருதப்படலாம். ஆனால் 1930ஆம் ஆண்டு (ஏதாவதொரு ஆண்டை உதாரணமாக எடுத்துக்கொள்ள வேண்டுமென்பதற்காக இந்த ஆண்டு தற்செயலாக எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது) லண்டன் தீர்வகத்தில் அங்கத்தினர்களாக இருந்த பாங்குகளின் கணக்குகளிலிருந்து

அவைகளின் வாடிக்கைக்காரர்களால் கொடுபட்ட செல்லுகளின் (Payments) மொத்த எண்ணிக்கை £ 64,740,96700. அந்த ஆண்டில் அதே பாங்குகளின் நடைமுறை வைப்புகளின் சராசரி அளவு £ 920,800,000 மட்டுமே இருந்ததால், சராசரியில் வைப்பு களின் ஒவ்வொரு பவுண்டும் (£) ஏறக்குறைய எழுபது தடவை கைம்மாறி யிருக்கும். கொடுபடவேண்டிய செல்லுகளுக்காக (Payments) எவ்வளவு பணம் ஓராண்டுக் காலத்தில் பயன்படுத்தப் பட்டதென்பதை நீங்கள் அறிய விழைந்தால், அப்போதிருந்த பணத்தின் அளவை அவை எத்தனை தடவை கைம்மாறினவோ அத்தனை எண்ணால் பெருக்கினால் இதற்கு விடை கிடைத்துவிடும். இப்படி இக்கட்டான வார்த்தைகளால் இதனை விளக்குவதை விடுத்து எளிதான வார்த்தைகளைக் கொண்டு இதனை நாம் விளக்க இயலும். இருக்கும் பணத்தின் அளவை' (The total amount of money existence) சுலபமாக 'பணக் கணியம்' (The quantity of money) என்றழைக்கலாம். இன்னும் சுருக்கமாக இதனைக் குறிப் பிட வேண்டுமாயின் இதனைப் 'ப' (M) என்னும் எழுத்தால் குறிப் பிடலாம். 'பணத்தின் ஒவ்வொரு நாணயமும் ஓர் ஆண்டில் கைம்மாறிச் செல்லும் சராசரி எண்ணிக்கையைப் பணத்தின் புழக்க வேகம்' (Velocity of circulation) என அழைக்கலாம்.[1] இவ்வாறு எந்தச் சமயத்திலுமுள்ள பணத்தின் அளிப்பு 'ப' (M) என அழைக்கப்படுகிறது. ஓராண்டுக் காலத்தில் உள்ள பண அளிப்பு 'பவே' (MV)வாக இருக்கும்.

தற்போது பணத்தின் தேவையைப்பற்றிப் பார்ப்போம். பணம் அது பணமாக இருக்கிறதென்பதற்காகவே, வேண்டப்படுவதில்லை. அது, சில குறிப்பிட்ட பணிகளை ஆற்றுவதற்காகவே—குறிப்பாக ஒரு மாற்று மத்தியமாகப் (Medium of Exchange) பணிபுரிவதற்கு வேண்டப்படுகிறது. அதாவது அது கைம்மாறுவதற்காகவே கொள்ளப்படுகிறது. ஓராண்டுக் காலத்தில் பணம் எவ்வளவு அளவு வேலை செய்யவேண்டும் என்று நாடு எதிர்பார்க்கிறதென் பதை, அது நிறைவேற்றிய பேரங்களின் மொத்த எண்ணிக்கை

1 ஒவ்வொரு வகைப் பணத்திற்கும் தனியான ஒரு புழக்கவேகமுண்டு. 1930ஆம் ஆண்டில் மேலே கூறியுள்ள நடைமுறைக் கணக்கு பாங்கு வைப்புக்கள் ஆண்டொன்றுக்கு 70 என்ற புழக்க வேகத்திலிருந்தன. நாணயங்களில் புழக்க வேகம் இதைவிட அதிகமானதாக இருக்கும். மேலும், புழக்க வேகத்தை ஒவ் வொரு நாளும், ஒவ்வொரு மாதமும், பத்தாண்டுகளுக்கொரு முறையும் கணக் கிட்டுக் கொண்டிருக்கத் தேவையில்லை. ஆண்டுக்கொரு முறை கணக்கிடுவதே மிகவும் வசதியான முறையாகும் (வேகமானது ஒரு வினாடிக்கு இத்தனை அடி என்று கணக்கிடப்படுவதைக் காட்டிலும் ஒரு மணிக்கு இத்தனை மைல் என்று கணக்கிடப்படுவதைப்போல). எனவே புழக்க வேகத்தை விளக்குவதற்குப் பல வழிகள் இருக்கின்றன. இவ்வழிகளில் பெரும்பாலும் குறிப்பிட்ட சில நோக்கங் களுக்குப் பயன்படுகின்றன. கட்டுப்பாடு ஏதுமற்ற 'பணத்தின் புழக்க வேகம்' பணத்தின் சராசரி நாணயமொன்று எத்தனை தடவை ஓராண்டில் கைம்மாறு கிறதோ அத்தனை தடவையாக இருக்கும்.

யைப் பொறுத்துக் கூறிவிடலாம். இக் கருத்தின்படி, ஓர் ஆண்டில் பல டன்கள் நிலக்கரி, பல மணிநேர உழைப்பு, ரொட்டித் துண்டு கள் இன்னும் பற்பல பொருள்களையும் விலைக்கு வாங்குவதற் காகவே பணம் தேவைப்படுகிறது.

அளிப்பிற்கும் தேவைக்கும் உள்ள தொடர்பை ஓர் எளிதான குறிக்கணக்கால் (Equation) விளக்க இயலும். ஒரு பண்டம் விற் கப்படும்போது அது குறிப்பிட்ட அளவு பணத்திற்குப் பரிவர்த்தனை செய்யப்படுகிறது. அதாவது அதன் விலையும் அப்பணத் தொகை யும் சமமெனக் கூறலாம். இப்படி, ஓராண்டுக் காலத்தில் விற்பனை யான எல்லாப் பொருள்களின் பட்டியலை எடுத்துப் பார்த்தால் அவைகளின். மொத்த மதிப்பும் அவைகளின் பரிவர்த்தனைக்காகக் கொடுக்கப்பட்ட பணத்தின் மதிப்பும் சமமாக இருக்கும். இதை வேறு விதமாகக் கூறுவோமாயின், கைம்மாறிய பணத்தின் மதிப்பு (Sum of money handed over) = விற்பனை செய்யப்பட்ட பொருள் களின் மொத்த மதிப்பு (Total value of goods sold) என்றாகும்.

நாம் ஏற்கெனவே அறிந்ததைப்போல, கைம்மாறிய பணம் 'பவே' (MV) ஆக இருக்கும். விற்கப்பட்ட பொருள்களின் மொத்த மதிப்பை இரண்டு பாகங்களாகப் பிரிக்கலாம். ஒருபுறம் பொருள் கள் பணிகள் ஆகிய இவ்விரண்டின் மொத்தக் கணியத்தாலும் (டன்கள், வேலை மணிநேரம், கெஜம் வார்த்தைகள் முதலியவை களால் அளக்கப்பட்டவை) மற்றொருபுறம் மேலே கூறியுள்ள பொருள்களையும் பணிகளையும் மதிப்பிடுகிற விலைகளாலும் இந்த மொத்த மதிப்புக் கணக்கிடப்படுகிறது. இதன்படி, நிலக்கரி ஒன்றே விற்கப்படுகின்ற பொருள் என வைத்துக் கொண்டால், குறிக்கணக்கில் (Equation) வலப்புறம், விற்கப்பட்ட டன்கள் நிலக்கரி ஒரு டன் நிலக்கரியின் விலையால் பெருக்கப்பட்ட தொகையாலானதாக இருக்கும். நடைமுறையில் அந்தப் பகுதி வாணிபத்தின் அளவினாலும் (இந்த அளவைக் கற்பனை செய்து பார்த்தல் எளிது; அளப்பதென்பதோ அரிது) பொதுவான விலை மட்டத்தாலும் (General price level) அமைக்கப்படுகிறது. பின்னால் சொல்லப்பட்டதை, நமது குறிக்கணக்கியலின் இலக்கக் குறிப்படி 'வி' (P) என்றும் முன்னால் சொல்லப்பட்டதை 'மொ' (T) என்று மழைப்போம். தற்போது நமது குறிக்கணக்கு பவே (MV) = விமொ (PT) எனவாகும். 'பர்வர்த்தனைக் குறிப்புக் கணக்கியல்' என்றழைக்கப்படுகிற இதுவே உலகத்தில் பணத்தைப்பற்றி மிகுதியும் அறியப்பட்ட பொது விதியாகும்.

இது எதையெல்லாம் கூறுகிறது எதைக் கூறவில்லை என் பதையறிந்து கொள்வதும் சாலப் பொருத்தமுடையதாகும்.

பணம் எந்தப் பொருளுக்காவது பரிவர்த்தனை செய்யப்படும் (அதன்படியே ஒவ்வொரு பொருளுக்கும்) தெளிவானதொரு கருத்தையே இது வேறு விதமாக உணர்த்துகிறது. இந்தக் குறிக் கணக்கு பணத்தைப் பற்றியோ அல்லது விலையைப் பற்றியோ புதிதாக ஒன்றும் கூறிவிடவில்லை. எது உண்மையோ அதையே இது தெளிவாகவும் எளிதாகவும் திரும்ப எடுத்துச் சொல்லுகிறது. குறிப்பாக, இந்தக் குறிக்கணக்கு, காரண காரியத்தை விளக்குவதில்லை; நடந்தவற்றை மட்டுமே இது சுட்டுகிறது.

எனினும் இதனுல் சில உண்மைகளைப் பெற இயலுகின்றது. உதாரணமாக, ஓர் ஆண்டின் விலைகள் அதற்கு முந்தைய ஆண்டின் விலைகளைப்போல் இருமடங்காக இருக்கிறதென வைத்துக் கொள்வோம். குறிக்கணக்கு, கீழ்க்கண்ட மூன்றனுள் ஒன்று நிச்சயமாக நடந்திருக்க வேண்டுமென்று (அல்லது மூன்றும் சேர்ந்த ஒன்று நிச்சயமாக நடந்திருக்க வேண்டுமென்று) கூறுகிறது. அவையாவன: 1. பணத்தின் கணியம் இரட்டிப்பாக இருந்திருக்கவேண்டும். அல்லது 2. புழக்கவேகம் (Velocity of circulation) இரட்டிப்பாக இருந்திருக்கவேண்டும். அல்லது 3. பேரங்களின் (Transactions) அளவு அரை மடங்காக இருந்திருக்க வேண்டும். வாணிபச் சகடத்தின் மீட்சிப் பகுதியில், பேரங்களின் அளவில் சற்றும் குறையாமலிருக்கும்போது விலைகள் அதிகரிக்கும். எனவே வாணிபச் சகடத்தின் விலைகளின் அதிகரிப்புப் பணத்தின் கணியத்தில் (Quantity) ஏற்படும் அதிகரிப்பாலும் அல்லது புழக்க வேகத்தில் ஏற்படும் அதிகரிப்பாலும் அல்லது இவ்விரண்டினுலும் தொடரப்படுகின்றது. இக் குறிக் கணக்கு எது எதற்குக் காரணமாக இருக்கிறதென்று நாம் கூறும்படி இல்லை. இது போன்றே, விலைகள் குறைவது வழக்கமாக வாணிப அளவில் அதிகரிப்பினுல் ஏற்படுவதில்லை. இதற்கு எதிரிடையாகப் பெருவாரியான விலைகள் இறங்கும் காலங்கள் வாணிபத்தின் மந்தக் காலங்களாகவே உள்ளன. எனவே, விலைகளின் இறக்கம் பணக்கணியக் குறைதலோடும் அல்லது புழக்க வேகக் குறைதலோடும் அல்லது இவ்விரண்டினேடும் தொடர்பு கொண்டுமுள்ளது—அதாவது குறிக்கணக்கின் பணப்பகுதியில் சற்று மாற்றத்துடன் தொடர்பு கொண்டுள்ளது.

இருபது ஆண்டுகள் அல்லது இன்னும் அதற்கு மேற்பட்ட நீண்டகால, விலைகளின் இறக்கங்களைப் பொறுத்த வரையில் இதன் காரணத்தையும் விளைவையும் சற்று ஆழ்ந்தே நாம் ஆராயக்கூடும். வாணிபச் சகடத்தின்போது வாணிபத்தின் அளவில் கணிசமான அளவிற்கு ஏற்ற இறக்கங்களிருப்பினும்,

சராசரியில் பார்க்கப் போனாலும் ஒவ்வொரு பத்தாண்டுகட்கும் நிதானமான வளர்ச்சியையே பெற்று வந்திருக்கிறது. இதைப் போன்றே புழக்க வேகம், மக்களின் பணப் புழக்கத்தைப் (Monetary habits) பொறுத்திருப்பதால், ஒரு வாணிபச் சகடத்திற்குள்ளேயே அதிகமான மாற்றங்கள் இருக்கிறதே தவிர ஒரு வாணிபச் சகடத்திற்கும் மற்றொரு வாணிபச் சகடத்திற்குமிடையே அதிகமான மாற்றம் இருப்பதில்லை. வே (V) அல்லது 'மொ' (T) நீண்ட காலங்களிலும் கொடூரமான மாறுதல்களை அடையவில்லையெனினும் விலைகள் ஒரு காலத்திற்கும் இன்னொரு காலத்திற்கும் மாற்றமடைந்தேயுள்ளன. இதனால் 'வி'யின் (P) போக்கு 'ப' (M)வுடன் சேர்ந்தே இருக்கவேண்டுமென்று தெரிகிறது. வேறு விதமாகச் சொல்லப்போனால், நீண்டகாலச் சராசரியில் 'ப' (M) வும் 'வி' (P) யும் இக் குறிக்கணக்கில் முக்கியமான இரு அம்சங்கள்.

மேலும், எதற்கு எது காரணமாக இருக்கிறதென்பதை நாம் ஊகித்துணர முடியும். 1820ஆம் ஆண்டிலிருந்து 1914 முடிய உள்ள 95 ஆண்டுகளில் விலைகளின் நான்கு முக்கியப் போக்குகளைப் பற்றி 121ஆம்பக்கத்திலுள்ள படத்தில் அறியலாம். இந்தக் காலம் முழுவதிலும் பணம் பொன்னை அடிப்படையாகக் கொண்டேயிருந்தது. தற்போதுள்ள 10 ஷில்லிங் £ 1 நோட்டுக்கள் ஆகியவற்றின் இடங்களில் அப்போது பொன் நாணயங்களே அமலிலிருந்தன. எனவே பாங்கு நோட்டுக்கள் பணத்தின் மொத்த அளிப்பில் தற்போதுள்ள முக்கியத்துவத்தைவிடக் குறைவாகவே அப்போது பெற்றிருந்தன. அவ்வாறிருந்த பாங்கு நோட்டுகளும் இங்கிலாந்து பாங்கின் பொன்காப்புநிதியோடு கண்டிப்புடன் பிணைக்கப்பட்டிருந்தது. பாங்கு வைப்புகளும், இரண்டாவது அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ள சாதனத்தால் பொற்காப்பு நிதியுடன் பிணைக்கப்பட்டிருந்தன. உண்மையில், பணத்தின் மொத்தக் கணியம் (Total quantity of money) நாட்டிலுள்ள பொன்னின் அளவினால்தான் நிர்ணயிக்கப்படுகிறது.

விலைப் போக்குகளின் நான்கு வெவ்வேறு விதமான போக்குகள் பொன் அளிப்பில் ஏற்படும் மாற்றங்களால் ஏற்படுகின்றன வென்பதைத் தெளிவாகக் கூறலாம். 1820ஆம் ஆண்டிலிருந்து 1849ஆம் ஆண்டு வரையிலுள்ள ஆண்டுகளில் கிரேட் பிரிட்டனில் வாணிபத்தின் அளவு வேகமாகப் பெருகியது. ஆனால் பொன்னைப் பெறுவதற்குப் புதிய சாதனங்கள் ஏதும் கண்டுபிடிக்கப்படவில்லை. பணக் கணியத்தை ஒழுங்குபடுத்திய பொன்னின் கணியம் (Quantity of Gold) வாணிப பேரங்களின் அளவைவிடக் குறை

வாகவே அதிகரித்துக்கொண்டு வந்தது. நிச்சயமாக, விலைகளின் இறக்கத்தால் பொன்னின் அளவில் குறைபாடு ஏற்படுவதில்லை; பொன்னின் அளவில் ஏற்படும் குறைபாட்டினுல்தான் விலைகள் குறைகின்றன.

இவ்விதமான ஓர் ஆராய்ச்சி 1849ஆம் ஆண்டில் ஏற்பட்ட ஒரு திருப்பத்தால் உறுதி செய்யப்படுகிறது. இந்த ஆண்டில் காலிஃபோர்னியாவிலும் (California) ஆஸ்டிரேலியாவிலும் (Australia) ஏராளமாக பொன் வெட்டி எடுக்கப்பட்டது. இதற் கடுத்த 25 ஆண்டுகளில் பொன்னின் அளிப்பு வெகுவாக அதி கரித்து, அதன் காரணமாக விலைகளும் அதிகரித்தன. ஆயினும் 1873ஆம் ஆண்டிற்குப் பிறகு பொன்னின், ஆண்டு உற்பத்தி சுருங்க ஆரம்பித்தது. மேலும் பல நாடுகள், குறிப்பாக ஜெர்மனி யும், ஐக்கிய அமெரிக்காவும் தங்களது பணத்தை பொன் திட்டத் தில்[1] நிறுவியும் அல்லது மறுமுறையாக நிறுவியும் வந்தமையால் இதற்காக நிறையப் பொன்னைச் சேகரித்தன. இது பொன்னைச் சேகரிப்பதில் ஒரு போட்டி மனப்பான்மையை உண்டு பண்ணி யது. இதனுடன் குறைவான ஆண்டு உற்பத்தியும் (Annual Production) சேர்ந்தமையால் இங்கிலாந்து குறைவான அளவே பொன்னைப் பெறமுடிந்தது. வாணிப நடவடிக்கைகள்[2] அதி கரித்ததைப் போல கிரேட் பிரிட்டனின் மொத்தப் பொன் கணியம் (Total quantity of Gold) அதிகரிக்கவில்லையாதலின் விலைகள் இறங்கின. 1896ஆம் ஆண்டில் ஏற்பட்ட திருப்பம் பொன் தாதுவிலிருந்து (gold ore) பொன்னைப் பிரித்தெடுக்கும் தொழில் சாதன வளர்ச்சியுடனும், தென் ஆப்பிரிக்கப் பள்ளத்தாக்குகளில் ஏராளமான பொன் வயல்களின் தோற்றத்துடனும் ஒருங்கியைந் தது. இதன் பயனுய், 1800லிருந்து 1850 வரையுள்ள ஐம்பது ஆண்டுகளிலிருந்ததைப்போல் 1896ஆம் ஆண்டிலிருந்து 1914 வரையிலிருந்த ஆண்டுகளில் நான்கு மடங்கு பொன் உற்பத்தி யாகியது. உலகத்தின் மற்றப் பாகங்களினின்றும் பொன்னுக்கு அதிக தேவையிருந்த போதிலும், கிரேட் பிரிட்டனில் பொன்னின் அளிப்பு (Supply of gold) வெகுவாக அதிகரித்தது. விலைகளும் இதனுல் உயர்ந்தன.

பத்தொன்பதாம் நூற்ருண்டில், பொன் வெட்டி எடுத்தலில் ஏற்படுகின்ற மாறுதல்களுக்கும் விலைகளின் நீண்டகால மாறுதல்

1 பொன் திட்டத்தின் தன்மையைப்பற்றி 9 ஆம் அத்தியாயத்தில் விளக்கப் பட்டிருக்கிறது.

2 பொன் ஏறக்குறைய அழியாத ஒரு பொருளாகும். எந்த ஓர் ஆண்டிலும் உள்ள பொன்னின் கணியம் அந்த ஆண்டுப் பொன் உற்பத்தியை ஒரு சிறிதளவே எதிர்நோக்கியிருக்கிறது. ஆனுல் இருக்கின்ற பொன்னில் ஏற்படும் அதிகரிப்பு முற்றிலும் அந்த ஆண்டின் பொன்னுற்பத்தியைப் பொறுத்தேயிருக்கும்.

களுக்கும் மிக நெருங்கிய தொடர்பு இருந்தமையால் இதனை ஓர் ஒத்தியங்கும் நிகழ்ச்சி (Coincidence) என்று புறக்கணித்துவிட முடியாது. எனவே பணக் கணியத்தில் ஏற்படும் மாறுதல்களே (இன்னும் தெளிவாகக் கூறவேண்டுமானுல் வாணிபத்தின் அள வில் ஏற்படுகின்ற மாறுதலின் வீதத்திற்கொப்ப ஏற்படும், இருக் கின்ற பணக் கணியத்தில் ஏற்படும், மாறுதல்கள் எனக் கூறலாம்) பணமதிப்பில் மாறுதல்களை உண்டுபண்ணுவதற்குக் காரணமாக இருக்கின்றன. இப்படி, காரணமாயிருப்பதெது என்பதைப் பார்ப்பதோடு கூட அது எப்படி மேற்சொன்ன விளைவை உண்டுபண்ணுகிறதென்பதையும் ஆராய முடியும். நாம் ஏற்கெனவே பார்த்ததுபோல, ஒரு நெடுங்கால விலைகளின் போக்குப் பல குறுங்காலப் போக்குகளால் அமைக்கப்படுகிறது. நெடுங்கால விலைகளின் போக்கு மேல் நோக்கியிருக்கும்போது வாணிபச் சகடத்தின் மீட்சிப்பகுதி நீண்ட காலத்திற்கு மேற் சென்று கொண்டேயிருக்கிறது. இதனுல்தான் விலைகளின் உச்ச மான புள்ளிகள் ஒவ்வொன்றும் அதற்கு முந்தின புள்ளியைவிட உயரமாக இருக்கின்றன. விலைகளின் ஏற்றம், குறிப்பாக சுறு சுறுப்பாக அதிகரித்துவரும் வாணிபத்தால், அதிகமான பணம்[1] தேவைப்படுகிறது. வாணிபச் சகடத்தின் உயர்ந்து செல்லும் பகுதியில், பாங்குகளிடமிருந்து அவைகளின் வாடிக்கைக்காரர் கள் அதிகரித்துள்ள கூலிகளைக் கொடுப்பதற்கு அதிக அளவு நோட்டுகளையும் நாணயங்களையும் பெறுவர். பாங்குகளிடம் இது சமயத்தில் நிறையக் கடன்கள் கோரப்படும். இந்தக் கடன்கள் இரு வகையான விளைவுகளை உண்டுபண்ணும். அவை வாணிபத் திற்குப் பணவசதி செய்வதன்மூலம் வாணிபத்தைப் பெருக்கு வதுடன் புதியதாக வைப்புகளையும் (Deposits) தோற்றுவிக் கின்றன. நெகிழ்வற்ற பொன்னளிப்பை எதிர்பார்த்திருத்தல் போன்ற வேறு எந்தக் காரணத்தாலோ பணக் கணியம் ஒரு குறிப் பிட்ட புள்ளிக்குமேல் அதிகரிக்க முடியவில்லையென்ருல், மீட்சி அதிக தூரம் செல்வதற்கு முன்பே அந்தப் புள்ளியை அடைந்து விடக்கூடும். பணக் கணியத்தில் இன்னும் அதிகரிப்பு ஏற்படாத வண்ணம் தடுப்பதற்காக, மைய பாங்கு தனது இரண்டு ஆயுதங் களான பாங்கு வீதத்தையும் (Bank Rate) வெளி அங்காடி நடவடிக்கைகளையும் (Open market operations) பயன்படுத்தக் கட்டாயப் படுத்தப்படும். பணம் கடன் பெறுவதைக் கடினமான தாகவும் பணச் செலவு உள்ளதாகவும் செய்வதின்மூலம், கடன்கள் கட்டுப்படுத்தப்படுவதால் இது மேலும் விரிவடைதல் நிலையைய் நிறுத்தி விலைகளின் போக்கையும் மாற்றியமைக்கின்றது. எனவே

1 புழக்க வேகத்தால் இது தவிர்க்கப்பட்டாலொழிய மற்றப்படி அதிகமான பணமே தேவைப்படுகிறது.

வாணிபச் சகடத்தின் மேலெழும்பும் போக்கைத் தடைசெய்வதன் மூலம் நெகிழ்வற்ற பண அளிப்பு (Inelastic supply of money) தனது நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்கிறது. இதன் காரணமாகத் தான், விலைகள் குறையும்போது வாணிபச் சகடத்தின் மேற் செல்லும் கால்கள், விலைகள் உயருங் காலத்தைவிட, குட்டை யானவைகளாகவும் அதிக விளைவுகளைத் தருவது குறைவாகவு மிருக்கும். எனவே, நெடுங்காலத்தில், அமலிலுள்ள பண அளவானது, விலையைக் கட்டுப்படுத்துவதன்மூலம் விலை மட்டத் திற்கு அவ்வளவாகக் காரணமாக இருப்பதில்லை. அது, விலைகளை இன்னும் அதிகமாக உயருவதைத் தடுப்பதைப்போன்று, விலைகள் இப்படி இருக்க வேண்டுமென்று நிர்ணயிப்பதில்லை. இதை கிராம் போன் இயக்கியின் (Motor) மீதுள்ள வேக ஒழுங்குபடுத்தும் கருவி (Governor) க்கு ஒப்பிடலாம். வேக ஒழுங்குபடுத்தியை ஒரு மணித் துளிக்கு (Minute) 78 சுற்றுகள் சுற்றும்படி சரிசெய்து வைத்தால், மேல்தட்டு (Turn table) அதற்குமேல் வேகமாகச் சுற்றமுடியாது. ஆனாலும், இந்தச் சுழற்சியைச் செய்வது சுருள் வில்லே (Spring) தவிர வேக ஒழுங்குபடுத்தியல்ல. சுருள் வில் அதனுடன் இணைக்கப்படவில்லையென்றால், வேக ஒழுங்கு படுத்தியை 80-ல் வைத்தாலும் சுழற்சி ஏற்படாது.

இதே நிலையைத்தான் பரிவர்த்தனைக் குறிக்கணக்கும் அடைந் துள்ளது. நெடுங்கால விலைகளின் போக்கை இது திருப்திகரமாக விளக்கிய போதிலும், வாணிபச் சகடத்தை விளக்குவதற்கு இது எவ்வகையிலும் துணை செய்யாது. பணத் தட்டுப்பாடே (Shortage of money) பூரிப்பிற்கு (Boons) முற்றுப்புள்ளி வைத்து, வாணிபச் சகடத்தின் உச்ச நிலையில் ஒரு எதிரிடையான நிலையை உண்டாக்குகின்றது. சில சமயங்களில் பண அளிப்பில் எவ்விதத் தடங்கலுமில்லையெனினும் பூரிப்பு நிலை அழிகின்றது. எவ்வாறு மந்த நிலையின் அடிப்பகுதியில் இந்த எதிரிடையான நிலை தோன்றுகிறதென்பதைக் கணியக் கோட்பாட்டினுல் (அதாவது விலைகளின் ஏற்ற இறக்கங்களுக்கு முக்கியக் காரணமாகவுள்ள பணக் கணியக் கோட்பாடு) விளக்குவதென்பது கடினமான காரியம். ஏனெனில் பணக் கணியத்தில் குறைதல் ஏற்படும்போது தான் அது விலைகளின் இறக்கத்தை உண்டுபண்ணுகிறது. பணக் கணியம் அதிகரிப்பதே விலைகளின் ஏற்றத்திற்குக் காரணமாக இருக்கும். ஆனுல், மந்தத்தின் அடிப்பாகத்தின்போது நிறைய அளவு பணம் சிருட்டி செய்யப்பட்டாலும் அவை, விலைகளின் மட்டத்தை அல்லது உற்பத்தியை எவ்விதத்திலும் பாதிக்கவில்லை என்பதற்கு பண வரலாற்றின் கடந்த சில ஆண்டுகளில் பல உதாரணங்கள் உள்ளன.

ஆனல் சில குறுங்கால ஏற்ற இறக்கங்களுக்கு பணக் கணியக் கோட்பாடு திருப்திகரமான காரணங்காட்ட முடியும். உதாரணமாக, இரண்டு உலகப் போர்களின் போதும் அரசாங்கத்தால் பெருமளவு கடன் சிருட்டிக்கப்பட்டது. இதனல் பொது விலை மட்டத்தில் உடனடியான உயர்வு ஏற்பட்டது. போர்ப் பொருளாதாரம் (Economics of war) முழுவதும் ஆறும் அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளது. ஆனல், இந்தத் தடவை மட்டிலுமாவது, இப்போர்ப் பொருளாதாரத்தால் ஏற்படும் விளைவுகளை ஏற்றுக்கொள்ள வேண்டும். போர்ச் செலவிற்காக அரசாங்கம் நிதி அளிப்பதற்காக வரிகளை விதிக்கின்றது அல்லது பொதுமக்களிடமிருந்து கடன்களை வாங்குகின்றது. இதுவும் போதவில்லையெனில், பணத்தைச் 'சிருட்டி' செய்கிறது. இப்படிப் புதியதாகச் சிருட்டிக்கப்பட்ட பணம் பண அளிப்பை அதிகரித்து விலைகளை அதிகரிக்கச் செய்கிறது.

ஆனல், மேற்கண்ட விதி செயற்படாமல் போகும் சில குறுங்காலங்களும் (Short Periods) இருக்கின்றன. 1930ஆம் ஆண்டை அடுத்த பத்தாண்டுகளில் ஏற்பட்ட பெரிய மந்தத்தின்போது அமெரிக்க அரசாங்கத்திற்கு, அச்சமயத்தில் மிகப் பெரியதெனக் கருதப்பட்டதோடு பணப் பற்றுக்குறை (deficit) ஏற்பட்டது. இதனுடன் அமெரிக்க அரசாங்கம் அமெரிக்கப் பாங்குகளின் ரொக்கத்தை அதிகரிக்கவும் வழி செய்தது. ஆனல், இப்பண அதிகரிப்பு விலை மட்டத்தில் எந்தவித மாறுதலையும் உண்டுபண்ணவில்லை. 1936ஆம் ஆண்டில் அமெரிக்க அரசாங்கம் £800 மில்லியன் பற்றுக்குறையைப் பெற்றிருந்தது. இதனுடன் அங்கத்தினர் பாங்குகளின் (Member Banks) ரொக்கக் காப்புகள் 1929ஆம் ஆண்டில் (அதாவது மந்தத்திற்கு முன்பு) இருந்ததைப் போல் இருமடங்காக இருந்தன. இப்படிப் பொதுமக்களுக்கு ஏராளமான பணம் அளிக்கப்பட்ட போதிலும் அவற்றை அவர்கள் செலவு செய்யவில்லையாகையால் விலைகளும் வேலையும் (Prices and employment) 1929ஆம் ஆண்டின் நிலவரத்திற்கும் குறைவாகவே எவ்வித மாற்றமின்றியும் இருந்தன. உண்மையில், அமெரிக்க அரசாங்கத்தார் அதிக அளவுப் பணத்தைச் சிருட்டித்துக் கொண்டு செல்லச் செல்ல அதற்கீடாகப் பணப் புழக்கவேகமும் குறைந்து கொண்டே சென்றது. அவர்கள் 'ப' (M)வை அதிகரிக்க இயலும்; ஆனல் 'பவே' (MV)யை அதிகரிக்க இயலவில்லை. பொதுமக்கள் செலவு செய்வதற்கு விருப்பமில்லாத ஒரு சூழ் நிலையில் அரசாங்கம் பணத்தைச் சிருட்டி செய்தலானது, இப்புதிய சிருட்டிக்கப்பட்ட பணத்தைச் சோம்பி இருக்கவே (Standing idle) செய்யும்,

எனவே, கணியக் கோட்பாடு (Quantity Theory) வாணிபச் சகடத்தின் காரணங்களைச் சரிவர விளக்கும் வழிகாட்டியல்ல. பணக் குறைவு மீட்சியை மந்தமாக மாற்றி அமைக்கக்கூடும். மந்தத்திற்கு பணக்குறைவுமட்டுமே ஒரு காரணமல்ல. பணக் குறைவு ஏற்படாத போதும் மந்தங்கள் ஏற்படலாம். பிரம்மாண்ட மான அளவு பணச்சிருட்டிப்பும் மந்தத்தை ஏற்படுத்தக்கூடும். போர்க் காலங்களில் விலைகளை உயர்த்தி மந்த காலங்களில் மட்டும் இப் பணச் சிருட்டிப்பு ஏன் விலைகளை உயர்த்துவதில்லை என்பதற்கு மேற் சொல்லப்பட்ட வாக்கியம் விளக்கந் தருவது போன்றிருக் கிறது. போர்க்காலத்தில்தான், சிருட்டிக்கப்பட்ட புதுப் பணத்தை மக்கள் செலவு செய்ய விரும்புகின்றனர். மந்தகாலத்தில் அல்ல என்பதே இதற்குத் தகுந்த விளக்கமாக இருக்கக்கூடும். போர்க் காலமாயினும் மந்த காலமாயினும் குறைந்த அளவு பணச்சிருட் டிப்பு சக்தியற்றே இருக்கும்.

பணக்கணியக் கோட்பாட்டைப்பற்றி அதிக அளவில் கூறப் போனல் நெடுங்காலங்களின் சராசரியில் புழக்கத்திலுள்ள பணக் கணியமே (Quantity of Money) விலை மட்டத்தைப் பெரிதும் பாதிக்கின்றதென்று கூறலாம். ஆனல் வாணிபச் சகடத்தின் குறுங்காலத்தில் இது விலை மட்டத்தை பாதிக்கவும் பாதிக்காம லிருக்கவும் கூடும். அது பாதிக்கின்றதா இல்லையா என்பது பணக் கணியத்தில் ஏற்படும் மாறுதல்கள் புழக்க வேகத்தில் ஏற்படும் மாறுதல்களால் சரிக்கட்டப்படுகிறதா இல்லையா என்பதைப் பொறுத்தது.

## புழக்கவேகம் (The velocity of circulation)

பணத்தின் தேவையைப்பற்றிச் சற்று நெருங்கி ஆராய்வதன் மூலம் பணப்புழக்கமென்னும் இந்தப் புதிரான நிகழ்சிக்கு மற் ருெரு வழியில் விளக்கங் காணலாம். பவே (MV) = வி மொ (PT) என்னும் இக்குறிக் கணக்கில் உண்மையில் பண அளிப்பை ஒரு கருத்துப்படியும் அதனுடைய தேவையை ஒரு கருத்திலுமாகக் கூறியிருக்கிருேம். இதற்கு முன்னருள்ள ஒரு பக்கத்தில், பணத் தின் அடிப்படையான பணிகளைப் பொறுத்து—தட்டையானது, வட்டமானது என்று—இரண்டு பண்புகளைச் சிறப்பாகக் கூறி ேனும். இந்த இரண்டு அடிப்படையான பணிகளாவன: 1. மதிப் பின் நிலைக்களனுக இருத்தல் 2. மற்ருென்று மாற்று மத்தியமாக இருத்தலாம் (Medium of exchange). ஒன்று சேகரிப்பதற்கும் மற்ருென்று வட்டமாகச் சுற்றி வருவதற்கும் பயன்படுகிறது. பரிவர்த்தனைக் குறியீட்டுக் கணக்கில் சம்பந்தப்பட்டுள்ளது வட்டப்

பணமேயாகும். ஓர் ஆண்டில் பணத்தின் புழக்கம் அது நிகழ்த்தும் பேரங்கள் (transaction) இவற்றையே வட்டப் பணம் நடத்துகிறது.

ஆனல் மதிப்பின் நிலைக்களனுக உள்ள (store of value) பணமாகிய தட்டைப் பணம் என்ன செய்கிறது? அது எவ்வாறு மதிப்பைப் பெறுகிறது? அதனுடைய தேவையை எவ்வாறு அளப்பது?

இக் கேள்விகளுக்கு விடையளிப்பதற்கு நாம் பல பக்கங்களில் சொல்லிவந்த ஒரு கருத்திற்கே மீண்டும் செல்லவேண்டும். அதாவது பணமானது, அது பணமாக இருக்கிறதென்பதற்காக விரும்பப் படுவதில்லை. ஏனெனில் அதற்கே எந்த விதமான பயனுமில்லை; ஆனல் அது விரும்பப்படுவதற்குக் காரணம் அது மற்ற எந்த வகையான பொருட் செல்வத்திற்கும் மாற்று மத்தியமாக இருக்கிறதென்பதற்காகவே விரும்பப்படுகிறது. இதனல், பணத்திற்கு உரிமையாக இருப்பது (எடுத்த எடுப்பில் இது ஒரு முரண்பாடான கூற்ருகத் தோன்றினும்) அதன் சொந்தக்காரரின் தியாகத்தால் (sacrifice) தான் வருகிறதென்பது தோன்றுகிறது. £ 100 வைத்திருக்கும் ஒருவர் பயனற்றதான ஒரு பொருளையே வைத்துள்ளார் என்று சொல்லவேண்டும். ஏனெனில் அந்த £100ஐ வைத்திருப்பதற்குப் பதிலாக அவர், பயனுள்ள ரம்மியமான பொருள்களை வைத்துக் கொள்ளலாமல்லவா? முதலில் சேர்க்கப்பட்ட ஒருவரின் பண இருப்பு, குறைத்துச் செலவு செய்தமையால் பணம் சேர்க்கப் பட்டதாகையால், நேர் நிலையான (positive) தியாகத்தையுடையதெனக் கூறலாம்.

தொடர்ந்து பணத்தை இருப்பாக வைத்துக் கொள்ளுதல், அப்பணம் வாங்கக்கூடிய பொருள்களை வாங்காதிருக்கின்ற காரணத்தால், ஓர் எதிர் நிலையான (negative) தியாகத்தைச் கொண்டுள்ளது. ஒவ்வொருவரும், பணத்தைக் கையிருப்பாக வைத்துக் கொள்ளுவதால் ஒருபுறம் ஏற்படும் வசதியையும் பாதுகாப்பையும் மற்ருெருபுறம் அவ்வாறு கையிருப்பு வைத்துக்கொள்ளுவதால் உண்மையான நுகர்ச்சியைத் தியாகம் செய்வதையும் வைத்துச் சீர்தூக்கிப் பார்க்கவேண்டும். மிகக் குறைவான அளவிற்குப் பணத்தை இருப்பு வைத்துக்கொள்ளுதலும் இடர்ப்பாடானதாகவும் பாதுகாப்பின்றியும் (insecurity) இருக்கும்; அதிக அளவு பணம் வைத்துக் கொள்ளுதலும் அவசியமில்லாத ஒரு செலவொடுக்கத்தை (stinting) மேற்கொள்ள வேண்டிவரும். ஒவ்வொரு மனிதனும், ஒவ்வொரு குடும்பமும், ஒவ்வொரு நாடும்

இந்த இரு முனைகளுக்கிடையே (extremes) ஏதாவது ஓர் இடத்தில் தான் தன்னுடைய பண இருப்பை அறுதியிட்டுக் கொள்வது வழக்கம். இந்த இருப்பை ஒரு மனிதன், ஒரு குடும்பம், ஒரு நாடு இவற்றின் ஆண்டு வருமானம் என்று கொள்ளுவது நலமாயிருக்கும். வாரம் £5 வருமானமுள்ள ஒரு குடும்பத்தின் ஆண்டு வருமானம் £260. இவ்வாறுன வருமானமுள்ள இக்குடும்பம் சம்பள நாள் வருவதற்குள் அவ்வாரத்தின் வருமானம் முழுவதையும் செலவழிக்கிறதென்று வைத்துக்கொண்டால் அதனுடைய சராசரி பண இருப்பு £ $2\frac{1}{2}$ அல்லது ஆண்டு வருமானத்தில் $\frac{1}{104}$ பங்காக இருக்கும். ஆனுல் பெருவாரியான குடும்பங்கள் சிறிதளவு பணத்தைச் சேமிப்புப் பாங்கியில் போட்டு வைத்திருக்கும் அல்லது இருப்பாக வைத்துக்கொண்டிருக்கும். நமது உதாரணமாக வார மொரு முறை £5 வருமானம் பெறும் குடும்பத்தை ஆராய்வோம். வார வருமானத்தில் ஒவ்வொரு பென்னியையும் செலவு செய்தால்கூட £20 காப்பு நிதியாகச் சேர்த்து வைத்துள்ளதெனக் கொள்வோம். இதன்படி அதன் சராசரி பண இருப்பு £22, 10 ஷில்லிங்காக அல்லது அதன் ஆண்டு வருமானத்தில் ஏறக்குறைய $\frac{2}{23}$ பங்காக இருக்கும். பணக்காரர்கள் இதைவிட அதிகமான அளவிற்கு இருப்புவைத்துக் கொள்வர். எனவே, £1000 ஆண்டு வருமானமுடைய ஒருவர் £200ஐ, பாங்கியில் இருப்பு வைத்திருக்கலாம்—அதாவது பணம் எவ்வித இலாபத்தையும் தராவிட்டாலும் தனது ஓராண்டு வருமானத்தில் $\frac{1}{5}$ பங்கைப் பணமாக வைத்துக் கொள்வதைப் பயனுள்ளதாகக் கருதுகிருர். இன்னும் மற்ற பணக்காரர்கள், எளிதில் பணமாக மாற்றிக் கொள்ளக்கூடிய சிறப்பீட்டுப் பத்திரங்கள் (Gilt-edged securities) போன்ற பலவகைச் சொத்துக்களை வைத்திருப்பதால், தங்கள் கையிருப்பில் மிகக் குறைவாகவே பண இருப்பு வைத்துக்கொள்வர். ஓர் இலட்சாதிபதி, தன்னுடைய பாங்குக் கணக்கில் அதிகப் பற்றுகப் பணம் பெறுத நேரம் ஒன்றுகூட தனக்கு ஞாபகத்திற்கு வரவில்லை என்று வழக்கமாகக் கூறிக் கொள்வார். பண இருப்பில் ஒவ்வொரு மனிதருக்கும் எந்த விதமான விகிதாசார மிருப்பினும், அது அவரவருடைய உள்ளுணர்வுடன் அல்லது உள்ளுணர்வற்ற (unconscious) முடிவினல் ஏற்பட்ட விளைவாகும்; பண இருப்பு வைத்துள்ள எவரும் தற்செயலாக அதனை வைத்திருக்கவில்லை. மிகவும் பொருத்தமான கருத்தில், இந்த முடிவே பணத்தின் தேவை (demand for money) யாகும்.

இலட்சக்கணக்கான தனிப்பட்டவர்களின் முடிவுகளே நாட்டின் முடிவை உண்டுபண்ணுகின்றன. அதன் ஆண்டு வருமானத்தில் ஒரு விகிதத்தை எப்போதும் பண இருப்பாக வைத்துக்

கொள்வதை, நாடு விரும்புகிறது. இது எந்த விகித மென்பதைத் தோராயமாகக் கூறவேண்டுமானால் புள்ளி விவரங்களால் கூற லாம். 1938ஆம் ஆண்டில், அதாவது இரண்டாவது ஜெர்மானியப் போர் (Second German War) நாட்டின் பொருளாதார நிலையைச் சீர்குலையச் செய்ததற்குச் சற்று முன்பாக, ஐக்கிய அரசாங்கத் (United Kingdom) தின் நிகர நாட்டு வருமானம் (Net National Income) £5,200 மில்லியனாக (அங்காடி விலைகளின்படி) இருந்தது. மற்றவகைப் பணத்திற்காக (பாங்குகளின் பேழை ரொக்கம் போன்ற பணவகைகள்) காப்பாக வைக்கப்படும் இருப்புக்களைத் தவிர்த்து, மற்ற நாணயங்கள், நோட்டுகள், பாங்கு வைப்புகள்[1] இவைகளைக் கூட்டினால் அந்த ஆண்டின் மொத்தப் பணம் £3000 மில்லியனுக்கும் குறைவாகவே யிருக்கும். எனவே நாடு தனது ஆண்டு வருமானத்தில் பணமாக இருப்பு வைத்துக் கொள்வது—மேற்கண்ட விளக்கங்கள் சரியாக இருக்குமானால்—ஐந்தில் மூன்று பங்குக்கும் சற்றுக் குறைவாகவே யிருக்கும். (ஆனால் இது, ஒவ்வோர் ஆண்டிலும் நாடானது தனது வருமானத்தில் $\frac{3}{5}$ பங்கை, பணமாக இருப்பு வைத்துக்கொள்வதற்கென, செலவழிக்காமல் வைத்துக்கொண்டதெனப் பொருளாகாது. அதற்கு முந்தின ஆண்டுகளில் சேர்த்து வைக்கப்பட்ட பணத்தின் இருப்புடன் 1938ஆம் ஆண்டிலுள்ள பண இருப்பு ஓர் ஆண்டின் வருமானத்தில் ஐந்தில் மூன்று பங்குள்ளது என்று பொருள்).

நாடு, தனது ஆண்டு வருமானத்தில் பாதியை, பண இருப்பாக வைத்துக் கொள்ளத் தீர்மானிக்கிறதென்று வைத்துக் கொள்வோம். அப்போது இருப்பாக உள்ள பணத்தின் மதிப்பும் ஆண்டு வருமானத்தில் பாதியாக இருக்கும். அதுபோலவே பணத்தின் ஒவ்வோர் அலகினுடைய (Unit) மதிப்பும் இந்த விகிதாசாரத்திலேயே இருக்கும். இதற்குப் பழைமையான ஓர் உதாரணத்தை எடுத்தாராய்வோம். நாட்டின் உண்மையான ஆண்டு வருமானம் (Annual real Income) 1000 டன்கள் நிலக்கரி என வைத்துக்கொள்வோம். அது இந்த உண்மையான ஆண்டு வருமானத்தில் பாதியைப் பண இருப்பாக வைத்துக்கொள்ளத் தீர்மானிக்கிற தென்று வைத்துக்கொள்வோம். அப்போது அதன் பணக்கணியம் (Quantity of Money) 500 டன்கள் நிலக்கரிக்குச்

1 நடப்புக் கணக்கோடு (Current accounts) செக்குகள் செலுத்திப் பணம் பெறஇயலாத வைப்புகளின் கணக்கைச் (deposit accounts) சேர்க்கலாமா கூடாதா என்பது ஒரு சிக்கலான பிரச்சினையாகும். இங்குப் பணம், மதிப்பின் நிலைக்களன் என்ற வகையில் ஆராயப்படுவதால், 107–10ம் பக்கத்தில் புழங்கும் பணத்தை ஆராயும்போது நாம் விட்டுவிட்டபோதிலும், சேர்த்துக் கூறுவதே நியாயமான தென்று தோன்றுகிறது. அவைகளை மொத்தப் பணத்தினின்று விலக்கிக் கணக்கிட்டால் விகித அளவு சரிபாதி என்பதற்குப் பதிலாக மூன்றில் ஒரு பங்கென்றுதான் வரும்.

சமமானதாக இருக்கும். மேலும் பணக்கணியம் ஆயிரம் £1 நோட்டுகளை உடையதாக இருக்கிறதென வைத்துக்கொள்வோம். இப்போது £1 அரை டன் நிலக்கரிக்குச் சமமாக இருக்கும். நிலக்கரியின் விலை 1 டன் £2 ஆக இருக்கும். குறிக்கணக்கியலை (algebra) விரும்புவோர்க்குக் கீழ்கண்ட எளிய குறிக்கணக்கின் மூலம் பணமதிப்பை விளக்கலாம். நாட்டின் ஓராண்டு வருமானத்தை R எனக் கொள்வோம். (இதனை I என்ற எழுத்தால் குறிப்பிடாது R என்று எழுதுகிறோம். உண்மை வருமானமே ஈண்டு கொள்ளத்தக்க தென்பதை வலியுறுத்துவதற்காகவே—அதாவது இத்தனை டன்கள், இத்தனை காலன்கள் இத்தனை மரக்கால்கள் என்று விளக்கும் உண்மை வருமானம் பண வடிவில் கூறும் வருமானமல்ல—'R' என்னும் எழுத்து கையாளப்படுகிறது). நாடு பண இருப்பாக வைத்துக்கொள்ள விழையும், வருமானத்தின் விகித அளவை $K$ என்று குறிப்பிடுவோம். $K$R என்பது மொத்தப் பணக் கணியத்தின் மதிப்பாகும். ஏற்கனவே இருந்ததுபோல் M என்பது இருக்கின்ற பண அலகுகளின் எண்ணிக்கையை (the number of units of Money) உணர்த்துகிறது (அதாவது இத்தனை பவுன்கள் என்ற எண்ணிக்கையை உணர்த்துகிறது) எனவே $\frac{K\mathrm{R}}{\mathrm{M}}$ என்பது £1ன் மதிப்பாக இருக்கிறது. பண அலகின் மதிப்பு விலைமட்டமும் நேர் எதிரிடையானவை. விலைகள் ஏறும் போது பணத்தின் மதிப்பு இறங்கும். அதுபோல பணத்தின் மதிப்பு உயரும்போது விலைகள் இறங்கும். இந்த இடத்தில் விலை மட்டத்தைக்[1] ($P$ஐ) கொண்டுவருவதற்கு £1ன் மதிப்பை உணர்த்துவதற்கான குறியீட்டைத் தலைகீழாக அமைத்துக் கொள்ள வேண்டும். இதன்படி கீழ்க்கண்ட குறிக்கணக்கைப் பெறுகிறோம்: $P = \frac{\mathrm{M}}{K\mathrm{R}}$. இன்னொரு வகையில் இக்குறியீட்டுக் கணக்கை மாற்றி அமைத்து அதற்குப் பக்கத்திலேயே இதற்கு முந்தின மாற்றுக் குறிக் கணக்கையும் (equation of exchange) அமைத்தால் $\mathrm{MV} = \mathrm{PT}\frac{\mathrm{M}}{K} = P\mathrm{R}$ என வரும். மேலே குறிக்கணக்கில் கண்டுள்ள சமன்பாடு ஓரளவு பொய்ம்மை யுடையதாகவே யிருக்கிறது.

[1] முன்பு குறிப்பிட்ட விலைமட்டத்தைக் காட்டிலும் இது வேறுபட்ட தென்பதைக் காட்டுவதற்காக $p$ என்ற சிறிய எழுத்தை நாம் பயன்படுத்துகிறோம். முன்பு சொல்லிய விலைமட்டம் பணத்தால் நிகழ்த்தப்படுகின்ற பேரங்களில் ஈடுபாடுள்ள ஒவ்வொன்றின் விலையையும் சம்பந்தப்பட்டதாகும். ஆனால் தற்போது நாட்டின் உண்மை வருமானத்தின் ஒருபகுதியை அமைக்கும் பொருள்களின் விலையையே நாம் ஆராய்ந்துகொண்டிருக்கிறோம்—அதாவது ஆண்களும் பெண்களும் நுகருவதற்காகவும், பயன்படுத்துவதற்காகவும் மகிழ்விப்பதற்காகவும் வாங்குகின்ற பொருள்கள்; மீண்டும் விற்பனை செய்வதற்கு அல்லது பொருள்களை நுகருவதற்குத் துணை செய்யும் பொருள்கள் அல்ல.

சென்ற அடிக்குறிப்பில் (foot note) *P* என்பதும் P என்பதும் வெவ்வேறானவை என விளக்கப்பட்டது. அதுபோலவே R என்பதும் T என்பதும் ஒன்றல்ல என்பதும் விளக்கப்பட்டது. ஆனால் *P*யும் Pயும் ஒருங்கே ஏறும் இறங்கும் தன்மையன (இரண்டும் ஒரே வேகத்தில் இல்லாவிட்டாலும்); இவை போன்றனவே Rம் Tயும். இந்த இரு குறிக்கணக்குகளும் அடுத்தடுத்துள்ளமை Vயையும் *K* யையும் ஒன்றுக்கொன்று எதிரிடையானவையாகச் செய்துள்ளது. மக்கள் தங்களது உண்மை வருமானத்தில் அதிக விகிதம் பணமாக இருப்பு வைத்துக்கொள்ளத் தீர்மானித்தால், பணத்தின் புழக்கவேகம் குறையும். இதைப்போன்றே குறைவான அளவிற்குப் பணமாக இருப்பு வைத்துக்கொள்ளத் தீர்மானித்தால், பணத்தின் புழக்கவேகம் அதிகமாகும். அப்படியானால், வியப்புறுவண்ண மாகவும் அழிவைத் தரக்கூடிய தாகவுமுள்ள புழக்கவேகத்தின் ஏற்ற இறக்கங்களுக்குக்கான காரணங்களை நாம் ஆராய விரும்பினால் *K*யில் மாற்றங்களை உண்டுபண்ணும் காரணங்களைத்தான் நாம் முதலில் ஆராயவேண்டும். மக்கள் ஏன் சில சமயங்களில் மட்டும் (மற்றச் சமயங்களைவிட) அதிக அளவு பண இருப்பை வைத்துக்கொள்ள விரும்புகின்றனர் ?

இவ்வாறு போடப்பட்ட வினாவிற்கு விடையும் தானே விளங்குகின்றதாக இருக்கிறது (self-evident). ஏனைய மதிப்புகள் (values) அத்தனையும் குறைந்து செல்லும் காலங்களே மந்த காலங்களாகும் (Depression Times). கடன் பத்திரங்கள் (Securities) பங்குமாற்றச் சந்தையில் (Stock Exchange) நாளுக்குநாள் மதிப்பிழக்கும். நிலம், வீடுகள் இவைகளின் மதிப்பில் மந்தம் ஏற்படும். நகைகளும், கவின்கலை வேலைப்பாடுகளுங்கூட மதிப்பிழக்கும். மதிப்பு உயர்ந்துகொண்டு செல்லும் ஒரே பொருள் பணம் மட்டுந்தான். இப்போது கடனுடைய உண்மைச் சுமை (real burden) ஏறிக்கொண்டே செல்லும். கடன் கொடுத்தவருக்கு இது உண்மையான நலனைத் தருவதாகும். இந்த நல்ல சமயத்தில் ஒவ்வொருவரும் தங்களது கடனைத் தீர்த்துவிட்டு வரவு இருப்போடு (credit balance) இருக்க விழைவர். மேலும் மந்தகாலங்கள் பாதுகாப்பற்ற காலங்களாகையால் மக்கள் எப்படியாவது தங்களது வருமானத்தைச் சேர்த்து வைத்துத் தங்களது பண இருப்பை அதிகப்படுத்திக் கொள்வர். நிறைய நிலையான சொத்துகளை (உதாரணமாக வீடுகள், நிலங்கள், கடன் பத்திரங்கள்) உடையவர்களும் தங்களது சொத்துக்களை அதிக அளவு 'நீர்மை' (liquidity)யை அதிகமாகப் பெற்றிருக்கும் பணமாக (அதாவது பணத்தை எந்த நேரத்திலும் உடனடியாகப் பயன்படுத்திக் கொள்ளலாம்) மாற்றிக்கொள்ள முயல்வர். பணத்தைக் கையிருப்பாக வைத்துக்

கொண்டால் வட்டியோ அல்லது இலாப ஈவுத் தொகைகளோ கிடைக்கா. ஆனால் மந்த காலங்களில் மூலதனத்தைச் (Capital) சேர்த்துவைப்பதே அதிக மதிப்புவாய்ந்ததாக இருக்கும்.

ஆனால் பூரிப்புக் காலங்களில் (times of boom) பணம் இருப்பாக வைத்துக்கொள்ளத் தகுந்த தன்று. ஏனெனில் அப்போது பலவகைப்பட்ட செல்வங்களும் மதிப்புயர்ந்து செல்லும்போது, பணம் மட்டும் மதிப்பில் குறைந்துகொண்டே செல்லும். கடன் பத்திரங்கள் அல்லது நிலம் அல்லது ஒரு வாணிபத்தில் பங்கு (share) இவைகளை வாங்குவதற்குப் பணத்தைப் பயன்படுத்துதலானது, இலாபத்தை அடையும் வழிமட்டுமல்ல, முதலின் மதிப்பை உயர்த்தும் வழியாகவுமுள்ளது. வருகின்ற இலாபம் கடன் தொகைக்குச் செலுத்த வேண்டிய வட்டியைவிட அதிகமாக இருந்தால் கடன் வாங்கியும் முதலீடு செய்யப்படும். விலைகள் ஏறும் போது பண இருப்பு வைத்துக் கொள்ளுவதில் நாட்டம் இருக்காது. அப்போது நாடு பண இருப்பாக வைத்துக்கொள்ளும் விகித அளவு குறையும். பண வீக்கம் அதி தீவிரமாக இருக்கும்போது, £ மிகச் சிறிய எண்ணாகக் குறையும். எனவே 1923-ஆம் ஆண்டு ஜெர்மனியில் ஏற்பட்ட பெரிய பண வீக்கத்தின் போது, விலைகள் ஒருநாளில் 100 மடங்கு அதிகரித்துக்கொண்டு சென்றபோது, ஒரே நாளில் இருப்பாக வைத்துக் கொள்ளப்பட்ட எந்தப் பணமும் தனது மதிப்பில் பெரும் பகுதியை இழந்துகொண்டிருந்த நேரத்தின் போதும்-சுருக்கமாகச் சொல்லின் பணம், கற்பனைக் கெட்டாத கேவலமான ஒரு மதிப்பின் நிலைக்களனாக இருந்த சமயத்திலும்—ஜெர்மனியின் மொத்தப் பண இருப்பின் உண்மையான மதிப்பு (real value) இயல்பான மட்டத்தை விட (normal level) ஏழில் ஒரு பங்கே குறைந்தது. இந்த அளவிற்குங்கீழ் குறையவில்லை யென்பது எதனை உணர்த்துகிறது? பணம் மற்றப் பணிகளான, கணக்கலகாக இருத்தல் (unit of account),மாற்று மத்தியமாக இருத்தல் போன்ற பணிகளுக்கு (தண்ணீரைச் சேகரித்து வைப்பதற்குச் சல்லடையைப் பயன்படுத்துவது எவ்வாறு பயனற்றதோ அது போல பணம் மதிப்பு நிலைக்களனாக இருந்தும் பயனற்ற போதும்) இன்றியமையாததாக இருத்தலால்தான் அதன் மதிப்பு அதிகமாகக் குறையாமலிருக்கிறது.

இப்படி மாற்று முறையில் ஆராய்வது, உண்மையான நிகழ்ச்சிக்கு ஓரிரண்டு படிகள் அருகில் நம்மை அழைத்துச் செல்லுகின்றது. இம்முறை பணத்திற்கு ஏன் மதிப்பு இருக்கிற தென்பதற்கும் காரணத்தையும் விளக்குகிறது—அதாவது பணம் மக்களுக்கு மிகவும் பயனுடையதாக இருப்பதால் தான் சிலவற்றைத்

தியாகம் செய்தும் அதனைத் தேடுகின்றனர். வாணிபச் சகடத்திற்கு விளக்கம் கூறும்போது, மக்கள் பல திறப்பட்ட பயன்களுக்குப் பணத்தைப் பயன்படுத்துவதால் பணத்தின் மதிப்பு மாறிக் கொண்டிருக்கிறது என்று கூறுவதே பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது. வாணிபச் சகடத்திற்கான காரணங்களை, புழக்க வேகத்தில் ஏற்படும் மாறுதல்களோடு சம்பந்தப்படுத்திக் கூறுவதைவிட மேற் கண்ட விளக்கமே ஒப்புக்கொள்ளக் கூடியதாக இருக்கிறது.

ஆயினும், இது வாணிபச் சகடத்தில் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளுக்கான காரணங்களைச் சரிவர விளக்குவதில்லை. பணம் ஒரு முறை மதிப்பில் உயர்ந்துவிட்டால் மக்கள் அதனை அதிகமாக விரும்புகிறார்கள் என்றும், இதனால் பணம் இன்னும் மதிப்பில் உயர்கிறதென்பதையே இது விளக்குகின்றது. ஆனால், பணத்தின் மதிப்பு எவ்வாறு உயர்கிறதென்பதை இது விளக்குவதில்லை. மந்தங்கள் பெரும்பாலும் ஆரம்பமாவது பணம் திடீரென சுருக்கமடைவதாலல்ல; பணப்புழக்க வேகம் திடீரெனக் குறைவதால்தான் ஏற்படுகிறது. (=பொது மக்கள் பணத்தை விரும்புவது அதிகரித்தல்). எதனால் இது உண்டாகிறது? நமது குறிக் கணக்குகள் இரண்டுமே இதற்கான பரிகாரத்தைக் கூறுகின்றன. V (புழக்க வேகம்) உடனடியாகக் குறையும் போது அதனை ஈடு செய்ய M (பணம்) அதிகரிக்கப்படலாம். வேறு வகையில் சொல்லப் போனால், பொது மக்கள் திடீரென்று பண இருப்பு வைத்துக்கொள்வதே அதிக மதிப்புடையதெனக் கருதிப் பண இருப்பு வைத்துக் கொள்ளும் போது, பண இருப்பு அதிகரித்து, பணத்தின் ஒவ்வோர் அலகும் ஒரே மாதிரியான மதிப்பையுடையதாக இருக்கும். ஆனால் இம் முறையில் நடத்தப்படும் சோதனைகள் (experiments) பலனளிப்பதாக இருப்பதில்லை. ஐக்கிய அமெரிக்காவிலும் ஃபிரான்சிலும் சமீபத்தில் நிறைய அளவுப் பணம் சிருட்டிக்கப்பட்டது. இந்நாடுகளில் இப்பணச்சிருட்டிப்பு அதிகமாக அதிகமாக மக்களும் அதனை (பணத்தை) அதிகமாக விரும்புவது போல் தோன்றியது. எப்படி இருப்பினும், இந்த விதமான பரிகாரம் அறிவுத் திறனற்ற ஒன்றேயெனக் கூறவேண்டும். ஒரு மனிதனுக்குத் திடீரென்று சூடு மேலிட்டுள்ளதென வைத்துக் கொள்வோம். அவனுக்கு ஒரு பனிக்கட்டி உறை போடுவதன் மூலம் அவனது சூட்டைத் தணிக்கலாம். ஆனால் அவனுக்கு ஏன் சுரம் வந்தது என்ற காரணத்தை நாடிச் சூட்டைத் தணிப்பதே சிறந்த மருத்துவமுறை. இது போலவே, ‘ப’ (M) வைத் திறமையாய்க் கையாளுவதன் மூலம் என்னதான் ‘வே’ (V) அல்லது வ’ (k) வின் இயக்கங்களை எதிர் விதமாகச் செய்ய முடிந்த போதிலும், அம்முறைகளைக் கண் மூடித்

தனமாகப் பயன்படுத்துவது பயங்கரமான பொருளாதாரப் போலி வைத்திய முறையாகும். (quakery).

## கணியக் கோட்பாட்டின் வரம்புகள்.

(Limits of the quality theory)

பணக் கணியக் கோட்பாடு எவ்வாறு பண மதிப்பிலும் தொழில் நடவடிக்கைகளிலும் ஏற்படும் ஏற்ற இறக்கங்களை (fluctuations) "எவ்வாறு அது உண்டாக்குகின்றதென்பதை" விளக்குகிறது (இப் பணக் கணியக் கோட்பாடு இரண்டு முறையாலும் வருகின்ற இருகுறிக் கணக்குகளால் விளக்கப்பட்டதாகும்.) ஆனால் இந்தக் கோட்பாடு, பெருமளவு பணச் சிருட்டிப்புகளால் அல்லது பணச் சுருக்கங்களால் ஏற்படுகின்ற நெடுங்கால ஏற்ற இறக்கங்களையும் சில குறுங்கால ஏற்ற இறக்கங்களையும் விளக்குகின்றதே தவிர, 'ஏன் அது உண்டாக்குகின்றதென்பதை' விளக்க இயலவில்லை. அதே போன்று பணச் சிருட்டித்தல் ஏன் ஏற்படுகிறதென்றும் ஏன் சில சமயங்களில் அது ஏன் விலைகளை உயரக் கிளம்புகின்றதென்றும், மற்றச் சமயங்களில் அந்த அளவு பணச் சிருட்டிப்பு ஏன் ஒரு விளைவையும் தருவதில்லை என்றும் இந்தக் கோட்பாட்டினால் விளக்க இயலுவதில்லை. மேலும், இந்த ஆய்வினால் காணப்படும் நடை முறையான முடிவானது—அதாவது நோயை நாடிக் கொடுக்கப்பட்ட மருந்தானது—நடை முறையில், சிறிதளவு மாறும் விளைவையே தருகிறதென்பதையே நாம் உணர்கிறோம். பணக் கணியக் கோட்பாட்டினைப் பயன்படுத்துவது எப்படி யெனில், பணத்தினுடைய மதிப்பை அதன் கணியத்தை (quality) மாற்றி யமைப்பதின் மூலமே. பணக் கணியத்தில் கட்டுப்பாடு செய்வதின் மூலமோ அல்லது அதனை விரிவடையச் செய்வதைத் தடுப்பதன் மூலமோ விலைகளின் இறக்கத்தை உண்டு பண்ணக் கூடுமென்பதற்குச் சான்றாக (எழுதி வைக்கப்பட்ட சான்றுகள்) பல நிகழ்ச்சிகள் உள்ளன. பணம் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் விலைகள் ஏறுவதை ஊக்குவிக்கும் பொருட்டு அதிக அளவு பண அளிப்பைத் தர முன் வந்தபோதும் அவற்றைப் பெற யாரும் முன் வரவில்லை என்பதை மெய்ப்பிக்கப் பல நிகழ்ச்சிகள் சான்றாக உள்ளன. தண்ணீரைக் குடித்துக்கொண்டிருக்கிற குதிரையை, தண்ணீரைக் குடிக்க வொட்டாமல் வேண்டுமானால் தடுத்து நிறுத்தலாம். ஆனால் அதற்குத் தாகமில்லாத போது என்னதான் அதனை வலிய நீருக்கு அழைத்துச் சென்றாலும் அதனை நீரருந்தச் செய்ய முடியாதல்லவா?

நவீன காலப் பொருளாதாரக் கொள்கையின்படி, பணக் கணியம் வாணிபத்தின் நிலையை அறுதியிடுகின்ற ஒருகாரணியாக

(Causative factor) இருக்கிற தென்றும், பணமதிப்பைத் தீர்மானிக்கும் ஒன்ருக இருக்கிறதென்றும் பழைய கோட்பாடு புறக்கணிக்கப்படுகிறது. வாணிப நிலே, பணமதிப்பு ஆகியவைகளின் விளேவாகவே பணக் கணியமுள்ள தென்பது நவீனப் பொருளாதாரக் கருத்து. நிகழ்ச்சிகளின் போக்கை ஏதோ ஒன்று அமைக்கிறது; இதற்கு பணக்கணியம் துணே செய்கின்றது. உண்மையில், கிராமபோன் இயக்கியின் (motor) மீதுள்ள வேக ஒழுங்கு படுத்தி (governor) என்னும் உவமை இதற்குப் பொருத்தமுடையதே. பணக்கணியம் விலேகளின் ஏற்றப் போக்கைக் கட்டுப்படுத்தப் பணிபுரிவதன் மூலம் பணத்தின் நெடுங்கால மதிப்பைத் (long term value) தீர்மானிப்பதாக இருக்கிறது. ஆனுல் வாணிபச் சகடத்தின் குறுங்காலத்தில் முக்கிய இடம் பெறுவது வேக ஒழுங்கு படுத்தி (governor) யல்ல; மூல வில்லாகும் (main spring).

அந்த மூலவில் எது என நாம் அவசியம் ஆராய வேண்டும். இப்படி ஆராயும்போது, மந்த காலத்தில் 'பணம் இல்லாத நிலே' இருப்பதில்லே என்பதும் 'வருமானங்கள் இல்லாத நிலே' தான் உள்ளதெனவுமான உண்மை தெரியவரும். மந்தத்தின் அடிப்பகுதி (bottom) யிலும் அதற்கு முன்னர் இருந்த பூரிப்பு நிலேயிலிருந்த (boom) அளவே பணம் இருக்கின்றது. ஆனுல், இந்த மந்த காலத்தில் பாங்கு வைப்புகள் சிறிதளவு குறைவாக இருக்கிறதென்ருல், அதற்குக் காரணம் பாங்குகள் பணம் சிருட்டிக்க விரும்பாததல்ல. இது சமயத்தில் பொதுமக்கள் பாங்குகளிடம் கடன் வாங்குவதுமில்லே; அதன் காரணமாக அவைகளேப் பணம் சிருட்டிக்கக் கோருவதுமில்லே. இதுவே பாங்கு வைப்புகளின் அளவு குறைவதற்குக் காரணமாகும். மந்த காலத்தில் திட்டவட்டமாகக் குறைந்து காணப்படுவது பணக்கணியமல்ல; தனிப்பட்டவர்களின் மொத்த வருமானமே. மக்களிடம் வருமானம் இருந்தால் அவர்களிடமுள்ள பணத்தையும், கிடைக்கப் போகும் பணத்தையும் செலவு செய்யத் தயாராக இருப்பார்கள்; இதனுல் புழக்க வேகம் அதிகரித்து விலேகளும் அதிகரிக்கும், இது எதனுல் எனின் சில வருமானங்கள் பணமாகக் கொடுக்கப்படுவதில்லே; இதனுல் பணம் ஓட்டமின்றிச் சோர்வடைகின்றது.

பணத்தின் மதிப்பு பணக்கணியத்தை விட (quantity of money) மொத்த வருமானத்தைப் (total incomes) பொறுத்தே யிருக்கும். மொத்த வருமானங்களின் ஏற்றத் தாழ்வுகளேப் பொறுத்தே பண மதிப்பும் வேறுபடுவதால் அப்பண மதிப்பினே நாம் ஆராயவே வேண்டும்.

# 5. சேமிப்பும் மூலதனமும்

## பணமும் வருமானமும்

பணக்கணியக் கோட்பாடு (quantity theory), கடந்த இரண்டு அத்தியாயங்களில் தெளிவாக விளக்கப்பட்டிருப்பினும், பண நிகழ்ச்சிகளை (monetary events) விளக்குவதில், இரு குறைபாடுகளை யுடையதாகவே யிருக்கிறது. நாம் ஏற்கெனவே பார்த்ததுபோல், பணக்கணியத்திற்கு மிக அதிகப்படியான முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது. பணக்கணியம் ஒன்றுதான் பொருளாதார மாற்றங்களுக்கு முக்கிய காரணம் என்று கூறுவது மிகத் தவருன கருத்தாகும்—குறிப்பாக மிகவும் விவாதத்திற்குரியதும் இழப்பைத் தரக்கூடியதுமான, விலைகள் உற்பத்தி ஆகிய இவைகளில் ஏற்படும் குறுங்கால ஏற்ற இறக்கங்களைப் பொறுத்தமட்டில் இக் கருத்துத் தவருனதாகும். சராசரி விலை மட்டத்தின் நீண்ட சார்பற்ற போக்குகளை விவரிப்பதற்கு வேண்டுமாஞல் பணக் கணியக் கோட்பாட்டைப் பயன்படுத்தலாம் என்பதையும், வாணிபச் சகடத்தின் குறுங்காலக் கொடூர அசைவுகளுக்கு விளக்கம் பெறுவதற்கு வேறு ஏதாவது ஒன்றைக் கொண்டே பெற வேண்டுமென்பதையும் சென்ற அத்தியாயத்தின் கடைசிப் பகுதியில் பார்த்தோம்.

பணக்கணியக் கோட்பாட்டின் இரண்டாவது குறை, விலைகளில் ஏற்படும் மாறுதல்களே பொருளாதார அமைப்பில் மிகவும் முக்கியமும் ஆபத்தும் வாய்ந்தன வென்ற எண்ணத்தால் அது விலைகளின் மட்டத்தின்மேல் மிக அதிகமான கவனம் செலுத்துவதேயாகும். ஏற்கெனவே கூறியதுபோல் விலைமட்டத்தில் ஏற்படும் மாறுதல்கள் மிகவும் நீண்ட காலத்திற்குத் தீமைகளை விளைவிக்கக் கூடியன என்பதென்னவோ முற்றிலும் உண்மையே. குறிப்பாக, விலைகளின் போக்கு உற்பத்தியின் அளவில்

பலவிதமான மாற்றங்களை ஏற்படுத்தக்கூடும்.—அதாவது செல்வத்தைச் சிருட்டிப்பதில் மாற்றங்களை ஏற்படுத்தக் கூடும். விலைகளின் அதிகரிப்பு அதிகமான பொருளாதார நடவடிக்கைகளை உண்டு பண்ணுவதற்கான சூழ்நிலையை உண்டுபண்ணும். விலைகளின் இறக்கம் நடவடிக்கைகளை குறையச் செய்வதற்கான சூழ்நிலையை உண்டுபண்ணும். மேற்கண்ட உண்மைகளை வைத்துக்கொண்டு பணக்கணியக் கோட்பாடு—சரியாகக் கூறப்போனல் பணக்கணியக் கோட்பாட்டு மரபினர் (school)—வாணிப நடவடிக்கையின் பொதுவான மட்டத்தில் (general level of business activity) ஏற்படும் மாறுதல்களத்தனையும் விலைமட்டத்தில் ஏற்படும் மாற்றங்களால்தான் உண்டாக்கப்படுகின்றன என்று—சுருக்கமாகச் சொல்லப்போனல் விலையில் ஏற்படும் ஏற்ற இறக்கங்களே வாணிபச் சகடத்திற்குக் காரணங்களாக இருக்கின்றன—திடீர் முடிவுக்கு வருவதே பணக்கணியக் கோட்பாட்டின் குறைபாடாகும்.

இதில் உண்மையில்லை என்பதை ஐயமின்றிக் கூறலாம். இரண்டினுள் ஒன்றைக் காரணமாகவும் மற்றென்றை விளைவாகவும் கூறவேண்டுமானல், வாணிபச் சகடத்தைத் தான் காரணமாகவும் விலைமட்டத்தை விளைவாகவும் கூறவேண்டும். எப்போதும், மோசமான வாணிபமே, குறைவான விலைகளை உண்டுபண்ணுகிறது; குறைவான விலைகள், குறைவான வாணிபத்திற்குக் காரணமாக இருப்பதில்லை யென்பதை ஒவ்வொரு வணிகரும் நன்குணர்வர். உண்மையில், மோசமான வாணிபம் குறைந்த விலைகள் ஆகிய இவ்விரண்டுமே பொதுவான ஒரு காரணத்தின் விளைவுகள் என்பதே ஏறக்குறைய சரியாகும். ஒரு கணப்பொழுது பிரதிபலிப்பே இதனை எடுத்துணர்த்தும். விலைகள் தாமே இயங்குவதில்லை; வேறு யாராலாவது பலவந்தமாகக் கீழே தள்ளப்பட்டால் தவிர விலைகள் தாமாகவே குறைவதில்லை. விலைகள் இவ்வாறு குறைவதற்குக் காரணம் சம்பந்தப்பட்ட ஒரு குறிப்பிட்ட பொருளின் தேவை அதனுடைய அளிப்பை (Supply) விடக் குறைவாக இருப்பதே யாகும். வாங்குபவர்களும் விற்பவர்களும் ஒருவர்க்கொருவர் தாராளமாக பேரம் நிகழ்த்தும், தடையிலா அங்காடி ஒன்றில், விலைகளானவை, தேவை, அளிப்பு ஆகிய இவ்விரண்டில் ஏற்படும் ஏற்ற இறக்கங்களை யொட்டித் தாமாகவும், உடனடியாகவும் இயங்கும். மற்றப்படி, செய்பொருள் உற்பத்தியாளர்கள் (manufacturers) தங்கள் பொருள்களைக் குறைந்த விலைக்கு விற்பதன் நோக்கம் அதிக அளவு செய்பொருள்களை விற்க வேண்டுமென்பதேயாகும். இந்த இரண்டு நிகழ்ச்சிகளிலுமே, முன்னர் இருந்த விலையின்போது தேவையில் குறைவு ஏற்பட்ட காரணத்தால்தான் விலைகள்

குறைந்தன. இதே காரணம் சிறிதளவு மாற்றமுடைய வேறொரு விளைவினையும் உண்டுபண்ணும். நாம் ஏற்கெனவே விவரித்த 1930ஆம் ஆண்டைச் சார்ந்த பெரிய மந்தத்தின் போது விவசாயப் பொருள்களின் தேவை குறைந்தபோது, விவசாயப் பொருள்களின் விலைகள் குறைந்தன. மந்தந்தின் அடிப்பகுதியிலும், சுபிட்சத்தின் உச்சப்பகுதியில் எவ்வளவு அளவு விவசாயப் பொருள்கள் உற்பத்தி செய்யப்பட்டனவோ அவ்வளவு அளவு சராசரியில் உற்பத்தி செய்யப்பட்டபோதும் விவசாயிகளின் வருமானம் மிகவும் குறைவாகவேயிருந்தது. ஆனால் பல தொழில்களில் அவைகள் உற்பத்தி செய்த பொருள்களின் விலைகள் குறைந்த காலத்தும் விலைகளில் மாற்ற மேதுமின்றி அதே விலைகளுக்கு அவை விற்கப்பட்ட காரணத்தால் உற்பத்தி செய்யும் பொருள்களின் அளவு குறையலாயிற்று. உதாரணமாகச் சொல்லின் ஒரு தொழிலாளி 1932ஆம் ஆண்டில் ஒரு மணி நேரத்திற்கு ஊதியமாக, தான் 1929ஆம் ஆண்டில் ஒரு மணி நேரத்திற்கு எவ்வளவு பண ஊதியம் பெற்றரோ, அவ்வளவு அளவே பெற்றபோதிலும்—உண்மை ஊதியத்தை நோக்குமிடத்து இன்னுமதிகமாகக்கூடப் பெற்ற போதிலும் அவர் மிகக் குறைந்த மணி நேரங்களுக்கே வேலை வாய்ப்பைப் பெற்றிருந்த காரணத்தால் அவர் ஊதியம் 1929ஆம் ஆண்டின் ஊதியத்தைவிடக் குறைவே. எனவே விவசாயி தொழிலாளி ஆகிய இரு சாராருமே பல வழிகளில் கஷ்டப்பட்டாலும், அவர்களின் கஷ்டத்திற்குக் காரணம் என்னவோ ஒன்று தான்; அதாவது அவர்களின் பொருள்களுக்குத் தேவையில்லாமலிருந்ததேயாகும். விலைகளைக் குறைத்தல் என்னும் ஒரே சாதனத்தின் வாயிலாகத்தான் விவசாயம், தேவை குறைவடைதல் என்பதனைச் சரிக்கட்ட முடிந்தது. எனவே விலைகளின் இறக்கமே மந்தத்திற்குக் காரணமாகி விடாது.

பணக் கோட்பாடெதுவும் அடிப்படையான ஒரு நிகழ்ச்சிக்குத் தக்கவாறே தன்னை அமைத்துக்கொள்ளவேண்டும். அதாவது சில சமயங்களில் பண்டங்களுக்கும் பணிகளுக்குமான தேவை அவைகளின் அளிப்பைவிடத் திடீரென்று குறைய ஆரம்பிக்கின்ற நிகழ்ச்சியின்போது தன்னைச் சரிவரச் சமாளித்துக் கொள்ள வேண்டும். இம்மாதிரியான காலங்களில் உலகம் தான், எவ்வளவு பொருள்களை உற்பத்தி செய்கின்றதோ அவ்வளவையும் வாங்க இயலாமல் இருப்பதுபோல் காணப்படுகின்றது. இதற்கு மாறாக, அதாவது உலகானது தான் உற்பத்தி செய்ய இயன்றதைக் காட்டிலும் அதிகமான அளவு வாங்குவதற்கு முயலும்போதும், எல்லாப் பொருள்களுக்கும், குறிப்பாகத் தொழிலாளர்களுக்கு, கடுமையான பற்றாக்குறை ஏற்படும்போதும், எல்லாவகையான பண்டங்களுக்

கும் அவைகளின் அளிப்பைவிடத் தேவை அதிகமாக (மிக அரிதாக இருப்பினும்) இருக்கும். போரும் அதன் விளைவுகளும் மேற்சொன்ன இரண்டாவது வகை விளைவுகளை உண்டுபண்ணும்.

பண அளிப்பில் ஏற்படும் குறைதலானது பொதுவாகத் தேவையில் குறைவை ஏற்படுத்தும் என்பதும் ஆராயத்தகுந்தது. பணத்தின் பெரும்பகுதியும், இரண்டாவது அத்தியாயத்தில் ஏற்கெனவே விளக்கப்பட்டுள்ளதுபோல, கடன் பெறுபவர்களுக்குக் கடனளிப்பதன் மூலமே உண்டாகின்றது. பாங்கு முறையினால், இவ்வாறு கடன் வழிப்பிறந்த பணம் (debt loan money) முழுவதுமே திரும்பப்பெற நேரிடும்போது, பொதுமக்கள் தங்கள் கடன்களைத் திருப்பி அடைப்பதற்காக வற்புறுத்தப்படுவர்; இதனால் பண்டங்களையும் பணிகளையும் வாங்குவதற்கு மக்கள் கையில் சிறிதளவும் பணமிருக்காது. பணத்தின் அழிவு தேவைக்குக் கட்டுப்பாட்டினை ஏற்படுத்துகிறது. இதற்கு மாறாக, பணத்தின் சிருட்டித்தலானது மிதமிஞ்சிய தேவையை உண்டுபண்ணும். ஆனால் நடைமுறையில் இவ்வாறான காரண காரிய முறை நிறைவேற்றப்படுவது மிக அரிதான செயலாகும். உதாரணமாக 1929-30-ல் ஏற்பட்ட பெரிய மந்தம் பணக்கணியத்தின் எந்த முக்கியமான குறைதலினாலும் ஏற்பட்டு விடவில்லை. பல நாடுகளில் 1932-ல் 1929-ல் இருந்ததைவிட பண அளிப்பு அதிகமாகவேயிருந்தது. இதுபோலவே, மீட்சியின் முதல் முக்கியப் பகுதிகள் புதிய பண அளிப்புக்களின் சிருட்டித்தலினால் ஏற்பட்டுவிடவில்லை; ஏற்கெனவே இருந்த பண அளிப்புக்களைச் செம்மையாகப் பயன்படுத்தியதனாலேயே ஏற்பட்டதாகும்.

மேற்கண்ட சாட்சியங்களின் அடிப்படையில் நாம் முடிவுக்கு வரவேண்டியது யாதெனில், மந்தத்தை ஏற்படுத்தும் திடீர் 'தேவை' யின்மை நிலை, பணம் இன்மையால் உண்டாவதைவிட வருமானம் இன்மையால் உண்டாகிறது என்பதாகும். இன்னும் நுட்பமாகச் சொல்லின் செலவிடல் இன்மையால்தான் (lack of spending) இது ஏற்படுகிறதென்று கூறவேண்டும். மந்தத்தின் போது ஏன் மக்கள் அதிகமாகப் பணத்தைச் செலவு செய்வதில்லை என்பதற்கு 100க்கு 99 பங்குக் காரணம், அவர்கள் கையிலுள்ள பணத்தைச் செலவிட அவர்களுக்கு விருப்பமில்லாமலிருக்கிறதென்பதல்ல; அவர்களிடம் பணமே இல்லாமலிருப்பதுதான் காரணமாகும்.

பணம், உற்பத்தி ஆகிய இவையிரண்டும் ஒன்றை ஒன்று எவ்வாறு விளைவு, எதிர் விளைவுகளையுடையன என்பதை இன்னும்

விவரித்துக்கொண்டே செல்வதைவிட, நாட்டின் வருமானத்தில் ஏன் ஏற்றத் தாழ்வுகள் கொடூரமாக ஏற்படுகின்றன என்பதுபற்றி ஆராய்வது சிறந்ததாகும். நாட்டின் செல்வ உற்பத்தித் திறனில் உண்டாகும் ஏற்றத்தாழ்வுகளால் ஏற்படும் விளைவுகளைவிட அதன் வருமானத்தில் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளே கொடூரமான விளைவு களைக் கொண்டவைகளாக இருக்கின்றன. சில சமயங்களில் இந்த வருமானம், நாடு உற்பத்தி செய்யும் பண்டங்கள், பணிகள் ஆகியவற்றை வாங்குவதற்கு தேவைக்கு மிதமிஞ்சியிருக்கிறது. சில சமயங்களில், அவைகளை வாங்குவதற்குப் போதாமல் இருக் கிறது. இந் நிலைகளுக்கான காரணங்களை நாம் ஆராய்வது நலம். இவ்வாறு ஆராயப் புகுமுன்னர், திடீரென ஏற்படும் பணக்கணியப் பற்றுக்குறை அல்லது மிதமிஞ்சிய அளவிற்கு இருக்கும் பண அளிப்பு ஆகியவைதான் வருமானத்தில் ஏற்றத் தாழ்வுகளை உண்டுபண்ணுகிறதென்பதை நம் கவனத்தில் வைத்துக்கொண்ட போதிலும், பணக்கணியம் (Quantity of Money) பெரும்பாலும் வருமானத்தின் காரணமாக (Cause) இருப்பதைவிட, விளைவாக (Consequence) இருப்பதையே, காண்போம்.

## நடப்புப் பண்டங்களும் (Current goods). நெடுவாழ்வுப் பண்டங்களும் (Durable goods).

பணக்கணியத்தின் பல்வேறு குறிக்கணக்குச் சமன்பாடுகள் (algebraic equations) ஒருவகையில் மிகவும் பயன்தரத்தக்க முறையிலுள்ளன; அக்குறிக்கணக்குச் சமன்பாடுகள், பொருளா தார நடவடிக்கை முழுதுமே, பண்டங்களையும் பணிகளையும் பணத் திற்குப் பரிவர்த்தனை செய்துகொள்ளும் நடவடிக்கை பற்றியே கூறுகின்றன. சமன்பாடுகளின் (equations) இரு பக்கங்களுமே எப்போதும் சமமாக இருக்கவேண்டும். பணத்திற்கும் செலவிற்கு முள்ள வேறொருவகை சமத்துவத்தை ஆராய்வதனால், தற்காலப் பணக்கோட்பாட்டின் உள்ளந்தரங்கத்தைக் கண்டுகொள்ளலாம். இப்படி, பணத்திற்கும் செலவிற்குமுள்ள சமத்துவத்தை நாம் எடுத்துக்கொண்டு ஆராயும்போது, பணம், இத்தனை அலகுகளின் (units) கணியம் (Quantity) எனக் கொள்ளாமல் வருமான உருள் கலம் போன்று பணியாற்றுகின்ற அதன் தன்மையையே ஆராய வேண்டும்.

இந்தக் கருத்தில் வருமானத்திற்கும் செலவிற்குமிடையே அடிப்படையான சமத்துவமுள்ளது. நம்மில் ஒவ்வொருவரும் தம் வருமானத்தை ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட நபர்களிட மிருந்து பெறுகிறோம். யாரிடமிருந்து அவ் வருமானம் பெறப்படு

கிறதோ அவர்களுக்கு அது ஒரு செலவினமாக உள்ளது. இதன்படி அரசாங்கத்தில் வேலையிலுள்ள ஒரு எழுத்தர் ஆண்டொன்றுக்கு £ 400 வருமானத்தை யுடையவராக இருக்கிருரென்ருல், அந்த £ 400-ம் அவருக்கு வருமானமாகவும், அவர் வேலையிலமர்த்தப் பட்டுள்ள துறையினுக்கு (Department) அது செலவினத்தின் ஒரு பகுதியாகவும் இருக்கும். அரசாங்கம் தன்னுடைய தரப்பில் £ 400 ஐ வரியின் மூலமோ அல்லது கடன் பெறுவது மூலமோ எழுப்புகிறது. இந்த நிலையில் பார்த்தால் இத்தொகை அரசாங்கத்திற்கு வருமானமாகவும் வரி கொடுப்போருக்குச் (அல்லது கடன் கொடுப்பவருக்கு) செலவாகவும் தோன்றும். இதைப் போலவே எழுத்தரிலிருந்து ஆரம்பித்து இன்னும் சற்று வேறுபக்கம் சென்ருல், எழுத்தர், தாம் வாடகை அல்லது உணவு அல்லது உடைகள் இவைகளின் மீது செலவழிப்பது, தனக்குச் செலவாகவும் ஆனுல் அதே நேரத்தில் அச் செலவு தன்னுடை வீட்டுச் சொந்தக்காரர், பல சரக்கு வியாபாரி, தையற்காரர் இவர்களுக்கு வருமானமாகவுமுள்ளது. வேறு யாராவது ஒருவர் செலவு செய்வதே ஒருவருடைய வருமானமாக இருக்கிறது. அதைப் போன்று ஒவ்வொருவருடைய செலவினமும் வேறு யாராவது ஒருவருக்குச் செலவினமாக இருக்கிறது.[1] நாட்டின் வருமானம் முழுதும் அதனுடைய செலவிற்குச் சமமாக உள்ள தென்பதை ஒரு குறிக் கணக்கின் மூலமும் விளக்க முடியும். ஒவ்வொரு செலவும் ஏதாவது ஒரு வருமானத்தை உண்டு பண்ணுகிறது. அந்த வருமானம் மீண்டும் செலவழிக்கப்பட்டு மற்ருெரு வருமானத்தை உண்டு பண்ணுகிறது. இம்மாதிரியான ஒரு சுற்று வட்டமான நிலை ஏற்படுவதால், இதனை வருமானங்களின் ஒரு பிரமாண்டமான வட்ட வடிவ ஓட்டமெனக் (gigantic circular flow) கொள்ளுதல், சாலச் சிறப்புடையதாகும்.

இந்த நிலையில், நாட்டின் உண்மையான உற்பத்தி அடங்கியுள்ள, இரு திறப்பட்ட பண்டங்கள், பணிகள் இவைகளுக்கிடையே உள்ள முக்கிய வேறுபாட்டினை ஆராய வேண்டும். ஒவ்வோர் ஆண்டும் நாடு ஒரு குறிப்பிட்ட அளவு பண்டங்களையும் பணிகளையும் உற்பத்தி செய்கிறது; அவைகளில் சில உடனடியான நுகர்ச்சிக்குப்' (consumption), பயன்படுகின்றன. எஞ்சியவை, உடனடியான தேவைக்கப்பாலும் பயன்படுகின்றன. இவ்விரண்டு இனங்களையும், நடப்புப் பொருள்கள் (current goods) நெடு

[1] 'வருமானம்' என்ற சொல்லுக்கு இங்கே சற்று வரையறுத்த பொருள் கொள்வதே நலம். இச் சொல் ஈண்டு 'வரவுகள்' (in comings) என்ற பொருளில் கொள்ளப்பட வேண்டும். 'மூலதனத்தி'னின்றும், வேறுபடுத்திச் சொல்லத்தக்க ஒரு பொருளை மட்டும் இச் சொல் உணர்த்துவதோடு நின்று விடுவதில்லை.

வாழ்வுப் பொருள்கள்(durable goods)என அழைக்கலாம். பணிகள் யாவும் நடப்புப் பொருள்களே. ஏனெனில் அவைகள் அளிக்கப் பட்ட வுடனேயே அவைகளை நுகர்ச்சி செய்தாக வேண்டும். உணவு பரிமாறும் பணிப்பெண்ணின் பணிகளை நாம் ஓராண்டிற்கு, ஏன் ஒரு நாளைக்குக்கூட சேமித்து வைத்துக்கொள்ள முடியாது. ஆனால் தொட்டுணரக் கூடிய பண்டங்கள் (tangible goods) இரு வகையாகவுமிருக்கும். தெவிட்டிப் போன ரொட்டித்துண்டு, சலித்துப்போன செய்தித்தாள், கிழிந்த சட்டை—இவைகளை நடப்புப் பொருளுக்கு உதாரணமாகக் கூறலாம். பல பத்தாண்டு களுக்கு அல்லது நூருண்டுகளுக்குக் குடியிருக்கப் பயன் படும் வீடு, வாங்கிப் பல ஆண்டுகளாகியும் மதிப்புக்குறை யாத ஆபரணமும், ஏனைய பொருள்களைப் பல ஆண்டு களுக்கு உற்பத்தி செய்யும் ஒரு தறி அல்லது கடைசல் பொறி (lathe), அது வைக்கப்பட்டுள்ள ஓர் ஆலை (factory), பண்டங் களைக் கடத்திச் செல்லப்பயன்படும் பாதைகள், இருப்புப்பாதைகள் —இவைகளத்தனையும் நெடு வாழ்வுப் பொருள்களே. இருவகை யான இவ்வினங்களுக்கிடையே யுள்ள வேறுபாடு மிக்க தெளி வான தொன்ருகும். ஏழு அல்லது பத்தாண்டுகளுக்கு உழைக்கக் கூடிய ஒரு மோட்டார் வண்டி—அல்லது மூன்று அல்லது நான்காண்டுகளுக்கு உழைக்கக் கூடிய உடைத்தொகுதி (suit) ஆகிய இவைகள் நெடுவாழ்வுப் பொருள்களா, நடப்புப் பொருள்களா? நெடுவாழ்வுப் பொருள்கள், நடப்புப் பொருள்கள் என்பனவற்றை வேறுபடுத்திக் கூறவல்ல கோடு (line) ஓராண்டுக் காலமே. எந்தப் பொருளும் அது உற்பத்தி செய்யப் பட்ட ஓராண்டுக் காலத்திற்குப் பிறகும் அதனுடைய பெரும்பகுதி மதிப்பை இழந்து விடாமலிருக்குமானல் அதனை நெடுவாழ்வுப் பொருள் எனக் கொள்ளலாம். மற்றப் பண்டங்கள் யாவும் நடப்புப் பொருள்களே.[1] இதனையே வேறு வழியில் கூறப் போனல், நெடுவாழ்வுப் பண்டங்களின் மீது செலவழிக்கப் படுவது, நாட்டைச் செல்வமுள்ளதாக ஆக்குவதற்குப் பயன்

[1] இவ்வாறு கருதுவதில் மற்ருெரு சங்கடமும் உள்ளது. நிலக்கரி போன்ற பண்டங்கள் பழக்கமாக ஓராண்டுக் காலத்திற்குள்ளாகவே பயன்படுத்திக் கொள்ளப்பட்டாலும் அவைகளைச் சேமித்து வைத்தால் தங்களின் பயன் குன்ருமலேயே இருக்கின்றன. நிலக்கரி, ஓராண்டுக் காலத்திற்கும் குறைவான காலத்திற்குள்ளாகவே பயன்படுத்தப் படுகின்ற காரணத்தால் அதனை நாம் நடப்புப் பண்டமெனக் கொள்வதா அல்லது நெடுங்காலத்திற்குச் சேமித்து வைக்க இயலுமாதலால் அதனை நெடுவாழ்வுப் பண்டமெனக் கூறுவதா என்ற விஞ எழுகின்றது. இதற்குத் தீதற்ற விடை யாதெனில், ஓராண்டில் உற்பத்தி செய்யப்பட்ட நிலக்கரியின் பெரும்பகுதியை நடப்புப் பண்டமென்றும், சேமித்து இருப்புவைத்துள்ள நிலக்கரியை நெடுவாழ்வுப் பண்டமென்றும் கூறுவதே யாகும். நடப்புப் பண்டங்களில் இருப்பில் அதிகரிப்பு அல்லது குறைப்பு செய்வதன் மூலமே, நாட்டின் நெடுவாழ்வுப் பண்டங்களின் அளவில் ஏற்றமோ இறக்கமோ செய்வது ஒரு சிறந்த வழியாக இருக்கின்றது.

படும் மொத்தச் செலவின் ஒரு பகுதியெனலாம். இச்செலவு நாட்டின் சொத்துகளை அதிகப்படுத்துகிறது. ஆனால் நடப்புப் பொருள்களின் மீது செலவழிக்கப்படுவதோ, நாட்டின் பராமரிப்புக்கே பயன்படுகிறது.

நாட்டின் ஆண்டு உற்பத்தி முழுவதையுமே இரண்டு இனங்களாகப் பிரிக்கலாம்—நடப்புப் பண்டங்கள், பணிகள் ஓர் இனம்; நெடுவாழ்வுப் பண்டங்கள் ஓர் இனம். இதன்படி, நாட்டின் ஏனைய வருமானங்களத்தனையும் இவ்விரண்டு இனங்களாகவே பிரித்துக் கூறி விடலாம்—அதாவது நடப்புப் பண்டங்களின் உற்பத்தியால் வந்த வருமானம் மற்றோர் இனம். நாட்டின் செலவுக் கணக்கின் மற்றொரு பக்கத்தில், நுகர்ச்சி (consumption), சேமிப்பு (saving) ஆகிய இவையிரண்டுக்கும் இதைப்போன்ற வேறுபாடுகள் காணப்படுகின்றன. நுகர்ச்சிக்கும் சேமிப்புக்குமுள்ள வேறுபாடு நடப்புப் பண்டங்களின் உற்பத்தி ஆகிய இவ்விரண்டினுக்குமுள்ள வேறுபாட்டினை ஒத்திருப்பினும், வேறுபாடு ஒன்றேயல்ல என்பது, முக்கியமான ஒரு வகையில் இவையிரண்டும் வேறுபடுவதைக் கொண்டு தெளியலாம். இவை பற்றியே இவ்வத்தியாயத்தின் இனிவரும் பகுதிகள் முழுவதும் கூறுகின்றன. நுகர்ச்சி (consumption) சற்றேனும் சிக்கலுடையதல்ல. அது, வருமானத்திலிருந்து நடப்புப் பண்டங்களுக்காகச் செலவிடும் தொகையே யாகும்.

நுகர்ச்சிப் பண்டங்களில் செலவு செய்யாது ஒருவர் சேமித்து வைப்பதே அவருடைய வருமானத்தின் ஒரு பகுதியாக இருக்கிறது.[1] இந்த விளக்கத்தில், மனிதன்தான் நெடுவாழ்வுப் பண்டங்களை வாங்குவதில் செலவழிக்கின்ற வருமானத்தின் ஒரு பகுதியே சேமிப்பு என்று கொள்ளுதல் கூடாது என்பதனை ஈண்டு நாம் நன்கு கவனத்தில் கொள்ளவேண்டும். சேமிப்பிலிருந்து பல வகையான வழிகளில் மனிதன் செலவு செய்கிறான். நெடுவாழ்வுப் பண்டங்களின்மீது செலவுசெய்தல் அவற்றில் ஒரு வகை. ஒருவர், ஒரு குறிப்பிட்ட ஆண்டில் £ 1000ஐ தம் வருமானத்தினின்றும் சேமித்து வைக்கின்றாரென வைத்துக்கொள்வோம். அச்சேமிப்பை ஒரு வீடு வாங்குவதற்குச் செலவழித்தால், அப்போது அவர் சேமிப்பையும் செய்திருக்கிறார்; அச் சேமிப்பைக் கொண்டு ஒரு நெடுவாழ்வுப் பண்டத்தையும் வாங்கி யிருக்கிறார். இவ்வாறு

[1] வரி கொடுப்பதில் செலவிடாது சேமித்து வைப்பதே அவருடைய வருமானத்தின் ஒரு பகுதியாக இருக்கிறதெனக் கூறலாம். தற்போதைக்கு, அரசாங்கம் தனிப்பட்ட குடிமக்களின் பதிலாண்மையாளர் (agent) எனவும், அரசாங்கம் நடப்புப் பண்டங்கள், பணிகள் ஆகியவற்றில் செலவிடுவதை—உதாரணமாகப் போர்ப் படையினருக்குச் செலவிடுவதை—வரி செலுத்துவோரின் நுகர்ச்சிச் செலவின் ஒரு பகுதியெனவும் கொள்ளல் வேண்டும்.

சேமிப்பைப் பயன்படுத்துவது, ஒரு விதிவிலக்கே தவிர, ஒரு விதியாகாது. சேமிப்பு என்பது ரொக்கமாகவே சேமித்து வைக்கப்படலாம்; அல்லது அச் சேமிப்பைக் கடன் கொடுப்பதற்குப் பயன்படுத்தலாம்; அல்லது பங்குகளையும் கடன் பத்திரங்களையும் வாங்குவதற்குப் பயன்படுத்தலாம்; அல்லது பிறர்மீது பலவகையான உரிமைகளை அடைவதற்குப் பயன்படுத்தலாம். தற்காலச் சமூகத்தில், குடிமக்களில் பெரும்பாலோர் தங்களது சேமிப்புகளை நெடுவாழ்வுப் பண்டங்களை வாங்குவதில் செலவழிப்பதில்லை.

பலவகையான, வேறுபாடுகளைக் கொண்ட செலவுகளில் ஏன் இச்செலவைமட்டும் குறிப்பிடவேண்டு மென்பதற்குக் காரணம் என்னவெனில் பணத்தின் பணிகளை இதுவே நேரடியாகப் பாதிக்கின்றது. நடப்புப் பண்டங்களைப் பொறுத்தமட்டில், உற்பத்தியாளருக்கும் (Producer) நுகர்வோருக்கும் (consumer) நேரடியானதும் உடனடியானதுமான தொடர்பு உள்ளது. தவிர, நுகர்வோரால் தேவைப்படுகின்ற நடப்புப் பண்டங்களே உற்பத்தி செய்யப்படுகின்றன. நுகர்வோரின், பணமானது, இடைத்தரகர் பலர் மூலம் உற்பத்தியைச் செய்யும் உற்பத்தியாளரிடமே வந்து சேருகின்றது. எனவே பணம் ஒரு மாற்று மத்தியமாகப் பணி புரிகின்றது. ரொட்டி செய்யும் தொழிலாளி ஒருவர் தம் கூலியில் மாமிசம் வாங்குகிருரென்ருல், ரொட்டியை மாமிசத்திற்குப் பண்ட மாற்று செய்வதற்குப் பணம் ஒரு வசதியான இடைத்தரகராகப் பணிபுரிகின்றது.

ஆனல், சேமிப்பு, நெடுவாழ்வுப் பண்டங்கள் ஆகியவைகளைப் பொறுத்தமட்டில், பணம், மதிப்பின் நிலைக்களனுக (store of value) இருக்கும் பணியைக் கூடுதலாகச் செய்கின்றது. நாட்டின் சேமிப்பைச் செய்கின்றவர்களும், நெடுவாழ்வுப் பண்டங்களை வாங்குகின்றவர்களும் ஒன்றேயல்ல. அவர்களுக்கிடையே யுள்ள தொடர்பு மறைமுகமானதும் தூரமானதாகவுமுள்ளது. தனிப்பட்ட குடிமக்கள், எவ்வளவு சேமிக்க விரும்புகின்ருர்களோ அந்த அளவிற்கே வேறுவகைப்பட்ட குடிமக்கள் நெடுவாழ்வுப் பண்டங்களை வாங்குவதற்குச் செலவிடுகின்ருர்களென்று உத்திரவாதமாகக் கூற முடியாது. உண்மையில், இவ்விரண்டுமே ஒன்ருக இருந்தால் அது தற்செயலான ஒத்தியங்கும் நிகழ்ச்சி (coincidence) யாகும்.

ரொட்டி தயார் செய்பவர் ரொட்டியைத் தயார் செய்வதற்கு முன்னர், தம்முடைய் வாடிக்கைக்காரர்கள் எவ்வளவு ரொட்டிகளை

வாங்க விரும்புவார்களென்ற ஒரு திட்டத்தை வைத்துக் கொண்டு தான், ரொட்டியைத் தயார் செய்யத் தொடங்குவார். அனுபவம் வாய்ந்த வணிகராக அந்த ரொட்டித் தொழிலைச் செய்கின்றவர் இருப்பாரானால், அவருடைய மதிப்பீடு (estimate) கிட்டத்தட்ட சரியாகவே யிருக்கும். குறைந்தது, அவர் பின்னால் வரப்போவ தொன்றை முன்னாலேயே தெரிவிக்க முயற்சி செய்து, நுகர் வோரின் நடவடிக்கைகளுக்கொப்பத் தன்னுடைய நடவடிக்கை பொருந்தியிருக்குமாறு அமைத்துக்கொள்கிறார். ஆனால் சேமிப்புப் பொறுத்த வகையிலும் நெடுவாழ்வுப் பண்டங்களை உற்பத்தி செய்வதைப் பொறுத்த வகையிலும் இவ்வாறிருப்பதில்லை. வாடகைக்கு விடுவதற்கென்றே வீட்டைக் கட்டுமொருவர், போதிய அளவு வாடகை கொடுக்கக்கூடிய மக்கள் எதிர்காலத்தில் எவ்வளவு பேர் இருப்பார்களென்ற மதிப்பீட்டினைப் போடுவார்.[1] வீடு கட்டிக்கொண்டிருக்கும் போதே அதனை வாங்குவதற்கு யாரேனும் பணத்தைச் சேமித்து வைக்கின்றனரா என்று அவர் சிந்திப்பதில்லை. ஆலைகளைக் கட்டுகின்றவர்களும் இப்படித்தான். அவர்கள் நோக்கம் முழுமையும் எதிர்கால நுகர்வோரைப்பற்றி யிருக்குமே தவிர, தற்காலச் சேமிப்பாளர்களைப் பற்றி யிருக்காது. தம் வருமானத்தில் £100ஐச் சேமிக்குமொருவர், £100 மதிப்புள்ள நெடுவாழ்வுப் பண்டங்களை யாரேனும் தயார் செய்து விடுகிறார் களா என்பதுபற்றி மூளையைக் குழப்பிக் கொள்வதில்லை. தமது சேமிப்பை, ரொக்கமாகவே ஒருவர் சேகரித்து வைப்பதானது, வணிகர்கள் நெடுவாழ்வுப் பண்டங்களை உற்பத்தி செய்வதைப் பாதிக்காது. தமது £100ஐ, அவர் பத்திரங்களையும் பங்குகளையும் வாங்குவதில் செலவிட்டபோதிலும், அவைகளை ஏற்கெனவே உள்ள கம்பெனிகளிடமிருந்தே அவர் வாங்குகிறார். £100ஐக் கொண்டு புதியதாக மூலதனமெழுப்பும் புதுக் கம்பெனி ஒன்றில் பங்கு வாங்கும்போது, இம் மூலதனத்தால் அக் கம்பெனி, கற்கள் சுண்ணம்பு, பொறிகள் (Machines) இவைகளை வாங்குவதால், அவருடைய சேமிப்பு நேரடியாக நெடுவாழ்வுப் பண்டங்களை வாங்குவதற்குப் போய்ச் சேருகிறது. தற்காலத்தில் சேமிப்பின் பெரும் பகுதியும் பொறுப்புகள் வரையறுக்கப்பட்ட கூட்டுப் பங்குக் கம்பெனிகளால்தான் செய்யப்படுகின்றது. அவைகள் தங்களது வருமானத்தின் ஒரு பகுதியை, பங்குதாரர்களுக்கு இலாப ஈவுத் (dividends) தொகைகளாகக் கொடுத்து விடாமல், காப்பு நிதிக்

[1] வாடகை (rent) என்பது, நிச்சயமாக ஒரு நடப்புச் செலவாகும் (Current expense). அது வீட்டிற்காகக் கொடுக்கப் படுவதில்லை; (குடியிருப்பவர் எவ்வளவு நீண்ட காலந்தான் வாடகை கொடுத்தபோதும் வீட்டின் ஒருபாகத்தைக் கூடச் சொந்தமாக்கிக் கொள்ள முடியாது). ஆனால் வீட்டுச் சொந்தக்காரர் குடியிருப்பவர் வசிப்பதற்கு வீடு கொடுத்துள்ளமைக்காகக் கொடுக்கப்படும் கட்டணமாகும்.

களாக வைத்துக் கொள்கின்றன. உற்பத்திக்கான சாதனங்களைப் பெருக்கிக் கொள்வதற்கு இத் தொகை பின்னர் பயன்படுத்தப் படுகிறது. இம்மாதிரியான நிகழ்ச்சிகளில், சேமிப்பவரும் நெடு வாழ்வுப் பண்டங்களை வாங்குவோரும் ஒரே தரப்பினர் என்ற போதிலும், சேமிப்பு நெடுவாழ்வுப் பண்டங்களை வாங்குதல் ஆகிய இவ்விரு செயல்களும் வெவ்வேறு சமயங்களில் நடைபெறு கின்றன.

## மூலதனமும் கடனும் (Capital and debt)

நுகர்ச்சி—நடப்புப் பண்டங்கள் இவற்றை விட. சேமிப்பு—நெடுவாழ்வுப் பொருள்கள் இவைகளின் இணைப்பில் தான் பணம் மிக முக்கியமான செயலைப் புரிகின்றது; அது மாற்று மத்தியமாக மட்டும் செயல் புரிவதுடன் நின்றுவிடாமல் மதிப்பின் நிலைக்களனுகவும் செயல் புரிகின்றது. £ 100 ஐச் சேமிக்கும் ஒருவர் பணமாகவே சேமிப்பு செய்யும் போதும் அல்லது பண உரிமை (money claims)—கடன் கொடுப்பதைப் போன்றது-யாகச் சேமிப்புச் செய்யும்போதும், பண்டமாற்று முறையில் நெடுவாழ்வுப் பண்டங்களை வாங்குவதிலுள்ள குறைபாட்டினை நீக்குவதற்கு அப் பணத்தைப் பயன்படுத்துவதில்லை. பணமாகச் சேர்த்து வைப்ப தற்குக் காரணம், நாளடைவில் இப்படிச் சேமித்து வைத்த பணத் தைக் கொண்டு ஒரு நெடு வாழ்வுப் பண்டத்தை வாங்கு வதற்கே யாகும். (வீடு கட்டப்போகும் ஒருவர் அந்த வீடு கட்டுவதற்கான பணம் சேருகின்ற வரையில் பணத்தைச் சேர்த்துக் கொண்டு செல்லுதல் போல). அல்லது நெடுவாழ்வுப் பண்ட மொன்று சமீபத்தில் வாங்கப் போகும் உத்தேசம் எதுவுமில்லா விட்டாலும் தனது தள்ளாத வயதில் நடப்புப் பண்டங்களை (current goods) வாங்கும் பொருட்டுப் பணத்தைச் சேர்த்து வைக்க லாம்.

இவ்வாறு பல்வேறு வகையான பணச் சேமிப்புகளில் முக்கிய மான தொன்று யாதெனில், பணத்தினுல் உண்மையில் என்ன இயலாதோ அதனையே பணம் செய்து தருமாறு கட்டளையிடப்படு கிறது. சென்ற பத்தியில் கடைசியாகக் கூறிய உதாரணமான ஒருவர் தம்முடைய வயதான காலத்திற்காகச் சேமித்து வைப் பதை, ஆராய்வோம். உண்மையில் அவர் என்ன செய்கிரு ரென்ருல் நடப்புப் பண்டங்களை வாங்கி நுகரும் திறனிருந்தும் (அதாவது, அவர் நடப்புப் பண்டங்களை, தாமே உற்பத்தி செய் கின்ற பண்டங்களைப் பண்டமாற்ருகக் கொடுத்துப் பெறுவதால்), யாதொன்றையும் உற்பத்தி செய்ய முடியாத தள்ளாத வயதில்

நடப்புப் பண்டங்களை வாங்கி நுகருவதற்காகத் தம்மைக் கட்டுப் படுத்திக் கொள்கிறார். உலகத்தில் பண மென்பதே யில்லையென்று வைத்துக்கொள்வோம். அப்போது மேற்படி நபர் தம் நோக்கத்தை, அணிலானது குளிர் காலத்திற்காகத் தானியங்களைச் சேர்த்து வைப்பது போல, தான் உழைக்க இயலும்போது நடப்புப் பண்டங்களைச் சேர்த்து வைப்பதன் மூலமே நிறைவேற்றிக் கொள்ள வேண்டும். ஆனால் அவர் இம்மாதிரி செய்ய இயலாது; காரணம் நடப்புப் பண்டங்களை நீண்ட நாளைக்குச் சேமித்து வைக்க இயலாது. எனவே, இவ்வாறான இயலாத காரியங்களைப் பணம் நிறைவேற்ற வேண்டியிருக்கிறது. ஒரு சமுதாய மொன்றில் யாதொரு சேமிப்போ, நெடுவாழ்வுப் பண்டங்களின் உற்பத்தியோ இல்லை யென்று வைத்துக்கொள்வோம். அதில் நடக்கும் பொருளாதார நடவடிக்கைகள் முழுதும் நடப்புப் பண்டங்களின் உற்பத்தி, நுகர்ச்சி ஆகிய இவைகளில்தான் அடங்கியிருக்கும். ஒரு குறிப்பிட்ட ஆண்டில் A என்பவர் சேமிப்பு வழக்கத்தை ஆரம்பித்து £ 100 ஐ நோட்டுக்களாகவே சேமிக்கிறாரென்று வைத்துக்கொள்வோம். அவருடைய சேமிப்பு, அவர் அடுத்த ஆண்டில் £ 100 பெறுமான, தான் அச்சமயத்தில் உற்பத்தி செய்வதை விட அதிகமாக, நடப்புப் பண்டங்களையோ அல்லது நெடு வாழ்வுப் பண்டங்களையோ வாங்குவதற்கு வழி செய்கின்றது. வேறெந்த நிகழ்ச்சியும் நடக்காமலிருந்தால், அடுத்த ஆண்டில் அந்த £ 100ஐச் செலவழிப்பதானது அச்சமுதாயம் அளிக்கக் கூடிய பண்டங்களைக் காட்டிலும் £ 100 பெறுமான அதிகப்படியான பண்டங்களின் தேவையை உணர்த்தும். அதாவது, பிறரை அவர்கள் உற்பத்தி செய்யும் பண்டங்களின் அளவைவிடக் குறைவாக நுகரச் செய்யக் கட்டாயப் படுத்துவதன் மூலமே, A அதிகப்படியான பண்டங்களைப் பெறக்கூடும்.

நெடுவாழ்வுப் பண்டங்களைத் தயாரிப்பவர்களின் நடவடிக்கைகளை ஆராயும்போது இயலாத காரியமும் இயல்வது போன்று தோன்றுகிறது. நெடுவாழ்வுப் பண்டங்களாவன, தங்கள் மதிப்பை (value) இழக்கமாலிருப்பன வாகும். உதாரணமாக ஓர் ஆண்டில் A £ 100ஐச் சேமிக்கிறாரென்றும், B என்பவர் £100-க்கு நெடுவாழ்வுப்பண்டங்களை உற்பத்தி செய்கிறாரென்றும் வைத்துக்கொள்வோம். அப்போது நாடானது ஏற்கெனவே இருந்ததைவிட £ 100 அதிகமாகச் செல்வமுடையதாக இருக்கும். இதே போன்று அடுத்த ஆண்டில் A, தான் சேமித்து வைத்திருந்த £ 100ஐத் தன் சேமிப்பினின்றும் எடுத்துச் செலவிடும்போது, நாட்டின் அந்த ஆண்டின் மொத்தப் பண்டங்களின் அளிப்பைக் கண்டுபிடிக்க, அந்த ஆண்டின் உற்பத்தியுடன் £ 100 ஐக் கூட்ட வேண்டும்.

நாட்டிலுள்ள பிறருக்குத் தீங்கின்றி A யும் தன்னுடைய சிக்கன (thrift) நலனை அனுபவிக்க முடியும்.

பணம் மதிப்பின் நிலைக்களனைகப் பயன்படுத்தப்படும்போது (store of value) சமுதாயம் நினைப்பதற்கும் நடப்பதற்கும் உள்ள ந்தரங்கமான வேறுபாடு காணப்படுகிறது. தனிப்பட்ட ஒருவருக்கு பணத்தின் சேகரிப்பு அல்லது பிறரிடமிருந்து வரவேண்டிய தொகைகள் உண்மைச் செல்வங்களாக (real wealth) இருக்கின்றன. ஏனெனில் அவ்வாறு சேகரித்த பணத்தையும், வர வேண்டிய தொகையையும் அவர் பயன்படுத்தும் அல்லது நுகரும் உண்மைப் பண்டங்களாக மாற்றிக் கொள்ள இயலும். அவருடைய செல்வம் பணத்தில் இருக்கிறதா அல்லது பணம் பெறக்கூடிய சாதனங்கள் அல்லது பொருள்களில் இருக்கின்றதா என்பதை அறுதியிட்டுத் தீர்மானிக்க முடியாத ஒரு நிலையில் அவர் இருப்பார். ஆனல் உண்மையில் பணமும் பணம் பெறக்கூடிய சாதனங்களும் உண்மைப் பண்டங்களை (real goods) விடப் பாதுகாப்பு (security), வசதி (convenience), சந்தர்ப்பத்திற் கேற்பப் பயன்படும் தகுதி (adoptability) ஆகிய பண்புகள் நிறைந்தவை. ஆனல், நாம் பல தடவை வலியுறுத்தியுள்ளது போல், பணத்திற்கு எவ்வித மதிப்பும் இல்லை. ஒரு நாட்டின் மக்கள் தங்களது உழைப்பின் ஒரு பகுதியை நீண்டகால மதிப்புடைய உண்மைப் பண்டங்களை வாங்குகிறர்களென்றல், அவர்கள் காகிதத் துண்டுகளையே (Pieces of paper)—அதாவது பணத்தை—சேமித்து வைக்கும் மற்றெரு நாட்டின் குடிமக்களைவிட அதிகச் செல்வத்தையுடைய வர்களாவார்கள். இரண்டாவதாகக் குறிப்பிடப்பட்ட மக்கள் தாங்கள் அரும்பாடுபட்டுப் பணத்தைச் சிக்கனப்படுத்திச் சேர்த்து வைத்த போதிலும் முதலாவதாகக் குறிப்பிடப்பட்ட மக்களைப் போன்று அவ்வளவு செல்வந்தர்களல்லர். பணம் என்பது நாட்டின் மீது கொண்டுள்ள உரிமையேயாகும். தன்னுடைய கடன் வாக்குறுதிகளை அடுக்கிவைத்துக் கொண்டிருப்பதின் மூலம் எந்த நாடாவது செல்வமுள்ள நாடாக ஆகிவிட முடியுமா?

தனிப்பட்டவர்கள் பணத்தின் வாயிலாகச் சேமிப்புச் செய்ய லாம். ஆனல் தனிப்பட்டவர்களைக் கொண்ட நாடானது இவ்விதத்தில் சேமிப்புச் செய்ய இயலாது. ஒரு பொருளின் பகுதிகள் அந்த முழுப்பொருளை விடப் பெரியன அல்லவாகையால், பணத்தின் மூலம் சேமிப்புச் செய்வது பொருள்களால் சேமிப்புச் செய்வதால் தொடரப்படாவிட்டால், பயனற்றதாகிவிடும். அது பயனற்றதாகப் போய்விடுவதோடல்லாமல், எதிர்காலத்தில் தீங் கிழைக்கக் கூடியதாகவு மிருக்கும். ஏனெனில் சேமிப்புச் செய்த

தனிப்பட்ட நபர்கள் நாட்டின்மீது பணம் அல்லது பணத்திற்கான உரிமைகளை (Money claims) வலியுறுத்துவர். நாட்டிலுள்ள மற்ற மக்களை, இவ்வலியுறுத்துதலானது தண்டிக்கும். மூலதனத்திற்கும் கடனுக்கும் வட்டிக்கும் (interest) கடுவட்டிக்கும் (usury) உள்ள வேறுபாடு இதுவே. நாட்டைச் செல்வமுள்ள நாடாக ஆக்கவும், அதன் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவுமுள்ள ஒரே வழி சேமிப்பின்மூலம் மூலதனத்தைச் சேர்த்து வைப்பதேயாகும்—அதாவது நெடுவாழ்வுப் பண்டங்களைச் சேர்த்து வைப்பதன் மூலமேயாகும். எனினும், பொருளாதார வரலாற்றில், தனிநபரின் பணச் சேமிப்பிற்கு (Saving in money), ஏற்றாற்போல் அனைவருடைய பண்டங்களின் சேமிப்பு (Saving in goods) இல்லையென்றால் அக்காலத்தில் பாரக்கடன் (deadweight debt) அதிகரிக்கும். இப் பாரக்கடனினின்றும் நாடு தப்பித்துக் கொள்வதற்கு ஒரே வழி, பண மதிப்பைக் குறைத்து அதன் மூலம் பணக் கடன்களைக் குறைத்துக் கொள்வதே. வெகுகாலமாகவே, விலைமட்டம் நிதானமாக உயர்ந்து வருவதற்குக் காரணமாக கூறப்படுபவனவற்றுள் இது ஒன்றாகும். பணமாகவோ அல்லது பணத்திற்கு ஆதாரமாகவோ (base) பணியாற்றிய விலையுயர் உலோகங்களின் அளவு தொடர்ந்து அதிகரித்து வந்த காரணத்தால்தான் இவ்வாறிருந்து வந்திருக்கின்ற தென்பதை உத்தேசமாகக் கூறமுடியும். ஆனால், சமூகத்தில் விலைகள் உயருவதற்கான, காரணம், சேமிக்க இயலாமையால் ஏற்படுகின்ற கடன் சுமையே யாகும். பொன்னும் வெள்ளியும் நாட்டிற்கு இப்பணியினைச் செய்யவில்லையென்றால், வெகு காலத்திற்கு முன்பே வேறு வசதியான பண முறையைக் கைக் கொள்ள வேண்டிய ஒரு நிர்ப்பந்தத்தை நாடு அடைந்திருக்கும்.

## பணத்தின் தேவை (Saving in Money)

எனினும், கடன், கடுவட்டி (usury) ஆகியவைகள், பணச் சேமிப்பு (Saving in money) இன்மை, அதனால் ஏற்படும் பண்டங்களின் சேமிப்பு ஆகியவற்றின் விளைவுகளல்ல. ஆனால், வேலையின்மை, மற்றும் வாணிபச் சகடத்தின் (Trade cycle) விளைவு ஆகியவைகள் இவைகளிலிருந்துதான் ஏற்படுகின்றன. இது எவ்வாறு ஏற்படுகிறதென்பதை விளக்குவதற்கு, பணச் சேமிப்பிற்கும் (Saving in money) பண்டங்களின் சேமிப்பிற்கும் (Saving in goods) இடையே உள்ள வித்தியாசத்தின் விளைவை ஆழ்ந்து ஆராய வேண்டும். (பணத்தின் சேமிப்பை (Saving in money) நாம் சேமிப்பு (Saving) என்றழைப்போம். அதுபோலப் பண்டங்களின் சேமிப்பை (Saving in goods) 'முதலீடு' (Investment) என்றழைப்போம். 'முதலீடு' என்னும் சொல் பண்டங்களின் சேமிப்பு

என்னும் சிறப்பான கருத்தில் ஆளப்படுவதால் முதலீடு என்பது தலைகீழ்க் காற்புள்ளிகளால் (Inverted commas) உணர்த்தப்படுகிறது. இதற்கு ஆங்கிலச் சொல்லான Investment என்றும் சொல்லைக் குறிப்பிடும்போது I என்றும் முதலெழுத்தைப் பெரிய எழுத்தால் (Capital letter) எழுதவேண்டும். முதலீடு என்னும் சொல் சாதாரணக் கருத்தில் பத்திரம் அல்லது பங்கு இவற்றை வாங்குவதற்குப் பணத்தைப் பயன்படுத்துதல் என்னும் பொருளை உணர்த்தும்.)

மேற்கண்ட நம் உதாரணங்களை விளக்குவதற்கு, ஒரு நாடு ஆண்டொன்றுக்கு £1000 மில்லியன் வருமானத்தைப் பெறுகிறதென்று வைத்துக்கொள்வோம். இந்தத் தொகையில் £900 மில்லியன் நடப்புப் பண்டங்களுக்குச் செலவிடப் படுகிறதென்று வைத்துக்கொள்வோம். மீதி £100 மில்லியன் சேமிப்புச் செய்யப்படுகிறது. நெடுவாழ்வுப் பண்டங்களும், அந்நாட்டில் £100 மில்லியன் அளவிற்கு ஒவ்வோர் ஆண்டிலும் உற்பத்தி செய்யப்படுகின்றன வென்றால், அந்நாட்டில் சேமிப்பும் (Saving) 'முதலீடும்' (Investment) சமமாக உள்ளன என்று பொருள்.

ஏதோ, சில காரணங்களால் நாடு திடீரென்று ஆண்டொன்றுக்கு £200 மில்லியன் சேமிக்க ஆரம்பிக்கிறதென்று வைத்துக்கொள்வோம். இதனுடைய முதலாவது விளைவு, நடப்புப் பண்டங்களின் மீது செலவிடப்படும் தொகை £800 ஆகக் குறைதலேயாகும்—அதாவது நடப்புப் பண்டங்களுக்கான தேவையில் குறைதல் ஏற்படும். ஆனால் மிச்சமிருக்கிற £100 மில்லியனை ஈர்க்கும் அளவிற்கு நெடுவாழ்வுப் பண்டங்களுக்கான தேவை ஏன் உயர வேண்டுமென்பதற்குக் காரணமெதுவுமில்லை. உண்மையில், நாடுதான் நெடுவாழ்வுப் பண்டங்களை வாங்குவதற்கு பயன்படுத்தக்கூடும் என்பதற்காகவே தனியாக £100 மில்லியனைச் சேமிக்கின்றது. ஆனால், ஏன் அவ்வாறு அத்தொகையினைப் பயன்படுத்தவேண்டு மென்பதற்குக் காரண மெதுவுமில்லை. அதற்கு மாறாக, நாம் ஏற்கெனவே கூறியுள்ளது போல், பணத்தைச் சேமிப்பவர்கள் மிக அரிதாகவே அதனைக் கொண்டு நெடுவாழ்வுப் பண்டங்களை வாங்குவர். நெடுவாழ்வுப் பண்டங்களை வாங்கும் வணிகர்கள் (கட்டடம் கட்டுபவர்கள், ஆலை முதலாளிகள் போன்றவர்கள்) தற்போது எவ்வளவு அளவு சேமிப்பு (Savings) நாட்டில் உள்ளதென்பதைக் கருதி அவைகளை வாங்குவதில்லை. எதிர்காலத்தில் எவ்வளவு அளவு (volume) நுகர்ச்சி (consumption) இருக்கும் என்னும், மதிப்பீட்டின் (estimate) பேரில் தான் அவைகளை வாங்குகின்றனர். நடப்புப் பண்டங்களில்

செலவிடுவது $900 மில்லியனிலிருந்து £800 ஆகக் குறைவதை அவர்கள் காணும்போதும், அதன் விளைவாக நடப்புப் பண்டங்களை உற்பத்திசெய்யும் தொழில்களில் வேலையின்மை (unemployment) யைக் காணும்போதும், அவர்கள் புதிய வீடுகள் அல்லது ஆலைகளை அதிகப்படியாகக் கட்டுவதற்குத் தயங்குவர். எனவே, அதிகப் படியான சேமிப்பு அதிகப்படியான முதலீட்டை ஏற்படுத்தும் என்னும் நியதி இருப்பினும், பணத்தின் குறுக்கீட்டால், வேறு எதிரிடையான விளைவே ஏற்படுகின்றது. எனவே நடப்புப் பண்டங்களின் தேவையும் நெடுவாழ்வுப் பண்டங்களின் தேவையும் இரண்டும் ஒரே சமயத்தில் குறைகின்றன. எல்லாப் பண்டங்களின் தேவையும் குறைவாகவே இருக்கும். நாடு, தான் உற்பத்தி செய்யும் பொருள்களை வாங்க இயலாமலுள்ள ஒரு நிலைக்கு மீண்டு மீண்டும் வந்து கொண்டிருப்பதை உணரும். தேவையின்மை என்னும் இந்நிலை வேலையின்மையையும் (unemployment) விலைகளின் இறக்கத்தையும் உண்டுபண்ணும்.

நாட்டின் சேமிப்பு விருப்பம் (desire to save) திடீரென்று அதிகரிப்பதால் சேமிப்பு (Savings) முதலீடு (Investment) இவையிரண்டிற்கும் முரண்பாடு (discrepancy) ஏற்படுத்தும். திடீரென அதிகரிக்கும் நாட்டின் சேமிப்பு விருப்பமே இவ்விளைவுகளை உண்டுபண்ணுகின்றன. இந்த முரண்பாடு சேமிப்பு அதிகரிப்பதனால் மட்டுமல்ல; முதலீடு (Investment) குறைவதனாலும் உண்டாக்கப் படலாம்—அதாவது வணிகர்கள் ஏதாவது காரணத்தை உத்தேசித்து வீடுகளைக் கட்டுதல், தொழிற்சாலைகளைக் கட்டுதல் இவைகளை நிறுத்தி வைக்கும்போது நாம் ஏற்கனவே பேசிவந்த நமது உதாரணமான நாட்டைப்பற்றி மீண்டும் ஆராய்வோம். £1000 மில்லியன் வருமானம் கிடைக்கப்பெறும் அந்த நாடு £100 மில்லியன் சேமிப்பும் £100 மில்லியன் முதலீடும் செய்யும். இந்த நிலையில் திடீரென்று நெடுவாழ்வுப் பண்டங்களின் உற்பத்தி நின்று விடுகிறதென்று வைத்துக்கொள்வோம். என்ன நடக்கும்?

நிச்சயமாக இதன் முதலாவது விளைவு, நெடுவாழ்வுப் பண்டங்களை உற்பத்தி செய்யும் தொழில்களில் பரவலான வேலையின்மையைக் கொண்டு வருவதேயாகும். நாட்டில் 10-ல் 1 பகுதியினர் வருமானமின்றி இருப்பர். இயற்கையாக, அவர்கள் நடப்புப் பண்டங்களின்மீது (current goods) குறைவாகவே செலவழிப்பர். உண்மையில், அவர்கள் சிறிதளவும் பணம் சேமிப்பற்றவர்களாக இருக்கும்போதும், வேலையின்மைக் காப்புறுதி (unemployment insurance) யில்லாமலிருக்கும்போதும் அல்லது வேறு எந்தவிதமான அறப்பணியும் (charity) இல்லாமலிருக்கும்போதும், அவர்கள்

நடப்புப் பண்டங்களின்மீது சிறிதளவும் செலவழிக்க இயலாது. இது நடப்புப் பண்டங்களை உற்பத்தி செய்பவர்களின் வருமானங்களைக் குறைவாகச் செய்து விடுவதால் அவர்கள் பிறருடைய பொருள்களின்மீது செலவழிப்பதைக் குறைத்துக் கொள்வர். நாடு திடீரென நெடுவாழ்வுப் பண்டங்களை உற்பத்தி செய்வதை நிறுத்தி விட்டால் ஏற்படும் உண்மையான விளைவு சேமிப்பு நிறுத்தப் படுவதே யாகும். இதனால் நெடுவாழ்வுப் பண்டங்களை உற்பத்தி செய்துவந்த தொழில்களில் வேலை செய்துவந்த, வேலையிழந்தவர்கள் நடப்புப் பண்டங்களை உற்பத்தி செய்யும் தொழில்களில் வேலை பெறக்கூடும். ஆனால் பணத்தின் குறுக்கீட்டால் (interposition), சேமிப்பைக் குறைப்பதற்கான ஒரே வழி யாவரும் சேமிக்க இயலாதபடி ஏழ்மையிலிருக்குமாறு வாணிபப் பொது மந்தத்தை (general depression) இன்னும் வேகமாகத் தள்ள வேண்டும்.

எனவே முதலீட்டிற்கு மேலாக உள்ள சேமிப்பு, அது சேமிப்பின் அதிகரிப்பால் ஏற்பட்டாலும் சரி அல்லது முதலீடு குறைதலினால் ஏற்பட்டாலும் சரி, அது, மந்தத்திற்கான (depression) முக்கிய நிகழ்ச்சியை உண்டுபண்ணும்—அதாவது எல்லாவகையான பண்டங்களுக்கான தேவையையும் போக்கிவிடும். தற்போது பதக்கத்தின் (Medal) மற்றொரு பகுதியை நாம் பார்ப்போம். சேமிப்பிற்கு மேலாக முதலீடு உள்ளபோது என்ன நடக்கிறதென்பதைப் பார்ப்போம்.

முதலில் நாம் முதலீட்டின் அளவில் (volume of investment) அதிகரிப்பு ஏற்படுதலை எடுத்துக்கொள்வோம். வணிகர்கள் நெடுவாழ்வுப் பண்டங்களுக்கான தங்கள் தேவைகளை அதிகமாகக் கோருவர். இது, நெடுவாழ்வுப் பண்டங்களை உற்பத்தி செய்பவர்களின் வருமானங்களை அதிகரிக்கும். இதனால் அவர்கள் நடப்புப் பண்டங்களின்மீது அதிகமாகச் செலவழிக்கக் கூடும். நடப்புப் பண்டங்களின்மீது அதிகமான அளவு பணம் செலவழிக்கப்படுவதால், வணிகர்கள் நெடுவாழ்வுப் பண்டங்களுக்கான தங்களது தேவைகளை இன்னும் சற்று அதிகப்படுத்தும்படி ஊக்கப்படுவர். நுகர்வோர் (consumers) நுகர்ச்சிப் பொருள்களின் மீது அதிகமாகப் பணத்தைச் செலவிடும்போதுதான் — அவர்கள் அதிகமாகச் சேமிக்கும் போதல்ல—வீடுகள் கட்டுவது மிகவும் இலாபமானதாகக் காணப்படுகிறது. ரொட்டி வியாபாரம் அதிகமான அளவிற்கு இருக்கும்போதுதான் புதிய அடுப்புகளுக்கு (ovens) அதிகமான தேவைகள் கோரப்படும். எனவே முதலீட்டில் ஏற்படும் அதிகரிப்பு நேரிடையாக நெடுவாழ்வுப் பண்டங்களின் தேவையை

அதிகரிக்கின்றது. இதனுல் நடப்புப் பண்டங்களின் தேவை அதிகரிக்கின்றது. இதன் காரணமாக நெடுவாழ்வுப் பண்டங்களின் தேவை இன்னும் அதிகரிக்கின்றது.

எனவே, மீட்சியின் (recovery) குவிதல் முறை (cumulative process) ஆரம்பமாகின்றது. ஆனுல் ஈண்டு, இரு வேறு வகையான மீட்சிகளுக்குள், ஒரு புதிய வேறுபாட்டைப் புகுத்த வேண்டும். உண்மையிலே அது 'மீட்சியாக' இருக்குமானுல்—அதாவது இதற்கு முன்னுல் ஒரு மந்தம் (depression) வந்து சென்றுவிட்டிருக்குமே யானுல்—அதன் ஆரம்பத்தில் ஏராளமானவர்கள் வேலையிழந்து சோம்பி நிற்பர். தொழிற்சாலைகள் முதலியன மூடப்பட்டோ அல்லது அரைகுறையாக வேலைசெய்து கொண்டோ இருக்கும். இவ்வாருன சூழ்நிலையில், சற்றுமுன் விளக்கப்பட்ட பொதுவான தேவைகள் அதிகரித்தால் அதன் முதல் விளைவு, வேலையின்றி சோம்பி இருக்கும் தொழிலாளர்களுக்கும் முதலுக்கும் (capital) வேலை கொடுத்தலாகவே இருக்கும். நாட்டின் பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் உற்பத்தியும், அவைகளுக்கான தேவை அதிகரிப்பதின் வீதத்தில் அதிகரிக்கும். இந்தச் சூழ்நிலைகளில், ஏன் விலைகள் பொதுவான ஏற்றத்தையுடையனவாக இருக்கின்றன என்பதற்குத் தகுந்த காரணமெதுவுமில்லை. விலைகள் சற்று அதிகமாகலாம்; உற்பத்தி தேவைப்படுதல் அதிகரிக்கின்றதென்றகாரணத்திற்காகஒவ்வொரு பொருளின் உற்பத்தியையும் அதிகரித்தல் இயலாது. விவசாயம் பொருள்களைப் பொறுத்தமட்டில் இது மிகவும் உண்மையாகும். அப்படியானுல் அதிகமான தேவை விலைகளை அதிகரிக்கச் செய்யும். ஆனுல் பொதுவாக, குறிப்பாகத் தொழில் நாடுகளில், மீட்சியின் முதல் கட்டம் விலைகளின் ஏற்றமல்ல; வேலையின்மை குறைந்து வருதலே யாகும்.

எனினும், நாளடைவில் மீட்சி அடைந்துகொண்டிருக்கும் போதும், தேவை அதிகரித்துக்கொண்டிருக்கும்போதும், பண்டங்களின் அளிப்பு (Supply) குறைந்துவரும். நாடு 'வேலை நிறைவு' (full employment) என்னும் நிலையை அடையும்.[1] தேவை அதிகரிக்கும்போது, நிலையான பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின்

1. 'வேலை நிறைவு' என்ருல் ஆண், பெண் அனைவருக்கும் வேலை கிடைக்குமென்று பொருளல்ல. உழைப்பு (labour), மூலதனம் (capital) இவைகள் தேவைப்படுவதால், வேலையின்றிச் சோம்பியிருக்கும் உழைப்பின் அளிப்பும் (idle labour) முதலீடு செய்யப்படாத மூலதன (idle capital)த்தின் அளிப்பும் இருக்காதென்று இதற்குப் பொருள். எனவே 'வேலை நிறைவின் போது', வேலையற்றவர்கள் பதிவுப் புத்தகத்தில் (unemployment register) 1,000,000 நபர்கள் இடம்பெற்றிருக்கவும்கூடும். அந் நபர்கள் நிலக்கரி சுரங்கத் தொழிலாளர்களாக (coal miners) இருக்கலாம். அப்போது பொறியியலாளர்களே (engineers)

அளிப்பை நிறைய அளவு பணத்தைக் கொடுத்துக் கொள்ள வேண்டும். இதனுல், பலவாற்றுலும் கூலிகளும் விலைகளும் உயர்வது தவிர்க்கமுடியாத விளைவாகும். பணக் கோட்பாட்டில் இது ஒரு சுவையான பின்தொடர்பை (interesting corollary) உண்டுபண்ணுகிறது. அதிகமான தேவை வேலையில் அமர்த்தப் படாத சாதனங்களான உழைப்பு (labour) மூலதனம் இவற்றை வேலையிலமர்த்தும்போது, விலைகளில் முக்கியமான மாறுதல்கள் எதுவுமில்லாத வரையில், மக்களின் சேமிப்பு அதிகரிக்கும். ஏனெனில் அவர்களுக்கு வருமானம் அதிகமாகக் கிடைக்கும். எனவே மீட்சிக்கட்டத்தின் ஆரம்பநிலையில், சேமிப்பும் முதலீடும் ஒன்றையொன்று மேல்நோக்கித் துரத்திக்கொண்டு செல்லும்-இதில்முதலீடு என்னவோ முன்னதாகவே சென்றுகொண்டிருக்கும். (இல்லாவிடில் இம்முறையே நின்றுவிடும்). 'வேலை நிறைவு' (full employment) நிலையை எய்திய பிறகும் முதலீடு (investment) தொடர்ந்து அதிகரிக்குமானுல், ஒரு மாற்றம் ஏற்படும்: விலைகளின் அதிகரிப்பானது, மக்கள் தங்கள் வருமானங்களால் குறைந்த அளவுப் பொருள்களையே வாங்கமுடியுமாகையால், தங்களது நுகர்ச்சியைக் (consumption) குறைத்துக்கொள்ளக் கட்டாயப்படுத்தப்படுகின்றனர். விலைகளின் உயர்வு, அவர்கள் சேமிக்கும் பண அளவையும் குறைக்கக்கூடும். ஏனெனில், மக்களில் பெரும்பாலோர் விலைகள் ஏறி விற்கின்ற காலத்திலும் தங்கள் நுகர்ச்சியை அதே அளவில் வைத்திருக்க முயல்வார்களேதவிர, சேமிப்பை அதே அளவில் வைத்திருக்க முயல்வதில்லை. விலைகளின் ஏற்றம் பணச் சேமிப்பு வீதத்தைக் குறைத்தபோதிலும், சேமிப்பைப் பொறுத்த வரையில் எவ்வித மாற்றத்தையும் உண்டுபண்ணுவதில்லை. ஏனெனில், விலைகளின் ஏற்றம் மக்கள் தாங்கள் நுகரும் நடப்புப் பண்டங்கள்(current goods) பணிகள்(services)ஆகிய இவைகளின் அளவைக் குறைக்கும்படி கட்டாயப்படுத்துவதால், சாதனங்களை, நெடுவாழ்வுப் பண்டங்களை உற்பத்திசெய்வதற்குத் தாராளமாக விட்டுவைக்கின்றது. சில சமயங்களில் இது 'கட்டாயச் சேமிப்பு' (forced saving) என்றழைக்கப்படுகிறது. ஆனுல் சொற்களின் குழப்பத்தைத் தவிர்க்கும் பொருட்டு நாம் இதனைக் 'கட்டாய விலக்கம்' (forced absention) என்றழைப்பது சிறந்ததாகும்.

எனவே, வேலைநிறைவின் முன் (before full employment) வேலைநிறைவின் பின் (after full employment) என்று மீட்சியின்

---

தேவையாக இருந்திருக்கலாம். அல்லது இயங்காமலுள்ள தொழிற்சாலைகள் எதுவுமே இல்லாத காரணத்தால் அவர்களை அத்தொழிற்சாலைகளில் வேலையிலமர்த்திக் கொள்வதியலாததாக இருக்கலாம். 'வேலை நிறைவு'(Full employment) என்பது உற்பத்தி, எந்தக் காரணத்தாலும் தேவையைச் சரிக்கட்ட இயலாத நிலையில்தான் ஏற்படுகிறது.

இரண்டு பகுதிகளையும் தனித்தனியாக நுணுக்கமாக வேறுபடுத்திக் கூறமுடியும். முதல் பகுதியில் (phase) நெடுவாழ்வுப் பண்டங்களை அதிகமாக உற்பத்திசெய்வதற்கு வேண்டிய சாதனங்கள் வேலையின்மைப் பொதுநிதி (pool of unemployment)யினின்றும் எடுத்தாளப்படுகின்றன. நாட்டிலுள்ள மொத்தப் பணத்தின் அதிகரிப்பு வீதத்திற்கேற்பப் பண்டங்கள் பணிகளின் உற்பத்தியின் அதிகரிப்பிருப்பதால் குறிப்பிடும் படியாகவிலைகளில் எவ்வித ஏற்றமும் இருப்பதில்லை. வேலை நிறைவை' (full employment) எய்திய பிறகு, விலைகளின் அதிகரிப்பால் பொதுமக்கள் 'கட்டாய விலக்கத்தால்'(forced saving), மூலதனமும் உழைப்பும் (capital and labour) நெடுவாழ்வுப் பண்டங்களின், தெவிட்டல் நிலையில்லாத (insatiate) தேவையைப் பூர்த்திசெய்யப் பயன்படுத்தப்படுகின்றன. இவ்விரண்டு பகுதிகளுக்கிடையேயுள்ள வேறுபாடே மீட்சிப் பணப் பெருக்கம் (reflation), பணவீக்கம் (inflation) ஆகிய இவ்விரண்டிற்குமிடையேயுள்ள வேறுபாடென்று வழக்கமாகக் கருதப்படுகிறது.

சேமிப்பிற்குமேலாக முதலீடு (investment) அதிகரிப்பதால் வரும் விளைவுகள் இவைகள். சேமிப்புக் குறைந்தாலும் இவ்வித விளைவுகள் வரும். சேமிப்புக் குறைதல் என்பது நடப்புப் பண்டங்களின்மீது செலவழிக்கப்படுதல் அதிகரிப்பதாகும். எனவே நடப்புப் பண்டங்களான தேவை, நெடுவாழ்வுப் பண்டங்களின் தேவையில் எவ்வித இறக்கத்தையும் உண்டுபண்ணமல், அதிகரித்துள்ளது. உண்மையில் நடப்புப் பண்டங்களில் அதிகமான நடவடிக்கைகளும் சுபிட்சமும் நெடுவாழ்வுப் பண்டங்களுக்கான அதிக தேவையைக் கொணரும். சென்ற உதாரணத்தில் கூறியிருப்பதுபோல, வேலைநிறைவை (full employment) எய்துகின்ற நிலையில் தன் பண்பில் முக்கிய மாற்றத்துடன், மீட்சியானது தனது பண்புடன் சென்று கொண்டிருக்கிறது.

சேமிப்பு, முதலீடு (investment) இவைகளின் முழு விளைவுகளையும் பார்க்கவேண்டுமேயானுல், நாம் ஏற்கெனவே குறிப்பிட்டுள்ள சிலவற்றை ஆராயவேண்டும். அதாவது பணம் ஒருவர் கையிலிருந்து மற்றவர் கைக்கு மாறிக் கொண்டிருப்பதாலும், ஒருவருடைய செலவு மற்ருெருவருடைய வருமானமாக இருப்பதாலும், ஒவ்வொரு வருமானத்தின் மூலப்பொருளும் ஒவ்வொரு செலவின் மூலப்பொருளாக இருப்பதாலும், இப்பொருளாதாரமுறை பணத்தின் பரந்த வட்ட ஓட்டமாக (circular flow) இருக்கிறது. சேமிப்பு செய்யப்படும்போதெல்லாம், பண ஓடையிலிருந்து(stream) பண அலகுகள்(units of money)வெளியே எடுக்கப்பட்டுவிடுகின்றன

என்று கொள்ளப்படலாம். முதலீடு செய்யப்படும்போதெல்லாம், பண அலகுகள் ஓடையினுள் செலுத்தப்படுகின்றன. எனவே, முதலீட்டைவிட சேமிப்பு அதிகரித்தால், ஓடையினுள் செலுத்தப் படுவதைவிட அதிகமான பணம் வெளியேற்றப்படுகிறதென்று பொருள். அப்போது ஓடை குறுகும்; இவ்வாறுன ஒவ்வொரு சுற்று வட்டத்தின்போது ஒவ்வொருவரும் தங்களது வருமானம் ஏற்கெனவே இருந்ததைவிட குறைந்துவருவதை உணர்வார்கள். இவ்வாறு சேமிப்பு முதலீட்டைவிடத் தொடர்ந்து அதிகரித்துச் செல்லும் வரையில், வருமானங்கள் குறைந்துகொண்டேசெல்லும்; வேலையின்மையும் அதிகரித்துக்கொண்டு செல்லும். சேமிப்பு முதலீட்டைவிட அதிகமாக இருக்குமானுல், ஒவ்வொரு பொருளுக் கும் அதன் உற்பத்திச் செலவைவிட அதிக அளவு பணம் கொடுக் கப்படும் அளவிற்கு வருமானங்களின் ஓடையும் செலவுகளின் ஓடையும் பெருகும்.

சேமிப்பும் முதலீடும் ஒன்றுக்கொன்று சமமாக இல்லாமலிருப் பதுபற்றி இதுவரை பேசிவந்தோம். ஆனுல் ஒருவிதத்தில் அவைகள் எப்போதும் சமமாகவேயிருக்கின்றன. நாட்டின் வருமானமும் அதன் செலவும் ஒன்ருகவேயிருக்கின்றன. நடப்புப் பண்டங்களின் விற்பனையால் வரும் வருமானத்தை ஒருபுறம் கழித்து, நடப்புப் பண்டங்களை வாங்கியதனுல் வரும் செலவை மற்ருெரு புறமும் வைத்துக் கழித்துவிட்டால், மிச்சமாக உள்ளது சமமாக இருந்தே யாகவேண்டும். வருமானங்களின் பக்கத்தில், நடப்புப் பண்டகங்களால் சம்பாதிக்கப்படாத எல்லா வருமானங் களுமே நெடுவாழ்வுப் பண்டங்களால் சம்பாதிக்கப்படவேண்டும்—அதாவது அவை முதலீட்டின் மதிப்பளவை உணர்த்துகின்றன. இதேபோன்று செலவுப் பகுதியில், நடப்புப் பண்டங்களின்மீது செலவழிக்கப்படாதவையெல்லாம் சேமிப்பாக இருக்கவேண்டும். ஆனுல் இந்தப் பிரதிபலிப்பு, ஆரம்பத்தில் காணப்பட்டதைப் போன்று கோட்பாடு ரீதியில் ஆச்சரியப்படத் தக்கமுறையிலோ அல்லது அழிதரத்தக்க முறையிலோ இல்லை. இது எதனைக் குறிக் கிறதென்ருல், பொதுமக்கள் சேமிக்கின்ற நேர்க்கணிய சேமிப்பு (positive savings) முதலீட்டின் அளவை (volume of investments) விட அதிகமாக இருக்குமேயானுல், இவையிரண்டினுக்குமுள்ள வேறுபாடு வணிக இனம் (business community) எய்திய நஷ்டத்தை அல்லது மந்தத்தினுல் (depression) நாட்டின்மீது திணிக்கப்பட்ட 'எதிர்க்கணிய சேமிப்பை' (Negative savings) உணர்த்தும். இதேபோன்று, பொதுமக்கள் தாங்களே முன்வந்து சேமிக்கும் 'நேர்க்கணிய சேமிப்பு' (positive savings) முதலீட்டை விடக் குறைவாக இருக்கும்போது, வணிகர் இனத்தின் (business

community) எதிர்பாராத இலாபங்கள் (unexpected profits) இவ் வேறுபாட்டினை ஈடுசெய்கின்றன. சேமிப்பு (saving) என்னும் சொல்லுக்குச் சரியாகப் பொருள் சொல்லப்போனுல், வணிகர் இனத்தின் மீது திணிக்கப்பட்ட தூண்டப்பட்ட இலாபங்களையும் (induced profits), எதிர்பாராத இலாபங்களையும் (unexpected profits) சேர்த்துக்கொள்ளவேண்டும். இவ்விதம் விளக்கப்பட்டால், சேமிப்பு முதலீட்டிற்குச் சமமாகவேயிருக்கும். விளக்கம் கூறு வதைத் தவிர்த்து, மற்றப்படி சேமிப்பைப் பற்றிச் சொல்லும்போது, வாணிபத்தை நன்மையாகவோ அல்லது தீமையாக எதிர்பாராத முறையில் பாதிக்காத வண்ணம் சேமிப்பு இருக்கும்போது வணிக இனம் சேமிப்பதே சேமிப்பு என்று கூறலாம். மிகவும் சரியான விளக்கத்திற்கு மிக நெருக்கமாக உள்ள விளக்கத்தை நாம் தர வேண்டுமேயானுல், 'வருமானத்தின் ஒரு பகுதியை நுகராமல் (unconsumed) விட்டுவிடும் ஒருபோக்கு (tendency) அல்லது நாட்டம் (propensity) என்று கூறலாம். இந்தக் கருத்தில் சேமிப்பு என்பதை முதலீட்டிற்கும் அதிகப்பட்டது அல்லது குறைந்தது எனக் கூறலாம்.

நாம் மேற்கண்டவாறு விளக்க இயலும் என்பதற்காக மட்டு மல்ல—வாணிபச் சகடத்தின் நிகழ்ச்சியைக் குறிப்பிடவேண்டு மாயின் அவ்வாறே விளக்கஞ்சொல்லியாகவேண்டும். சேமிப் பானது பரந்த கருத்தில்—அதாவது சேமிப்புடன் இலாபங்களைக் கூட்டி நஷ்டங்களைக் கழித்துவிடுதல்—எப்போதும் முதலீட்டின் மதிப்பிற்குச் சமமாக இருக்கும். நாம் பயன்படுத்தும் இந்தக் கருத்தில் சேமிப்பானது விளக்கப்படும் போது—அதாவது 'தாமாகச் செய்யும் நேர்க்கணிய சேமிப்பு' (voluntary positive saving) முதலீட்டிற்குச் சமமாக இருக்கும்போதுதான், பொருளா தாரத்தின் முறை முழுதும் சமநிலையில் (equilibrium) இருக்கும். சேமிப்பு முதலீட்டைவிட அதிகமாக இருக்குமானுல்—இந்த வேறு பாடு நஷ்டங்களால் உணர்த்தப்படுகின்றது—பொதுவான தேவை யும் (general demand) நாட்டின் பெரும்பான்மை நடவடிக்கையும் சுருங்கிக்கொண்டே போகும். இப்படிச் சுருங்கிச் செல்லுவது, மக்களின் வருமானங்கள் சுருங்கி, தாமாகச் செய்யும் சேமிப்பு, (voluntary saving) அவர்கள் உற்பத்தி செய்யும் நெடுவாழ்வுப் பண்டங்களின் மதிப்பைவிட அதிகமாக இல்லாமலிருக்கிறவரை யில் நடைபெறும். சேமிப்பு முதலீட்டைவிடக் குறைவாக இருக்கு மானுல் பொதுவான தேவையின் மட்டமும் (the level of general demand) நாட்டின் நடவடிக்கையும் சீராக அதிகரித்துக் கொண்டே செல்லும். இப்படி அதிகரித்துச் செல்வதானது, நெடு வாழ்வுப் பண்டங்களின் மொத்த உற்பத்திக்கீடாக மக்கள்

தங்களின் அதிகமான வருமானங்களிலிருந்து சேமிப்புச் செய்யும் வரையிலோ அல்லது தொழிலாளர்கள் குறைவாக இருப்பதனல் கட்டாயப்படுத்தப்பட்ட முதலீட்டின் அளவு குறைகின்ற வரையிலோ இருக்கும்.

நாட்டு வருமானத்தின் (National income) மாறி மாறி வரும் பெருக்கமும் அனுக்கமுந்தான் வாணிபச்சகடம் என்பது தெளிவாகக் காணப்படுகிறது. (அதாவது நாட்டின் எல்லா நபர்களின் வருமானங்களின் மொத்தம்) பூரிப்பின் உச்சக் கட்டத்தில் (at the top of the boom) ஏதோ ஒன்று முதலீட்டைச் சேமிப்பைவிடக் குறைவாக இருக்கும்படி செய்கிறது. இந்த வேறுபாடு மிகக் குறைவாக இருந்தபோதிலும், நாட்டு வருமானத்தைக் குறைவாகச் செய்யும் ஆற்றல் வாய்ந்தது. சேமிப்பு நிச்சயமாகக் குறைக்கப்படுகிறது. ஆனுல், மந்தம் (depression) வணிகவிபத்தையும் (risk) நஷ்டத்தையும் தரவல்லதாகையால், முதலீடும் குறைவாக இருக்கும்படி செய்யப்படலாம். ஆகவே, சேமிப்பும் முதலீடும் இம்மாதிரியான ஒரு நச்சுச் சுருளில் (vicious spiral) ஒன்றை ஒன்று துரத்திக் செல்லுகின்றது. அவைகளிரண்டும் சமமாக வருவதற்கு முன்பே, நாட்டு வருமானம் (National income) கணிசமான அளவிற்குக் குறைந்துபோயிருக்கும். இதைப்போலவே ஏறுமுகத்தில், சமநிலைக்கு மீண்டும் கொண்டுவருவதற்கும் போக்கை வேறுவிதமாகத் திருப்பி அமைப்பதற்கும், நாட்டு வருமானத்தில் ஏற்படும் மாறுதலானது ஏற்கெனவே ஆரம்பத்திலுள்ள ஒழுங்கீனத்தைவிடப் பன்மடங்கு அதிகமாக இருக்கும். எனவே நாட்டு வருமானத்தில் ஆரம்பத்திலுள்ள ஒரு சிறிய மாற்றம் (change) மிகப் பெரிய மாற்றமாகக் கடைசியில் பெருகுகிறது. இச் சிறிய மாற்றத்திற்கும் பெரிய மாற்றத்திற்குமுள்ள விகிதமே 'பெருக்கி' (multiplier) என்றழைக்கப்படுகிறது.

நிற்க ஈண்டு வாணிபச் சகடத்தில் சேமிப்பும் முதலீடும் எங்ஙனம் நடந்துகொள்ளுகின்றன என்பதை இன்னும் ஆழமாக ஆராய்வதற்கு முன்னுல், முதலாவதாக எவ்வாறு இந்தச் சிக்கலான கோட்பாடு பணக்கணியக் கோட்பாட் (quantity theory of money)டுடன் இணங்கிச் செல்லுகின்றதென்பதையும், இரண்டாவதாக மிகவும் பரந்த அளவு அங்கீகாரம் (recognition) பெற்ற சில தவருன கோட்பாடுகளைப்பற்றி ஒரு சிறிதளவு குறிப்பிடவும் வேண்டும்.

பணத்தின் தன்மையைப் பற்றிப் பணக்கணியக் கோட்பாடு விளக்க இயலாத பல பொருள்களைச் சேமிப்பு—முதலீடு கோட்பாடு

விளக்க இயலும். உதாரணமாக, பணத்தட்டுப்பாடு எவ்வாறு பூரிப்பை எப்போதும், அல்லது, ஏறத்தாழ எப்போதும் நிறுத்த இயலுகிறதென்பதையும், ஏராளமான பணத்திஞல் எவ்வாறு மீட்சியை ஏற்படுத்த இயலாதென்பதையும் இக் கோட்பாடு விளக்குகின்றது. எந்தச் சமயத்திலும் முதலீட்டின் ஒருபகுதி, ஏன் சில சமயங்களில் பெரும்பகுதி, கடன் வாங்கிய பணத்தாலாகியது. புதிய கடன்களை வழங்க பாங்குகள் தயங்கும்போதோ அல்லது அவைகள் அதிக வட்டிவீதங்களை வாங்கும்போதோ, அவைகள் புதிய முதலீட்டிற்குப் பெருந்தடையாக இருக்கின்றன. இதஞல் சேமிப்பைவிட முதலீடுகள் பின்தங்கியே இருக்கும். மற்ருெரு நிகழ்ச்சியை நோக்குவோம். முதலீடு என்பது இலாபத்தை எதிர்நோக்கிச் செய்யப்படுவது. இலாபம் வரக்கூடிய முதலீட்டுத் துறையேதும் இல்லையென்ருல், பணத்தை எவ்வளவுதான் சுலபமாகவும் குறைந்த வட்டிக்குப் பெறமுடிந்தாலும், அது புதிதாக முதலீடுகளைச் செய்யும்படி வணிகர்களைத் தூண்டுவதில்லை. இயக்கியின் மீதுள்ள வேக ஒழுங்குபடுத்தி என்னும் உருவகத்திற்கு (metopher) நாம் மீண்டும் வருவோம்—ஒரு குறிப்பிட்ட புள்ளிக்கப்பால் அதன் முடுக்குதலை (acceleration) அது நிறுத்திக் கொள்ளும். இயக்கியை (motor) அது குறைந்த வேகத்தில் செல்லும்போது, வேகமாகச் செல்லும்படி செய்ய அதஞல் முடியாது. மந்தத்தின் (depressions) அடிப்பகுதியின்போது (bottom) 'சிருட்டி.' செய்யப்படும் பேரளவுப் பணம் முதலீட்டை அதிகரிக்கும்படி தூண்டும்போதுதான் நன்மையான விளைவைத் தரும். ஆஞல் இப் பேரளவுப் பணச் சிருட்டிப்பானது, அரசாங்கம் தவருனதொரு ஒழுக்கக் கேடான செயலில் (profligacy) இறங்கிவிட்டதென்ற எண்ணம் மக்களை அச்சுறுத்திஞல் இதற்கு நேரிடையான விளைவைத்தரும். அதாவது பயத்தால் மக்கள் கொஞ்சநஞ்சமுள்ள முதலீட்டையும் விட்டுவிடும்படி ஓர் எதிரிடையான விளைவைத்தரும்.

எந்தக் கணியக் கோட்பாடும் விளக்காத ஒரு பொருளை—அதாவது புழக்கவேகத்தை (velocity of circulation)—சேமிப்பு—முதலீட்டுக் கொள்கை (saving-and-investment theory) நல்ல முறையில் விளக்கிக் காட்டும். மக்கள் தங்கள் சொத்துகளைப் பண வடிவில் (in the form of money) எந்த வீதத்தில் வைத்துக்கொள்ள விழைகின்ருர்களோ அந்த வீதத்தைப் பொறுத்தே புழக்கவேகமும் இருக்குமென்று கூறியதைத் தவிர இது சம்பந்தமாக வேருென்றையும் சென்ற அத்தியாயத்தில் நாம் காணவில்லை. இந்த வீதம் உயரும்போது, அது அதிகரிப்பதையும், வீதம் குறையும்போது அதுவும் குறைவதற்கான காரணங்களைத் தெரிந்து

கொள்ள நம்மால் இயலுகின்றது. இம்மாற்று வழியான போக்குகள் ஏன் தோன்றுகின்றனவென்பதற்கான காரணங்களை கணியக் கோட்பாட் (quantity theory)டிஞல் விளக்கந்தர இயலவில்லை. இதனை விளக்குவதற்கான வழி ஒன்று தற்போது நமக்குக் கிடைத்துள்ளது. மக்கள் சேமிக்கும்போது அவர்களது சொத்தின் பெரும் பகுதியை பண வடிவில் தான் வைத்துக்கொள்கின்றனர். அவர்கள் முதலீடு செய்வதில் முனைந்து கொண்டிருக்கும்போது அவர்கள் தங்கள் சொத்துகளைப் பணமாக வைத்திருப்பதைவிட நெடுவாழ்வுப் பண்டங்களாகவே (durable goods) வைத்திருப்பர். இதன்படி, சேமிப்பானது முதலீட்டைவிட அதிகமாக இருக்கும்போது நாடு முழுவதுமே சொத்துகளைப் பணமாகவோ அல்லது பணத்திற்கான உரிமைகளாகவோ (money claims) வைத்திருக்கவிழைந்து, அவ்வீதத்தை அதிகரிக்கும். இதனுல் பணப்புழக்கவேகமும் குறையும். முதலீடு (investment) சேமிப்பைவிட அதிகமாக இருக்கும் போது, இதற்கு நேர்மாருன விளைவுகள் ஏற்படும்.

பணத்தை இருப்பாக வைத்துக்கொள்வதற்கு அடுத்தாற்போலுள்ள வாய்ப்பு, பண்டங்களை வாங்குவதுதான் என்று கூறுவது இதனை இன்னும் எளிதாக விளக்குவதாகும். ஏனெனில், பெருவாரியான மக்கள், பணத்திற்கு உடனடியாக அடுத்தாற்போலுள்ளது என்று மதிப்பது, இரண்டாவது அத்தியாயத்தில் விளக்கப்பட்ட, நெருங்கிய-பணத்தின் (near money) வகைகளில் ஒன்றையே. தங்களது கையில் அதிகமான அளவு பணம் இருக்கிறதென்று தோன்றினுல், அவர்கள் வழக்கமாக (எப்பொழுதுமல்ல) நெருங்கிய பணத்தின் ஒரு வகையாகிய கடன் பத்திரங்களை (securities) வாங்குவார்கள். தங்களது கையில் பணம் குறைவாக இருக்கிறதென்று கண்டால், கடன் பத்திரங்களை விற்றுவிடுவர். விற்பதற்குத் தங்களிடம் கடன் பத்திரங்கள் இல்லையென்ருல், பாங்குகளிடம் அவர்கள் கடன் வாங்குவர். பாங்குகள், இப்புதிய கடன்களைக் கொடுப்பதற்கு தங்களது இருப்பு நிலைக் குறிப்புகளில் (balance sheets) இடமளிப்பதற்காக சில கடன் பத்திரங்களை (தங்களது ரொக்கக் காப்புகளில் யாதொரு மாற்றமும் இல்லையென்ற கருத்தில்) விற்கும்.

இருக்கும் பணத்தின் அளவிற்கும் (volume of money in existence) பொதுமக்கள் இருப்பாக வைத்திருக்க விழையும் பணத்தின் அளவிற்கும் (the amount that the public wants to hold) உள்ள சம்பந்தத்தை அறிந்துகொள்ள நெருங்கிய பணவகைகளையும் கணக்கில் சேர்த்துக்கொள்ள வேண்டும். இரண்டாவது அத்தியாயத்தில் விளக்கியுள்ளதில் எல்லாவிடத்திலும் 'ரொக்க

நிலைக்கும்' (liquidity) வருமானத்திற்கும் (income) இடையே வேறுபாடு நிறைந்துள்ளமையை நாம் பார்த்ததை இங்குக் கவனத்தில் கொள்ளுதல் வேண்டும். ஒரு கடன்பத்திரம் பணத்திற்கு மிக அருகில் இருக்குமானால் (அதாவது மிக எளிதாகப் பணமாக்கப்படுமேயானால்) அதனை வைத்திருப்பவருக்கு அது குறைந்த வட்டியையே சம்பாதித்துத் தரும். வட்டி வீதத்தை செங்குத்தான அச்சிலும் (vertical axis) கடன் பத்திரம் பணமாக ஆக்கப்படுவதற்கான கால அளவை (length of time) படுகிடை அச்சிலும் (horizantal axis) காட்டி ஒரு வளைகோடு (curve) வரைவது சாத்தியமே. இவ் வளைகோடு (curve) சீராக வலப்புறம் நோக்கிச் செல்லும். பணம் எவ்விதமான வட்டியையும் பெறாத நிலையை இவ்வளைகோட்டின் இடப்புற அடிப்பாகமும் கான்சால்களின் மீது (consols)[1] அமலிலுள்ள வட்டிவீதப்படி வட்டி கிடைப்பதை வலப்புறமும் காட்டுகின்றன. இவ்வளைகோடு எப்போதும் வலம் நோக்கியே செல்லுகிறது. சமமான செங்குத்துடனும் இது உயர்ந்துகொண்டு செல்வதில்லை. இதனுடைய வடிவம் கவிந்தும் (concave) சில இடங்களில் குவிந்தும் (convex) மாறி மாறி இருந்துகொண்டிருக்கும்.

எந்த ஒரு குறிப்பிட்ட நேரத்திலும் பொதுமக்கள் இருப்பாக வைத்துக்கொள்ள விழையும் பண அளவானது ('ரொக்க நிலை விருப்பத்தின்' காரணமாக) வரம்பின்றி இருப்பதில்லை. அது பணத்திலிருந்து நெருங்கிய பணத்திற்குச் செல்லுவதால் கிடைக்கக்கூடிய வட்டிவீதத்தைப் பொறுத்திருக்கிறது. நெருங்கிய பணப் பத்திரங்களால் பெறக்கூடிய வட்டி வீதம் மிகக் குறைவாக இருக்கும்போது இதற்கேற்றாற்போல் பொதுமக்கள் நிறைய அளவுப் பணத்தை இருப்பாக வைத்துக்கொள்ள விழைவர். ஆனால், ஆசை தரக்கூடிய அளவிற்கு வட்டிவீதம் இருக்குமேயானால், பொதுமக்கள் குறைந்த அளவு பணத்தை இருப்பாக வைத்துக்கொள்வதில் திருப்தி அடைவர். எனவே பொதுமக்களின் பணத்தேவை (demand for money) என்பதை பொதுமக்கள் ரொக்க வடிவில் (liquid form) இருப்பாக வைத்துக்கொள்ள விழையும் மொத்த சாதனங்களின் (total resources) வீதம் என்று எளிதாக விளக்கம் தந்துவிட முடியாது. இதனைப் பழுதின்றி விளக்கவேண்டுமேயானால், 'கடன் பத்திரங்களின்மீது கிடைக்கப் பெறும் வட்டி வீதத்தை உத்தேசித்து' என்னும் சொற்றொடரை (phrase)யும் நாம், முன் சேர்த்துக் கூறவேண்டும்.

[1] கான்சால்கள் என்பன ஆண்டு வருவாய் தரும் மொத்த உடைமைகள் (Consolidated Annuities) என்பன சுருக்கிக் கூறப்பட்டுள்ளன.

அங்காடியின் (Market) நடைமுறையை வைத்து நோக்கும் போது, இதுவே மிக முக்கியத் தகுதி (qualification) யாக வுள்ளது. முதலில் 'கடன் பத்திரங்களின்மீது கிடைக்கப்பெறும் வட்டி வீதத்தை உத்தேசித்து, பொதுமக்கள் ரொக்க வடிவில் (liquid form) இருப்பாக வைத்துக்கொள்ள விழையும் மொத்த சாதனங் களின் வீதம்' என்னும் கரடுமுரடான சொற்றொடரை L (ரொ) என்னும் எழுத்தால் மாற்றியமைக்க வேண்டும். சில காரணங் களால் இருக்கும் பணத்தின் அளவு (volume of money in existence) அதாவது M (ப) L (ரொ)ஐ விடக் குறைவாக வுள்ளதென்று கொள்வோம்—அதாவது பொதுமக்கள், இருக்கின்ற பண அளவை விட அதிகமாகப் பணத்தை இருப்பு வைத்துக்கொள்ள விழை கின்றனரென்று வைத்துக்கொள்வோம். இருவித காரணங்களால் இது நிகழலாம். மையபாங்கு, பாங்கு வைப்புக்களின் (deposits) அளவைக் குறைக்க முடிவு செய்து தனது சொத்துகளை (assets) விற்பதன் மூலம், அங்கத்தினர் பாங்குகளின் காப்பு ரொக்கங்களை (cash reserves) குறையச் செய்தும், அவைகளைத் தாங்களாகவே தங்கள் காப்பு ரொக்கங்களைக் குறைத்துக் கொள்ளுமாறு வற் புறுத்துவதாலும் இது நிகழலாம். அல்லது பொது மக்கள் ஏதோ சில காரணங்களுக்காக ரொக்க நிலை விருப்பத்தை (liquidity preference) மாற்றி அமைத்துக்கொள்ளும் போதும், நிலவும் வட்டி வீதத்தில் தாங்கள் வைத்துக்கொள்ள விழையும் பண அளவு சம்பந்தமான தங்கள் கருத்தை மாற்றி அமைத்துக்கொள்ளும் போதும் இது நிகழலாம். எந்த நிலையிலும், M (ப) குறைக்கப்பட்ட காரணத்தாலோ, அல்லது L (ரொ) அதிகரிக்கப்பட்ட காரணத் தாலோ, பணக்குறைவு ஏற்படும். இதனைத் தொடர்ந்து வளை கோட்டை (curve) பணத்தின் பக்கம் கீழ்நோக்கிச் செல்லும்படி செய்யப் பொதுவான முயற்சி தோன்றும். ஒவ்வொருவரும், கடன் பத்திரங்களைப் பணமாக்க முயற்சி செய்வர். பணஅளவு மாறுமல் நிலைத்திருந்தால் (constant), அவர்கள் இதில் வெற்றி பெற முடி யாது; உள்ள பணத்திற்கு மேலாகப் பொதுமக்கள் பணத்தை இருப்பு வைத்துக்கொள்ள முடியாது. இவ்வாறு, நெருங்கிய பணத்தை, பணமாக்கும் முயற்சியில், ஒவ்வொருவரும் கடன் பத்திரங்களை விற்கத் தலைப்படுவதால் அவைகளின் அங்காடி விலைகள் (Market prices) குறையும், அதாவது அப்பத்திரங்களை இருப்பாக வைத்துக் கொள்வதன் மூலம் கிடைக்கக்கூடிய வட்டி வீதம் அதிகரிக்கும் என்று கூறலாம்.

இம்முறை, வட்டி விகிதங்கள் அதிகமான மக்களை, அவர்கள் பணத்தை விட்டு நெருங்கிய பணத்தை வைத்துக்கொள்ளுமள வுக்கு ஆசை காட்டும் வகையில் கணிசமான அளவிற்கு உயர்ந்

திருக்கிற வரையிலும் தொடர்ந்து (M (ப) மாருமல் நிலையாக இருக்கிறதென்னும் எடுகோளின்மீது) நீடிக்கும்—அதாவது 'L' (ரொ) M ['ப'] க்குச் சரியாகக் குறைந்து வருகின்ற வரையில் நீடிக்கும். பொதுமக்களின் பணத் தேவையும் (public's demand for money) பணத்தின் அளிப்பும் (supply) மீண்டும் சமநிலைக்குக் கொண்டுவரக்கூடும்—ஆனால் அதிகமான வட்டி வீதத்தால்தான் இவ்வாறு கொண்டுவர இயலும். மையபாங் M (ப)கின் அதிகரிப்பை அனுமதிப்பதின் மூலம் L (ரொ)ன் அதிகரிப்பைச் சமாளிக்கத் தயாராக இருந்தால், இவ்விளைவுகள் நிகழ்ந்திருக்க மாட்டா. அதிகரித்துள்ள பணத்தின் தேவையைச் சமாளிப்பதற்கு கூடுதலான பண அளிப்பு இருந்திருக்கும். கடன் பத்திரங்களை விற்கவேண்டிய அவசியம் இருந்திருக்காது. அதாவது நிலுவையின்மீது (on balance) விற்பனை யெதுவும் செய்யத் தேவையில்லை. பணத்தை அதிகமாக இருப்பு வைத்துக்கொள்ள விரும்பும் பொதுமக்கள் இப் புதிய பண அளிப்புக்களை (new supplies) பரிசாகப் (free gift) பெறுவதில்லை; அவர்கள் வேண்டும் பணத்தைக் கடன் பத்திரங்களை விற்றே பெறல் வேண்டும்; ஆனால் மைய பாங்கு புதிய காப்பு ரொக்கங்களைச் சிருட்டித்தலானது அதே சமயத்தில் அங்கத்தினர் பங்குகளையும் பண அங்காடியில் கடன் பத்திரங்களை வாங்குமாறு தூண்டுகிறது.

இம்முறையைச் சரியாகப் பரிசீலனை செய்தால், விற்பனை (selling) முழுதும் வாங்குவதால் (buying) எடுத்துக் கொள்ளப் படுகிறது. எந்த நிகழ்ச்சியிலும் கைக்கோள் (Principle) தெளிவாக இருக்கவேண்டும்—L (ரொ) M (ப)ஐ விட அதிகமாக இருக்குமானால், அதிகப்படியான பண அளிப்புகளையாவது சிருட்டிக்க வேண்டும்; அல்லது வட்டி வீதங்களாவது அதிகரிக்க வேண்டும்.

இதற்கு மாருக, M (ப) L (ரொ)ஐ விட அதிகமாக இருந்தால் விளைவுகளும் எதிரிடையாக இருக்கும். M (ப)ல் அதிக அளவு ஏற்படுதல், பொதுமக்கள் தங்களின் ரொக்கநிலை விருப்பத்தை (liquidity preference) மாற்றி யமைத்துக்கொள்வதாலும் L (ரொ) ஐக் குறைப்பதனாலும் அல்லது மக்கள் விரும்பாதபோது மைய பாங்கு அதிகமான அளவு பணத்தைச் சிருட்டிப்பதாலும், உண்டாகலாம். பின்னர்ச் சொல்லப்பட்ட நிலைமை சமீப ஆண்டுகளில், பல தடவைகள் ஏற்பட்டிருக்கின்றது. நாட்டின் மேலாண்மையாளர் (authorities) பணக்கணியக் கோட்பாட்டின் முரட்டுத்தனமான கொள்கையைக் கடைப்பிடித்து, மந்தத்தின் அடிப் பகுதியில் பணப் புழக்கத்தை அதிகரிப்பதற்காகப் பணத்தை

நிரப்பி (Pumping) அதன் மூலம் விலைகளையும் வியாபார நடவடிக்கைகளையும் (trade activities) அதிகரிக்கச் செய்ய எத்தனித்த போது மேற்சொன்ன நிலைமை ஏற்பட்டது. பணக்கணியக் கோட்பாட்டில் ஈடுபாடுடையவர்கள் (devotees), நாம் ஏற்கனவே பார்த்ததுபோல், இந்தச் சந்தர்ப்பங்களில் சிருட்டிக்கப்படும் பணம் ஏன் விலைகளை உயர்த்துவதில்லை என்ற வினாவிற்குச் சரியான விடையளிப்பதில் தோல்வியுறுகின்றனர். பொதுமக்களின் விருப்பத்திற்கு அதிகப்படியாகப் பணத்தைச் சிருட்டி செய்வதே அதன் உடனடியான விளைவாகும். எனவே, பணத்தை விட்டு நெருங்கிய பணத்தை (near-money) நோக்கி ஒரு பொதுவான பெயர்ச்சி (Movement) ஏற்படுகிறது. நெருங்கிய பணப் பத்திரங்களின் விலைகள் அதிகரிக்கப் படுகின்றன. அவைகளில் வட்டி வருமானங்களும் குறைக்கப்படுகின்றன. பணந்தேடும் முதலீடுகள் (Money seeking investments) கனம் அதிகரிக்கும் என்றும் கூறப்படுகிறது. M (ப) L (ரொ)ஐ விட அதிகரிக்கும்போது, ஒன்று 'M' (ப) ஆவது குறைக்கப்பட வேண்டும், அப்படி இல்லையெனில் முதலீடு செய்வது சற்றும் பயனில்லை என்னும் அளவை அடையும் வரையில் வட்டி வீதங்கள் குறைந்து செல்லும்—அதாவது L (ரொ) 'M' (ப)ன் மட்டத்திற்கு அதிகரிக்கப்படும் வரையில் வட்டிவீதங்கள் குறைந்து செல்லும்.

நடப்பிலுள்ள பணத்தின் அளவு, பொதுமக்கள் ரொக்க வடிவமாக இருப்பு வைத்துக்கொள்ள விழையும் பணச் சாதனங்களின் வீதம், நெருங்கிய பணப் பத்திரங்களுக்குக் கிடைக்கக் கூடிய வட்டி வீதம் ஆகிய இவைகளுக்கிடையே ஒரு சிக்கலான முக்கோண வடிவமான உறவு முறை (relationship) உள்ளது. குறிக்கணக்கியலின்படி இவ்வுறவு முறையை (relationship) M (ப)= L (ரொ)/*r* (வ) என்று குறிப்பிடலாம். *r* (வ) என்பது வட்டி வீதத்தை (rate of interest) உணர்த்துகிறது. இங்கே முக்கியமாகக் கவனத்தில் கொள்ளவேண்டியது யாதெனில் M (ப)ன் மட்டத்தை மைய பாங்கே (Central Bank) தீர்மானிக்கிறது. இத்தீர்மானத்தில் பொதுமக்களுக்கு யாதொரு பங்குமில்லை. ஆனல் L (ரொ)வானது பொதுமக்களின் முடிவைப் பொறுத்தேயுளது. இதில் மைய பாங்கிற்கு யாதொரு பங்குமில்லை. *r* (வ) என்பது இவ்விருவேறு தனித்த முடிவுகளின் வேற்றுமைகளைக் களைகின்றது.

இதனல், பணக் கணியக் கோட்பாடு எதிர்பார்த்ததுபோல், M (ப)-ல் ஏற்படும் ஒரு குறிப்பிட்ட மாறுதல், விலைமட்டத்தில் மாறு

தலை உண்டுபண்ணுதலானது, சாதாரண காரணகாரிய (cause-and effect) உறவு முறையை குறிப்பதாகாது. அது சிக்கலான தொடர்ந்த எதிர் விளைவுகளை உண்டுபண்ணுகிறது. M (ப)-ல் ஏற்படும் மாறுதலின் முதல் விளைவு (இதனை யொத்த மாறுதல் அதே சமயத்தில் £ (ரொ)-விலும் ஏற்படவில்லை என்று வைத்துக்கொண்டால்) வட்டிவீதத்தில் தான் ஏற்படுகிறது. வட்டிவீதத்தில் ஏற்படும் இம்மாறுதலானது, இவ்வத்தியாயத்தின் பின்வரும் பகுதிகளில் நாம் காணப் போகிற வழிகளில், சேமிப்பிற்கும் முதலீட்டிற்கும் உள்ள தொடர்பில் (relationship) மாறுதல்களை உண்டுபண்ணுகிறது. இம் மாறுதல்கள் நடவடிக்கைகளின் மட்டத்திலும் (level of activities) அதன் மூலம் விலைகளின் மட்டத்திலும் (level of Prices) மாறுதல்களை உண்டுபண்ணுகின்றன. M (ப)ல் எவ்வித மாறுதலுமில்லாமல், இதே தொடர்பான எதிர்விளைவுகள் (reactions) L (ரொ)ல் ஏற்படும் மாற்றத்தால் உண்டாக்கப்படலாம். எனவே பணக் கணியக் கோட்பாடு மிகவும் எளிதாகவே இருக்கிறது. ஆனால் இவ்வளவு எளிதாக இருப்பதால், தவறு என்று கூறிவிட முடியாது. உண்மையில், அதன் அடிப்படையான கருத்தில், அது முற்றிதும் சரியாகவே யிருக்கிறது. சேமிப்பிற்கும் முதலீட்டிற்குமுள்ள தொடர்பானது வேலையிலும் (employment) விலைகளிலும் (Prices) ஏற்படும் குறுங்கால (short-period) ஏற்றத் தாழ்வுகளை (fluctuations) உண்டுபண்ணுகிறது. சேமிப்பு, முதலீட்டை விட அதிகமாக இருக்கும்போது, விலைகள் சமன்பாடு மட்டத் (equilibrium level) திற்கும் கீழ்க் குறைந்து செல்லும். சேமிப்பு முதலீட்டை விடக் குறைவாக இருக்கும்போது விலைகள் சமன்பாடு மட்டத்தைவிட (equilibrium level) அதிகமாக இருக்கும். ஆனால் இச் சமன்பாடு மட்டமே, ஏறத்தாழ நிலவுகின்ற பணக் கணியத்தினால் (quantity of money in existence) தான் தீர்மானிக்கப் படுகிறது. ஒரு டன் நிலக்கரியின் விலை £3 வரையில்தான் ஏறவோ இறங்கவோ செய்யும்; 3 ஷில்லிங் வரையிலோ அல்லது £30 வரையிலோ விலைகள் மாற்றமடைவதில்லை. இதற்குக் காரணம் வாங்கவேண்டிய பண்டங்கள் பணிகள் இவைகளுக்கேற்ப நடப்பில் இருந்துகொண்டிருக்கிற பவுண்டுகளின் (£) எண்ணிக்கையாகும். பூரிப்புக் காலத்தில் (boom period) பண அளிப்பில் எந்த அளவு அதிகரிப்புமின்றி, விலைகள் ஏறக்கூடும்; ஆனால் நிரந்தரமான பண அளிப்பு அதிகரிப்பு இருந்தாலன்றி விலைகள் நிரந்தரமான உயர்மட்டத்தை நோக்கிச் செல்ல இயலாது. எனவே, பணக் கணியக் கோட்பாடு கடலின் சராசரி மட்டத்தை விளக்குவதாயும், சேமிப்பு-முதலீட்டுக் கோட்பாடு (saving and investment theory) வேலியேற்றங்களின் வன்மையை (violence of tides) விளக்குவதாயும் உள்ளது.

இவ்வத்தியாயத்தில் தெளிவாகக் கூறப்பட்ட இக் கோட்பாடு கணியக் கோட்பாட்டைவிட (Quantity theory) நடைமுறையில் சிறந்ததாகவுள்ளது. சில அடிப்படியான போக்குகளை (tendencies) அது தெளிவுபடுத்துகிறது. பணம், விலைகள் இவைகளின் போக்கு மேல்வாரியாகத் தோன்றும் அறிகுறிகளே யென்று இக் கோட்பாடு கூறுகின்றது. பணம் தன்னாலியலாத தொன்றைச் செய்யும்படி கட்டாயப் படுத்தப்படும்போதுதான் தொந்திரவு நேரிடுகிற தென்னும் உண்மையை வெளிப்படையாக எடுத்துக் காட்டுகிறது. பணத்தால் அப்படி இயலாத தென்னவெனில், நாடே செல்வத்தைச் சேகரித்து வைக்காத (store) போது, தனிநபர்களுக்காக செல்வத்தைச் சேகரித்தலாகும். சென்ற பத்தாண்டுகள் காலமாகத்தான் இம்மாதிரியானதொரு கருத்து, பொருளாதார நிபுணர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட தத்துவமாக (doctrine) வுள்ளது. ஆனால் யாதொரு சார்புமற்ற சிந்தனையாளர்களில் (independent thinkers) அநேகர்—புடம்போட்ட குதர்க்கவாதிகளி லிருந்து (cranks) மதிப்புவாய்ந்த எதிர்வேதக்காரர்கள் (heretics) வரை—சகடத்தின்போது ஏற்படும் மந்தங்கள் பணமின்மையினால் (lack of money) ஏற்படுவதைவிட, வருமானமின்மையினால்தான் ஏற்படுகிறதென்ற அடிப்படைக் கருத்தைப் பாராட்டியுள்ளனர். இக் கருத்து நிலவிய பல ஆண்டுகள் போது, மரபு நெறியைப் பின்பற்றும் பொருளாதார நிபுணர்கள் (orthodox economists) இவைகளைப் பணக் கணிய (Quantity of money) வாயிலாக விளக்கந்தரவே திணறிக்கொண்டிருந்தனர். இம் மையக் கருத்தினைப் புரிந்துகொண்டவர்கள் எல்லோரும் வாதப்பொருத்தமான முடிவுக்கான (logical conclusion) சிந்தனையை எழுப்புவதில் வெற்றியடைந்து விடவில்லை. குறிப்பாக, மிகவும் செல்வாக்குப் பெற்றிருந்த இரண்டு கோட்பாடுகள் (theories) தவறான கருத்தைக் கொண்டனவாகக் காணப்படுகின்றன. இங்கே நமது முதன்மையான பாதையை (main path) விட்டுச் சற்று விலகி, அவைகளை ஆராய்தல் நலம்.

## தவறான கருத்துக்கள் (Fallacies)

இத்தவறான கோட்பாடுகளில் ஒன்று, சேமிப்பானது வருமானங்கள் செலவுகள் ஆகியவற்றின் சுற்றுவட்டமான ஓட்டத்தில் ஓர் 'இடைவெளி' (gap) என்று கூறுகிறது. ஆனால் முதலீடானது (investment) இந்த இடைவெளியை மூடுகின்றதொரு எதிரிடையான விளைவைப் (opposite effect) பற்றி இது பேசவில்லை. இக் கோட்பாட்டினர், விற்பனைக்காகவுள்ள பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் உற்பத்திச் செலவைவிட அவைகளுக்குச் செலவிடப்

படுவது குறைவாக உள்ள பண முறையின் ஒரு தொடர்ந்த (continuous) போக்கைப் பற்றிக் கூறுகின்றனர். ஐக்கிய அமெரிக்காவில் 1931ஆம் ஆண்டு நெருக்கடிக்கு (crisis) உடனடியான முன் வருடங்களில், வெகுவாகப் பின்பற்றப்பட்ட இக் கோட்பாட்டின் ஒருவகை, திருவாளர்கள் ஃபாஸ்டர், (Foster) காட்சிங்ஸ் (Catchings) ஆகிய இருவரால் வாதிக்கப்பட்டது. மிக அதிதீவிரமானதும் அதிகமான மக்களால் பின்பற்றப்படுவதுமான கோட்பாடு மேஜர். G. H. துக்ளஸ் (G. H. Duglas) என்பவராலும் சமூகக் கடன் இயக்கத்தாலும் (Social credit movement) கொண்டு வரப்பட்டது. மேஜர் துக்ளஸின் கருத்துப்படி சேமிக்கப்படுகின்ற பணம் முழுதும், வாங்குந் திறன் நிதிக்கு (fund of purchasing power) இழக்கப்படுகின்றது. இதனுடன், நுகர்வோருக்கு நேரடியாகக் கொடுக்கப்படாத உற்பத்திச் செலவினங்கள் (உதாரணமாக பாங்கிற்குக் கொடுக்கப்படும் வட்டி, தேய்மான ஈடு நிதிக்கு அளிக்கப்படும் பணம், மற்ற வணிக நிறுவனங்களுக்கு (business firms), பொறிகள் (machinery), அவைகளின் அளிப்புக்கள் (supplies) அல்லது கச்சாப் பொருள்கள் (raw materials) ஆகியவற்றிற்காக அளிக்கப்படும் பணம்) பணத்தின் சுற்று ஓட்டத்திற்கும் (circular flow) செலவுகளுக்கிடையே (expenditures) ஏற்படும் 'இடைவெளி' (gap) சில சமயங்களில் 90 சதவீதம் அதிதமானதாக இருக்கிறதென்பது துக்ளஸின் தவருன கருத்து.[1] அதாவது தொழிற்சாலையால் கொடுக்கப்படும் பணத்தில், 10 சதவீதமே நுகர்வோர் கைக்குக் கிட்டுகின்றது. தொழிற்சாலையின் பண்டங்களுக்குப் பரிவர்த்தனையாக(exchange)வும் பணம் கொடுக்கப்படுகிறது. இம்மாதிரி கொடுக்கப்பட்டுள்ள கணக்கு முட்டாள்தனமானதே. தனது உற்பத்திச் செலவின் ஒரு பகுதியாக தொழிற்சாலையால் கொடுக்கப்படும் எந்தப் பணத்தையும் யார் முதலில் பெறுகிருர்கள் என்பதுபற்றி ஆராயத் தேவையில்லை என்று இங்குக் கூறுவது அவசியமாகும். எது முக்கியமானதெனில், இந்தப் பணத்தைப் பெறுகின்றவரால் இப்பணம் மீண்டும் செலுத்தப்பட்டு அது ஒரு நுகர்வோரின் கையில் போய்ச் சேருகிறதா என்பதேயாகும். இதன்படி, ரொட்டி தயாரிப்பாளர் ஒருவருடைய உற்பத்திச் செலவுகள் அவருடைய தொழிலாளர்களுக்குக் கொடுக்கப்படும் கூலிகள் (அத் தொழிலாளர்களும் நுகர்வோராக இருக்கின்றனர்), மாவு, காடிச்சத்து (yeast), மின்சாரம், வாடகை முதலியவைகளுக்காகக் கொடுக்கப்படும் பணமுமாகும். அவர்

1 தவருன கருத்து என்று சொல்லப்பட்டதற்குக் காரணம், மேஜர் துக்ளஸ் தனது பொருளாதாரக் கருத்துக்களை தெளிவற்ற முறையில் கூறியிருப்பதோடல்லாமல் அவைகளில், அரசியல், (Political), சமூக (Sociological), இன (racial) முட்டாள்தனங்களுக்கு நிறைய இடமளித்திருப்பதுமாகும்.

அந்தத் தொழிலில் நீடித்தால், அவருடைய தேவைக்கான ரொட்டியை வாங்கக்கூடிய பணம், மேற்சொன்ன செலவுகளெல்லாம் போக எச்சமாக உள்ள அவருடைய இலாபத்திற்குச் சரியாக இருக்கவேண்டும். மாவுக்காகப் பணம் பெறும் மாவுத்தொழிற்சாலை கம்பெனி (flour milling company), தானியம், மின்சாரம், கூலிகள், வட்டி முதலிய இன்னோரன்ன செலவுகளைச் செய்கிறது. இம்முறை நலமாக இயங்கவேண்டுமேயானால், ரொட்டித் தயாரிப்பாளர் கொடுக்கும் முழுப் பணமும் நுகர்வோர் கைக்குக்கிட்டி, அதை அவர்கள் ரொட்டி வாங்குவதில் செலவிட வேண்டும். இந்நிகழ்ச்சியைத் தடுத்து நிறுத்தவல்ல நிகழ்ச்சி ஒன்றே ஒன்றுதான். அதாவது பணம் பெறும் இடையீட்டாளரில் (intermediary) ஒருவர் யாரேனும் அப்பணத்தை, ஏனைய மக்களுக்கு அனுப்பிக்கொண்டே யிராமல் ஒரு பகுதியைச் சேமிக்கும்போது இந்நிகழ்ச்சி தடைபடும். ஒவ்வொருவரும் பணத்தை மற்றவருக்கு அனுப்பிக்கொண்டே யிருந்தால், சுற்று ஓட்டத்திற்கு ஏதும் நஷ்டமில்லை. பணம் ரொட்டிக்கே செலவிடப்படாவிட்டாலும் மற்றப் பொருள்களை வாங்குவதற்காவது பயன்படுத்தப்படும். நாம் சேமிப்பை அனுமதிக்கும்போது வருமான ஓடையினின்று பணம் எடுக்கப்படுவதை அனுமதிக்கிறோம். மக்கள் தாங்கள் எவ்வளவு சேமிக்கிறார்களோ அவ்வளவையும் முதலீடு செய்யும் போது, ஓடையினின்று எவ்வளவு எடுக்கப்படுகிறதோ அவ்வளவும் திருப்பிப் போடப்படுகிறது.

இக்'குறை-நுகர்ச்சியாளர்' (under consumptionist) கோட்பாடுகளுக்குத் தகுந்த விடை இதுதான். நுகர்வோர் வருமானங்களைப் போதுமானதாக இல்லாமற் செய்வதன் மூலம் தொழில், விவசாயம் ஆகியவற்றால் உண்டாகும் முழு உற்பத்தியையும் இலாபமான விலைகளுக்கு வாங்குவதற்கு எவ்வித நிரந்தரமான, தொடர்ந்த, தவிர்க்க முடியாத காரணமும் இருக்கவில்லை. சில சமயங்களில் அவை போதுமானதாக இல்லாமலிருக்கலாம்; சில சமயங்களில் போதுமானதற்கு மேலும் இருக்கலாம். சேமிப்பு, முதலீடு ஆகியவைகளுக்குள்ள தொடர்பினால் மேற்சொன்ன நிலை ஏற்படுகிறதென்பதை இது விளக்குகின்றது.

இக் 'குறை-நுகர்ச்சியாளர்கள்' சிலசமயம் சரியானவர்களென்றும் சிலசமயம் தவறானவர்களாகவும் காணப்படுகின்றனர். அப்படியும் அவர்களுடைய கருத்து தவறானதேயாகும்.

சேமிப்பானது தொடர்ந்த இடைவெளியை உண்டாக்கிக் கொண்டிருக்கின்றதென்பதை நம்பினால், இதற்குச் சரியான

மருந்து (remedy), இடைவெளியை அடைக்குமளவிற்கு, புதிய் பணத்தைச் சிருட்டித்தலே. இந்த உபரிப் பணத்தை உற்பத்தியாளர் கையில் நிறுவனம்—அதாவது வணிக நிறுவனங்கள் கையில்—கொடுக்கவேண்டுமென்று சில ஆசிரியர்கள் கருதுகின்றனர். மேஜர் துக்ளஸ் போன்ற மற்ற ஆசிரியர்கள், இலவசப் பரிசாக [1] நுகர்வோர்கள்—அதாவது, சாதாரணக் குடிமகன்—கையில் கொடுப்பார்கள். ஆனல் இவ்விரு கோட்பாட்டுக் குழுவினரும், சேமிப்பினல் வேறு வகையில் பயன்படுத்தப்பட்ட இப்பணத்தை ஈடுசெய்ய, புதிய பணத்தைப் பணப் புழக்கத்தில் உட்செலுத்தவேண்டுமென்பதை இரு கோட்பாட்டுக் குழுவினரும் ஒப்புக்கொள்கின்றனர். சேமிப்பானது முதலீட்டைவிட அதிகமாக இருக்குந்தருவாயில் இப்புதியப் பணச் சிருட்டிப்பு ஏற்படும்போது, அது முதலீட்டை (investment) அதிகரிக்குமானல், நன்மை பயப்பதாக இருக்கும்; ஆனல் இம்முறை தேவையானதொன்றை சுற்றி வளைத்துப் (round about method) பெறுவதாகும். வணிகர்களுக்குப் பணம் கடன் கொடுப்பதனல் எதையும் சாதிக்கமுடிவதில்லை என்பது அனுபவ வாயிலாகக் கண்ட உண்மை. நுகர்வோருக்குப் பணத்தை நன்கொடையாகக் கொடுப்பதைப்பொறுத்தவரையில், 1936ஆம் ஆண்டு ஐக்கிய அமெரிக்காவில் இம் முறையில், 'தேர்ச்சியாளர்கள் மிகையூதியம்' (veterans bonus) என்று அழைக்கப்பட்டவற்றை வழங்குவதன் மூலம், ஒரு பேரளவு சோதனை நடத்தப்பட்டது. இதன் விளைவுகள் எதிர்பார்த்ததைப் போல் அதிகமாகவே இருந்தன—நடப்புப்பண்டங்களை வாங்குவதில் தாற்காலிகமாகப் பீறிட்டெழுந்தது (spurt), ஆனல் முதலீட்டளவில் (volume of investment) கண்ணுக்குப் புலனகக் கூடிய எந்த அளவு மாற்றமும் ஏற்படவில்லை.

சற்று மாறுபாடானதும் இன்னும் சற்று அதிகமான கருத்துக்களைக் கொண்டதுமான மற்ருெரு வாதத்தைப் பார்ப்போம். பல ஆண்டுகளாக நிலவிய இக்கருத்தினைத் திறம்பட வெளிப்படுத்தியவர் காலஞ்சென்ற ஜே. ஏ. ஹாப்சன் (Late. J. A. Hobson) என்பவராவர். ஹாப்சனின் சமன்கேடான (unequal) செல்வப் பகிர்வே (distribution of wealth) அதிகப்படியான சேமிப்பை உண்டுபண்ணுகிறதென்று கூறுகிருர். சமன் கேடான செல்வப் பகிர்வினல், செல்வர்களாக இருப்பவர்களிடம் அதிகமான அளவு வருமானம் வந்தடைவதால், அவ்வருமானம் முழுவதையும் அவர்

[1] உதாரணமாக, மாக்மிலன் கமிட்டி முன்பு சாட்சியமளித்த மேஜர் துக்ளஸ் அவர்கள் எந்தப் பொருளையும் வாங்குகின்ற ஒவ்வொரு வாங்குவோருக்கும் (every purchaser) அவர்கள் வாங்கிய பொருள்களில் 25 சதவீத மதிப்புப்பெறுமான புதிய பணத்தை (பாங்கு வைப்புகளாக) கொடுக்கவேண்டும் என்னும் திட்டத்தை எடுத்துரைத்தார்.

கள் நுகர்ந்துவிடுவதில்லையாகையால், மிக அதிகமான அளவு சேமிப்பு உண்டாகிறது. இதனால் சேமிப்பு முதலீட்டைவிட அதிக மாகவுள்ளதென்று ஹாப்சன் கூறவில்லை. ஏனெனில் இந்த அதிகப் படியான சேமிப்பு முதலீடு செய்யப்படுவதை அவர் நன்குணர்வார். இச் சேமிப்பு, பொறிகளாகவும் (machinaries) இன்னும் திறம்பட உற்பத்தி செய்யும் சாதனங்களாகவும் முதலீடு செய்யப்படுவதால், ஏழை மக்கள் வாங்க இயலுகின்ற அளவுக்கு அதிகமான அளவு நடப்புப் பண்டங்கள் அங்காடிக்கு வந்து சேருகின்றன என்று அவர் கூறுகின்றார். இதனால் 'அமித உற்பத்தி' (over-production) யும் மந்தமும் (slump) ஏற்படுகிறது. இக் கோட்பாட்டின்படி, முதலீடு சேமிப்பிற்குச் சமமாக இருக்கும்படி செய்யப்பட்டால், இச் சமன்பாடு (equilibrium) அந்த ஆண்டில் கடைப்பிடிக்கப்படும். ஆனால் ஏராளமான பண்டங்களை உற்பத்தி செய்வதை ஓரிரண்டு ஆண்டுகளுக்கு நிறுத்திவைத்தே இச் சமன்பாடு நிலைநாட்டப்படு கிறது. இதனால் அங்காடிகள் அமிழ்த்தப்படுகின்றன. சேமிப்பு முதலீட்டைவிட அதிகமாகிக் கொண்டிருக்கிறதென்பது ஹாப் சனின் கருத்தல்ல. சேமிப்பு, முதலீடு ஆகிய இரண்டுமே அதிக மாகவுள்ளதென்பது அவர் கருத்து. வாணிபச்சகடம், வேலை யின்மை பீடித்துள்ள நிலை ஆகியவற்றிற்கு ஏழை பணக்காரரிடை யேயுள்ள வருமானங்களின் பகிர்வுக்கேடே (mal-distribution) காரணம் என்பதும் ஹாப்சனின் கருத்தாகும்.

வருமானங்களின் பகிர்வு, சேமிப்பு அளவைப் பாதிப்பதனால் (volume of savings), சேமிப்பு, முதலீடு இவைகளுக்கிடையே யுள்ள தொடர்பையும் பாதிக்கின்றது. வருமானத்தில் அதிகமான ஏற்றத்தாழ்வுகள் இருந்து நிறைய செல்வர்களும் இருப்பார்களே யானால், நிச்சயமாக, எல்லா வருமானங்களும் சமமாக இருக்கும் போது சேமிக்கப்படுவதைவிட அதிக அளவு சேமிக்கப்படும். ஆளுக்கு £ 1000 ஆண்டு வருமானமுடைய 10 நபர்கள் சேமிப் பதைவிட ஆண்டொன்றுக்கு £ 10,000 வருமானமுடைய ஒருவர் சேமிப்பது அதிகமாக இருக்கும். நிறையச் சேமிப்பு இருக்கும் போது, அச் சேமிப்பு முழுவதையும் இலாபந்தரக்கூடிய முதலீடு களில் பயன்படுத்திக் கொள்வது கடினம்.[1] எனவே, வருமானங் களின் சமன் கேடு (inequality of incomes) முதலீட்டைவிட அதிகமான அளவிற்குச் சேமிப்பையும், ஒரு பணவடிப்பு நிலையை யும் (deflationary state) மறைமுகமாக ஏற்படுத்தும். ஆனால் இது ஹாப்சனின் கோட்பாடல்ல. செல்வர்களின் இந்த அதிகப்படி

1. இன்னும் கண்டிப்பாகக் கூறப்போனால், நியாயமான நடப்பு வட்டிவீதம் (current rate of interest) கருதப்படுகிற வட்டிவீதத்தைத் தரக்கூடிய முதலீட்டுத் திட்டங்களை வேண்டிய அளவிற்குப் பெறுவது கடினம்.

யான சேமிப்பு முதலீடு செய்யப்பட்டபோதிலும்—உண்மையில் அவைகள் முதலீடு செய்யப்படுகின்ற காரணத்தால் தான்—மந்தம் (slump) ஏற்படுமென்று, ஹாப்சன் கூறினர். இக் கூற்று உண்மையா என்று நாம் ஆராயவேண்டும். இது உண்மை யானல், இதுவே இவ்வத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள மையத் தத்துவத்தைச் (central doctrine) சிதற அடித்துவிடும் என்பதை மனத்திற் கொண்டுதான் இதனை ஆராயவேண்டும். சேமிப்பும் முதலீடும் சமமாக இருக்கும்போது சமன்பாடு (equilibrium) நிலை எய்தப்படுகிறதென்பதே இவ்வத்தியாயத்தின் மையத் தத்துவம்.

ஹாப்சனின் ஆய்ந்துணர்தல் (diagnosis) தவறு என்பதற்குப் பல காரணங்கள் உண்டு. முதலாவதாக, மந்தங்கள் (slumps), அவர் கூறிய முறைபடி தோன்றுவதில்லை. மந்தத்திற்குப் பீடிகை (prelude) போன்றுள்ளது, ஏராளமான செய்பொருள்கள் (manufactures goods) தேவைக்குமேல் நிரம்பியிருத்தலாகும். இதற்கேற் ரற்போல் தேவை அதிகரிக்கத் தவறுவதால், விலைகளின் இறக்கம் வலுக்கட்டாயமாக உண்டாக்கப்படுகிறது. மந்த நெருக்கடியின் ஆரம்பப் பகுதியில் செய்பொருள்களில் ஒரு பொதுவான பற்றுக் குறை ஏற்படும். நெருக்கடியின்போது அளிப்பு அதிகரித்துவிடுவ தில்லை; தேவைதான் திடீரென்று குறைந்துவிடுகின்றது. அடுத் தடுத்து நிகழும் இந்நிகழ்ச்சிகளை நன்கு விளக்கலாம் (நிகழ்ச்சிகள் தங்களின் உண்மையான தன்மைக்கு முற்றிலும் மாருன மாற்றுத் தோற்றமாகக் காட்சியளிப்பது வேடிக்கையாக இருந்தபோதிலும்) சென்ற கால் நூற்ருண்டில் செல்வர்களின் சேமிப்பு வெகுவாகக் குறைந்தபோது, வேலையின்மைப் பிரச்சினை மிகவும் மோசமான நிலைக்குப் போய்க்கொண்டிருந்தது. ஹாப்சனின் கொள்கையை வைத்து மேற்படி நிகழ்ச்சிக்குச் சரியான காரணம் தந்துவிட இயலாது. மேலும், மந்தங்கள் அதிகமான அளவு சேமிப்பினுலும் முதலீட்டினுலும் ஏற்படுகின்றனவென்றும், இந்த அதிக அளவு சேமிப்பும் முதலீடும் செல்வத்தின் சமன்கேடான பகிர்வினுல் தான் உண்டாகின்றனவென்ருல் செல்வர்களின் சேமிப்பு முதலீடு ஆகிய வைகள் குறைவாக உள்ள ஆண்டுகள் மந்த ஆண்டுகளாக இருப்ப தற்கும் அவைகள் அதிகமாக உள்ள ஆண்டுகள் பூரிப்பு ஆண்டு களாக இருப்பதற்கும் எவ்வாறு காரணம் சொல்வது?

உண்மை என்னவெனில் ஹாப்சன், முதலீட்டின் விளைவுகளைப் பற்றியும் சேமிப்பின் விளைவுகளைப் பற்றியும் தவருன கருத்துடைய வராக இருக்கவேண்டும். ஏதோ சில சமயங்களில் முதலீடு செய்ப வர்கள் தங்களது பொருள்களுக்கு எதிர்காலத்தில் நல்ல தேவை

யிருக்குமென்று அமித-மதிப்பீடு (over estimate) செய்வதால், இதன் விளைவாக அவர்களின் முதலீடுகள் நஷ்டத்தை அடைகின்றன என்று சொல்வது முற்றிலும் உண்மை. இப்படியே எல்லா முதலீடு களுக்கும் நடக்குமாயின், பொறிகளின் வளர்ச்சிக்காக முதலீடு செய்யப்படும் பணத்தின் பெரும்பகுதியும் இழக்கப்பட்டுவிடும். ஆனால், பெருவாரியான முதலீடுகள் திருப்தியான பலனைத் தருவதையே நாம் பார்க்கிறோம். முதலீடுகள், தாம் உற்பத்தி செய்த பொருள்களுக்குப் போதுமான தேவையில்லையென்றால் (insufficient demand) பின் எவ்வாறு மேற்படி பலனை அடைகின்றன? மேலும் இயந்திரங்களை விருத்திசெய்வதற்காக முதலீடு செய்யப்படும் கூடுதலான மூலதனம் (additional capital) எப்போதுமே அதிகமான உற்பத்தியைக் கொடுத்துவிடுவதில்லை. அது பெரும்பாலும் பண்டங்களை மிகவும் விலை குறைவாக உற்பத்தி செய்யும் பணியையே செய்கின்றது. எப்போதும் குறைந்த விலையே, அதிகத் தேவையை விளைவித்து, அதிக உற்பத்திக்கும் வழிவகை செய்கின்றது.

மேற்கூறியவைகளெவையுமே, மிகை-உற்பத்திக் (over-production) கோட்பாட்டை மறுக்கவில்லை. இக் கோட்பாடு கூறுவதைப் போல், முதலீட்டின் விளைவு பண்டங்களின் உற்பத்தியை வெகுவாக அதிகப்படுத்துதல் எனக்கொள்வோம். இப்பண்டங்களை உற்பத்தி செய்பவர்கள் கூலி கொடுக்கப்படுகின்றனர். அப் பண்டங்களின் விலையிலுள்ள ஒவ்வொரு பென்னியும் (every penny) யாருக்காவது தொழிலாளருக்காவது அல்லது கச்சாப் பொருள் அளிப்பவருக்காவது அல்லது கடன் கொடுத்தவருக்காவது— செலுத்தப்படுகிற செல்லை (payment) உணர்த்துகிறது. பண்டங்களை வாங்குவதற்கான அதிக வருமானங்கள் உற்பத்தி செய்முறையின் (process of production) மூலமே சிருட்டிக்கப்படுகின்றன. இவ் வருமானங்கள் குறிப்பிட்ட பண்டங்களின் மீதே செலவழிக்கப்படுவதில்லை. அவைகள் மற்றப் பண்டங்களை வாங்குவதற்குப் பயன்படுகின்றன. எனவே பொதுவான தேவையில் (general demand) எவ்விதமான இழப்பும் இல்லை. உற்பத்தி செய்யப்பட்டப் பண்டங்களின் (உற்பத்தியின் போது வருமானங்களைச் சிருட்டித்த பண்டங்கள்) பொதுவான தேவைக் குறைவை ஒரே ஒரு பொருளால்தான் கொண்டுவர இயலும். மொத்த வருமானங்கள் சேமிப்பினால், அதிக அளவு கழிக்கப்படும்போதுதான் முதலீட்டினால் வருமானங்கள் கூடுதலாக்கப்படும்போதைவிட, பொதுவான தேவைக் குறை உண்டாகிறது.

மிகை - உற்பத்திக் (over-production) கோட்பாடும் குறை-உற்பத்திக் (under-consumption) கோட்பாட்டைப் போலவே சில

சமயம், தவருன காரணங்களைத் தவிர்த்து, சரியானதாகவே யிருக்கும். வருமானங்களின் இச்சமன்கேடான பகிர்வு (Mal-distribution of income) சேமிப்பு முதலீடு இவை யிரண்டிற்கும் சமன்பாடு உள்ளதைக் கடினமாக்கலாம். சேமிப்பு, முதலீடு இவற்றில் சமன்பாடு இருக்குமாளுல், வருமானங்களில் சமன்பாடு இல்லாவிட்டாலும் நாடு, வேலை நிறைவை (full employment) நோக்கிச் சென்றுகொண்டிருக்கும். உண்மையில், இலாபகரமான முதலீட்டிற்கு அதிகமான வாய்ப்புகளையுடைய ஒரு புதிய நாட்டில், அதிகமான அளவிற்குச் சமத்துவம் (equality) ஏற்பட்டுவிடுமாளுல், சேமிப்பு அளிப்பின் (supply of savings) பற்ருக் குறையை அது உண்டுபண்ணும். அச் சமத்துவத்தால் பொருளாதார முன்னேற்றம் மிகக் குறைவாக இருக்கும்; அல்லது பணவீக்கத்தின் நீடித்த ஆபத்து இருந்துகொண்டே யிருக்கும். ரஷ்யாவில் சோவியத் புரட்சி, வருமானங்களின் சமன்கேட்டைக் களைந்தது (நாம் நினைக்கு மளவிற்கு சமன்பாடு களையப்படாவிட்டாலும்). அரசாங்கம் மக்களின் தன்னிச்சையான சேமிப்பை எதிர்பார்ப்பது சாத்தியமல்ல என்றுணர்ந்தது. சோவியத் பொருளாதாரத்தை உயர்த்த அதிகமான சேமிப்பு வீதத்தை அரசாங்கம் வலியுறுத்தியது. ஐந்தாண்டுத் திட்டங்களின் பிரம்மாண்டமான (gigantic) முதலீட்டுத் திட்டங்களை நிறைவேற்றுவதற்காகவே, ரஷ்ய மக்கள் தாங்களாகவே மனமுவந்து சேமிக்கும் வீதத்தைவிட அதிகமான சேமிப்பு வீதத்தை (அதாவது செய்யப்பட்ட உற்பத்தியில் குறைவான நுகர்ச்சி வீதம்) அரசாங்கம் திணித்தது. மற்ருெரு துருவமான அமெரிக்கப் பொருளாதாரத்தைப் பார்ப்போம். அமெரிக்க மக்கள், யாதொரு அரசாங்கக் கட்டுப்பாடுமின்றி சுயேச்சையாகவே, 'முதிர்ந்த பொருளாதாரத்தை' (mature economy) முதலீடு செய்ய முடிவதைவிட, அதிகமான அளவிற்கு சேமிப்பர் என்று ஐக்கிய அமெரிக்காவில் ஒரு பொருளாதாரக் கொள்கையைக் கருதுகின்றனர். எனவே, தொடர்ந்த பண வடிப்பு(chronic deflation)இல்லாத வகையில், அரசாங்கம் நிறைய அளவு முதலீடு செய்வதற்கான முயற்சிகளை எடுக்கவேண்டும். அல்லது நாட்டின் வருமானத்தை ஏழைகளுக்குப் பகிர்ந்து கொடுக்கவேண்டும். ஏழைகள் அதிகமாகச் சேமிப்பு செய்யமாட்டார்களல்லவா? இதளுல், நாட்டில் நிலவும் வருமானங்களின் பகிர்வு (distribution of income) சேமிப்பிற்கும் முதலீட்டிற்கு மிடையே சமன்பாடு ஏற்படுவதைக் கடினமாக்கும் என்று நாம் முடிவு செய்யவேண்டும்போல் தோன்றுகிறது. ஆளுல் எப்போதும் இப்படி யிருப்பதில்லை. சமன்கேடு எப்போதும் ஒரே பக்கத்திலிருப்பதில்லை. ஒரே நாட்டில், அது ஒரு பக்கத்திலிருந்து மற்ருெரு பக்கத்திற்கு மாறிக்கொண்டே யிருக்கும். உதாரணமாக பிரிட்டனில் பத்தொன்பதாம் நூற்ருண்டில், வருமா

னங்களை மறுபகிர்வு (re-distribution) செய்தால்தான் அதிகமான சேமிப்பைக் கட்டுப்படுத்தலாம் என்று வாதம் புரிவதற்கேற்ற நிகழ்ச்சி இருந்திருக்கலாம். 1940ஐச் சார்ந்த ஆண்டுகளிலும் 1950ஐச் சார்ந்த ஆண்டுகளிலும் சேமிப்புப் பற்றுக்குறையினுல் நாடு அல்லலுறும் தருவாயிலிருந்தது.

## சேமிப்பு, முதலீடு, வாணிபச் சகடம்

இவ்வத்தியாயத்தில் விளக்கப்பட்ட கோட்பாடு தனது நிலைபேறு (consistency), நம்பிக்கைக்குப் பாத்திரமாகும் தன்மை ஆகியவற்றிற்குச் சோதனை நேரிட்டபோது அவற்றை சமாளித்து நின்றது. எனினும் வாணிபச் சகடத்தின் தொடர்ச்சியான பல நிகழ்ச்சிகளில் இக் கோட்பாடு, இயல்பாகப் பொருந்துமா என்பதை இனிமேல்தான் பார்க்கவேண்டும். பொதுவான தேவையின் அளவு (volume of general demand), வாணிப நடவடிக்கை, விலை மட்டம் ஆகியவை ஏன் சில ஆண்டுகளில் மேல்நோக்கிச் செல்லுகின்றன வென்பதற்கும், சில ஆண்டுகளில் ஒருங்கே அவைகள் கீழ்நோக்கிச் செல்லுகின்றன வென்பதற்கும் அதனுல் காரணஞ் சொல்ல முடியுமா? பணவீக்கம் எவ்வாறு எதற்காகப் பணவடிப்பை உண்டுபண்ணுகிற தென்பதையும் அதேபோன்று பணவடிப்பு (deflation) எவ்வாறு பணவீக்கத்தை உண்டுபண்ணுகிற தென்பதையும் அதனுல் விளக்க இயலுமா?

இச்செயல் விளக்கத்தின் (demonstration) முதற்படி, இக் கோட்பாட்டின் இன்றியமையாத கருப் பொருள்களான (essential elements) சேமிப்பு, முதலீடு ஆகியவற்றின் அளவுகளில் அவ்வப்போது மாற்றத்தினைக்கொண்டு வருவதெது என்பதனை ஆராய்வதேயாகும்.

முடிவில், சேமிப்பின் அளவு, நெடுங்காலத்தில் (long run), மக்களின் சிக்கனத் தன்மையைப் பொறுத்தே இருக்கும். £1000 வருமானமுள்ள ஒரு நாட்டில் எவ்வளவு சேமிக்கப்படுமென்பது பல்வேறு பொருள்களைப் பொறுத்திருக்கும். உதாரணமாக இது எத்தனை நபர்கள் அவ் வருமானத்தைப் பகிர்ந்து கொள்ளுகின்றனரென்பதையும் எதிர்நோக்கி யிருக்கும். இன்றைய விலைகளில், இவ்வருமானந்தான் நாட்டு மக்களனைவருக்கும் பகிர்ந்து கொள்ளப்பட வேண்டுமென்றுல் நாம் கிட்டத்தட்ட பட்டினி நிலையில் இருப்போமே தவிர, யாதொன்றையும் சேமிக்க இயலாது. மேலும், குடும்பத்திலுள்ள குழந்தைகளின் எண்ணிக்கை, வருமானங்களின் பகிர்வில் உள்ள சமன்பாடு அல்லது சமன்கேடு இவைகளும் சேமிப்பு அளவைப் பாதிப்பனவாகும்.

விலையுயர்ந்த நுகர்ச்சிச் சாதனங்களும் இதைப் பாதிப்பன வாகும். உதாரணமாக, மோட்டார்காரே கண்டுபிடிக்கப் பட்டிருக்காவிட்டால் இன்றைய நிலையில் சேமிப்பு ஏராளமாக இருக்கும். மற்ருெருபுறம், ஆயுள் காப்புறுதி (life insurance) பங்கு செலுத்தும் ஓய்வுச் சம்பளத் திட்டம் (contributory pension plans) போன்றவைகள் மொத்த சேமிப்பை அதிகரிப்பனவாகும்.[1] சேமிப்புத் தொகைகளுக்குக் கிடைக்கப்பெறும் வட்டிவீதமும் வட்டி வீதத்தினுல் ஏற்படுகின்ற விளைவு குறைவாகவே இருந்த போதிலும்—ஓரளவு வட்டி வீதத்தைப் பாதிப்பதாகும். சில நேரங் களில் அதிக அளவு வட்டிவீதம் உண்மையிலேயே அதிக அளவு சேமிப்பிற்குப் பதிலாக குறைந்த அளவு சேமிப்பையே உண்டு பண்ணுகிறது. உதாரணமாக வட்டிவீதங்களின் நிரந்தரமான அதிகரிப்பான ஆயுள் காப்புறுதி வட்டங்களின் (life insurance premiums) கட்டணங்களைக் குறைவாகச் செய்யும். இந்த ஆயுள் காப்புறுதி வட்டங்கள் வயதானவர்கள் தங்களது அந்திய காலத்தில் ஒரு தொகையை வைத்துக்கொண்டு காலந் தள்ளப் பயன்படுகின்றன. இரண்டு விதங்களிலும், ஆயுள் காப்புறுதிச் சீட்டுகளால் தங்களது தள்ளாத காலத்திற்கு வேண்டிய பணத்தைத் தேடுபவர்கள், இருவகையாலும் குறைந்த அளவு சேமிப்பையே செய்கின்றனர். பொதுவாக, மற்றச் சூழ் நிலைகளத்தனையும் மாருதிருக்குமானுல், குறைந்த அளவு வட்டி யினுல் தூண்டப்படுகிற சேமிப்பு அளவை (volume of savings) விட அதிக அளவு வட்டியினுல் தூண்டப்படும் சேமிப்பு அளவே அதிகமாகவிருக்கும்.

ஒவ்வோர் ஆண்டிலும் சேமிப்பு அளவில் மாற்றம் ஏற்படு வதற்கு மேற்சொன்ன காரணிகள் எவையும் பொறுப்பல்ல. பொதுவான சிக்கன முறையோ (general thriftiness), மக்கள் தொகையின் அளவோ (size of the population), சராசரியான குடும்பத்தின் அளவோ, மோட்டார்காரின் மீதுள்ள விருப்பமோ, ஒவ்வோர் ஆண்டிலும் மாறிக்கொண் டிருப்பதில்லை. எந்த ஆண் டிலும், பொதுமக்கள் எவ்வளவு அளவு அதன் வருமானத்தைச் சேமித்துவைக்க இயலுமென்பதை நிர்ணயிக்கும் சக்திவாய்ந்த காரணியாக (dominant factor) இருப்பது அந்த ஆண்டின் வருமா னத்தின் அளவுதான். அதிக அளவு வருமான மிருந்தால் அதிக அளவு சேமிக்கப்படும். மொத்த வருமானம் குறையும் போது, சேமிப்பும் குறையும். இவ்வத்தியாயத்தின் ஆரம்பப் பகுதிகளில் விளக்கியுள்ளபடி, சேமிப்பு, முதலீடு ஆகிய இவைகளுக்குள்ள

[1] இம்மாதிரியான நிதிகளிலிருந்து வெளியே எடுக்கப்பட்டுவிடும் தொகையை விட, உட்செலுத்தும் தொகை அதிகமாக இருக்கின்ற வரையில்.

தொடர்பினால் (relationship) தான், நாட்டின் வருமான அளவில் மாறுதல்கள் ஏற்படுகின்றன—அதாவது சேமிப்பின் அளவானது (volume of saving) வாணிபச் சகடத்தின் விளைவாகுமே (consequence) தவிர அதன் காரணமல்ல.

எனினும், நாம் சேமிப்பை ஒரு தற்செயலான நிகழ்ச்சி என்று தள்ளிவிட முடியாது. எந்தச் சமயத்திலும் சேமிக்கப்படுகின்ற சேமிப்பின் அளவு (volume of saving) இரண்டு காரணிகளைப் (factors) பொறுத்தது. முதலாவது காரணி, பொதுமக்களுடைய சேமிப்பு நாட்டமாகும் (propensity to consume). இரண்டாவதாகவுள்ள காரணி அவர்களின் வருமானத்தின் அளவாகும் (size of income). £1000 மில்லியன் வருமானத்தில் £100 மில்லியன் சேமிக்கலாமென்பதையும், £2000 மில்லியன் வருமானத்தில் £220 மில்லியன் சேமிக்கலாமென்பதையும், £4000 மில்லியனில் £500 மில்லியன் சேமிக்கலாமென்பதையும்—இதுபோன்ற சேமிப்பு நிர்ணயம் செய்வது இச்சேமிப்புநாட்டமே(propensity to consume) என்று நாம் கூறலாம். இச் சேமிப்பு நிர்ணயம் தனி நபர்களின் ஏராள முடிவுகளின் தொகுப்பை (aggregate) பொறுத்தேயுள்ளது. எனினும் பொதுமக்களின் வருமானத்தின் அளவு (size of the public's income) வாணிபத்தின் நிலையைப் பொறுத்தே யிருக்கும்—இந்தவகையில் பார்த்தால் சேமிப்பின் அளவும் (volume of saving) ஓர் விளைவே தவிர (resultant) மூல காரணியல்ல.

தற்போது முதலீட்டைப் பற்றி ஆராய்வோம். அதன் அளவைத் தீர்மானிப்பது எது என்று ஆராய்வோம். முதலீடு ஒன்றில் ஈடுபடலாமா கூடாதா என்று சிந்தனை செய்துகொண்டுள்ள ஒரு வியாபாரிக்கு முடிவு செய்வது எது? அவர் மனத்திலுள்ள தீர்மானமான கேள்வி அம் முதலீடு இலாபந்தரவல்லதா அல்லது நஷ்டந்தரவல்லதா என்பதுதான். முதலீடு அளிக்கின்ற பயனுக்கும் முதலீட்டிற்கான தொகைக்குமுள்ள வித்தியாசமே இலாபத்தைக் குறிக்கும். முதலீடானது அதன் பயனாகிய பணத்தை எதிர்காலத்தில்தான் கொண்டு வருகிறது. முதலீட்டின் முக்கியமான பண்புகளில் இது ஒன்றாகும். எனவே, முதலீடு என்றால், விளக்கத்தின்படி, நெடுவாழ்வுப் பண்டங்களைச் (durable goods) சிருட்டித்தல் என்பது தெளிவாகின்றது. ஒருவர் வீடுகட்டும்போது, பல ஆண்டு நீண்ட காலத்தில் அது தரும் பணத்தைக் கணக்கிட்டுப் பார்ப்பார்.—நிச்சயமாக,காலம் நெடிதாகச் செல்லச் செல்ல இவ்வுத்தேசமும் பொய்த்துப் போகக்கூடும். மேலும், இருபதாண்டுகட்குப் பின்னர் ஈட்டக்கூடிய இலாபம் தெளிவாக இவ்வளவு என்று நமக்குத் தெரிகிறதென்று வைத்துக்கொள்வோம்.

எனினும் வணிகர்களின் மதிப்பீடு (estimate) காலத்திற்கேற்ப வெகுவாக வேறுபடும். தற்போது மந்தம் (depression) உள்ள தென்று வைத்துக்கொள்வோம். இந்தக் காலத்தில் வீடுகளுக்குத் தேவை (demand for houses) இருக்காது. வீடுகட்டுவோர் இந்த நிலைமையால் தாங்கள் வீடு கட்டுவதைக் குறைத்துக்கொள்வர். மந்தமானது அடுத்த 25 ஆண்டுகள் அல்லது இன்னும் சற்று நீண்ட காலத்திற்கு வீடுகளுக்கான தேவையில் யாதொரு மாற்றத் தையும் ஏற்படுத்த இயலாதெனினும், தற்போதுள்ள சூழ்நிலையால் வீடுகட்டுவோர் வீடு கட்டுவதை நிறுத்தி வைப்பதைத் தவிர்க்க மாட்டார்கள். எனவே, முதலீடென்பது எதிர்காலத்தைப் பொறுத்த தென்றும், அது தற்போதைய சூழ்நிலைகளால் பாதிக்கப் படுகிற தென்பதும் தெளிவாகின்றது. மேலும் முதலீட்டின் அளவை உண்மையாகவும் கற்பனையாகவும் பாதிக்கக்கூடிய எல்லா வகை யான வெளிச் சக்திகளும் (outside influences) உள்ளன. ஒரு புதிய கண்டுபிடிப்பு—ரெயில்வேக்கள் சிறப்பான உதாரணமாகும். —ஒரு புதிய எதிர்பாராத முதலீட்டுத் துறையை ஏற்படுத்தக்கூடும். எனினும் பொதுவாக (முதலீட்டிலிருந்து வரும் சரியான இலா பத்தின் மீதல்லாமல் வணிகரின் மதிப்பீட்டின் அடிப்படையிலுள்ள இலாபத்தின்) முக்கிய சக்தி (chief iufluence), தற்போதுள்ள பொதுவான தேவையின் நிலை (the state of general demand at present) யாகும். இதன் காரணமாகத்தான், மந்தத்தின்போது, அது எதனுல் ஏற்பட்டபோதிலும், முதலீட்டின் அளவு குறைதல் என்பது மட்டும் மந்தத்துடன் தொடர்ந்து நிகழுகின்றது.

முதலீட்டில் வரும் இலாபத்தைப்பற்றி இதுவரையில் பார்த் தோம். முதலீட்டின் இலாபத்தை நிர்ணயிக்கக்கூடிய அதன் வருங்கால (Prospective) விளைவுடன் சேர்ந்துள்ள மற்றென்று, அதன் அடக்க விலையாகும் (Cost). அடக்க விலையென்பது, நெடு வாழ்வுப் பண்டத்தை உற்பத்தி செய்வதற்கான தொழிலாளர், பொருள்கள் ஆகியவற்றின் செலவாகும். உதாரணமாக, கட்டிடத் தொழிலில் கூலிகள் மிக அதிகமாக உயர்ந்தும், செங்கல், மரம், கண்ணுடி போன்றவைகளும் விலையேறியும் இருந்தால், வீடு கட்டுவதில் கிடைக்கக்கூடிய இலாபம் (Future profit) கணிசமாகக் குறையும். முதலுக்குத் தக்கவாறு விளைவை எதிர் பார்க்கும் எத் தொழிலின் செலவிலும் (Cost) மிக முக்கியமான இனம், கடன் வாங்கிய முதலுக்கு அளிக்கப்படும் வட்டி வீதமாகும் (Rate of interest)[1]. தனது முதலீட்டில் இலாபம்

1 பெருவாரியான முதலீடுகள் கடன் வாங்கியே செய்யப்படுகின்றன ஏற்கெனவே சேமித்து வைத்திருந்த பணத்தால் (accumulated funds அல்லது முதலீடு செய்பவர்களின் நடப்புச் சேமிப்புக்களால் (current savings)

வருமா என்று கணக்கிடும் வணிகரொருவர், அம் முதலீட்டைச் சிருட்டிக்க தான் கடன்வாங்கிய முதலுக்குண்டான வட்டிக்கு மேலாக அம் முதலீடு இலாபமளிக்குமா என்று ஆராய்வார். வட்டி வீதம் குறைவாக இருக்குமேயானல் முதலீட்டில் வரும் இலாபமும் அதிகமாக இருக்கும். இது மிகவும் முக்கியம் வாய்ந்த, இன்றி யமையாத உண்மையாகும். இங்கிலாந்தில், பெரும்பாலும் வட்டி வீதங்கள் 3 சதவீதத்திற்குக் குறைந்தோ அல்லது 7 சதவீதத்திற் ருதிகமாகவோ இருப்பதில்லை. 3 சத வீதத்திற்கும் 7 சத வீதத் திற்குமிடையே மிக அதிகமான வித்தியாசமுள்ளது. உதாரணமாக, ஒரு வீட்டைக் கட்டுவதற்கான செலவு £1300 என்ருல், வீடு கட்டுகின்றவர் அத் தொகையை 7 சதவீத வட்டிக்குக் கடன் வாங்கியிருந்தால்,[1] அவ் வீட்டின் வாடகை 35 ஷில்லிங்காக இருக்கவேண்டும். அம் முதல் 3 சதவீத வட்டிக்கு வாங்கப் பட்டிருந்தால் வாடகை 15 ஷில்லிங்காகக் குறைந்து இருக்கலாம். அரசாங்கமோ அல்லது உள்ளாட்சி மன்றங்களோ (Local authorities) வீடு கட்டுவதற்கு 2½ சதவீத வட்டிக்குக் கடனைப் பெற இயலும்போது (இவ்வளவு குறைந்த வட்டி வீதத்தில் அவை களால்தான் கடன் வாங்க இயலும்) £ 1300 செலவில் கட்டப்பட்ட ஒரு வீட்டின் வார வாடகை (Weekly rent) 12s 6d. எனவே, வீடு களின் தேவை, கடன் வாங்கிய தொகைக்கான வட்டிவீதத்தைப் பொறுத்துள்ளது. மற்ற வகை முதலீடுகளைப் பொறுத்த வகை யிலும், இது உண்மையாக இருக்கும். உதாரணமாக, நாட்டி லுள்ள ரெயில்வேக்களை மின்சாரத்தினல் இயக்குவதற்கான திட்டம், அதில் செலவாகும் முதலுக்கான (கடன் வாங்கிய) வட்டி வீதத்தைப் பொறுத்திருக்கும். ஒரு புதிய தொழிற்சாலையை ஏற் படுத்தும் விருப்பம், அத் தொழிற்சாலையில் உற்பத்தியாகக்கூடிய பொருள்களால் வரக்கூடிய இலாபம், அத் தொழிற்சாலையை ஏற் படுத்துவதற்கான மூலதனத்திற்குக் கொடுக்கவேண்டிய வட்டியை விட அதிகமாக இருக்குமா அல்லது குறைவாக இருக்குமா என் பதைப் பொறுத்திருக்கும்.

---

முதலீடு செய்யப்பட்ட போதிலும், அம் முதலீட்டில் வரும் விளைவை, அம் முதலீட்டை வெளியில் வட்டிக்குக் கடன் கொடுத்தால் எவ்வளவு வட்டி வருமோ அதனுடன் ஒப்பிட்டுப் பார்க்கவேண்டும். எனவே வாங்கிய பணம், சேமித்து வைத்திருந்த பணம் ஆகிய இவ் விரண்டுமே ஒன்ருகத்தானிருக்கின்றன. சேமித்து வைக்கப்பட்ட பணம் இதுகாறும் எவ்வளவு வட்டி பெற்றதோ அல்லது பெற இயலுமோ அவ்வட்டி கைவிடப்பட வேண்டும். இவ்விரண்டிலும், வட்டிவீதம் இன்றியமையாததாகக் கணக்கிடப்படும்.

1 இப் பத்தியில் குறிக்கப்பட்டுள்ள எண்கள் தூய வாடகையைக் (pure rent) குறிப்பதாகும். வாடகையாகப் பெறக்கூடிய தொகை நடைமுறையில் அதி கரித்தே இருக்கும். பழுது பார்த்தல், தேய்மானம் ஆகியவைகளுக்கான செலவு களும் இதனுடன் சேர்த்து வசூலிக்கப்படுவதால் இவ்வாடகை அதிகரித்தே யிருக்கும்.

எனவே முதலீட்டின் அளவைத் (volume of investment) தீர்மானிக்கும் முக்கிய காரணி (factor) வட்டி வீதமேயாகும். எந்த ஒரு குறிப்பிட்ட சந்தர்ப்பத்திலும், வட்டி வீதம் குறைந்தால், அது முதலீட்டின் அளவை அதிகரிக்கும்; வட்டிவீதம் அதிகரித்தால், முதலீட்டின் அளவு குறையும். ஆனால், வட்டி வீதத்தைக் கையாளுவதன் மூலம் நாம் முதலீட்டின் அளவைத் (volume of investment) தீர்மானிக்கலாமென்று கூறிவிட இயலாது. இப் பிரச்சினையை மற்ற நிகழ்ச்சிகளும் பாதிக்கும். உதாரணமாக, வியாபாரி வட்டி வீதத்தை நடைமுறையில் தன்னுடைய உத்தேச முதலீட்டிலிருந்து வரக்கூடிய விளைவோடு ஒப்பிட்டுப் பார்ப்பதில்லை. தான் மதிப்பீடு செய்கின்ற உத்தேச விளைவோடு (return) தான் ஒப்பிட்டுப் பார்க்கின்றார். நாடு சில சமயங்களில் கொடூரமான மந்தத்தால் பாதிக்கப்படும். இச் சமயங்களில் இலாபங்களைவிட நஷ்டங்களே அதிகமாக இருக்கும். வணிகர்கள் எந்த வகை முதலீடும் இலாபந்தரக் கூடியதில்லை என்னும் முடிவுக்கு வருவார்கள். இந்தச் சூழ்நிலைகளில், கடன் வாங்கிய பணத்திற்கு வட்டி கட்டும் நிலைமை போக, தாங்கள் கடன் வாங்கிய பணத்தைப் பயன்படுத்துவதற்கு அவர்களுக்கு ஏதாவது ஊதியம் கொடுக்கப்பட வேண்டியிருக்கும். மேலும், முதலீடுகளில் கிடைக்கக்கூடிய நிலையில்லாமலிருந்தாலும், கணிசமான அளவிற்கே இருக்கும். ஒரு குறிப்பிட்ட முதலீடு சமாதான காலத்தில் 8 சதவீத விளைவு தருமென்றும் சண்டைக் காலத்தில் யாதொரு பயனையும் தராதென்றும் மதிப்பிடப்படுகிறது. போர் ஏற்படுவதற்கான அறிகுறிகள் தோன்றினால்கூட, வியாபாரி ஒருவர் 4 சதவீதத்திற்கும் குறைவான வட்டி வீதத்தில் கடன் வாங்குவதற்கியலும். மற்ற காலங்களில் இதற்கு நேர்மாறாக இருக்கும்; இக் காலங்களில் நாடு அதிக சுபிட்சமாக இருக்கும்; முதலீட்டுத் திட்டங்களிலிருந்தும் (investment projects) ஏராளமான இலாபம் காணப்படும்; எதிர்காலம் நிச்சயமாகவும் பத்திரமாகவும் இருக்கும். இவ்வாறிருப்பதால் வியாபாரி தான் கடனாக வாங்கும் முதலுக்கு எவ்வளவு வட்டி வேண்டுமானாலும் கொடுப்பதற்குத் தயாராக இருப்பான். கடன் வாங்கும் தொகைக்கு வட்டி வீதத்தை நாம் மாற்றியமைத்துக் கொள்ளுதல் இயலுமானால், எவ்வளவு அளவிற்கு வேண்டுமானாலும், முதலீட்டளவை நமது விருப்பப்படி கையாளலாமென்பது ஏட்டளவில் உண்மையாக இருக்கக்கூடும். ஆனால் நடைமுறையில் வட்டி வீதத்தைக் கையாளுவதற்கு மட்டுமே மிகவும் சிறப்பான திறமை (இதனை அடுத்த அத்தியாயத்தில் ஆராயலாம்.) வேண்டுமென்பதில்லை. 20 சதவீதம் கூடுதலாகவோ, 20 சதவீதம் குறைத்தோ அதனை மாற்றியமைப்பதற்கும் திறமை வேண்டும்.

எனவே, கீழ்க்கண்ட முடிவுக்கு நாம் வந்துள்ளோம். சேமிப்பு அளவு (volume of savings) ஓரளவு சேமிப்பு நாட்டத்தைப் (propensity to save) பொறுத்தும், ஓரளவு நாட்டு வருமானத்தின் அளவைப் (size of the National income) பொறுத்துமிருக்கும்—அதாவது வாணிப நிலையைப் பொறுத்திருக்கும். முதலீட்டின் அளவு (volume of investment) ஓரளவு வாணிப நிலையைப் பொறுத்தும் ஓரளவு மற்றைய காரணிகளைப் (factors) பொறுத்துமிருக்கும். இக் காரணிகளில் கடன் வாங்கிய தொகைக்கு வாங்கப்படும் வட்டி வீதம் (rate of interest) மிகவும் முக்கியம் வாய்ந்ததாகும். வாணிப நிலையானது சேமிப்பு முதலீடு ஆகிய இவ்விரண்டிற்குமுள்ள தொடர்பைப் பொறுத்த தாகும். முதலில் ஓர் இக்கட்டான நிலையில் நாம் மாட்டிக் கொண்டதுபோல் தோன்றும். ஏனெனில் வாணிப நிலை (state of trade) காரணமாகவும் விளைவாகவும் தோன்றுகிறது. இவ்வாறுள்ள இணைந்த உறவினால்தான் (complex retationship) இக் கோட்பாட்டின் துணைகொண்டு வாணிபச் சகடத்திற்கு முழு விளக்கந்தர நம்மால் இயலுகிறது. வாணிபச் சகடத்தை விளக் கும் எந்த விளக்கமும் மூன்று உண்மைகளை (Facts) விளக்க வேண்டும். முதலாவது உண்மை, பணவீக்கமும் (inflation) பண வாட்டமும் (deflation) மாறி மாறி (alternate) வந்து கொண்டிருக்கும்—அதாவது ஒவ்வொன்றும் நன்றாக வளர்ந்து, பின்னர் மற்றொன்றை வளர்க்கும். இரண்டாவது உண்மை, இப்படி மாறி மாறி வருவது ஏறக்குறைய ஒரே இடைவேளைகளை யுடையதாக இருப்பதாகும். மூன்றாவது உண்மை, பூரிப்பு நிலையி லிருந்து (boom) மந்த நிலைக்குச் (slump) செல்லும்போது, மாற்றம் (transformation) வழக்கமாக கொடூரமாகவும் உடனடியாகவும் இருப்பதும், இதற்கு மாறாக மந்தநிலையின் அடிப்பகுதியிலிருந்து தோன்றும் மீட்சியானது மெதுவாகவும் சீராகவுமிருப்பதுவுமாகும்.

மீட்சியானது, மந்தத்தை நோக்கிச் செல்லும் நிலையிலிருந்து ஆரம்பிப்போம். ஏன் இந்த மாற்றம் (transformation) ஏற் படுகிற தென்பதையும் விரைவில் காண்போம். தற்சமயத்திற்கு இம்மாற்றம் ஏற்பட்டுவிட்டதென்றும், சேமிப்பு முதலீட்டைவிட அதிகரித்துள்ள தென்றதுமானதொரு எடுகோளின்மீது (assump tion) ஆரம்பிப்போம். இதன் விளைவாகப் பணத்தின் வட்ட ஓட் டத்தில் (circular flow) ஓர் இடைவெளி (gap) ஏற்படுகிறது; உற் பத்தி செய்யப்பட்ட பண்டங்கள், பணிகளை வாங்கப்படுவதற்கான தேவை குறைவாகவுள்ளது; நடவடிக்கையின் மட்டம் (level of activity) இதனால் குறைந்துபோய்க்கொண்டிருக்கிறது. இம் முறை ஏன் இவ்வாறு குவிதலாகக் (cumulatively) கொஞ்சகாலம்

சென்றுகொண்டிருக்கிறதென்பதையும் பிறகு இதற்கு நேர்மாறுகச் சென்று கொண்டிருக்கிறதென்பதையும் நாம் விளக்கவேண்டும். பணவாட்டமானது (depression) எவ்வாறு தன்னையே உட்கொள் கிறதென்பதை எளிதாகப் பார்த்துக்கொள்ளலாம். நாட்டில் வரு மானம் குறைந்தால் சேமிப்பு அளவும் குறையும். ஆனால், முத லீட்டின் அளவையும் (volume of investment) அது குறையச் செய்யும். ஏனெனில் பொருளாதார நடவடிக்கையில் குறைவு ஏற் படுதலானது முதலீட்டின் கவர்ச்சியையும் போக்கிவிடும். எனவே, சேமிப்பும் முதலீடும் ஒரே சமயத்தில் குறையும்; அதேசமயத்தில் அவைகளுக்கிடையேயுள்ள சமன்கேடு (disequilibrium) சற்றும் மறைவதில்லை. நடவடிக்கையின் மட்டம் (level of activity) வரம் பின்றிக் குறையும். ஆனால், வருமானத்தில் இன்னும் இறக்கம் ஏற்பட்டால், சேமிப்பில் வேக வேகமாக இறக்கம் உண்டாகும். இதனால், ஒரு தனி மனிதனே அல்லது சமுதாயமோ செல்வராக இருக்கும்போது, அம்மனிதன் அல்லது அச்சமுதாயம் அதிகமான அளவு சேமிப்பை உண்டுபண்ணுவதோடு தன்னுடைய வருமானத் தின் பெரும் பகுதியைச் சேமிக்கின்றனர் என்பது தெளிவாகின்றது. £ 5000 வருமானமாக இருக்கும்போது சேமிப்பு £ 500 என்றால் £ 4000 வருமானமாக இருக்கும்போது £ 400க்கும் குறைவாகவே யிருக்கும். வருமானத்தின் இறக்கம் அதிகமாக இருந்தால் சேமிப்பும் வேகமாகக் குறையும். 'அவசிய' சேமிப்புக்கள் என்று குறிப்பிட்ட சேமிப்பு எல்லையை அடைவதற்கு மக்கள் கடுமையான தியாகம் (heavy sacrifice) செய்ய வேண்டியதாக இருக்கிறது. ஆனால், மந்தம் அதிகரிக்கும் போது, தங்களது பழைய சேமிப்பு களைப் பயன்படுத்தும் மக்களின் 'சேமிப்பிற்கு முரணான தன்மை' (unsaving) இதனையும் விஞ்சும்படியாகலாம். மற்றொருபுறம், முத லீட்டில் குறைதலானது மந்தம் வளர வளர, மெதுவாகக் குறைந்து கொண்டே செல்லும். 'பாங்குப் பீதி'(Bank panic) அல்லது பண நெருக்கடி(Currency crisis) இவைகளால் வணிகர்களுடைய பயம் அதிகரித்தல் போன்ற விதிவிலக்கான (exceptional) நிகழ்ச்சிகள் நடக்காதவரையில் மேற்சொன்னவாறு முதலீடு குறைதல் மெது வாக நடந்துகொண்டே யிருக்கும். சுபிட்ச காலங்களில் வணிகர் கள் கச்சாப் பொருள்களின் சரக்கிருப்புகளை(stocks) குவித்துக் கொண்டேயிருப்பார்கள். மந்த காலத்தின் ஆரம்பப் பகுதியில் இச் சரக்கிருப்புகள் சீராகக் கலைக்கப்படுதலே(liquidation)'முதலீடு செய்யப்படாமைக்கு' (dis-investment) முக்கியக் காரணமாகும். சரக்கிருப்புத் தீர்ந்தவுடன் (ஏனெனில் சரக்கிருப்புகள் வாணிபத் திற்குக் குறைந்த அளவு எவ்வளவு தேவையோ அந்த அளவிற்கே வைத்துக்கொள்ளப்படுகின்றன.) முதலீடு குறைவதற்கான ஒரு காரணம், விலகிவிடுகிறது. மேலும் சில சமயங்களில் சில குறிப்

பிட்ட முதலீட்டுத் திட்டங்களுக்குக் குறிப்பாக இயந்திரங்களைப் புதிப்பித்தல் நிதி ஏற்கெனவே சேர்த்து வைக்கப்பட்டிருக்குமாதலால் அவைகள் எப்படியும் அமலாக்கப்படும். அல்லது, மந்தமானது (depression) நாட்டை பொதுப் பணித் திட்டத்தை (programme of public works)எடுத்துச்செயற்படுத்த வழி செய்யும். எனவே, நாட்டு வருமானம் குறைந்துகொண்டே செல்லுமானால், சேமிப்பு, முதலீட்டை விட வேகமாகக் குறைவடையும் நிலை வந்து சேரும். ஏனெனில், நெடுவாழ்வுப் பண்டங்களின் உற்பத்தி, முற்றிலும் இல்லாமற் போகாது; ஆனால் நாட்டின் மொத்தச் சேமிப்பு முற்றிலும் மறைந்து போகக்கூடும். சமநிலையை மீண்டும் கொண்டு வருவதற்கு எந்த அளவு நாட்டின் வருமானம் குறைய வேண்டுமென்பது (அதாவது எந்த அளவில் வேலையின்மை அதிகரிக்க வேண்டுமென்பது) பொதுப் பணித் திட்ட மூலம் (public works programme) முதலீட்டை அதிகரிக்கச் செய்வதைப் பொறுத்தும் அல்லது வட்டி வீதங்களைக் குறைத்தலைப் பொறுத்தும், வணிகர்கள் பீதி யடைதலைப் போக்குவதைப் பொறுத்தும் அல்லது இன்னும் பல வழிகளையும் பொறுத்திருக்கும்.

இந்தப் போக்கு மாற்றியமைக்கப்பட்டதும், சேமிப்பும் முதலீடும் ஒன்றை ஒன்று மேல்நோக்கித் துரத்திச் செல்லும். முதலீட்டின் ஒவ்வோர் அதிகரிப்பும் நாட்டு வருமானத்தை (National income) அதிகரித்து, வேலையின்மையைக் குறையச் செய்யும். இவ்வாறு சிருட்டிக்கப்பட்ட அதிகப்படியான வருமானங்களின் ஒரு பகுதி சேமிக்கப்படும்; ஆனால் ஒரு பகுதி செலவழிக்கப்படும்; இவ்வாறு கூடுதலான நுகர்ச்சி புதிய முதலீடுகளை இலாபகரமானதாகச் செய்யும். நிறைய செலவழித்து நிறைய சேமிக்கவும் இயலுகின்ற ஒரு மகிழ்ச்சியான நிலையை நாடு எய்தும். அதிகரித்து வரும் முதலீட்டின் அளவு (increasing volume of investment) பாங்குகள் அதிகப்படியான பண அளவைச் (increasing voulme of money) சிருட்டிக்கும் நிலையை உண்டுபண்ணும். இவ்வாறு பணம் சிருட்டிப்பதில் கண்டிப்பான கணியக் கட்டுப்பாடு (rigid quantity limitation) ஏதேனும் இருக்குமானால், பாங்குகள் அக் கட்டுப்பாட்டினை மீறி நடக்கும்போது, இம் முறை முழுதுமே முடிவடையக் கூடும். இந்நிலையில் புதிய கடன்கள் மறுக்கப்படும்; வட்டி வீதம் அதிகரிக்கும்; முதலீட்டினளவு ஒடுக்கப்படும்.

வாணிபச் சகடத்தின் மேலெழும்பும் தோற்றத்திற்கு நெகிழ்வற்ற பண அளிப்பு (inelastic supply of money) முற்றுப்புள்ளி வைக்கக்கூடும். அப்படியும் மீறி நெடுந்தூரம் சகடம் மேல்நோக்கிச் செல்லுமாயின், தன் பாரம் தாங்காமலேயே மேல்நோக்

கிச் செல்லும் போக்கு முறிவடையும். வேலையிலமர்த்தப்படாத் தொழில், மூலதனம் ஆகிய சாதனங்களைப் பயன்படுத்துகிற வரையில் அதிகமாக நுகரவும் (consume) அதிகமாகச் செலவழிக்கவும் கூடும். இச் சாதனங்களை மீண்டும் வேலைக்கமர்த்திக் கொள்வதானது (re-employment) நாட்டு வருமானத்தை (பண வடிவிலும், உண்மையான கருத்திலும்) அதிகரிக்கச் செய்யும். ஆனால் 'வேலை நிறைவு' (full employment) நிலையை எய்தியதும், மேற்சொன்னவாறு அதிகமாக நுகரவும் அதிகமாகச் செலவழிக்கவும் இயலாது. இந்நிலையில் முதலீடு சேமிப்பைவிட அதிகரித்துக் கொண்டேயிருக்குமானால்—அதாவது பணமானது அதிக அளவில் அதன் வட்ட ஓட்டத்திலிருந்து (circular flow) எடுபடுவதைவிட அதிக அளவு உட்செலுத்தப்படும்போது, அதிகமான அளவு பணம், மேலும் அதிகரிக்கப்பட இயலாத ஒரு குறிப்பிட்ட அளவு பண்டங்களுக்குச் செலவழிக்கப்படுகிறது. இதனால் விலைகள் ஏறுகின்றன. பொதுமக்கள் இவ் விலை ஏற்றத்தினால் தங்களது நுகர்ச்சியைக் கட்டாயமாகக் குறைத்துக் கொள்வதால்தான் மேற்கொண்டு முதலீடு செய்வது சாத்தியமாகிறது. முதலில், இதன் விளைவுகள் பூரிப்பு நிலையை (boom) ஆழமாகக் கொண்டுவரும். முதலாவதாக, விலைகளின் அதிகரிப்பால் ஆட்குறைப்பு (retrenchment) ஏற்படுவதால் பொது மக்களின் சேமிப்புக் குறையும். இதனால் சேமிப்பிற்கும் முதலீட்டிற்குமுள்ள இடைவெளி அதிகமாகும். இரண்டாவதாக, விலைகளின் உயர்வு எல்லா வகையான வணிகர்களின் இலாபங்களையும் அதிகரிக்கும்படி செய்வதால், முதலீட்டிற்கு வெகு நிச்சயமான ஊக்கியான (stimulus) சுபிட்சத்தின் தோற்றத்தை இன்னும் அதிகரிக்கும். மூன்றாவதாக, நடப்புப் பண்டங்கள் குறைந்த அளவே விற்ற போதிலும், அவைகள் அதிக விலைகளுக்கே விற்கப்படுகின்றன. நடப்புப் பண்டங்களை உற்பத்தி செய்யும் தொழில்களிலிருந்து கிடைக்கும் பண விற்றுமுதலும் (Money turnover) எப்பொழுதையும் விட அதிகமாக இருக்கும். சில சமயத்தில் அவைகள் அதிக இலாபகரமாகவும் காணப்பட்டன. இதே விளைவு நடப்புப் பண்டங்களை உற்பத்தி செய்ய உதவும் இயந்திரங்கள் இன்னும் மற்ற நெடுவாழ்வுப் பண்டங்கள் ஆகியவற்றை உற்பத்தி செய்யும் தொழிலிலும் இருக்கும். இவ்வளர்ச்சிக்கான இந்த இன்பத் தோட்டம் (paradise) பொய்யானதே! ஏனெனில், நடப்புப் பண்டங்களின் விற்பனை அளவு குறைய ஆரம்பித்ததும், இவைகளை உற்பத்தி செய்ய உதவும் இயந்திரங்கள் இன்னும் மற்ற நெடுவாழ்வுப் பண்டங்களுக்கான தேவையும் குறையும். முதலீட்டு வேலியேற்றமானது (the rising tide of investment) பொதுமக்களைத் தங்களின் நுகர்ச்சியைக் (consumption)

குறைத்துக் கொள்ளும்படி கட்டாயப்படுத்துதல், நுனியேறி அடி வெட்டுதலை யொக்கும்.

பண வாட்டத்தைப் போலவே (deflation) பண வீக்கமும் (inflation) ஒரு சமயத்தில் செறிந்து (intensify) காணப்படும். ஆனால், பிற்பகுதிகளில் சில சக்திகள் இதன் எதிர் வினையை உண்டுபண்ணி விடுகின்றன. மேலும் இவ்வெதிர் வினைவு ஒரு சீரான வளர்ச்சியுடையது; தற்செயலாக ஏற்படுவதில்லை. எனவே, பல்வேறு விதமான சந்தர்ப்பங்களிலும் அது ஏறக்குறைய ஒரே நேரத்தைத்தான் எடுத்துக்கொள்கிறது. ஆக, வாணிபச் சகடத்தின் இரண்டு பண்புகளும் திருப்திகரமாக விளங்கப்பட்டுவிட்டது. மூன்றுவது பண்பு—அதாவது உச்சியில் (top) எதிரிடையான நிலையை அடையும்போது அந்நிலை மிக வேகமாகவும், அடிப்பாகத்தில் (bottom)எதிரிடையான நிலையை அடையும்போது (reverse) மிக மெதுவாகவும் அடையும் போக்கை—வாணிபச் சகடத்தின் போக்குகளில் (movements) முக்கியமான அங்கம் வகிப்பது முதலீட்டின் அளவே என்பதையும் இந்த அளவு வணிகர்களின் உளப்பாங்கை(psychology) பொறுத்ததென்பதையும் மனத்தில் கொண்டால், நன்கு விளங்கும். மக்கள் திரள் சீக்கிரமே பீதியடையும் தன்மை வாய்ந்தது; இப் பீதி வேகமாகவும் பரவும்; நம்பிக்கையை (confidence) மீண்டும் வரவழைப்பது மெதுவானதும் கடினமானதுமான காரியமாகும். மேலும், பொருள்களின் (goods), அளவு மூலப் பொருள்களின் (materials)அளவு ஆகிய இவ்விரண்டும் முக்கியமான பங்கு பெறுகின்றன. பூரிப்பின் (boom) உச்சக் கட்டத்தில் வணிகர்கள் ஏராளமாக தாங்கள் அதிக விலைகொடுத்து வாங்கிய அதிகச் சரக்கிருப்புகளை வைத்திருப்பார்கள். எந்தக் காரணத்தாலாவது அவர்கள் பீதியடைந்தால் அவர்கள் வேகமாகவும் தீவிரமாகவும் செயற்படுவர்; ஏனெனில் இதற்கு மாற்றுவழி (alternative) அதிக நஷ்டத்தை ஏற்க வேண்டிய தொன்றுதான். இதற்கு மாருன நிலையான மந்தத்தின் அடிப்பாகத்தில் (bottom of the slump), பொருள்களின் விலைகள் ஏறுவதற்கு முன்னரே சரக்கிருப்புகளை அதிகமாக வாங்கி வைத்துக்கொள்வது சிறந்ததென்ற எண்ணம் தலைதூக்க ஆரம்பித்ததும், மிகத் திடமான நம்பிக்கையையுடைய வியாபாரியும் எச்சரிக்கையுடன் மெதுவாகவே சரக்கு அதிகமாக வாங்கி வைக்கும் செயலில் இறங்குவார். இதனல்தான், கச்சாப் பொருள் (raw material) அங்காடிகள் ஒரே இரவில் 'விற்பவர் அங்காடிகள்' (sellers markets) (அதாவது வாங்குதல் பிடிவாதமாக தொடர்ந்து நடப்பதால் விற்பவருடைய நிலைமை பாதுகாப்பாக இருக்கும் நிலைமை) 'வாங்குவோருடைய அங்காடிகளாக' (buyers market) மாறுகிறது. ஆனல்

இதற்கு எதிரான நிலைமையின் போக்கு மிக மெதுவாகவே நடக்கும். இந்த அங்காடிகளின் போக்கே, வணிகர்களின் நம்பிக்கை அல்லது நம்பிக்கையற்ற சூழ்நிலையை உருவாக்கும் சக்தி வாய்ந்த மூலப் பொருளாகவும், அச் சூழ்நிலைக்கான உளப் பாங்கான விளைவைத் தருவதாகவு முள்ளது. கடைசியாக, வாணிபச் சகடத்தின் மேல் நோக்கிச் செல்லும் போக்குப் பணக் குறைவினால் (shortage of money) தடைபடுகிறதெனில், இதுவும் நமது அனுபவத்தில் தெரிந்தவரை, உடனடியாக முன்னே வந்து நிற்கக்கூடியதாகும். சகடத்தின் மற்றொரு முனையில் (மந்தம்), பணக் கணியத்திற்கு (Quantity of money) ஏதாவது செல்வாக்கு இருக்குமேயானால், அது குறைவான வட்டி வீதத்தில் வணிகர்களுக்குக் கிடைப்பதனால்தான். இதனால், பயந்த சுபாவமுடைய வணிகர்கள் தங்கள் பயத்தைப் போக்கி முதலீடு செய்ய முன்வருவர். தண்ணீரைக் குடிக்கவரும் குதிரையைத் தடுத்து நிறுத்துவதற்கு உடனடியான அவசர நடவடிக்கை தேவை; அதனைக் கொண்டுவந்து நீரைக் குடிக்கச் செய்வதோ மிக மெதுவான காரியமாகும்.

இவ் வத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ள கோட்பாடு வாணிபச் சகடத்தின் வழக்கமான பண்பிற்கு ஒத்ததாக இருக்கிறது. அது கூறும் நடைமுறையான முடிவு (practical conclusion) இது தான். அதாவது, பொதுமக்கள் சேமிப்பு நாட்டம் (propensity to save) முதலீட்டளவு (volume of investment) இவ்விரண்டு காரணிகளும் (factors) ஒன்றை ஒன்று பாதித்தலினால்தான், ஆச்சரியப்படத்தக்க ஏற்றத் தாழ்வுகள் பொதுவான தேவை அளவில் (volume of general demand) வேலையின்மை (unemployment) விளைவுகளுடன் ஏற்படுகின்றன என்பது. சேமிப்பு நாட்டம்[1] என்பது ஒரு தலைமுறைக்கும் மற்றொரு தலைமுறைக்கும் மாறிக்கொண்டே செல்லும். அரசாங்கத்தின் கொள்கையாலும் அது மாறவல்லது (உதாரணமாக வருமானங்களின் பகிர்வை மாற்றியமைப்பதன் மூலம்). ஆனால் எந்த ஒரு வாணிபச் சகடத்திற்கும் நாம் இதனை மாறாத தொன்று என்றுதான் கொள்ள வேண்டும். எனவே, எந்த ஒரு குறிப்பிட்ட வாணிபச் சகடத்திற்கும் ஒழுங்குபடுத்தியாக (governing factor) உள்ளதும், வாணிபச் சகடத்தைக் கட்டுப்படுத்த அடக்கியாளப்பட வேண்டியதுமானது முதலீட்டினளவாகும். வாணிபநிலை (state of trade) யைத் தவிர்த்து, முதலீட்டின் அளவைப் பாதிக்கும் பல்வேறு சக்திகளில் மிக முக்கியமானவையென்று நான்கைத் தேர்ந்தெடுக்கலாம். அவை முதலீட்டிலிருந்து கிடைக்கப்பெறும் சரியான பலனைப்

1 சேமிப்பு நாட்டம் (Propensity to Consume) என்பதும் சேமிப்பு அளவு (Volume of Saving) என்பதும் ஒன்றல்ல.

பெரும்பாலும் தீர்மானிக்கக்கூடிய, விஞ்ஞானக் கண்டு பிடிப்புக்களின் அளிப்பு (the supply of scientific inventions) வாணிப நம்பிக்கையின் நிலை (இதுவே, எதிர்கால வாய்ப்பு மிகைப்படுத்தப் பட்டுள்ளதா அல்லது குறைபடுத்தப்பட்டுள்ளதா என்று தீர்மானிக்கும் காரணியாகும்); வட்டிவீதம் (எந்த விதமான எதிர்கால விளைவு போதுமானதென்பதைத் தீர்மானிக்கும்); அரசாங்கமே மேற்கொண்டிருக்கும் முதலீட்டினளவு (தனிப்பட்ட வணிகர்கள் பாதிக்கப்படுவது போன்று அரசாங்கம் ஆக் காரணங்களால் பாதிக்கப்படத் தேவையில்லை). மேற்சொன்ன நான்கினுள், வட்டிவீதம் ஒன்றே பண நிகழ்ச்சியாகும் (பணக் கொள்கைகளின் மூலம் இவைகளைக் கட்டுப்படுத்தலாம்).

கட்டுப்படுத்தக்கூடிய பொருளின் தன்மையைப்பற்றி இன்னுமொரு வார்த்தை கூறவேண்டும். சேமிப்பிற்கும் முதலீட்டிற்குமிடையே சமன்பாடு (equilibrium) இருக்க வேண்டியதின் அவசியத்தைப்பற்றி இவ்வத்தியாயத்தில் அதிகமாகச் சொல்லப் பட்டிருக்கிறது. சமன்பாடு நிலைதான் (position of equilibrium) இயன்ற அளவு நிலையான நிலை (stable position). ஏனெனில் அப்போதுதான் நாட்டு வருமானம் பணவீக்கம், பண வாட்டம் ஆகிய இவ்விரண்டினின்றும் விடுபட்டிருக்கும். இதனால் ஒரே ஒரு சமன்பாடு நிலைதான் இயலும் என்று பொருளல்ல; அல்லது எந்த சமன்பாடு நிலையும் திருப்திகரமாக இருக்குமென்றும் சொல்லிவிடமுடியாது. சேமிப்பும் முதலீடும் சமன்பாடாக உள்ள நிலையில் பிரமாண்டமான வேலையின்மை (gigantic mass of unemployment) ஏற்படலாம். உண்மையில், மேற்படி சமன்பாடு மந்தத்தின் நிலைத்த தன்மையையே (stability) காட்டுகிறது. இரண்டு போருக்குமிடையேயுள்ள பல பத்தாண்டுகளில் (decades) பல நாடுகள் வேலையின்மையை ஒரு குறிப்பிட்ட புள்ளிக்கப்பால் குறைப்பதற்கு மிகவும் கடினமாயிருப்பதையுணர்ந்தன—முதலீட்டிற்கென்னவோ ஒரு நிலையான (fixed)மட்டம்(level) இருப்பதைப் போலவும் அதற்குமேல் அதை அதிகரிப்பது இயலாத மாதிரியும் அவர்களுக்குத் தோன்றியது. மிகவும் திருப்திகரமாக உள்ள ஒரே ஒரு சமன்பாடு வேலை நிறைவில் ஏற்படும் சமன்பாடே (equilibrium of full employment). பணக் கைக்கோளின் (monetary policy) நோக்கமே அதுவாகத்தான் இருக்கவேண்டும்.

## போர்க்காலத்தில் பணம்
(Money in wartime)

போர்ப் பொருளாதாரமென்பது ஒரு பரந்த தலைப்பாகும். அதில் ஒரு மூலையைப் (corner)பற்றித்தான் நாம் ஆராய்ந்து கொண்டிருக்

கிறோம்—அதாவது போர்க் காலத்தில் பணம் புரியும் செயலைப் பற்றித்தான் ஆராயப் போகிறோம். இது ஒரு சிறு பகுதிதான். ஏனெனில் பணத்திற்கு மூலப் பொருள்களான விலை (price) மதிப்பு (value) ஆகியவைகள் போர்க்காலத்தில் துணைகாரணி களாகவே யுள்ளன. ஒரு நாடு தன் உயிருக்குப் போராடிக் கொண்டிருக்கும்போது 'இந்தப் பண்டம் இந்த விலை பொறுமா?' 'இந்த விலை கொடுக்க நமக்குக் கட்டுமா?' என்பது போன்ற கேள்விகளைக் கேட்டுக்கொண்டிருக்காது. நம்மால் எவ்விதத் திலும் 'இவ் விலையைக் கொடுக்க வியலுமா?' என்ற கேள்வியைத் தான் கேட்கும். பணம் அதிகப் பட்சம், முகாமுக்கு மனிதர்கள் மூலப் பொருள்கள் ஆகியவைகள் சம்பந்தமான முடிவுகளைக் கொண்ட புத்தக மூட்டைகளைச் சுமந்து செல்லும் பணியாள் போன்றேயுள்ளது. போர்க்காலத்தில் கைக்கொள்ளப்படும் நிதியக் கைக்கோளின் (financial policy) முக்கிய நோக்கம் நிதியின் அடிப்படைகளில் யாதொன்றையும் தீர்மானிக்காமலிருத்தலே என்று கூறப்படுகிறது. எப்போதும் எதற்கும் பணம் இருந்து கொண்டே யிருக்கவேண்டும்.

போர்க்காலத்தின் போதுள்ள பொருளாதாரப் பிரச்சினை யெல்லாம் சமுதாயத்தின் பெருமளவு சாதனங்களையெல்லாம் எவ்வாறு அரசாங்கத்தின் ஆளுகைக்குக் கொண்டுவருவது என் பதே. ஆண்கள், பெண்கள், மூலப்பொருள்கள், பொறிகள் இவை களத்தனையும் தாங்கள் ஈடுபட்டுள்ள சமாதான கால வேலைகளி லிருந்து விடுவிக்கப்பட்டு, போர்க் காரியங்களுக்குப் பயன்படுத்தப் படவேண்டும். போரின் தேவைகளுக்கோ எல்லை இருக்காது. ஐக்கிய அரசாங்கத்தின் (United Kingdom) கீழே கொடுக்கப் பட்டுள்ள புள்ளி விபரங்கள் கடைசி முழுஅமைதி ஆண்டாகிய (the last complete year of peace) 1938ஆம் ஆண்டின் மொத்த நாட்டு உற்பத்தி (total national output)யும் போர் முயற்சி கள் மும்முரமாக நடந்து கொண்டிருந்த 1943ஆம் ஆண்டில் எவ் வாறு இந்த உற்பத்தி பயன்படுத்தப்பட்டதென்பதையும் காட்டு கின்றன. இக் கணக்கு விபரங்கள் 1958ஆம் ஆண்டில் வாங்குந் திறனைப் (purchasing power) பெற்றிருந்த பவுண்டுகள் (£s) அடிப்படையிலேயே கொடுக்கப்பட்டுள்ளன. 1938—1943 ஆகிய ஆண்டுகளுக்கிடையே ஏற்பட்ட விலை உயர்வைப் பொருட்படுத்தா மல் 1938ஆம் ஆண்டு £ மதிப்பிலேயே இரு ஆண்டுகளின் புள்ளி விபரங்களும் கொடுக்கப்பட்டதற்குக் காரணம் எளிதாக இவ் விரண்டு ஆண்டுகளையும் ஒப்புநோக்க வேண்டுமென்பதற்காகத் தான்:

**ஐக்கிய அரசாங்கத்தின் (United Kingdom) 1938, 1943 ஆண்டுகளில் நாட்டு உற்பத்தி (National output)**

(மில்லியன் £ல்)

| | 1938 | 1943 | மாற்றம் (change) |
|---|---|---|---|
| நாட்டில் உற்பத்தியான உற்பத்தி (output produced at home) ... | 5,566 | 7,181 | + 1,615 |
| வெளிநாடுகளிலிருந்து பெற்ற வட்டி, இலாப ஈவுகள் (dividends) ... | 175 | 88 | — 87 |
| நாட்டின் மொத்த உற்பத்தி (Gross National output) ... | 5,741 | 7,269 | + 1,528 |
| வெளிநாடுகளிலிருந்து கடன் வாங்கியது ... | 70 | 496 | + 426 |
| கிடைக்கும் மொத்தச் சாதனங்கள் (Total available resources) ... | 5,811 | 7,765 | + 1,954 |
| நுகர்ச்சிக்கான செலவு (Expenditure on consumption) ... | 4,252 | 3,641 | — 611 |
| அரசாங்கத்தின் போர்ச் செலவுகள் ... | 336 | 3,552 | + 3,216 |
| அரசாங்கத்தின் மற்றச் செலவுகள் ... | 453 | 413 | — 40 |
| மூல தனத்தை நிருவகிக்கவும் அதிகரிக்கவும் ஒதுக்கப்பட்டுள்ள தொகை ... | 770 | 159 | — 611 |
| மொத்தச் செலவு ... | 5,811 | 7,765 | + 1,954 |

மேற்கண்ட புள்ளி விபரங்கள், சமாதானத்திற்கும் போருக்குமிடையே எவ்வளவு பெரிய அளவு இடமாற்றம் (transfer) சாதனங்களுக்கு (resources) ஏற்பட்டுள்ள தென்பதைச் சுட்டிக் காட்டுகின்றன. 1938ஆம் ஆண்டில் அரசாங்கத்தின் நுகர்ச்சிச் செலவு (consumption expenditure) சமுதாயத்தின்

மொத்தச் செலவில் (total expenditure of the community) 73 சதவீதமாகவும், போர்ச் செலவுகள் 6 சதவீதத்திற்குக் குறைவாகவுமிருந்தது. 1943ஆம் ஆண்டில் நுகர்ச்சியின்மீது செலவிடப்படும் விகிதமானது 47 சதவீதமாகக் குறைந்தது. ஆனால் போர்ச் செலவு 46 சதவீதமாக உயர்ந்தது. இவ்விரண்டு ஆண்டுகளில் போர்ச் செலவு—அதாவது போர்த் துறைக்குக் (war section) கொண்டு போகப்பட்ட பண்டங்கள், பணிகள் ஆகிய வகைகளின் பணமதிப்பு—£ 3,216 மில்லியனாக அதிகரித்தது. இந்தத் தொகைதான்—இன்னும் சரிநுட்பமாகச் சொல்லப்போனால் இத்தொகை குறிக்கின்ற பண்டங்களும் பணிகளும்—1943ஆம் ஆண்டின் உண்மையான 'போர்ச்செலவு' (cost of war) எனலாம். இச்செலவு சமாதான காலச்செலவில் 55 சதவீதமாகும்—அதாவது நாடு சமாதானக் காலத்தில் எல்லா நோக்கங்களுக்கும் பயன்படும் மூலப்பொருள், மனித சாதனங்களை (material and human resources) பாதிக்குமேல் போர்த்துறைக்குக் கொண்டு போய்ச் சேர்த்திருக்கின்றது. இந்தச் சாதனங்கள் எங்கிருந்து வந்தனவென்பதைக் கீழ்க்கண்ட புள்ளி விபரங்கள் மூலம் தெரியலாம்.

**1939—1945 ஆண்டுகளில் போர்ச் செலவு**

| | | (£ மில்லியனில்) | % |
|---|---|---|---|
| போரின் செலவு (cost of war) | ... | 3,216 | 100 |
| மேற்படி தொகை வருவிக்கப்பட்டவிதம்: உள்நாட்டில் அதிகரித்த உற்பத்தியின் மூலம் | ... | 1,615 | 50 |
| வெளிநாடுகளில் அதிகமாகக் கடன்வாங்கியதன் மூலம் | ... | 426 | 13¼ |
| நுகர்ச்சியைக் குறைத்ததன் மூலம் | ... | 611 | 19 |
| போரைத் தவிர்த்த ஏனைய அரசாங்கச் செலவினங்களைக் குறைத்ததன் மூலம் | ... | 40 | 1¼ |
| முதலை நிலைநாட்ட ஒதுக்கப்பட்ட தொகை | ... | 611 | 19 |
| | | 3,303 | 102½ |
| வெளிநாடுகளிலிருந்து கிடைக்கக்கூடிய குறைவான வட்டி, இலாப ஈவுகள் ஆகியவற்றின் தள்ளுபடி (Less reduced interest and dividends from abroad) | ... | 87 | 2½ |
| | | 3,216 | 100 |

போர்ப் பொருளாதாரத்தின் கடமை இவ்வுண்மைச் சாதனங்களை (real resources) எவ்வளவு அதிகமாகவும் வேகமாகவும் மாற்றங்களைச் செய்யமுடியுமோ அவ்வளவு மாற்றங்களைச் செய்தலாகும். நிச்சயமாக இது, ஒவ்வொரு சமாதான கால ஆண்டிலும் என்ன நடக்கின்றதென்பதற்கு ஒரு பெரும் உதாரணமாகவே இருக்கிறது. ஒவ்வொரு சமாதான கால ஆண்டிலும், அரசாங்கத் துறைகளான, பொதுநலப் பணிகள் (social services), நீதி (justice), கல்வி (education), காவல் (police) துறைகளையும் இன்னும் ஏனைய அரசாங்கத்தின் வேலைகளையும் நடத்துவதற்கு மனிதசக்தி (Man power) மூலப்பொருள்கள் (materials) ஆகிய சாதனங்களை ஏராளமாகப் பெற்றிருக்கவேண்டும். 1938ஆம் ஆண்டில் நாட்டின் மொத்தச் செலவில் 13½ சதவீதத்தை 51 சதவீதமாக உயர்த்தியது, (போருக்காகவும், போருக்கல்லாத மற்றச் செலவுகட்குமாக அரசாங்கம் செலவழித்ததெல்லாம் ஒன்றுகச் சேர்ந்து). இந்த அளவில் உள்ள வேறுபாடு ஓர் உண்மையான, 'அளவில் தோன்றும் மாறுபாடே: அரசாங்கத்தின் செலவு சமாதானகால செலவாக இருக்கும் வரையில் தேவையான சாதனங்களின் மாற்றம் முழுமையும் இடையீட்டுப் பொருளான (intermediary) பணத்தினுல் நிறைவேற்றப்படும். மக்களின் மீது வரி விதித்து அரசாங்கம் பணம் திரட்டுகிறது; இப்பணத்தைக் கொண்டு அதற்குத் தேவையான பண்டங்களையும் பணிகளையும் வாங்குகிறது. சமாதான காலத்தில் யாரும் தபால்காரராகவோ, சிவில் சிப்பந்தியாக (civil servant) வோ இருக்கும்படி கட்டாயப்படுத்தப்படுவதில்லை; 1939ஆம் ஆண்டில் சமாதான காலத்திலும் யாரும் படைவீரராக (soldier) இருக்கும்படி கட்டாயப்படுத்தப்படவில்லை. மக்கள் இந்த வேலைகளில் நுழைந்தமைக்குக் காரணம் (பல காரணங்களில்) பணத் தூண்டுதல்களால் (monetary inducement) அவர்கள் ஈர்க்கப்பட்டமையே. இதைப் போலவே, அரசாங்கம் பாதைகளுக்குச் சீமைக் காரைக் கட்டு (concrete) போட விழைந்தால், இதற்குத் தேவையான பொருள்களை அங்காடியில் அங்காடி விலைக்கு (market) வாங்கிக் கொள்ளும். இம்முறை முழுவதுமே, பணம் மாற்று மையமாகப் பணிபுரிவதற்கு ஓர் உதாரணமாக இருக்கிறது.

ஆனுல், இம்முறையிலே போர்களை நடத்தமுடியாது. மனித சக்தி (man power) மூலப்பொருள்கள் (materials) ஆகிய உண்மையான சாதனங்களை அவைகள் தேவையாக இருக்கும் இடங்களுக்கு, பணம் என்னும் காந்த சக்தியினுல் கொண்டு செல்லுதலில் எவ்வளவு சிரமம் உள்ளதென்பதை ஒரு கணம் சிந்தனை செய்து பார்க்கவேண்டும், அதிக சம்பளம் கொடுப்பதன்

மூலம் எத்தனை புதுப்படை வீரர்களை (recruits) அரசாங்கம் ராணுவத்திற்குப் பெறக்கூடும்? கணிசமான அளவிற்கு ஒரு கால் பெறக்கூடும். எவ்வளவுதான் நாட்டுப்பற்றுப் பற்றிப்பறைசாற்றினுலும் அத்தனையும், தன்னிச்சையான வழிகளில் (voluntary methods)போதுமான ஆட்களை ராணுவத்தில் சேர்க்க இயலவில்லையென்பதை கடந்த கால அனுபவம் நமக்குச் சுட்டிக்காட்டுகிறது. மூலப் பொருள்களிலும் (materials) இதே நிலைதான். அரசாங்கத்திற்குத் தேவையான பண்டங்களின் அளிப்புகளை—உதாரணமாக, உணவு—அங்காடியில் அவைகளை ஏலங்கேட்பதன் மூலம் பெற முடியுமா? நெறிதவறிய இம்முறையினுல், விலைகள் உயர்ந்து தேவையானது (demand) திணற அடிக்கப்படுவதற்கு முன்னரே, சிறு கலகங்கள் நாட்டில் தோன்றும். அரசாங்கம் நாட்டின் ஆறில் ஒரு பங்கு மொத்த உற்பத்தியில் கைவைக்காமல் பாதிக்குமேல் கைவைக்கும்போது, பணமுறைகள் (monetary procedures) செயலற்றுப்போகும். எனவே அரசாங்கம், கட்டாயப்படுத்துதல் (compulsion), கட்டாய ஆட்சேர்ப்பு (conscriptions), தொழிலாளர் கட்டுப்பாடு (direction of labour), பங்கீடு (rationing), பல்வேறு திட்டங்களை ஒதுக்கித் தருதல் (allocation of schemes of all kinds) ஆகிய முறைகளால்தான் தன் செயலை நிறைவேற்றவேண்டும்.

இதனுல் அரசாங்கத்திற்குப் பணம் தேவையில்லையென்பது பொருளல்ல. கட்டாயமும், பங்கீடும் யாவற்றையும் சாதித்துவிட இயலாது. எப்போதுமே சிலவற்றை அரசாங்கம் அங்காடியில் போட்டியிட்டு வாங்கியே ஆகவேண்டும். மேலும், ஆண்களும் பெண்களும் படைக்குக் கட்டாயமாக ஆட்சேர்ப்புச் செய்யப்படும்போது (conscription) அல்லது அவர்கள் இன்றியமையாத தொழில்களில் வேலையிலமர்த்திக்கொள்ளும்போது அவர்கள் 'வேலைக்கேற்ற கூலி'யினை (the rate for the job) கொடுக்கப்படவேண்டும். எல்லாவகையான தொழிலுக்குமான தொழிலாளர்களின் தேவை அவர்களின் அளிப்பைவிட அதிகமாக இருக்கும்போது, கூலி வீதங்கள் (wage rates) அதிகரித்துச் செல்வதில் வியப்பில்லை. ஏதாவது ஒரு காரணத்தால் அரசாங்கத்தின் செலவு போர்க்காலத்தில் மிகவும் அதிகரித்துக்கொண்டே செல்லுகிறது. 1938ஆம் ஆண்டில் பிரிட்டிஷ் அரசாங்கம் வாரமொன்றுக்கு £19 மில்லியன் செலவழித்துக்கொண்டு வந்தது. 1944ஆம் ஆண்டில் அது £115 மில்லியனுக அதிகரித்தது.

இந்தப் பணம் யாவும் எங்கிருந்தாவது வந்தே யாகவேண்டும். வரி விதிப்பை அதிகரிப்பது முதல்வழியாகும். போர்ச்செலவு முழு

ணமக்கும் வேண்டிய பணத்தை வரிகளை அதிகரிப்பதன் மூலம் பெறலாம் என்பதைக் கொள்கை அளவில்தான் (theoretically) கூறலாம். நடைமுறையில் இது இயலாது. இவ்வரிவிதிப்பு, சராசரியில், ஒவ்வொரு குடிமகனின் வருமானத்தில் பாதியை எடுத்துக்கொள்ளும். வரிகொடுப்போர் ஒருவருக்கும் மற்றவருக்கும் பெரிய அளவில் அநீதியை இழைக்கும்படியாக இல்லாமல் வரி விதிப்பு முறை நேர்த்தியாகவும் (delicate) நியாயமாகவும் அமைவது கடினம். மனசாட்சியையுடைய ஓர் அரசாங்கம், போர்க்காலத்தில், தன்னால் இயன்ற அளவுக்கு வரிகளின் வசூலிப்பை அதிகப்படுத்துகின்றது (கிரேட் பிரிட்டனில் 1939ஆம் ஆண்டுகளில் நடந்த போரின்போது இது ஒரு நீண்ட வழியாக இருந்தது). ஆனால் போர்ச்செலவு முழுமையையும் நிறைவேற்ற இது போதுமானதாக இல்லை. அரசாங்கத்திற்கு வருமானத்தைத் தரவல்ல இன்னும் சில குறிப்பிட்ட சிறு மார்க்கங்களும் உள்ளன. அரசாங்கத்திற்குச் சொந்தமான நிலங்களிலிருந்து (crown lands) கிடைக்கக்கூடிய வருமானம் ஒன்று. வேலையின்மைக் காப்புறுதி நிதி (unemployment insurance fund) போன்ற பலதிறப்பட்ட சமூகக் காப்புறுதி நிதிகள் (social insurance funds) அமைதிக் காலத்தில் முழுமையும் செலவழிக்கப் பட்டுவிடும். போர்க் காலத்தில் வேலையின்மை (unemployment) இருப்பதற்கு வழியில்லை யாகையால் இந்நிதிகளில் உபரித் தொகைகள் (surpluses) ஏராளமாகக் குவிந்து கிடக்கும். கருவூலம் (treasury) இந்த உபரித் தொகைகளைத் தாற்காலிகமாகக் கடன் பெறும். பிரிட்டிஷ் அரசாங்கம் ஐக்கிய அமெரிக்காவிடமும், கானடாவிடமும் கடன் வாங்கியதைப் போல, அரசாங்கம் வெளிநாடுகளிலும் கடன் பெறலாம். இவைகளத்தனையும் முயற்சித்த பிறகும், நிரப்ப வேண்டிய ஒரு பெரிய இடைவெளி (gap) இருக்கும்.

அடுத்தவழி, மக்களின் சேமிப்புக்களைக் கடன் வாங்குதலாகும். பலவகையான விளம்பரங்களின் மூலம் மக்கள் சேமிக்கும்படி அறிவுறுத்தப்படுகின்றனர். போர்க்காலத்தில் அவர்கள் செலவு செய்யும் பொருள்களின் அளிப்புக் குறைவதால், அமைதிக் காலத்தை விட அவர்கள் நிறையச் சேமிக்கின்றனர். 1938ஆம் ஆண்டில் கிரேட் பிரிட்டனின் தனிப்பட்ட குடிகள் (individual citizens) தங்கள் வருமானத்தில் 76 சதவீதத்தைச் செலவழித்தனரென்றும், 21 சதவீதத்தை வரிகட்டினரென்றும், 3 சதவீதத்தைச் சேமித்தனரென்றும் கணக்கிடப்படுகிறது. 1954ஆம் ஆண்டில் அவர்கள் 54 சதவீதத்தையே செலவழித்தனர்; 27 சதவீதத்தை வரிகட்டினர்; 19 சதவீதத்தைச் சேமித்தனர். சேமிப்பு செய்த போது, சேமிப்பினால் வந்த பொருளாதார விளைவு வரியினால் வந்த

விளைவை, ஒரு விதத்தில் தவிர, மற்றப்படி ஒத்தே யிருந்தது. சேமிப்பு என்பது தன்னிச்சையாக (voluntary) நடைபெறுவது; வரிசெலுத்துதல் என்பது கட்டாயத்தால் நடைபெறுவது. இரண்டும், தனிப்பட்டவர் தம்முடைய வருமானம் அளிக்கும் வாங்குந்திறன் (purchasing power) முழுமையையுமே பயன் படுத்தி விடுவதில்லை யென்றும், இவ்வாறு செலவழிக்கப்படாத சாதனங்கள் (resoure) அரசாங்கத்திற்குப் பயன்படக் கிடைக் கின்றன வென்றும், குறிப்பிடுகின்றன. வரிவிதிப்பிற்கும் (taxation) கடன் வாங்குவதற்கும் (borrowing) உள்ள வேறுபாட்டினைப் பின்னர் கவனிக்கவேண்டும். கடன் பெறுதலில் ஒவ்வோர் ஆண் டிலும் வட்டி செலுத்தவேண்டும்; கடன் முதிரும்போது அதனைத் திருப்பியடைக்கவேண்டும்.

போர் நடந்து கொண்டிருந்த ஆண்டுகளில் மக்களின் சேமிப் புக்களிலிருந்து ஏராளமான தொகை வசூலிக்கப்பட்டது. அப்படியும் இடைவெளியை (gap) சரிவர மூட இயலவில்லை. பாங்கு முறையே கடைசி வழியாகும். அரசாங்கம் தன்னாலியன்ற வரை வரிவிதிப்பு மூலமும் கடன் வாங்குவது மூலமும் பணந் திரட்டியும், அதனுடைய செலவைச் சரிக்கட்ட இயலாமலிருந்தால், இருக்கின்ற ஒரேவழி பாங்கு முறையின் (Banking system) மூலம் தேவையான அளவிற்குப் பணத்தைச் சிருட்டித்து அரசாங்கத் திற்குக் கடன் கொடுப்பதுதான். சில சமயங்களில் இதனை இங்கி லாந்து பாங்கு (Bank of England) செய்து வந்தது. அதனுடைய வெளியீட்டுத் துறையின் (issue department) மூலம், அரசாங்கக் கடன் பத்திரங்களின் இருப்பு அதிகரிப்பை வைத்துக்கொண்டு அதிக நோட்டுக்களை வெளியிடும். அங்கத்தினர் பாங்குகளின் (member banks) காப்பு ரொக்கங்களை (cash reserves) அதிக ரிப்பதற்குத் தனது பாங்குத் துறையில் (Banking Department) அரசாங்கக் கடன் பத்திரங்களை வாங்கியது. அங்கத்தினர் பாங்குகள், தங்களின் காப்பு ரொக்கங்களை, அதிகரிப்பதற்குத் தொடர்ந்து வெளியிடப்படும் இப் புதிய அரசாங்கக் கடன் பத்தி ரங்களை வாங்கின.

துரதிருஷ்டவசமாக இப்புள்ளி விபரங்கள் கடனை, உண்மை யான சேமிப்புக்களிலிருந்து பெற்ற கடன் என்றும் புதியதாகச் சிருட்டித்த பணத்தினின்றும் பெற்ற கடன் என்றும் தெளிவாக வேறுபடுத்திக் கூறவில்லை. $2\frac{1}{2}$ சதவீத £1,000,000 போர்ப் பத்தி ரங்கள் இவ்விரண்டு வகைகளில் எவ்வகையாகவு மிருக்கலாம். குறுங்காலக் கடன்களின் அதிகரிப்பு (increase in the floating debt) கருவூல உண்டியல்கள், வழிவகைக் கடன்கள் (ways and means

advances) கருவூல வைப்பு ரசீதுகள் (Treasury deposit receipts) ஆகிய குறுங்காலக் கடன்கள்—சிருட்டித்த பணத்தைக் கடன் வாங்குவதைக் குறிக்கும் என்று நாம் கூறுவதுகூட அவ்வளவு சரியானதல்ல. இதற்கு ஒரு காரணம், கருவூல உண்டியல்கள் (Treasury Bills) அவைகளால் பண உதவிபெறும் அங்கத்தினர் பாங்குகள், கழிவகங்கள் (discount house) இவைகளல்லாத மற்ற நிறுவனங்களாலும் வைத்துக்கொள்ளப் படுகின்றன என்பதாகும். உதாரணமாக அவைகள் வெளிநாடுகளின் மைய பாங்குகளால் (central banks) இருப்பு வைத்துக்கொள்ளப்படுகின்றன. இவ்விருப்புகள் போர்க்காலத்தில் கணிசமான அளவிற்குப் பெருகின. தூரதேசத்து நாடுகள், குறிப்பாகக் காமன்வெல்த் நாடுகள் போரின்போது தாங்கள் பிரிட்டனிடமிருந்து வாங்கியதைவிட அதிகமான அளவிற்கு விற்க விழைந்தன. மிச்சமாக உள்ள தொகையை அவைகள் லண்டனில் பாங்கு வைப்புகளாகப் (Bank deposits) பெற்றன. இப்பாங்கு வைப்புகளை கருவூல உண்டியல்களை வாங்குவதில் முதலீடு செய்தன. இவைகள்தான் புகழ்பெற்ற ஸ்டெர்லிங் நிறுவைகள்' (sterling balances) என்பவை. நேஷனல் பாங்க் ஆப் இந்தியா (National Bank of India) £1,000,000க்குக் கருவூல உண்டியல்களை வாங்கியது பிரிட்டிஷ் கருவூலம் (British Treasury) உண்மையான சேமிப்புகளைக் கடன் வாங்கியதற்குச் சமமாகும். இது பிரிட்டஷ் குடிமக்களில் பலர் £1,000,000க்குச் சேமிப்புச் சான்றிதழ்கள் (savings certificates) வாங்கியதற்குச் சமம். இரண்டாவதாக, தனிப்பட்ட குடிமகன் சேமிப்புச் செய்யும்போது தனது கடமையைச் செய்தவனாகிறான். ஏனெனில் சேமிக்கும்போது தனது வருமானம் முழுவதையும் நுகர்ச்சிக்காகச் செலவழிப்பதை அடக்கி வைத்துக் கொள்ளுகிறானல்லவா? இப்படிச் சேர்த்த பணத்தை அரசாங்கக் கடன் பத்திரம் வாங்குவதற்குப் பயன்படுத்தினாரா இல்லையா என்பது அவ்வளவு முக்கியமானதல்ல. அப்பணத்தை அவரது பாங்கியில் வைப்பாகவும் (deposit) அவர் வைத்திருக்கலாம். அவர் £100க்கு ஒரு போர்ப் பத்திரம் (war bond) வாங்கினாரென்றால், பத்திரத்திற்காக அவர் கொடுத்த £100 செக்கு ஏற்றுக்கொள்ளப்பட்டதும் அவரது பாங்கு அரசாங்கக் கணக்கிற்கு இங்கிலாந்து பாங்கியில் £100 செலுத்தவேண்டும். பாங்கியில் அவர் தம்முடைய £100ஐ விட்டுவைத்தால், பாங்கு அரசாங்கத்திற்கு கருவூல வைப்பு ரசீதைப் பெற்றுக்கொண்டு மேற்கொண்டு £100ஐக் கடன் கொடுக்கும். அடிப்படையில் இவ்விரு முறைகளுமே ஒன்றுதான். கருவூல வைப்பு ரசீதுகளின் மூலம் பணம் பெறுவது உண்மையான சேமிப்பைக் குறிக்காது என்று கூறுவது தவறான கருத்தாகும்.

எனினும், போருக்கு நிதியளிக்கும் முறைகளைச் சற்று ஆராய்வோம். 1939ஆம் ஆண்டு ஜனவரி முதல் தேதி முதல் 1945ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 31ஆந் தேதி முடிய ஏழு ஆண்டுகளில் பிரிட்டிஷ் அரசாங்கம் £33,468 மில்லியன் செலவழித்தது. இதே சமயத்தில் அது £15,762 மில்லியன் வரிகளின்மூலம் வசூலித்தது (செலவில் 47 சதவீதம்). £2,468 மில்லியன் (7 சதவீதம்) மேலே குறிப்பிட்ட, பல்வகையான சில்லறை வழிகளில் (miscellaneous) வசூலித்தது. (அரசாங்கச் சொத்திலிருந்து வரும் வருமானம், சமூகக் காப்புறுதி நிதிகளில் ஏற்படும் உபரிகள், அந்நிய அரசாங்கங்களிடமிருந்து கடன் பெறுதல் முதலிய வழிகள்). மிச்சமுள்ள £15,238 மில்லியன் (46 சதவீதம்) கடன் வாங்கப்பட்டது. இக் கடன் தொகையில், உண்மையான சேமிப்பிலிருந்து வந்தது எவ்வளவு, சிருட்டித்த பணம் வாயிலாக வந்ததென்பதே தற்போது எழும் கேள்வி. கடன்பெற்ற மொத்தத் தொகையில் £4,831 மில்லியன் குறுங்காலக் கடன்மூலம் (floating debt) பெற்றதாகும். ஆனல் மேற்படி கேள்விக்கு இது விளக்கந் தந்துவிட இயலாது பாங்குகளின் புள்ளி விபரங்களைக் கொண்டே தோராயமான விடை கூறலாம். 1938-ல் ஆண்டு சராசரியில், லண்டன் தீர்வகப் பாங்குகள் (London clearing Bank) — நாட்டிலுள்ள எல்லா பாங்குகளுமல்ல—£280 மில்லியன் அளவிற்கு 'கழிவு செய்யப்பட்ட உண்டியல்களை' (bills discounted) வைத்திருந்தன. (நடைமுறையில் இவைகள் கருவூல உண்டியல்களே); £637 மில்லியன் 'முதலீடுகளையும்' (investments)— எல்லாம் பிரிட்டிஷ் அரசாங்கக் கடன் பத்திரங்கள்—£151 மில்லியன் அழைப்புக் கடன்கள் (money at call) அதாவது கைமாற்றுக் கடன்—ஆகிய குறுந் தவணைக் கடன்களையும் வைத்திருந்தன. இவைகளில் பெரும் பகுதியும் (ஒரே ஒரு மாற்றத்தால்) அரசாங்கக் கடன் பத்திரங்களில் முதலீடு செய்யப்பட்டன. இங்கிலாந்து பாங்கு (Bank of England) மட்டிலுமே £315 மில்லியன் அளவிற்கு பிரிட்டிஷ் அரசாங்கக் கடன் பத்திரங்களை வைத்துக்கொண்டிருந்தது. போருக்கு முந்திய ஆண்டில் பாங்கு முறை முழுதும் (லண்டன் தீர்வகத்தில் அங்கம் பெருத பாங்குகளைத் தவிர்த்து மற்ற பாங்குகள்) அரசாங்கத்திற்கு £1,575 மில்லியன் கடன் கொடுத்திருந்தன. 1945ஆம் ஆண்டில் சாரசரியில் இத்தொகை £5,5000 மில்லியனுக இருந்தது. கூடுதலான இந்த £ 3,925 மில்லியன் முழுவதுமே, அவைகளின் சொத்துக்களின் நிகரக் கூடுதல் (net addition)என்று கூறமுடியாது. ஏழாண்டுகளில் இங்கிலாந்து பாங்கு £326 மில்லியன் அளவிற்குப் பொன்னை இழந்தது; தீர்வகப் பாங்குகளின் கடன்களும் £200 மில்லியனுகக் குறைந்தன. ஆனல் பாங்கு முறை அரசாங்கத்திற்குக் கடனுக அளித்த

£3,200 மில்லியன் முழுதும் அதனுடைய இருப்பு நிலைக்குறிப்பில் (balance sheet) நிகரக் கூடுதலாக (net additions) இருந்தது. அதாவது இப்பணம் சிருட்டித்த பணமாகும். இவ்வாண்டுகளில் பண அளிப்பிற்கு உண்மையில் என்ன நேரிட்டது என்ற கேள்வியின் மூலம், இம்முடிவை குறுக்குப்பரிசீலனை செய்யலாம். 1938ஆம் ஆண்டில் £446 மில்லியன் நோட்டுகள் பொதுமக்களிடையே புழக்கத்திலிருந்தன. (அதாவது, பாங்குகளின் பேழை ரொக்கத்திற்குப் புறம்பாக) பாங்கு வைப்புகளின் மொத்தம் £2,277 மில்லியனாக இருந்தது—எனவே மொத்தப் பண அளிப்பு £2,723 மில்லியனாக இருந்தது. 1945ஆம் ஆண்டில் இவைகள் £1,263 மில்லியனாகவும் £4,692 மில்லியனாகவும் இருந்தன; மொத்தம் £5,955 மில்லியனாக இருந்தது. வேறொரு முறையினால் கணக்கிடப்பட்ட எண்ணுக்கு இந்த £3,252 மில்லியன் அதிகரிப்பு மிகச்சரியாக இருக்கிறது.

எனவே, போர்க்காலத்தில் பிரிட்டிஷ் அரசாங்கம் தனது மொத்தச் செலவில் 47 சதவீதத்தை வரிவிதிப்பு மூலமும், 7 சதவீதத்தை இதர வருமானங்கள் மூலமும் (miscellaneous) 36 சதவீதத்தை பிரிட்டிஷ் பொதுமக்கள் சேமித்துவைத்த உண்மையான சேமிப்புக்களைக் (genuine savings) கடன் வாங்கியது மூலமும், 10 சதவீதத்தை இந்நோக்கத்திற்காகவே பாங்குகள் புதிதாகச் சிருட்டித்த பணத்தைக் கடன் வாங்கியதன் மூலமும் நிறைவேற்றிக்கொண்டதெனக் கூறலாம். போர்க்காலத்தில் ஒரே திடமான நிதியக் கைக்கோளுக்கு (sound financial policy) அழகு வரிவிதிப்பு மூலம் நிறையப் பணத்தைப் பெறுதலும் குறைவாகப் பணத்தைச் சிருட்டித்தலுமாகும். இவ்விரண்டிலுமே, 1939ஆம் ஆண்டுகளின் போரின்போது பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நிலைச் சான்று (record) உலகத்தில் சிறந்தவைகளில் ஒன்றாக இருந்தது—உலகத்திலேயே சிறந்ததெனச் சுலபமாகக் கூறிவிட முடியாது.

போருக்குப்பண உதவி அளிப்பதற்கு £ 3200 மில்லியன் பணம் சிருட்டித்தல் போர் நடந்த ஆண்டுகளின் மொத்தச் செலவில் போதியஅளவு சிறு பகுதி என்றாலும், ஏற்கெனவே இருந்த பண அளிப்பை நோக்கும்போது இது அதிகமானதென்றே கூற வேண்டும். இவ்வாறு பணம் சிருட்டித்தல் முறை போரின் முடிவு வரை நீடித்தது. 1947-ஆம் ஆண்டுக் கடைசியில் பண அளிப்பு (supply of money) (நோட்டுகள், வைப்புகள் ஆகியவைகள் சேர்ந்து) £ 7,050 மில்லியனாக இருந்தது. 1930-ஆம் ஆண்டில் இத்தொகை £ 2,700 மில்லியனாக இருந்தது. எனவே, ஏறக்குறைய 160 சதவீதம் அதிகரிப்பு ஏற்பட்டுள்ளது. இவ்வதிகரிப்பு,

பணவீக்கத்தன்மையை யுடையது என்பதை விளக்குவதற்கு பணக்கணியக் கோட்பாட்டினைக் கண்மூடித்தனமாக இங்குப் பின்பற்ற வேண்டிய தேவையுமில்லை. ஏனெனில், சண்டைகள் பணவீக்கங்களை உண்டுபண்ணுகின்றன. பெரிய போர்கள் பெரிய பணவீக்கங்களை உண்டுபண்ணுகின்றன வென்பது உண்மையே. பிரிட்டனில், பெரிய போரானது அதற்கிணையான பெரிய பணவீக்கத்தை ஏற்படுத்தவில்லை. இதற்கு பிரிட்டிஷ் நிதிய மேலாண்மையாரைத்தான் பாராட்டவேண்டும்.

பண அளிப்புப் பெருக்கம் (expansion of supply of money) பற்றிய சுவையான நிகழ்ச்சி யொன்றை இங்கே குறிப்பிட வேண்டும். 1938-லிருந்து 1947-வரையிலுள்ள ஒன்பதாண்டுகளில் பண அளிப்பு 100 லிருந்து 260 சதவிகிதம் வரையில் அதிகரித்தது. ஆனால் இதே விகிதத்தில் நாட்டு வருமானம் மட்டும் (நாட்டு வருமானமென்பது நாட்டின் மொத்த உற்பத்தியை விலை மட்டத்தால் பெருக்கினால் வரும் தொகையாகும்.—அதாவது நான்காவது அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள கணியக் கோட்பாட்டுக் குறிக் கணக்கிலுள்ள P T அல்லது p R க்குச்சமம்) இந்த விகிதத்தில் அதிகரிக்கவில்லை. அரசாங்கக் கணக்குகளின்படி இது (மொத்தத்தின் அடிப்படையில்) 1938-ஆம் ஆண்டு £ 5,777 மில்லியனாகவும் 1947-ஆம் ஆண்டு £ 10,934 மில்லியனாகவுமிருந்தது. இந்த அதிகரிப்பு விகிதம் (ratio) 100 லிருந்து 189 ஆக இருந்தது. இந்த இரண்டு ஆண்டுகளுக்குமுள்ள வேறுபாட்டினை கணியக் கோட்பாட்டின் அடிப்படையில் (Quantity theory basis) கூறவேண்டு மெனில், போர்நடத்த ஆண்டுகளில் V (velocity of circulation) அதாவது புழக்க வேகம் குறைந்தது என்றோ அல்லது K (பொதுமக்கள் ரொக்கநிலையாக வைத்துக் கொள்ள விழையும் மொத்த சாதனங்களின் விகிதம்) அதிகரித்தது என்றோ கூறவேண்டும். சென்ற அத்தியாயத்தில் குறிப்பிட்டுள்ள பண அளவு (volume of money), பொதுமக்களின் ரொக்க நிலை விருப்பம் (the liquidity preference of the public) வட்டி வீதம் (the rate of interest) ஆகிய இம்மூன்றிற்குமுள்ள முக்கோணவடிவத் தொடர்பை(triangular relationship) ஆராய்தல் இக்கதையினை இன்னும் சற்று விரித்துரைக்கப் பயன்படும். முதலாவது ஜெர்மன் போரின்போது (First German war) வட்டி வீதங்கள் அதிகமாக உயர்ந்தன. இதனால் போருக்குப் பணந்திரட்டக் கடன் வாங்குவதில் அதிகம் செலவாயிற்று. 1939-ஆம் ஆண்டில் போர் துவங்கியதும் அது ஒரு மூன்று சதவீதப் போராக (three percent war) இருக்க வேண்டுமென்று பொதுவாக முடிவுசெய்யப்பட்டது. அரசாங்கமும் தான் வாங்கிய

கடன்களுக்கு[1] 3 சதவீதத்திற்குமேல் வட்டி கொடுக்கவில்லை; மொத்தத்தில் 3 சதவீதத்திற்கும் குறைவாகவே வட்டி கொடுத்து வந்தது. ஆனால் குறைந்த வட்டிவீதங்கள் மக்கள் ரொக்கநிலைச் சாதனங்களை (liquid resources) அதிகமாகத் தேவைப்படுதலைக் குறிக்கும். சுருக்கமாகச் சொல்லப்போனால், 3 சதவீதம் அல்லது அதற்கும் குறைந்த வட்டிவீத அடிப்படையில் போரை நடத்துதலானது தேவைக்கு மிதமிஞ்சிய பணச்சிருட்டிப்பை (creation of money) உண்டு பண்ணியது. நாடு, தனது மொத்த சாதனங்களின் மிகப் பெரும்பகுதியைப் பணவடிவில் (money form) வைத்துக்கொண்டே போரை நடத்தி விட்டதென்பதை, இது காட்டுகிறது.

இக்குறிப்பை இன்னுமொரு மணித்துளி அளவில் (minute) மீண்டும் ஆராய்வோம். முதலில் போர்க்காலப் பணவீக்கம் பற்றி இன்னும் சற்று விரிவாக ஆராய வேண்டும். இதுவரையில் இது பெரும்பாலும் கணியக் கோட்பாட்டின் வாயிலாகவே விளக்கப்பட்டுவந்தது. சேமிப்பு-முதலீடு கோட்பாட்டின் சொல்வழக்கில் (Terminology) இது எவ்வாறு பொருந்தும்? போரின்போது சேமிப்பு அதிக அளவில் இருந்ததென்று ஏற்கெனவே கூறப்பட்டது. ஆனால் முதலீடும் அதிகயாக இருந்ததென்று, உண்மையாகக்கூற முடியுமா? [1]இவ்வத்தியாயத்தின் ஆரம்பத்தில் முதலீடு விளக்கப்பட்டுள்ள கருத்தின்படி கண்டிப்பாய்ப் பார்த்தால், அவ்வாறு கூற இயலாதென்று தெளிவாகக் கூறலாம். பக்கத்தில் குறிப்பிட்டுள்ள புள்ளிவிபரங்கள், போர் நடந்த ஆண்டுகளில் பொதுமக்களின் மூலதனச் செலவு (expenditure on capital) —அரசாங்கச்செலவிலும் சிறிது மூலதனச்செலவு அடங்கியிருந்தது —மிகவும் குறைவாக இருந்தமையைக் காட்டுகின்றன. இவ்வத்தியாயத்தின் ஆரம்பத்தில் சேமிப்பு—முதலீட்டுக் கோட்பாட்டைத் (saving and investment theory) தோற்றுவித்த போது, நடப்புப் பண்டங்களின் மீதோ அல்லது நெடுவாழ்வுப் பண்டங்களின்மீதோதான் யாவும் செலவழிக்கப்படுகின்றன என்ற எடுகோளின் மீது (assumption) கோட்பாட்டைத் துவக்கினோம். இந்த எடுகோளில் ஒரு தவறு செய்துவிட்டோம். அதாவது நெடுநாளைக்கு வராதனவும் மக்களின் வாழ்க்கைத்தரத்திற்கு யாதொரு பயனையும் தராதனவு மாகிய மூன்றாவது வகையான

1 முதிருந்தருவாயில் தேசிய சேமிப்புச்சான்றிதழ்களுக்குக் (National Saving Certificates) கொடுத்தவட்டி வீதம் நீங்கலாக.

1 அல்லது இன்னும் சரிநுட்பமாகக் கூறப்போனால், முதலீடு சேமிப்பைவிட அதிகரித்துக்கொண்டிருந்தது (tended to be larger) என்றுகூற இயலுமா? சேமிப்பும் முதலீடும் ஒன்றோடொன்று சமமான நிலைக்கு வந்து விடுமென்று ஏற்கெனவே கூறப்பட்டுள்ளது.

(third category) ஒருவகைப் பண்டங்கள் — விரோதிகளின் மீது வீசுவதற்கென்றே தயாரிக்கப்பட்ட பண்டங்கள்—உள்ளன என்று நமது எடுகோளில் (assumption) நாம் கொள்ள வில்லை. போர்ச் செலவுகளை முதலீடுக்கு என்று கொள்ளா விட்டாலும், விதிமுறையான விளக்கத்திற்கு (theoretical exposition) இதனை முதலீடாக வைத்து எண்ணலாம். நடப்புப் பண்டங்களின் மீது செலவிடப்படும் செலவிற்கும் (expenditure on current consumption) முதலீட்டிற்கும் (investment) உள்ள வேறுபாடே இதுதான்; நடப்புப் பண்டங்களின்மீது செலவழிக் கும் மக்களும் தங்கள் வருமானங்களிலிருந்து அப்பண்டங்களை வாங்குவதற்காகப் பணமளிக்கின்றவர்களும் ஒன்றுதான். ஆனால் முதலீடு சம்பந்தப்பட்டவரையில், முதலீட்டிற்குத் தங்கள் வருமானங்களிலிருந்து பணமளிப்போரும் நெடுவாழ்வுப் பண்டங் களுக்கான தேவையைச் சிருட்டிப்பவர்களும் வெவ்வேறு நபர்கள். இந்த முக்கியமான வேறுபாட்டின் மீதுதான் சேமிப்பு—முதலீடு கோட்பாடே அமைந்திருக்கிறது. இவ்வேறுபாட்டை வைத்து நோக்கினால், போருக்காகச் செலவிடுவது, நடப்புப் பண்டங் களின்மீது செலவழிக்கப்படும் செலவைவிட, முதலீட்டுடன் மிகவும் ஒத்திருக்கின்றது. ஏற்படும் செலவுகளுக்கான பணத்தை வரிவிதிப்பின் மூலம் கொடுப்பதா அல்லது சேமிப்பின் மூலம் கொடுப்பதா, என்பதைப்பற்றியே ஒன்றும் சிந்திக்காமல், படையினர் சேர்க்கப்படுகின்றனர்; போர்த்தளவாடங்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன; துப்பாக்கிகள் சுடப்படுகின்றன. வரிவிதிப்பு, சேமிப்பு ஆகிய இருமுறைகளுமே இவ்வத்தியாயத்தில் கூறப்பட்ட விளைவுகளுடன் ஒன்றை ஒன்று இணைதலின்றி முரண் படக்கூடும். நாம் ஏற்கனவே கையாண்ட சொல்வழக்கின்படி (terminology) போர்க்காலத்தில் முதலீடு பிரமாண்டமான அளவில் அதிகரிக்கின்றதென்று விவரிக்கவேண்டும். இந்த 'அதிகரிப்பு' சேமிப்பில் நிகழும் பிரமாண்டமான அதிகரிப்பையும் இடைவிடாது விஞ்சுகிறது. எவ்வழியாலும் நாம் ஒரே முடிவுக்குத் தான் வருகிறோம்: அதாவது, போர்கள் பணவீக்கத்தை உண்டு பண்ணுகின்றன வென்பதுதான். கிரமமாக ஆராய்ந்தால்,போரின் பிற்பகுதி ஆண்டுகளிலும் போர் முடிவடைந்த முதல் இரண்டு ஆண்டுகளிலும், வேலைநிறைவுப் புள்ளியை (point of full employment) அடைந்துவிட்டபிறகும் வாணிபச் சகடம் மேல் நோக்கிக் கிளம்பும் (upward swing) நிலை நீடிக்கும்.

போருக்குப் பிறகுள்ள காலத்தில் நடக்கப்போவதில் யூக பேரம் (speculation) நிகழ்த்தும் உணர்வு தடுக்கப்பட வேண்டும். எனினும் ஒன்றை மட்டும் முடிவு செய்யலாம். 1914–18 ஆண்டு

களில் நடந்த போருக்குப்பின்னர், இரண்டாண்டுகள் பொருளாதார நடவடிக்கையில் ஒரு பிற்போக்கு (recession) ஏற்பட்டு விலைகளும் குறைந்தன. எனினும் இவைகள், போருக்கு முந்திய நிலைக்குச் சென்றுவிடவில்லை. ஆனால் செயலளவில் (virtually), போரின் போது சிருட்டிக்கப்பட்ட அதிகப்படியான பண அளிப்புகள் எதுவும் பின்னர் அழிக்கப்பட்டுவிடவில்லை. 1939-45 ஆண்களில் நடந்த போருக்குப் பின்னரும் இதேவிதமான அடுத்தடுத்த நிகழ்ச்சிகள் ஏற்பட்டிருக்குமாயின், நாட்டு வருமானத்தின் அளவைவிட, இன்னுமதிகமான அளவுப் பணம் நாட்டில் விடப்பட்டிருக்கும்—அதாவது இவ்வரிகளை எழுதிய காலமாகிய 1947-ஆம் ஆண்டு இறுதியின் போதிருந்த நாட்டு வருமானத்தின் அளவைவிட அதிகமான பண அளிப்பு நாட்டில் இருந்திருக்கும். இவ்வாருன நிலை இரு விளைவுகளைத் தரக்கூடும். முதலாவது, இந்நிலை வட்டி வீதங்களைக் குறைப்பதற்கான பலமான காரணமாக இருக்கும். இரண்டாவது விளைவு, பொதுமக்கள், தங்களுடைய மொத்த சாதனங்களின் பெரும்பகுதியை, ரொக்க நிலையாக வைத்திருப்பார்களாதலால், தொழிலும் வாணிபமும் பாங்குகளிடம் சென்று கடன் வாங்கத் தேவையில்லை. அதிக அளவு ரொக்கநிலை (high degree of liquidity) என்ருலே வணிக நிறுவனங்கள் (business firms) தங்களுடைய சொந்த ரொக்க மூலதனங்களால் (cash resources) தங்களுடைய நடைமுதலுக்கான (working capital) பணத்தைத்தேடிக்கொள்ளுமென்பது பொருள். ஒரு தலைமுறைக்குள்ளாகவே ரொக்கநிதிகளின் இருபெருஞ் சிருட்டித்தல்கள் (two massive creations) ஏற்படுதலால், பாங்குகளின் பணியில் மாற்றம் ஏற்படுகின்றது. இனிமேல் அவைகள், சேமிப்புக்களைக்கடன் வாங்கி அவற்றைத் தொழிலுக்கும் (industry) வாணிபத்திற்கும் (Commerce) பயன்படுத்தும் நிறுவனங்களாக இருக்கவில்லை. மக்களின் ரொக்க நிதிகளை (liquid Funds) அவைகள் இருப்பாக வைத்துக்கொண்டு, அவைகளைப் பெருமளவில் அரசாங்கத்திற்குக் கடன் கொடுப்பதற்குப் பயன்படுத்துகின்றன. இவ்வாறு, பாங்குகளின் பணியில் ஏற்பட்ட மாற்றத்தாலாகிய விளைவுகள் அடுத்த சில பத்தாண்டுகளில் தெரியக்கூடும்.

# ௬. பணக் கைக்கோள்

(Monetary Policy)

## பணக் கைக்கோளின் நோக்கங்கள்

(The Objects of Monetary Policy)

சென்ற மூன்று அத்தியாயங்களும், தற்காலச் சமுதாயத்தில் பணம் எவ்வாறு வேலை செய்கிறதென்பதைச் சுருக்கமாக ஆராய் வதற்கும், வாணிபத்திலும் உற்பத்தி முறையிலும் ஏற்ற இறக்கங் களை எவ்வாறு பாதிக்கின்றதென்பதை ஆராய்வதற்கும் ஒதுக்கப் பட்டன. பணத்தின் பன்னாட்டுத் தன்மைகளைப் பற்றி (international aspects) இந்நூலின் இரண்டாம் பகுதி ஆராயும். பணம் என்னும் இப்பெருந்தலைப்பின் இரண்டாம் பகுதியை ஆராய்வதற்கு முன்னர், தற்போதுள்ள அத்தியாயமும் இடையே இணைக்கப்படவேண்டும். இந்நூலின் தலையாய நோக்கம் விளக்கந் தருதலும் ஆராய்வதுமே தவிர எந்தக் குறிப்பிட்ட கைக்கோளுக்கு மான (policy) கருத்துக்களைத் தெரிவிப்பதல்ல. ஆகையால், கண்டிப்பாகக் கூறுமிடத்து, இவ்வத்தியாயம் இந்நூலின் எல்லைக் குப் (province) புறம்பானதொரு பொருளைப் பற்றியே கூறு கிறது. ஆனால், இவ்வாராய்ச்சியினின்றும் எழுகின்ற வாதப் பொருத்தமுடைய (logical), கைக்கோள் (policy) செயல்முறை (action)க்கான முடிவுகளை வகுப்பதில் முயலாமல், இவ்வாதத்தை இந்நிலையில் நிறுத்தி வைப்பதென்பது அறிவுடைமையாகாது. எனினும் பணக் கைக்கோளின் (monetary policy) வரலாறு முழுவதையும் இங்கே ஆராய்வதற்கு இயலாது—ஏனெனில் இத் தலைப்பை எழுத இந்நூலின் அளவைக்கொண்ட மற்றொரு நூலே தேவைப்படும்.

பண முறையை (monetary system) வைத்துள்ளதால் கிடைக்கப்பெறும் பொருளாதார நலன்கள் (economic advan-

tages) அதிகமாக இருத்தலால், எந்த நவீனச் சமுதாயமும் (modern community) அம்முறையைப் பின்பற்றுமலிருக்கவில்லை. ஆனால் இதற்கு முன்னருள்ள அத்தியாயங்கள், பணம், நலன்களைத் தருவதுபோன்று சில தீமைகளையும் விளைவிக்கின்றதென்பதை எடுத்துக் காட்டின. விலைகளின் ஏற்ற இறக்கங்களும் (fluctuations) வாணிபச் சகடத்தின் ஏற்ற இறக்கங்களும் முக்கியமான தீமைகளாகும். இத் தீமைகளுக்குப் பணமும் ஒரு காரணமாக இருக்கிறது. எனவே இத் தீமைகளைக் குறைப்பதே பணக் கைக்கோளின் நோக்கமாக இருக்கவேண்டும்.

இதற்கு முன் பல தடவைகள் செய்ததுபோல், பணத்தின் நெடுங்காலத் தன்மைக்கும் (long-term behaviour) குறுங்காலத் தன்மைக்கும் (short-term behaviour) உள்ள வேறுபாட்டினை நாம் உடனடியாக வகுக்கவேண்டும். நெடுங்காலத்தில்—நெடுங்காலமென்பது ஒரு தலைமுறை அல்லது அதற்கு அதிகப்பட்ட கால வரையறை—முக்கியப் பண நிகழ்ச்சி (monetary phenomenon) யாதெனில் விலைகளின் போக்கு ஒரு சமயம் அதிகரித்துச் செல்லுதலும் மற்றொரு சமயம் குறைந்து செல்லுதலுமாகும். சராசரியில் மேல் நோக்கிச் செல்லும் போக்கு நல்ல வியாபார ஆண்டுகளிலும் (years of good trade), கீழ்நோக்கிச் செல்லும் போக்கு, கெட்ட வியாபார ஆண்டுகளிலும் (years of bad trade) இருக்கும். மனிதனுடைய பொருட்சார்புடைய முன்னேற்றம் (material progress) ஒரு சமயத்தில் மற்றச் சமயத்தைவிட வெகுவேகமாக இருந்ததென்று எளிதாகக் கூறிவிடமுடியாது. இதனைத் தக்க சான்றுடன் விளக்க இயலும். விலைகள் குறைந்துகொண்டு செல்லும் நெடுங்காலங்களில், விலைகள் அதிகரிக்கும் காலங்களை (periods of rise in prices) விட உண்மை கூலிகள் (real wages) வேகமாக அதிகரிக்கும். ஆனால் அதிக அளவில் வேலையின்மை (unemployment) இருக்கும். மேற்படி இரண்டிலும் எது விரும்பத்தக்கதென்று தீர்ப்புக் கூறப்போனால், அதிகரித்துள்ள உண்மைக் கூலிகள் அல்லது அதிகமான நிலைத்த வேலை (more constant employment) இவையிரண்டிலும் ஏதானுமொன்றைத் தேர்ந்தெடுப்பதில் கொண்டுபோய் நிறுத்தும். குறுங்காலங்களில் (short periods) எது தேர்ந்தெடுக்கப்படும் என்பதை நாம் தெளிவாகக் கூறிவிடலாம். நெடுங்கால விலைகளின் போக்கு மேல்நோக்கி அல்லது கீழ்நோக்கியிருக்கும்போது ஏற்படும் பூரிப்பு, மந்தம் ஆகிய இவைகள் ஒன்றைவிட்டு ஒன்று மாறிமாறி வந்துகொண்டிருப்பது, முற்றிலும் தீய விளைவுகளையே தரும்.

நேர்த்தியான கருத்துக்களைப் பின்பற்றி நெடுங்கால, குறுங் காலப் பணக் கைக்கோளின் நோக்கங்களை வகுப்பதற்குத் தோன்றும். உண்மையில், நெடுங்காலக் கைக்கோளின் நோக்கங் களையும் அவற்றை அடையும் சாதனங்களையும் கூர்ந்து ஆராய்ந் தால் அவை தெளிவற்றுக் (shadowy) காணப்படுகின்றன. உதாரணமாக, எடுத்துக்காட்டானதொரு நெடுங்கால விலை மட்டத்தின் போக்கு எதற்காக மேல்நோக்கியோ, கீழ்நோக்கியோ அல்லது நிலையானதாகவோ (stable) இருக்கவேண்டும்? ஒவ்வொன்றிற்கும் தகுந்த வாதங்களை அறியலாம். பொருளாதார முறை முழுவதிலுமுள்ள உற்பத்தியானது ஆண்டொன்றுக்குச் சராசரியில் 1 விருந்து $1\frac{1}{2}$ சதவீதம் அதிகரித்துக்கொண்டிருப்பதால் அதே விகிதத்தில் விலைமட்டமும் குறையவேண்டும் என்று அடிக் கடி வாதாடப்படுகிறது. இம்முறையால் கூலி பெறுவோரும் (wage earners) தங்களது அதிகமான உற்பத்தித் திறனுக்குத் தகுந்த கூலி அதிகரிப்பை, கூலி அதிகரிப்பிற்காக அவ்வப்போது செய்யப்படும் கிளர்ச்சி ஏதுமின்றி, உடனுக்குடன் பெறுவர். நிலை யான பண வருமானத்தை உடையவர்களுக்கு, விலைகளின் இறக்கம்தான், இலாபமடையும் ஒரே வழி. சுபிட்சத்தில் வளர்ச்சி அடைந்துவரும் சமுதாயத்தில் நிலையான பண வருமானத்தை உடையவர்கள் பங்கு பெறுவதற்கு, விலைகளின் இறக்கம் ஒன்றே வழியாகும். நிலையாக உள்ள விலைகள், ஆபத்தான அதிக அளவு பண வீக்கத்தை மறைத்து வைக்கக்கூடும் என்று கூறப்படலாம். உற்பத்தி அதிகரிக்கும்போது, விலைகள் குறையாதிருக்குமானல் இலாபங்களின் அளவு அதிகமாகும் (கூலிகளின் அதிகரிப்பு இந்த விகிதத்தில் அதிகரிப்பதில்லையாகையால்) என்பதே இங்கு வாத மாகும். இந்த விதமான அதிகப்படியான இலாபங்கள் (excessive profits) எதிர்பாராமல் வரக்கூடிய இலாபங்களா கையால் (wind falls), பெருவாரியான தொழில்கள், அவை களின் பொருள்களுக்கு அதிகமான தேவையிருந்தாலும் இல்லா விட்டாலும், இந்த இலாபங்களை அடைகின்றன. இத் தொழில் கள், தங்களால் சமாளிக்கக்கூடிய அளவிற்கு மேலாக, அதிக அளவு மூலதனத்தைத் தொழிலில் முதலீடு செய்கின்றன. சுருங்கச் சொல்லின், நிலையான விலைகளிருந்த போதிலும் (stable prices) ஒரு பண வீக்கச் சூழ்நிலை ஏற்படும். இவ் வாதத்திற்குச் சான்றுக உள்ள முக்கிய நிகழ்ச்சி, ஐக்கிய அமெரிக்காவில் 1922-1929 ஆண்டுகளுக்கிடையே நடந்த நிகழ்ச்சிகளாகும். சராசரியில் அங்கு விலைகள் குறிப்பிடுமளவிற்கு நிலையானவைகளாகவே (stable) இருந்தன. (பங்கு மாற்றுச் சந்தையின் பத்திரங்களின் விலைகள் குறியீட்டெண்ணிலிருந்து (index number) விலக்கப் படும்போது); ஆனுல் இதற்குப் பின்னுல் நடந்த நிகழ்ச்சிகளை

வைத்துக்கொண்டு பார்க்கும்போது அந்த ஆண்டுகளில் சமாளிக்க முடியாத அளவிற்கு முதலீட்டினளவு மிக அதிகமாக இருந்த தென்று தெளிவாக விளங்குகின்றது. 1929 ஆம் ஆண்டில் நடந்த முறிவு (crash) பொருளாதார வரலாற்றிலேயே மிகவும் காணற் கரிய காட்சி (spectacular) யாக இருந்தது.

விலைகளின் இறக்கம் (falling prices) பற்றிய வாதம் இது தான். பண வீக்கத்தைவிட பணவாட்டம் (deflation) அதிக ஆபத்தானதென்று கூறப்படுகிறது. ஒவ்வோர் ஆண்டிலும் சந்தர்ப்பம் சதி செய்வதால் ஏற்படும் பண வீக்கத்தின்போது, குறைந்தது மூன்று, அதிக அல்லது குறைந்த அளவு, பண வாட்டங்கள் (deflations) தோன்றுகின்றன. சாதாரணமான சூழ்நிலையில், பொருளாதார முறை நன்கு இயங்குவதற்கு 'மெது வான விலைகளின் ஏற்றம்,' என்கிற வலிமைதரும் மருந்து (tonic) சற்றுத் தேவை. நிலையான வருமானங்களையுடையவர்கள் இவ் விலையேற்றத்தால் பாதிக்கப்படுபவரென்றால், அந்த மெதுவான விலையேற்றத்தின் (slow rise in prices) விளைவை உணரு வதற்கு வெகு நீண்டநாள் வாழக்கூடிய சிலரால்தான் இயலும். விலைகளின் இறக்கத்திற்கான வாதத்திற்குச் சாதகமாக 1920 ஐச் சார்ந்த பத்தாண்டுகளின் ஐக்கிய அமெரிக்காவின் வரலாற்று நிகழ்ச்சியினைச் சான்றாகக் காட்டலாம்; விலைகளின் ஏற்றத்திற்குச் சாதகமான வாதத்தை வலியுறுத்துவதற்கு பண வரலாறு முழு வதையுமே சான்றாகக் காட்டலாம். சீராக மலையெனக் குவிந்து கொண்டிருக்கும் கடன் சுமை அதிகமாவதைத் தடுப்பதற்கு விலை களின் அதிகரிப்பு அவசியமாகத் தேவை என்பதை உலகம் நன்குணர்ந்திருக்கிறது. மனித இனத்தால் கடன் வாங்காமலிருக்க முடியாது—உண்மையில், கடன்தான் மந்தத்தின் வாரிசாக இருக் கிறது—எனின், இச் சமூகப் பிரச்சினையை (கடன் சுமையை) மெதுவான, அரைகுறையான, கண்ணுக்குப் புலப்படாத விலை களின் ஏற்றம் என்னும் தீங்கினால்தான் களையமுடியும். கடன் காரர்களும் கடன் கொடுத்தவர்களும் கடுமையாக மோதிக் கொள்வதால் இதனைத் தீர்க்கமுடியாது. விலைகளின் ஏற்றமில்லா மல், வகையுள்ளதாகவும் (solvent) சுபிட்சமானதாகவும் (prosperous) இருந்த ஒரே நூற்றாண்டு பத்தொன்பதாம் நூற்றாண்டுதான். இந் நூற்றாண்டில், தொழிற்புரட்சி, விரைவாக அதிகரித்துச் சென்ற மக்கள் தொகை ஆகிய தனிச் சிறப்புடைய நலன்கள் இருந்தமையே இதற்குக் காரணம். எவ்வித மாற்றமு மற்ற நிலையான (static) இங்கிலாந்தைப் போன்ற பல நாடுகள் இவ்விலை உயர்வுக்ள் மட்டும் இல்லாமலிருந்தால், கடுவட்டி

(usury) யின் மரணப் பிடியால் நெறிக்கப்பட்டிருக்கும் என்று கூறுவதன் மூலம் இவ்வாதத்தை முடிக்கலாம்.

மேற்கூறிய இரண்டு வாதங்களுக்குமிடையேயுள்ள ஒரு மத்தியமான வாதத்தை விரும்புகிறவர்கள் நிலையான விலைகள் (stables) என்னும் வாதத்தைப் பின்பற்றலாம். முற்றிலும் கொள்கை ரீதியில் பார்த்தால், இவ்வாதம் மிகச் சிறந்ததாகத் தோன்றுகிறது. ஏனெனில் பணத்தில் எந்த விதமான வெளிப் படையான மாற்றமும் தோன்றவில்லையென்றால் அது எவ்வகைச் சார்புமற்ற நடுநிலைமையானதாக இருக்கும். ஒரு கருவியாக அல்லது இடையீட்டுப் பொருளாக (intermediary) இருப் பதற்கே கண்டுபிடிக்கப்பட்ட பணத்திற்கு இந்தப் பண்பு பொருத்தமானதேயாகும்.

நீண்டகால பணக் கைக்கோளின் (long-term monetary policy) நோக்கங்களைத் தீர்மானிப்பது கடினமென்றால், அவை களை அடைவதற்கான வழிமுறைகளை வகுப்பது இன்னும் கடின மானதாகும். ஏனெனில் விலைகளின் நெடுங்காலப் போக்குக் குறுங்கால ஏற்ற இறக்கங்களினாலானதே. வாணிபச் சகடத்தின் மேல்நோக்கிய கால்கள் கீழ்நோக்கிய கால்களைவிட அதிகமாக மேல்நோக்கிச் செல்வதால் நெடுங்கால மேல்நோக்கிச் செல் லும் போக்கு (a long-term rising trend) தோன்றுகிறது. இப்படியேதான், சகடத்தின் கீழ்நோக்கிச் செல்லும் கால்கள் அதிகமாகக் கீழ்நோக்கிச் செல்வதால் நெடுங்காலக் கீழ்நோக்கிச் செல்லும் போக்குத் தோன்றுகிறது. இதனால் நெடுங்காலப் போக்குகள் (long - term trends) குறுங்கால ஏற்ற இறக்கங் களினால் மட்டுமே (short - term fluctuations) பாதிக்கப்படும் என்பது தெளிவாகின்றது. வாணிபச் சகடத்திற்கான விதி முறை களைக் கையாளும்போது அவைகள் மிகவும் நெகிழ்வுடையனவாக இருக்கவேண்டும். சில சமயங்களில் உளப்பாங்கான இந்தக் கட்டுப்பாடு (conscious control) அதிகரித்துள்ள விலைகளை (higher prices) நோக்கியிருக்கவேண்டும், சில சமயங்களில் குறைவான விலைகளை நோக்கியிருக்கவேண்டும். இதன் காரண மாக சில சமயங்களில் நெடுங்காலக் கைக்கோள் ஒன்று எதிரிடை யான விலைகளை அதாவது குறுங்காலக் கைக்கோளின் (short-term policy) விளைவுகளைத் தருதல் கூடும். இதன் விளைவு—தவிர்க்க முடியாத துரதிருஷ்டமான விளைவுகளே.

விலைகளின் நெடுங்காலப் போக்கைக் கட்டுப்படுத்தும் உள்ளுணர்வானதும், (conscious) உள்ளுணர்வற்றதுமான(uncon-

scious) பல்வேறு முயற்சிகளிலுள்ள குறைபாடு இதுதான். இம் முயற்சிகளில் பெரும்பான்மையும் நாணயத்தின் அளவைக் கட்டுப் படுத்தும் வழிகளாகவே இருந்திருக்கின்றன. தருக்கரீதியாகப் பார்த்தால் (logically) இம்முறை சிறந்த முறையல்ல. விலைகளின் நெடுங்காலப் போக்கை உணர்த்துவதற்கு கணியக்கோட்பாடு (quantity theory) தாராளமாகப் போதுமானதென்று சென்ற அத்தியாயத்தில் முடிவுக்கு வந்தோம். செலாவணிக் கணியமும் (quantity of currency) பணக்கணியமும் (quality of money) ஒன்றல்ல என்றாலும், இவை இரண்டுக்குமுள்ள தொடர்பு நெருக்கமானதும் உறுதியானதுமாகும். பணவரலாறு முழுவதும், பணக்கணியம், இருக்கின்ற பண-உலோகத்தின் (money-metal) கணியத்தால் தானாகக் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது. மொத்தப் பணப் புழக்கத்தில் தாள் பணம் (paper money) முக்கியமானதாக விளங்கியபோது, அதனுடைய கணியமும் (quantity) இதைப்போலவே, மைய பாங்கின் பொன் காப்பு நிதிகளின் (gold reserves) அளவால் கட்டுப்படுத்தப்பட்டது. இங்கிலாந்தில் ஒரு குறிப்பிட்ட 'நம்பிக்கை' (fiduciary) அளவிற்குமேல் வெளியிடப்படும் நோட்டுகள், 1 பவுண்டு நோட்டிற்கு 1 பவுண்டு (pound for pound) என்ற வீதத்தில் இங்கிலாந்து பாங்கில் பொன்னை வைத்திருக்கவேண்டும். வெளியிடும் நோட்டுகள் மதிப்பில் 40 சதவீதம் பொன்னை வைத்துக் கொள்ளவேண்டுமென்பது அமெரிக்க முறை. ஃபிரான்சில் 1914ஆம் ஆண்டிற்கு முன்பு, பணப்புழக்கம் ஒரு குறிப்பிட்ட அளவிற்கு மேல் இருக்கக்கூடாதெனக் கட்டுப்படுத்தப்பட்டது. இப்படி உயர்ந்தபட்சப் பணப்புழக்கம் இவ்வளவுதானிருக்கலாம் என்று கட்டுப்பாடு விதித்ததானது ஒரு சமயத்தில் பொருத்தமுள்ள தாக இருந்தாலும் மற்றொரு சமயத்தில் பொருத்தமற்றதாக இருந்தது. பொன்னோடு இவ்வாறு உறுதியாகப் பிணைக்கப்பட்ட தொடர்பானது பணக்கணியத்தை (quantity of money) சுரங்கவியல் (mining science) புதிய சுரங்கங்களின் கண்டுபிடிப்பு (exploration) புவி அமைப்பியல் (geology) ஆகியவைகளின் கருணையில் இருக்கும்படி செய்கிறது. விலைகளின் நெடுங்காலப் போக்கைத் தீர்மானிப்பதற்கு இவைகளெதுவுமே அறிவியல் ரீதியான வழிகளல்ல. அவைகள் வேறு எது நிகழ்ந்தாலும், வேகமான நீண்ட பண வீக்கத்தை (inflation) நிகழவொண்ணுவண்ணம் தடுப்பதற்கான, பண்படாத உதவிச் சாதனங்களா (expedients) கும். பணப் பெருக்கத்தைத் தடுக்க ஏற்படுத்தப்பட்டுள்ள இக் கட்டுப்பாடுகளிலுள்ள குறை யாதெனில், தக்க சமயத்திலல்லாது தவறான சமயத்தில் அவைகள் தங்கள் வேலையைச் செய்ய ஆரம் பிக்கும். வாணிபச் சகடத்தின் மேல் நோக்கிய போக்கு (upward phase) எப்போதும் அதிகமான அளவு நாணயத்தை விரும்பு

கிறது. அதிகமான அளவு நாணயத்தை ஏதோ ஒரு குறிப்பிட்ட இடத்தில் தடுக்கவேண்டியது அவசியமேயென்ருலும், நல்ல சந்தர்ப்பத்தில் அதனைத் தடுப்பது (இதற்கு முன்னுலுள்ள ஆண்டுகளில் உறுதியான பணக் கட்டுப்பாடு இருந்தாலோ அல்லது திடீரென்று பொன்னின் கணியம் குறையும் போதோ) முற்றிலும் எதிர்பாராத ஆபத்தையே விளைவிக்கும். சில சமயங்களில் செலாவணிக் கணியம் (quantity of currency) பணக் கணியத்தில் இல்லாவிட்டாலும்—மந்த காலங்களில் அதிகரிக்கும். உதாரணமாக, பாங்கு முறையில் நம்பிக்கையில்லாத போதும் அதனுல் பொதுமக்கள் தங்களது வைப்புகளை (deposits) ரொக்கமாக மாற்றும்போதும், செலாவணிக் கணியம் அதிகரிக்கப்படும். இச் சமயங்களில், இவ்வாறு அதிகரிப்பதற்கு மறுத்தலானது அறிவீனமான செய்கையாக இருப்பதுடன் ஆபத்தான செய்கையுமாகும்.

சமீப ஆண்டுகளில், விலைகளின் நெடுங்காலப் போக்கைக் கட்டுப்படுத்தும் எண்ணத்துடன், பண அளவைக் (volume of money) கட்டுப்படுத்துவதற்கு பலவகையான நுட்பமான வழிகள் கூறப்பட்டுள்ளன. உதாரணமாக, அனுமதிக்கப்பட்ட உயர்பட்ச செலாவணி மக்கள் தொகைக்கேற்ப அல்லது உற்பத்தியின் அளவிற்கேற்ப மாறவேண்டுமென்று கூறப்படுகிறது. ஆனுல் இத் திட்டங்கள் யாவும் குறைகூறத் தக்கனவாகவேயிருக்கின்றன. ஏனெனில், அவைகள் குறுங்காலக் கைக்கோளைத் (short term Policy) தடை செய்யவில்லை என்ருல் (நெடுங்காலக் கைக்கோளை விட குறுங்காலக் கைக்கோளே மிகவும் முக்கியம் வாய்ந்ததாகும்.) அவைகளைச் சராசரியில் சில ஆண்டுகளுக்குத்தான் இத்திட்டங்களைச் செயற்படும்படி செய்யமுடியும். இதிலும், ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு அவைகளைச் செயற்படும்படி செய்யவும் இயலாது. குறிப்பிட்ட காலத்திற்குச் செயற்படும்படி அவைகளில் ஏதாவது மாற்றத்தைச்செய்துவிட்டால், பிறகு அவைகளைச்செயற்படுத்தவே முடியாது.

எனவே நெடுங்காலக் கைக்கோள் குறுங்காலக் கைகோளிலிருந்து பிறக்கும்படி விட்டுவிடும்படி நாம் கட்டாயப்படுத்தப்படுகிருேம். ஏனெனில் குறுங்காலத்தில் நிலையான தன்மையை (stability) உண்டுபண்ணும் எதுவும் நெடுங்காலத்திற்கு ஏற்றதாயில்லாமலிருக்காது. பணக்கணியக் கொள்கை மிக நெடுங்காலங்களுக்கே (longer periods) பொருத்தமுடையதெனக் காணப்படுவதால் பேரளவு பணச் சிருட்டிப்பை விரும்பும் அல்லது பணத்தை அழிக்கக்கோரும் குறுங்காலக் கைக்கோள் தவிர்க்கப்

படவேண்டுமென்ற இந்த வாசகமும் இதனுடன் சேர்த்துக் கொள்ளப்படவேண்டும். இந்த வாசகமும் 'நிலுவையிலுள்ள (on balance) பேரளவு பணச் சிருட்டிப்பு அல்லது நிலுவை யிலுள்ள பேரளவு பண அழிப்பு' என்று மாற்றியமைத்துக்கொள்ளப் படவேண்டும். சில சமயங்களில் பணச் சிருட்டிப்புத் தேவைப் படலாம். சாதாரண மனிதனுக்கு பணமே மிகவும் ரொக்கநிலையான (liquid) செல்வமாகும். அவன் சில சமயங்களில்—உதாரண மாக, கடுமையான மந்தத்தின்போது—தனது சொத்தின் பெரும் பகுதியையும் அவர் ரொக்கநிலையில் வைத்துக்கொள்ளவே விரும்ப லாம்; நாம் ஏற்கனவே நான்காம் அத்தியாயத்தில் கண்டபடி, அவருக்கு இருப்பாக வைத்துக்கொள்ளுவதற்கு நிறைய அளவு பணம் சிருட்டிக்கப்படாவிட்டால், அதன் விளைவு வட்டிவீதத்தின் அதிகரிப்பில் கொண்டுபோய் நிறுத்தும். இவ் வட்டிவீத அதி கரிப்பு மந்தத்திலிருந்து மீட்சிக்கு வந்துகொண்டிருக்கும் நிலையைத் தடை செய்யும். நெடுங்காலக் கைக்கோள், குறுங்காலக் கைக் கோளிலிருந்தே தோன்றவேண்டும் என்னும் முடிவை மாற்றி அமைக்க முடியாதுபோல் தோன்றுகிறது.

இது குறுங்காலக் கைக்கோளின்மீதே முழுப் பொறுப்பையும் சுமத்துகிறது. அதனுடைய நோக்கம் என்னவாக இருக்க வேண்டும்? சென்ற அத்தியாயத்தை ஆராய்ந்ததிலிருந்து, வேலை நிறைவு (full employment) என்ற நிலையில் சேமிப்பிற்கும் முதலீட்டிற்குமிடையே சமன்பாட்டை (equilibrium) நிலை நிறுத்துதலே அதன் தெளிவான குறிக்கோளென்று முடிவு செய்வது வாதப் பொருத்தமுடையதாகும். இதையே நாம் விளக்க உரையாகக்கூடக் (definition) கொள்ளலாம்; ஆனால் இதற்கு மேலும் சில பொருள் விளக்கங்கள் (interpretation) தேவை. பூரிப்பு, மந்தம் என்று இப்படி மாறிமாறித் தொடர்ந்துவந்துகொண் டிருக்கும் நிலையானது ஏற்படுத்தும் விளைவுகளுள் ஒன்று, ஒவ் வொரு எட்டு ஆண்டுகளிலும் இரண்டு அல்லது மூன்று ஆண்டு களில் நாட்டின் பெருவாரியான முதலீடு (investment) திணிக்கப் படுவதேயாகும். இதனால் அமைப்புத் தொழில்கள் (construction industries) அவைகளின் மீது சுமத்தப்படும் உச்சமான பொறுப்பை (peak pressure) நிறைவேற்றும் பொருட்டு நிறைய அளவுத் தொழிலாளர்களையும் மூலதனத்தையும் விரும்புகின்றன. வேலை நிறைவு, (full employment) என்பது நாட்டிலுள்ள தொழிலாளர்கள், மூலதனம் யாவும் மும்முரமாகப் பயன்படுத்தப் படும் நிலை என்று விளக்கப்பட்டு அந்த நிலையைத் திடப்படுத்த முயற்சி நடக்குமேயானால், இதனால் ஏற்படும் விளைவு யாதெனில், நாடு தான் ஒவ்வோர் ஆண்டிலும் விரும்பும் அளவிற்குமேலாக

உச்சமாக முதலீடுசெய்வதை வாணிபச் சகடம் முழுவதிலும், நிறை வேற்றும். சுருக்கமாகச் சொல்லின், இத்தகைய வேலைநிறைவை அடையும் முயற்சி, பொதுமக்களிடமிருந்து கட்டாயச் சேமிப்பு களைக் கசக்கிப் பிழியும் நிலைக்குக் கொண்டுசெல்லும். இம்மாதிரி யான நிலை, ஏற்கனவே விளக்கப்பட்டது போல், நிலைத்ததன்மை யற்றும் (unstable) பண வாட்டத்திற்கு (deflation) ஒரு பீடிகை போன்றுமிருக்கும். தங்களது வருமானங்களைத் தங்கள் விருப்பம் போல் செலவழிக்க உரிமையுள்ள எந்த நாட்டிலும், நாட்டுப் பொருளாதாரத்தின் இயல்பான வடிவம்—அதாவது முதற் கருவிப் பொருள்களைச் (capital goods) செய்யும் தொழில்களுக்கும், நுகர்வோர் பண்டங்களை உற்பத்தி செய்யும் தொழில்களுக்கும், இவை இரண்டுக்கும் இடையேயுள்ள தொழில்களுக்கும் அளிக்கப் படும் சாதனங்களின் பங்கீடு (distribution of resources), பொது மக்கள்தம் வருமானத்தால் தீர்மானிக்கப்படுகிறது. அல்லது இன்னும் கண்டிப்பாய்ப் பார்ப்போமானல் அனைவரும் வேலை யிலமர்த்தப்பட்டால் வரும் வருமானத்தால் தீர்மானிக்கப்படும்[1]. இயல்பான 'வடிவம்' (normal shape) இருக்கும் காலத்திலிருப் பதை விட, அமைப்புத் தொழில்களில் வேலையிலமர்த்தப்பட்டிருக் கும் மக்களின் எண்ணிக்கை இக் காலங்களில் அதிகமாகவே யிருக்கும். எல்லா மக்களையும் வேலையிலமர்த்துவதென்பது, பொரு ளாதாரத்தின் வடிவத்தை மாற்றியமைப்பதாகும். இவ்வாறு மாற்றியமைத்தலை நீடிக்கச் செய்வதற்கு, மக்கள் தங்களின் வரு மானங்களைத் தங்கள் விருப்பம்போல் செலவு செய்யவிடாமல் அவர்கள் வருமானங்களில் சிறு பகுதியையே செலவிடும்படி செய் யும் சில வழிகளால்தான் முடியும். வேறு வகையில் சொல்லப் போனல் கட்டுப்பாடெதுவுமில்லாத பொருளாதார முறையில், அமைப்புத் தொழில்களில் (construction trades) பூரண வேலை (complete employment) என்பது பொருத்தமுடையதல்ல. பூரிப்பு, மந்தம் ஆகிய இரண்டும் மாறி மாறி வந்துகொண்டிருப்ப தால் ஏற்படும் ஆபத்துக்களைத் தவிர்ப்பது நமது முதன்மையான நோக்கமாக இருப்பின், நாம் 'வேலை நிறைவு' (full employment) என்பதை, எல்லா மக்களையும் அமைப்புத் தொழில்களில் முழுமை

1. அரசாங்கம், தனது வரி வசூல் செய்யும் அதிகாரத்தாலும் வசூல் செய்த தொகையைச் செலவழிக்கும் அதிகாரத்தாலும் கணிசமான அள்விற்குத் தன் செல் வாக்கை இதில் நாட்டக்கூடும். தான், நடப்புப் பண்டங்களின்மீது செலவழிப் பதைவிடக் குறைவாக வரிகளை விதிக்குமானல், அரசாங்கம் இதன் விளைவாக நாட்டின் சேமிப்பைக் குறையச்செய்யும். ஏராளமான அளவு உபரித் தொகைகளை (surplus) தன்னிடம் இருக்குமாறு அமைத்துக்கொள்ளுமானல், சேமிப்பை அதிகரிக்கச் செய்யும். ஆனல், ஒரு குடியரசு நாட்டில், நடவடிக்கைகள் யாவும் வாக்காளர்களின் விருப்பத்தையே பிரதிபலிப்பதாக இருப்பதாக உள்ளன. அவ் வாக்காளர்கள், மக்களால்தான் நாட்டின் பொருளாதார நிலை உருவாக்கப்படுகிற தென்னும் வாசகத்தைப் பொய்யாக்க விரும்புவதில்லை.

யாக வேலையிலமர்த்திக் கொள்ளுதல் என்னும் நிலைக்குச் சற்றுக் குறைவான நிலை என்றே குறிப்பிடவேண்டும். இது, 'வேலை நிறைவின் போது சேமிப்பு முதலீடு இரண்டும் சமன்பாடாக இருக்கும்' என்னும் கொள்கையினை மீண்டும் நிலைநாட்ட உதவும். ஆனால் 'வேலை நிறைவு' என்ன என்பதை இதனால் விளக்குவது கடினம். 'வேலை நிறைவு' என்பதைப் பண்டங்களுக்கும் பணிகளுக்குமான பொதுவான தேவையும் (குறிப்பிட்ட பண்டங்கள், பணிகளுக்கான தேவையல்ல) பண்டங்கள் பணிகள் ஆகியவைகளின் பொதுவான அளிப்பும் சமமாக இருக்கும் ஒரு நிலையென்று சுருக்கமாக விளக்கக்கூடும். இக் கருத்தே கொள்ளப்பட்டு, பல ஆண்டுகளுக்குக் கடைப்பிடிக்கப்படுமானால், அமைப்புத் தொழில்களில் உபரியாகவுள்ள உழைப்பும் மூலதனமும் கொஞ்சங் கொஞ்சமாக வேறு வேலையை நாடிச் செல்லும். இது நடந்து விட்டால், 'வேலை நிறைவு' என்பதை அச் சொல்லுக்கேற்ற பொருளிலேயே உணர்த்தலாம். 'சேமிப்பிற்கும் முதலீட்டிற்கும் வேலை நிறைவுப் புள்ளியில் (at the point of full emloyment) சமன்பாடு உண்டு பண்ணுவதே' பணக் கைக்கோளின் நோக்கம் என்றும் கூறலாம்.

கைக்கோளின் நோக்கத்தை விளக்கினோம். அதனை எவ்வாறு நிறைவேற்றுவது? சமீப ஆண்டுகளில் 'வேலை நிறைவு'க் கைக்கோள் (policy) பொருளாதாரத்தின் ஒரு பிரிவாக (branch of economics) வளர்ந்துகொண்டு வருகிறது. இதனை முற்றிலும் விளக்குவதற்கு இந்நூல் முழுதுமே போதாது. சென்ற அத்தியாயத்தில்விளக்கியது போல், வேலை நிறைவிற்கு அடிப்படியானவைகள் சிக்கனம் (thriftiness) அல்லது பொதுமக்களின் சேமிப்பு நாட்டமும் (propensity to save) மூலதன அளவுச் சிருட்டிப்பு அல்லது முதலீடுமாகும். வாணிபச் சகடத்தைக் கட்டுப்படுத்த விழையும் அரசாங்கம் இவ்வடிப்படைக் கருப் பொருள்களைக் (elements) கட்டுப்படுத்தவேண்டும். அது கடைப்பிடிக்கும் பல முறைகள் பண முறை என்று ஏற்றுக்கொள்ளத்தகாதனவாகும். அரசாங்கத்தின் கைக்கோளினால் (public Policy) சிக்கனம் மாற்றியமைக்கப்படக் கூடும்—உதாரணமாக வருமானங்களை மறுபகிர்வு (redistribution) செய்வதனால் இது இயலும். செல்வர்களுக்கு அதிகமாக வரி விதித்து, அதனால் வரும் ஆதாயத்தை (proceeds) ஏழை மக்களுக்களித்தால், இதன் விளைவு சிக்கனத்தைக் குறையச் செய்யும். இதற்கு மாறாக ஏழை மக்களுக்கு அதிகமாக வரிவிதித்து அரசாங்கமே அந்த ஆதாயத்தை எடுத்துக்கொண்டால் (இக் கைக்கோள் தான் நாசி (Nazi), சோவியத்து எதேச்சாதிகார நாடுகளால் 1939ஆம் ஆண்டு போர் ஆரம்பிக்கின்ற வரையிலுள்ள ஆண்டுகளிலும், மற்ற நாடுகளால் போர்க்காலத்திலும், பின்பற்றப்

பட்டதாகும்) இதன் விளைவு சிக்கனத்தை அதிகரிக்கும். மக்கள் மற்றச் சமயங்களில் எதிர்க்கக்கூடியவற்றை ஏற்றுக்கொள்ளும் போர்க்கால நெருக்கடி நிலைமைகளில் (emergency of war) தவிர, இத்தகைய கைக்கோள்களை ஒரு சுதந்திர நாட்டில் விரைவாக செயற்படுத்த முடியாது. மாறுகின்ற சூழ்நிலைகள் இவைகளுக் கெதிரான கைக்கோளைக் கோரும்போது இவைகளை மாற்றி அமைப்பதும் கடினம். எந்த வாணிபச் சகடத்தை எடுத்துக் கொண்டபோதிலும் சிக்கனத் தன்மை என்பது அரசாங்கக் கைக் கோளினால் கொண்டுவரப்படுவதாக இல்லை.

இதனால், வேலை நிறைவுக் கைக்கோள் செயல்படுவதற்கு முக்கிய வழி, முதலீட்டளவே என்பது தெளிவாகின்றது. பண முறைகளல்லாத பல வழிகளின் மூலம் அரசாங்கம் முதலீட்டளவை பாதிக்கக்கூடும், ஏன், நிச்சயமாகவே பாதிக்கும். பொதுமக்களின் நெடுவாழ்வுப் பண்டங்களுக்காக தேவை குறையும்போது அர சாங்கம் நேரடியாகத் தலையிட்டுத் தானே சொந்தமாக முதலீடு செய்யவும் முனையும் (இக் கைக்கோளைக் குறித்த காலத்தில் தேவையான அளவிற்கு நிறைவேற்றுவதில் நடைமுறையில் பல இடர்ப்பாடுகள் நேர்ந்தபோதிலும்). அரசாங்கம், அமைப்புத் தொழில் திட்டங்களுக்கான (construction project) அனுமதி வழங் கும் (licensing) முறையினை ஏற்படுத்தலாம். வரிவிதிப்பு ஆயுதத் தையும் பயன்படுத்தலாம். இந்நூலில், 'வேலைநிறைவு' என்னும் இப்பரந்த தலைப்பு முழுவதையும் நாம் ஆராயப்போவதில்லை. பண முறையைச் சார்ந்த பகுதிகளை மட்டுமே நாம் ஆராய்கின்றோம்.

இது ஒரு கணிசமான வரையறை (limitation) யாகும். வாணிபச் சகடமென்பது முற்றிலும் ஒரு பண நிகழ்ச்சியல்ல. பண ஒழுங்கீனத்தாலன்றி மற்றக் குழப்பங்களாலும் இது ஏற்படலாம். உதாரணமாக அரசாங்கத்தின் மிக அதிகக் கண்டிப்புள்ள தவறான கைக்கோளானது (mistaken policy) தொழில் நடவடிக்கையைத் தடை செய்யும்போது, மையபாங்கு தனது பண முறையைக் கையாளுவதன் மூலம், சம நிலையான வேலை நிறைவை ஏற்படுத் தும் என்று எதிர்பார்ப்பது முறையல்ல. பணமுறையல்லாத மற்றக் குழப்பங்களினால் ஏற்படும் விளைவை நிவர்த்தி செய்யும் சக்தி பண முறைக்கு உண்டென்பது உண்மையே. பணக் கைக்கோள், சக்தி வாய்ந்ததாக இருப்பினும் அதன் விளைவுகளில் தராதர மறியாத தொன்றாகவே யுள்ளது; அதனுடைய விளைவுகளை நாட் டின் பொருளாதாரம் முழுவதுக்குமே அளிக்கின்றது. ஆனால் ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சியில் ஏற்படும் தொல்லை பொருளாதார முறை முழுவதையுமே மாற்றி அமைத்துவிட முடியாது. ஏனெனில் குறிப்

பிட்ட நிகழ்ச்சியில் ஏற்படும் தொல்லை இயந்திரத்தின் கட்டுக் கோப்புப் பகுதிகளிலே மட்டுமே சமன்கேட்டை உண்டுபண்ணு கிறது. பாங்கின் கைக்கோள் (கீழே ஆராய்ந்துள்ள சில தகுதிக ளுடன்) முதலீட்டின் அதிகரிப்பைத் தூண்டுதல் கூடும். ஆனால் அது, எந்தவிதமான முதலீடு செய்யப்பட வேண்டுமென்று கட்டளையிடுவதில்லை. விரைவாக வளர்ச்சியடைந்து செல்லும் சில தொழில்களுக்கும் மிக மெதுவாக வளர்ச்சியடையும் சில தொழில் களுக்குமிடையே ஏற்படும் சமன் கேட்டினால்தான்(disequilibrium) விலைகளின் இறக்கம் அடிக்கடி ஏற்படுகின்றது. இத்தகைய நிகழ்ச்சியில் மையபாங்கு முதலீட்டை அதிகரித்தால், அவ்வதி கரிப்பு ஏற்கெனவே மிக விரைவாக வளர்ந்து தொழில்களையே இன்னும் அதிகமான வீதத்தில் வளரச் செய்யும். எனவே பண நடவடிக்கையால் பண முறை தவிர்த்த வேறு குழப்பங்களை நிவர்த்தி செய்யக் கூடும் என்று திடீர் முடிவுகட்டுவதில் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். 1931ஆம் ஆண்டில் மாக்மிலன் குழுவினர் (Macmillan Committee) அதிகார பூர்வமாக இப் பிரச் சினை முழுவதையுமே சுருக்கி உரைத்துள்ளனர். அவர்கள் அறிக் கையில் ஒரு பகுதியில் கீழ்க்கண்டவாறு எழுதியுள்ளனர்: 'போருக் குப் பிந்திய பத்தாண்டுகளில் ஏற்பட்ட பொருளாதாரக் குழப்பங்கள் முக்கியமாக பண நிகழ்ச்சிகளின் ஒழுங்கீனமான தன்மையினால் வேண்டுமென்றே உண்டாக்கப்படவில்லை; பணமுறையல்லாத நிகழ்ச்சியில் ஏற்படும் வழக்கத்திற்குப் புறம்பான அதிக அளவு வேக மாற்றங்களால் தான் அவை உண்டாக்கப்படுகின்றன...... எனவே விலை மட்டமானது (price level) பணம், பணமல்லாத காரணிகளின் செயல், எதிர் செயலின் (interaction) விளைவு என்பது எங்கள் கருத்து. மேலும் உலக முழுவதிலும் சமீபத்தி லிருந்த விலைகளின் இறக்கம் ஒரு பண நிகழ்ச்சி (monetary phenomenon) என்றும், அப்பண நிகழ்ச்சி, யாதொரு பரிகாரமும் செய்ய இயலாத ஒரு பணமல்லாத நிகழ்ச்சியுடன் சேர்ந்து, இதுவரையில் நிகழ்ந்திராத ஓர் இடர்ப்பாட்டினைக் களைவதற்கு இயலாமற் போய் விட்டது'.

மேலும், மாக்மிலன் குழுவினரின் (Macmillan Committee) அறிக்கைக்குப் பிறகு, அரசாங்கம் பணமல்லாத மற்ற நிகழ்ச்சி களால் ஏற்படும் பொருளாதார மாற்றங்களையும் பணமல்லாத ஏனைய முறைகளால் தவிர்க்கும் ஒரு முறையை வெகுவாகக் கையாள ஆரம்பித்தது. பணத்துறையில் மைய பாங்கிற்குள்ள

1 நிதியம், தொழில் ஆகியவைகளுக்கான குழுவினரின் அறிக்கை, (Report of the Committee of Finance and Industry.) 92ஆம் பக்கம்.

அதிகாரத்தையும் கட்டுப்படுத்தியது. இங்கிலாந்தின் பாங்கு, தன்னுடைய மிகப் பெரிய வாடிக்கைக்காரரான அரசாங்கக் கருவூலம், நாட்டுக் கடனின் சுமையைக் குறைத்துக்கொள்வதற்காக குறைந்த வட்டிவீதங்களை நிரந்தரமாக விரும்பியதை, நன்குணர்ந்தே யிருந்தது. ஆயினும் பொதுவான நிலைத்த தன்மையை (general stabitity) நிலைநாட்ட பாங்கு சிறந்ததென்று கருதிய கைக்கோளைக் குறுக்கிடும் இச்சுயநலம் அனுமதிக்கப்படவில்லை. சமீப ஆண்டுகளில், மலிவுப் பணம் (cheap money) என்பது அரசியல் வாதியின் மாய மோதிரமாக இருக்கிறது. கடன் சுமையில் அது ஏற்படுத்தும் விளைவினாலும், நாட்டுப் பொருளாதார நிலையில் அது நிரந்தரமாக ஏற்படுத்தும் நலமான விளைவாலும் மேலே கூறியபடி இது ஒரு மந்திர சக்தி வாய்ந்த மாய மோதிரமாக அரசியல் வாதிக்கு இருந்து வருகிறது. எனவே, இங்கிலாந்து பாங்கு எவ்வாறு தனது அதிகாரத்தின் முக்கிய ஆயுதத்தை இழக்கும்படி செய்யப்படுகிறதென்பதை நாம் பார்ப்போம்.

சமீப ஆண்டுகளில் பண முறைகளின் அதிகாரத்தைப் பின்னணிக்குச் (back ground) செலுத்தும் போக்கு ஏற்பட்டுள்ளது. இதற்குக் காரணம் பண முறைகளால் இதற்குமுன் ஏற்பட்ட தவிர்க்க இயலாத தொந்தரவுகளும், பண சம்பந்தமான எந்தவிதமான இடர்ப்பாட்டையும் மந்திரசக்தி வாய்ந்த குணப்படுத்து முறை (magic cure) இருப்பதாகக் கருதும் நம்பிக்கையுமே. இந்த எதிர் விளைவு எல்லை கடந்து சென்றுவிட்டதன் காரணமாக மீண்டும் பண முறையின் ஆதிக்கம் திரும்பி வருவதற்கான அறிகுறிகள் தோன்றுகின்றன. பண முறைகள் அற்புதங்களைச் சாதித்துவிட முடியாதென்று கூறுவதென்னவோ உண்மையே—ஆனால் இம்முறைக்கு வேறான முறைகளான, நேரடியான பங்கீட்டு முறைகள் (direct rationing methods) வியாபாரத்திற்கான பங்கு ஒதுக்கல் முறைகள் (allocation systems), அனுமதி உத்திரவுகள் (licencing orders) ஆகியவைகளும் ஏமாற்றத்தையே தருகின்றன.பணமுறைகள் சில சமயங்களில் கடினமாகவும், பட்சபாதமாகவும், அருவருக்கத்தக்கனவாகவும் இருக்கின்றன என்பதென்னவோ உண்மைதான் — ‘பருப்பொருளியலான (physical) கட்டுப்பாடுகள் (controls) என்றழைக்கப்படுபனவும் இவ்வாறே உள்ளன. வருங்காலத்தில் போர் நடந்த ஆண்டுகளிலும் அவைகளை உடன் தொடர்ந்த ஆண்டுகளிலும் இருந்ததைவிட நிலைத்த பொருளாதார நிலையைக் (economic stability) கொண்டு வருவதில் அதிகமாகப் பங்குபெற பண நிருவாகம் அனுமதிக்கப்படும். இவ் விளைவு நெடிது தூரம் நீடிக்கக் கூடியதல்லவாகையால் பணக் கட்டுப்பாடு பொதுவான பொருளாதாரக் கைக்கோளின் (general

economic policy) ஓர் அங்கம் என்பதை எளிதில் மறந்துவிடுவர் (பணப்பித்தர்களாக இல்லாத பலர் ஏற்கெனவே இம்மாதிரி மறந்து விட்டனர்).

## மைய பாங்கின் ஆயுதங்கள்
## (The Weapons of the Central Bank)

மையபாங்கின் முக்கிய அதிகாரம், இருப்பிலுள்ள பாங்கு வைப்புகளின் அளவை (volume of bank deposits) அதிகப் படுத்தவோ அல்லது குறைக்கவோ அதனுல் முடியும் என்பதே. தற்காலத்தில், பாங்கு வைப்புகள் (bank deposits) மொத்தப்பண அளிப்பில் (total money supply) பெரும் பகுதியாக இருப்பதால், பண அளிப்பை அதிகரிக்கவோ குறைக்கவோ இதனுல் முடிகின்றது. இவ்வதிகாரம் எவ்வாறு செயல்படுத்தப்படுகின்ற தென்பதை இரண்டாவது அத்தியாயம் விளக்குகின்றது. மையபாங்கு, பண அளிப்பை அதிகரிக்க விழைந்தால் கடன்பத்திரங்களைப் பண அங்காடியில் (money market) வாங்குவதன் மூலம் தன் சொந்தச் சொத்துகளை (assets) அதிகரித்துக்கொண்டு பண அளிப்பையும் அதிகரிக் கின்றது. இக்கடன் பத்திரங்களுக்குப் பணம் திருப்பிக் கொடுப்ப தானது, இங்கிலாந்து பாங்கில் வைக்கப்பட்டுள்ள அங்கத்தினர் பாங்குகளின் வைப்புகளை அதிகரிக்கும். இவ்வைப்புகளே அங்கத் தினர் பாங்குகளின் காப்பு ரொக்கங்கள் (cash reserves). எனவே அவைகளின் சொத்துகளையும் (assets) அதன்மூலம் அவைகளின் வைப்புகளையும் (இவ்வைப்புகள் பொதுமக்களின் ரொக்கமாகும்), தங்களிடம் அதிகரித்துள்ள காப்பு ரொக்கங் களைப்போல் பன்னிரண்டு மடங்கு அதிகரித்துக்கொள்ள இது வழிவகை செய்கின்றது. இங்கிலாந்து பாங்கு, தனது சொத்து களில் (assets) சிலவற்றை விற்பதானது இதற்கு எதிரிடையான, விளைவுகளைத் தரும்.

இது, இங்கிலாந்து பாங்கின் கையிலுள்ள மிக உண்மையான அதிகாரமாகும். இதை ஒவ்வொரு மாதமும் வெளியாகும் பாங்கு அறிக்கைகளின் மூலம் நன்கு அறியலாம். இங்கிலாந்து பாங்கின் சுதந்தரமான நடவடிக்கையைக் கட்டுப்படுத்தும் சிலவற்றை இங்குக் கூறுமலிருக்க முடியாது. முதலாவதாக அதனுடைய சொத்துகளை அதிகரிக்க அல்லது குறைக்க அதற்குப் பூரண சுதந்தரம் இல்லை. அது கடன் பத்திரங்களை வாங்குகின்றது; ஆனுல், அது வாங்கும் £ 100 கடன் பத்திரங்கள் ஒவ்வொன்றுக்கும் இணையாக, அதனுடைய கடன்காரர் ஒருவர் £ 100 கடனைத்

திருப்பித்தருகிருரென்று வைத்துக்கொள்வோம். அப்போது அதனுடைய மொத்தச் சொத்துகளில் யாதொரு விளைவும் ஏற்பட்டுவிடாது. இவ்வாறு யாதொரு மாற்றமுமில்லாமல் உள்ள நிலைத்திருக்கும் நிலைமையால் சீர்கேட்டைக் குணப்படுத்தக் கூடும். சொத்துகளைக் (assets) குறைத்துக் கொள்வதிலும் இதே தொல்லையுள்ளது. அங்காடியில் கடன்பத்திரங்களை விற்பதானது பணஅங்காடியில் (money market) பணத்தை அரிதாகச் (tight) செய்துவிடும். மேலும் சில கழிவகங்கள்(discount houses)இரண்டாவது அத்தியாயத்தில்கூறியுள்ளபடி 'பாங்கினுள் விரட்டியோட்டப்படும்' (driven in to the Bank). நெடுங்காலப் பழக்கத்திலுள்ளதும் தேவையானதுமான வழக்கத்திஞல்(customs) அங்கீகரிக்கப்பட்ட எந்தக்கழிவகமும் பாங்கிஞல் கடன் கொடுக்கப்படுதற்குமறுதலளிக்கப்படுவதில்லை. எனவே பத்திரங்களின் விற்பனை அதன் நோக்கப்படி, பாங்குகளின் மொத்தச் சொத்துகளைக் குறைத்துவிடும் சாதனையை அடைவதில்லை. பணஅங்காடி பாங்கினிடம் சென்று கடன் கோரும்படி நேரிடும் போது, அது தான் பெறும் கடன்களுக்கு பாங்குவீதத்தை (Bank Rate) அளிக்கவேண்டும். இதஞல் இந்தச் சூழ்ச்சித்திட்டம் இதஞல் நடைமுறையிலுள்ள வட்டி வீதத்தை அதிகரித்து, அதன்மூலம் கடன் கட்டுப்பாட்டை அமலாக்கும் முக்கிய நோக்கங்களில் ஒன்றை நிறைவேற்றிக் கொள்ள முடிகிறது. கழிவகங்கள் (discount houses) தாங்கள் பாங்குவீதத்தில் (Bank Rate) கடஞகப் பெறும் ஒவ்வொரு பென்னிக்கும் நிறைய அளவு பணத்தை இழப்பதால் அவைகள் தங்களாலியன்றவரையில் விரைவில் கடனைத்திருப்பி அடைக்க முயல்கின்றன. மையபாங்கு தன் சொத்துகளை (assets) விற்பதின்மூலம் கடனைக் கட்டுப்படுத்தும் முறையில் மற்ருெரு இடர்ப்பாடும் நேரலாம். அதற்கு விற்பனை செய்ய அதிக சொத்துகள் இல்லாமல் போகலாம். இக்குறைபாடுகள் யாவற்றையும் நன்கு கவனத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். ஆஞல் இவைகள்யாவும், மையபாங்கு தன் சொத்துகளைத்தானே தீர்மானிக்க இயல்வது மூலம் அங்கத்தினர் பாங்குகளின் காப்புரொக்கங்களையும் தீர்மானிக்க இயலும் என்னும் கருத்தின் பரந்த உண்மைக்குச் சில சிறு விதிவிலக்குகளாகும்.

ஆஞல், அங்கத்தினர் பாங்குகளை அவைகள் தங்களின் சொந்த சொத்துகளை அதிகரிக்க அல்லது குறைக்கச் செய்யும் பொருட்டும் அதன்மூலம் பொதுமக்களின் பண அளிப்பான தங்களின் வைப்புப் பொறுப்புகளை (deposit liabilities) அதிகரிக்க அல்லது குறைக்கும் நோக்கத்துடனும் தங்களின் ரொக்கக் காப்புகளை (cash reserves) அதிகரிக்கும் போதோ

அல்லது குறைக்கும் போதோ, நம்பியிருத்தல் தகுமா? இதற்கு விடை, சட்டத்தினுல் அல்லது வழக்கத்தினுல் (customs) விதிக்கப்பட்டுள்ள ரொக்கத்திற்கும் காப்புகளுக்குமுள்ள வீதத்தை எவ்வளவு கண்டிப்பாக பாங்குகள் பின்பற்றுகின்றன என்பதைப் பொறுத்துள்ளது. இதற்கு கிரேட் பிரிட்டனில் யாதொரு சட்டமும் இல்லை யாயினும், இதனைக் கடைப்பிடிப்பது மிகவும் கண்டிப்பாக வுள்ளது. ரொக்கத்திற்கும் வைப்புகளுக்குமிடையே யுள்ள வீதம் வழக்கமாகக் கடைப்பிடிக்கப்பட்ட வீதத்திற்கு அதிகமாகவோ அல்லது குறைவாகவோ அதிகமாக மாற்ற மடைவதில்லை. சமீப காலம் வரையில் இந்த வீதம் 10 சதவீதமாக இருந்தது. ஆனுல் 1947-ஆம் ஆண்டு இங்கிலாந்து பாங்கிற்கும் ஏனைய பாங்கு களுக்கும் ஏற்பட்ட உடன்படிக்கையின் பிரகாரம் இது 8 சதவீத மாகக் குறைக்கப்பட்டது. இதனுல், இங்கிலாந்து பாங்கின் சொத்துகளை அதிகரித்தல் அல்லது குறைத்தலானது அதற்குச் சமமான பொதுமக்களின் பாங்குப்பண அளிப்பின் அதிகரிப்பு அல்லது குறைதலினுல் தொடரப்படுகிறது என்பது தெளிவாகிறது. அமெரிக்காவில் இம்மாதிரியான உடன்விளைவு ஏற்படுவதில்லை. அங்கத்தினர் பாங்குகளின் ரொக்கவீதம், சட்டத்தினுல் விதிக்கப் பட்ட அளவிற்குக் குறைவாக அனுமதிக்கப்படுவதில்லை யென்பது தென்னவோ உண்மை. (இந்த அளவு, நேரத்திற்கு நேரம், இடத்திற்கு இடம் மாறிக்கொண்டேயிருக்கும்). ஆயினும் இது பல சமயங்களில் இந்த அளவைக் காட்டிலும் அதிகரிப்பதன் மூலம் இரண்டாம், அத்தியாயத்தில் விளக்கப்பட்ட, அதிகப்படியான காப்புகள் (Excess reserves) என்னும் பொருளாதார நிகழ்ச் சியை ஏற்படுத்துகிறது. எனவே, பாங்குப்பணத்தை அதி கரிக்கும்படி கட்டாயப்படுத்தும் ஐக்கிய ரிசர்வு பாங்குகளின் ஆற்றல் இதனுல் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது.

மையபாங்கு தான் விழையும் அளவிற்குப் பண அளிப்பை உண்டுபண்ணக்கூடும்; பொதுவாகக் கூறுமிடத்து, இக்கோட்பாடு சரியானதே. அதாவது மையபாங்கு முதலீட்டின் அளவை நேரடியாகப் பாதிக்கும் ஆற்றல் வாய்ந்ததாக வுள்ளது. முதலீட்டளவின் கணிசமான அளவிற்கு பாங்குகளிடமிருந்து கடன் வாங்கியே நிதியளிக்கப்படுகிறது—குறிப்பாக, கச்சாப் பொருள்களை இருப்புசெய்வதற்கும் இன்னும் மற்றவகை நடை முறை முதலுக்குமான முதலீடுகளுக்கு நிதியளிக்கப்படுகிறது. மையபாங்கின் கட்டாயத்தின் பேரில், பாங்குகள் தங்களது நடவடிக்கைகளின் அளவைக் குறைத்துக்கொண்டிருக்கும்போது, கடன் வாங்கப் போகிறவர், பாங்குகளைக் கடன் கொடுக்குமாறு பணியச் செய்வதற்கு மிகவும் சிரமப்பட நேரிடும். இதற்கு

எதிரிடையாக, பாங்குகள் தங்களிடமுள்ள அதிகமான பணத்தை எப்படியாவது கடன் கொடுக்க வேண்டுமென்று முனையும் போது, அவைகள் அநேகமாக கடன் பெறுபவர்களைத் (borrowers) தேடிக்கொண்டுச் செல்லும். இவ்வாறு நேரடியாகப் பாதிக்கும் சக்திகளை மிகைப்படுத்தக் கூடாது. உதாரணமாக, பாங்குகள் கடனுக்காக மனுபோட்டிருக்கும் மனுதாரரை நடத்துகின்ற முறையின் தன்மை காலத்திற்குக் காலம் வேறுபடுகிறதென்கிற கருத்தை அனுபவம் வாய்ந்த பாங்கர்களில் பெரும்பாலோர் ஏற்றுக்கொள்வதில்லை. கிரேட் பிரிட்டனில் கடந்த இருபது ஆண்டுகளாக, கடன்களின் மொத்த அளவு, பாங்கர்கள் வைப்புகளின் எந்தச் சரியான வீதத்தில் கடனளிப்பு இருக்கவேண்டுமென்று கருதுகிருர்களோ; அந்த வீதத்திற்கும் குறைவாகவே தொடர்ந்து இருந்துவந்திருக்கிறது. ஏதாவது நல்ல திட்டம் (proposition) ஒன்றினுல் இந்நிலையை மாற்றியமைக்கக்கூடுமென்பதில் ஐயமில்லை. மற்ருெரு நிகழ்ச்சியினை நோக்குவோம். உள்ளுணர்வுடன் அல்லது உள்ளுணர்வின்றி (consciously or unconsciously) தங்களது உளப்பாங்கான (psychological) போக்கை மாற்றிக்கொள்ள இயலும் என்ருலும், தங்களின் ரொக்கக் காப்புகள் (cash reserves) அதிகரித்த போதெல்லாம், அவைகளைக் கடனுகப் பெறுவதற்கு யாருமில்லாத காரணத்தால் அவர்கள் அளித்த கடன்கள் குறைந்துவிட்டன என்பதற்கு எழுத்துப் பூர்வமாகப் பதிவுசெய்யப்பட்ட பல நிகழ்ச்சிகளிருக்கின்றன. எடுத்துக்காட்டாக, 1932-ஆம் ஆண்டு ஜுன் மாதத்திலிருந்து 1933-ஆம் ஆண்டு ஜுன் வரையிலுள்ள காலத்தில் லண்டன் தீர்வக பாங்குகளின் மொத்த வைப்புகள் £ 214 மில்லியனுக அதிகரித்தபோது கடன்கள் £ 77 மில்லியனுகக் குறைந்தன.

பணஅளிப்பின் அதிகரிப்பு, இம்மாதிரியான வழிகளின் மூலம், முதலீட்டின் அளவை, வட்டிவீதத்தின் மறைமுக விளைவினுல் பாதிப்பதைவிட, மிகக்குறைவாகவே பாதிக்கின்றது. ஐந்தாம் அத்தியாயத்தில், பண அளிப்பில் (M) ஏற்படும் குறைப்பு (reduction), பொதுமக்கள் ரொக்கநிலையில் (L) வைத்திருக்க விழையும் சாதனங்களின் அளவைக் குறைப்பதோடு, பலவகையான 'நெருங்கிய - பணப் (near money) பத்திரங்களின் வட்டிவீதத்தையும் உடனடியாக உயர்த்தும் என்று விளக்கப்பட்டது. பொதுமக்கள் தங்களின் பண இருப்புகளை நிரப்பும் பொருட்டு, தேவையான அளவிற்கு ரொ (L) வைக் குறைப்பதற்கான வட்டிவீதம் அதிகரிக்கும் வரை, பொதுமக்கள் தங்களிடமுள்ள கடன் பத்திரங்களை விற்பார்கள் அல்லது விற்க

முயற்சி செய்வர். இதுபோலவே 'ப' (M)ல் ஏற்படும் அதிகரிப்பு வட்டிவீதங்களைக் குறையச் செய்யும். ப (M)வின் அளவு, மைய பாங்கினாலேயே முற்றிலும் தீர்மானிக்கப்படுகிறதென்றும், இம் முடிவில் பொதுமக்களுக்கு எவ்வித பங்குமில்லை யென்றும், ரொ (L) முழுமையும் பொதுமக்களால் தீர்மானிக்கப்படுகிறதென்றும், இதில் மைய பாங்கிற்குச் சற்றேனும் வேலையில்லை என்றும், இந்த சுதந்திரமான இரண்டு கருத்துகளையும் ஒன்றுக்கொன்று இணைந்து செல்லும்படி செய்வது வட்டிவீதந்தானென்றும் ஐந்தாம் அத்தியாயத்தில் கூறப்பட்டது. தனது பாங்கு வீதத்தை உயர்த்து வதன் மூலமோ அல்லது குறைப்பதன் மூலமோ, மையபாங்கு, வட்டி வீதத்தின் அதிகரித்துச் செல்லும் அல்லது குறைந்து செல்லும் போக்கை வலிமை பெறச்செய்ய இயலும். பாங்கு வீதத்தால் நேரடியான விளைவொன்றும் ஏற்படுவதில்லை. பாங்கு வீதத்தின் முக்கியத்துவம் எதில் அடங்கியிருக்கிற தென்றால், பாங்கின் நடைமுறைக் கைக்கோளின் (Banks current policy) நோக்கத்தை (object) பொதுமக்களுக்கு எடுத்துக் காட்ட பணிபுரி வதில் என்று கூறலாம். வேறெதுவும்இதனை இவ்வாறு விளக்க இயலாது.

வட்டிவீதங்களில் ஏற்படும் மாறுதல்கள் முதலீட்டு அளவில் (volume of investment) ஏற்படுத்தும் விளைவைப் பற்றிச் சென்ற அத்தியாயத்தில் ஏற்கெனவே கூறப்பட்டுள்ளது. இவ்விளைவுகள் உடனடியாக ஏற்படுவதாகவோ, அல்லது முன் கூட்டியே சொல்லப்படுவதாகவோ இல்லை. ஆனால் அவைகள் சில குறிப்பிட்ட சூழ்நிலைகளில் மிகவும் சக்திவாய்ந்தனவாக இருக்கும். பொதுவாக, வட்டிவீதத்தில் ஏற்படும் உயர்வானது, முதலீட்டைக் குறைப்பதில் மிகவும் சக்தி வாய்ந்ததாக இருக்கும். வட்டிவீதத்தில் ஏற்படும் குறைவானது முதலீட்டைத் தூண்டு வதை விட, அதன் உயர்வு முதலீட்டைக் குறைப்பதே அதிக அளவில் இருக்கும். இது உண்மையாக, இல்லாமலும் இருக் கலாம். இதற்கு முதற்காரணம் வாணிபச் சகடத்தின் மேல் நோக்கிய போக்குத் தீவிரமாக இருக்கும்போது வட்டி வீதம் உயர்ந்தால், மேற்கண்ட நிகழ்ச்சி நடைபெறுமல் போகலாம். அப்போது விலைகள் அதிகரிக்கும். தொழிற்கடன் பத்திரங்களின் (industrial securities) விலைகள் இயன்ற அளவு வேகமாக அதி கரிக்கும். சாதாரண தொழில் பத்திரமொன்று(average industrial share) ஆண்டொன்றுக்கு 6சதவிதம் இலாப ஈவுகளைத் (dividends) தந்து, மாதமொன்றுக்கு 5 சதவித அளவில் அதன் விலையில் அதிகரித்துச்செல்லுமானல், ஒரு யூக வணிகன் (speculator) 66 சத வீதத்திற்குப் பணத்தைக் கடன் வாங்கி, அப்பங்குப்

பத்திரங்களை வாங்கினாலும், தன்னுடைய வணிக பேரத்தில் (transaction) எவ்வித நஷ்டத்தையும் அடையாமலிருக்கக்கூடும். இக்கருத்தின்படி முதலீட்டுகளை 'வாங்குதல்' (buying) என்பது சென்ற அத்தியாயத்தில் சிறப்புக் கருத்தில் குறிப்பிட்டுள்ள முதலீடு செய்தல்' (investing) என்பதும் ஒன்ருகாது என்பது உண்மையே. இம்மாதிரியான காலங்களில், விலைகளின் அதிகரிப்பைச் சாதகமாகக் கொண்டு ஒவ்வொருவரும் இலாபம் அடைகின்றனர்; இதில் பங்கு மாற்றுச் சந்தையிலுள்ள இவ் ஹுக பேர வணிகரின் இலாபம் ஒரு தீவிரமான (extreme) உதாரணமாகும். இருப்பினும், மெய்யான முதலீடு (சிறப்பான கருத்தில்) அடையும் இலாபம், 66 சதவீத அளவிற்கு இல்லா விட்டாலும், பாங்குகள் விதிக்கும் வட்டிவீதத்தைவிட, அதிக மாகவே யிருக்கும். இரண்டாவதாக உள்ள காரணம், பணவீக் கத்தின்போது எல்லையின்றி, நம்பிக்கையோடு இருக்கும் தன்மை (optimism) யாகும். வட்டிவீதம் 8 சதவீதமாக இருக்கும் போது, எதிர்காலத்தைச் சரியாக உணரத்தக்க முன்கவனமான (prudent) எந்த மனிதனும் முதலீடுசெய்வதை நிறுத்தி விடுவான். ஆனால், உண்மையில், இம்மாதிரியான காலங்களில் ஒருவரும் முன்கவனமுடனிருப்பதில்லை. அநேகமாக எல்லோரும் எதிர்காலத்தை நம்பிக்கைக் கண்ணுடியின் (rosy spectacles) மூலமே பார்ப்பர். ஆகவே வட்டிவீதங்கள் மிக அதிக அள விற்கு உயர்த்தப்படவேண்டும். ஏனெனில் விலைகளின் அதிகரிப்பு முதலீட்டின் இலாபங்களை உண்மையில் (infact) அதிகமாகவும், முதலீடு செய்பவர்களின் மனத்தில் அதைவிட இன்னும் அதிகமாகவும் காணப்படுகின்றன.

எனினும் வட்டிவீத அதிகரிப்பானது சக்தி வாய்ந்த குவியும் விளைவை (cumulative effects) உண்டுபண்ணக்கூடியதாகும். ஆனால், பங்கு மாச்றுச் சந்தையின் (stock exchange) எந்த ஒரு பிரிவும் மற்றவைகளிலிருந்தும் தனிப்பட்டதல்ல. நெருங்கிய —பணப் பத்திரங்களின் (near-money stocks) விலை குறைந்த தும், அவைகள் நெடுங்கால அரசாங்கக் கடன் பத்திரங்களை (long dated government securities) விடக் கவர்ச்சி மிக்கனவாக இருக்கும். கவனமுள்ள முதலீடு செய்பவர்கள், நெருங்கிய —பணப் பத்திரங்களை வாங்கும் பொருட்டு, நெடுங்கால அரசாங்கக் கடன் பத்திரங்களை விற்கத் தலைப்படுவர். இது, உயர் ரக தொழிற் கடன் பத்திரங்களோடு போட்டியிடும் அரசாங்கக் கடன் பத்திரங் களைக் கவர்ச்சிமிக்கனவாகச் செய்கின்றது. எனவே, கடன் பத்திரங்களின் விலை இறக்கமானது தொழிற் கம்பெனிகளின் சாதாரணப் பங்குகளைக்கூட பாதிக்குமளவிற்கு அங்காடி முழுமை

யையும் பாதிக்கும். இது, இரண்டு விளைவுகளை உண்டுபண்ணு கின்றது. முதலாவதாக, முதலீடு செய்வதற்காக மூலதனம் திரட்டும் முறையைச் செலவு மிக்கதாகச் (expensive) செய் கின்றது. ஆரம்பநிலையில், பாங்குகளிட மிருந்து கடன் பெறுவதும் செலவுமிக்கதாக (இல்லாவிட்டால் அதிகக் கடினமானதாக) இருந் திருக்கும். தொழில் நிறுவனங்கள் (industrial firms) தங்கள் முதலீடுகளுக்கான பணத்தை இரண்டு வகைகளால் பெறக்கூடும். ஒன்று, அவைகள் தங்களிடமுள்ள கடன் பத்திரங்களை விற்கின் றன—அக்கடன் பத்திரங்களின் விலைகள் இறங்கியிருந்தால் அவைகளை விற்பது உசிதமல்ல—மற்றொன்று, அவைகள் தங்க ளுடைய பங்குகளை (shares) அங்காடியில் வெளியிட்டு விற்பதா கும். அவைகளை வெளியிடுவதில் விலை நடைமுறை அங்காடி விலை களை (current market prices) யொட்டி இருக்கவேண்டுமாதலால், அங்காடியில் பங்குகளின் விலை பொதுவாகக் குறைந்திருக்கும் போது இம்முறை செலவு மிக்க முறையாக ஆகிவிடும். இம்மாதிரி யான நிகழ்ச்சிகளால்தான், முதலீடு என்பது கவர்ச்சியற்றதாகச் செய்யப்படுகிறது. கடன் பத்திரங்கள் விலையிறங்குவதால் ஏற்படும் இரண்டாவது விளைவானது, சில சமயங்களில், மிகவும் ஆழமானதாக இருக்கும். கடந்த ஆண்டுகளில், பங்கு மாற்றுச் சந்தை (stock exchange) வாணிபத்தின் நிலையை உணர்த்தும் 'காற்று அழுத்த மானி' (barometer) என்னும் நற்பெயரை அடைந்து வந்துள்ளது. பங்குகளின் விலைகள் குறைந்தால்— வணிகர்கள் தங்களிடமுள்ள தங்கள் கம்பெனிகளின், பங்குகள் விலை இறங்கினால்—அதைவிட வணிகர்களின் நம்பிக்கையை விரைவாகப் பாழ்படுத்தக்கூடியது வேறொன்றுமில்லை.

இவைகளே மிகவும் சக்திவாய்ந்த விளைவுகளாகும். கடனைக் கட்டுப்படுத்துவதன் மூலம் மையபாங்கு கொண்டுவரும், வட்டி வீதத்தின் அதிகரிப்பு மிகவும் தீவிரமாகக் கடைப்பிடிக்கப்படுமே யானால், அது பெரும்பாலும், பூரிப்பிற்கு (boons) முற்றுப்புள்ளி வைப்பதாக இருக்கும்.

ஆனால் மேற்கூறிய நிலைக்கு எதிரிடையாகவுள்ளதன் விளைவு அவ்வளவு நிச்சயமாக இருப்பதில்லை. வட்டிவீதத்தைக் குறைத் தலிலுள்ள முறைகள் யாவும் எதிரான விளைவுகளையே தருகின்றன. பணத்தை அதிக அளவில் அதிகரிப்பது சாத்தியமானதாகும்' இதனால் நெருங்கிய-பணப் பத்திரங்களுக்கான வட்டிவீதத்தைக் குறைக்க இயலும். அதிகரிக்கப்பட்ட பணத்தைப் பங்குமாற்றுச் சந்தையின் பல பகுதிகளுக்குச் செலுத்திக் கடன் பத்திரங்களை வாங்கத் தூண்டலாம். ஆனால், இவ்விதம் கடன் பத்திரங்களை

வாங்கும் மனப்பான்மை, எதிர்பார்த்தபடி வேலை செய்வதில்லை. ஏனெனில் நம்பிக்கை மனப்பான்மையைத்தோற்றுவிப்பது அதனை அழிப்பதைப் போல் அவ்வளவு சுலபமானதல்ல. குறைந்த வட்டி வீதங்கள் நிச்சயமாக முதலீட்டை அதிகரிக்கும். குறைந்த வட்டி வீதங்கள் கொண்டுவரப்படுவதற்கு முன்னல் மந்தநிலை(depression) இருந்திருந்தால், மலிவுப் பணம் தன் வேலையைச் செய்வதற்கு நீண்ட நாள் பிடிக்கும்.

வட்டிவீதத்தை அதிகரிக்கவோ அல்லது குறைக்கவோ செய்யும் அதிகாரம் மையபாங்கிற்கு ஒரு முக்கிய ஆயுதமாக இருக்கிறது—சேமிப்பு, முதலீடு ஆகிய இவ்விரண்டின் மீதும் அதன் அதிகாரத்தைச் செலுத்துவதற்கு ஏற்ற சக்தி வாய்ந்ததும் முறட்டுத்தனமானதுமான ஆயுதமாக இருக்கிறது. சமீப ஆண்டு களில், ஒரு குறிப்பிட்ட சூழ்நிலை தோன்றியதில் இவ்வாயுதத்தைப் பயன்படுத்துவது தடைசெய்யப்பட்டுள்ளது. கிரேட் பிரிட்டனிலும் ஐக்கிய அமெரிக்காவிலும் அரசாங்கம், மையபாங்கு அதன் வட்டி வீதத்தை நிலையானதாக (stable) வைத்திருப்பதோடு, வட்டி வீதம் எந்த மிகக் குறைவான புள்ளியை (lowest point) அடைந்திருந்ததோ கிட்டத்தட்ட அந்த அளவிலேயே வைத்திருக் கும்படி, ஒரு கைக்கோளைப் பின்பற்றும்படி வற்புறுத்தியது. மலிவுப் பணக் கைக்கோள் (cheap money policy) என்று அழைக்கப்படு வது இதுவே. மலிவுப் பணக் கைக்கோள் பின்பற்றப்படுவதற் கான காரணங்கள் பல உண்டு. ஒரு காரணம், அது 1930 ஐ அடுத்த பத்தாண்டுகளில் ஏற்பட்ட பெரிய மந்தத்தைக் (Great Depression) குணப்படுத்தி நன்மை விளைவித்தமையாகும். குறைந்த பட்சம், இங்கிலாந்தில் வீடுகட்டுவது (housing) இன்னும் மற்ற வகையான முதலீடுகளைத் தூண்டிப் பூரிப்பு நிலையை உண்டுபண்ணியது. இக் குறைந்த வட்டி வீதங்கள்தாம் என்பதில் ஐயமில்லை. மந்த காலத்தில் மந்தத்தைக் குணப்படுத்த மலிவுப் பணக் கைக்கோள் கொண்டு வரப்பட்டதிலிருந்து அதன் நன்மையையுணர்ந்த பொதுமக்கள் அக் கைக்கோளை யாதொரு குறுக்கீடுமின்றிப் பின்பற்றவேண்டும் என்று மனத்தில் கொண்ட தால், போர் முடிவை அடுத்த உடனடியான ஆண்டுகளில் முதலீட்டை அதிகரிப்பதற்குப் பதிலாக கட்டுப்படுத்தும் நிலை ஏற் பட்டுங்கூட, அக் கைக்கோளைக் குறுக்கிடுதல் கூடாதென்றே கருதினர். மலிவுப் பணக் கைக்கோள், பொதுமக்களையும் அரசாங் கத்தையும் கவர்ந்ததற்கு இதுவே எடுத்துக்காட்டாகும்.

ஆனல், இதற்குச் சில செயல்முறையான காரணங்களும் உண்டு. ஒரு காரணம், இரண்டு போர்களினல் ஏற்பட்ட நாட்டுக்

கடனின் (National Debt) ஏராள அதிகரிப்பாகும். அதிக வட்டி வீதங்களிருந்தால், நாட்டுக் கடனுக்கு அதிக வட்டி கொடுக்க வேண்டும். இப்படி அதிக வட்டி கொடுப்பதற்கு அதிக வரிகளை விதிக்கவேண்டும். இது ஒரு முக்கியமான வாதமே; ஆனால் இதனை மிகைப்படுத்துதல் கூடாது. வட்டி வீதங்கள் அதிகரிக்கும் போது, நாட்டுக் கடன் உடனடியாகப் பாதிக்கப்படும் ஒரே பகுதி குறுங்காலக் கடன்தான் (Floating Debt). இக் குறுங்காலக் கடன்கள் மூன்று மாதங்களுக்கொருமுறை புதுப்பிக்கப்பட வேண்டியவைகளாகும். வட்டியின் அதிகரிப்பு நீண்ட காலத்திற்குத் தொடருமானால், கடன்கள் பெரும்பாலும் முதிர்வடைந்து, அதிக வட்டி வீதத்தில் புதுப்பிக்கப்படவேண்டியிருக்கும். நாட்டுக் கடன் (National Debt) வாதத்திலிருந்து (argument) நாம் கொள்ளவேண்டிய முடிவு யாதெனில், சராசரியில் குறைவாக உள்ள வட்டி வீதங்களை மாருமல் இருக்கும்படி வைத்துக்கொள்ள ஒவ்வொரு முயற்சியும் எடுக்கப்படவேண்டுமென்பதே. இங்கிலாந்து பாங்கை, வட்டி வீதங்களைச் சராசரி நிலையைவிட அதிகரிக்கவோ குறைக்கவோ அரசாங்கம் அனுமதிப்பதானது வரி செலுத்துவோரின் செலவை (cost) வெகுவாகக் குறைக்கும். நிதியக் கட்டுப்பாடுகளை (financial controls) மீண்டும் கொண்டு வருதல் கணிசமான அளவிற்கு இலாபத்தைத் தரும். வட்டி வீதத்தின் அதிக அளவு அதிகரிப்பைக் கண்டு பயப்படுவதற்கு மற்றொரு செயல்முறையான (technical) காரணம், போருக்கு ஒரு பகுதி நிதியளிக்கும் பாங்குகள், சென்ற அத்தியாயத்தின் இறுதியில் குறிப்பிட்டுள்ளபடி, அரசாங்கக் கடன் பத்திரங்களை நிறைய வைத்திருப்பதே யாகும். 1939ஆம் ஆண்டில் லண்டன் தீர்வகப் பாங்குகளின் இருப்பு £ 600 மில்லியனுக்குச் சற்று மேலாக இருக்கும். எட்டு ஆண்டுகள் கழிந்த பிறகு அவைகளின் இருப்பு £ 1,500 மில்லியனுக்கும் சற்று அதிகமாக இருந்தது. வட்டி வீதங்கள் மிக அதிகமாக உயர்ந்ததால், இருப்பாக வைத்துள்ள இக்கடன் பத்திரங்களின் அங்காடி மதிப்பு (market value) குறையும். இது பாங்குகளை இக்கட்டான நிலைக்கு ஆழ்த்தும். 'கிரேட் பிரிட்டனில் பாங்குகள் கணிசமான அளவிற்குக் காப்பு நிதிகளையும் கடன் பத்திரங்களையும் வைத்திருக்கும் போதும், 1947ஆம் ஆண்டின் முழு அளவைவிட அதிகமான அளவு அப்பத்திரங்கள் அவைகளுக்கான வைப்புகளின் வீதம் மாருமல் இருப்பு வைத்துக் கொள்ளப்பட்டபோதும் ஒரு தீவிரமான வாதமாக இருப்பதில்லை. வலிமையில் பல திறப்பட்ட பாங்குகள் இருந்தமையும், அரசாங்கக் கடன் பத்திரங்களின் இருப்புகள் பூரணமாகவும் வீதப்படியும் அதிகரித்துள்ள நிலையும், ஐக்கிய

அமெரிக்காவில், மலிவுப் பணக் கைக்கோளைப் பின்பற்றுவதற் கான காரணங்களாக இருந்தன.

எந்தக் காரணங்களிருப்பினும், குறைந்த வட்டிவீதத்தைக் கடைப்பிடிக்கவேண்டுமென்றும் அரசாங்கம் உறுதியாக வலி யுறுத்துவதானது, மையபாங்கின் பொருளாதார நிகழ்ச்சிகளின் போக்கைக் கட்டுப்படுத்தும் திறனைப் போக்கி விடுகின்றது. அது, இருக்கும் பண அளவை அதிகரிக்கும் அல்லது குறைக்கும் அதி காரத்தை, குறைந்தது மேலெழுந்த வாரியாகவேனும், தன்னிடம் இன்னும் வைத்திருக்கின்றது. ஆயினும், பண அளிப்பில் ஏற்படும் மாறுதல்களின் நேரடியான விளைவானது, (ஏற்கெனவே நாம் கண்ட வட்டிவீதத்தில் ஏற்படும் மாறுதல்கள் இருப்பினும்) சிறி தளவாகவே யிருக்கிறது. பண அளிப்பு சம்பந்தமாக, பாங்கு சுதந்திரமான நடவடிக்கையை எடுக்கக்கூடுமென்பது முற்றிலும் பொய்யானதாகவே யிருக்கிறது. மலிவுப் பணத்தைக் கொண்டு வருவது தேவைப்படும்போது, பாங்கானது பண அளிப்பைக் கட்டுப்படுத்தாமலிருப்பதுடன், அதனை அதிகரிக்கும்படியான நிலையிலிருப்பதையும் உணரும். 1946ஆம் ஆண்டில், இங்கிலாந்து பாங்கு இந்த நிலையில்தானிருந்தது. கருவூல வேந்தர் (The Chancellor of the Exchequer), ஏற்கெனவே குறைவாக இருந்த வட்டிவீதங்களை, அதிகரிக்க விழைந்தார். வட்டிவீதங்கள் மிகக் குறைவாக இருந்தமையால், அவர் ஆண்டு வருவாய் தரும் மொத்த உடைமைகளை (Consols) அவைகளின் முகப்பு மதிப் பிற்கே (Par value) கொண்டுவரத் தீர்மானித்தார்—அதாவது நெடுங்காலக் கடன் பத்திரங்களுக்கு 2½ சதவீத வட்டிவீதத்தை யும் இன்னும் மற்ற எல்லா குறுங்காலக் கடன் பத்திரங்களுக்கும் இன்னும் குறைவான வட்டிவீதத்தையும் ஏற்படுத்தினர். இந்த நோக்கத்தை அடைவதற்கு ஏராளமாகப் பணம் சிருட்டிக்கப்பட வேண்டியதாக இருந்தது. 1945ஆம் ஆண்டு டிசம்பர் 31 ஆந் தேதியிலிருந்து 1946ஆம் ஆண்டு டிசம்பர் 31ஆந் தேதி வரையி லுள்ள காலத்தில் லண்டன் தீர்வகப் பாங்குகளின் வைப்புகள் £ 835 மில்லியனுக்கு மேலதிகரித்தன—அதாவது 17 சதவீதத் திற்குமேல் அதிகரித்துள்ளன. 1947ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் இந்த மேலதிக மலிவுப் பணத்தைக் (Super-cheap money) கொண்டுவரும் தீவிர முயற்சி (Drive) கைவிடப்பட்டது. முகப்பு மதிப்பிற்கே கொண்டுவரப்பட்ட ஆண்டு வருவாய் தரும் மொத்த உடைமைகளின் மதிப்பு 10-ல் 8 பங்காகக் குறைந்தது. அப்போது அவை 3 சதவீதம் வட்டியைப் பெற்றுவந்தன. இந்த வட்டி வீதமே, கடன் சிருட்டிப்பு எதுவும் செய்யப்படாமல், நீடிக்கப் பட்டிருக்கலாம். ஏனெனில் 1947ஆம் ஆண்டில் பிப்ரவரிக்குப்

பிறகு மொத்த வைப்புக்களில் (Total deposits) எவ்வித மாற்றமுமில்லை.

மேற்படி நிகழ்ச்சியின் கருத்து யாதெனில், மையபாங்கு சில வரையறைகளுடன், கருவூல வேந்தர் (Chancellor of the Exchequer) விழையும் வட்டிவீதத்தையே ஏற்படுத்தலாம்—ஆனல், வாணிபத்தில் நிலைத்த தன்மையை ஏற்படுத்துவது போன்ற நோக்கங்களையெல்லாம் தியாகம் செய்வதனுல்தான் இது இயலும். பிறிதொன்றை நோக்குவோம். மையபாங்கு, முதலீட்டளவை (Volume of investment) சேமிப்புடன் இணைந்திருக்குமாறு செய்வதன் மூலம், சரிசமானப் (Balanced) பொருளாதார நிலையைக் கொண்டு வரலாம். ஆனல் இவ்வாறு செய்வதற்கு மையபாங்கிற்கு, வட்டிவீதத்தை ஏற்றவோ, இறக்கவோ அதிகாரம் கொடுக்கப்படவேண்டும். குறிப்பிட்ட, மூலதனத் திட்டங்களுக்கான (Capital projects) அனுமதிகளை வழங்குவது போன்ற மிக நேரடியான முறைகளினுல் சேமிப்பிற்கும் முதலீட்டிற்குமிடையே சமன்பாட்டை நிச்சயமாகக் கொண்டுவருவது சாத்தியமாக இருக்கும்போது, மையபாங்கு குறைந்த வட்டிவீதங்களை நிலைபெறச் செய்வதில் கவனம் செலுத்துதலே சிறந்ததென்ற கருத்து இவ்வரிகளை எழுதுங்காலையில் அமெரிக்காவில் வெள்ளை மாளிகையிலும், இங்கிலாந்தில் பாராளுமன்றத்திலும் (ஏன், இலண்டன் நகரம் முழுவதிலும்) நிலவியிருந்தது. ஆனல், இக்கருத்து மாறக்கூடும். குறிப்பிட்ட அனுமதிகளை (specific licences) நேரடியாக வழங்கும் முறை சில சமயங்களில், வாய்ப்புகளைத் தடைசெய்வதாயும், ஏமாற்றமளிப்பதாயும் உள்ளது. அரிதாக உள்ள கச்சாப் பொருள்களை (scarce raw materials) பங்கீடு செய்வதை (allocation) சரிவர நிறைவேற்ற இயலாத போது இம்முறை முடிவடையும். பிறகு மீண்டும் பணக்கட்டுப்பாடு முறைகளே கைக்கொள்ளப்படலாம். ஆனல் இப்பிரச்சினை தீர்மானிக்கப்படும் வரையில் (மீண்டும் தனது முக்கிய ஆயுதத்தைப் பயன்படுத்தத்தான் அனுமதிக்கப்படுமா என்பது மையபாங்கிற்கு நன்கு தெரியும்) நிதியக் கைக்கோளினுல் (financial policy) பொருளாதார வலிமையை உண்டுபண்ணக்கூடும் என்னும் கருத்துப்பற்றி எவ்விதமான முடிவுக்கும் வர இயலாது.

## நடைமுறையில் சாத்தியமானவை
(Practical Possibilities)

இந்நூலின் பதிப்பைத் தயார் செய்யும்போதிருந்த நிலையே எப்போதும் நீடிக்குமென்று கருதுவது தவருகும். மையபாங்கு

தனது இயல்பான வேலையைச் செய்ய மீண்டும் அனுமதிக்கப்படு மாயின், சென்ற விவாதத்தின் (discussion) போது முடிவு செய்யப்பட்ட சில கருத்துகள் மீண்டும் பொருத்தமுடையனவாகத் தோன்றும். சிறப்பாக, அம் முடிவுகளில் இரண்டு, நடைமுறை முக்கியத்துவம் (practical importance) வாய்ந்தவை.

முதலாவது முடிபானது, பாங்குமுறை, பணவடிப்பு அல்லது விலைகளின் இறக்கத்தைத் தடுத்து நிறுத்துவதைக் காட்டிலும். பணவீக்கத்தைக் கட்டுப்படுத்துவதன் மூலம் விலைகளின் அதிகரிப்பை நிறுத்துவதால்தான் அதிக சக்தி வாய்ந்ததாகத் தோன்றுகிறதென்பதாகும். இப்படியிருப்பதற்குப் பல காரணங்களுண்டு. பொதுமக்கள் திடீரென்று தங்களின் சேமிப்பை அதிகரிப்பதையோ அல்லது முதலீட்டைக் குறைப்பதையோ (இரண்டுமே பண வாட்டத்தைக் கொணரும்) யாரும் தடுக்க முடியாது. ஏனெனில் மேற்சொன்ன எந்த நடவடிக்கையும் மற்றவைகளின் சம்மதத்தைப் (concurrence) பெற்றாக வேண்டிய தேவையில்லை. ஆனால் முதலீட்டை அதிகரிப்பதென்பது (increase) பாங்குகளிடமிருந்து கடன் வாங்குவதை ஏற்படுத்திவிடுகிறது. இதற்கு பாங்குகளின் சம்மதம் தேவையாக இருக்கிறதல்லவா? பணஅளிப்பின் அதிகரிப்பிற்கு முட்டுக்கட்டை (brake) போடுவதன் மூலமும், வட்டிவீதங்களை அதிகரிப்பதன் மூலமும், அவைகள் பண வீக்கத்திற்கு முடிவுகட்ட முடியும். ஆனால் இதற்கு எதிரிடையான சந்தர்ப்பங்களில், பாங்குகள் புதிதாகப் பணத்தைச் சிருட்டிக்கவும் வட்டிவீதத்தைக் குறைக்கவும் சம்மதிக்கிறதென்பது மட்டுமே, புதிய பணம் முதலீடு செய்யப்படும் (குறைந்தது, உடனடியாக இல்லாவிட்டாலும்) என்பதாகாது. போதுமான அளவிற்கு அதிகரித்துள்ள வட்டிவீதமானது முதலீட்டை இலாபமற்றதாகச் செய்வதுடன் அதற்கு விரைவில் முற்றுப் புள்ளியும் வைத்துவிடுகிறது. ஆனால் வட்டிவீதத்தில் ஏற்படும் இறக்கமானது (fall in the rate of interest) முதலீட்டில் இலாபங்களை அடையும் வாய்ப்புக்களையே அதிகரிக்கும். அதிலும் எதிர்காலத்தைப்பற்றிய நம்பிக்கையே இல்லாதிருக்குமானல், இலாபத்தைத் தரக்கூடிய முதலீட்டுத் திட்டங்கள் அவைகளுக்குப் பணமளிக்கும் விபத்தை மேற்கொள்ளக்கூடிய ஒருவரை நாடி இரக்கவேண்டும். சுருக்கமாகச் சொல்லின் முதலீடு இலாபந்தரத்தக்கதல்ல என்று பொதுமக்களைப் பயமுறுத்துவது எளிது; அப்பயத்தை ஓட்டுவது அவ்வளவு எளிதான காரியமல்ல.

இவ்விவாதத்தில் இரண்டாவதாகக் கவனிக்கத் தக்கது யாதெனில், நிலைமையைத் திருத்தி அமைப்பதற்காகக் கையாளப்.

படும் முறைகள் (corrective measures) ஆரம்பத்திலேயே கையாளப்பட்டால், அவைகள் எதிர்பார்த்த பலனைத் தரும். பணவீக்கமாயினும் சரி அல்லது பண வாட்டமாயினும் சரி, அவைகள் தன்னிச்சையாக விடப்பட்டால் விரைவில் நன்கு வளர்ச்சி அடையும். அதிகரித்த விலைகள் அதிகமான இலாபங்களைத் தந்து முதலீட்டையும் அதிகரிக்கும். விலைகளின் இறக்கம் நஷ்டத்தைத் தருவதால் முதலீட்டைக் குறையச் செய்யும். வேலையின்மை அதிகரித்தலானது பலவகைப் பண்டங்களுக்கான தேவையைக் குறையச் செய்து விலைகளையும் மேற்கொண்டு இறங்கச் செய்யும். இதனால் வேலையின்மை இன்னும் அதிகமாகும். சுபிட்சத்தின் அதிகரிப்பு, செலவு செய்தலை (spending) அதிகரிக்கும். இதனால் விலைகள் இன்னும் அதிகரிக்கும். நம்பிக்கை மனப்பான்மையும் (optimism) அவைகளின் துணை கொண்டே வளர்ச்சியடையும். பணவீக்கமோ அல்லது பண வாட்டமோ நன்றாக வளர்ச்சியடையுந் தருவாயில் அவைகளின் வளர்ச்சி பிரம்மாண்டமானதாக இருப்பதால் யாதொன்றும் அவைகளின் அவ்வளர்ச்சியினைத் தடுக்க முடியாது. அவைகளாகவே தங்களின் மிகப்பெரிய வளர்ச்சியினால் மிகப் பருத்து வெடித்தால் தவிர, அவைகளின் முடிவைக் கொண்டுவர வேறு எதனாலும் முடியாது. அதே சமயத்தில், அவைகளின் ஆரம்ப நிலைகளில் மிகச் சாதாரண முறையினால்கூட நல்ல விளைவுகளை உண்டுபண்ணலாம். உதாரணமாக பணவாட்டத்தின் (deflation) ஆரம்பத்தில் —விலைகள் சோர்வடைந்து வேலையின்மை அதிகரிக்கும்போதும், ஆனால் நம்பிக்கை குறைவதற்கு முன்பாகவும், நாடு தன்மீது சுமத்தப்பட்ட அதனுடைய கால்பங்கு தொழிலாளர்களை வேலையிலமர்த்த முடியாமல் காப்பாற்றவேண்டிய பாரத்தைச் சுமப்பதற்கு முன்பும்—வட்டிவீதங்களின் ஒரு சிறிதளவு இறக்கம் கடன் அளவின் (volume) சிறிதளவு அதிகரிப்புடன் சேர்ந்துகொண்டு முதலீட்டை அதிகரிக்கும்படி தூண்டுவதற்கும், சமன்பாட்டை நிலைநிறுத்துவதற்கும் போதுமானதாக இருக்கும். இதுபோன்றே, பணவீக்கத்தின் ஆரம்பத்தின்போது, சிறிதளவு கடன் கட்டுப்பாடு (a slight restriction of credit) சேமிப்பிற்கும் முதலீட்டிற்குமிடையே சமன்பாட்டை மீண்டும் கொண்டுவருவதற்குப் (to restore) போதுமானதாக இருக்கும். இம்முறையிலுள்ள குறைபாடு யாதெனில் பணவீக்கமோ பணவாட்டமோ ஏற்பட்டது முதல் என்ன நடந்திருக்கிறதென்பதை ஆய்ந்துணர்தலே (diagnose) யாகும். பொருளாதார நிகழ்ச்சிகள் புள்ளி விபரங்களாக (statistics) மாறி மைய பாங்கரின் (central banker) மேசையை அடைவதற்குச் சிறிது காலம் பிடிக்கும். மைய பாங்கரின் எதிர் நடவடிக்கைகள் (counter measures) வளர்ச்சி அடைவதற்குச் சிறிதுகாலம்

பிடிக்கும். அவைகள் பயன் விளையத்தக்கனவாக (effective) வரும்போது, ஆரம்பத்திலிருந்த தொந்தரவு (disturbance) ஆழ மாக நிலைத்துவிட்டிருக்கும்.

பண வாட்டத்தைத் தடுத்து நிறுத்துவதைவிட பணவீக்கத் தைத் தடுத்து நிறுத்துவது சுலபமானதாகும். இவைகள் இரண் டையுமே இளமையிற் கொல்லுவது மிகவும் எளிதாகும். மைய பாங்கர் தமக்கு எவ்விதத் தடையு மில்லாமலிருக்க, பணவீக்கம் ஆரம்பமாகும்போதே கவனமுடனிருந்து அதனை முளையிலேயே கிள்ளி யெறியவேண்டும். நடைமுறையான பல்வேறு இடர்ப் பாடுகள் மைய பாங்கருக்கு இருந்தபோதிலும், இதனை அவர் மனஉறுதியுடன் (courage) செய்து முடிக்கவேண்டும். ஏனெனில் பூரிப்புகள் (booms) (அவைகள் அதிகப்படியான பெருக்கத்தை உண்டுபண்ணி அதன்மூலம் மந்தத்தைக் கொண்டு வந்த போதிலும்) அவைகள் நீடிக்கும் வரையில் இனியவைகளாகவே இருக்கின்றன. பூரிப்புகளின் போது இலாபங்கள் அதிகரிக் கின்றன, அனைவருக்கும் வேலை கிடைக்கின்றது, வாழ்க்கைத்தரம் வெகுவாக உயர்கிறது, உலகத்திலுள்ள நல்லவைகளெல்லாம் மிக நலம் பயப்பனபோல் தோன்றுகின்றன. இந்த மகிழ்ச்சியான சூழ்நிலையை மையபாங்கு புறக்கணிக்குமா? வரலாறுகள் கண்ட பொருளாதார நிபுணர், ஏற்கெனவே நிகழ்ந்துள்ள மந்தத்தையும், தடையின்றி அனுமதிக்கப்படுகிற பணவீக்கத்தினால் வரப்போகும் மந்தத்தையும் கருத்தில் கொண்டு இவ் வினாவிற்கு 'ஆம்' என்றே விடையளிப்பார். ஏனெனில், நிதானமானதும் நிச்சயமானதுமான முன்னேற்றமே அதிகபட்ச (maximum) மகிழ்ச்சியையும் மிகக் குறைந்த அளவு துயரத்தையும் (minimum distress) தரவல்லது என்பதை அவர் நன்கறிவார். ஆனால் மையபாங்கர் (Central Banker) அரசியலின் (politics) விளம்பர ஒளியின் கீழிருக் கின்றார்; பல நாடுகளில் மைய பாங்கர் ஆட்சியிலுள்ள அரசாங் கத்தால், நியமிக்கப்படுகிறார். சமீப ஆண்டுகளில், அரசாங் கங்கள், பொருளாதார, நிதியக் கைக்கோள்களில் நேரடியாகத் தலையிட்டு, மைய பாங்கர்கள் எடுக்கவேண்டிய முடிவுகளைத் (decisions) தாங்களே எடுக்கின்றன. பெரும்பாலும், மைய பாங்கர், தாம் முடிவுகளை எடுக்கவும் அவைகளைச் செயல்படுத் தவும் அனுமதிக்கப்படுவதில்லை. அப்படியே முடிவுகளை எடுக்கவும் செயற்படுத்தவுமான அதிகாரங்கள் இருந்தபோதிலும், தமது ஆய்ந்துணர்தல் (diagnosis) எங்கே தவறாகப் போய்விடுமோ என்ற எண்ணத்தாலும், நம்பிக்கைத் தன்மையின் (optimism) வளர்ச்சியைக் கட்டுப்படுத்துதல் தேவையற்றதென்று எண்ணுவ தாலும் தமது முடிவைத் தள்ளிப் போடுதலே, மனித சுபாவமே

யாகும். ஆனால் இவ்வாறு காலந்தாழ்த்துதல் ஆபத்தைத் தரும். பூரிப்பை நீடித்திருக்கச் செய்வதானது, அதன் குறைகளை நிவர்த்திக்கும் வாய்ப்புகளைக் குறைத்துவிடும். மையபாங்கின் கைக்கோள் (Central Banking policy) பெரும்பகுதியும் வெற்றியைத் தரவல்லதாக இருப்பது வாணிபச் சகடத்தில் ஒரு குறிப்பிட்ட நிலை (stage) யின் போதுதான். இந்த நிலையில், உறுதியான நடவடிக்கையை எடுக்க, மையபாங்கருக்கு, தமது மனிதப் பண்பாலும், அரசாங்கத்தாலும் சொல்லவொண்ணு இடர்ப்பாடுகள் ஏற்படும். பணவரலாற்றை ஆராய்ந்தால், பூரிப்புகள்—அல்லது மந்தங்கள் ஆரம்ப நிலையிலேயே தடுக்கப்படுவதில்லை யென்பது புலனுகும்.

இப்பிரச்சினையை அதிகமாக எளிதாக்காமலிருக்க (not to simplify) நாம் கவனம் செலுத்தவேண்டும். பூரிப்பையும் மந்தத்தையும் பற்றிச் சிறிதும் அறியாத ஒரு 'கன்னி உலகத்தில்' (virgin world) பாங்குக் கைக்கோள் என்னும் பிரச்சினையை நாம் ஆராய்ந்து கொண்டிருப்பதாகக் கருதக்கூடாது. ஒன்றை மற்ருென்று பெற்றெடுத்துக் கொண்டும், அதிக அளவில் சென்று கொண்டுமிருக்கிற பணவீக்கம், பணவாட்டம் ஆகியவைகளைப் பற்றி இவ்வுலகம் நன்கறியும். 'ஊசலி' (Pendulam) யானது அதனுடைய ஊசலின் மத்தியில் நின்றுவிட்டதாகவும் நமது வேலை அச்சம நிலைக்கு (equilibrium) ஊறு ஏற்படாவண்ணம் தடுப்பது என்பதான நிலை இருப்பதில்லை. ஊசலி மிகக் கடூரமாக ஊசலாடிக் கொண்டிருக்கிறது. அதனைத் தடுத்து நிறுத்துவதே நமது வேலை. ஆனல் அது அடைந்துள்ள எந்தப் புள்ளியிலும் அதனைத் தடுத்து நிறுத்துதல் இயன்றபோதிலும், அவ்வாறு தடுத்து நிறுத்துதலில் எவ்வித பயனுமில்லை. மந்தத்தின் நிலையற்றவைகளை (instabilities) யும், பூரிப்பின் நிலையற்றவைகளையும் தொடர்ந்து நீடிக்க அனுமதிப்பதில் அர்த்தமில்லை. இதனல், மைய பாங்கு பெரும்பாலும் சமன்பாடான நிலையைக் (equilibrium) காப்பதைவிட, ஒரு சமன்கேட்டைச் (disequilibrium) சமாளிப்பதற்கு மற்ருெரு சமன்கேட்டைக் கொண்டுவரவே பாடுபடுகிற தென்பது தெளிவாகிறது. பணவீக்கம் பெருகும்போது மையபாங்கு பணவாட்டச் சக்திகளைக் கொண்டுவரவேண்டும். பணவாட்டம் உச்சநிலையிலிருக்கும் போது, மையபாங்கு பணப்பெருக்கத்தை உண்டு பண்ணப் பாடுபடவேண்டும். மந்தத்தின் அடிப்பாகத்தில் அது பணப்பெருக்கத்தை உண்டு பண்ணவேண்டும். இந்தப் பணப்பெருக்கம் சாதாரண காலத்தில் கொண்டுவரப் பட்டாலும் மிகக் கொடூரமான பணப் பெருக்கத்தை உண்டுபண்ணும். இந்தச் செயல் வெற்றிகரமாக இருக்கவேண்டுமானல் அது பணப்பெருக்

கத்தை உண்டுபண்ணவே செய்யும். 1931-32-ல் சென்றதுபோல் பணவாட்டம் (deflation) அதிக அளவில் பரவியிருக்கும்போது, இயல்பான நடவடிக்கையின் மட்டத்தை (average level of activity) மீண்டும் கொண்டுவருவதற்கு முன்பாகவும், சமன்பாட்டை (equilibrium) மீண்டும் நிலைநிறுத்துவது விரும்பத்தக்கதாக இருப்பதற்கு முன்பும், பணவீக்கத்தின் ஒரு சக்திவாய்ந்த இடுமானம் (a strong-dose of inflation) இன்றியமையாததாகின்றது. இதுபோலவே, பூரிப்பின் உச்சகட்டத்தில், நல்லுணர்வு நிலையையும் (sanity) ஒத்த நிலையையும் (balance) கொண்டுவருவதற்கு ஓரளவு பண வடிப்பு (அதாவது, பணவீக்கக் குமிழிகள் சிலவற்றை உடைத்தாக வேண்டும்) அடிப்படையான தேவையாகும். எனவே, மைய பாங்கின் கடமை என்னவெனில், அடிக்கடி மாற்றமடையும் பொதுமக்களின் உளப்பாங்கு (psychology) என்னும் நிலத்தில் முளைக்கிற இப்பொருளாதாரக் கேடுகளின் முளைகளைக் கிள்ளி எறிவதல்ல; இக் கொடூரமான ஊசலாட்டத்தைத் (oscillations) தடுத்து நிறுத்துவதாகும். பணவீக்கத்தின் காலுக்குக் கட்டை போடுதல் (அதாவது பண வீக்கத்தைத் தடுத்தல்) ஒரு சமயம் அவசியமானதாக இருக்கலாம்; ஆனால் வேறு சமயங்களில் இவ்வாறு செய்வது பேராபத்தை விளைவிக்கக்கூடும். பணவீக்கம், பணவாட்டம் ஆகிய இரண்டு கால்களுக்குமே கட்டை போடுதல் என்பது, தலையீட்டைத் தேவைப்படும் மிகக் குறுங்கால அளவிற்கே, பொருத்தமுடையதாகும். தற்காலச் சூழ்நிலையில், மையபாங்கு சதா பணவீக்கத்தை உண்டுபண்ணிக்கொண்டோ அல்லது பணவாட்டத்தை உண்டுபண்ணிக்கொண்டோ இருக்க வேண்டும். இப்படி பணவீக்கத்தை பணவாட்டமாகவோ அல்லது பணவாட்டத்தை பணவீக்கமாகவோ தகுந்த சந்தர்ப்பத்தில் மாற்றுவதற்கு, கைக்கோளின் போக்கைச் சுறுசுறுப்புடனும் தாமதமின்றியும் உடனடியாக மாற்றியமைப்பது தேவைப்படும்.

மையபாங்கின் கைக்கோளில், சுறுசுறுப்பும் காலதாமதமின்மையும் இருப்பது அருமை. தான் விழையும் நடவடிக்கைகளை எடுப்பதற்கான முயற்சிகளை எவ்வாறு சில தடங்கல்களும், தயக்கங்களும் சீர்குலையச் செய்கின்றனவென்றும், மையபாங்கர் தமது எண்ணத்தை நிறைவேற்ற எத்துணை இடர்ப்பாடுகளைச் சமாளிக்கவேண்டியிருக்கிறதென்பதையும், ஏற்கனவே பார்த்துள்ளோம். அவர், ஆரம்பநிலையிலேயே நிலைமையைச் சரியாக ஆய்ந்துணர முடிந்தபோதிலும், அரசியல் (political) அல்லது செயல்முறை (technical) எதிர்ப்புகள் அவருக்கு இல்லாமலிருந்தாலும், எதிர்பார்க்கும் விளைவுகளை ஓரே இரவில் கொண்டுவந்து விட முடியாது. உதாரணமாக மையபாங்கு, கடனை அதிகரித்து

அதன் மூலம் முதலீட்டைத் தூண்ட விழைகிறதெனக் கொள்வோம். அதனுடைய கைக்கோள், பாங்குவீதத்தைக் குறைத்துக் கடன் பத்திரங்களின் இருப்பை அதிகப்படுத்துவதாக இருக்கும். இம்முறையில், அங்கத்தினர் பாங்குகள் குறைந்தவட்டி வீதத்தில் ஏராளமான கடன்களை அளிப்பதற்கு உகந்தவாறு உதவி செய்யப் படுகின்றன. இவ்வாருன இந்த ஆரம்பநிலையை நிறைவேற்றுவதற்கே பல மாதங்கள் பிடிக்கும். இவ்வாறு, மலிவானதும் அதிக அளவில் கிடைக்கக்கூடியதுமான கடனின் விளைவுகள் முதலில், பண அங்காடியில் தான் (Money market) தோன்றும்; பிறகு தான் மெதுவாக அங்காடியில் பரவி, புதிய கடன்களை உண்டுபண்ணும். பணத்தைச் சரளமாகக் கிடைக்கச் செய்யும் இந்தப் பண அலையானது, முதலீட்டாளர்கள் கிடைக்கின்ற, பண எல்லை வரையிலும் சென்றபோதிலும், முதலீட்டாளர் தமது சந்தர்ப்பத்தைப் பயன் படுத்திக்கொள்வதற்கான திட்டங்களைத் தீட்டுவதற்கே அவருக்குப் பல மாதங்கள் அவகாசம் கொடுக்கப்படவேண்டும். தனது முதலீட்டிற்கான பணத்தை ஏற்பாடு செய்துவிட்ட பிறகே, அவர் பணத்தைச் செலவழிக்க ஆரம்பிப்பார். அதன் பிறகு தான், விலைகள், வேலையின்மை ஆகியவற்றின் விளைவுகள் உணரப்படும். வணிகர்கள் தங்கள் சரக்கிருப்புக்களை (இவைகள் ஒரு சக்தி வாய்ந்த முதலீடாகும்) அதிகரிக்க ஆரம்பிப்பர்; நம்பிக்கை என்னும் உணர்வு அதிகரிக்கும். இதனுல் பணவீக்கம் என்னும் பனி உருண்டை (the snow ball of inflation ) வளர ஆரம்பிக்கும். பொதுவாக பாங்குக் கைக்கோள் கடன் பெருக்கத்தைத் தடுக்க வல்லதாக இருப்பதால், கடனைக் கட்டுப்படுத்துதல் விரைவான விளைவுகளைத் தரும். மையபாங்கு ஒரே இரவில் எல்லாப் புதிய முதலீட்டுத் திட்டங்களையும் அழிக்கவல்லதாயினும், ஏற்கெனவே தொடங்கப்பட்ட முதலீட்டுத் திட்டங்கள் தொடர்ந்து நீடித்துக் கொண்டேயிருக்கும். பெருக்கத்தின் சக்திகள் நீங்கி, சுருக்கத்தின் சக்தி (forces of contraction) களுக்கு வழிவிடுவதற்குப் பல மாதங்கள் பிடிக்கும்.

பாங்கின் மிக உறுதியான கைக்கோளின் தோற்றத்திற்கும் அது நிறைவேறுவதற்கும், மிகச் சாதகமான காலங்களில் கூட, கணிசமான அளவு இடைவேளை இருக்கும். இக் காலந் தாழ்த்துதலுடன் (delay), ஆய்ந்துணர்வதில் (diagnosis) ஏற்படும் இடர்ப்பாடுகளும், அரசியலால் (politics) ஏற்படும் காலந் தாழ்த்துதலாலும் (எதிர்க்கட்சிகளை கைக்கோளை ஆதரிக்குமாறு செய்தலும், ஏற்குமாறு பணிய வைத்தலும் தேவையாக இருப்பதால்) அல்லது பாங்கின் இயற்கையான தயக்கத்தாலும், மையபாங்கின் அதிகாரத்திற்குக் கட்டுப்பாடுகள் ஏற்படுகின்றன.

சமீப ஆண்டுகளில், மையபாங்கர்களின் பெரும்பகுதி சக்தியும் பூரிப்பு, மந்தம் ஆகியவற்றைத் தோற்றுவிக்கும் இயற்கையான பொருளாதாரப் போக்குகளைத் தடுத்து நிறுத்துவதற்குப் பயன் படாமல், அவர்களுடைய சென்ற கைக்கோளின் காலங்கடந்த விளைவுகளை (belated effects) மாற்றுவதற்கே பயன்படுகின்ற தென்றால் அது மிகையாகாது. ஐக்கிய அமெரிக்காவின் ஐக்கிய ரிசர்வு முறையில் ஓர் உதாரணத்தை எடுத்தாராய்வோம். 1927ஆம் ஆண்டு ஒரு பணப் பெருக்கக் கைக்கோள் (policy of expansion) பின்பற்றப்பட்டது. அது மிகவும் நீண்டகாலத்திற்குக் கடைப்பிடிக்கப்பட்டதால் இதுவரையில் கண்டிராத மிகவும் ஆச்சரியப்படத்தக்க பணவீக்கங்களிலொன்றை அது உண்டாக் கியது. ஐக்கிய ரிசர்வு முறையின் பல்வேறு கட்சிப் பூசல்களும், தங்கள் பூசல்களை மறந்து ஒருமுகமாக இப் பெருக்கத்தை ஒழித்துக் கட்ட முடிவு செய்யுந் தருவாயில், அதற்கு முன்பாக, பணவீக்கம் தானே மடிந்து போயிற்று. 1929ஆம் ஆண்டு கோடையின் பிற் பகுதியில் ஏற்பட்ட பாங்குவீத அதிகரிப்பும், கடன் கட்டுப்பாடும், பூரிப்பைத் தடுத்து நிறுத்தவில்லை. ஆனால், அவை ஏற்கனவே மெல்ல எழும்பியிருந்த மந்தத்திற்குத் தெம்பூட்டின. பெருக்கத் திற்கு எதிரான நடவடிக்கையை 1932ஆம் ஆண்டு ஆரம்பம் வரையில் மனப்பூர்வமாக கடைப்பிடிக்கவில்லை. இரண்டாண்டு கள் கழித்து இக்கொள்கையைக் கடைப்பிடித்தது, காலங்கடந்த செயலாக இருந்தது.

பார்க்கப்போனல், மையபாங்கர்களுடைய வேலை மிகவும் கடினமானதே. வசூல் காலத்திலாவது அவர்களுடைய சக்தி தராசின், தவருன பக்கத்தைத் தவிர்த்து, சரியான பக்கத்திற்கு (right side) அளிக்கப்படும் என்று நம்பப்படுகிறது.

பாங்கு அதிகாரத்தின் (banking control) எல்லையைக் கணக்கெடுத்த நாம் இந்த நம்பிக்கையற்ற முடிவைத் (pessimistic conclusion) தான் காணமுடிகிறது. இதனை ஒப்புக்கொள்ளா விட்டால், கபடு சூதற்றவர்கள் என்று நம்மைக் கூறிக்கொள்ள இயலாது. ஆனல் மேற்சொன்ன நிலைக்கு யாதொரு நிவராணமும் இல்லையென்பது பொருளல்ல. இதற்கு மாருக, பாங்குக் கைக் கோளின் கோட்பாட்டிலும் (theory) நடைமுறையிலும் (practice) பேரளவு முன்னேற்றம் காண்பதற்கு நிறைய இடமிருக்கிறது. ஒரு சில மையபாங்குகளே மக்களின் நலனில் அக்கறை கொண் டுள்ளன. இதிலும் வெகு சில மையபாங்குகளே, அறிவுக் கூர்மை யான முடிவுகளைத் தக்க நேரத்தில் எடுத்து அவைகளை, தங்களாலி யன்ற மட்டும் நிறைவேற்றுகின்றன. மையபாங்கின் பொறுப்பை

அதிகப்படுத்துவது உடனடியாக செய்யப்படவேண்டியவற்றுள் ஒன்ருகும். சமன்பாட்டை (equilibrium) நிலை நிறுத்தும் விருப்பத்தை நிறைவேற்றுவதற்கு தனது முழு அதிகாரங்களையும் பயன் படுத்தும்படி அது தூண்டப்படவேண்டும். நெருக்கடி காலங்களில் மட்டும் (crisis) தம் கடமையைச் செய்வதோடன்னியில், இன்னும், எல்லாக் காலங்களிலும் அத்துமீறிச் செல்லும் பொருளாதார முறையின் ஒழுங்குபடுத்தியாகவும் (governor) காப்பு வாயிலாகவும் (safety valve) இருக்கவேண்டும். இந்தப்பண்புகள் யாவும் மையபாங்கிற்கு அனுபவவாயிலாக வரவேண்டுமே தவிர, சட்டத்தினுல் திணிக்கப்பட்டுவிட முடியாது. கிரேட் பிரிட்டன் போன்ற நாடுகளில், மையபாங்கிற்கு உண்மையில் இன்னும் கூடுதலான அரசாங்கக் கட்டுப்பாடு தேவைப்படலாம். ஏனெனில் நிதியக் கைக்கோளென்று பொருளாதார நிலைத்த தன்மையை (economic stabilty) நோக்கமாகக் கொண்ட ஒரு பரந்த கோட்பாட்டின் அங்கமாகத் தற்காலத்தில் இருப்பதால் இது அவசியமாகிறது. கிரேட்பிரிட்டனில் இதுவரையில், இத்தகைய கட்டுப்பாடு, வளர்ச்சியடையாத ஆரம்பநிலையிலேயே இருந்து வந்திருக்கிறது. மையபாங்கின் மேல் அரசாங்கத்தின் அதிகாரம் திணிக்கப்படுமாஞல் அது தவருன கைக்கோளாகும். சரியான கைக்கோளை, (right policy) அது நிறைவேற்றும் பொருட்டுக் கையாளும், செயலைத் தடை செய்வதோ அல்லது அது சிறந்த வழிகளைத் தேர்ந்தெடுப்பதைத் தடை செய்வதோ, நன்மை விளைவிப்பதற்குப்பதிலாக அதிகமான தீங்கையே விளைவிக்கும். சிறந்த மையபாங்கு, பொதுமக்களின் மனப்பான்மையை எதிர்த்துச் செல்லும் கடமையைக் கொண்டதாகும். ஏனெனில் நடப்பிலிருக்கும் இந்தப் பொதுமக்களின் மனப்பான்மையே, நம்பிக்கை அதிகமாயும் (over optimistic) நம்பிக்கை மிகக் குறைந்து முள்ள (over despairing) நிலைகள் மாறி மாறி வருவதனுலேயே, பூரிப்பு மந்தம் ஆகியவற்றை உருவாக்கும் காரணிகள் வேறெதையும் விட மிக முக்கியமானதாக இருக்கிறது. மையபாங்கின் கைக்கோள் குடியரசு ரீதியில் (கைக்கோளை வாக்காளர்கள்தான் முடிவுசெய்ய வேண்டுமென்ற நியதியை) இருக்க வேண்டுமென்று அரசாங்கம் தன் அதிகாரத்தின் மூலம் வலியுறுத்துமாஞல், அது பேராபத்தில் முடியும்.

பொருளாதாரக்கற்பனை உலகத்தை பாங்குக் கைக்கோளினுல் மட்டுமே நிலைநாட்டமுடியாது. அதனுடைய முதற்கடமை, சிக்கலான கடன் முறையின் நிலையற்ற தன்மையைத் தடுத்து நிலைத்ததாகச் செய்வதும் அதன் மூலம் வளர்ந்து செல்லும் ஏற்ற இறக்கங்களைத் (Fluctuations) தடுப்பதுமாகும். அதனுடைய

எல்லைக்கும் புறம்பான சக்திகளால் விளையும் கேடுகளைச் சரிக்கட்ட ஆழ்ந்து முயற்சி செய்வது, அதனுடைய இரண்டாவது கடமை யாகும். அந்தக் காரணங்கள், பண எல்லைக்கு வெளியில் தான் உள்ளன. சரியான பாங்குமுறையில் அமைக்கப்பட்டு, யாவும் அறிந்த மையபாங்கின் ஆளுகைக் குட்பட்ட பணமானது, மனித னுடைய விருப்பங்களுக்கும், உணர்ச்சிகளுக்கும், பீதிகளுக்கும் நம்பிக்கைக்கும், பயந்த தன்மைகளுக்கும் முட்டாள் தனங் களுக்கும், இடமளித்து அவைகளைச் செயற்படுத்துகின்றது. பணமானது, மனிதனின் ஒரு பயன்படு அறிவாயுதமாகக் கண்டு பிடிக்கப்பட்டது. மனிதன் போர்களை நடத்தத் தீர்மானித்தால், அதனுல் வரும் பொருளாதார நஷ்டங்களைப் பணம் தடுத்துவிட முடியாது. பண்டங்களின் தடையற்ற பரிவர்த்தனையால் தற்போதுள்ள உயர்ந்த பொருளாதார நிலையை எய்தியிருக்கும் மனிதன், அதற்குத் தடைகளையும் வேலிகளையும் இடத் தீர்மானித் தால், அதனுல் வரும் குழப்பங்களையும் இடுக்கண்களையும் பணம் தடுத்துவிட முடியாது. உடனடியான விளைவுகளையன்றி மற்ற விளைவுகளை மனிதன் எதிர் நோக்கவில்லை யென்ருல், பணமானது மிகத் தொலைவில் நிகழக் கூடிய தீங்குகளைத் தடுக்க இயலாது. சிறந்த பணியாள் என்ற முறையில் தனது தலைவர் உண்டாக்கும் சமன்கேடுகளுடன் தனது சமன்கேடுகளும் சேர்ந்து விடாமல் பார்த்துக்கொள்ள, பணம் முயற்சிசெய்யக் கூடும்.

# 7 அயல் நாட்டு மாற்றுகள்
## (Foreign Exchanges)

### அயல்நாட்டுச் செலாவணிகள் (Foreign Currencies.)

மக்கள், பண்டங்கள், பணிகள் ஆகியவற்றிற்கு விலையாகப் பணத்தை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருப்பதால்தான் பணம் மதிப்பைப் பெறுகிறதென்று நாம் ஏற்கெனவே பார்த்தோம். அந்தப்பணம் விலையுயர்ந்த உலோகத்தினு லானதாக இருக்கலாம் அல்லது சட்டபூர்வப் பணம் என்னும் உரிமை பெற்றதாக இருக்கலாம். ஆயினும் இவ்விருவகையான பண்புகளும் பணத்திற்கு இன்றியமையாதன வல்ல. உண்மையில், கிரேட் பிரிட்டனில் நடக்கும் ஏராளமான பண பேரங்கள் (money transactions) சட்ட பூர்வப் பணமல்லாத தாள்பத்திரங்களால் (paper documents)தான் நடந்து வருகின்றன. லண்டனிலிருக்கு மொருவர் கிளாஸ்கோ (Glasgow) விலிருக்கும் ஒருவருக்குக் கடனைத் திருப்பி அடைக்கவேண்டுமே யானுல் நாணயம் (coin) அல்லது பாங்கு நோட்டு (Bank note) அல்லது செக்கைக் (cheque) கொடுத்துக் கடனைத் திருப்பி அடைக்கலாம். இவை மூன்றிலும், செக்கே (cheque) மிகவும் ஏற்றுக்கொள்ளப் படுகிறது. ஆனுல் ஒரு நிபந்தனை, கடனுளி செக்கில் குறிப்பிட்டிருக்கும் பாங்கு கடன் ஈவோனுக்கு (creditor) நன்கு தெரிந்திருப்பதுடன், அதன் வகையுள்ள தன்மையில் (solvency) அவருக்கு நம்பிக்கையு மிருக்கவேண்டும். இவ்வாருன ஏற்புத் தன்மையே (acceptability) செச்குகளைப் பணம் போற் செய்து வியாபார நடவடிக்கைகளையும் நிறைவேற்றி வைக்கின்றது. இந்நூலில், இனிமேல்வரும் பகுதிகளில், பலநாடுகளுக்கிடையே நடக்கும் பணமாற்றுமுறையைக் கொண்ட நிதிய நடவடிக்கைகளைப் பற்றி ஆராய்வோம். கடனைத் திருப்பி அடைக்கும் போது ஏற்றுக்கொள்ளப்படும் ஒரு பொருள் தற்போது உலகம்

முழுவதிலுமே இல்லை என்றுதான் நாம் குறிப்பிட வேண்டும். பன்னாட்டுப்பணம் என்றதாக ஒன்றுமில்லை. இந்தக் கூற்றினுக்கு விதிவிலக்காகப் பொன்னை முன்பெல்லாம் கூறுவர். பன்னாட்டுச் செலாவணிமுறையில் (International currency system) பொன்னின் (Gold) பங்கை உணர்த்துவதற்கு ஒரு முழு அத்தியாயமே தேவைப்படும். தற்காலச் சூழ்நிலைகளில், சாதாரணக் குடிமகனைப் பொறுத்தவரையில், பொன் ஒரு பன்னாட்டுப் பணமாக இருக்க வில்லை. அமெரிக்கக் கார்களை இறக்குமதி செய்பவர், பிரிட்டிஷ் எஃகை (steal) வாங்கும் இந்தியர், செல்ட்டன் ஹாமிலுள்ள (Cheltenham) தமது பங்குதாரருக்கு (shareholder) இலாபஈவு (dividend) தரும் அர்ஜென்டினு (Argentina) ரெயில்வே கம்பெனி —இவர்கள் யாருமே மூட்டை மூட்டையாகப் பொன்னை உலகத் தின் பல பாகங்களுக்குக் கப்பலில் அனுப்பி, தாங்கள் கொடுக்க வேண்டியவைகளைச் செலுத்துவதில்லை. இந்த அத்தியாயத்திலும் தொடர்ந்த இன்னும் சில அத்தியாயங்களிலும், பொன் எவ்வாறு சிறப்பாகவும், விதிவிலக்காகவும், அயல்நாட்டு மாற்றின் (foreign exchange) பொதுவான தன்மையிற் குறுக்கிடுகிற தென்பதைப் பார்ப்போம்.

உலகம் முழுமையும் ஏற்றுக்கொள்ளத்தக்க ஒரு பணம் இல்லை என்றே கூறவேண்டும். உதாரணமாக பெல்ஃபாஸ்டி (Belfast) லிருக்கும் லினன் (ஒருவகை நார்ப்பட்டு) உற்பத்தியாளர் லண்டனி லுள்ள வணிகருக்கு லினனை விற்று, அதற்கு விலையாகச் செக்கையோ, அல்லது பாங்கு நோட்டுகளையோ அல்லது நாண யங்களையோ, மனமுவந்து பெற்றுக்கொள்வார். மேற்சொன்ன வைகள் யாவும் அவருக்குப் பயன்படும். ஏனெனில் அவைகள் பவுண்டுகளையும், ஷில்லிங்குகளையும் பென்சுகளையும் தாங்கி யுள்ளன. எனவே லினன் உற்பத்தியாளர் அவைகளைக் கொண்டு ஃபிளாக்ஸ் (flax) வாங்கவோ அல்லது அவருடைய தொழிலாளர் களுக்குக் கூலி தரவோ முடியும். லினனை அவர் லண்டனுக்கு விற்பதை விட்டு அமெரிக்காவிலுள்ள நியூயார்க்கில் (Newyork) கொண்டுபோய் விற்கிருரென்று வைத்துக்கொள்வோம். தனது சரக்கிற்கான பணத்தை அவர் எவ்வாறு பெறஇயலும்? அமெரிக்கா வில், மேற்படி சரக்கை வாங்குகின்றவரிடம் டாலர் (dollar) நோட்டுக்களே இருக்கும். பெல்ஃபாஸ்டிலிருக்கும் லினன் உற்பத்தி யாளருக்கு டாலர் நோட்டுக்களால் என்ன பயன்? அவருக்கு ஃபிளாக்ஸ் என்னும் கச்சாப் பொருளை அளிப்பவரும் அவருடைய தொழிலாளர்களும் டாலர் நோட்டுக்களை வாங்கிக்கொள்ளமாட் டார்கள். பெல்ஃபாஸ்டிலிருப்பவர் பவுண்டு நோட்டுக்களையே மனமுவந்து பெற்றுக்கொள்வார். ஆனல் நியூயார்க்கிலிருக்கும்

வணிகருக்கோ, சாதாரணமாக வியாபார மூலமாக பவுண்டு நோட்டுக்கள் வருவதில்லை. செக்கு மூலமாகப் பணம் செலுத்துதலும் மேற்படி வியாபாரத்தில் எளிதான காரியமல்ல. அமெரிக்கருடைய செக்கு ஒன்றை அல்ஸ்டரிலிருக்கும் ஒருவர் ஏற்க மாட்டார்; காரணம் அந்தச் செக்கு குறிப்பிட்டிருக்கும் பாங்கு (Bank) அவருக்குத் தெரியாது. அந்தச் செக்கினால் (cheque) பெறக்கூடிய செலாவணியும் (currency) அவருக்குப் புரியாததாகவும் பயனற்றதாகவும் இருக்கும்.

ஆனால் நடைமுறையில் இந்தத் தொந்தரவுகள் ஏற்படுவதில்லை. நியூயார்க் பாங்கின் டாலர் செக்குக் கிடைக்கப்பெற்ற பெல்ஃபாஸ்ட் உற்பத்தியாளர், அந்தச் செக்கைப் பெல்ஃபஸ்ட் பாங்கினிடம் செலுத்திவிட்டு அதற்குச் சமமான பவுண்டுகள், ஷில்லிங்குகள், பென்சுகளைக் கொண்ட, வைப்பு ஒன்றை (deposit)ப் பெற்றுக்கொள்வார். ஆனால்இது தன் பொறுப்பைப் (responsibility) பிறர்மீது சுமத்துவதையே உணர்த்துகிறது. டாலர்களையும் சென்டு (cents)களையும் வைத்துக்கொண்டு அந்த பாங்கு என்ன செய்யும்? அதனுடைய எழுத்தர்களோ (clerks) அல்லது வைப்பாளிகளோ (depositors) அல்லது பங்குதாரர்களோ தங்களுடைய பணத்தை டாலர்களாகப் பெற்றுக்கொள்ள சம்மதிக்க மாட்டார்கள். பயனற்ற டாலர்களைச் சேர்த்துவைக்க பாங்கு விருப்பப்படாதல்லவா? அதற்கு, டாலர்களைக் கொடுத்துவிட்டுப் பவுண்டுகளைப் பெற இயன்றால்தான், தான் டாலர்களுக்கு மாற்றாகப் பவுண்டுகளைக் கொடுக்கமுடியும். பெல்ஃபாஸ்ட் பாங்கு, இலண்டன் பாங்கிற்கு டாலர்களை விற்றுவிட்டு மாற்றாக பவுண்டுகளைப் பெறும். அப்படியும், டாலர்கள், அவைகளை நேரடியாகப் பயன்படுத்துபவர்களை அடையவில்லை. டாலர்களை மீண்டும் மாற்றுவதற்காகவேயன்றி தான் பயன்படுத்துவதற்கே பெறுகின்ற ஒருவருக்கு விற்கும்போது இம்மாதிரியான மாற்று முறை (process of exchange) முடிவடைகிறது. டாலர்களைப் பயன்படுத்தக்கூடிய மக்கள் ஐக்கிய அமெரிக்காவில் வாழும் மக்கள் அல்லது அமெரிக்காவில் பணத்தைச் சேமித்துவைக்க விரும்புபவர்களாவர். இதைப்போலவே ஸ்டெர்லிங் பவுண்டுகளைப் (pounds sterling) பயன்படுத்தக்கூடிய மக்கள் ஐக்கிய அரசாங்கத்தில் (United Kingdom) வாழும் மக்கள் (residents) அல்லது ஐக்கிய அரசாங்கத்திற்குப் பணம் செலுத்த வேண்டியவர்களுமாவர்.[1]

இதுவே அயல்நாட்டு மாற்றின் (foreign exchange) தலையாய கோட்பாடாகும். ஒவ்வொரு நாடும் தனக்கெனத் தனியாக ஒரு

1. அல்லது பவுண்டு ஸ்டெர்லிங் செலவாணியாகயுள்ள பிரிட்டிஷ் பேரரசின் எந்தப் பகுதியிலும் வாழும் மக்கள்.

பணத்தை வைத்திருக்கின்றது. ஒவ்வொரு நாட்டின் பணமும் அந்த நாட்டின் எல்லேகளுக்குள் தான் தாராளமாக ஏற்றுக் கொள்ளப்படும். ஒரு நாட்டின் பணம் அந்த நாட்டிற்கு வெளியே ஏற்றுக்கொள்ளப்படுவதில்லே. நாட்டின் எல்லேக்கு வெளியே செலுத்தப்படும் செல்லுகளனைத்தும் (payments) வேறு பணமாக மாற்றப்பட்டே செலுத்தப்படவேண்டும். நியூயார்க் வணிகர் பெல்ஃபாஸ்டிலிருத்கும் உற்பத்தியாளருக்குப் பணம் அனுப்ப வேண்டுமென்ருல், ஒன்று அந்த அமெரிக்க வணிகர் டாலர்களேப் பவுண்டாக மாற்றி அனுப்பவேண்டும்; அப்படியில்லேயெனில் பெல் ஃபாஸ்ட் மனிதர் டாலர்களேப் பவுண்டுகளாக மாற்றிக்கொள்ள வேண்டும் (அவருக்கு பவுண்டுகளே பயனுடையவை). இவ் விரு வகையிலும் செலாவணிகளின் (currencies) மாற்று (exchange) நடந்திருக்கிறது.

இக் கருத்து மிகவும் வறட்டுவாதமாகவே இருக்கிறது. எனினும் இதனே ஆராய்வது ஒருவிதத்தில் பயன்தக்கதாகும். பன்ஞட்டு ரீதியில், பணம் செய்யும் வேலேயைப்பற்றித் தெரிந்து கொள்வதற்கு இது மிகவும் இன்றியமையாததாகும். இது தெரியாத காரணத்தால் இதுபற்றிப் பல தவருன கருத்துக்களே பொதுமக்கள் கொண்டிருக்கின்றனர். மாற்று (exchange) ஒன்று நடக்கவேண்டு மாஞல் அதற்கு இருதரப்பினர் (two parties) வேண்டும். பவுண்டு களே (pounds) டாலர்களுக்கு (dollars) 'மாற்று' செய்ய இயலாத வரையில், டாலர்களேயும் பவுண்டுகளுக்கு மாற்றுச் செய்ய இயலாது. ரொக்கச் செல்லில் (cash payment) இரண்டு நபர்கள் (two parties) தேவைப்படுகின்றனர்—ஒருவர் செலுத்துபவர் மற்ருெருவர் பெறுபவர் (receiver). பெரும்பாலான பன்ஞட்டுப் பண மாற்றுகளுக்கு (international monetary exchanges) நான்கு முக்கிய நபர்கள் வேண்டும். இரண்டு செலுத்துபவர்களும் (two payers) இரண்டு பெறுபவர்களும் (receivers) வேண்டும். இம் மாற்றுமுறையைச் சிலசமயம் 'மாற்றம்' (conversion) என்று தவறு தலாகக் கூறுகின்றனர். இத்தனே டாலர்கள், இத்தனே மாற்று வீதத்தில் பவுண்டுகளாக மாற்றமடைகின்றன (conversion) என்றும், ஃபிரான்க்குகளே (francs) கில்டர்களாகவும் (கில்டர்கள் என்பது பழைய டச்சு அல்லது ஜெர்மன் பொன் நாணயம்) 'மாற்றம்' (conversion) செய்யப்படுவதைக் குறிக்குமென்று தவறு தலாகக் குறிப்பிடப்படுகிறது. 'மாற்றம்' (conversion) செய்தல் என்னும் சொல் மிகவும் தவறுதலான கருத்தை உணர்த்தும். மாவு அரைக்கும் தொழிற்சாலே சொந்தக்காரர் கோதுமையை மாவாக மாறும்படி (converison) செய்கிருர். ரொட்டி தயாரிப்பவர் (baker) மாவை ரொட்டியாக மாற்றமடையச் செய்வார். ஆஞல்

இவைகள், செலாவணிகளின் மாற்றுக்கு (exchange of currencies) வேறுபட்டவை. மாவு அரைப்பவர் (miller) தானியங்களை மாவாக மாறச் செய்யும்போது (converts) மாவைத் தானியமாக மாற்றம் செய்ய விரும்பும் சிலரைத் தேடிச்செல்ல வேண்டியதில்லை; அதே போல் ரொட்டி தயாரிப்பவர் (baker) ரொட்டியை மாவாக மாற்றம் செய்ய விழையும் சிலரை நாடிச் செல்ல வேண்டியதில்லை. ஆனால் ஒரு பவுண்டு நோட்டு ஒன்றின் சொந்தக்காரர் அதை ஒரு டாலர் அல்லது அதற்கு அதிகமான நோட்டுக்களாக மாற்றம் (convert) செய்வதற்கு வேறு வழியில்லை (மாவுத் தொழிற்சாலை சொந்தக் காரர் அல்லது ரொட்டித் தயாரிப்பாளரின் கருத்துப்படி). அவர் அதை வேறு பொருள்களை வாங்குவதற்காகப் பயன்படுத்தலாம்; அப் பொருள்களைக் கப்பல் மூலம் அமெரிக்காவுக்கனுப்பி டாலர் களுக்கு அவைகளை விற்கலாம், என்பதென்னவோ உண்மை தான். ஆனால் அது இரண்டு 'மாற்று' (exchange) வேலைகளைக் குறிப்பிடுகிறது, மாற்றம் (conversion) செய்யப்படுவதை குறிப்பிட வில்லை. 'மாற்றம்' (conversion) என்னும் சொல் செலாவணிகளுக் குப் பயன்படுத்தப்படும்போது எப்போதும் (always) மாற்றையே (exchange) குறிக்கும்.

மொழி, தவறான கருத்தில் பயன்படுத்தப்பட்டிருப்பதற்கு இன்னொரு உதாரணம் 'இலண்டனுக்கு வருகிற பணம்' (Money coming into London) அல்லது 'இலண்டனிலிருந்து திரும்பப் பெறப்படுகிறப் பணம்' (Money being withdrawn from London) என்ற பழக்கமான சொற்றொடராகும். பணம் கிரேட்பிரிட்டனுக்கு வந்து சேருவதற்கு ஒரேவழி பவுண்டு நோட்டுக்களை (அல்லது பொன் திட்டம் அமுலிலுள்ள தனியான சூழ்நிலையில், பொன்னை) அப்படியே அவைகளை நேரடியாக இறக்குமதி செய்துகொள்ளுத லாகும். பணத்தின் 'உள்நோக்கிய ஓட்டம்' (inflow) அல்லது வெளிநோக்கிய ஓட்டம் (outflow) என்பது என்னவெனில் வெளி நாட்டவர்கள் தங்கள் நாட்டுச் செலாவணியைக் கொடுத்து மாற் றாகப் பவுண்டுகளைப் பெறும்போதும் அல்லது பவுண்டுகளைக் கொடுத்துவிட்டு மீண்டும் தங்கள் நாட்டு செலாவணிகளைப் பெறும்போதும் நிகழ்வனவாகும். 'வெளிநாட்டுப் பண நுழைவால்' (inflow of foreign money) இங்கிலாந்து பாங்கு அல்லது மற்ற பாங்குகள் அதிகமான பணத்தைச் சிருட்டி செய்தால் தவிர; ஆனால் இது முற்றிலும் வேறான நிகழ்ச்சியாகும்—இலண்டனில் பணமே இல்லாமலிருந்தது. 'அந்நிய மூலதனத்தின்அதிகரிப்பால்' (flight of foreign capital) பணம் ஏராளமாக இருந்தது. நடந்தது என்னவெனில் உள்நோக்கிய ஓட்டம் (inflow) அல்லது வெளி நோக்கிய ஓட்டத்திற்கு முன்பு, பிரிட்டனின் மொத்தப் பணத்தில்

அதிகமான அளவு (பண நுழைவின் போது) அல்லது குறைவான அளவு (பணம் திரும்ப பெற்றுக்கொள்ளப்படும்போது) அயல் நாட்டினருக்குச் சொந்தமாயிருந்தது. ஏன் அயல்நாட்டினர், பிரிட்டிஷ் செலாவணியைச் சிலசமயம் அதிகமாகவும் சிலசமயம் குறைவாகவும் வைத்துக்கொள்ள விழைந்தனரென்பதை இன்னும் சிறிது நேரத்தில் ஆராய்வோம். இங்கே கவனிக்கத்தக்க குறிப்புகள் யாதெனில், கிரேட் பிரிட்டனில் செலவழிப்பதற்கே அவர்களுக்கு பிரிட்டிஷ் செலாவணி (British currency) பயன்படுகிறதென்பதும், அதை அடைவதற்கு அல்லது பயன்படுத்துவதற்கான ஒரேவழி தங்கள் நாட்டின் செலாவணிகளை மாற்றுகக் கொடுத்துப் பெறுகின்றன என்பனவாகும்.

இம் மாற்றுக் (exchange) கோட்பாடு எவ்விதம் அசட்டை செய்யப்படுகிறது என்பதை ஆராய்வது நலம். 1914-18-ல் நடந்த போருக்குப் பிறகு, ஜெர்மனி நஷ்டஈடு (Reparation) கொடுக்க வேண்டியதைப் பற்றிய ஒரு பெரும் விவாதம் நடந்தது. ஜெர்மனிக்குச் சென்று திரும்பும் பயணர்கள் (travellers) 'ஜெர்மனி தன்னால் நஷ்டஈடு கொடுக்க இயலாதெனக் கூறுவது உண்மையல்ல என்று வாதித்தனர். ஏனெனில் அப்போது ஜெர்மனியில் நிறையப் பணம் இருந்தது. பெர்லினிலுள்ள இரவுக் கழகங்களில் (night clubs) நிறையக் கூட்டமிருப்பதையும், தெருக்களில் விலையுயர்ந்த கார்கள் சென்றுகொண்டிருப்பதையும் பற்றி அப்பயணர்கள் கூறினர். இரவுக் குழாங்களின் கட்டணங்கள் கொடுக்கப்பட்டதும் கார்கள் வாங்கப்பட்டதும் உண்மையே. ஆனால் அவைகள் ஜெர்மனியின் 'மார்க்கு' (Mark) என்னும் செலாவணியால் வாங்கப்பட்டன. பிரிட்டிஷ் அல்லது ஃபிரஞ்சு அல்லது இதர அரசாங்கங்கள் ஜெர்மனி கொடுக்கவேண்டிய நஷ்டஈடுகளை ஜெர்மனியின் மார்க்குகள் (Marks) மூலம் பெற்றுக்கொள்ளத் தயாராயிருக்கும் பட்சத்தில், வரிவிதிக்கப்படக்கூடிய வருமானமுடைய ஒவ்வொரு குடிமகனையும் வரி விதித்து நஷ்ட ஈடுகளை ஜெர்மனி கொடுத்திருக்கும். ஆனால் நேசநாடுகள் இந்த மார்க்குகளைப் பெறத் தயாராக இல்லை. அவர்களுக்கு மார்க்குகளினால் யாதொரு பயனுமில்லாத போது, ஏன் அவைகளை ஏற்றுக்கொள்ள வேண்டும்? நஷ்ட ஈடுகளைக் கொடுக்கும் பொருட்டு ஜெர்மன் அரசாங்கம் தனது மார்க்குகளை பவுண்டுகளாகவும் (pounds) ஃபிரான்குகளாகவும் (francs) இன்னும் இதர செலாவணிகளாகவும் மாற்றிக் கொள்ள (exchange) வேண்டிய நிலையிருந்தது. இந்தச் செலாவணிகளின் சொந்தக்காரர்களில் பலர் இவைகளை (மார்க்குகளை) ஏற்றுக்கொள்ளாத போது, ஜெர்மனிக்குத் தொல்லை ஏற்பட்டது. அவர்கள் ஏன் ஏற்க மறுத்தனரென்பதைச் சிறிது நேரத்

தில் ஆராய்வோம். அவைகள் ஏற்காத காரணத்தால்தான், ஜெர்மனிக்கு அயல்நாட்டுச் செலாவணிகளைப் பெற முடியாது போய், நஷ்ட ஈடுகளையும் தர முடியாது போயிற்று.

இதைப் போன்றதொரு தவறான கருத்தே (misconception) ஐக்கிய அமெரிக்காவில் இரண்டு உலக யுத்தங்களுக்கு மிடையே யுள்ள ஆண்டுகளில் நிலவியது. ஐரோப்பிய நாடுகள் தங்களால் போர்க் கடன்களைத் திருப்பித் தர இயலவில்லையெனக் கூறுவது தவறானது என்று அமெரிக்காவில் பேசப்பட்டு வந்தது. ஐரோப்பிய நாடுகள் செலவு அதிகம் பிடிக்கின்ற தரைப் படைகளையும் (armies) கப்பற் படைகளையும் (navies) வைத்து நடத்த இயன்ற போது, வாங்கிய கடனைத் திருப்பி அடைக்கமட்டும் இயல வில்லையா என்னும் வினவினைப் பலர் அமெரிக்காவில் எழுப்பினர். ஜெர்மனி நாட்டிற்கு நேர்ந்த தொல்லையைப் போன்றே ஐரோப்பிய நாடுகளுக்கும் ஏற்பட்டது. தரைப் படைகளுக்கும், கப்பற் படை களுக்கும் பவுண்டுகள், ஃபிராங்குகள் இவைகளினால் சம்பளம் கொடுக்கப்பட்டது. ஆனால் போர்க் கடன்களோ டாலர்களினால் கொடுக்கப்பட வேண்டியிருந்தன. கடன் பெற்ற நாடுகள் தங்களு டைய பவுண்டுகள், ஃபிராங்குகள் ஆகிய இவைகளைக் கொடுத்து விட்டு டாலர்களைப் பெறுவதில் தொல்லை யடைந்தன. ஏனெனில் அவர்களின் செலாவணிகளை எடுத்துக்கொண்டு டாலர்களைத் தர அமெரிக்கர்களில் பலர் முன் வரவில்லை. மேற்கூறிய இரண்டு உதாரணங்களிலும் ஏற்பட்ட இடர்ப்பாடுகள் செலுத்தலில் (payment) ஏற்பட்டதன்று; மாற்றலில் (exchange) ஏற்பட்ட தொன்றே.

பன்னாட்டு வாணிப நடவடிக்கைகள் ஒவ்வொன்றிலும் செலா வணிகளின் மாற்று (exchange of currencies) தேவைப்படும். பன் னாட்டுப் பணப் பிரச்சினைகளை நன்கு புரிந்துகொள்ள இக்கருத்து மிகவும் இன்றியமையாததாகும். செலாவணிகளின் மாற்று ஒவ் வொன்றுக்கும் குறைந்தது இருதரப்பினரின் (two parties) தன் னிச்சையான கூட்டுறவு (voluntary co-operation) தேவை. இதனால், ஒரு நாட்டிலிருந்து மற்ற நாடுகளுக்குச் செல்லும் செல்லுகள் (payments) அவற்றிற்குச் சமமான பிறநாடுகளிலிருந்து வருகின்ற செல்லுகளால் சமனமாக்கப் படவேண்டும், என்று தெரி கிறது. ஏனெனில் ஒரு தரப்பினரால் மாற்றாகக் கொடுக்கப்பட்ட (given in exchange) ஒவ்வொரு பவுண்டும் இன்னொரு தரப்பினரால் மாற்றாக எடுத்துக் கொள்ளப்பட்ட (taken in exchange) பவுண்டா கும். இதுவே அயல்நாட்டு மாற்றுகளில் முதன்மையாக உள்ள பொன் விதி (golden rule) யாகும்.

## அயல்நாட்டு மாற்று அங்காடி
(The Foreign Exchange Market)

1939-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் போர் துவக்கியதிலிருந்து, பெரும்பான்மையான நாடுகளில், அயல்நாட்டுச் செலாவணிகளின் நடவடிக்கைகள் கண்டிப்பான கட்டுப்பாட்டின் கீழ் வைக்கப்பட்டுள்ளன. நாட்டுச் செலாவணியை அந்நியச் செலாவணிகளுக்கு மாற்ற யார், என்ன நோக்கத்திற்காக, எந்த வீதத்தில் அனுமதிக்கப்பட வேண்டுமென்பதைத் தீர்மானிக்கும் அதிகாரத்தை அரசாங்கம் தன்னிடமே வைத்துக் கொண்டுள்ளது. எந்த நாட்டிலும் தற்போது, (ஒரு சில அதிர்ஷ்டமுள்ள நாடுகளைத் தவிர) தடையற்ற அயல்நாட்டு மாற்று அங்காடி (free foreign exchange market) என்பது இல்லை.

எனினும் இந்நூலின் அடுத்த சில பிரிவுகள், அவைகள் போருக்கு முன் எழுதப்பட்டவையாகையால், தடையிலா மாற்று அங்காடியை விளக்குவதற்கே எழுதப்பட்டுள்ளன. இதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. முதலாவதாக அமெரிக்கா, பிரிட்டன் இன்னும் பல நாடுகளின் அரசாங்கங்கள் குறைந்த பட்சம், அரை குறையான சுதந்திரத்தையாவது அயல்நாட்டு அங்காடிக்கு திரும்பவும் கொண்டுவரவேண்டும் என்று கங்கணம் கட்டிக் கொண்டிருக்கின்றன. இரண்டாவதாக, தடையிலா அயல்நாட்டு மாற்று அங்காடி (free foreign exchange) எவ்வாறு இயங்குகிறதென்பதைத் தெரிந்துகொண்டால்தான் மாற்றுக் கட்டுப்பாட்டின் (exchange control) பிரச்சினைகளையும் முறைகளையும் நன்கு புரிந்து கொள்ள முடியும். அடுத்து வரும் பத்திகள் (paragraphs) இக் கருத்தின்படியே எழுதப்பட்டுள்ளன. என்றுவதொரு நாள் மீண்டும் தடையிலா மாற்று அங்காடி வரும் என்ற நம்பிக்கையிலும் இது எழுதப்பட்டுள்ளது.

நாடுகளின் செலாவணிகள் மாற்று நடப்பதற்கு முக்கியமாகவுள்ள சாதனம் (mechanism) அயல்நாட்டு மாற்று அங்காடியே. இதனுடைய முக்கிய வேலைகளை ஆராய்வதற்கு முன்னர், இரண்டாவது அத்தியாயத்தில் நாம் சுருக்கமாகப் பார்த்த மாற்று உண்டியல்கள், எவ்வாறு வேலை செய்கின்றன என்பதைச் சுருக்கமாக விளக்குவோம். மாற்று உண்டியல்கள், பன்னாட்டுச் செல்லுகளை நிறைவேற்றி வைப்பதைவிட அவைகளைத் தேவையற்றவைகளாகச் (unnecessary) செய்வதில்தான் சிறந்த சாதனங்களாக இருக்கின்றன. ஐக்கிய அமெரிக்காவிலிருந்து ஐக்கிய அரசாங்கத்திற்கு (United Kingdom) பணம் செலுத்தப்படுவதற்கு முன்னால், (உதாரணமாக பெல்ஃபாஸ்டிலிருந்து நியூயார்க்கிற்கு லினன்

துணி அனுப்பியதற்கு எனக் கொள்வோம்) ஐக்கிய அரசாங்கத்தி லிருந்து ஐக்கிய அமெரிக்காவுக்கு செலுத்தப்பட்ட, அதற்குச் சம மான செல்லுகள் இருந்திருக்க வேண்டும். அப்போது தான், டாலர்களுக்கான தேவை பவுண்டுகளுக்கான தேவைக்கு 'திருமணம்' செய்து கொடுக்கப்படும்! அதாவது மாற்று (exchange) செயற்படுத்தப்படும்! இரண்டு செல்லுகளுமே நிறைவேற்றப்படும். இதனையே, மாற்று உண்டியல் (Bill of Exchange) என்னும் சாதனம் (mechanism) குறைவான குழப்பங்களுடன், இதே வினை வுடனும் நிறைவேற்றி வைக்கிறது.

மாற்று உண்டியல் (Bill of Exchange) செக்கை (cheque) பல விதங்களில் ஒத்திருக்கின்றது. செக்கு என்பது கடன் ஈவோன் (அதாவது வைப்பாளி) கடனாளிக்கு (அதாவது பாங்கிற்கு) இடும் உத்திரவு (order) ஆகும். குறிப்பிட்ட தொகையைக் கடன் ஈவோன்(creditor)தனக்கோ அல்லது குறிப்பிட்ட வேறு நபருக்கோ அல்லது செக்கின் சொந்தக்காரர் உத்தரவிடும் வேறு யாருக்கோ, அல்லது சில சமயங்களில் செக்கைக் 'கொணர்பவனுக்கும்' கூட (even to bearer) கொடுக்கும்படி கடனாளிக்கு (debtor) இடும் உத்தரவாகும். சுருக்கமாகச் சொன்னால், செக்கு என்பது ஒரு குறிப்பிட்ட தொகையைக் கொடுக்கும்படி, கடன் ஈவோன், கடனாளிக்கு இடும் உத்தரவாகும் (instruction). இவ் விளக்கம் மாற்று உண்டியல் (Bill of Exchange) செக்கு (cheque) ஆகிய இரண்டினுக் கும் பொருந்தும். மாற்றுஉண்டியலுக்கும், செக்கிற்குமுள்ள முக்கிய மூன்று வேறுபாடுகள் பின்வருமாறு: செக்கு என்பது பாங்கிற்கு எழுதப்படுகிறது. ஆனால் மாற்று உண்டியல் ('குறிப்பிடப் பட்டுள்ள') எந்தக் கடனாளிக்கும் எழுதப்படலாம். செக்கு உடனடி யாகப் பணம் கொடுபடத்தக்கது. ('பார்த்த மாத்திரத்திலேயே! ஆங்கிலத்தில் 'at sight' என்று கூறுவர்). மாற்று உண்டியல், அது பணம் கொடுக்கப்படும் தேதியினைத் திட்டவட்டமாக உணர்த்தும். ஒரு கடனைத் திருப்பி அடைப்பதற்குச் செக்கு, அந்தச் செக்கில் குறிப்பிடப்பட்ட பாங்கில் அந்தச் செக்கைக் கொடுத்திருப்பவரின் கணக்கில் அதற்குண்டான பணம் போடப் பட்டுள்ளதா என்பதை யெல்லாம் ஆராயாது, ஏற்றுக்கொள்ளப் படும். ஆனால், மாற்று உண்டியலோ அது யார் பெயரில் (on whom it is drawn) எழுதப்பட்டுள்ளதோ அவர் 'ஏற்றுக் கொள் ளாத வரையில்' (until it is "accepted") அது செல்லுபடியாக மாட் டாது. அவ்வளவு இன்றியமையாததல்லாத சாதாரணமான மற் றொரு வேறுபாடும் உண்டு. மாற்று உண்டியலின் முகப்பில் பணம் கொடுபட வேண்டியதற்கான பேரத்தின் தன்மையைப் பற்றியும் குறிப்பிடப்பட்டிருக்கும்.

உதாரணமாக பெல்ஃபாஸ்ட் லினன் உற்பத்தியாளர் மெக்டெர்மா(Mc Dermott)என்பவர் நியூயார்க்கிலுள்ள தமது வாடிக்கைகாரரான பிரௌன் (Brown) என்பவரிடமிருந்து, ஒரு மாற்று உண்டியலைப் பெறுகிறுர் என்று வைத்துக் கொள்வோம். அந்த மாற்று உண்டியலில் மெக்டெர்மா 'இதனைக் கண்ட 90 நாட்களுக்குப் பிறகு' (ninety days after sight) பிரௌன் என்பவர் மெக்டெர்மாவுக்கோ அல்லது அச்சமயம் உண்டியலைத் தாங்கி நிற்கும் வேறு எவருக்கோ £1000 கொடுக்கும்படி, உத்தரவிட்டிருப்பார். இந்த உண்டியலை மெக்டெர்மா, பிரௌனுக்கு அனுப்புவார். அவர் அதனை 'ஏற்றுக் கொள்ளும்' முகத்தான் உண்டியலுக்குக் குறுக்கே (cross) தன் கையெழுத்தினையிட்டு மீண்டும் மெக்டெர்மாவுக்கு அனுப்புவார். இதே சமயத்தில், லிவர்ப்பூலிலுள்ள (Liverpool) ஜோன்ஸ் (Jones) என்பவர் தான் வாங்கிய பருத்திக்காக நியூயார்க்கிலுள்ள ஸ்மித் (Smith) என்பவருக்கு £1000 அனுப்ப விரும்புகிருரென்று வைத்துக்கொள்வோம். இதனை மிக எளிதாக நிறைவேற்றலாம். மெக்டெர்மா தன்னுடைய உண்டியலை ஜோன்சுக்கு விற்றுவிட வேண்டும். ஜோன்சு அதனை ஸ்மித்திற்கு அனுப்பி விடலாம். உண்டியலின் பணம் கொடுபட வேண்டிய தேதி வரும் போது ஸ்மித் அதனை பிரௌனுக்குக் கொடுத்து விட்டு அதற்குச் சமமான £1000 ஐப் பெற்றுக் கொள்வார். தங்களது நாட்டின் செலாவணியிலேயே ஒவ்வொரு கடஞளியும் தனது கடனை அடைக்கின்ருன்; ஒவ்வொரு கடன் ஈவோனும் தனது கடன் தொகையைத் தனது நாட்டின் செலாவணியிலேயே திரும்பப் பெற்றுக்கொள்கிருன். இரண்டு பேரங்களுமே எவ்வித பன்ஞட்டு மாற்றம் (international exchange) இன்றி நிறைவேற்றப்படுகின்றன.

இதுவே மாற்று உண்டியலின் எளிதான வேலைத் திட்டமாகும். இதனைப் பற்றிய இன்னும் பல விளக்கங்களும் உள்ளன. அவற்றுள் இரண்டு குறிப்பிடத்தக்கன. முதலாவதாக, மாற்று உண்டியல் ஏற்றுக் கொள்ளத் தக்கதாக (acceptable) இருப்பினும் அதனை எழுதப்பெற்றவர்—ஏற்பவரின் (drawer and acceptor) நிலையும் பணம் கொடுக்கும் திறனும் (credit standing) தெரியாத வரையில், பொது அங்காடியில் (public market) விற்ப தியலாது. நியூயார்க்கிலுள்ள ஆள் தெரியாத (obscure) லினன் வணிகராகிய திரு. பிரௌன் என்பவர் எழுதிக் கொடுத்த மாற்று உண்டியலை விற்பது கடினம். பிற்காலத்தில் இந்த உண்டியல்களை உலகப் பிரசித்தி பெற்ற ஒரு தகுதி வாய்ந்த நிறுவனம் ஏற்கும் வழக்கம் வளர்ச்சியடைந்தது. நியூயார்க்கிலுள்ள நேஷனல் சிட்டி பாங்கினிடம் தன்னுடைய உண்டியல்களை ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டலாம்.

மெக்டெர்மாவை அவ்வுண்டியல்களுக்கான பணத்தைத் தன்னிடம் வசூல் செய்து கொள்ளாது, நேரே பாங்கினிடமே வசூல் செய்து கொள்ளச் செய்யலாம். அல்லது அவர் ஒரு லண்டன் பாங்கியிலோ அல்லது லண்டனிலுள்ள ஏதாவது ஒரு பெரிய ஏற்பகத்திலோ (accepting house) தன் சார்பில் தனது உண்டியல்களை ஏற்குமாறு ஓர் ஏற்பாட்டைச் செய்துகொள்ளலாம். இது அதிகமாகப் பழக்கத்திலுள்ள முறையாகும். ஏனெனில் இம் முறையில் உண்டியலை நியூயார்க்கிற்கு அனுப்பி மீண்டும் பெறுவதிலுள்ள கால விரயம் இல்லை. அடிப்படையான கடனாளி(ultimate debtor) ஆங்கிலேயனாக இருந்தாலும் இல்லாவிட்டாலும், உண்டியல்கள் பவுண்டுகளைப் பெறுமாறு எழுதப்பெற்றிருந்தால் வழக்கமாக அவைகள் இலண்டனில் ஏற்றுக்கொள்ளப்படும். இது போலவே, டாலர்களைப் பெறுமாறு எழுதப் பட்டுள்ள உண்டியல்கள், நியூயார்க்கில் ஏற்கப்படுகின்றன. பாங்கோ அல்லது ஏற்பகமோ (accepting house) உண்டியலை ஏற்பதின் மூலம் பணத்தைக் கடனாகக் கொடுக்க வில்லை. உண்டியலின் தவணைத் தேதி முடிவடைவதற்குள் பிரௌன் பாங்கிற்குப் பணம் செலுத்தியாக வேண்டும் ('put the bank in funds) அப்போதுதான் அவர் எழுதிக்கொடுத்த உண்டியல் ஏற்கப்படும். பாங்கு அல்லது ஏற்பகத்தின் முக்கியமான வேலை என்னவெனில், தான் கடனாளியின் நாணயத்தையும் நம்பிக்கையையும் (bonafides) ஆராய்ந்து விட்டதாயும் கடனாளிக்குத்தான் உத்தரவாதியாக (guarantor) இருப்பதாயும் அங்காடிக்கு உறுதி கூறுத (assure) லாகும். சுருக்கமாகச் சொன்னால், அது தனது கடனைக் கடன் கொடுக்கிறதெனக் கூறலாம். ஒருவருடைய உண்டியல்களை பாங்கு ஒன்றினால் ஏற்கச் செய்யும் இம்முறை பாங்குத் தொழில் ரீதியில் 'ஒரு கடனைத் தொடங்குதல்' என்றழைக்கப்படுகிறது.

இரண்டாவதாக, ஓர் உண்டியல் ஒரு பிரசித்திபெற்ற பாங்கினாலோ அல்லது ஓர் ஏற்பகத்தாலோ ஏற்கப்பட்டதும், பண அங்காடியில் அது வாங்கத் தக்கதொரு கடன் பத்திரமாகிறது (Security). ஏற்கனவே இரண்டாவது அத்தியாயத்தில் நாம் பார்த்ததுபோல், பாங்குகளின் நிதிகளில் ஒரு பகுதி (Part of the banks' funds) சீக்கிரம் முதிரக் கூடியதும் குறைந்த அளவு விபத்தை உடையதுமான கடன்பத்திரங்களில் முதலீடு செய்யப்பட்டிருக்கவேண்டும். இதற்கு மாற்று உண்டியல் மிகவும் பயன்படத்தக்கதாக இருக்கிறது. அது மூன்று மாதங்கள் அல்லது அதற்கும் குறைந்த கால அளவில் முதிர்ச்சி அடைகின்றது. மேலும் கடன்பத்திரம் என்ற முறையில் பண அங்காடியிலேயே மிகவும் மதிக்கத் தகுந்ததாயும் பெயர் பெற்றதாயுமுள்ளது. வெளி

நாடுகளுக்குப் பணம் செலுத்தப்படுவதற்காக அவைகள் வாங்கப் படுவதைவிட மேற்சொன்ன காரணத்திற்காகவே அவைகள் அதிகமாக வாங்கப்படுகின்றன. ஐக்கிய அமெரிக்காவிற்குப் பணம் செலுத்த விரும்பும் லிவர்பூலிலுள்ள ஜோன்சுக்குத் தன் உண்டியலை விற்பதைவிட, இரண்டாவது வரிசைக் காப்பு நிதி களாக (Second line of reserves) உள்ள உண்டியல்களை வைத்துக் கொள்ள விழையும் மிட்லண்ட் பாங்கிற்கே (Midland Bank), மெக் டர்மா விற்றிருப்பார். இதனுல் மாற்று உண்டியலென்பது (Bill of Exchange) இரண்டாவதாக ஒரு நோக்கத்தையும் நிறைவேற்றுகிற தென்பது புலனுகின்றது. ஐக்கிய அமெரிக்காவிற்குப் பணம் செலுத்த விழையும் ஜோன்சு அங்காடிக்குச் சென்று உண்டிய லொன்றை வாங்கச் செல்கிருரென்ருல் விரைவில் முதிரும் உண்டிய லொன்றையே வாங்குவார். இல்லையென்ருல், அவரது கடன் ஈவோன் (Creditor) உண்டியலைப் பெற்றும் தன் பணத்திற்காகக் காத்திருக்க வேண்டும். ஆனுல் மிட்லண்ட் பாங்கிற்கோ, உண்டி யலை ஏற்றதுமே அது பயனுள்ளதாகிறது. எனவே இப் 'பண அங்காடித் தேவை'யே ((Money, market demand) ('அயல் நாட்டு பேரங்களின்' (foreign transactions) தேவையைக் காட்டிலும்) மெக்டெர்மாவை தனது உண்டியலை வெகு முன்பாக விற்றுவிடத் துணை செய்கிறது. வேறு வகையில் கூறப்போனுல், தனது, லினன் துணிக்கான பணத்தை பிரெளன் கொடுப்பதற்கு பல வாரங்களுக்கு முன்பே மெக்டெர்மா அதை அடைகிருர்.

ஆனுல், இது, பன்னுட்டுச் செலுத்து முறைகளைக் கொண்ட நமது உடனடியான முக்கிய நோக்கத்தை விட்டு விலகிச் செல் லும் கொடிப்பாதையேயாகும் (digression). ஆரம்பத்தில் 'அயல் நாட்டு மாற்று அங்காடி' (foreign exchange market) 'அயல் நாட்டு மாற்று உண்டியல்களின் அங்காடி' (foreign-bills-of-exchange market) யாகத்தானிருந்தது. இந்த அங்காடியில்தான் நியூயார்க், ஷாங்காய் (Shanghai), போனஸ் அயர்ஸ் (Buenes Aires) இன்னும் மற்ற அரை நூறுக்கு மேலுள்ள நாடுகளில் பணம் கொடுக்கத்தக்க (payable) உண்டியல்கள் இங்குத்தான் வாங்கப்பட்டன. செல்லு களைச் (payments) செலுத்துவதற்கு பல பத்தாண்டுகளுக்கு (decades) இது முக்கியமான வழியாக இருந்தது.

அயல்நாட்டு மாற்று அங்காடியில் மாற்று உண்டியல் இன்றும் வாங்கவும் விற்கவும்படுகிறது. முற்றிலும் பண பேரங்களை (பன் னுட்டுப் பேரங்களின் மற்ருெரு பெரும்பகுதி) நீக்கிய, பண்டங் களின் ஏற்றுமதி இறக்குமதி சம்பந்தமான பன்னுட்டுப் பேரங் களில் ஒரு பகுதிக்கு மேலதிகமாக நிறைவேற்ற அவைகள் தற்

போது பயன்படாத போதிலும், அயல்நாட்டு மாற்றுகளைப் பற்றிய நூல்கள், இன்றும் அவைகளை வாணிபத்தின் முக்கியப்பொருளாகக் கருதுகின்றன. அயல்நாட்டுச் செலாவணியைத் தாங்கியுள்ள மாற்று உண்டியலின் விலையில் இரண்டு கருப்பொருள்கள் (elements) உள்ளன. ஒன்று, அயல்நாட்டுச் செலாவணியின் மதிப்பு, மற்றொன்று உண்டியல் முதிருந் தேதி வரையில் அதன் மதிப்பில் செய்யப்படும் கழிவு (discount). பல்வேறு செலாவணிகளின் ஒப்பீட்டு மதிப்பை (relative values) நாம் ஆராய வேண்டியிருப்பதால், பின்னர்ச் சொல்லப்பட்டது குழப்பத்தை விளைவிக்கக்கூடிய தொன்றாகும். மாற்று உண்டியலைப் பற்றி இவ்வளவும் கூறிவிட்டபடியால், இவ்வத்தியாயத்தின் எஞ்சிய பகுதியில் இனி மாற்று உண்டியலுக்குத் தேவை நேரும்போது சற்று இடமளிக்கப்படும். ஒரு நாட்டுச் செலாவணியை மற்றொரு நாட்டுச் செலாவணியாக, நேரடியாக மாற்றுவதுதான் தற்போது அயல்நாட்டு மாற்று அங்காடியின் வேலையாக இருக்கிறது. 'மாற்று' (Exchange) என்னும் சொல் பன்னாட்டு பேரங்கள் யாவற்றையும், 'மாற்றுகள்' என உணர்த்தாமலிருக்குமானால், 'அயல்நாட்டுச் செலாவணி அங்காடி' (Foreign Currency market) என்பதே பொருத்தமுடைய பெயராக இருந்திருக்கும்,

'அங்காடி' (Market) என்னும் சொல் இங்கு உருவகக் கருத்தில்தான் (Figurative Sense) கையாளப்பட்டுள்ளது. ஏனெனில், அயல்நாட்டுச் செலாவணிகளில் வாணிபஞ் செய்யும் வணிகர்கள், மற்ற வணிகர்களைப் போல் ஒருவரை ஒருவர் நேரடியாகச் சந்தித்து, தங்கள் பேரங்களை நிகழ்த்துவதில்லை. உண்மையில் அயல் நாட்டு மாற்று அங்காடி என்பது எந்த ஒரு நாட்டின் எல்லைக்குட்பட்டும் இருக்கவில்லை. ஏனெனில், தற்காலச் செய்திப் போக்குவரத்து முறைகளால் உலகத்தின் எல்லாப் பண முக்கியத்துவம் வாய்ந்த மைய இடங்களும் (Financial centres) தங்களின் பேரங்களை ஒன்றுக்கொன்று உடனடியாக நிகழ்த்த இயலுகின்றன. அயல்நாட்டு மாற்று பேரங்களை (Foreign exchange transactions) நிகழ்த்தும் ஒருவர், தொலை பேசியின் மூலம் (Telephone) அல்லது தூரம் அதிகமாக இருப்பின் கடல் தந்தி (Cable) மூலமும் தனது வணிக பேரத்தை நிகழ்த்துகிறார். லண்டனிலுள்ள அயல்நாட்டு மாற்று பேரத்தை நிகழ்த்துபவர், பாரீஸ் (Paris) நியூயார்க்கிலுள்ள வணிகர்களுடன், அடுத்த தெருவிலுள்ள தனது சகாக்களுடன் வாணிபம் நிகழ்த்துவதுபோல், அடிக்கடியும் உடனடியாகவும் நிகழ்த்த முடிகிறது.

வாசகர்கள், இரண்டாவதாக உள்ள ஒரு தவறான கருத்தைக் (Misconception) கவனத்தில் கொள்ளவேண்டும். சாதாரண

மனிதர் ஒருவருக்கு, தாம் எப்போதாவது ஐரோப்பாக் கண்டத்தைச் சுற்றுலா செய்வதற்கான விடுமுறைகளில் அங்குச் செல்லும் போது அயல்நாட்டுப் பாணியிலுள்ள பாங்கு நோட்டைக் காண்பதற்குச் சந்தர்ப்பம் வாய்க்குமே தவிர மற்றப்படி அயல்நாட்டுச் செலாவணிகளில் அதிகப் பழக்கமிருக்காது. மேற்குறிப்பிட்ட காரணத்திற்காக அயல்நாட்டுச் செலாவணியானது அயல்நாட்டு மாற்று அங்காடியில், உண்மையில் வாங்கப்படவும் விற்கப்படவும் கூடும். ஆனால் இந்த பேரம் அயல்நாட்டு வாணிபத்தில் மிகமிகச் சிறு பகுதியே. கிரேட் பிரிட்டன் அல்லது ஐக்கிய அமெரிக்கா போன்ற நாடுகளில் பேரங்களின் பெரும் பகுதி பணத்தாலல்லாமல் செக்குகளால் (Cheques) நிகழ்த்தப்படுவதைப்போல, பணத்தைப் பண்டங்களுக்கல்லாமல் பணத்தின் வேறு வகைகளுக்கு மாற்றும் பேரங்களின் பெரும்பகுதியும் செக்குகளை யொத்த பத்திரங்கள் (documents akin to cheques)மூலமே நடைபெறுகின்றன. உண்மையில், அயல்நாட்டு மாற்று அங்காடி வாணிபத்தில் ஒரு நாட்டின் பாங்கு வைப்புக்களை (bank deposits) வேருெரு நாட்டின் பாங்கு வைப்புகளுக்கு மாற்றுச்செய்து, மிச்சத் தொகையை செக்கு மூலம் செலுத்துவதே நடைபெற்று வருகிறது. ஆனால் ஓர் அயல்நாட்டு மாற்று பேரமானது (Foreign exchange transaction), பண்டங்களுக்கு மாற்றுகப் பணத்தைப் பெறுமல், பணத்திற்கு மாற்றுகப் பணத்தையே பெறுவதாக உள்ளதால், பேரத்தின் இரு தரப்புகளும் செக்கினுல் தீர்க்கப்படுகின்றன. உதாரணமாக £1000 $4000க்கு விற்கப்படும்போது, பவுண்டுகளை விற்பவர் லண்டன் பாங்கிற்கு எழுதப்பெற்ற £1000 செக்கினைக் கொடுத்துவிட்டு அதற்கு மாற்றுக நியூயார்க் பாங்கிற்கு எழுதப்பெற்ற $4000 செக்கினைப் பெற்றுக்கொள்வார். பெருவாரியான பேரங்களில் நடப்பதைச் சரிநுட்பமாகக் கூற வேண்டுமானுல், இம் முறையைக் கூறுவதற்கில்லை. நியூயார்க் பாங்கிற்கு எழுதப்பெற்ற செக்கு அட்லான்டிக் மகா சமுத்திரத்தைக் கடந்து சென்று வைப்பாக வைக்கப்படுவதற்கு ஒரு வாரம் ஆகும். இந்த ஒரு வார காலத்தில் அந்தச் செக்கு உணர்த்தும் பணமானது யாதொரு இயக்கமுமின்றி முடங்கிக் கிடக்க வேண்டியிருக்கிறது. தற்காலத்தில் பெருவாரியான பேரங்கள் 'தந்தி மாற்றங்கள்' (telegraphic transfers) மூலம் நடைபெறுகின்றன. டாலர்களை விற்பவர், நியூயார்க் பாங்கை $4000 டாலர்களை வாங்குபவரின் கணக்கிற்கோ (purchaser's account) அல்லது வாங்குபவர் அனுப்பும் வேறு யாருக்கோ கொடுக்கும்படி, கடல் தந்தி மூலம் உத்திரவிடலாம். கையெழுத்திற்குப் பதிலாக, ஒரு குறி வார்த்தை (code word) கையாளப்படுகிறது.

'அயல் நாட்டு மாற்று' என்பது 'அயல் நாட்டு உண்டியல்கள் மாற்றுக' இருந்த நாட்களில், அயல் நாட்டு மாற்று அங்காடியில்

பங்கு பெற்றவர்கள் தரகர்கள், (brokers) அல்லது இடைத் தரகர்களாவர். (Intermediaries) உண்டியல்களை விற்பவர்களையும் உண்டியல்களை வாங்குபவர்களையும் ஒருங்கு சேர்ப்பதே அவர்கள் வேலையாக இருந்தது. லண்டனைப் போன்ற பெரிய அயல் நாட்டு மாற்று அங்காடியில் இன்னும் தரகர்கள் இருக்கின்றனர். இவர்கள் வாங்குவோருக்கும் விற்போருக்குமிடையே சமரசம் (mediation) உண்டுபண்ணுவர். ஆனால், தற்காலத்தில் மிக அதிகமாகப் பங்கெடுத்துக் கொள்பவர்கள் தங்கள் சொந்தக் கணக்கில், வாங்கியும் விற்றும் பேரம் நிகழ்த்துகிற வணிகர்களே. அயல் நாட்டு மாற்று வணிகர் ஒருவருக்குள்ள வணிக இருப்பு (Stock-in-trade), உலகத்தின் முக்கிய நகரங்கள் ஒவ்வொன்றிலும் வைக்கப்பட்டுள்ள பலவகைப்பட்ட பாங்கு இருப்பேயாகும். இந்த வாணிபம் கணிசமான அளவிற்கு மூலதனத்தை விரும்புகிறது. உண்மையில், அயல்நாட்டு மாற்று அங்காடியில் பாங்குகளே முக்கிய வணிகர்களாக உள்ளன. பாங்குகள் எந்த அயல்நாட்டுச் செலாவணியையும் தங்களுடைய செலாவணிக்கு மாற்றுகக் கொடுக்கவோ ஏற்றுக் கொள்ளவோ தயாராக இருக்கின்றன. அவைகள் இரு அயல் நாட்டுச் செலாவணிகளையும் மாற்றுகத் தருகின்றன. உதாரணமாக லண்டன் பாங்கு டாலர்களைப் ஃபிரான்குகளுக்கு மாற்றுகவும் ஃபிரான்குகளை டாலர்களுக்கு மாற்றுகவும் வழங்கும். ஆனால் அவைகளின் பேரத்தில் பெரும்பகுதி தங்களது சொந்தச் செலாவணியை மாற்று (exchange) வதில் தான் அடங்கியுள்ளது. லண்டன் பாங்கு ஒன்று டாலர்களை வாங்கினால் அது, விற்பவரின் கணக்கில் வரவுவைத்தோ அல்லது அதன் பேரில் எழுதப்பெற்ற ஒரு செக்கைக் கொடுத்தோ இந்த டாலர்களுக்குண்டான தொகையைச் செலுத்தும். அதுபோலவே, அது டாலர்களை விற்கும்போது வாங்குபவரின் கணக்கில் பற்று (debiting the account) எழுதிக்கொண்டோ அல்லது செக்கு ஒன்றைப் பெற்றுக்கொண்டோ அதற்குண்டான தொகையைப் பெற்றுக்கொள்ளும்.

எனினும் பாங்கிற்கு அயல்நாட்டுச் செலாவணியை வாங்கவோ அல்லது விற்கவோ உள்ள விருப்பம் ஒரு தகுதிக்குட்பட்டே யிருக்கிறது. பண்டங்களை விற்கும் சாதாரண வணிகர் எவரும் சாதாரண காலங்களில் அவர் விற்பதைவிட விரைவாக சரக்குகளின் இருப்பைக் குவித்துக்கொண்டிருக்கமாட்டார். அல்லது தனது இருப்பை, மீண்டும் கொள்முதல் செய்து நிரப்பிக் கொள்ளாமல், சுத்தமாகக் காலி செய்துவிடவுமாட்டார். அதுபோல, பாங்கானது, அயல் நாட்டுச் செலாவணிகளின் இருப்புக்களை இயல்பான மட்டத்திற்கும் (normal level) சற்று அதிகமாகவே வைத்துக்

கொள்ளும். அந்த இருப்புக்கள் அதிகரித்துக்கொண்டே போகுமானால், அதாவது பாங்கு தான் விற்பதைவிட நிறைய அளவு செலாவணிகளை வாங்கிக்கொண்டிருக்குமானால், தனது இருப்புகள் மீண்டும் இயல்பான விகிதங்களை அடையும்வரை, தானே அங்காடிக்குச் சென்று அயல்நாட்டுச் செலாவணிகளை விற்கும். தான் வாங்குவதைவிட அதிகமான அளவு விற்றுக்கொண்டிருக்கும் போதும் அதனால் அதனுடைய அயல்நாட்டுச் செலாவணிகளின் இருப்புகள் குறையும்போதும், அது அங்காடிக்குச் சென்று அயல் நாட்டுச் செலாவணிகளை வாங்கும். பொதுவான விதி என்னவெனில், பாங்குகள் ஒவ்வொரு வணிக நாளின் (business day முடிவிலும், சில சமயங்களில் இன்னும் அடிக்கடியும், தங்களின் அயல்நாட்டுச் செலாவணி இருப்புகளை—அதாவது, அயல் நாட்டு பாங்குகளிலுள்ள தங்கள் நிலுவைகளை—சரி செய்துகொள்ளுகின்றன. எனவே அவைகள் முற்றிலும் சாதாரண வணிகர்களைப் போலவே நடந்துகொள்கின்றன. அவை, ஒரு செலாவணியின் தேவை அதிகரிக்கும்போது தங்களிடமுள்ள இருப்புகளிலிருந்து எடுத்து அளிப்பை அதிகரிப்பதில்லை. அதேபோல அளிப்பு, தேவையைவிட அதிகமாக இருக்கும்போது, தாங்களே அச்செலா வணியை வாங்கித் தேவையை அதிகரிப்பதுமில்லை. இவ்வாறு, அங்காடியைக் கட்டுப்படுத்தும் சாதனங்கள் (devices) ஏதுமில்லாதிருப்பதால் செலாவணியின் தேவையும் அளிப்பும் அதன் விலையை நிர்ணயிப்பதில் நிறைய அளவு சுதந்தரம் தரப்படுகின்றன.

## மாற்று வீதம்
## (The Rate of Exchange)

ஒரு செலாவணியின் விலை என்ன? வேறொரு கேள்வியைக் கேட்பதன் மூலம் இதற்கு விடையளிக்கலாம். ஒரு பவுண்டு சர்க்கரையின் விலை என்ன? இதற்கு விடை தெளிவாக உள்ளது. எந்த நேரத்திலும் ஒரு பவுண்டு சர்க்கரையின் விலை, அந்த நேரத்தில் ஒரு பவுண்டு சர்க்கரையின் மதிப்பிற்குச் சமம் எனக் கருதப்படுகிற செலாவணியின் அலகுகளாகும் (units). 1 பவுண்டு சர்க்கரையின் விலை 4 பென்சு என்றால் பென்னிகளுக்கும் சர்க்கரைப் பவுண்டுகளுக்கும் உள்ள மதிப்பு விகிதம் (ratio of value) 4 பென்னிகள் = 1 பவுண்டு சர்க்கரை என்றிருக்கும். சர்க்கரையும் பென்னிகளும் மாற்று (exchange) செய்யப்படும் விகிதமே சர்க்கரையின் விலையாகும்.

இரண்டு செலாவணிகளுக்கிடையேயுள்ள மாற்று வீதமும் இதைப் போன்றதுதான். அது அயல்நாட்டு மாற்று அங்காடியில்,

ஒரு செலாவ்ணியின் எத்தனை அலகுகள் வேறொரு செலாவணியின் அலகுக்கு மாற்றாகத் தரப்படுகின்றன என்பதைக் கணக்கிடுகிறது. டாலர்களுக்கும் பவுண்டுகளுக்குமுள்ள மாற்று வீதம் (rate of exchange, $4 = £1 என இருந்தால், அந்த நான்கு டாலர்கள், ஒரு பவுண்டின் மாற்று மதிப்பை (value-in-exchange) உடையன வாகக் கருதப்படுகின்றன. எனினும் இதில் ஒரு சிறு குழப்பம் உள்ளது. பண்டங்களின் விலைகள், செலாவணியின் இத்தனை அலகுகள் (units) பண்டத்தின் ஓர் அலகுக்குக் (unit) கொடுக்கப் படவேண்டு மென்று, கூறப்படுகின்றன. ஒரு தினசரி செய்தித் தாளைப் பார்த்தால் அதில் 1 பவுண்டு ரப்பர் இத்தனை பென்சுகள் என்றும், 1 டன் வெள்ளியம் இத்தனை பவுண்டுகள் (£) என்றும், 1 டன் நிலக்கரி இத்தனை ஷில்லிங் இத்தனை பென்சு என்றும் இன்னோரன்ன விலைகள் குறிப்பிடப்பட்டிருக்கும். தற்போது நியூ யார்க்கில் அயல்நாட்டுச் செலாவணிகளும் இம்முறையிலேதான் கூறப்படுகின்றன. அதே செய்தித்தாளில் நியூயார்க் வாசி 1 பவுண்டின் விலை 4 டாலர், 1 ஃபிரான்கின் விலை ½ சென்ட்டு என் பன போன்றவற்றையும் படிக்கலாம். ஆனால் லண்டனில் பெரும் பாலும் செலாவணிகளின் மாற்று மதிப்பு விநோதமான வேறு வழி களில் கூறப்படுகின்றன. ஒரு ஃபிரான்கு அல்லது டாலருக்கு மாற்றாக இத்தனை பவுண்டுகள், ஷில்லிங்குகள் பென்சுகள் என்று கூறுவதற்குப் பதிலாக, அயல்நாட்டு மாற்று விலைப்பட்டியல் (foreign exchange quotation), 1 பவுண்டிற்கு எத்தனை ஃபிரான்கு கள் அல்லது டாலர்கள் கொடுக்க வேண்டுமென்று கூறுகின்றது. இவ்விலை கூறுதல் எப்படி யிருக்கிறதென்றால், சர்க்கரையின் விலையை 1 பவுண்டு (lb) சர்க்கரை 4 பென்சு என்று கூறுவதற்குப் பதிலாக £ 1க்கு 60 பவுண்டு (lb) சர்க்கரை என்று கூறுவதைப் போல் இருக்கிறது. விலை—அதாவது மாற்று வீதம்—எப்படிக் கூறப்பட்டபோதிலும் ஒன்றுதான். விலை கூறுதல் (Quotation) முறைதான் வேறுபடுகிறது. விலை கூறுதலிலுள்ள இத்தலைகீழ் முறை அங்காடியின் போக்குகளைப் பின்பற்றுவதில் சற்றுச் சிர மத்தை அளிக்கிறது. சர்க்கரை நயமாக இருக்கும்போது அதன் விலை—மாற்றுவீதம்—குறைகிறது. ஆனால் டாலர் மலிவாக (cheap) இருக்கும் போதோ மாற்று வீதம் அதிகரிக்கின்றது. 'மலி வாக' (cheaper) என்ற சொல்லின் பொருளை நன்குணர்ந்தாலே, இது எளிதாகப் புரியும். ஒரு பொருள் வேறொரு பொருளைக் காட்டி லும் விலை மலிவாகப் போய்விட்டதென்றால், அவ் வேறொரு பொரு ளின் ஒரு குறிப்பிட்ட அளவிற்கு மாற்றாக முதலாவது குறிப்பிட்ட பொருளின் அதிக அளவைக் கொடுக்க வேண்டுமென்பது பொருள். சர்க்கரையின் விலை 4 பென்சிலிருந்து 3 பென்சாகக் குறைந்தால், ஒரு பவுண்டு (lb) சர்க்கரையை 4 பென்சுக்குப் பதிலாக 3 பென்சு

கொடுத்து வாங்கலாமென்றோ அல்லது £ 1க்கு, மாற்றாக 60 பவுண்டுக்குப் பதிலாக 80 பவுண்டு சர்க்கரை வாங்கலாமென்றோ பொருள். இதுபோலவே, டாலரின் மதிப்பு £ 5 லிருந்து $ 6 ஆகக் குறைத்து விட்டதென்றால், £ 1க்கு மாற்றாக $ 5 டாலருக்குப் பதில் $ 6 கொடுக்கப்படுகின்றன வென்றோ, அல்லது 1 டாலரின் விலை 4 ஷில்லிங்கிந்குப் பதில் 3 ஷில்லிங் 4 பென்சு என்றோ பொருள். இவ்வாறு பல்வேறுபட்ட விலைகூறு முறைகள் விநோதமானவைகளாக உள்ளன. ஆனால் அவைகள், கருத்து வேறுபாடு எதனையும் உண்டுபண்ணுவதில்லை.

எந்த இரண்டு செலாவணிகளுக்குமிடையேயுள்ள மாற்று வீதத்தை (rate of exchange).—அல்லது ஒப்பீட்டு விலையை (relative price) விளக்கியபிறகு, கடினமானதும் முக்கியமானதுமான மற்றொரு பிரச்சினையைப் பார்ப்போம். மாற்று வீதத்தை அவ்வாறு இருக்கச் செய்வதெது? எது அதனைக் காலத்திற்குக் காலம் மாற்றமடையும்படி செய்வது? முதலில் குறிப்பிட்ட கேள்விக்கு விடையளிப்போம். மற்ற விலைகளில் ஏற்படும் ஏற்ற இறக்கங்களைப் போலவே, மாற்று வீதங்களிலும் ஏற்ற இறக்கங்கள் உண்டாகின்றன எனக் கூறலாம். இக் கூற்று, இதற்கு முன்னர் பல தடவைகள், உண்மையானதாக இருக்க முடியாமலிருந்தது. உதாரணமாக இரண்டு செலாவணிகள் பெரும்பாலும் அல்லது முழுதும் பொன்னாலானவையாக இருக்கும்போது, அவைகளின் ஒப்பீட்டு மதிப்பில் எவ்வித ஏற்ற இறக்கங்களும் ஏற்படுவதில்லை. ஏனெனில் அவைகளுக்கிடையேயுள்ள ஒரே வேறுபாடு—ஒன்று செலாவணியினுடைய ஓர் அலகு (unit) மற்றச் செலாவணியின் அலகைக் காட்டிலும் பொன்னின் எடையைக் கூடுதலாகப் பெற்றுள்ளது. இம்மாதிரியான சந்தர்ப்பங்களில், மாற்றுவீதமானது $\frac{1}{4}$ அவுன்சு பொன்னிற்கு 1/100 அவுன்சு பொன்னிற்கு மிடையேயுள்ள மதிப்பு வீதத்திற்குச் (ratio of value) சமமானதாக இருக்கும். இதுவே. 1914-18-ல் நடந்த போருக்கு முன்னுள்ள பல பத்தாண்டுகளில், பவுண்டு (£) ஃபிராங்கு (franc) ஆகிய இரு செலாவணிகளுக்கு மிடையே இருந்த மாற்று வீதங்களின், சிறந்த விளக்கமாக உள்ளது. ஆனால், அந்தக் காலந்தொட்டு இன்று வரையில் உலகத்தில் எந்த இரு செலாவணிகளும் முழுதும் அல்லது பெரும் பங்கும் பொன் நாணயங்களாக இருக்கவில்லை. இரு செலாவணிகளில் ஒவ்வொன்றும் பொன்னின் அடிப்படையிலும் (based in gold) பொன்னாக மாற்றப்படத்தக்க (convertible into gold) பாங்கு நோட்டுகளாக இருப்பின், அவைகளுக்கிடையேயுள்ள மாற்று வீதத்தில் (rate of exchange) ஏற்படும் ஏற்ற இறக்கங்கள் கூட (fluctuations) மிகவும் கட்டுப்படுத்தப்படும். பாங்கு

நோட்டுகள் தாராளமாகப் பொன்னுக மாற்றக்கூடிய நிலை இருக்கும் வரையில் (freely convertible into gold) இக் கட்டுப்படுத்தப் படுதல் நீடிக்கும். ஆனால் அடுத்த அத்தியாயத்தில் கூறப்போவ வதைப்போல் இவ்வாறு பொன்னுக மாற்றப்படுவதை காலவரை யின்றி நீட்டித் தலை இயற்கைச் சக்திகளின் (natural forces) செயல் முறைக்கு விட்டுவிடுவதென்பது சரியாகாது. இதற்குப் பண ஆட்சி யாளரின் (monetary authorities) உள்ளுணர்வான (conscious) ஊக்கமான (active) குறுக்கீடு (interventions) தேவை. எனவே மாற்று வீதங்களில் இக்குறுக்கீடு தூண்டும் நிலையான தன்மையை (stability) இயற்கைச் சக்திகள் செய்யவில்லை; அது மனிதனால் செய்யப்படுவதாயும் (man-made) காக்கப்படுவதாயும் (man-main tained) உள்ளது. நமது தற்போது நோக்கங்களுக்கு, நிலைத்த தன்மை (stability) அல்லது ஏற்ற இறக்கங்கள் (fluctuations) இயல்பான நிலை (normal) யை விட அதிகமாக இருக்கவேண்டுமா அல்லது அது அதிகமாக விரும்பத்தக்கதா என்னும் அலுத்துப் போன பிரச்சினையைப் பற்றி விவாதிக்கத் தேவையில்லை. நிலைத் தன்மையாக உள்ள காலங்கள் (periods of stability) நிரந்தரமான விதியாக இருப்பதை (constant rule) விட்டு அதற்கு அரிதான விதிவிலக்குகளாக இருக்கும் சரித்திர நிகழ்ச்சியினை எடுத்துக் கூறு தலே இதற்குப் போதுமானது. பண விவகாரங்களில், தீண்டாத வர்களைப் போன்றுள்ள ஒரு சில சிறுபான்மையினரைத் தவிர்த்து, பெரும்பான்மையான பண விவகாரங்களில் ஈடுபாடுடையவர்கள், அயல்நாட்டு மாற்றுகளின் விதிவிலக்கான மிக நீண்ட காலங்களின் நிலைத்த தன்மையை (longest periods of stability) வைத்துக் கொண்டே தங்களின் கருத்துக்களை உருவாக்கியிருக்கின்றனர். எனவே நிலையற்ற தன்மையை (instability) இயற்கைக்குப் புறம் பான தென்றும், ஆபத்தான தொரு நிலையென்றும் கருதுகிற ஒரு மனப்பான்மை ஏற்பட்டது. தங்களின் வாழ்நாளின் பெரும் பகு தியை ஒரு ஏரிக்கரையில் செயற்கையாகக் கட்டப்பட்ட அணை (dam) அருகே குடியிருந்தவர்கள், அவ்வணையை நீக்கி அமைதி யாக இருந்த அந்த ஏரியினின்றும் ஒரு வேகமான ஆற்றை ஓடச் செய்தால் அதனை இயல்பான நிலைக்குப் புறம்பட்டது (abnormal) எனவும் ஆபத்தானது (alarming) எனவும் கூறுவர். ஆனால் இயற் கையின் கண்களுக்கு, அவர்கள் எதை இயல்பானது என்று கருது கின்றனரோ அது இயல்புக்குப் புறம்பானது (abnormal) எனவும் அவர்கள் எதை இயற்கையான நிலை (natural state) எனக் கருது கின்றனரோ அது செயற்கையாலேற்படுத்திய கட்டுப்பாடு எனவும் தோன்றுகிறது. மாற்றுகளின் நிலைத்த தன்மை (exchange stability) யின் நன்மை தீமைகளைப் பற்றிப் பிறகு ஆராய்வோம். பொன் நாணயங்களைக் கொண்ட செலாவணிகள் உள்ள தற்கால உலகத்

தில், அவைகளின் மதிப்பில் நிலைத்த தன்மையை (stability of value) உண்டுபண்ண வேண்டுமானுல், அதற்கான சட்ட நடவடிக்கைகளை எடுத்தால்தான் இயலும்.

செலாவணியின் விலை, மற்ற எந்தப் பொருள்களின் விலைகளும் நிர்ணயிக்கப்படுவதைப் போல, அயல்நாட்டு மாற்று அங்காடியில் அதற்கான தேவையாலும் அதன் அளிப்பாலும் (demand for and the supply of) நிர்ணயிக்கப்படுகிறது. தேவை, அளிப்பு என்ற இந்த வார்த்தைகளின் சரியான பொருளைப் புரிந்து கொள்ளுவது சற்றுக் கடினமே. ஐக்கிய அரசாங்கத்தில் (United Kingdom) உள்ள மக்கள் ஐக்கிய அமெரிக்காவிற்குப் பணம் அனுப்பும் காரணங்கள் நூற்றுக் கணக்கில் இருக்கும். அவர்கள் தாங்கள் வாங்கிய பண்டங்களுக்கோ அல்லது தங்களுக்குச் செய்யப்பட்ட பணிகளுக்கோ பணம் செலுத்தலாம். அமெரிக்காவில் தாங்கள் வாங்கியிருந்த கடனைத் திருப்பி அடைக்கலாம், அல்லது அக்கடனுக்கான வட்டியைச் செலுத்தலாம். அமெரிக்கருடைய கடன் பத்திரங்களை வாங்க அவர்கள் விழையலாம்; அல்லது பிரிட்டிஷ் கடன் பத்திரங்களை வைத்துக்கொண்டிருந்த அமெரிக்கர்கள் அவைகளை விற்றுவிட்டு அத்தொகையைத் தங்கள் தாய்நாட்டிற்கு அனுப்ப விழையலாம். தங்களது அமெரிக்க உறவினர்களுக்கு, பிரிட்டிஷ் மக்கள் பணப் பரிசுகளை (presents of money) அனுப்ப விழையலாம். ஐக்கிய அமெரிக்காவில் பயணம் செய்வதற்கோ அல்லது அமெரிக்கக் கப்பல்களில் பயணம் செய்வதற்கோ அவர்கள் டாலர்களைப் பெற விழையலாம்; அல்லது அமெரிக்க திரைப்படங்களுக்கு (films) உரிமைத் தொகைகளைக் (royalties) கொடுப்பதற்கும் டாலர்களை விரும்பலாம். பவுண்டுகளை (£) வைத்துக்கொண்டிருக்கும் யாரும் அவைகளை எக்காரணத்திற்காகவும் டாலர்களாக மாற்றிக்கொள்ள விரும்பும்போது, பவுண்டுகளை மாற்ருகக் கொடுத்துவிட்டு டாலர்களைக் 'கேட்கிருர்' (demanding) என்று பொருள். டாலர்களை வைத்துக் கொண்டிருக்கும் யாரும் எக்காரணத்திற்காகவும் அவைகளை பவுண்டுகளாக மாற்றிக்கொள்ள விழைந்தால், அவர் பவுண்டுகளுக்கு மாற்ருக டாலர்களைக் 'கொடுக்க இசைகிருர்' (offering) அல்லது 'அளிக்கிருர்' (supplying) என்று பொருள். டாலர்களுக்கான 'தேவையே' (demand for dollars) பவுண்டுகளின் 'அளிப்பு' ஆகும் (supply of pounds). அதைப் போல டாலர்களின் 'அளிப்பு' பவுண்டுகளின் 'தேவை'யாக இருக்கிறது. பவுண்டுகளுக்கு மாற்றுகப் பெறும் டாலர்களின் 'தேவை' அல்லது 'அளிப்பின்' திறனைப்பற்றி நாம் கூறும்போது, பவுண்டுகளை டாலர்களாக மாற்றிக்கொள்வதற்கு இத்தனை எண்ணிக்கையுள்ள பவுண்டுகள்

'கொடுபடத் தயாராகஇருக்கின்றன' என்பதையும், டாலர்களுக்கு மாற்ருக இத்தனைப் பவுண்டுகள் 'தேவை' எனக் கூறப்படுவதை யும் நாம் அறிகிறோம்.

ஒரு செலாவணி தேவைப்படுவதற்கோ அல்லது அளிக்கப் படத் தயாராக இருப்பதற்கோ பல வேறு காரணங்களில், அவ்வப் போது மாற்றமடையும் காரணங்களும் உள்ளன. 'தேவையின்' (demand) பிறப்பிடங்களும் 'அளிப்பின்' (supply) பிறப்பிடங் களும் வெவ்வேறனவை; ஒன்றை ஒன்று எதிர்நோக்கி இருப்பன வல்ல. எனவே, ஒரு நாளில் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள டாலர்கள் விற்பனைக்கு வரும்போது அதே அளவு எண்ணிக்கை யுள்ள டாலர்கள் அன்றைய தினம் வாங்கப்படுவதற்கு (purchase) விழையப்படும் போது இதனை ஓர் ஒத்த நிகழ்ச்சி (co-incidence) என்று தான் கூறவேண்டும். சொல்லப்போனுல், அங்காடியில் 'தேவை' 'அளிப்பு'ப் பகுதிகள் மிகப் பெரும்பாலும் சமமாக இருப்பதே யில்லை. எனினும், ஒவ்வொரு நாளின் முடிவிலும் வாங்கப்பட்ட டாலர்களின் எண்ணிக்கைக்குச் சமமாக இருந்தே யாகவேண்டும் என்பது ஓர் அடிப்படையான உண்மையாகும். ஏனெனில், டாலர்களின் ஒவ்வொரு விற்பனையும், அவைகளை யாரோ ஒருவர் கொள்முதல் (purchase) செய்வதை உணர்த்து கிறது. ஆரம்பத்தில் தேவையும் அளிப்பும் சமமாக இல்லா திருந்தால், சமயத்தில் ஏற்படும் சமத்துவத்தைக் கொண்டு வருத லானது—அரசாங்கத்தின் கட்டுப்பாடு அல்லது குறுக்கீடு (inter-vention) எதுவும் இல்லாமலிருக்கும்போது—விலையில் மாற்றத்தை (change of price)க் கொண்டுவருவதால்தான், அதாவது மாற்று வீதத்தின் (exchange rate) இயக்கத்தினுல்தான் (movement) இயலும். உதாரணமாக திங்கட்கிழமை இரவு டாலர்-பவுண்டு மாற்று வீதம் \$4-50=£1 இருப்பதாக வைத்துக்கொள்வோம். இதனுல் செவ்வாய்க்கிழமை காலை அதிகமான மக்கள், அந்த வீதத்தில் டாலர்களைக் கொடுத்துவிட்டுப் பவுண்டுகளை வாங்கு வதைக் காட்டிலும், பவுண்டுகளைக் கொடுத்துவிட்டு டாலர்களையே வாங்குவர். பவுண்டுகளுக்கு மாற்ருகப் பெறக்கூடிய டாலர்களின் தேவை அவற்றின் அளிப்பைவிட அதிகமாக இருப்பதால், டாலர்க ளுடைய விலை (பவுண்டுடன் ஒப்பிட்ட விலை) அதிகரிக்கும்; மாற்றுவீதம் அப்போது, உதாரணமாகச் சொல்லப்போனுல் \$ 4.40 = £ 1 என்ற வீதத்தை நோக்கிச் செல்லும். தற்போது டாலர்களை வைத்துக்கொண்டிருப்பவர்கள் £ 1க்கு \$ 4.50 கொடுக்க மனமில்லாதவர்களாய் £ 1க்கு 4.40 டாலர்கள் வீதம் கொடுத்து பவுண்டுகளை மலிவான விலைக்கு வாங்க விரும்புவர். இதைப் போலவே, பவுண்டுகளை வைத்திருக்கும் இன்னும் சிலர், ஒவ்

வொரு பவுண்டிற்கு $ 4.50 பெறுவதாயிருக்கும் போது அவைகளைக் கொடுத்துவிட்டு டாலர்களைப் பெறத் தயாராக இருந்தவர்கள், அவர்கள் ஒவ்வொரு பவுண்டிற்கும் $ 4.40 மெறும் நிலையில், அவ்வாறு பவுண்டுகளைக் கொடுத்துவிட்டு டாலர்களைப் பெற இசையமாட்டார்கள். வேறுவழியிற் சொல்லப்போனால், பவுண்டுகளாக மாற்றப்படக் கூடிய டாலர்களின் அளிப்பு (supply) அதிகரிக்கும்; பவுண்டுகளை மாற்றுகக் கொடுத்தும் பெறக்கூடிய டாலர்களின் தேவை குறையும். இவ்வாறு தவறுகள் மூலமும் அனுபவ மூலமுமான முறையினால், கடைசியில் இம் மாற்றுவீதம் (exchange rate), டாலர்களின் தேவையையும் அளிப்பையும் சமமாக வைக்கக்கூடிய, ஒரு வீதத்தை வந்தடையும். அந்த ஒரு குறிப்பிட்ட நாளில் நிறைய மக்கள் டாலர்களை விற்பதைக் காட்டிலும் வாங்குவதற்கு விழைகின்ற வரையிலும், டாலரின் விலை அதிகரிக்கும். அதாவது மாற்றுவீதம் 'டாலருக்குச் சாதகமான முறையில் செல்லும்' (move in favour of dollar). அதேபோல வாங்குபவர்களைக் காட்டிலும் விற்பவர்கள் அதிகமாக இருக்கும் வரையிலும், விலை குறையும்; மாற்று வீதமும் 'ஸ்டெர்லிங் பவுண்டிற்குச் சாதகமாகச் செல்லும்' (move in favour of pound sterling).

ஆனால் இம் முறையில் இவ்விரு செலாவணிகளையும் ஒவ்வொரு நாட்டைச் சேர்ந்த தனியானவைகளாகக் கருதுதல் கூடாது. நியூயார்க், லண்டன் ஆகிய இரண்டு இடங்களிலும் வணிக பேரம் நிகழ்த்தப்படும்போது, இரண்டு இடங்களிலும் டாலருக்கும் பவுண்டிற்கு மிடையேயுள்ள மாற்றுவீதம் நடைமுறையில் எப்போதும் ஒன்றுகவே இருக்கவேண்டும். மாற்று வீதம் லண்டனில் $ 4.50 ஆகவும் நியூயார்க்கில் $ 4.40 ஆகவும் இருக்குமானால், யாரும் நியூயார்க் அங்காடியில் $ 4.40 டாலர்களைக் கொடுத்துவிட்டு £100 வாங்கி அந்த £100ஐயும் மீண்டும் லண்டன் அங்காடியில் மாற்றுச் செய்து (re-exchange) $ 450 பெற்று, பத்து மணித்துளி (ten-minutes) அளவில் $ 10 இலாபத்தை அடையக்கூடும். இவ்வாறு செய்வதற்கு மக்கள் கூட்டமாக முனைந்தால் நியூயார்க்கில் பவுண்டுகளுக்குள்ள தேவையும் லண்டனில் டாலர்களுக்குள்ள தேவையும் அதிகரிக்கும். மேற்சொன்ன வேறுபாடான நிலை (divergence) நீக்கப்படும் வரையிலும், நியூயார்க்கில் மாற்றுவீதம் அதிகரிக்கும்; லண்டனில் அது குறையும். இவ்வாறு மாற்று அங்காடியில், பல இடங்களிலுள்ள பல்வேறு விலைகளால் இலாபம் அடைவதை 'பலவிலை இலாபம்' (arbitrage) என்று கூறுவர். இத்தகைய தற்காலிக வேறுபாடுகளைக்கொண்டு இலாபமடைய திறமைகொண்ட 'பலவிலை இலா

பக்காரர்கள்' (arbitrageurs) ஒவ்வொரு முக்கிய இடத்திலும் கண்ணுங் கருத்துமாக இருப்பர். இத்தகைய வேறுபாடுகள் ஒரு சில மணித்துளிகளுக்கு மேல் நீடிப்பதில்லை.

பலவிலை இலாபம் (arbitrage) இரண்டு செலாவணிகளுக் கிடையே மட்டுமே பெறுவதல்ல. பல்வேறு செலாவணிகளி லிருந்தும் பெறப்படும். உதாரணமாக டாலருக்கும் பவுண்டுக்கு முள்ள மாற்றுவீதம் (exchange rate) லண்டனிலும் நியூயார்க்கிலும் $5 = £1 என இருக்கிறதென்று வைத்துக் கொள்வோம். அது போல், லண்டனிலும் பாரிசிலும் பவுண்டுக்கும் ஃபிரான்கிற்கும் உள்ள மாற்றுவீதம் 100 பிரான்குகள் =$1 ஆகவும், பாரிசிலும் நியூயார்க்கிலும் ஃபிரான்கிற்கும் டாலருக்கும் உள்ள மாற்றுவீதம் 5 சென்டுகள் = 1 ஃபிரான்கு என இருப்பதாகவும் கொள்வோம். இவ்வீதங்கள் சமமான நிலையிலிருப்பதால், பல விலை இலாபக்காரர் (arbitrageurs) இலாபமடிப்பதற்கு இதில் வழியில்லை. ஆனால், தற்போது லண்டனிலிருந்து நியூயார்க்கிற்கு திடீரென்று அதிக மான அளவு செலுத்து (payment) ஒன்று செலுத்தப்படவேண்டி யிருக்கிறதென வைத்துக்கொள்வோம். இதனால் அதிக அளவு டாலர்கள் தேவைப்படுமாதலால் அதற்கொப்ப அதிக அளவு பவுண்டுகளில் அளிப்பு தேவைப்படும். இதனால், லண்டனுக்கும் பாரீசுக்குமிடையே நடைபெறும் செலுத்துக்களின் ஓட்டம் (flow of payments) அல்லது பாரீசுக்கும் நியூயார்க்குக்கு மிடையே யுள்ள செலுத்துக்களின் ஓட்டம் பாதிக்கப்படுவதில்லை. லண்டனில் ஏற்படும் டாலர்களுக்கான அதிகப்படியான தேவை (increased demand) மாற்றுவீதத்தை, உதாரணமாக, $ 4.95 ஆகக் குறை யச் செய்யும். பல விலை இலாப பேரங்கள் (arbitrage transaction) இதேவிதமான போக்கை (movement) லண்டனிலும் நியூயார்க்கி லும் இருக்கும்படி செய்யும். பாரீசைப் பொருத்தமட்டில் இந்த வீதங்கள் எதுவுமே மாறுமல் அப்படியே இருக்குமானால், மும் மூலைப் (three cornered) பலவிலை இலாபம் (arbitrage) கிட்டுவதற்கு வாய்ப்பேற்படும். லண்டனில் $ 100 ஆனது 10,0000 ஃபிரான்கு களைப் பெறும், 10,000 ஃபிரான்குகள் $ 500 டாலர்களைப் பெறும். இப்புதிய லண்டன்—நியூயார்க் வீதப்படி $ 500 தற்போது £ 101 க்குச் சற்று அதிகமாகப் பெறுமானமுடையதாக (worth) இருக்கும். தற்போது பணத்தைச் சுற்றுவட்டமாக அனுப்பி, பல விலை இலாபக்காரர்கள் இலாபமடைவர். இதனல் பவுண்டுகளின் அளிப்பு (supply of pounds) ஃபிரான்குகளைவிட அதிகமாக இருக் கும். ஃபிரான்குகளுக்கு மாற்றுகப் பெறும் டாலர்களின் தேவையும் அதிகரிக்கும். லண்டன்—பாரீசு (London-Paris) வீதம், உதாரண மாக, 99½ frs (ஃபிரான்குகள்) £ 1 எனக்குறையும்; பாரீசு-நியூ

யார்க் வீதம் (Paris-Newyork rate) உதாரணமாக 4.695 சென்டுகள் = 1 fr எனக்குறையும். வேறுவிதமாகச் சொல்லப் போனால், டாலரின் மதிப்பு லண்டனிலும் பாரீசிலும் அதிகரித் ருக்கும். ஆனால் பாரீசைவிட லண்டனில் இன்னும் அதிகமாக அதி கரித்திருக்கும். அதேசமயத்தில் பாரீசைவிட நியூயார்க்கில் பவுண் டின் மதிப்பு இன்னும் அதிகமாகக் குறைந்திருக்கும். நியூயார்க்கில் ஃபிரான்கின் மதிப்புக் குறைந்து இலண்டனில் அதிகரித்திருக்கும். இவ்விதமாக, இரு செலாவணிகளுக்குள்ளும் தேவை, அளிப்பில் ஏற்படுகிற மாற்றங்கள் மற்றச் செலாவணிகளின் தேவை அளிப்பி லும் மாற்றங்களை உண்டுபண்ணும். லண்டனில் டாலர்களுக்கும், ஃபிரான்குகளுக்கும் சமமாகத் தேவை அதிகரிக்குமானால், இதற்குச் சமமாக பவுண்டின் மதிப்பு, ஃபிரான்கு டாலர்களுக்குச் சமமாக குறைவடைந்திருக்கும். இதனால் ஃபிரான்கு—டாலரின் ‘குறுக்குவீதம்’ (Cross rate) பாதிக்கப்பட்டிருக்காது. ஆகவே, ஒரு செலாவணிக்கு மாற்றுகப் பெறும் மற்றொரு செலாவணியின் தேவையைப்பற்றி அல்லது அளிப்பைப் பற்றி சரிநுட்பமாக நாம் கூறுதல் இயலாது. அப்படிக் கூறவேண்டுமானால், ஏனைய மற்றச் செலாவணிகளுக்கு மாற்றுகப் பெறக்கூடிய ஒரு செலாவணியின் தேவை அல்லது அளிப்பைக் கூறவேண்டும்.

மாற்று அங்காடியின் நெகிழ்ந்து கொடுக்கும் தன்மை, கணப் பொழுதில் ஆயிரமாயிரம் மைல்களுக்கப்பால் எளிதாக பேரங்களை நடத்தும் ஒப்பற்ற தன்மை ஆகியவைகள் அதில் எப்போதும் காணப்படும் சில காரணங்களின் சிக்கலைத் தீர்க்கமுடியவில்லை. மாற்றுவீதங்களில் திடீரென்று ஏற்படும் ஒரு நுண்ணிய ஏற்ற இறக்கத்திற்கு மூலகாரணம் ஒரு பெரும் அமெரிக்க வணிகர் ஒருவர் (American magnate) ஓர் ஆங்கில வாணிபத்தை வாங்கு வதற்காக லண்டனுக்கு $ 100,000,000 அனுப்பத் தீர்மானித்த தாக இருக்கலாம். இது டாலர்களுக்கு மாற்றுகப் பெறப்படும் பவுண்டுகளின் தேவையாகும். மற்ற எந்த இரு செலாவணிகளின் மாற்றுவீதங்களில் எவ்வித மாற்றமுமில்லாமலிருந்த போதிலும், நியூயார்க்கை விட்டு வெளிச்செல்லும் மேற்சொன்ன பேரம் (transaction), டாலர்களுக்கு மாற்றுகப் பெறக்கூடிய லிரா (இத்தாலிய நாணயம்) பீசோஸ் (Pesos) அல்லது பிசெட்டாஸ் (ஸ்பெயின் தேசத்து நாணயங்கள்) ஆகியவைகளுக்கான தேவையை அதிகரித்துவிட்டுச் செல்லும். அதைப்போல அப் பேரம் லண்டனை வந்தடையும் போது, ஃபிரான்குகள், கில்டர்கள் (guilders) என்றழைக்கப்படும் டச்சு நாணயங்கள், ஸ்வீடன் நாட்டு கிரௌன்கள் (Swedish crowns) ஆகியவற்றை மாற்றுகக் கொடுத்துப் பெறக்கூடிய பவுண்டுகளின் தேவையை அதிகப்

படுத்தும். இதனல் நாம் அறிவதுயாதெனில், இம்மாதிரியான பலவகைப்பட்ட மாற்றங்களின், விளைவுகளால், பவுண்டின் மதிப்பு எங்குமே சற்று அதிகமாகவும், டாலரின் மதிப்பு சற்றுக் குறைவாகவுமுள்ளது. இவ்வாறு பவுண்டின் மாற்றுவீதம் உயர்ந்துள்ள காரணத்தால், உதாரணமாக, $ 2,000,000 வைத்திருப்பவர்களை (மாற்றுவீதம் கிட்டதட்ட $ 5 = $ 1 என்று வைத்துதுக்கொள்வோம்) பலவேறு வகைப்பட்ட அயல்நாட்டுச் செலாவணிகளுக்கு மாற்றுகக் கொடுக்கும்படி செய்வதற்குப் போதுமானதாக இருக்கிறது. டாலரின் மாற்றுவீதம் குறைவாக இருப்பதானது வேறு வகைச் செலாவணிகளை வைத்திருப்பவர்களை, அவைகளைக் கொடுத்துவிட்டு $ 10,000,000 டாலர்களைப் பெறும்படி தூண்டுவதற்குப் போதுமானதாக இருக்கிறது.

மாற்றுவிதத்தைத் தீர்மானிப்பது எது என்னும் வினவிற்கு முறையான (formal) தொரு விடையினைத் தற்போது தந்துவிட்டோம். ஆனல் இது ஒரு முற்றிலும் திருத்தியான விடையாகாது. பல்வகைப்பட்ட புரியாத முடிவுகள், புரியமாட்டாத வழிகளில் அளிப்பு, தேவை இவற்றின் சமனநிலை (balance)யை மாறச் செய்து மாற்றுவிதங்களையும் (exchange rates) மாறச் செய்கின்றது எனக் கூறும் விடை எங்ஙனம் திருத்திதரக் கூடியதாக இருக்கக்கூடும்? எனினும், மாற்றுகளின் (exchanges) அன்றாட நடவடிக்கைகளுக்கு இது போதுமானதாகவே உள்ளது. திறமையுள்ள, ஆய்ந்தறிபவர்கள் (Observers), டாலர் ஒரு புள்ளி (Point) அதிகரித்துள்ளதற்கு என்ன காரணம் அதேசமயம் லிரா (Lira) சற்று பலவீனமடைந்ததேன் என்பனவற்றிற்கெல்லாம் விடையை யூகித்தறிய (guess) இயலுமே தவிர, இதற்கு விடையைத் தெரிந்தவர்கள் (Know) யாருமிலர். ஆனல், நெடுங்காலத்தை நாம் நோட்டமிட்டால் (view over a longer period), பணக் கோட்பாட்டின் தேவை, அளிப்பு ஆகியவற்றிற்குப் பின்னல் இருக்கும் அடிப்படையான காரணிகளைப்பற்றிய சில கருத்துகளை (observations)க் கூற இயலுவதோடு, பல்வேறு செலாவணிகளின் தராதர மதிப்புகளைத் தீர்மானிக்கும் சில கோட்பாடுகளையும் கூறமுடியும்.

## செலாவணிகளின் மதிப்பு
(The Value of Currencies)

நாம் ஏற்கனவே ஆராய்ந்ததுபோல், மக்கள் செலாவணிகளை மாற்றும்படி, அவர்களைத் தூண்டும் காரணங்கள் பல உள. அக்காரணங்களை மூன்று பெரும் பிரிவுகளாகப்பிரிக்கலாம். முதலாவது முக்கியமான பிரிவு சாதாரணமாக வாணிபத்திற்காகச்

செலுத்தப்படும் பன்னாட்டுச் செல்லுகள். 'வாணிபம்' (Trade) என்றால் இங்கு, கண்ணால் பார்த்துக் கையாளக்கூடிய பண்டங்களின் கொள் முதல் (purchase), விற்பனை (sale)யை மட்டுமே உணர்த்தாது. பணிகளின் (Services)—கப்பல் கட்டணம், பயணர்களுக்கு அளிக்கப்படும் பணிகள் (services to tourists), பண்டங்களை அனுப்பும்போது அவற்றிற்கு உரிமைக் காப்புகளை (patents) அளிக்கும் பணிகள் இதைப்போன்ற இன்னும் மற்றப் பணிகள் கொள்முதல் விற்பனையையும் இது உணர்த்தும். உண்மையில், வாணிபம் என்பது 'புலனாகும் வாணிபம்' (visible trade), 'புலனாகா வாணிபம்' (invisible trade) ஆகிய இருவகை வாணிபத்தையும் குறிக்கும்.

இரண்டாவது பெரும்பிரிவு, மூலதனம், வட்டி இவற்றின் இயக்கங்களை (Movements)க் குறிப்பதாகும். கடந்த காலங்களில் ஆங்கிலேயர்கள் அயல் நாடுகளில்[1] (foreign countries) ஏராளமான பணத்தை, அயல்நாட்டுக்கம்பெனிகளின் பங்குகளை வாங்குவதன் மூலமும், அயல்நாடுகளுக்கும், அயல் நாட்டிலுள்ள கம்பெனிகளுக்கும் கடன் கொடுப்பதன் மூலம், முதலீடு செய்தனர். இம்முதலீடுகள் 1939-45 போரின்போது நிறைய அளவு முதலீடு செய்யப்பட்ட போதிலும், இன்றும் அவைகளில் பல நீடித்துள்ளன. இம்முதலீடுகளுக்கான வட்டி அல்லது இலாப ஈவுகள் (dividends) கொடுபடும்போதும் அல்லது ஆரம்பத்தில் கொடுக்கப்பட்ட கடன்கள் திரும்பி அடைக்கப்படும்போதும், அயல்நாடுகள் கிரேட் பிரிட்டனுக்குப் பணம் செலுத்துவதால், பவுண்டுகளின் தேவை அதிகரிக்கின்றது. அதுபோல, அயல் நாட்டைச் சேர்ந்த ஒருவர், ஒருவீடு அல்லது ஒரு தொழிற்சாலையை வாங்குவதன் மூலமோ அல்லது இலண்டன் பங்குமாற்றுச் சந்தை (Stock Exchange)யில் பிரிட்டிஷ் கடன் பத்திரங்களை வாங்குவதன் மூலமோ, கிரேட் பிரிட்டனில் முதலீடு செய்ய விழைந்தால், முதலில் அவர் தன் சொந்தப் பணத்தைப் பவுண்டுகளாக மாற்றிக் கொள்ள வேண்டும். ஒரு செலாவணியிலிருந்து மற்றச்செலாவணிகளுக்கும் மாற்றிக் கொள்ளவும் அதைப்போல் மற்றச் செலாவணிகளை அச்செலாவணிக்கு மீண்டும் திரும்ப மாற்றிக்கொள்வதும் எளிதாக இருக்கும் காலங்களில், குறுங்காலப் பன்னாட்டு முதலீடுகள் (Short term international investments) கணிசமான அளவிற்கு அதிகரிக்கும். நியூயார்க்கில், தாயகத்தைவிட வட்டி

1 நமது தற்போதைய நோக்கங்களுக்கு, 'அயல்நாடுகள்' (Foreign Countries) என்பவனவற்றை, கிரேட் பிரிட்டனிலிருந்தும் வேறுபட்ட தனியான செலாவணிமுறைகளைக் கொண்ட எல்லா நாடுகளுமே எனக்கொள்வோம். எனவே இந்தச் சொல் சுய ஆட்சி உரிமைபெற்ற நாடுகளையும் (Dominions) பிரிட்டிஷ் பேரரசின் (British Empire) பெரும்பகுதிகளையும் குறிக்கும்.

கூடுதலாகக் கிடைக்குமானால், லண்டனிலுள்ள பாங்குகள் தங்களது துணைக்காப்பு ரொக்கங்கள் (Second line of reserves) சிலவற்றை, அதாவது 'அழைப்புக் கடன்' அல்லது குறுந்த வணைக் கடன்கள், ஆகியவற்றை அளிப்பதற்கு வைத்துள்ள நிதிகளை, நியூயார்க்கில் முதலீடு செய்யும். இதேபோன்று, வாணிப மந்தத்தின் போதும், அரசியல்நிலையின்மையின் போதும் (Political instability) தனிப்பட்ட முதலாளிகள், தங்களது மூல தனத்தை ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு (அதிகமான வட்டி வீதங்களைப் பெறுகின்ற எண்ணத்துடனல்ல; பாதுகாப்பை நாடி) மாற்றிக்கொண்டே இருப்பர். போருக்கிடையே யுள்ள ஆண்டுகளில் (inter-war Period) இப் 'பன்னாட்டுக் குறுங் கால மூலதனத்தின் (International Short-term capital) அல்லது 'அரும்பணத்தின்' (hot money) அளவு வெகுவாக அதிகரித்தது. இவைகள் திடீரென அதிகரித்ததானது, நாட்டில் பலசமயங்களில் தொந்தரவாக இருந்தது, வருகிறஆண்டுகளி லெல்லாம், 'பன்னாட்டுக்குறுங்கால மூலதனங்கள்' (international Short-term capital) குறைவான அளவிற்கே இருக்கும். ஏனெனில், கட்டுப்பாடற்ற அயல்நாட்டு மாற்று அங்காடி (Free Foreign exchange market) திரும்ப வரவேண்டுமென்று அவாக் கொண்டுள்ளோரும், முதலீடுகளின் இயக்கத்தை (Movement) மிகக்கடுமையாகக் கட்டுப்படுத்த வேண்டுமென்பதை ஒப்புக் கொள்கின்றனர்.

மூன்றாவது பிரிவு யூகபேரங்களாகும் (Speculative transactions). மற்றச்செலாவணிகளைவிட டாலரின் மதிப்பு அதிகரிக்கக் கூடும் என்றும் நம்பிக்கையை மக்கள் கொண்டால், அவர்கள் டாலர்களை அதிகமாகப் பெற விழையக்கூடும். அதேபோன்று, பவுண்டின் மதிப்புக் குறையக்கூடும் என்று அவர்கள் பயந்தால், பவுண்டுகளைக் கொடுத்து வேறு மற்றச் செலாவணிகளைப் பெற விழைவர். அநேகமாக எல்லா அயல்நாட்டு மாற்று பேரங்களும் கீழ்க்கண்ட மூன்று வகைகளில் ஏதாவதொன்றில் அடங்கும்.— அது, பண்டங்களைப் பெற்றுக்கொண்டதற்கோ அல்லது பணிகளைச் செய்ததற்கோ செலுத்தவேண்டிய செல்லாக இருக்கும்; அப்படியில்லையெனில், முதலீடுசெய்வதற்காக அல்லது பாதுகாப்பை நாடிச் செல்லும் மூலதனப் பெயர்ச்சிக்காகவோ (capital movement) அல்லது ஏற்கெனவே முதலீடுசெய்யப்பட்ட மூல தனத்தின் வட்டியாகவோ இருக்கும்; அப்படி யில்லையெனில் மாற்று வீதங்கள் (exchange rates) அடையும் மாறுதல்களால் இலாபத்தை அடையவும் அல்லது நஷ்டத்தைத் தவிர்த்துக் கொள்ளவும் திட்டமிட்ட யூக பேரமாக (Speculative transaction)வும்

இருக்கக்கூடும்.[1] இந்த மூன்று பிரிவுகளின் பெயர்களையும் குறிப்பிடுவோம். அவையாவன, 'வாணிபம்' 'முதலீடு', 'யூகபேரம்'.

மேற் சொல்லப்பட்ட மூன்று இனங்களிலும் கடைசி இரண்டு இனங்கள் 'வணிக' பேரங்களின் முக்கியமான ஒருவகை வேறுபடுகின்றன. ஒரு முதலீடு செய்வதற்கு, பவுண்டுகள் டாலர்களாக மாற்றப்படுகிறதென வைத்துக்கொள்வோம். இந்த மூலதனத்திற்கு வட்டி செலுத்தப்பட வேண்டும். மூலதனமிட்ட தொகையை ஏதாவது ஒரு நாளில் திருப்பியடைக்கவேண்டும். வேறுவகையில் சொல்லப் போனால், கிரேட் பிரிட்டனிலிருந்து வெளியில் செல்லும் செல்லுகள் கிரேட் பிரிட்டனுக்குள் வந்து சேரும் தொடர்ச்சியான எதிர்செல்லுகளை ஏற்படுத்திவிடுகின்றன. இருபது ஆண்டு காலத்தில், பிரிட்டிஷ் குடிமக்கள் வெளிநாடுகளில் முதலீடு செய்யப்பட்ட ஒவ்வொரு £1000 ம், ஏறக்குறைய $ 1000 வட்டிரூபத்தில் பிரிட்டனுக்கு திரும்பக் கிடைத்திருக்கும். எனவே, இருபது ஆண்டுகளில் பவுண்டுகளின் அளிப்பும் அவைகளின் தேவையும் சமமாக அதிகரித்துள்ளன. ஆகவே, மூலதனச் செல்லுகள் (capital payments) 'தாமே எதிராகச் செல்லும்' (Self-reversing) தன்மையன; அவை எப்போதும், எதிர்த் திசையை நோக்கிச் செல்லுகள் செலுத்தப்படுவதற்கு வழி கோலுகின்றன. செலாவணியில் அவைகள் ஏற்படுத்தும் விளைவுகள் தாற்காலிகமானவையே தவிர நிரந்தரமானவையல்ல, உண்மையில், குறுங்கால மூலதனம் (Short-term capital) நிறையஅளவு வெளியில் சென்றால் அவை மிக விரைவில் திரும்ப வந்து சேரும்.

யூகபேரங்கள் (Speculative transactions) இதைப்போலவே தாமே எதிரதாகச் செல்லும் (Self-revesing) தன்மை வாய்ந்தன. ஒரு யூக பேரவணிகர், ஒரு செலாவணியை, அது மற்றச் செலாவணிகளைக் காட்டிலும் மதிப்பில் உயரக்கூடும் என்றும் அப்போது, தான் இலாபமடையலாம் என்ற நம்பிக்கையில் வாங்குகிறான்

1 எந்த விதமான பயனுமின்றி அல்லது இலாபத்தையும் எதிர் நோக்காமல் செலுத்தப்படும் செல்லுகளே இதற்கு விதிவிலக்குகள். இதற்கு முக்கியமான உதாரணங்கள், ஒரு நாட்டின் மக்கள் மற்றொரு நாட்டின் மக்களுக்கு தானமாக அளிக்கும் உதவிகளும் (gifts), வெற்றி கொண்ட நாட்டினர், தங்களால் முறியடிக்கப்பட்ட நாட்டினரிடமிருந்து பெறும் நஷ்டஈடுகளு (indemnities) மாம். இவையிரண்டும் குறிப்பிட்ட நாடுகளுக்குக் குறிப்பிட்டநேரத்தில் முக்கியம் வாய்ந்தவைகளாக (உதாரணமாக ஐக்கிய அமெரிக்காவுக்கு 1922-29லும், இதே காலத்தில் ஜெர்மனிக்குக் கொடுக்கப்பட்ட நஷ்ட ஈடுகளும்) இருந்துள்ளன. இந்த நூலின் இப்பதிப்பை அச்சுக்கனுப்புந் தருவாயில், மற்றொரு பேரளவு அமெரிக்க உதவி (large scale gift) உருவாகிக் கொண்டிருந்தது. ஆனால் பெருவாரியான நாடுகளுக்கு, இந்த வணிகசம்பந்தமற்ற பேரங்கள் (non-Commercial transactions) சிறுங்கணிய முக்கியத்துவம் (Small quantitative importance வாய்ந்ததாகவே உள்ளன. எனவே அவைகளைப் பற்றிக் கருதுவதில்லை.

என்ருல் அச்செலாவணியை விற்கின்றவரையில் அவன் இலாப மடைய முடியாது. அதைப்போலவே, செலாவணியின் மதிப்புக் குறைவாக இருத்தலினின்றும் இலாப மடையும் நோக்கத்துடன் ஒருவர் அச்செலாவணியை விற்ருல், தான் அந்தச் செலாவணியை மீண்டும் வாங்குகிறவரையிலும், இலாபமடைய முடியாது. இந்த யூக பேரத்தில், இரட்டை பேரக் கோட்பாடு (the principle of double transactions) அடங்கியுள்ளது.

முதல் இனமாகிய 'வாணிபம்' ஒன்றே ஒன்றுதான் 'தானே எதிரதாகச் செல்லும்' (Self reversing) தன்மை வாய்ந்த தல்ல. லிவர்பூலில் (Liverpool) இருக்கும் பருத்தி வாணிபத்தரக ரொருவர் தான் வாங்கிய கச்சாப் பருத்திக்குப் பணம் கொடுப்பதற்கு டாலர்களை வாங்குகிருர் என்ருல், இந்த பேரத்தில் பின்னர் ஒரு நாளில் 'தானே எதிரதாகச் செல்லும்' தன்மையேதும் இருக்க வில்லை. இது ஒரு தீர்ந்த பேரமாகும். பவுண்டுகளை டாலர்களாக மாற்றுவதில் உள்ள எந்தவித விளைவும் (influence) மாற்றமடை யாமல் நிரந்தரமாகவே இருக்கும். அதாவது, பின்னர் எந்தவித எதிர்விளைவும் ஏற்படுவதில்லை. மாற்றுவீதங்களில் ஏற்படும் அன்ருட ஏற்ற இறக்கங்களைப் பொறுத்தவரையில், நாட்டை விட்டு வெளிச் செல்லும் ஒவ்வொருவகை சொல்லையும் (payment passing) கணக்கிடல் வேண்டும். ஆனுல், 'மூலதனமும்' (capital) 'யூகபேர' செல்லுகளும் உடனடியாகவோ, தள்ளியோதாம் எதிர தாகச் செல்லும் (Self-reversing) தன்மை வாய்ந்தனவாதலால், செலாவணியின் மதிப்பிற்கான நிரந்தரமான (permanent) அல்லது 'நெடுங்கால' (long-run) காரணங்களை நாம் ஆராயும் போதும், 'வாணிபச்' செலுத்துக்களில் மட்டும் நாம் கவனம் செலுத்தும்போதும், அவைகளைப் பொருட்படுத்தாது விட்டு விடலாம். ஒருநாடு தான் வாங்கிய பண்டங்கள், பணிகள் ஆகிய வற்றிற்கு செலுத்தவேண்டிய செல்லுகளின் அளவையும், தான் விற்ற பண்டங்கள், பணிகள் ஆகியவற்றிற்குப் பெறுகின்ற செல்லு களின் அளவையும் தீர்மானிப்பது எது என்பதை நாம் கண்டு பிடித்துவிட்டால், மற்றச் செலாவணிகளுக்கிடையே அந்தச் செலாவணிக்குள்ள மதிப்பின் மூலாதாரங்களைக் (origins) கண்டு பிடித்தவர்களாவோம்.

ஒரு நாடு, அயல்நாட்டுப் பண்டங்களையும் பணிகளையும் வாங்கும் அளவையும், அயல்நாட்டிற்குப் பண்டங்களையும் பணி களையும் விற்கும் அளவையும், தீர்மானிப்பனவற்றுள் சுங்கவரி களையும் (Tariffs) தீர்வைகளையும் (customs duties) கூறலாம். அவைகள் காணப்படுவதைப் போன்று, அவைகளின் விளைவு

அவ்வளவு முக்கியமானதுமல்ல; நீடித்து இருப்பனவுமல்ல. ஒரு நாடு, தான் சுங்க வரிகளை விதிப்பதன் மூலம் இறக்குமதிகளைக் குறைத்துக்கொள்ளுமானால், அதனுடைய உடனடியான விளைவு, அயல்நாட்டு மாற்று அங்காடியில் அதனுடைய செலாவணியின் அளிப்புக் குறைந்து, அதனால் அதன் மதிப்பு உயரும். மாற்று வீதங்களைப் பொருத்தமட்டில், இதே விதமான நடவடிக்கையை மற்ற நாடுகளும் பின்பற்றி 'தங்கள்' இறக்குமதிகளைக் குறைத்துக் கொள்வதில்லை. அவைகளும் பின்பற்றுமானால், மேற்படி நாட்டின் ஏற்றுமதிகளும் நாளாவட்டத்தில் குறைந்து, அந்த நாடு எதிர்பார்த்த குறிக்கோள் பயனற்றதாகப் போய்விடும். எனினும், இது ஒரு கண்டிப்பான விதியல்ல. ஒரு நாடு பிறநாடு களின் சுங்க வரிகளால் தனது ஏற்றுமதிகளின் அளவு குறைந்ததை விட, அதிகமான அளவிற்கு, தான் பிற நாடுகளிலிருந்து பெறும் இறக்குமதிகளின் அளவைக் (தன் சுங்கவரிகளின் மூலம்) குறைத்துக்கொள்ளுமானால் அது, அந் நாட்டின் செலாவணியின் மாற்று வீதத்தை, ஏற்கெனவே இருந்ததைவிட, அதிகமான அளவிற்கு நிரந்தரமாக உயர்த்தும். இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டு, ஐக்கிய அமெரிக்காவாகும். தனது ஏற்றுமதிகளைக் குறைத்துக் கொள்ளாவண்ணம், தனது இறக்குமதிகளை அது வெற்றிகரமாகக் குறைத்துக்கொண்டிருக்கிறது. இதற்குக் காரணம் அமெரிக்கா பிறநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் பொருள்கள் இன்றியமையாத பொருள்கள். அவைகளை வாங்குகின்ற நாடுகள், இதன் காரணமாகத்தான், அப்பொருள்களைத் தங்களின் தீர்வைகளின் மூலம் (customs duties) குறைத்துக்கொள்ளத் தயங்குகின்றன அல்லது இயலாமற் போகின்றன. இதற்கு எதிரிடையான நிலையும் இதே போன்று நிச்சயமாகப் பலனளிக்கக் கூடியது. அதாவது ஒரு நாடு தனது ஏற்றுமதிகளைப் பிற நாடுகள் தங்களின் சுங்கவரிக ளால் குறைக்கின்ற அளவிற்கு அதிகமாகத் தன்னுடைய இறக்கு மதிகளைக் குறைத்துக்கொள்ள மனமின்றியோ அல்லது இயலாமல் போனாலோ, அந்த நாட்டின் செலாவணியின் தேவை அதன் அளிப்பைவிடக் குறைந்து, அதன் மதிப்பும் ஏற்கெனவே உள்ளதைவிடக் குறையும். 1932ஆம் ஆண்டில் பொதுச்சுங்கவரி விதிப்பு ஏற்படும் வரையிலும், கிரேட் பிரிட்டனின் நிலை இவ்வாறு தானிருந்தது.[1]

1 இதைக் காப்பு வரிகளுக்கு (Protective tariffs) ஆதரவாகவும் எதிராகவும் உள்ள காரணங்களின் சிறுபகுதி எனக் கூறலாம். மேற்படி வாதத்தின் முக்கியப் பகுதியை இந்நூலில் விவரிக்கத் தேவையில்லை. சுங்க வரிகளின் விளைவு, மற்ற நாடுகளின் சுங்க வரிகளின் விளைவுகளால் சரிக்கட்டப்படாத வரையில், செலா வணியின் மாற்று மதிப்பை 'ஏற்கெனவே உள்ளதைவிட' (above what would otherwise be) அதிகப்படுத்தும் என்பதை எந்தப் பொருளாதார நிபுணரும் மறுக்கமாட்டார் (கோடிட்டுள்ள சொற்கள் முக்கிய மென்பதைப் பின்னால் வரும்

சுங்கவரிகளைத் தவிரவும், நாட்டின் வாணிப அளவைப் பாதிக்கின்ற சக்திகள் பல உண்டு. அவைகளை இங்கே ஆராய்ந்தால் அது 'பன்னாட்டு வாணிபக் கோட்பாட்டிற்கு' நம்மை அழைத்துக் கொண்டு சென்றுவிடும். பன்னாட்டு வாணிபக் கோட்பாடு (theory of international trade) இந்நூலின் எல்லைக்குப் (scope) புறம்பானதாகும். ஒரு நாட்டின் இறக்குமதி ஏற்றுமதி ஆகிய இரண்டின் அளவையும் தீர்மானிக்கும் காரணங்களை ஆராய்வது நமது நோக்கமல்ல. ஏற்றுமதிகளின் மதிப்பிற்குத் தகுந்தாற் போல் இறக்குமதிகளின் மதிப்பைச் சரிசெய்து (alter) கொடுப்பவைகள் எவை என்பதை யறியவே நாம் விழைகின்றோம்.

எனவே, விலையானது (Price) மிகப் பெரும் சக்திகளில் ஒன்று என்பது தெளிவாகத் தோன்றுகிறது. மக்கள் எப்போது வெளி நாட்டுப் பண்டங்களை வாங்குகின்றனர்? ஒரேவிதமான விலைக்கு (same price), தங்கள் நாட்டில் வாங்குவதை விடச் சிறந்த பண்டத்தை வெளிநாட்டில் வாங்க இயலும்போதோ, அல்லது ஒரேவகையான பண்டத்தைத் தங்கள் நாட்டின் விலையைவிட விலைக்குறைவாக வாங்க இயலும்போதோ தான் மக்கள் அயல் நாட்டுப் பண்டங்களை வாங்குவர். அயல்நாட்டுப் பண்டங்கள் மலிவாக இருந்தால் அவைகள்தாம் அதிகமாக வாங்கப்படும். கிரேட் பிரிட்டனில் பொதுவாக விலைகளின் மட்டம் (general level of prices) குறைந்தால் அதிகமான பிரிட்டிஷ் பண்டங்கள் ஏற்றுமதி செய்யப்படும். இச்சூழ்நிலையில், விலைகள் குறைந்துள்ள உள்நாட்டுப் பண்டங்களோடு போட்டியிடுவது மிகுந்த சிரமமான செயலாதலால், அயல்நாட்டுப் பண்டங்கள் மிகவும் குறைவாகவே இறக்குமதி செய்யப்படும். எனவே இறக்குமதிகளுக்குப் பணம் செலுத்துவதற்காகத் தேவைப்படும் அயல்நாட்டுச் செலாவணிகளின் தேவை (demand) குறையும். பிரிட்டிஷ் ஏற்றுமதிகளுக்குப் பணம் செலுத்தப்படுவதற்குப் பவுண்டுகளின் தேவை அதிகரிக்கும். இவ்வாறு பவுண்டுகளின் அளிப்பைக் காட்டிலும் அவைகளின் தேவை அதிகமாகும். மற்றச் செலாவணிகளைக் காட்டிலும் பவுண்டுகளின் மதிப்பு உயரும். இவ்வாறே தொடர்ச்சியான நிகழ்ச்சிகள் மற்ற நாடுகளின் விலைகளைக் காட்டிலும் கிரேட் பிரிட்டனின் விலைகளைக் குறைவாக இருக்கும்படி செய்யும், அயல்நாட்டு விலைகள், கிரேட் பிரிட்டனின் விலைகளைப்போல் விரைவாகக் குறைந்து சென்றால், பிரிட்டனின் ஏற்றுமதி அதிகரிப்பதற்கு அல்லது அதன் இறக்குமதி குறைவதற்கு எந்தவிதமான காரண

---

நிகழ்ச்சிகள் உணர்த்தும்) ஆயினும் ஒரு செலாவணியின் அதிகமான மாற்று மதிப்பு (higher exchange value.) அவசியமாக விரும்பப்படும் என்பதில்லை.

மும் இருக்காது. இதற்கு மாறாக, பிரிட்டிஷ் விலைகள் மாறாம லிருந்து, அயல்நாட்டு விலைகள் அதிகரிக்கும்போது, பிரிட்டிஷ் விலைகள் குறைந்தால் என்ன விளைவுகள் ஏற்படுமோ அவ் விளைவு களே ஏற்படும். மற்ற விலைகளைக் காட்டிலும், பிரிட்டிஷ் விலைகள் அதிகமாக இருப்பதானது, விலைகள் குறைவாக இருக்கும்போது ஏற்படும் விளைவுகளுக்கு நேர்மாறான விளைவுகளே ஏற்படும். அதாவது, பிரிட்டிஷ் இறக்குமதிகள் அதிகரிக்கும், ஏற்றுமதிகள் குறையும்.

இவ்வாறு விலைகளுக்கும் (prices) மாற்றுவீதங்களுக்கு மிடையேயுள்ள தொடர்பு மிகச் சாதாரணமான தொன்று. பணத்தின் மதிப்பு விலைகளால் தலைகீழாக அளக்கப்படுகிறது. விலைகள் அதிகமாக இருக்கும்போது, பணத்தின் மதிப்பு (value) அல்லது வாங்குந்திறன் (purchasing power) குறைவாக இருக்கும். அப்படியே விலைகள் குறைவாக இருக்கும்போது, பணத்தின் மதிப்பு (value) அல்லது வாங்குந்திறன் அதிகமாக இருக்கும். விலைகளால் அளவிடப்பட்ட மதிப்பை, செலாவணியின் அகமதிப்பு (internal value) என்று அழைப்போம். அச்செலாவணி மற்றச் செலாவணிகளுக்கு மாற்றப்படக் கூடிய வீதத்தினால் அளவிடப் பட்ட மதிப்பை புற மதிப்பு (external value) எனக் கொள்வோம். நாம் இதுகாறும் கூறிவந்ததெல்லாம், ஒரு செலாவணியின் புற மதிப்பின் போக்குகள் (movements) அதனுடைய அகமதிப்பின் போக்குகளைப் பின்பற்றியே செல்லும் என்பதே. இன்னும் சரிநுட்ப மாகக் கூறப்போனால் (accurately) செலாவணியின் புறமதிப்புப் போக்குகள் (movements in the external value of a currency) மற்றச் செலாவணிகளின் அகமதிப்போடு தொடர்புள்ள (relative to the internal value of other currencies) அதன் அகமதிப்பின் போக்கு களைப் பின்பற்றிச் செல்லும். அல்லது இன்னும் வேறு வழியில் கூறப்போனால், இவ்விரு செலாவணிகளுக் கிடையேயுள்ள மாற்று வீதமும், முறையே அவைகளுடைய வாங்குந்திறன்களுக்கிடையே உள்ள வீதமும் ஒன்றாகவே யிருக்கும். இக்கோட்பாடு முழுமைக் கும், வாங்குந்திறன் சமநிலைக் கோட்பாடு (purchasing power parity theory) எனப் பெயரிடப்பட்டிருக்கிறது.

1914-18 ஆண்டுகளில் நடந்த போரின்போதும் போரை அடுத்த ஆண்டுகளிலும் இக்கோட்பாடு, பேராசிரியர் குஸ்டாவ் காசல் (Prof. Gustav Cassal) என்னும் ஸ்வீடன் நாட்டுப் பொரு ளாதார நிபுணரால் விரித்துரைக்கப்பட்டது. அவர், விலைமட்டம் ஏறியுள்ள அதே விகிதத்திற்குச் (proportion) சமமாக மாற்று வீதம் குறையும் எனக் கூறியுள்ளார். இதன்படி, வெளி உலகத்தில்

விலைகள் ஏறுமல் அப்படியே யிருக்க, கிரேட் பிரிட்டனில் மட்டும் விலைகள் இருமடங்கதிகமானுல், பவுண்டின் புதிய சமன்பாட்டு மதிப்பு (equilibrium value) ஏற்கெனவே இருந்ததில் பாதியாகத் தானிருக்கும். பேராசிரியர் காசல் இன்னும் ஒருபடி அதிகமாகச் செல்லுகிறுர். விலைமட்டத்தின் போக்குகளே (movements in price level) மாற்றுவீதப் போக்குகளுக்குக் (movements in exchange rate) காரணமாக இருக்கின்றன என்று கூறுகின்றுர். அதே நேரத்தில், மாற்றுவீதத்தின் போக்குகள் விலைமட்டத்தில் எவ்வித நிரந்தரமான விளைவையும் உண்டுபண்ணத் திறனற்று இருக்கின்றன வென்றும் அவர் கூறுகிருர். பேராசிரியர் காசல் அவர்களின் கோட்பாடுகளின் முக்கியத்துவமே அப்போது அரசாங்கக் கொள்கையில் அவைகள் ஏற்படுத்திய விளைவுகளில்தான் உள்ளது. அந்த ஆண்டுகளில் மத்திய ஐரோப்பாவில் அநேகமாக ஒவ்வொரு நாடும் சமன்கேடான அரசாங்க வரவு செலவுத் திட்டத்தையும் (unbalanced budget), வெகுவிரைவாக அதிகரித்த காகிதப் பணத்தின் அளவையும் (volume of paper money), தொடர்ச்சியான விலைகளில் அதிகரிப்பையும் (continually rising prices) மற்றச் செலாவணிகளுடன் ஒப்பிடும்போது மாற்றுவீதம் தொடர்ந்து குறைந்து கொண்டிருக்கிற ஒரு செலாவணியையும் பெற்றிருந்தது. இந்த நிலைகளைக் கொண்டிருந்த அரசாங்கங்கள், தங்களுடைய செலாவணிகளின் மதிப்புக் குறைந்ததற்குக் காரணங்கள் நஷ்டஈடு (reparations) கொடுக்கவேண்டிய நிலை அல்லது 'பன்னுட்டு யூக பேரவணிகரின்' (international speculators) நடவடிக்கைகள் அல்லது இன்னுமற்ற நூறு வகைக் காரணங்கள் என்று அறிவித்தன. மேலும், செலாவணிகளின் மதிப்புக் குறைந்ததே விலைகள் அதிகரித்தமைக்குக் காரணமென்றும், இவ்வதிகரித்த விலைகளே, தொடர்ச்சியாக அரசாங்கத்தின் செலவுகளை, அவைகளின் வருமானங்கள் மட்டும் அதிகரிக்காமலிருக்க, அதிகரித்துவிட்டன வென்றும், இதனுல் வரவு செலவுத் திட்டங்களை அரசாங்கங்கள் சமனநிலைக்குக் கொண்டுவர இயலாமற் போகவே, வரவுக்கும் செலவுக்கும் ஏற்பட்ட இடைவெளியை நிரப்புவதற்கு அதிகப்பணத்தைச் சிருட்டிக்க நோட்டுகளை அதிகமாக அச்சடிக்கும் கட்டாய நிலை ஏற்பட்டதென்றும், அவைகள் அறிவித்தன. செலாவணியின் மாற்றுமதிப்புக் குறைவதைத் தடுத்து நிறுத்தினுலொழிய, வரவுசெலவுத் திட்டத்தை சமனநிலைக்கு கொண்டுவரும் முயற்சியோ அல்லது நோட்டுக்களை அதிகமாக அச்சடித்து வழங்குதலை நிறுத்தும் முயற்சியோ எந்தவிதமான பலனையும் தராது. இவ்வாதங்களுக்காக அவைகளைக் குறை கூறுவது கூடாது. பேராசிரியர் காசல் அவர்களின் கருத்து சரியானதென்றுல், இந்தவிதமான வாதங்கள் முற்றிலும் தவறுகப்படும்.

ஏனெனில் சரிசமனமான வரவு செலவுத்திட்டம் (balanced budget), பணப் புத்தாக்கத்திற்கு (monetary reconstructions) முதல்படியும் கடைசிப் படியுமாகும். சரிசமனமான வரவு செலவுத் திட்டம் விலைகளை அதிகரிக்கும் பணச்சிருட்டிப்பைத் தடுக்கும்.

பேராசிரியர் காசல் அவர்களின் கருத்துகளை அப்போதிருந்த பொருளாதார நிபுணர்கள் ஏற்றுக்கொண்டனர். அப்போதிருந்த நிகழ்ச்சிகள் இக்கருத்துகளை நியாயமானதாகக் காட்டின. உதாரணமாக, அரசாங்கங்களும் மக்களும் அரசாங்க வரவுசெலவுத் திட்டங்களைச் சமனப்படுத்துவதற்குத் தியாகங்களைச் செய்ய முன் வராதவரையில், செலாவணிகளின் அழிவைத் (collapse) தடுப்பது இயலாததாக இருந்தது. கோட்பாடு என்ற முறையில், வாங்குந் திறன் சமநிலைக் கோட்பாடு (purchasing power parity theory) சில முக்கிய வரையறைகளுக்குட்பட்டதாகும்.

இக்கோட்பாடு சுங்கவரிக் கைக்கோளியற்றும் மாறுதல் களுக்கு (modification by tariff policy) உட்பட்டது. ஒருநாடு தான் சாதகமான நிலையிலிருந்தால், உதாரணமாக ஐக்கிய அமெரிக்கா எனக் கொள்வோம், அது தன்னுடைய செலா வணிக்கு, மற்ற நிலையில் தானிருப்பதைவிட, அதிகமான மாற்று மதிப்பை ஏற்படுத்தி வைக்கலாம். இது கீழ்க்கண்ட இரண்டினுள் ஒன்றை அறிவிக்கின்றது. ஒரு நாடு மற்ற நாடுகளின் சுங்க வரிகளால் சரிக்கட்டப்படாத வகையில் சுங்கவரியை விதிப்பதில் வெற்றி கண்டால் அதனுடைய செலாவணியின் மதிப்பு, அந் நாட்டின் உள் விலை மட்டத்தில் எவ்வித மாற்றமும் இன்றி, அதிகரிக்கக்கூடும். மாற்றுமதிப்பு ஏற்கெனவே இருந்த நிலையில் மாறாமலிருந்தாலும், விலைகள் ஏறினாலும் இதே விளைவு ஏற்படக் கூடும். இவ்விரண்டு நிலையிலும், செலாவணியின் புறமதிப்பு (external value of the currency) அதனுடைய வாங்குந்திறன் (purchasing power) அல்லது அகமதிப்பை (internal value) விட அதிகமாக இருக்கும். இதன் காரணமாகத்தான், டாலர்கள் பவுண்டுகளாக மாற்றப்பட்டு, ஐக்கிய அமெரிக்காவில் செலவிடப் படுவதைவிட பிரிட்டனில் செலவிடப்படும்போது அதிகமான பொருள்களையும் பணிகளையும் வாங்க இயலுகின்றது.

இரண்டாவதாக, 'விலை மட்டம்' (price level) என்பது என்ன வென்பதை நாம் விளக்கியாகவேண்டும். அயல்நாட்டு வாணிபம் செய்பவர்களின் கணக்குகளில் எல்லா விலைகளும் இடம்பெறுவ தில்லை. உதாரணமாக, பிரிட்டனைவிட, பிரான்சில் வீடுகளின் விலை மலிவாக இருக்கலாம். இவ் விலைகளிலுள்ள மாற்றம் எதுவும்,

பிரான்சிலிருந்து வீடுகளை இறக்குமதி செய்யும்படி மக்களைத் தூண்டுவதில்லை. ஆயினும், மாற்றுவீதமானது, பன்னாட்டு வாணி பத்தில் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் செல்லக்கூடிய பொருள்களின் விலைகளால் தான் பாதிக்கப்படுகிறதென்றும் அதி தீவிர (extreme) கருத்தைக் கொள்வதும் சரியன்று. ஓரிடத்தி லிருந்து மற்றோர் இடத்திற்குக் கொண்டு செல்லக்கூடிய பொருள் களையும் சற்றுச் சேர்த்துக்கொள்ளத்தான் வேண்டும். சாதாரண மாக, நிலக்கரி கிரேட் பிரிட்டனிலிருந்து ஐக்கிய அமெரிக்காவிற்கு ஏற்றுமதி செய்யப்படுவதில்லை; அல்லது ஐக்கிய அமெரிக்கா விலிருந்து பிரிட்டனுக்கு ஏற்றுமதி செய்யப்படுவதுமில்லை. ஆனால் கிரேட் பிரிட்டனில் அமெரிக்காவைவிட நிலக்கரியின் விலை குறை வாக இருந்தால், போதுமான அளிப்பு இருக்குமாயின், இலாபம் சம்பாதிக்கும் பொருட்டு நிலக்கரியை அட்லாண்டிக் சமுத்திரத் தைக் கடந்து ஐக்கிய அமெரிக்காவுக்கு அனுப்பும் வாணிபம் ஆரம்பிக்கப்படும். இதனால் அயல்நாட்டு மாற்று அங்காடியில் வருகின்ற பவுண்டுகள் டாலர்களின் அளவுகள் பாதிக்கப்படும். மேற்கண்ட உதாரணம் ஓர் அதிதீவிரமான உதாரணமாகும் (extreme example). ஏனெனில் நிலக்கரியை ஏற்றிச் செல்லும் செலவு மிகவும் அதிகமாக இருக்கும். இணையாக உள்ள ஒவ்வொரு சோடி (pair of two countries) நாடுகளுக்கிடையேயும் வாணிபம் செய்யப்படாத பல பண்டங்களின் விலைகளில் சற்று வேறுபாடு காணப்படுமாயின், சுலபமாக அவற்றில் வாணிபம் தொடங்கும். மாற்றுவீதம்(rate of exchange)'விலைமட்டத்தை' (price level) எதிர் பார்த்திருக்கிறதென்று நாம் கூறும்போது, விலைமட்டமென்பது வாணிபம் செய்யப்படுகிற, செய்யப்படக்கூடிய பண்டங்கள் அனைத்தின் விலைகள் என்று விளக்கங் கூறவேண்டும்.

ஆனால் இக்கருத்து, வாங்குந்திறன் சமநிலைகளைக் (purchasing power parities) கணக்கிடுவதில், நடைமுறையில் இடர்ப்பாட்டை ஏற்படுத்துகிறது. மூன்றும் அத்தியாயத்தில் நாம் கண்டவாறு, பொது விலைமட்டத்தில் ஏற்படும் மாறுதல்களைச் சரி நுட்பமாக அளத்தல் இயலாது. குறியீட்டெண்கள் மூலம் நாம் தோராயமாகத்தான் கணக்கிடலாம் (approximations). பொது விலை மட்டத்தில் சரியாக எவ்வளவு பகுதி பிரதிபலிக்கப்பட் டுள்ளது என்பதை குறியீட்டெண்களின் அமைப்புத் தீர்மானிக் கிறது. தற்போது மிகவும் பிரபலமாகவுள்ள குறியீட்டெண்கள் மொத்த விலைகளே. இவைகள், அங்காடியில் உள்ள சில கச்சாப் பொருள்கள் இன்றியமையாத பொருள்கள் இவைகளின் அங்காடி விலைகளில் ஏற்படும் மாற்றங்களை அளக்கின்றன. இந்தக் குறியீட்டெண்கள் மூலம் வாங்குந்திறன் சம

நிலைகளை (purchasing power parities) நாம் கணக்கிட்டால், எல்லாவகைச் செய்பொருள்களையும் (manufactured goods) உற்பத்திப் பொருள்களையும், எல்லாப் பணிகளையும், புலனாகா ஏற்றுமதிகளையும் (invisible exports) புறக்கணித்தவர்களா வோம். மேலும், மேற்சொல்லப்பட்ட கச்சாப் பொருள்கள் பெரும் பாலும், ஒன்றுக்கொன்று நெருங்கிய தொடர்புள்ள பல்வேறு நாடுகளின் பொது அங்காடிகளில் (public markets) விற்கப் படுகின்றன. டாலருடன் வைத்து ஒப்பிட்டு மதிப்புக் கூறப்படும் பவுண்டானது, தன் மதிப்பில் குறைந்துவிட்டதென வைத்துக் கொள்வோம். இப்போது, ஒன்று லிவர்பூலில் (Liver pool) கோதுமையின் விலை ஏறவேண்டும் அல்லது சிக்காகோ (Chicago) வில் கோதுமையின் விலை இறங்கவேண்டும். அப்படியில்லையெனில், லிவர்பூலில் கோதுமையை வாங்கி, சிக்காகோவில் விற்பனை செய்வது இலாபமானதாக இருக்கும். எனவே, கோதுமையின் விலையை மட்டும் வைத்துக்கொண்டு நாம் வாங்குந்திறன் சமநிலை யைக் கணக்கிட்டு அதனை மாற்றுவீதத்தின் போக்கிற்குக் காரணம் என்று நாம் கூறுவோமேயானால், நாம், காரணத்தையும் (cause) விளைவையும் (effect) குழப்பிக்கொண்டிருக்கிறோம் என்பது பொருள். ஆனால், 'வாழ்க்கைச் செலவு' குறியீட்டெண் களை (cost of living index numbers) வைத்து இதனைக் கணக்கிடும் அதிதீவிர முறைக்கு நாம் செல்வோமானால், வாடகை (rent) போன்ற எல்லாவகையான பொருள்களையும் சேர்த்துக் கணக்கிட்ட வர்களாவோம். பன்னாட்டு வாணிபத்தை இப்பொருள் எவ்விதத்தி லும் பாதிப்பதில்லை. மேலும் இம்முறை சில்லறை வியாபார விலை களின் (retail prices) அடிப்படையில் கணக்கிடுகிறது. ஆனால் வெளிநாட்டவருக்கு, மொத்த வியாபார விலையில் பண்டங்கள் விற்கப்படுவதால், சில்லறை வியாபார விலையின் அடிப்படையில் கணக்கிடுவது சரியன்று. ஆயினும் இந்த இக்கட்டான நிலையி லிருந்து (dilemma) தப்ப வேறு வழியில்லை. பலவாற்றுலும், சிறந்த ஒரு முறையொன்றுள்ளது. கூலி வீதங்களின் குறியீட்டெண்ணைப் (index number of wage rates) பயன்படுத்துவதே அம்முறை. கூலிகள், ஒவ்வொருவகைப் பணியிலும் பண்டத்திலும், அவைகள் செய்பொருளாக இருந்தாலும் இல்லாவிட்டாலும், உள்ளடங்கியிருப் பதால் இம்முறையில் கணக்கிடுவது மிகவும் சிறந்த வழியாக வுள்ளது. மற்றத் தொழில்களைக் காட்டிலும், ஏற்றுமதித் தொழில் களில் கூலிகள் குறைந்திருந்தாலொழிய, (கிரேட் பிரிட்டனில் 1914-18 ஆண்டுகளில் நடந்த போருக்குப்பின்னருள்ள பத்தாண்டு களில் இருந்ததைப் போல) கூலிகளின் குறியீட்டெண்களின் போக்குகள் (movements of the index number of wages), பன்னாட்டு வாணிபத்தில் இயங்குகிற அல்லது இயங்கக்கூடிய பண்டங்கள்,

பணிகள் ஆகியவற்றின் விலைமட்டத்தின் போக்குகளுக்கு (price level movements) நெருங்கிய தொடர்பு கொண்ட வழிகாட்டியாக இருக்கமுடியாது. இந்தக் கணக்கிலும்கூட, பல்வேறு நாடுகளின் உழைப்புத்திறனில் உள்ள வேறுபாடுகளுக்கும் இடமளிக்க வேண்டும்.[1]

பேராசிரியர் காசல் அவர்கள் கூறியதுபோல், வாங்குந்திறன் சமநிலைக் கோட்பாட்டின் மீது மேலும் ஒரு மறுப்பைக் கொண்டு வரலாம். அவருடைய கோட்பாட்டின்படி விலைமட்டங்களின் போக்குகள் (movements in price levels) மாற்றுவீதங்களில் மாற்றங்களை உண்டுபண்ணலாம்; ஆனால் மாற்றுவிதங்களில் ஏற்படும் மாறுதல்கள் (changes in exchange rates) விலை மட்டங்களில் எவ்வித மாறுதலையும் உண்டுபண்ணுவதில்லை. இக் கோட்பாட்டின் இந்தப் பிற்பகுதி உண்மையானதாக இல்லை. உதாணரமாக, ஏராளமான யூக பேரத் தன்மை வாய்ந்த மூலதனப் பெயர்ச்சிகள் (heavy capital movements) பவுண்டின் மதிப்பைக் குறைத்து, பலமாதங்கட்கு அதன் மதிப்புக் குறைந்து இருக்கும்படி செய்யும். இதனால் ஏற்படும் உடனடியான விளைவு என்னவெனில், கிரேட் பிரிட்டனில், எல்லா இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களின் விலைகளும் விலை அதிகரிக்கச் செய்யும். (ஏனெனில் அமெரிக்கக் கோதுமைக்கு அல்லது பிரஞ்சு சரிகைக்கு அதிக அளவு பவுண்டுகளைக் கொடுக்கவேண்டியிருக்கும்). பல பிரிட்டிஷ் தொழில்கள் இறக்குமதி செய்யப்படும் கச்சாப் பொருள்களை நம்பியிருத்தலால், இதன் காரணமாக அத்தொழில்கள் தங்கள் பொருள்களின்

1. இந்த இடர்ப்பாட்டினைத் தவிர்க்க இயலுமென்றும், சரியான குறியீட்டெண்களைத் தேர்ந்தெடுத்துவிடலாமென்ற கருத்தில், 'வாங்குந்திறன் சமநிலை' (purchasing power parity) கீழ்க்கண்டவாறு கணக்கிடப்படுகிறது. பவுண்டிற்கும் டாலருக்குமிடையேயுள்ள 'வாங்குந்திறன் சமநிலையை நாம் அறிய வேண்டுமென்று வைத்துக்கொள்வோம். முதலில், நடைமுறையிலுள்ள மாற்றுவீதம் (actual exchange rate) சமனமான நிலைக்குச் (position of equilibrium) சரியாக இருக்கிறதென்ற எடுகோளின்மீது (assumption) கடந்த காலத்தில் ஏதாவதொன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டும். இந்த அடிப்படை ஆண்டில் அமெரிக்கக் குறியீட்டெண் 120 ஆகவும், பிரிட்டிஷ் குறியீட்டெண் 100 ஆகவும், மாற்றுவீதம் \$ 5.00 = £ 1 ஆகவும் இருப்பதாக நினைத்துக்கொள்வோம். தற்போது, குறியீட்டெண்கள் அமெரிக்காவில் 180 ஆகவும் கிரேட் பிரிட்டனில் 200 ஆகவும் இருக்கும். எனவே இவ்விரு செலாவணிகளுக்கு மிடையேயுள்ள 'வாங்குந்திறன் சமநிலை' (purchasing power parity)

$$\$5.00 \times \frac{100}{200} \times \frac{108}{120} \text{ அல்லது } \$\,3.75 = £\,1$$

ஆக இருக்கும்.

மாற்றுவீதம் சரியாக \$ 3.75 ஆக இருந்தால், குறியீட்டெண்களிலுள்ள இருவகை விலைகளின் சாரசரிகளுக்கிடையேயுள்ள தொடர்பானது, அடிப்படை ஆண்டிலுள்ளதைப் போன்றே இருக்கும். அடிப்படை ஆண்டு (base year) சமன்பாட்டு நிலையை (position of equilibrium) உணர்த்துமாயின், இக் கொள்கையின்படி, மேற்படி புதிய தொடர்பும் அதனையே உணர்த்தும்.

விலைகளை அதிகரிக்கும்படி வற்புறுத்தப்படுகின்றன. மேலும், பிரிட்டிஷ் ஏற்றுமதிகள், அயல்நாட்டுச் செலாவணிகளில், மிகவும் விலை மலிவாக இருக்கும். இதனால் அப்பொருள்கள் நிறைய விற்கப் படும். எனவே பிரிட்டிஷ் ஏற்றுமதியாளர்கள் (exporters) ஏற்றுமதி களின் விலைகளை அதிகரிக்கும்படி தூண்டப்படுவர். ஏனெனில் பவுண்டின் மதிப்பிறக்கத்தைவிடச் சற்றுக் குறைவாக அவர்கள் விலைகளை உயர்த்துவார்களேயானால், அவர்கள் தங்களின் இலாபங் களை அதிகரித்துக்கொள்ள முடியும். அயல்நாட்டுச் செலாவணி களில் அவர்களின் பண்டங்கள் ஏற்கெனவே இருந்ததைவிட விலை நயமாகவே இருப்பதால், அவர்கள் அயல்நாட்டு அங்காடியில் பெரும்பகுதியைக் கைப்பற்றமுடியும். எனவே பவுண்டின் இறக்கம் (fall of the pound) பிரிட்டிஷ் விலைமட்டத்தை அதிகரிக்கச் செய்யும். அதே நேரத்தில், பிரிட்டிஷ் ஏற்றுமதித் தொழில்களின் அதிகமான போட்டியிடுந்திறன் மற்ற நாடுகளை, அவைகள் தங்களின் வாணிபத்தை இழக்கமாலிருக்கும் பொருட்டுத் தங்களின் விலைகளைக் குறைத்துக்கொள்ளும்படி கட்டாயப்படுத்தும். எனவே பவுண்டின் இறக்கம் (fall of the pound) பிரிட்டிஷ் விலைகளை அதிகரிக்கச் செய்வதோடல்லாமல் அயல்நாட்டு விலைகளையும் குறையச் செய்கின்றது. இதுதான் 1931ஆம் ஆண்டு, செப்டம் பரில் ஏற்பட்ட பவுண்டின் இறக்கத்திற்குப் பிறகு நடந்ததன் சுருக்கம்.

மாற்றுவீதங்களில் ஏற்படும் ஏற்ற இறக்கங்கள் (fluctuations), விலை மட்டத்தில் ஏற்படுத்தும் விளைவு பலநாடுகளில் பலவிதமாக இருக்கும். தான் நுகருகின்ற அதிகமான பொருள்களை இறக்குமதி செய்தும், தனது சாதனங்களின் பெரும்பகுதி ஏற்றுமதிப் பொருள் களை உற்பத்தி செய்வதில் அதிக கவனம் செலுத்தியும் வருகின்ற நாட்டில், இதன் விளைவு அதிகமாக இருக்கக்கூடும். ஏனெனில் மாற்று வீதங்களில் ஏற்படும் மாறுதல்கள் இறக்குமதி, ஏற்றுமதிப் பண்டங்களின் விலைகளைப் பாதிக்கவே செய்யும். மேற்கூறிய இரண்டு இனங்களும் (categories) எல்லாப் பொருள்களிலும் மிக அதிகமான அளவு இருக்குமானால், பொதுவிலை மட்டம் (general price level) அந்த அளவிற்கு (pro tanto) அதிகமாக இருக்கும். இதன்படி குறிப்பிட்ட ஒரு மாற்றுவீதத்தின் போக்கு, உதாரண மாக ருஷ்யாவைவிட, ஹாலந்தில் (Holland) அதிகமான விளை வைத் தரும் என எதிர்பார்க்கக்கூடும். ஆனால் ஒப்பீடான (relative) போக்குகளையும் முழுமையான (absolute)போக்குகளையும்நாம் ஒன்றுக் கொன்றை மறுமுறையும் குழப்பிக்கொள்ளக்கூடாது. ஒரு நாட்டின் செலாவணியின் மாற்று மதிப்பில் (exchange value) ஏற்படும் இறக்கம் (fall) அந்த நாட்டின் விலைமட்டத்தில் ஒப்பீடான

ஏற்றத்தை (relative increase) ஏற்படுத்தும். இந்த ஒப்பீடான அதிகரிப்பானது, மற்றநாடுகளின் விலைமட்டம் மாறாமலிருக்க அந்த நாட்டின் விலைமட்டத்தில் மட்டும் அதிகரிப்பை உண்டு பண்ணும். ஆனால், செலாவணியின் மதிப்புக் குறைந்துள்ள நாடானது பண்டங்களைப் பெரிய அளவில் வாங்குகின்ற முக்கிய மான நாடாக இருந்தால், அது உலக அங்காடியின் பெரும்பகுதி யாக இருக்கும். அதன் செலாவணியின் மதிப்பிறக்கம், அதன் விலைகளில் அதிகரிப்பை உண்டுபண்ணுவதைக் காட்டிலும், மற்ற நாடுகளில் விலை இறக்கத்தையே உண்டுபண்ணும். 1931ஆம் ஆண்டு செப்டம்பரில் பவுண்டின் மதிப்பிறக்கத்திற்குப் (deprecia-tion) பிறகு நடந்தது இதுவே. உலகத்திற்குத் தேவையுள்ள பல முக்கியப் பண்டங்களுக்கு, பிரிட்டிஷ் அங்காடியே மிகப்பெரிய தொன்றாக இருக்கிறது. பவுண்டின் மதிப்பு குறையும்போது கிரேட் பிரிட்டனின் மக்கள் இப்பண்டங்களைக் குறைந்த விலைக்கு (அந்நியச் செலாவணிகளில்) விற்க முன்வருகின்றனர். ஏனெனில் அந்நியச் செலாவணிகளில் அவைகளுடைய விலை குறைகின்றது. எனவே 1931ஆம் ஆண்டிற்குப் பிறகு பவுண்டு ஸ்டெர்லிங் (pound sterling) தனது மாற்றுமதிப்பில் 40 சதவீதத்தை இழந்த போதிலும், உலகத்தின் மற்றப் பகுதி நாடுகள் முழுவதிலும் ஏற்பட்ட விலைகளின் இறக்கம், பிரிட்டிஷ் விலைகளின் ஒப்பீடான (relative) அதிகரிப்பிற்குக் காரணமாக இருந்தன. ஆயினும், பிரிட்டிஷ் விலைகள் மாறாமல் நிலையாகவே (stable) இருந்தன.

விலைகளில், மாற்றுவீதப் போக்குகள் ஏற்படுத்தும் விளைவின் அளவு நாட்டுக்குநாடு வேறுபட்ட போதிலும், சிறிதளவு விளைவு (some effect) எப்போதும் இருந்துகொண்டேயிருந்தது. எனவே, மாற்றுவீதங்களின் போக்குகளுக்கு (movements of exchange rates) விலைமட்டத்தின் போக்குகளே முக்கியத் தனிப்பட்ட காரணம் என்று கூறுவதில் நாம் கவனமாய் இருக்கவேண்டும். இவைகளிரண்டிற்குமிடையே அடிப்படையானதொரு தொடர்பு உள்ளது என்பதை மட்டுமே நாம் கூறமுடியும். வாங்குந்திறன் சம நிலைக் கோட்பாட்டின் மூலம் இத் தொடர்பை நாம் விளக்க முயன்றபோதுதான், நாம் இதுகாறும் குறிப்பிட்ட சில தவிர்க்க முடியாத தகுதிகளை (qualification) நோக்கவேண்டியிருந்தது. சுங்கவரிக் கைக்கோளின் (Tariff policy) விளைவுகளுக்குட்பட்டே, வாங்குந்திறன் சமநிலைக் கோட்பாடு இயங்கும். 'வாங்குந்திறன் சமநிலைகளை' (purchasing power parities) உணர்த்த எந்த விலை களைக் கணக்கிலெடுத்துக்கொள்வது, எந்தக் குறியீட்டெண்ணைப் பயன்படுத்துவது என்பன போன்ற இடர்ப்பாடுகள் 'வாங்குந்திறன் சமநிலைகளை'க் கணக்கிடும் முயற்சிக்குத் தடைகளாக வுள்ளன

இப்படி, கணக்கிடுதல் இயன்ற போதிலும், பல ஆண்டுகளாகவும் பல பத்தாண்டுகளாக (decades)வும் உள்ள மூலதனப் போக்குகளை (capital movements)யும் எண்ணிப் பார்த்தே இந்தக் கணக்கிடுதலைச் செய்யவேண்டும்.

இன்னோரன்ன தகுதிகள் இருப்பதால், 'வாங்குந்திறன் சமநிலை' என்னும் சொல்லைக் கையாளாமலிருப்பதே நலமெனத் தோன்றுகிறது. அப்படியானால் இந்தக் கோட்பாட்டையே மறந்து விடலாமே என வாசகர்கள் முடிவுகட்டலாம். ஆனால் இது மிகவும் அதிகப்படியான செயலாகும். இரண்டு நாடுகளுக்கிடையில் எந்த ஒரு சமயத்திலும் 'சமநிலை மாற்றுவீதம்' (equilibrium rate of exchange) இருக்குமென்பது நமக்குத் தெரிந்ததே—'சமநிலைவீதம்' என்பதை அந்த வீதத்தில் ஒவ்வொரு செலாவணியின் தேவையும் அதன் அளிப்பிற்குச் (supply) சமமாக இருக்கும் (யூகபேர மூலதன பெயர்ச்சிகளையும், இயல்புகடந்த[1]. மூலதன பெயர்ச்சிகளையும் பொருட்படுத்தாது) என்று கூறலாம். இச்சமநிலை வீதத்தை எளிதில் கணக்கிட்டுவிட முடியாது. ஆனால், விலைகளின் போக்குகளை ஒப்பிட்டுப் பார்த்துத் தோராயமாக இதனைக் கணக்கிடலாம்.

மேலும், எவ்வளவு குறைகளிருந்த போதிலும் விலைகளுக்கும் மாற்றுவீதத்திற்கும் நெருங்கிய தொடர்பு உள்ள தென்பதை ஏற்றுக்கொள்வது. பணக் கைக்கோளின் கருத்துப்படி, ஒரு குறிப்பிட்ட நடைமுறையான (practical) முக்கியவத்துத்தைக் கொண்டுள்ளது. ஏனெனில், அது நாடுகள் செய்ய இயலாதன சில உண்டு என்று எச்சரிக்கை செய்கின்றது.

1925ஆம் ஆண்டில், கிரேட்பிரிட்டன் பொன் திட்டத்திற்குத் திரும்பியதன் மூலம், பவுண்டின் மதிப்பை, அப்போதிருந்த விலைகள் உற்பத்திச் செலவுகள் (costs) கூலிகள் (wages) ஆகியவைகளின் மட்டத்திற்கு மேல் மிக அதிகமாக, நிர்ணயித்தது. உலகத்

1. பல ஆண்டுகளைக் கொண்ட நெடுங்காலத்திலுள்ள சமநிலை மாற்றுவீதத்தைப்' (equilibrium rate of exchange) பற்றிக் கருதும் போது எல்லா மூலதனப் பெயர்ச்சிகளையுமே கருதாது நாம் புறக்கணித்துவிடவேண்டும். ஆனால் குறுங்காலங்களின் 'சமநிலை மாற்று வீதத்தைக் கணக்கிடும்போது, ஒரு குறிப்பிட்ட மூலதனத்தின் பெயர்ச்சி (certain movement of capital) அல்லது மூலதனத்தின் வட்டியின் பெயர்ச்சி' இயல்பானதென்று (normal) கருதி 'பத்தாம் அத்தியாயத்தைக் காண்க. அதற்குக் கணக்கிடுதலில் இடமளிக்கவேண்டும். மேலும், நெடுங்காலத்திலுள்ள சமநிலை' என்னும் இச்சொற்றொடர் மிகப்பெரிய பிரச்சினையைக் கொண்டு வருகிறது. ஏனெனில் அவ்வாறான சமநிலை என்ற ஒன்று சம்பந்தப்பட்ட நாடுகளின் பொருளாதாரத் தொடர்புகள் குறிப்பிட்ட அந்தக் காலம் முழுமையும் மாறாமல் நிலையாக இருந்தால் தான் இருக்கும். ஆனால், நேரடியான நடவடிக்கைகளை எடுககாத வரையில, அவைகள் அவ்வாறிருப்பது கடினம். ஒன்பதாவது அத்தியாயத்தில் நாம் பார்க்கப்போவதைப்போல, பொன்திட்ட முறைக்கு (gold standard mechanism) இது ஒரு முக்கியமான அங்கமாகும்.

தின் மற்றப் பகுதிகளின் விலைகள் (prices) உற்பத்திச் செலவுகளுக் கொப்பாக விலைகளும், உற்பத்திச் செலவுகளும் குறைக்கப்பட்டால் தான், பவுண்டு ஸ்டெர்லிங்கின் மட்டம் (level of pound sterling) காக்கப்படுமென்று, வாங்குந்திறன் சமநிலைக் கோட்பாடு தெளிவுற விளக்கியது. அவ்வாறான குறைப்பு (reduction) செய்யப்பட வில்லையானால், பவுண்டின் மாற்றுவீதம் (exchange rate of the pound) குறையும்படி நேரிடும். வட்டிவீதங்களை உயர்த்துகின்ற ஒரு தாற்காலிக ஏற்பாட்டினால், பிரிட்டிஷ் ஆட்சியாளர், ஆறாண்டு காலத்திற்கு பவுண்டின் மதிப்பை உயர்த்திவைத்திருந்தனர்; இதன் மூலம் அயல்நாட்டு மூலதனத்தையும் ஈர்த்தனர். அதிகவட்டி வீதக் கைக்கோள் (policy of high interest rates), முதலீட்டைக் குறையச் செய்வதன் மூலம் விலைகளில் மந்த நிலையையும், வேலையின்மையைத் தோற்றுவிப்பதன் மூலம் கூலி வீதங்களில் மந்த நிலையையும் ஏற்படுத்துமென்பதை நாம் சென்ற அத்தியாயத்தில் பார்த்தோம். இந்த ஆண்டுகள் முழுமையும் இயல்பு கடந்த அதிக அளவு வேலையின்மை (abnormally high unemployment) இருந்த போதிலும், கிரேட்பிரிட்டனின் விநோதமான சூழ்நிலைகளால், கூலி வீதங்கள் (wage rates) குறைக்கப்படவில்லை. அதன் காரணமாக விலைகளும் குறைக்கப்படவில்லை. இதனால் விலைமட்டத்திற்கும் மாற்றுவீதத்திற்கு மிடையே சமன்கேடு (disequilibrium) நீடித்தது. விலைகளென்னும் மலை (mountain of prices) மாற்று வீதம் என்னும் மனிதனிடம் வராதாகையால், மனிதன் தான் மலையிடம் போகவேண்டும். உற்பத்திச் செலவுகளும் விலைகளும் குறைக்கப்பட முடியாவிட்டால், சீக்கிரத்திலோ அல்லது காலங் கடந்தோ, பவுண்டின் மாற்று மதிப்புக் குறைவது தவிர்க்க முடியாததாகும். இவ்வாறு தவிர்க்கமுடியாததொரு நிலை 1931ஆம் ஆண்டில் ஏற்பட்டது. அப்போது, அதிக வட்டிவீதங்களால் லண்டனுக்குள் ஈர்க்கப்பட்ட அயல்நாட்டு மூலதனம், திடீரென திகிலடைந்து லண்டனைவிட்டு வெளியே ஓட்டமெடுத்தது. அதன் ஓட்டத்தில், ஸ்டெர்லிங்கையும் அதன் பொன் திட்டத்திலிருந்து இழுத்து விடுவித்துச் சென்றது.

இதற்கு நேர் எதிரிடையானதும், உண்மையில், இதைப் போன்றதே. பிரிட்டிஷ் பவுண்டை மிக அதிகமான மட்டத்தில் (level) செயற்கையாக வைத்திருத்தல் எவ்வாறு பிரிட்டிஷ் ஏற்றுமதிகளுக்கு இடையூறாக இருந்து பிரிட்டிஷ் விலைகளில் (British Prices) மந்தமான நிலைகளை உண்டுபண்ணுகிறதோ அதைப் போல, அரசாங்கங்கள் தங்களது செலாவணிகளை மிகவும் குறைந்த மட்டத்தில், (too low level) தங்களது ஏற்றுமதித் தொழில்களுக்குத் துணைசெய்வதற்கு, சிற்சில சமயங்களில் வைத்திருக்க

முயன்றன. இந்தச் சூழ்ச்சித்திட்டம் ஒரு குறிப்பிட்ட சமயம்வரை வெற்றி பெறக்கூடும். ஆனால் இதுமிகவும் குறுகிய வரையளவுகளை (narrow limits) உடைய தென்பதை அடுத்த அத்தியாயத்தில் பார்ப்போம். நாளடைவில் ஒன்று, விலைகள் கூலிகள் உற்பத்திச் செலவுகள் ஆகியவைகளின் மட்டம் அதிகரிக்கும்படி விடப்பட்டு அதனால் ஏற்றுமதி செய்பவர்களின் வேறுபாட்டு நலன் (differen tial advantage) ஒழிக்கப்படவேண்டும். அப்படியில்லாவிடில், செலாவணியின் மாற்று மதிப்பு அதன் சமநிலை வீதத்திற்கு (equilibrium rate) அதிகரிக்கும்படி அனுமதிக்கப்பட வேண்டும். நீண்ட காலத்தில், பொருளாதாரக் கோட்பாடுகள் மீண்டும் வலியுறுத்தப்பட்டு, மாற்றுவீதம் 'சமநிலைவீதத்திற்கும்' அதிக மாகவோ அல்லது குறைவாகவோ இல்லாமல் இருக்கும். இச் சமநிலைவீதம் என்பது பல நாடுகளின் பொருளாதார அமைப்புக் களிடையே யுள்ள சமனமான தொடர்பைக் (balanced relation ship.) குறிக்கும்.[1]

'நெடுங்காலத்தில்' (In the long run) என்னும் சொல்லிலுள்ள 'நெடு' என்றும் பதம் மிக நீண்ட காலம் என்று சில சமயங்களில் உணர்த்துகிறது. ஒருநாடு ஒவ்வொரு ஆண்டிலும் அயல்நாடு களிடம் கடன் வாங்குவதையே நம்பிக்கொண்டிருந்தால் அதனுடைய செலாவணியின் மதிப்பை 'வாங்குந் திறன் சம நிலைக்கு' (Purchasing Power Parity) அதிகமாகப் பல ஆண்டு களுக்கு வைத்திருக்கக்கூடும். இதற்கு எழுத்து வடிவில் உள்ள சான்று 1900—1914 ஆகிய ஆண்டுகளில் கானடா இருந்த நிலை யாகும். இந்த ஆண்டுகளில் கானடா ஆண்டொன்றுக்கு $ 30 மில்லியன் வெளிநாடுகளிலிருந்து கடன் வாங்கியது. சில சமயங் களில் இதைப்போல் பத்து மடங்கும் கடன் வாங்கியது. விளைவாக, கானடாவின் டாலருடைய (Canadian Dollar) மாற்று மதிப்பு வாங்குந்திறன் சமநிலைக்கு அதிகமாக வைக்கப்பட்டிருந்தது. கானடாவின் டாலர் பொன்திட்டத்திலிருந்தமையால் அதை அதிகரிக்க முடியாமற்போகவே, வாங்குந்திறன் (purchasing power) குறைந்தது. அதாவது கானடாவின் விலைகள் (Canadian prices) உயர்ந்தன.[1] ஆனால் இது விதி விலக்கான தொன்றே

1 அதாவது, மாற்று அங்காடியில் ஏதாவது சற்றுச் சுதந்திரம் விட்டு வைக்கப் படுமானால் அப்போது தான் மாற்றுவீதம் சமநிலை வீதத்திற்கும் அதிகமாகவோ அல்லது குறைவாகவோ இல்லாமலிருக்கும். மாற்றுகட்டுப்பாடு (exchange restrictions) என்னும் மிருகபலத்தால் தான் சமன்கேடான நிலைதோன்றும். இது அடுத்த அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளது.

1. அந்நிய நாடுகளிலிருந்து கடன் வாங்கியதால் கானடியவிலைகள் (Canadian Prices)) செயற்கையாக அதிக மட்டத்தில் வைக்கப்பட்டிருந்தன என்பதை, கானடாவுக்கு இறக்குமதியான பண்டங்களின் விலை நயமாக இருந்தமையும் ஏற்றுமதியான பண்டங்களின் விலை இதற்கு ஒப்பாக அதிகமாக

யாகும். ஏனெனில், முதலீடுகளின் சாதகமான எதிர்காலத்தை உடையனவும், கெட்ட நேரத்திலும் நல்ல நேரத்திலும் மூலதனத்தை ஒவ்வோர் ஆண்டிலும் பெறுவதற்கு நம்பியிருக்கும் ஒரு பெரிய அயல்நாட்டு மூலதன அங்காடியுடன் மிக நெருங்கிய தொடர்புள்ளனவுமான நாடுகள் மிகச் சில. பெரும்பான்மையான நாடுகளுக்கு 'நெடுங்காலம்' (long run) ஆறு அல்லது எட்டு ஆண்டுகட்கு மேலிராது.[1]

## முடிவுரை

இந்த அத்தியாயம் கொணரும் முக்கிய முடிவுகளை மூன்று பெருங்கருத்துக்களாகக் கூறலாம். அவைகளைச் சுருக்கமாகக் கூறுதலானது ஓரளவு பிடிவாதமான கொள்கையை வலியுறுத்துகின்றது. அக்கருத்துக்களில் சில, தகுதிகளுக்குட்பட்டே ஏற்றுக்கொள்ளக் கூடியனவாக இருக்கின்றன. அவைகளை இங்கு மீண்டுங் கூறுதல் முக்கியக் குறிப்புகளைத் தெளிவுபடுத்தும்.

1. ஒவ்வொரு நாட்டின் செலாவணியும் அதனுடைய நாட்டில்தான் பணமாக ஏற்றுக்கொள்ளப்படும். பன்னாட்டுச் செலாவணி (international currency) என்று ஒன்று இல்லாததாலும், ஒரு செலாவணியைப் பிறிதொரு செலாவணியாக 'மாற்றம்' செய்ய (Converting) யாதொரு முறையும் இல்லையாதலாலும், ஒவ்வொரு பன்னாட்டுச் செல்லும் (international payment) செலாவணிகளின் மாற்றை (exchange of currencies) வேண்டுகிறது.

2. செலாவணியின் மாற்று, குறைந்தது இருவரின் (இரு தரப்பினர்) மனமொப்பிய சம்மதத்தை விரும்புகிறது. இதுவே பன்னாட்டு நடவடிக்கைகளை (international transactions) நாடு

---

இருந்தமையும்; விளக்குகிறது. அதாவது கானடா, தன் மாற்று வீதத்தை செயற்கையாக வைத்துக்கொண்டிராவிடில் எவ்வளவு பெற முடியுமா அதைவிட அதிகமான மலிவான விலைக்குத் தன் இதற்குமதிகளையும், அதிகமான பணத்தைத் தன் ஏற்றுமதிகளிலும் பெற்றது. மாற்றுவீதக்கோட்பாடுகளில்தெளிவானதொரு, மிகவும் சுவையான 'ஆய்வுக்கூடப் பரிசோதனை (laboratory experiment) யின் தெளிவான தொரு விளககத்தை, 1900-1913 ஆகிய ஆண்டுகளில் பேராசிரியர் ஜாக்கப் வைனர்) (Professor Jacob Viner) என்பவர் 'உலகக் கடனில் கானடா கொடுக்சவேண்டிய பாக்கித்தொகை. (Canada's Balance of International Indebtedness) என்னும் நூலில் பார்க்குறுமாறு வாசகர்கள் வேண்டப்படுகின்றனர்.

1 இந்நூலின் முதற்பதிப்பில் இந்தக் கட்டத்தில் முன்னேக்கிய அயல்நாட்டுச் செலாவணி (forward exchange) என்னும் ஒரு பிரிவே (section) இடம் பெற்றிருந்தது. கணக்கிடப்படக்கூடிய கால அளவிற்குள் வெளி அங்காடியில் (open market) முன்னேச்கிய அயல்நாட்டுச் செலாவணியின் நடவடிக்கைகள் திருப்பவும் மேற்கொள்ளப்படுமா என்பது பிரச்சினைக்குரியதாக இருப்பதால், இது தற்போது நூலின் பின்னிணைப்பிற்கு (appendix) மாற்றப்பட்டுள்ளது.

களுக்கிடையே நடக்கும் நடவடிக்கைகளினின்றும் துல்லியமாக வேறுபடுத்திக் காட்டி, பன்னாட்டுச் செல்லுகளில் பலவகைகளை உண்டுபண்ணுவதன்மூலம் பல இடர்ப்பாடுகளையும் ஏற்படுத்துகின்றது.

3. அயல்நாட்டு மாற்று அங்காடியில் (foreign exchange market) செலாவணிகள் மாற்றிக்கொள்ளப்படுகின்றன. அவைகள் மாற்றிக்கொள்ளப்படும் வீதங்கள் மற்றச் செலாவணிகளுக்கு மாற்றுகப் பெறும் ஒரு செலாவணி தேவையின் ஒப்பீடான (relative) அவசரத்தினுலும் அதன் அளிப்பினுலும், தோராயமாகத் தீர்மானிக்கப்படுகின்றன. மாற்றுவீதங்கள் இவ்வாறுதான் தீர்மானிக்கப்படுகின்றன வென்று சரியாக விளக்கந்தர இயலாதெனினும், அடிப்படையில், பல்வேறு செலாவணிகளுக்கிடையேயுள்ள ஒப்பீடான உள்நாட்டு (internal) வாங்குந்திறன்களால் தீர்மானிக்கப்படுகின்றன வென்று கூறலாம்.

இந்த அத்தியாயம் முழுவதிலும் ஒரு பெரிய எடுகோள் (a large assumption) மறைமுகமாகக் கையாளப்பட்டுள்ளது. நாம், ஒவ்வொரு நாட்டிலும் உள்ள அயல்நாட்டு மாற்று அங்காடியைத் 'தடையிலா அங்காடி' (free market) என்று எண்ணிவந்தோம். அதாவது, வாணிபம் செய்வதற்கோ அல்லது வாணிபம் செய்வதினின்றும் ஒதுங்கி நிற்பதற்கோ யாரும் கட்டாயப்படுத்தப்படுவதில்லை. அதுபோல, மாற்று வீதங்களின் (exchange rates) தடையற்ற ஏற்ற இறக்கங்களுக்கு (Free fluctuations) எந்த விதமான வரையறையும் (limit) இல்லை. போருக்கிடையேயுள்ள ஆண்டுகளில் (inter-war years) உலகம் இயல்பான சூழ்நிலைகளிலிருந்தது என்னும் கருத்தில் தான் மாற்றுவீதங்களின் கோட்பாட்டை இதுகாறும் ஆராய்ந்து வந்தோம். நமது அடுத்த வேலை, மேற்கண்ட இந்த எடுகோளை நீக்கிவிட்டு, இயல்புகடந்த (abnormal) சூழ்நிலைகளில் மாற்று வீதங்கள் எவ்வாறு இயங்குகின்றன என்பதை ஆராய்வதாகும். மாற்றுவீதங்களின் ஏற்ற இறக்கங்களைத்தடுத்து நிறுத்தவல்ல பாராட்டத் தக்கதும் திறமையானதுமான முறையாகிய பொன்திட்டத்தின் (gold standard) வேலை முறையை நாம் ஆராயவேண்டும். பொன் திட்டத்தில் மிகவும் குறிப்பிடத்தகுந்தது என்னவெனில் அதை ஒருவரும் கண்டு பிடிக்கவில்லை-தானுகவே வளர்ந்தது. பொன்திட்டத்தின் வேலை முறையை ஒன்பதாவது அத்தியாயத்தில் ஆராய்வோம். அதற்கிடையில், அயல்நாட்டு மாற்று அங்காடியில் அரசாங்கம் தலையிடுவதால் ஏற்படும் விளைவுகளைப்பற்றியும், அத்தலையீட்டின் நோக்கம், முறைகள் பற்றியும், சற்று ஆராய்வோம். அத்தலையீட்டின் விளைவுகள் எவ்வாறிருக்கு மென்பதையும் கணக்கிடமுற்படுவோம்.

# 8. மாற்று நிருவாகமும் கட்டுப்பாடும்
## (Exchange Management and Control)

### மாற்று நிருவாகத்தின் நோக்கங்கள்
### (The objects of Exchange Management)

திட்டமிடப்பட்ட பொருளாதாரக் கைக்கோள்களும் (Planned economics) தனியார் வணிகத்தின் மீதுள்ள அரசாங்கக் கட்டுப்பாடுகளுமுள்ள இந்நாளில், அயல்நாட்டு மாற்று அங்காடிக்கு எந்த விதக் கட்டுப்பாடும் இல்லையெனில், அது விநோதமாக இருக்கும். உண்மையில் கூறப்போனால், ஒரு நாட்டின் செலாவணிக்கும் மற்ற நாடுகளின் செலாவணிகளுக்குமிடையே உள்ளமாற்று வீதங்களின் மீதும் (exchange rates), அந்த நாடு அயல்நாட்டு மாற்று அங்காடியில் செய்யும் வணிகத்தின் மீதும், நேர்முகமான அல்லது மறைமுகமான, சக்தி வாய்ந்த அல்லது சக்தியற்ற ஏதாவது ஒரு வகைக் கட்டுப்பாடு இல்லாத நாடே உலகத்தில் இல்லை எனலாம். இந்த அத்தியாயத்தில் அத்தகைய கட்டுப்பாடு செயற்படுத்தப்படும் முறைகளையும், அவ்வாறு செயற்படுத்தும் நாடுகளில் அம்முறைகள் ஏற்படுத்தும் விளைவுகளையும் நாம் ஆராய வேண்டும். இதனை ஆராயுமுன்னர், அரசாங்கங்கள் பன்னாட்டுப் பேரங்களையும் (international transactions), தங்களுடைய செலாவணிகளின் மாற்று மதிப்புகளையும் (exchange values) எதற்காகக் கட்டுப்படுத்த விழைகின்றன என்பதை ஆராய்வது நலம்.

மாற்று அங்காடியைக் கட்டுப்படுத்தும் முக்கிய நோக்கமே, கட்டுப்பாடே இல்லாத நிலையில் என்ன மாற்று வீதங்கள் இருக்குமோ அவற்றை மாற்றி யமைப்பதுதான். தேவை அளிப்பு (demand and supply) இவைகளின் தடையற்ற இடைத் தொடர்பால் (free interplay) தீர்மானிக்கப்படும் மாற்றுவீதமே

திருப்தியாக இருக்கிறதென்பதை அரசாங்கம் கருதினல், மாற்று வீதத்தை நிருவகிக்கும் தேவை அரசாங்கத்திற்கு இருக்காது. தடையற்ற வீதத்தை (Free rate) நீக்கி, நிருவகிக்கப்படும் அல்லது கட்டுப்படுத்தப்படும் வீதத்தைக் (managed or controlled rate) கொண்டு வருவதற்கு மூன்று காரணங்கள் இருக்கும். முதலாவதாக, தடையிலா அங்காடியிலிருப்பதை விட (free market) அதிகமானமட்டத்திற்கு(higher level) செலாவணியின் மாற்றுமதிப்பை வைத்திருக்கும்நோக்கம் காரணமாகஇருக்கலாம். அதேபோல, தடையற்ற மட்டத்தின் (free level) கீழ், செலாவணியின் மாற்று மதிப்பை வைத்திருக்கும் (maintain) நோக்கமும் காரணமாக அமையலாம். மூன்ருவதாக, செலாவணியின் மாற்று மதிப்பை, தேவை அளிப்பு ஆகிய இரண்டிற்கும் ஏறக்குறைய சம நிலையில் (equilibrium) நெடுங்காலத்திற்கு, வைத்திருக்கும் நோக்கத்துடனும், அதே சமயத்தில் தடையிலா அங்காடியில் இடையிடையே ஏற்படும் ஏற்ற இறக்கங்களைத் தவிர்க்கும் நோக்கத்துடனும், செலாவணியானது நிருவாகத்தின் கீழ்க் கொண்டு வரப்படலாம். இம் மூன்று நிருவாக நோக்கங்களையும் தெளிவாக, 'மிகை மதிப்பு'[1] (over valuation), 'ஏற்ற இறக்கங்களின் தடுப்பு' (avoidance of fluctuations)எனப்பாடுபடுத்திக் கூறலாம். தற்போது நிதானமாக இவைகள் ஒவ்வொன்றையும் ஆராயலாம்.

செலாவணி மாற்று நிருவாகத்தின் அல்லது கட்டுப்பாட்டின் முக்கிய நோக்கம் 'மிகை மதிப்பு' (over valuation) செய்வதுதான். தடையிலா அங்காடியிலிருப்பதை விட செலாவணிக்கு அதிக மதிப்பை உண்டு பண்ண ஒரு நாடு விழைவதற்குப் பல காரணங்கள் உண்டு. ஆனல், கிட்டத்தட்ட எல்லாக் காரணங்களும் ஒரே சூழ்நிலையிலிருந்து தோன்றியவைகளாகவேயிருக்கின்றன—அதாவது நாட்டின் வணிகத் தொடர்புகள் (trading relationships) சமனிலைக்கு மிகவும் புறம்பாக (badly out of balance) இருப்பதும், தடையிலா வாணிபம் வாங்கப்படுவதற்காகத் தேவைப்படும் செலா

1 மிகைமதிப்பு' செய்யப்பட்ட செலாவணி (an over-valued currency) என்பது சமநிலை மாற்று வீதத்திற்கு அதிகமானதாகவோ அல்லது தடையிலா அங்காடியிலுள்ள வீதத்திற்கு அதிகமானதாகவோ உள்ள வீதத்தை உடைய செலாவணி என்று பொருள்படும். சமநிலை மாற்று வீதமென்பதும் (equilibrium rate of exchange) தடையிலா அங்காடியின் மாற்று வீதம் (free market rate of exchange) என்பதும் ஒன்று என்று நாமே கருதிக் கொண்டால் தவிர தெளிவாகச் சொல்லப்போனல் அவ்வாறு கருதுவதும் இயலாத தொன்ரும். மற்றப்படி இந்த இரண்டு வீதங்களும் ஒரேவீதமல்ல. பெரும்பாலான சந்தர்ப்பங்களில்'மிகை மதிப்பு' என்பது நாம் முதலில் குறிப்பிட்ட சமநிலை மாற்று வீதத்திற்கும் அதிசமான வீதம் என்ற கருத்தில் தான் கையாளப்படும். ஆனல் இங்கு நாம் இரண்டாவதாகக் கூறியுள்ள கருத்தின்படி இதனைக் கையாண்டுள்ளோம். இந்த அடிக்குறிப்பில் 'மிகை மதிப்பு' என்னும் இந்தச் சொல்லிலுள்ள இருவேறு பொருள்களையும் அவற்றின் வேறுபாடுகளையும் பார்த்து நாம் தெளிவடைந்த பின்னர், 'இப்பதத்திலுள்ள மேற்படி குழப்பத்தையும் வசதியாக நாம் மறந்து விடுதல் நலம்.

வணிகளைவிட, விற்பதற்கான செலாவணிகள் நாட்டில் அதிகம் இருக்கும்படி, செய்கின்றது இதைப்போன்ற ஓரிரண்டு காரணங் கள். நாடு, போரில் ஈடுபட்டுக்கொண்டிருக்கும்போது கச்சாப் பொருள்களையும் (raw materials) செய்பொருள்களையும் (finished goods) இறக்குமதி செய்யவேண்டிய அவசியத்திலும், அதே நேரத்தில் ஏற்றுமதிக்கான எந்தப் பொருள்களையும் செய்ய ஈடுபட முடியாத நிலையிலும் உள்ளது—இக்காரணமும் ஒன்ருக இருக்கலாம். அயல் நாட்டுச் செலாவணிகளை வாங்கும் உரிமையானது அதிகமா கக் கட்டுப்படுத்தப் படவில்லையென்ருல்—உண்மையான கருத்துப் படி அரசாங்க பதிலாண்மைகளிடமும் (agencies) பிரிவுகளிடமும் (organs) மட்டுமே அவ்வுரிமை இருக்கிறது—அந்தச் சூழ்நிலை களில் மாற்று வீதத்தில் பெருங்கேடான இறக்கம் (catostrophic fall) ஏற்படும். உண்மையில், மாற்றுக் கட்டுப்பாட்டின் (exchange control) பெரும்பாலான முறைகள் போர்க்காலத்தின்போது கொண்டுவரப்பட்டவையே. கடுமையான போருக்குப் பிறகு உள்ள மீட்சிக் காலத்தில் (period of recovery), குறிப்பாகப் போரின்போது பேரிடருற்றதும் சீர்குலைந்த பொருளாதாரத்தைப் பெற்றதுமான ஒரு நாட்டில், இறக்குமதிகளுக்கு, சாதாரண காலங்களை விட, தேவை யதிகமாக இருக்கும். அவற்றிற்கான செல்லுகளை (payments) செலுத்துவதற்கு ஏற்றுமதிப் பொருள் களையும் அதிகரிக்க இயலாத நிலையிலிருக்கும். இம்மாதிரியான சூழ்நிலைகளில் மாற்றுவீதத்தில் ஏற்படும் இறக்கமானது (a fall in the exchange rate), அளிப்பு (supply), தேவை (demand) இவற்றிற்கான காரணிகளை (factors) சமநிலைக்குக் (equilibrium) கொண்டுவரும் என்று எதிர்பார்க்க முடியாது. 1947ஆம் ஆண் டில் (இவ்வாக்கியங்களை எழுதிக்கொண்டிருக்கும்போது) பவுண் டானது, 1 பவுண்டு=4 டாலர்கள் என்னும் மாற்றுவீதத்திலிருந்து, 1 பவுண்டு=2 டாலர்கள் என்னும் மாற்றுவீதத்தில் குறைந்தபோது, அமெரிக்கக் கோதுமை (American wheat), புகையிலை, பொறிகள் (machinery) ஆகியவற்றை பிரிட்டன் விரும்பியது. சற்றேனும் குறையவில்லை. பிரிட்டனின் ஏற்றுமதி செய்யும் திறனும் (ability to export) அதிகரித்தபாடில்லை. அமெரிக்கப் பண்டங்களை பிரிட்டிஷ் பண்டங்களைவிட விலை அதிகமானவைகளாகச் செய் வதே உண்மையில் இதன் விளைவாக இருந்தது. ஆகவே, இறக்குமதிகளுக்கான செல்லுகளை ஏற்றுமதிகளின் மூலம் செலுத்துவ தென்பது இன்னும் அதிக கடினமானதாக இருந்தது. எனவே இம்மாதிரியான சந்தர்ப்பங்களில், அரசாங்கம் தலையிட்டுத் தடை யேதுமில்லாத அங்காடியினுல் (Market that was left free) ஏற்படக் கூடிய செலாவணியின் புறமதிப்பின் (external value) வெகுவான இறக்கத்தைத் (sharp fall) தடுப்பது முறையாகும். வெளிநாடு

களிலிருந்து ஏராளமான பண்டங்களை உடனடியாக வாங்க வேண்டிய அவசியத்தில் உள்ள எந்த நாட்டிற்கும் மிகை மதிப்பு (over valuation) விரும்பத்தக்கதொரு கைக்கோளாகும் (desirable policy).

மிகைமதிப்பு செய்வதற்கான இரண்டாவது காரணமும் இதனை ஒத்ததே. உலகத்தில் பல நாடுகள் பல்வேறு சந்தர்ப்பங்களில் பிறநாடுகளிடம் வாங்கியதால் அந்நாடுகளுக்கு அவைகள் கடன்பட்டிருந்தும், தற்போதும் கடன்பட்டு மிருக்கின்றன. அக் கடன் தொகைகளை அவைகள் பிறநாடுகளின் செலாவணிகளில் திருப்பி அடைக்கவேண்டியவைகளாக இருந்தன. உதாரணமாக அர்ஜென்டினுவும் பிரிட்டிஷ் சுய ஆட்சி பெற்ற குடியேற்ற நாடுகளும் (British Dominions) பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதி பத்தாண்டுகளிலும் (later decades) இருபதாம் நூற்றுண்டின் முற்பகுதி பத்தாண்டுகளிலும் லண்டன் அங்காடியில் ஏராளமான தொகைகளைக் கடன் வாங்கின. கடன்கள், இத்தனை மில்லியன் பவுண்டு ஸ்டெர்லிங்குகள் என்ற கணக்கிலேயே வைக்கப்பட்டிருந்தன. அர்ஜென்டினுவின் பிசோ (Peso) என்றழைக்கப்படும் செலாவணியின் மதிப்பும் அல்லது ஆஸ்திரேலியாவின் பவுண்டின் (pound) மதிப்பும் எவ்வாருக இருந்தபோதிலும், இக்கடன்களும் அவைகளுக்கான வட்டியும் பிரிட்டிஷ் பவுண்டுகளில் (British Pounds) திருப்பி யடைக்கப்படுவனவாக இருந்தன. முதல் உலகப் போருக்குப் பிறகு, பெரும்பாலான மத்திய ஐரோப்பிய நாடுகளின் செலாவணிகள் முறிவடைந்தபோது (collapse), அவைகள் வாங்கிய கடன்கள் (பவுண்டு ஸ்டெர்லிங்குகளிலும், இன்னும் அதிகமாக, அமெரிக்க டாலர்களிலும் திருப்பி யடைக்கப்படவேண்டியவை) ஏராளமான அளவிற்குக் கொடுபடாமல் தேங்கிக் கிடந்தன. இந்த நாடுகள், போரில் ஈடுபட்ட நாட்டைப் போல, மற்ற நாடுகளுக்கு அதிகமான அளவில் செல்லுகளைச் (payments) செலுத்தவேண்டிய நிலையிலும் இருந்தன. அவைகள் —போர்த்தளவாடங்களை (munitions) வாங்குவதற்காக இல்லாவிட்டாலும் தாங்கள் வாங்கிய கடன்களைத் திருப்பி அடைப்பதற்காக—ஏராளமான அளவு பவுண்டுகளையும் டாலர்களையும் ஈட்ட வேண்டிய நிலையிலிருந்தன. பவுண்டிற்கும் டாலருக்கும் ஒப்பீடாக அவர்களுடைய செலாவணிகள் அதிகமான மதிப்பையுடையதொரு மட்டத்தில் (high level) வைக்கப்பட்டபோது, அவைகளுடைய கடனடைக்கும் செலவும் (cost of their debt payments) குறைவாகத் தோன்றியது. மிகைமதிப்பின் ஏனைய விளைவுகளையெல்லாம் பார்க்கும்போது இது ஒரு திடமான கைக்கோள்தானு (sound policy) என்ற பிரச்சினை எழுகிறது. இதனை விரைவில்

ஆராய்வோம். அதற்கு முன்னர், அடிப்படையான வாதத்தை நாம் ஆரம்பிக்கவேண்டு மென்பதே நமது கொள்கை.

நாட்டின் செலாவணியை மிகைமதிப்புச் செய்யும் மூன்ருவதான காரணம், அச்செலாவணியின் பன்னுட்டுச் சூழ்நிலைகளாலல்ல (not out of its international circumstances) உள்நாட்டு நிலைமையே எனக் கூறலாம். உள்நாட்டிலுள்ள காரணங்களால், நாடு பணவீக்கத்தால் அச்சுறுத்தப்படுகின்றதென வைத்துக்கொள்வோம். அந்த நாட்டின் பொருளாதாரத்தில் இறக்குமதிகளும் ஏற்றுமதிகளும் நிறையப் பங்கு பெறுகின்றனவென்றும் வைத்துக்கொள்வோம்: அங்குப் புறமதிப்பை (external value) குறைத்துவிட்டார்களெனவும் வைத்துக்கொள்வோம். அப்போது இறக்குமதிகளின் விலைகளதிகமாகும்; ஏற்றுமதி செய்பவர்களுக்கு, எதிர்பாராது வரக்கூடிய இன்பங்கள் கிட்டும். மேற்சொன்ன இரண்டு வழிகளுமே எரிகின்ற நெருப்பில் எண்ணெயை வார்த்தாற் போல, பணவீக்கத்தை வளர்க்கும். பொதுவாக, விலைகளும் கூலிகளும் அதிகரிக்கும்போது, செலாவணியின் வாங்குந்திறன் சமநிலை (Purchasing Power Parity of the currency) குறைவதோடு செலாவணியின் அகமதிப்பும் புறமதிப்பும் ஒன்றுக்கொன்று முண்டியடித்துக்கொண்டு கீழே தள்ளிக்கொண்டு செல்லப்படுவதால், ஒரு நச்சு வட்டத்தின் (vicious Spiral) ஆபத்தும் ஏற்படும். இவ்வாதங்கள் வேடிக்கையானவைகளாக இருக்கலாம். ஆனுல் இவைகள் தாம், 1930 ஆம் ஆண்டை யடுத்த பத்தாண்டுகளில் மாற்றுக் கட்டுப்பாடுகள் முதன்முதலில் தோன்றியமைக்குக் காரணமாக இருந்தன. இதற்குக் காரணம், மத்திய ஐரோப்பிய நாடுகளின் மக்கள்; பணவீக்கத்தின் பயங்கர விளைவுகளை அவர்கள் தெளிவாகத் தங்களின் ஞாபகத்தில் வைத்துக்கொண்டிருந்தனர். அவர்கள், பத்தாண்டுகளுக்கும் குறைவானதொரு காலத்திற்கு முன்பு, பணவீக்கத்தால் மிகவும் அல்லலுற்றனர். அப்போதெல்லாம் அவர்கள் தினமும், தங்களது செலாவணியின் உண்மையான மதிப்பை அளக்கவல்ல மாற்றுவீதங்களை ஆவலுடன் எதிர்பார்த்தபடியே இருப்பார்கள். 1931-32 ல் ஏற்பட்ட பண நெருக்கடியால் (Financial crisis), இந்த நாடுகள் பிழைத்திருப்பதே அரிதாக இருந்தது-அவைகள் 1920 ஆம் ஆண்டை அடுத்த பத்தாண்டுகளின் பிற்பகுதியில் சிலஆண்டுகளில் அயல் நாடுகளிலிருந்து பெற்ற கடன் உதவியினுல், அவைகளின் செலாவணிகளை உறுதியாக நிலைக்கச் செய்ய இயலாவிட்டாலும், பல வீனமாகவேனும் வைத்திருந்தன. மாற்றுவீதங்களில் ஏற்பட்ட (Fall in the exchange rates) காரணமாக ஏற்படும் பீதி (Panic)

யைச் சமாளிக்க அந்த அரசாங்கங்களால் இயலாமலிருந்தது. இந்தச் சூழ்நிலைகளில், அவைகள் பலவந்தமான கட்டுப்பாடுகளைக் (Controls) கொண்ட 'மிகைமதிப்பையே' சிறந்ததெனக்கருதி மேற்கொண்டன.

மேற்கண்ட காரணங்களே செலாவணியின் மதிப்பை, தடையிலா அங்காடியின் மதிப்பைவிட அதிகமாக வைக்கப்பட்டுள்ள தற்கு முக்கிய காரணங்களாகும். ஆனால், மிகை மதிப்பு சில கடுமையான விளைவுகளைத் தரவல்லது. ஒரு நாட்டின் செலாவணி மிகைமதிப்பு செய்யப்படும்போது (Over valued) அதாவது சமநிலை வீதத்திற்கும் அதிகமான மதிப்பில் வைக்கப்படும் போது மற்றநாடுகளைக் காட்டிலும் அந்நாட்டில் விலைகள் அதிகமாக இருக்கும். இதனால் ஏற்றுமதி வணிகம் தடைப்பட்டு, இறக்குமதிகள் பெருகும் (சுங்கவரிகள், பங்களவுகள் முதலியவைகளால் தடுக்கப்பட்டா லொழிய). ஆனால் இவைகள் மிகைமதிப்பின் ஆரம்ப அறிகுறிகளே (Symptoms). கிரேட்பிரிட்டன் 1925-1931 ஆகிய ஆண்டுகளிலும், ஃபிரான்ஸ் 1932-36 ஆகிய ஆண்டுகளிலும், இன்னும் மற்ற நாடுகள் மற்றசமயங்களிலும், மிகைமதிப்பை மிகக் கொடியதொரு பிணி யென்று நன்கு உணர்ந்தன. சில சந்தர்ப்பங்களில், மிகைமதிப்பு செய்யப்பட்ட செலாவணியை உடைய நாட்டின் பொருளாதார முழுமையும், வளர்ந்துவரும் ஒருவித பக்கவாதம் (Paralysis) பீடித்துப் பரவி வருவது தோன்றும்.

எனவே, ஒருநாடு சிலசமயங்களில் மிகைமதிப்பையும் மற்றும் சில சமயங்களின் குறை மதிப்பையும் (Undervaluation) செய்கின்றது. இவைகள் இரண்டையும் பல்வேறு சந்தர்ப்பங்களில் கொண்டுவரப்படுதலால், அந்த சந்தர்ப்பங்கள் இன்ன இன்ன நிகழ்ச்சிகளை யுடையதாக இருக்கவேண்டும் என்று முரட்டுத்தனமான கொள்கையை (dogmatism) வைத்திருப்பது அறிவீனமாகும். பொதுவான விதியொன்று, இவை யிரண்டிலும் ஒன்றைச் சூழ்நிலைக்குத் தகுந்தாற்போல் தேர்ந்தெடுக்கப்படுவதை நன்கு விளக்கும். பொதுவாகக் கூறுமிடத்து, மிகைமதிப்பு (Over valuation), ஒருநாடு, தான் அதிகமாக இறக்குமதி செய்த பண்டங்களுக்கோ (போர்க்காலத்தில் நடப்பதைப் போல்) அல்லது மற்றநாடுகளுக்கு அதிக அளவில் பட்ட கடனுக்கோ ஏராளமான செல்லுகளைச் செலுத்தும்போது, மிகை மதிப்பு அதற்குச் சாதகமாக இருக்கும். மிகைமதிப்பு நாட்டின் ஏற்றுமதிகளை அதிகச் செலவுள்ளதாகச் செய்கிற தென்பது உண்மைதான். எங்கும் ஒரேவிதமான பூரிப்பு நிலை (உதாரணமாக போர்க்

காலத்தில்)யில், அது நாட்டின் ஏற்றுமதிகளின் அளவை அதிகமாகக் கட்டுப்படுத்தாது. இந்த ஏற்றுமதிகள் நாட்டின் விற்பனை விலைகளைப் பொறுத்திருப்பதில்லை. ஏற்றுமதிக்கான பண்டங்கள் எவ்வளவு கிடைக்கின்றன, அவற்றைச் செய்வதற்கான மனித சக்தி (Man power) கிடைக்கும் அளவு ஆகியவற்றைப் பொறுத்தே யிருக்கின்றன. ஆனால், மந்தத்தின் போதும் ஒரே விதமான வாங்குவோர் அங்காடிகள் உள்ள போதும் (Universal, buyers markets) (ஒரேவிதமான வாங்குவோர் அங்காடிகளென்பன, எல்லாப் பண்டங்களும் மிகுதியான அளவில் கிடைக்கும் அங்காடிகளாம். இந்த அங்காடிகளில் வாங்குவது' (buying) என்பது எளிதான காரியம்; உற்பத்தி செய்தவற்றை விற்பதுதான் பெரிய தலைவலியாக இருக்கும்) நாட்டின் செலாவணியைக் குறைமதிப்பு (Under value) செய்தல் நலம் பயக்கும் 'போர்க்காலத்திலும் பஞ்சகாலத்திலும், உனது செலாவணியை மிகைமதிப்பு செய்; மந்த காலத்திலும், பண்டங்கள் நிறைந்து (Surfeit) மலிந்து இருக்கிறபோதும் உன் செலாவணியைக் குறைமதிப்பு 'செய்' என்பது நடை முறைக்கேற்றதொரு முரட்டு விதி (rule of thumb) யாகும்.

இந்த விதி மிகவும் முரட்டுத் தனமான விதியாகும். தனிச் சூழ்நிலைகள் (Special circumstances) குறிப்பிட்ட நிகழ்ச்சிகளில், இவ்விதியினை மாற்றி அமைக்கக்கூடும். எந்த ஒரு சந்தர்ப்பத்திலும் எல்லா நாடுகளும் ஒரே சமயத்தில் இவ்விதியினைப் பின்பற்றிவிட இயலாது. ஏனெனில் எல்லா நாடுகளும் ஒரே சமயத்தில் தங்கள் செலாவணிகளை மிகைமதிம்பு (overvalue) செய்யவோ அல்லது குறைமதிப்பு (Uuder value) செய்யவோ இயலாது. ஆயினும், 1930 ஆம் ஆண்டை அடுத்த பத்தாண்டுகளில் (nineteen-thirtees) பலநாடுகள் மிகைமதிப்பு செய்வதைத் தவிர்க்கும் நோக்கத்துடன், 'குறைமதிப்பை' வேண்டுமென்றே செய்து, மாற்று வீதங்களை நிருவகித்துவந்தன. பொதுவாக, குறைமதிப்பின் விளைவுகள், மிகை மதிப்பின் விளைவுகளுக்கு நேர் எதிரிடையானவை. குறைமதிப்புச் செய்வதால் ஏற்றுமதிகள் அதிகரிக்கப்படும்; இறக்குமதிகள் குறைக்கப்படும்; விலைகளின் பொதுவான மட்டம் (general level of priccs) நீடித்திருக்கத் துணை செய்யப்படும். ஆனல் இவ்விளைவுகளுக்கும் கண்டிப்பான வரையறைகளுண்டு. செலாவணியின் குறைமதிப்பு அந்நாட்டின் விலைகளை மற்றநாட்டின் விலைகளைக் காட்டிலும் அதிகமானதாக இருக்கச் செய்யும். இதனல் விலைகள் அங்கு அதிகரிக்குமென்றே பொருள் கொள்ள வேண்டுமென்று தேவையில்லை. மற்ற நாடுகளின் விலைகள் குறையும் என்றும் பொருள் கொள்ளலாம்.

செலாவணியில் குறைமதிப்பைச் செய்த ஒருநாடு, உலக அங்காடியில் பெரியதும் முக்கியமானதுமான ஒருபகுதியாக இருந்தால், குறைமதிப்பு அந்த நாட்டின் விலைகளை அதிகரிப்பதைக் காட்டிலும் மற்றநாடுகளின் விலைகளைக் குறைப்பதற்கே உதவி செய்யும்.[1] இதற்குமாறாக, உலக அங்காடியில் மிகக் குறைந்த அளவு ஆதிக்கம் செலுத்தும் ஒரு சிறிய நாடு 'குறைமதிப்பு' செய்வதன்மூலம் உலக விலைமட்டத்தில் (world price level) எவ்வித மான இறக்கத்தையும் உண்டு பண்ணாமல் தன்விலைகளை மட்டும் அதிகரித்துக் கொள்வதில் வெற்றி காணமுடியும். குறைமதிப்பு, ஏற்றுமதிகளின் அதிகரிப்பைத் தூண்டும்போது, சிறு நாட்டிற்கு மற்றொரு கண்கூடான நலனுமுள்ளது. பெரிய நாட்டில் ஏற்றுமதி அதிகரித்தால் அது மற்ற நாடுகளின் கவனத்தை அதிகமாக ஈர்க்கும். எனவே அந்த நாடுகள் சுங்கவரி போன்ற சுங்கச் சுவர்களை உயர்த்தி இவ்வதிக ஏற்றுமதிகளைத் தடை செய்யும். அதேசமயத்தில் சிறிய நாட்டின் வாணிபத்தில் மிக அதிக அளவு அதிகரித்தால் கூட, அதை மற்றநாடுகள் பொருட்படுத்தமாட்டா.

மற்றொன்றையும் நாம் இங்குக் கவனிக்கவேண்டும். இறக்குமதியாகிற, ஏற்றுமதியாகிற பண்டங்களின் விலைகள் மூலமேதான், செலாவணியின் குறை மதிப்பு நாட்டின் பொது விலை மட்டத்தை பாதிக்க இயலும். நாட்டின் மொத்த நடவடிக்கைகளில், அயல் நாட்டு வாணிபம் (foreign trade) குறைந்த விகித அளவு இருக்கும் நாட்டைவிட, அதிக விகித அளவு உள்ள நாட்டில்தான், இதன் விளைவு பரவலாகவும் வேகமாகவும் இருக்கும். இந்த இரண்டு நிகழ்ச்சிகளையும் மனத்திற் கொண்டு, குறை மதிப்பானது நியூசிலாந்து (New zealand) போன்ற நாட்டிற்கு, நிச்சயமாகப் பணம் ஈட்டும் சாதனமாக இருக்கும் என்ற முடிவுக்கு வரலாம். (நியூசிலாந்தின் அயல் நாட்டு வாணிபம் அந்நாட்டிற்கு முக்கியமே

1 1931ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் கிரேட் பிரிட்டன் பொன் திட்டத்தைக் (gold standard) கைவிட்ட பிறகு நடந்தது இதுதான். பவுண்டின் மதிப்பு வெகு விரைவாகக் குறைந்தது. இப்போதுதான் முதல் தடவையாக, பெரும்பாலும் 'குறைமதிப்பு' செய்யப்பட்டது. இப்போது கிரேட் பிரிட்டன் உலக அங்காடியின் ஒரு பெரும்பகுதியாக மட்டும் இருக்கவில்லை; பல பண்டங்களுக்கு, அதிலும் சிறப்பாக உணவுப்பண்டங்களுக்கு (food stuffs) இதுவே உலக அங்காடியாக இருக்கிறது. பவுண்டின் மதிப்புக் குறைந்ததானது, பிரிட்டிஷ் பொதுமக்களை அவர்கள் வாங்கும் கோதுமை, இறைச்சி, அல்லது வெண்ணெய் இவைகளுக்கு அதிக விலைகளைக் கொடுக்கும்படி செய்யவில்லை. உலக அங்காடியின் தேவை முழுவதிலும், பிரிட்டிஷ் பொது மக்களின் தேவையே மிகப் பெரும் பகுதியாதலால் இந்தப் பண்டங்கள் ஸ்டெர்லிங்கில் என்ன விலையாக இருந்தனவோ அந்த விலைகளே உலக விலைகளாயின (world prices). பவுண்டுடன் குறைமதிப்புச் செய்யப்படாத செலாவணிகளில் கூறப்பட்ட விலைகளும் ஸ்டெர்லிங் விலைகளுக்குத் தக்கவாறு இறங்கிச் சரிசெய்து கொண்டன (adjusted). அப்போது இயங்கி வந்த காரணிகளைப் பற்றிய முழுவிளக்கம் இதுவே எனக் கூற முடியாது. பவுண்டு குறைமதிப்பு செய்யப்படவில்லை யாயிலும், உலக விலைகள் (world prices) எப்படியும் குறைந்திருக்கும் என்பதும் நடைபெறக் கூடிய தொன்றேயாகும். பொன்

தவிர உலக அங்காடிக்கு முக்கியமல்ல.) இது, ஐக்கிய அமெரிக்கா போன்ற நாட்டிற்குச் சற்றேனும் வெற்றி தருவதில்லை. ஐக்கிய அமெரிக்காவின் அயல்நாட்டு வாணிபம் உலக வாணிபத்தில் ஒரு கணிசமான விகித அளவு இருப்பினும், அமெரிக்க மொத்த உற்பத்தியோடும் வாணிபத்தோடும் ஒப்பிடும்போது மிகக் குறைந்த முக்கியத்துவமே பெற்றிருப்பதால் குறைமதிப்பு (under valuation) அங்கு வெற்றிபெறுவது கடினம். ஒரு தொழில் நாட்டைவிட (industrial country) முக்கிய உணவுப் பண்டங்கள் (staple foodstuffs) அல்லது கச்சாப் பொருள்கள் ஆகியவற்றைப் பெரிதும் ஏற்றுமதி செய்யும் நாடுதான் 'குறை மதிப்பு' செய்வதில் பெரிதும் ஈடுபடும். ஏனெனில் மந்தகாலத்தில் செய்பொருள்களில்விட (manufactured goods) இவைகளில்தான் உலக அங்காடியின் விலைகள் வழக்கமாகக் குறைகின்றன. கச்சாப் பொருளை ஏற்றுமதி செய்யும் நாடு தனது செலாவணியைக் குறைமதிப்புச் செய்தால், தனது சொந்த நாட்டின் செலாவணியின் (in its own national currency) தனது முக்கியப் பொருள்களின் விலைகள், குறைவதைத் தவிர்த்துப் பாதுகாக்க முடியும். இதனால் இறக்குமதியாகும் பொருள்களின் விலை அதிகமாகும்; கச்சாப் பொருள்களை உற்பத்தி செய்பவர்களின் வாங்குந்திறனும் (purchasing power) குறையும். நாடு, தான் வாங்குகின்ற பண்டங்கள் சிலவற்றின் விலைகளை அதிகரிப்பதன் மூலம் வாங்குந்திறனைக் குறைப்பதானது, அது விற்கும் பண்டங்கள் பலவற்றின் விலைகளைக் குறைப்பதைவிட, மிகக் குறைந்த அளவு பயனையே தரவல்லது. முன்னர் கூறப்பட்டுள்ள முறை மக்களின் பண வருமானங்களைப் பாதிப்பதில்லை. பின்னர் கூறப்பட்டுள்ளது, அவைகளை பாதிக்கும்.

---

திட்டத்தைவிட்டுப் பவுண்டு விலகுவதற்கு முன்னுல் உள்ள பன்னிரண்டு ஆண்டுகளைவிட, பினனுலுள்ள பன்னிரண்டு ஆண்டுகளில்தான் பொன் நாடுகளில்தான் (gold countries) (உதாரணமாக ஐக்கிய அமெரிககா) விலைகள் வெகு வேகமாகக் குறைக்கின்றனவென்பதற்கு உண்மையில் ஒரு வித சான்றும் (evidence) இலலை. ஆனுல், பவுண்டின் மதிப்பிறக்கம் (fall) பொன் விலைகள் (gold prices) மீண்டும் இறங்குவதற்குத் தனியான காரணமா அலலவா அல்லது முக்கியமான காரணமா அல்லவா என்ருல், பல காரணங்களில் அது ஒன்று எனத் தெளிவாகக் கூறலாம். எப்படியிருந்த போதிலும் ஒரு முக்கியமான வணிக நாடு, தனது செலாவணியைக் குறைமதிப்புச் செய்வதன் மூலம் விலைகளை நெம்பு கோல் வைத்துக் கிளப்புவதென்பது இயலாது. நெம்புகோலின் ஆதாரத்தை (fulcrum) அழுத்துவதன் மூலம் (depressing) —அதாவது உலக விலை மட்டம் (world price level) —சில விளைவுகளைப் பெறலாமென்பது பெரும்பாலும் நிச்சயமானதோர் உண்மையாகும். மிக நீண்ட நெம்புகோலும் உறுதியான ஆதாரமும் (fulcrum) கிடைத்தால் உலகத்தைக்கூட உயரத் தூக்க முடியும் என்று ஆர்க்கிமிடீஸ் (Archimedes) என்னும் அறிவியல் கலைஞர் கூறினுர். பூமியின் மீது நெம்புகோலை வைத்து சந்திரனைத் தூக்க அவரால் முடிந்தாலும் முடியலாம். சந்திரனில் நெம்புகோலை வைத்து பூமியைத் தூக்குவது அவரால் இயலாது.

கடன்பட்டிருக்கும் நாட்டிற்கான பல்வேறு கைக்கோள்களில் சுவைமிக்க தொன்றுமிருக்கிறது (an interesting point). அயல் நாட்டுச் செலாவணியில் இவ்வளவு தொகை என்று கூறப்பட்டுள்ள கடனை உடைய ஒரு கடன்காரநாடு, தனது செலாவணியின் மதிப்பை அதிக மட்டத்தில் (high level) வைத்திருப்பதன் மூலம் வட்டியினுல் ஏற்படும் செலவைக் குறையச் செய்யலாம் என்பதை நாம் ஏற்கெனவே கண்டோம். ஆனுல் மற்றெருபுறம், கடனுளி நாடு (debtor country) கச்சாப் பொருளை உற்பத்தி செய்யும் நாடாகவும், சிறிய நாடாகவும், அயல்நாட்டு வாணிபத்தை முக்கியமாகக் கருதாததாகவும் இருக்குமானுல் அது தன்னுடைய செலாவணியைக் குறைமதிப்புச் செய்ய விழைவதற்கு மூன்று மடங்கு காரணங்கள் இருக்கும். இவைகளில் எந்த வாதம் நிலை பெறவேண்டும்? எந்தப் பொதுவான விடையும் இதற்குக்கூற முடியாது. சிலநாடுகளில் அந்த நாடுகளின் செலாவணிகள் குறை மதிப்புச் செய்யப்படும் வரையில், அவைகளை அந்நாடுகள் மதிப் பிறக்கம் (pushing down) செய்யுமானுல், அது அவைகளின் ஏற்று மதிகளை அதிகரிக்கும். இதனுல் நாட்டின் சுபிட்சம் (prosperity) அதிகரிக்கும். அதிகரித்துள்ள சுபிட்சத்தால் அயல்நாட்டு நாட்டுச் செலாவணிகளை வாங்கிக் கடனையும் வட்டியையும் அடைக்க இயலும். இவ்வாறு கடனையும் வட்டியையும் திருப்பி அடைத்தற்கு, வரித்தண்டலர் (Tax collector) அதிகமான அளவு உள்நாட்டுச் செலாவணிகளை விதிக்க நேரினும், இம்முறையில் கடனையும் வட்டியையும் திருப்பி அடைப்பது எளிதாகவேயிருக்கும். 1929ஆம் ஆண்டிற்குப் பிறகுள்ள மந்த ஆண்டுகளில் (depression years) நாடுகள் பலவற்றுள்ளும் ஆஸ்திரேலியா, நியூசிலாந்து ஆகிய இரு நாடுகளே இவ்வழிகளைப் பின்பற்றி வெற்றிகண்டன. ஆனுல் அதே ஆண்டுகளில் ஹங்கேரி (Hungary)யைப் போன்ற நாடுகள், பவுண்டு, டாலர் இவற்றின் மிகுதியான கடன் சுமையி லிருந்தமையாலும், பங்களவுகள் (Quotas), சுங்கத் தடைகள் ஆகியவற்றல் கட்டுண்டு கிடந்தமையாலும், அவைகள் குறை மதிப்புச் செய்திருக்கும் பட்சத்தில் கடனையும் வட்டியையும் திருப்பி அடைப்பது அவைகளுக்குக் கடினமாக இருந்திருக்குமே தவிர, எளிதாக இருந்திருக்க முடியாது.

மாற்றுக் கைக்கோளின் நெறியைப்பற்றி (morality) ஆராய்வது இங்கு நமது வேலையல்ல. இவ்விடத்தில் நெறியைப் பற்றிய சர்ச்சைகள் அவசியமற்ற குறுக்கீடுகளா (interlopers)கத் தோன்றும். எனினும், குறைமதிப்பு—வேண்டுமென்றே செய்த குறைமதிப்பு—ஒரு நெறியற்ற கைக்கோளே (an immoral policy). மிகவும் பகுத்தறிவுள்ள (purely rational) இவ்வுலகத்தில், அதை

மிகவும் சுயநலமானது (selfish) என்று சொல்வதே பொருத்த மானது. பொருளாதாரக் கருத்தின்படி நாடுகளனைத்தும் ஒன்றுக் கொன்று அங்கத்தினர்களாக இருப்பதால், குறைமதிப்பினுல் ஒரு நாடு அடையும் எந்த நலன்களும் (advantages) மற்ற நாடுகளின் நலன்களைப் பறித்து அடையக்கூடியனவாகவே யிருக்கின்றன. ஆனுல் தற்போதுள்ள உலகத்தில் எந்தத் தூய சிந்தனையும் சட்டத் தால் ஆதரிக்கப்பட்டுள்ளது. குறைமதிப்பு என்னும் விளையாட்டை யார் வேண்டுமானுலும் ஆடலாம் என்றிருக்கிறது. ஆனுல் இந்த ஆட்டத்தை ஒவ்வொருவரும் விளையாடும்போது, செலாவணிகளை அவைகளின் உண்மை மதிப்பிற்கும் கீழ் எவ்வளவு கீழே தள்ள லாம் என்னும் போட்டியில் ஈடுபடுகின்றன. விரைவில் இந்தப் போட்டி ஒரு பந்தயமாக (race) மாறி, அதில் எல்லாச் செலாவணி களுமே தங்கள் மதிப்பை இழந்துவிடுகின்றன. ஆனுல் சமீப காலங்களில், இந்தப்போட்டி மிக மும்முரமாக இருந்தது. ஆயினும் இதன் வெறியாட்டமும், அது தரவல்ல அழிவும், இனி போட்டியிடு பவர்களைத் தடுத்து நிறுத்துவதற்குப் போதுமானவைகளாக இருந்தன.

மாற்று நிருவாகத்தின் (exchange management) மூன்ருவது நோக்கம்—ஏற்ற இறக்கங்களைத் தடுத்தல்—அவசியம் விளக்கப் படவேண்டும். கோட்பாட்டளவில் இது மெச்சத் தகுந்ததாகவே உள்ளது. அங்காடி இதன் நிலைத்த தன்மை (stability) இணக்க மான தன்மை (flexibility) ஆகிய நலன்களைத் துய்க்கும். ஆனுல் நடைமுறையில் இதனை விளக்குவதும் கடைப்பிடிப்பதும் கடினம். இதனுடைய குறிக்கோள் தடையிலா அங்காடியின் (free market) தற்செயலான அல்லது தாற்காலிகமான ஏற்ற இறங்கங்களை, மாற்றுவீதங்களின் மாற்றங்களில் (பல்வேறு செலாவணிகளின் முறையான மதிப்புகளில் ஏற்படும் மாற்றங்களை யொத்த மாற்று வீத மாற்றங்கள்) குறுக்கிடாமல், தடுத்து நிறுத்துவதே இதன் நோக்கமாகும். முன்னர் நடந்தவற்றைப் பார்த்து (looking backwards) எது தாற்காலிக ஏற்ற இறக்கம், எது தாற்காலிக ஏற்ற இறக்கமல்ல யென்பதை எளிதில் கூறிவிடலாம். ஆனுல் அக் கைக்கோளின் (policy) மேலாண்மையாளர்கள் (managers) திரும்பிப்பாராமல், தங்கள் முடிவுகளைக் கண நேரத்தில் எடுக்க வேண்டியிருக்கிறது. மேலும், தாற்காலிக ஏற்ற இறக்கம் என்பதை எளிதில் தெரிந்துகொள்ள எந்தவிதமான தனிச் சிறப் பான பண்புகளும் அதனிடம் இல்லை. இந்தச் சூழ்நிலைகளில் ‘ஏற்ற இறக்கங்களைத் தவிர்த்தல்’ என்பது கோட்பாட்டளவில் இல்லாவிட்டாலும் நடைமுறையில் சந்தர்ப்பவாதியின் செயலாகத் தானிருக்கும். இவ்விதக் கைக்கோளுக்கு மிகவும் தெரிந்த

உதாரணம் ஒன்று உண்டு. 1932ஆம் ஆண்டு முதல் 1939ல் போர் ஆரம்பமாகும் வரையிலுள்ள ஆண்டுகளில் மாற்றுச்சமன் கணக்கு (Exchange equalization account)என்பதின் துணைகொண்டு இங்கிலாந்து கடைப்பிடித்துவந்த கைக்கோளாகும். இக் கணக்கின் (account) செயல்முறையின் நோக்கம் பவுண்டை மிகைமதிப்பு செய்வதோ அல்லது குறைமதிப்பு செய்வதோ அல்ல. தாற்காலிக மான ஏற்ற இறக்கங்களைச் சமன் செய்வதே. இந்த ஆண்டுகளில் பவுண்டில் குறைமதிப்பும் மிகைமதிப்பும் பலதடவைகள் செய்யப் பட்டன என்று நம்புவதற்கு நடைமுறையில் காரணங்கள் இருக் கின்றன. இங்கே, பத்தாவது அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள 1947ஆம் ஆண்டு மார்ச் மாதம் ஆரம்பிக்கப்பட்ட பன்னாட்டுப் பண நிதி (International monetary fund)யைப் பற்றிச் சற்றுக் கூறுவதும் பொருத்தமுடையதாகும். இதன் நிபந்தனைகளின்படி, 'அடிப்படையான சமன்கேடு' (fundamental disequilibrium) என்கிற நிலையிருப்பதால் செலாவணியின் மதிப்பு வீதத்தில் மாற்றம் செய்வது தேவையாக இருக்கிறதென்பதை பன்னாட்டுப் பண நிதியி னிடம் எடுத்துச் சொல்லி நம்பவைக்கும் வரையிலும், அரசாங் கங்கள் தங்களுடைய செலாவணிகளின் மதிப்பை நிலையானதாக வைத்திருக்கவேண்டுமென்பதையும் இங்கே குறிப்பிடவேண்டும். இதுவே ஏற்ற இறக்கங்களின் தடுப்புக் கைக்கோளின் பொதுப் படையான அமைப்பாகும். அது எப்படி வேலைசெய்யும் என்ற அனுபவம் நமக்கில்லையாயினும், வீதத்தை மாற்றவேண்டி 'நிதி'க்கு மனுக்கள் அரியனவகாச் சிலசமயங்களில் தான் வந்தன என்பதையும் சிறு அளவிற்கு மிகைமதிப்பு அல்லது குறைமதிப்புச் செய்வதைப்பற்றி அவைகள் பொருட்படுத்தவில்லையென்பதையும் இவைகள் தாற்காலிகமானவை என்பதை அவைகள் நம்பும் வரை யிலாவது ஊகித்தறிய வேண்டும்.

## மறைமுகக் கட்டுப்பாடு
(Indirect Control)

மாற்று நிருவாகத்தின் நோக்கங்களை ஆராய்ந்தோம். தற்போது முறைகளை (methods) ஆராய்வோம். மேலாண்மையை (management) சக்தி வாய்ந்ததாகச் (effective) செய்வதற்கு ஒரே வழி, மாற்று அங்காடியில் (exchange market) செலாவணிகளுக் கான தேவையையும், செலாவணிகளின் அளிப்பையும் மேலாண்மை தன் ஆளுகையின்கீழ்க் கொண்டுவருவதன் மூலமே யாகும். அங்காடி எவ்வளவுதான் அதிகமாகக் கட்டுப்படுத்தப்பட்ட போதிலும், எந்த ஒரு நாளிலாவது, விற்கப்படும் பவுண்டுகளின் எண்ணிக்கை வாங்கிய பவுண்டுகளின் எண்ணிக்கைக்குச் சமமாக

இருக்கவேண்டும். கட்டுப்பாடு செய்யும் அரசாங்கங்கள் இரண்டு பரந்த மாற்று வழிகளைக் (alternations) கொண்ட கைக்கோளை யுடையனவாக இருக்கின்றன. தடையிலா அங்காடியில் தேவையும் அளிப்பும் சமமாக இருக்கின்ற மாற்றுவீதம் அவைகளுக்குப் பிடிக்கவில்லையெனில், அவைகள் விரும்பும் செலாவணிகளின் தேவை அல்லது அளிப்பைக் கூடுதலாக்க அவைகளே தங்கள் சொந்த முறைமையில் அங்காடிக்கு வரக்கூடும். அல்லது இருக்கின்ற தேவை அல்லது அளிப்பை அங்காடிக்குச் செல்வதினின்றும் தடுக்கவும் கூடும். உதாரணமாக பிரிட்டிஷ் அரசாங்கம் பவுண்டின் மதிப்பை அதிகரிக்கச் செய்யவேண்டும் என்று விழைகின்றதென வைத்துக்கொள்வோம். தானே அங்காடிக்குச் சென்று பவுண்டுகளை (pound) ஏலம் கேட்பதன் மூலம் பவுண்டுகளின் தேவையை அதிகப்படுத்தலாம். அல்லது அங்காடியில் பவுண்டுகளை அளிக்க முன்வரும் சிலரை அவ்வாறு செய்ய வொட்டாமல் தடுப்பதன் மூலமும் தேவையை அதிகப்படுத்தலாம். அதே போன்று, பிரிட்டிஷ் அரசாங்கம் பவுண்டின் மதிப்பைக் குறைக்க விழைந்தால், தனது சொந்த முறையில் பவுண்டுகளை விற்க முன்வரலாம் அல்லது பவுண்டுகளைத் தொடர்ந்து தேவைப்படும் மக்களில் சிலரை, தேவைப்படுவதினின்றும் தடுக்கலாம். இவ்விரு முறைகளுக்குமுள்ள பெரிய வேறுபாடு என்னவெனில் ஒன்று அங்காடியின் பேரங்களை (transaction) அதிகப்படுத்துகிறது; மற்றொன்று கட்டுப்படுத்துகின்றது. ஒன்று அங்காடியை, வருவோர் அனைவருக்கும் திறந்துவிடுகிறது; மற்றொன்று அங்காடியில் பொது மக்கள் தாராளமாக வருவதில் குறுக்கிடுகிறது.

இந்த இரு பெரும் கட்டுப்பாட்டு முறைகளைத் (two broad methods of control) தலையிடு (Intervention) தடை (Restriction) என்னும் இருவேறு சொற்களால் வேறுபடுத்திக் கூறலாம்[1]. இவ்வத்தியாயத்தின் அடுத்த இரு உட்பிரிவுகளிலும் (sections) மாற்று வீதத்தைத் தங்களின் கட்டுப்பாட்டின்கீழ்க் கொண்டுவரும் தங்க

1 மாற்றுக் கட்டுப்பாட்டின் (exchange) ஏராளமான பாகுபாடுகளை (elaborate classifications), வாசகர், பால் என்சிக் (Paul Einzig) எழுதியுள்ள மாற்றுக்கட்டுப்பாடு என்னும் நூலில் (மாக்மிலன் பதிப்பு, 1934ஆம் ஆண்டு) காணலாம். இந்த அத்தியாயத்தில் கையாளப்பட்டுள்ள பல பெயர்கள் (nomenclature) இந்நூலிலிருந்து எடுக்கப்பட்டவையே. இந்நூலில் டாக்டர் என்சிக் நாற்பத்தொரு வெவ்வேறு முறைகளைக் குறிப்பிடுகிறார். கடந்த ஓரிரண்டு ஆண்டுகளில் 'மாற்றுக் கட்டுப்பாடு' (exchange control) என்னும் இச்சொல் 'தடை' (restriction) என்னும் சொல்லின் கருத்துப்படவே பயன்படுத்தப்பட்டு வந்திருக்கிறது. இதற்குப்பதிலாக உள்ள மேலாண்மை (management) என்னும் சொல் குழப்பம் தோன்றக்கூடிய ஓரிரண்டு இடங்களில் கையாளப்பட்டிருந்த போதிலும், மாற்றுக் கட்டுப்பாடு (exchange control) என்னும் இச்சொல் இவ்வத்தியாயத்தில் பரந்த கருத்தில் தான் கையாளப்பட்டுள்ளது.

ளின் நோக்கத்தை அரசாங்கங்கள் நேரடியாக அடையும் முறைகளைப்பற்றி ஆராய்வதுடன், இவ்விருமுறைகளையும் ஒவ்வொன்ருக ஆராய்வோம். ஆனுல், பிடிகையை (preliminary) இவ்விளைவுகளை அடையும் சில மறைமுக முறைகளையும் நாம் சற்று ஆராய வேண்டும்—அதாவது வேறு பல காரணங்களுக்காக, இம்முறைகள் பயன்படுத்தக்கூடியவை ஆயினும் மாற்றுவீதங்களில் அவைகளால் ஒரு விளைவு இருக்கத்தான் செய்தது.

அயல்நாட்டு மாற்று அங்காடியை அடிக்கடி பாதித்து விளைவுகளை உண்டுபண்ணும் மற்ருெரு சாதனம், சுங்கவரி விதித்தல் அல்லது இறக்குமதிகளின் அளவுகளைக் குறைக்கும் வரையறைகள் (பங்களவுகள்). இச் சாதனம், அதனைக் கையாளும் நாட்டின் செலாவணியின் அளிப்பை (supply of the currency) அயல்நாட்டு மாற்று அங்காடியில் குறையும்படி செய்கின்றது. மேற்சொன்ன சாதனங்களைக் கையாளுவதால் குறைவான இறக்குமதிகளே செய்யப்பட்டு, அந்த இறக்குமதிகளுக்கான செல்லுகளைச் செலுத்துவதற்கு, குறைந்த அளவு அயல்நாட்டுச் செலாவணிகளே வாங்கவேண்டியிருப்பதால், இந்நிலை ஏற்படுகிறது. எனவே, இச் செலாவணியையுடைய நாடு, அதன் மதிப்பை உயர்த்துவதற்கு, சுங்கவரியை விதிப்பதற்கு முனையும். இதைப்போலவே மற்ற நாடுகள் ஒவ்வொன்றும் சுங்கவரிகளை விதித்து, அதன்மூலம் தங்கள் செலாவணிகளின் மதிப்பை அதிகரித்துக்கொள்ளக்கூடும். உண்மையில், இப்படி ஒவ்வொரு நாடும் தனது வரியைச் சமமாக அதிகரித்துக்கொண்டால், பிறகு இந்நாடுகளின் செலாவணிகளின் ஒப்பீடான மதிப்பில் (relative value) எவ்வித மாற்றமுமிருக்காது. இறக்குமதி வரி (import duty) ஒரு நாட்டில் இருக்குமானுல், அது அந்த நாட்டின் செலாவணியின் மதிப்பை, அவ்வாருன இறக்குமதி இல்லாதிருக்கும் போது இருந்த மதிப்பைவிட (மற்றக் காரணிகள் யாவும் மாருதிருக்கும் போது), அதிகரிக்கச் செய்யும். இக் கருத்தைக் கொண்டு, ஏற்றுமதிகளின்மீது விதிக்கப்படும் வரியானது, செலாவணியின் மதிப்பைக் குறையச் செய்யும் எனக் கூறலாம். ஏற்றுமதிகளுக்குக் கொடுக்கப்படும் அரசாங்கக் கொடை (bounty) செலாவணியின் மதிப்பை நிச்சயமாக உயர்த்தும்; இறக்குமதிகளின்மீது அளிக்கப்படும் அரசாங்கக் கொடை (அப்படியேதாவது கொடுக்கப்படுகிறது என்று கற்பனை செய்து பார்த்தால்) செலாவணியின் மதிப்பைத் தாழ்த்தும். ஏற்றுமதி அரசாங்கக் கொடைகள் (export bounties) அடிக்கடி கொடுக்கப்படுவன; ஏற்றுமதி வரிகள் என்பவையும் தெரியாதன அல்ல. ஆனுல் அவைகள் சற்று அரிதானவைதாம். இறக்குமதி அரசாங்கக் கொடைகள் அநேகமாக எங்குமில்லையென்றே கூறவேண்டும்.

பல்வேறு நாடுகள் தங்கள் நாடுகளில் வட்டிவீதங்களை அதிகரிப்பது அயல்நாட்டுச் செலாவணிகளின் தடையிலா அங்காடியில் சற்று அதிகமான சூழ்ச்சித் திறம் வாய்ந்த (subtle) மாற்றத்தை உண்டுபண்ணுகின்றது. இவ்வாறுன அயல்நாட்டு மாற்று அங்காடியில் பெருவாரியான பேரங்கள் (a large number of transactions) பண்டங்கள், பணிகள் ஆகியவற்றை வாங்குவதிலும் விற்பதிலும் இல்லை. மூலதனப்பெயர்ச்சிகளிலும் (capital movement) முதலீடுகளிலுந்தான் உள்ளது. லண்டனில் வட்டிவீதத்தை அதிகரிப்பதானது, மற்றநாடுகளிலிருந்து ரொக்கநிலை மூலதனத்தையும் (liquid capital) பாங்கு நிதிகளையும் (banking funds) லண்டனுக்கு ஈர்க்கும். இது பிரிட்டிஷ் பாங்குகளும், பாங்கர்களும் தங்கள் ரொக்கநிலை நிதிகளை (liquid funds) வெளிநாடுகளில் முதலீடு செய்வதைவிட, தாய்நாட்டில் வைத்திருப்பதை இலாபகரமாகச் செய்கின்றது. வட்டிவீதங்களின் உயர்வு முதலீடுகளினின்றும் வரும் வருவாயினைப் பாதிக்காதவரையில்,பிரிட்டனின் முதலீடுசெய்வோரை, வெளிநாடுகளில் தங்கள் முதலீடுகளைச் செய்யாமலிருக்கச் செய்யலாம். ஒரு கடனுளிநாடு தனது வட்டிவீதத்தை அதிகரிக்குமானுல், பெருமளவு அயல்நாட்டுப் பணத்தை, அதன் தொழில்களில் முதலீடு செய்வதற்குச் சிலசமயங்களில் (மூலதனமானது பல நாடுகளுக்கும் தாராளமாகப் பெயர்ந்து செல்லக் கூடியவாறு இருக்குமானுல்) ஈர்க்கக் கூடும். இதனை 1924-1930 ஆண்டுகளுக் கிடையேயுள்ள ஆண்டுகளில் ஜெர்மனி அடைந்த அனுபவம் நமக்குத் தெளிவாக எடுத்துக்காட்டுகிறது. எனவே, வட்டிவீத அதிகரிப்பானது, பலவழிகளில் செலாவணியின் தேவையை அதிகரித்தது, அதன் அளிப்பைக் குறையச் செய்கின்றது; இதன்மூலம் செலாவணியின் மதிப்பையும் அதிகரிக்கச் செய்கின்றது.

மாற்றுவீதங்களைக் கட்டுப்படுத்தும் இந்த மறைமுக முறைகளைப் பற்றிச் சில கருத்துக்களை இங்கே கூறுவோம். முதலாவதாக, மாற்றுக் கட்டுப்பாடு (exchange control) தவிர்த்த மற்றக் காரணங்களுக்காகவும் அவை பயன்படுத்தப்படுகின்றன. உதாரணமாக, சுங்கவரிகள் பெரும்பாலும் சில தொழில்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதற்கே விதிக்கப்படுகின்றன; அல்லது நாட்டுக் கருவூலத்தின் (National Treasury) வருமானத்திற்காகவும் விதிக்கப்படுகின்றன. ஏற்றுமதி வாணிபத்திற்கு (exporting trades) உதவி அளிப்பதற்காக அரசாங்க நன்கொடைகள் (bounties) அளிக்கப்படுகின்றன. உள்நாட்டுக் கடன் நிலையைக் (domestic credit situation) கட்டுப்படுத்தும் கைக்கோளின் ஒருபகுதியாக வட்டிவீதங்கள் பல்வேருக மாற்றியமைக்கப்படுகின்றன. ஆனுல்

இவைகளனைத்தும் மாற்றுவீதத்தைக் கட்டுப்படுத்துவதற்கென்றே பயன்படுத்தப் படலாம்; அந்த நோக்கத்துடன் அவைகள் கடைப் பிடிக்கப்பட்டாலும் இல்லாவிட்டாலும், அயல்நாட்டு மாற்று அங்காடியின் போக்கில் அவை நிச்சயமான விளைவை (effect) ஏற்படுத்துகின்றன. இரண்டாவதாக, அந்த விளைவு மறைமுக மானது; அங்காடியின் தன்னுரிமை (freedom) குறுக்கிடப்படுவ தில்லை; மாற்றுவீதம் நேரடியாக நிருவகிக்கப்படுவதைக் (directly managed) காட்டிலும் கட்டுப்படுத்தப்படுகிறது (influenced) என்றே கூறவேண்டும். மூன்றாவதாக, அவைகள் மிகவும் கட்டுப்பாடு களுடன்தான் இயங்கிவருகின்றன. ஒரு சில நாடுகளே தங்கள் இறக்குமதிகளை முற்றிலும் தவிர்த்துக்கொள்ள முடியும்; அல்லது மிகவும் குறைத்துக்கொள்ள முடியும். ஏனெனில் ஒருசில நாடுகளே அவைகள் விரும்பும் எல்லாப் பொருள்களையும் உற்பத்தி செய்து கொள்ள இயலும். மிகக் கடுமையான இறக்குமதிக் கட்டுப்பாடும் அதைப் போன்ற, பிறநாடுகளின் இறக்குமதிக் கட்டுப்பாடுகளால் செயலிழக்கும். அரசாங்கம் பணம் உள்ள வரையில்தான் ஏற்று மதிக்குக் கொடுக்கும் கொடைகளை வழங்கும். வட்டிவீதங்களில் ஏற்படுத்தும் மாறுதல்களும் (changes) வரையறைகளுக்குட்பட்ட வையே. உள்நாட்டு வியாபாரத்தை (domestic business) கடுமை யாகத் தடை செய்யுமளவிற்கு வட்டிவீதத்தை அதிகரித்துவிட முடியாது; வட்டிவீத அதிகரிப்பால் ஏற்படும் விளைவு, அயல்நாடு களும் இதைப்போன்ற வட்டிவீத அதிகரிப்புச் செய்யும்போது, செயலிழந்து நிற்கும். அதிகமான வட்டிவீதங்களால் தூண்டப் பட்ட அதிக அளவு மூலதனப் பெயர்ச்சிகள் (increased capital movements), பிறநாடுகளின் மெதுவான வட்டிவீத அதிகரிப்பாலும் மூலதனம் நாளடைவில் திருப்பி அடைக்கப்படுவதாலும் (repayment) சமீபத்திலோ அல்லது சற்றுக் காலங்கடந்தோ செயலிழக்கும்.

இம் மறைமுகக் கட்டுப்பாடுகள், அவைகள் அதிகமான அளவில் இருந்தபோதிலும், மாற்றுவீதங்களைத் தன் நெருக்கமான கட்டுப்பாட்டின் கீழ்க் கொண்டுவர விழையும் ஒரு அரசாங்கத் திற்கு போதுமான வலிமையும் பொறுத்தமானவையுமான ஆயுதங் களாக இருக்கவில்லை. எனவே, நேரடியான நிருவாக முறைகளை (direct methods of management) இனி நாம் ஆராயவேண்டும்.

## தலையீடு
## (Intervention)

தனது செலாவணியின் மதிப்பை அதிகப்படுத்துவதற்கோ அல்லது குறைவாக வைத்திருக்கும் பொருட்டோ ஓர் அரசாங்கம்

அயல்நாட்டு மாற்று அங்காடியில் தலையிடக்கூடும். செலாவணியை ஒரு நிலையான மாற்றுமதிப்பில் வைத்திருக்கும் நோக்கத்துடன் தலையீடு (intervention) கைக்கொள்ளப்படும்போது, செலாவணி அம்மதிப்பில், 'நிலைப்படுத்தப்படுகின்ற' தென்று பொருள் (Pegged). 'நிலைப்படுத்தல்' (Pegging) என்பதே அடிக்கடி கைக் கொள்ளப்படும் தலையீடாம். 1914-18 ஆம் ஆண்டுகளில் பிரிட்டிஷ் அரசாங்கம் பவுண்டு ஸ்டெர்லிங்கை $ 4. 76½ என்னும் மாற்றுமதிப்பில் நிலைப்படுத்தியது (Pegged). 1919 ஆம் ஆண்டு, நிலைப்படுத்தல் திரும்பப் பெற்றபோதும் (withdrawn) அதனால் ஓராண்டு காலத்திற்குள்ளாகவே $ 3.40க்கு பவுண்டு ஸ்டெர்லிங்கின் மதிப்புக்குறைவடைந்த போதுந்தான், இது எத்தகைய மிகைமதிப்பைக் (Over valuation) கொண்டது என்று தெரிய வந்தது. 'நிலைப்படுத்தல்' (Pegging) என்றாலே சாதாரணமாக 'மேல் நிலைப்படுத்தல்' என்றே பொருள். 1930 ஆம் ஆண்டை அடுத்த பத்தாண்டுகளில் (nineteen thirties) சில அரசாங்கங்கள் தங்கள் செலாவணிகளை ஒரு நிலையான (fixed) குறைமதிப்பில் (under-valuation) வைத்திருக்கும் பழக்கம் வளர்ந்துவந்தது. இந்தப் பழக்கத்தைக் குறிப்பிடுவதற்குக் 'கீழ் நிலைப்படுத்தல்' (Pegging down) என்னும் சொல்லை நாம் உண்டாக்கிக் கொள்ளலாம். 1933 ஆம் ஆண்டு நியூசிலாந்து பவுண்டிற்கும், பவுண்டு ஸ்டெர்லிங்கிற்குமுள்ள மாற்றுவீதம் 125 நியூசிலாந்து பவுண்டு = £ 100 (அல்லது 1 நியூசிலாந்து பவுண்டு 16 ஷில்லிங் ஸ்டெர்லிங்) என்று தீர்மானிக்கப்பட்டது. இந்த வீதம் அமலுக்கு வந்த பிறகுள்ள ஒருசில ஆண்டுகளில், நியூசிலாந்து பவுண்டிற்குத் தடையிலா அங்காடியில் அநேகமாக அதிகமான மதிப்பே கொடுக்கப்பட்டிருக்கும். நியூசிலாந்து ஆட்சியாளரின் மேற்படி செயல் தான் 'கீழ்நிலைப்படுத்தலின்' (Pegging down) ஒருவகையாகும்.

'நிலைப்படுத்தல்' (Pegging) 'கீழ்நிலைப்படுத்தல்' (Pegging down) ஆகிய இரண்டுமே நிலையான வீதங்களில் செலாவணியை வைத்திருத்தலைக் கொண்டுள்ளன. தலையிடென்பது நிலையான வீதங்களைத்தான் குறிக்கும் என்பதில்லை. நிலையானவிதம் என்பதைப்பற்றிப் பொருட்படுத்தாமலேயே அரசாங்கம், செலாவணியின் மதிப்பை நிலைபெறச் செய்வதற்குத் துணைசெய்யலாம்; அல்லது அதன் மதிப்பைத் தாழ்த்தலாம். ஆனால் இவைகளில் எந்த முறையிலும் செயல்முறையின் கோட்பாடுகளும் (Principles) செய்முறையும் (technique) ஒன்றாகவே யிருக்கின்றன. 'நிலைப்படுத்தல்' (Pegging), கீழ்நிலைப்படுத்தல் (Pegging down) ஆகிய இவையிரண்டையும் நாம், தலையீட்டின் (intervention) இலட்சிய (typical) உதாரணங்களாகக் கருதுவது முறையாகும்.

அரசாங்கமானது, தனது செலாவணியைத் தடையிலா அங்காடியில் பெறக்கூடிய மதிப்பைவிட அதிகமான மதிப்பில் 'நிலைப்படுத்துமானால்' (Pegging), செலாவணியின் தலையிடா அங்காடியின் தேவை (Free Market Demand) அந்த மாற்று வீதத்தில், அச்செலாவணியின் அளிப்பை விடக் குறைவாக இருக்கவேண்டுமென்று பொருள் கொள்ளவேண்டும். அந்த அரசாங்கம் அளிப்பைக் குறைக்க விழையவில்லையெனில் (அப்படிக் குறைக்குமானால் அது அங்காடியின் தன்னுரிமையில் தலையிடுவதையும் செலாவணித் 'தடையை' (restriction) ஏற்படுத்துவதையும் உணர்த்தும். செலாவணி குறைத்தல் என்பதை நாம் அடுத்த உட்பிரிவில் பார்ப்போம்), 'நிலைப்படுத்தல்' வீதத்தில் (Pegged rate) உள்ள செலாவணியின் அளிப்பு முழுவதையும் எடுத்துக்கொள்ளுமளவிற்குத் தேவையை அதிகரிக்கவேண்டும். பிரிட்டிஷ் அரசாங்கம், 1914-18ஆம் ஆண்டுகளில் நடந்த போரின்போது, பவுண்டிற்கு அது நிர்ணயித்த அதிகமான மதிப்பைப் பாதுகாக்க (Presence) விரும்பியதால், அங்காடி பெற்றுக் கொள்ளாத பவுண்டுகளனைத்தையும் அந்த வீதத்தில் வாங்கிக் கொள்வதற்குத் தயாராக இருக்க வேண்டியிருந்தது; அவைகளை வாங்குவதற்கு, அவைகளுக்கு மாற்றாக அயல் நாட்டுச் செலாவணிகளைக் கொடுக்கத் தயாராக இருக்க வேண்டியிருந்தது. இதற்கு மாறாக, 'கீழ்நிலைப்படுத்தலில்' (Pegging down- அங்காடியில் செலாவணியின் அளிப்பைக் கூடுதலாக்கத் (supplement) தயாராக இருக்க வேண்டும். அங்காடி எவ்வளவு விரும்புகிறதோ அவ்வளவு அளவு செலாவணிகளை, அயல்நாட்டுச் செலாவணிகளுக்கு மாற்றாகப் பெற்றுக்கொண்டு தருவதற்கும் தயாராக இருக்கவேண்டும். தனது செலாவணியை 'நிலைப்படுத்தும்' ('நிலைப்படுத்தல்' என்றாலே 'மேல்நிலைப்படுத்தல்' (Pegging up) என்றுதான் பொருள் கொள்ளவேண்டும்) ஓர் அரசாங்கம் அயல் நாட்டுச் செலாவணிகளைச் செலுத்தித் தனது நாட்டின் செலாவணிகளைப் பெற்றுக் கொள்ளத் தயாராக இருக்கவேண்டும். தனது செலாவணியைக் 'கீழ்நிலைப்படுத்தும்' அரசாங்கம் தனது நாட்டின் செலாவணிகளைச் செலுத்தி அயல்நாட்டுச் செலாவணிகளைப் பெற்றுக்கொள்ளத் தயாராக இருக்கவேண்டும். இவ்விரு அரசாங்கங்களும் தடையை (Restriction) மேற்கொள்ள விரும்பும் வரையிலோ அல்லது மாற்றுவீதத்தைக் கட்டுப்படுத்தும், (controlling the rate of exchange) நோக்கத்தில் தவறும் வரையிலோ எந்தவிதமான வரையறையுமின்றி மேற்குறிப்பிட்டவாறு தங்கள் செலாவணிகளையும், அயல் நாட்டுச் செலாவணிகளையும் பெற்றுக் கொள்ளத் தயாராக இருக்கவேண்டும். தலையிடுதல் (intervention) மூலம் மாற்றுவீதத்தைக் கட்டுப்படுத்தும், அரசாங்கத்தி

னுடைய திறமையானது, இந்த நோக்கத்திற்காக அது செல விடும் சாதனங்களைப் பொறுத்திருக்கும். தேவைப்படும் சாதனங்கள் அயல்நாட்டுச் செலாவணிகளாக இருப்பதால் 'நிலைப் படுத்தலை'ப் பொறுத்த வரையில் ஏற்பட்டுள்ள வரையறை மிகவும் குறுகியதாகவே (narrow) இருக்கிறது. 1914-18-ல் நடந்த போரின்போது பவுண்டானது டாலருடன் 'நிலைப்படுத்தப்பட்டது.' ஐக்கிய அமெரிக்காவிட மிருந்து பிரிட்டிஷ் அரசாங்கம் டாலர்களைக் கடன் பெறக்கூடிய ஆற்றலும் பிரிட்டிஷ் கம்பெனிகளுக்கும் தனிப்பட்ட பிரிட்டிஷ் நபர்களுக்கும் சொந்தமான டாலர் கடன் பத்திரங்களை இடப்பெயர்ச்சி செய்யக் கூடிய (mobilize) அதன் ஆற்றலுந்தான் இவ்வாறான நிலைப் படுத்தலுக்குக் காரணம். (1939 - 45ஆம் ஆண்டுகளில் நடந்த போரின்போது இதைப் போலவே பவுண்டிற்கும் டாலருக்கும் ஒரு நிலையான (fixed)மாற்று வீதம் ஏற்படுத்தப்பட்டது. இந்த நடவடிக்கை தலையீட்டிற்கும் (intervention)சற்று அதிகப்படியாகவே இருந்தது. தலையீட்டிற்கான உதாரணங்கள் இங்கே கொடுக்கப்பட்டுவருகின்றன.)

நெருக்கடி காலங்கள் தவிர (except in times of emergency), அரசாங்கம் தங்களது செலாவணிகளுக்குத் துணை (support) செய்ய வேண்டும் என்னும் நோக்கத்திற்காக, வெளிநாடுகளிலிருந்து தொடர்ச்சியாகக் கடன் பெற விரும்புவதில்லை. அப்படி அவைகள் கடன் வாங்குவதற்குத் தயாராக இருக்கும் பட்சத்தில் அவைகளின் ஆக்கமற்ற (improductive) நோக்கத்திற்காக அவைகள் வாங்கும் மிக அதிகமான கடன்களைத் தாங்கி நிற்பதற்கு அவைகளின் நாணயம் (credit) ஒன்றே போதும் என்று சொல்லப் படுவதை நாம் நம்புவதற்கில்லை. குறுங்கால நெருக்கடி காலங்களிலும் (short-term emergencies) அல்லது முக்கியமானசந்தர்ப்பங்களிலும் (special occassions)[1] கடன்கள் எழுப்பப்படும் (அல்லது தனிப் பட்ட நபர்களின் அயல்நாட்டுக் கடன் பத்திரங்கள் அரசாங்கத்தின் உத்திரவால் வரையறைகளுக்குள் கட்டுப்படுத்தப்படும்) இவைகளுக்கு அப்பாலும் ஓர் அரசாங்கம் தனது செலாவணியின் மாற்று வீதத்தை 'நிலைப்படுத்தக்' கூடும். ஓர் அரசாங்கம், அயல் நாட்டுச் செலாவணிகளாகிய சாதனங்களை வைத்துக்கொண்டிருக்குமானால், இவைகளுக்கப்பாலும், 'நிலைப்படுத்தலை'ச் சாதிக்

1 ஆரம்பத்தில் துணை (support) செய்தலைத் தேவைப்படும் வீதத்தில் செலாவணியை நிலைபெறச் செய்தல போன்ற சந்தர்ப்பங்கள், ஒரு குறுகிய நிலை மாறுங் காலத்திற்குப்(brief transitional period) பிறகு இத்தகைய நிலைபெறச் செய்தலை செய்யக் கூடும் என்று நம்பப்படுகிறது. 1924 - 28 ஆகிய ஆண்டுகள் ஐரோப்பியச் செலாவணிகளின் நிலைத்த தன்மையான காலமாகும். இக்காலத்தில் ஒவ்வொரு நிலை பேறும், ஆரம்ப மாதங்களில் புதிய வீதத்திற்குத் துணை செய்வதற்காக அயல் நாட்டு மாற்றின் ஒருகடன் அல்லது ஒருகடன் வாக்குறுதி இவைகளால் பின்தொடரப்பட்டிருந்தது.

கக் கூடும். இதிலும், சாதனங்கள் தீர்ந்து போகும் அளவு வரையில்தானே இதனைத் தொடர்ந்து செய்ய முடியும்?

'கீழ்நிலைப்படுத்தலில்' (Pegging down) உள்ள வரையறைகள் (limitations) மிகவும் இக்கட்டானவைகளாக ஆரம்பத்தில் தோன்றுவதில்லை. ஏனெனில் இதற்குத் தேவையான சாதனங்களெல்லாம், தலையிடும் நாட்டின் சொந்தச் செலாவணியின் போதுமான அளிப்பே. 'கீழ்நிலைப்படுத்தும்' நாடு (a country that is pegging down) அயல்நாட்டுச் செலாவணிகளை இலாபமாக அடைகிறது; அவைகளை இழப்பதில்லை. ஆயினும் இதற்கும் சில வரையறைகள் (limitations) உண்டு. அயல்நாட்டுச் செலாவணிகளின் இருப்பைப் பெறுவதைக் காட்டிலும் தன்னுடைய செலாவணிகளின் இருப்பைப் பெறுவதே ஒரு நாட்டிற்கு எளிது. தன்னுடைய செலாவணிகளின் இருப்பை, நாடு மூன்று வழிகளில் பெறக்கூடும். —வரிவிதிப்பு மூலமும், பொதுமக்களிடமிருந்து கடன் பெறுவது மூலமும் புதிய பணத்தைச் சிருட்டித்தல் மூலமும் (மைய பாங்கியிடமிருந்து கடன் வாங்கியோ அல்லது நோட்டுக்களை அச்சடித்தோ) பெறக்கூடும். இவைகளில் வரிவிதிப்பை நாம் ஆராயாமல் விட்டுவிடலாம். அயல்நாடுகளில் நிலுவைகளைக் (balances) குவித்துக்கொண்டு செய்வதற்காகத் தொடர்ந்து வரிகளை விதிப்பதை வாக்காளர்கள் யாவரும் விரும்பமாட்டார்கள். கடன் பெறும் முறை, இதைவிடச் சற்று அதிகமாக பலனளிக்கக்கூடியது. கோட்பாட்டளவில் ஓர் அரசாங்கம், தனது பொதுமக்களிடமிருந்து கடன் வாங்கி, அத்தொகைகளைக்கொண்டு தன் செலாவணியை 'நிலைப்படுத்தலாம்.' இம் முறையில் கிடைத்த அயல் நாட்டுச் செலாவணியை முதலீடு செய்து, தான் வாங்கிய கடன் தொகைகளுக்குக் கொடுக்க வேண்டிய வட்டிக்குச் சமமான வருமானத்தைப் பெறலாம். இம் முறையை மிகப் பரந்த அளவிலும் (large dimensions) செயலாற்றலாம். 1932-37க்கு இடையேயுள்ள ஆண்டுகளில் தான் பயன்படுத்திக்கொள்வதற்காகவும், முடியுமானால் அயல்நாட்டுச் செலாவணிகளையும் பொன்னையும் வாங்குவதற்கும், அதன் அங்காடியில் £ 550 மில்லியனுக்குறையாமல் கடன் வாங்கியது. ஆனால் நெடுகக் கடன் வாங்கிக் கொண்டே செல்லுதல் என்பது இயலாது. ஏனெனில் இப்படிக் கடன் வாங்குவதால் உள்நாட்டுக் கடன் நாளடைவில் வளர்ந்து மலையெனக் குவியும். இதனால் அயல் நாட்டுச் செலாவணிகளும் மலையென குவிந்துவிடுவதால் அவைகளை வெளிநாடுகளில் பத்திரமாக முதலீடு செய்யும் பெரும்பிரச்சினைகள் அரசாங்கத்திற்கு வந்து சேரும். மூன்றாவது முறையான, தேவையான பண அளிப்புகளைச் சிருட்டித்தலும் நடைமுறையில் வரையறைக்குட்பட்டேயிருக்கிறது.

அவ்வாறு சிருட்டிக்கப்பட்ட பணம் உடனடியாக அயல் நாட்டுச் செலாவாணிகளை வாங்குவதற்கு அரசாங்கத்தால் பயன்படுத்தப் படும். அதாவது இப் பணம் அயல் நாட்டுச் செலாவணிகளை விற்பவர்களிடம் கொடுக்கப்படுகிற தென்பதை இது உணர்த்து கிறது. எனவே இப்பணம் புழக்கத்தில் சேர்ந்து ஏற்கெனவே உள்ள பண அளிப்பைக் கூடுதலாக்குகின்றது. வேறு விதமாகச் சொல்லப் போனால், இது பண வீக்கத்தைத் தூண்டும் என்று கூற வேண்டும். செலாவணியைக் 'கீழ்நிலைப்படுத்தல்' (pegging down) என்னும் செயல் முறைப் (technical) பிரச்சினையைப் பொறுத்த வரையில், பணவீக்கம் இதற்குத் துணை செய்வதாகத் தானிருக்கிறது. ஏனெனில் விலைகளில் அதிகரிப்புச் செலாவணி யின் சமநிலை மதிப்பைக் (equilibrium value) குறைப்பதாகவே உள்ளது; மேலும் இவ்விலைகளின் அதிகரிப்பு, செலாவணியின் மதிப்பைக் குறைவாக வைத்திருக்கும் நோக்கத்துடன் செலா வணியைக் 'கீழ்நிலைப் படுத்தலை'யும் தேவையற்றதொன்றாகச் செய்துவிடுகிறது. எனவே, அரசாங்கத்தின் நோக்கம் நிரந்தர மாகக் குறை மதிப்புச் (under valuations) செய்வதாக இல்லாமல், செலவாணியின் சமநிலை மதிப்பை எப்போதுமே குறைவாக வைத்துக்கொள்வதாக இருந்தால், இம்முறை—கொள்கை அளவில் (theoretical) சில சிறப்புகளையுடையதாக இருக்கிறது. ஆனால், செலாவணியின் மாற்று மதிப்பை நிரந்தரமாக சமநிலைவீதத்திற்கும் குறைவாக வைத்திருக்கும் நோக்கத்துடன் இம் முறை கடைப் பிடிக்கப்படுமானால்—சமநிலை வீதம் குறையும். ஒவ்வொரு தடவை யும் அதை இன்னும் குறையும்படி செய்யும் முறை—அது மிகவும் ஆபத்தான உள் நாட்டுப் பண வீக்கத்தில்தான் போய் முடியும். 1939-45ஆம் ஆண்டுகளில் நடந்த போரின்போது போரிட்டுக் கொண்டிருந்த இருதரப்பு நாடுகளுக்கும் ஸ்வீடன் நாட்டு கிரௌன் (crown) என்னும் செலாவணி உடனடியாகத் தேவைப்பட்டது. இதை அப்படியே அனுமதித்திருக்கும் பட்சத்தில் கிரௌனின் மதிப்பு மிக அதிகமாக அதிகரித்திருக்கும். ஸ்வீடன் அரசாங்கம் அதனைக் 'கீழ் நிலைப் படுத்துவதே' (peg it down) சிறந்ததெனக் கருதியது, ஆனால், இம்முறையால் விளைந்த உள்நாட்டுப் பண வீக்கத்தை அவர்கள் சமாளிக்கும்படி நேர்ந்தது.

'மேல் நிலைப்படுத்தலைப்' (pegging up) போன்று, கீழ் நிலைப் படுத்தல்' அவ்வளவு உறுதியான வரையறைகளை (rigid limits) உடையதல்ல. ஆயினும் எந்த நாடாவது அதனை தாற்காலிக உதவிச் சாதனமாக (expedient) அன்றி அதற்கு அதிகப்படியாக அதனைப் பயன்படுத்துமாயின், அது மிகச் செலவானதும் இடை யூறானதுமான முறையாக அமையும். மிகைமதிப்புச் செய்யும்

நோக்கத்துடன் தலையிடுவதற்கும் (Intervention) குறைமதிப்புச் செய்யும் நோக்கத்துடன் தலையிடுவதற்கும் மேற்கண்ட முடிவு பொருந்தும்; பின்னர் சொல்லப்பட்டதைவிட முன்னர் சொல்லப் பட்டதற்கே செயல் முறை இடையூறுகள் (technical difficulties) அதிகமாகவும், கைக்கோளின் (policy) வரையறைகள் அதிகக் கண்டிப்பானவையாயும் இருக்கின்றன.

மாற்று வீதங்களில் ஏற்படும் ஏற்ற இறக்கங்களைத் தவிர்ப்பதற் கான தலையீடு (Intervention) கைக்கோளைப் பற்றி இன்னுமொரு வார்த்தை. இந்தக் கைக்கோள் சில சமயங்களில் மிகை மதிப்புச் செய்வதையும் மற்ற சமயங்களில் குறைமதிப்புச் செய்வதையும் விரும்புகிறது.[1] இதன்படி, இதனைக் கைக்கொள்ளும் அரசாங்கம் தனது சாதனங்களை (resources) சில சமயங்களில் அயல் நாட்டுச் செலாவணிகளாக வைத்துக்கொள்ள வேண்டும்; மற்ற சமயங் களில் தன் சொந்த செலாவணிகளில் வைத்துக்கொள்ள வேண்டும். இக் கைக்கோளின் பிரபலமான உதாரணம், 1932ஆம் ஆண்டு பிரிட்டிஷ் அரசாங்கத்தால் ஏற்படுத்தப்பட்ட மாற்றுச் சமன் கணக் காகும் (Exchange Equalization Account). முதல் முதலாக, இக் கணக்கு, பிரிட்டிஷ் பொதுமக்களிடமிருந்து ஏராளமான பவுண்டு களைக் கடன் வாங்கியது.[1] அப்போது இக்கணக்கு, பவுண்டின் மாற்று மதிப்பைக் குறைவாக வைத்திருக்கக்கூடிய நிலையிலிருந்தது; ஆனால் பவுண்டின் மாற்று மதிப்பை அதிகமாக வைத்திருக்கக் கூடிய நிலையிலில்லை. ஆனால், பவுண்டின் மாற்று மதிப்பைக் குறைவாக வைத்திருக்கும் முறையில், இக் கணக்கு ஏராளமான அயல்நாட்டுச் செலாவணிகளின் இருப்பைப் (அல்லது அயல் நாட்டுச் செலாவணிகளாக மாற்றிக் கொள்ளக்கூடிய பொன்னை) (Stock) பெற்றது. இம்மாதிரிதான் ஆரம்பிக்கப்பட்ட சிலமாதங்களுக் குள்ளேயே குறிப்பிட்ட அளவுக்கு, இக் கணக்கு (Account) அயல் நாட்டுச் செலாவணிகளைச் சேர்த்துவைத்துக்கொண்டது. ஆனால் 1932ஆம் ஆண்டு இலையுதிர் காலத்தின்போது பவுண்டின் மதிப்பு வெகுவாகக் குறைய ஆரம்பித்ததால் அதன் மதிப்பை மீண்டும் அதிகப்படுத்துவதற்கு அதன் அயல் நாட்டுச் செலாவணிகளின் இருப்புப் பயன்படுத்தப்பட வேண்டியிருந்தது. இந்த இருப்பு முழு வதும் தீர்ந்த பிறகு மாற்றுச் சமன் கணக்கு (Exchange Equalization Account) பவுண்டு மீண்டும் மதிப்புக் குறைவடைதலைத்

1 அதாவது, தடையிலா அங்காடியால் தீர்மானிக்கப்படுகிற வீதங்களுக்கு ஒப்பான மிகை மதிப்பு அல்லது குறைமதிப்பு.

1 ஆரம்பத்தில் இந்தத் தொகை £ 150,000,000 ஆக இருந்தது. 1933ம் ஆண்டு இது £ 350,000,000 ஆகவும் பிறகு, £ 550,000,000 ஆகவும் அதி கரித்தது. இக்கணக்கு, துவக்கப்பட்ட ஆரம்பத்தில், £ 25,000,000 க்குச் சமமான அயல்நாட்டுச் செலாவணிகளைத் தன்னிடம் வைத்திருந்தது.

தடுக்கச் சக்தியற்றுவிட்டது. 1933ஆம் ஆண்டு இளவேனிற் காலத்தில் (spring) பவுண்டிற்கு மீண்டும் பழைய நிலை வந்தது. தடையிலா அங்காடியில் அதிவேகமாக அதிகரிப்பதுபோல் அதன் மதிப்பு அதிகரித்துச் செல்லுவதைத் தடுக்கும் நோக்கத்துடன், மாற்றுச் சமன் கணக்கு, தன்னிடமுள்ள அயல்நாட்டுச் செலாவணி களின் இருப்பை விரைவாக நிரப்பிக்கொண்டது.

அம்மாதிரியான கைக்கோள் (policy), வெற்றியைத் தரவல்ல தாக இருக்க வேண்டுமேயானுல், மிகை மதிப்புச் செய்தலை அல்லது குறை மதிப்புச் செய்தலை நிலையாகப் (constantly) பின் பற்றப்படக் கூடாது என்பது விளங்குகின்றது. அப்படியில்லை யெனின், மாற்றுச் சமன் கணக்கு நிலுவையாக, அதிக மதிப் புடைய பவுண்டைக் காட்டிலும் குறைந்த மதிப்புடைய பவுண்டை அதிகமாக வைத்திருக்கும் போதும் அல்லது குறைந்த மதிப்பை யுடைய பவுண்டைக் காட்டிலும் அதிக மதிப்புடைய பவுண்டை நிலுவையாக (balance) வைத்திருந்தாலும், அதனுடைய நிதிகளில் சில, மிகவும் விரைவாகக் காலி ஆகிவிடும். முதலாவது சொல்லப் பட்டதில், ஸ்டெர்லிங் காப்பும் (sterling reserve) அடுத்தபடி சொல்லப்பட்டதில் அயல் நாட்டுச் செலாவணியும் தீர்ந்துபோகும். இதனுல், ஏற்ற இறக்கங்களைத் (fluctuations) தவிர்க்கும் நோக் கத்தையுடைய ஒரு தலையீட்டுக் கைக்கோளானது (a policy of intervention) செலாவணிகளுக்கிடையே உள்ள சமநிலை மாற்று வீதங்களில் ஏற்படும் அதிகப்படியான அடிப்படை மாறுதல்களை அங்காடியின் மாற்று வீதத்தைப் பிரதிபலிக்காமல், தடுத்துவிட இயலாது என்பது தெளிவாகிறது. அது, பெரிய யூகபேர அங் காடியை உணர்த்துகின்ற ஏறக்குறைய சிதறலானதும், தற்செய லானதுமான அன்றாட ஏற்ற இறக்கங்களைச் சரிசெய்து கொள்ள முடியும் (iron-out) என்பதையும் நாம் நம்பலாம்.

எனவே தலையீட்டிற்கான சாத்தியக் கூறுகள் (possibilities) வரையறுக்கப்பட்டுள்ளன. நிரந்தரமாகப் பின்பற்றக்கூடிய கைக் கோள், பேராசையின்றி சிறு ஏற்ற இறக்கங்களைத் (minor fluctuations) தவிர்ப்பதாகும். ஒரு தாற்காலிகமான கைக்கோளின் எல்லைகளுக்குள் அடங்கியிருப்பதால், தீர்மானிக்கப்பட்ட மிகை மதிப்பையும் குறை மதிப்பையும் உண்டாக்கும் தலையீடானது (Interventions) வரையறைகளுக்குட்பட்டே இருக்கிறது. மேலும் அது, மாற்றுகளின் மீது தான் செலுத்தும் உடனடியான ஆதிக்கத் திற்கு வெளியே அதிக செலவு மிக்கதாயும், ஆபத்தான பொருளா தார விளைவுகளை உடையதாயு மிருக்கிறது.

## மாற்றுத் தடை
## (Exchange Restriction)

சமீப ஆண்டுகளில் ஏற்பட்ட குழப்பத்தில், அதிலும் குறிப்பாக 1939ஆம் ஆண்டு போருக்குப் பிறகு 'தலையீடு' (intervention) கட்டுப்பாடு செய்தற்கு மிகவும் திறனற்ற (weak) தொரு சாதன மாக இருப்பதைப் பல நாடுகள் உணர்ந்தன. எனவே, அவைகள் 'தடை' (restriction) என்னும் சக்திவாய்ந்ததொரு சாதனத்தை கடைப்பிடிக்கலாயின. 'தலையீடு' (intervention) 'தடை' (restriction) ஆகிய இரண்டிற்குமுள்ள அடிப்படை வேறுபாடு என்னவெனில், 'தலையீடு' என்னும் இக் கைக்கோளைக் கடைப் பிடிக்கும் அரசாங்கம், அயல்நாட்டு மாற்று அங்காடியில் தான் நிகழ்த்தும் பேரங்களின் அளவைக் (volume of transctions) கூடுத லாக்க வேண்டும்; அல்லது இவ்வாறு செய்வதற்குகந்த சாதனங் களான அயல் நாட்டுச் செலாவணிகளை அதிகமாகச் செலவு செய் தாவது அதிகமாகப் பெறவேண்டும். ஆனால் 'தடை' (restriction) என்பது நாட்டின் செலாவணிக்கான தேவையை (demand) செயற் கையாக (artificial) கூடுதலாக்குவ (addition) தல்ல; அங்காடிக்கு வந்துகொண்டிருக்கும் அதன் செலாவணியின் அளிப்பை (supply), அரசாங்கம் கட்டாயமாகக் குறைப்பதே (reduction) யாகும். சில குறிப்பிட்ட நபர்கள் (certain person), அல்லது குறிப்பிட்ட வகை யைச் சார்த்த நபர்கள் (certain categories of persons), அவர்கள் அயல் நாட்டுச் செலாவணிகளை மாற்றுகப் பெற்றுக்கொண்டு அதன் செலாவணியைக் கொடுக்க முன் வருவார்களானால் அவர் கள் அவ்வாறு செய்வதனின்றும் தடை செய்யப்படுவர். எனவே, அளிப்பிற்கு ஒப்பீடாக (relatively to supply) தேவை (demand) அதிகரிக்கப்பட்டுச் செலாவணியின் மதிப்பும் பாதுகாக்கப்படு கின்றது (maintained). 1

தடை (restriction) என்பதற்கு சரிநுட்பமாக நாம் விளக்கங் கூற வேண்டுமானால், அயல்நாட்டு மாற்று அங்காடியின் மொத்த விற்பனையைக் (turnover) குறைக்கும் எதுவும் தடையை உண்டு பண்ணும் எனக் கூறவேண்டும். சுங்க வரிகள் (tariffs) இறக்கு மதி பங்களவுகள் ஆகிய இவையிரண்டும் இதில் இடம் பெறும்.

1 ஓர் அரசாங்கம், தனது செலாவணியைக் குறை மதிப்பு மட்டத்தில் (undervalued level) வைத்திருக்கும் நோக்கத்துடன் தனது செலாவணியைத் தேவைப்படுதலைக் கட்டுப்படுத்தும் என்பதைக் கோட்பாட்டளவில் ஏற்றுக்கொள் ளலாம், ஆனால் நடைமுறையில் இவ்வாறு செய்வதில் பல இடர்ப்பாடுகள் ஏற் படும். (உதாரணமாக. ஏற்றுமதிகளுக்கான செல்லைப் (payments) பெறும் பொருட்டு அரசாங்கம் ஏற்றுமதித் தொழில்களைத் தடை செய்வதும் இவ்விடர்ப் பாடுகளில் ஒன்றாக இருக்கும்); ஆனால் இந்த முறை எப்போதாவது கடைப்பிடிக்கப் பட்டதா என்று, ஐயமாக இருப்பதால், இதனை நாம் மறந்துவிடுதல் நலம்.

இவைகள், இறக்குமதிப பொருள்களைத் தடுப்பதன் மூலம், அவ்விறக்குமதிகளுக்குச் செலுத்தவேண்டியதற்கான செலாவணியின் அளிப்பை, அயல் நாட்டு மாற்று அங்காடியில், குறையச் செய்கின்றன. இந்த 'தடை' என்பதில், இரண்டு போர்களுக்கு இடையேயுள்ள ஆண்டுகளில் பிரிட்டிஷ் அரசாங்கம் அவ்வப்போது பிரிட்டிஷ் பொதுமக்களை, அயல்நாட்டுச் செலாவணிகளை வாங்குவதில் (பண்டங்களுக்கான செல்லு, ஏற்கெனவே ஒப்பந்தம் செய்யப்பட்ட கடன்களை திருப்பி அடைத்தல், அவசியமான அயல் நாட்டுப் பயணத்திற்கான நிதி யளித்தல் ஆகிய இவற்றில் தவிர) சிக்கனமாக இருக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்பட்ட வேண்டுகோள்களும், லண்டன் மூலதன அங்காடியில் (London Capital Market) அயல்நாட்டுக் கடன்களை அளிப்பதைத் தடுப்பதற்கு பல தடவைகள் கைக்கொள்ளப்பட்ட நடவடிக்கைகளும், இதன்பாற்படும். 'நேரடியான தடை' (direct restriction) யின் வகைகளை மட்டில் ஆராய்வதோடு நமது ஆராய்ச்சியை நிறுத்திக் கொண்டால், குழப்பம் சற்றுக் குறைவாக இருக்கும்—அதாவது சற்றுத் தெளிவு காண வழியுண்டு. இக் கருத்தின்படி, தடை என்பதற்கு, மூன்று தெளிவான அடையாளங்களைக் (earmarks) கூறலாம். முதலாவதாக, அயல்நாட்டு மாற்று அடிப்படையில் நடக்கும் வாணிபம் முழுதும் அரசாங்கம், தன்னுடைய உடனடியான செயல் நிலையங்கள் (agencies) ஆகிய இவற்றின்கீழ், மையப் படுத்தப்படுகிறது (centralised). இரண்டாவதாக, நாட்டுச் செலாவணியை மற்றச் செலாவணிகளுக்கு மாற்றுகக் கொடுப்பதற்கு அரசாங்கத்தின் அனுமதி வேண்டும். மூன்றுவதாக அனுமதி யின்றியோ அல்லது அரசாங்கத்தின் செயல் நிலையத்தின் மூலம் (agency) அல்லாமலோ, எவரேனும் மாற்று பேரத்தில் (exchange transactions) ஈடுபட்டால் அது குற்றவியலைச் சார்ந்த குற்றமாகக் (criminal offence) கருதப்படும்.

இவ்வாறுன மாற்றுத் தடை (Exchange Restriction) (ருஷியாவுக்கு வெளியே) ஜெர்மனியிலும், ஆஸ்ட்ரியாவிலும் 1931ஆம் ஆண்டு ஏற்பட்ட பண நெருக்கடியின்போது முதன்முதலில் தோன்றியது. 1939ஆம் ஆண்டு போர் துவக்கப்படுவதற்கு முன்னுள்ள, பிற்பகுதி ஆண்டுகளில் மாற்றுத்தடை முறைகளுக்கு (Methods of Exchange Restriction) ஜெர்மனிதான் முன்னேடியாக (pioneer) இருந்தது. இம்முறையின் நுணுக்கங்களெல்லாம் ஜெர்மனியில்தான் முதன்முதலில் ஆராயப்பட்டன. அங்கேதான் இம் முறையின் கட்டுப்பாடுகளும் பலமாக இருந்தன. 1939 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் போர் துவக்கியதற்கு வெகு முன்பே, ஜெர்மனியில் செலாவணிச் சட்டங்களின் ஏய்ப்பிற்கு (evasion)

மரண தண்டனை விதிக்கப்பட்டது. போர்வரையிலும், மாற்றுத் தடை மத்திய ஐரோப்பிய நாடுகள் தென் அமெரிக்க நாடுகள் ஆகிய இரு வேறுபட்ட நாடுகளில் (two groups of countries) மட்டும் இருந்துவந்தது. எனினும், போர் துவக்கியபோது பிரான்சு, கிரேட் பிரிட்டன், பிரிட்டிஷ் சுய ஆட்சி உரிமை பெற்ற குடியேற்ற நாடுகள் (British Dominions) இன்னும் சில பொது நிலையான நாடுகள் (neutral countries) ஆகியவற்றிலும் இத்தடைகள் விதிக்கப்பட்டன. போரின் முடிவின்போது அநேக மாக எல்லா நாடுகளிலும் இத்தடை விதிக்கப்பட்டது. இம் மூல நூலின் இப்பதிப்பு எழுதப்பட்டபோதும் (ஏப்ரல், 1947), தங்கள் அரசாங்கங்களின் அனுமதி பெறுமல் தங்கள் நாட்டின் செலாவணி களைக் கொண்டு பிறநாட்டுச் செலாவணிகளை மாற்றுகப் பெறக் கூடிய உரிமையுள்ள குடிமக்களைக் கொண்ட நாடுகள் விரலைவிட்டு எண்ணும்படியான அளவிற்கு மிகக் குறைவாகவே யிருந்தன.

மாற்றுத் தடையின் வகைகள் பலதிறப்பட்டன; இதனுல் குழப்பங்களும் அளவுக்கு மீறியுள்ளன. ஒவ்வொரு தற்செயலான நிகழ்ச்சிக்கும் விதிவிலக்கு அளித்தலும், ஒவ்வோர் உதாரணத் தைக் கூறுதலும் வாசகர் மனத்தில் ஏராளமான குழப்பத்தையே விளைவிக்கும். ஆகையினுல் முக்கியமான கோட்படுகளையும் (main principles) முக்கிய வகைகளின் (chief varieties) செயல் முறை (method), நோக்கம் (purpose) ஆகிய இவைகளை மட்டும் இங்குக் கூறுவோம்.

மாற்றுத் தடை (Exchange Restriction) மத்திய ஐரோப்பிய நாடுகளில்தான் 1931ஆம் ஆண்டு முதன்முதலில் விதிக்கப் பட்டது. தங்களது செலாவணிகளின் அளிப்பை, தேவைக் கொப்ப, அவைகளின் மாற்று மதிப்பில் ஆபத்தான முறையில் எவ்வித குறைவுமில்லாமல் அங்காடியில் கொண்டு வருவதற்கான ஒரே சாதனமாக இம்மாற்றுத்தடை இருந்துவந்தது. இந்த நாடுக ளனைத்தும், 1931ஆம் ஆண்டிற்கு முந்திய சில ஆண்டுகளில் அயல் நாடுகளிடம் ஏராளமாகக் கடன் வாங்கிக்கொண்டிருந்தன. இதனுல் வட்டிச் சுமை அதிகமாக இருந்ததுடன், கடன்களின் பெரும்பகுதியும் குறுந்தவணைக்கடனுக (short-term debts) இருந் தமையால், கடன் ஈவோர் (creditors) எச்சமயத்திலும் கடனைத் திருப்பி அடைக்குமாறு கேட்கக் கூடிய அளவில் இருந்தன. 1931-ல் ஏற்பட்ட நெருக்கடியின் போது(crisis) இக்குறுந்தவணைக் கடன்களின் பெரும்பகுதியும் திருப்பி அடைக்கப்பட்டன. இதனுல் மார்க்குகள் (marks) கிரௌன்கள் (crowns) பெங்கூஸ்கள்(pengos) முதலியவைகளின் அளிப்பு வட்டியினுலும் பெருமளவு அசல்

(principal) தொகைகளாலும் பெருகியது. மேலும், இச்சமயத்தில் தான், ஏற்றுமதிகளுக்கான செல்லுகளைச் செலுத்துவதற்குத் தேவையாக இருந்த இச்செலாவணிகளின் தேவை, விலைகளின் சீர்குலைவினாலும் பன்னாட்டு வாணிபத்தின் வீழ்ச்சியினாலும் (decline), வெகுவாகக் குறைந்தது. இச் சூழ்நிலைகளில், வேறு நடவடிக்கை எதுவும் எடுத்திராவிட்டால், இச்செலாவணிகளின் மாற்று மதிப்பு வெகுவாகக் குறைந்திருக்கும். ஆனால், இந்த இறக்கம் சமநிலையை (equilibrium) மீண்டும் கொண்டுவந்திருக்கக் கூடுமோ என்றால், ஐயந்தான். ஏனெனில், கடன்கள், (debts) டாலர்கள் அல்லது ஸ்டெர்லிங் ஆகிய இவற்றில்தான் ஒப்பந்தம் செய்யப்படுகின்றன. மார்க்கு (Mark) அதன் மதிப்பில் குறையுமானால் அக்கடன்களை அடைப்பதற்கு ஏராளமான மார்க்குகள் தேவைப்படும். சமன்பாட்டின் (equation) அளிப்புப்பகுதி (supply side), மார்க்கின் மாற்று மதிப்பு (exchange value) ஒவ்வொரு தடவையும் குறைவதற்கொப்ப, உடனடியாக அதிகரிக்கும். மேலும் மாற்று வீதங்களில் ஏற்படும் மாற்றம் எவ்வாறு சமநிலையைக் (equilibrium) கொண்டு வருகிறதென்று பார்ப்போம். மாற்றத்திற்கு முன்னால், செலாவணியை மாற்றுகக்கொடுக்க முன் வந்தவர்களை, செலாவணி தற்போது மிகவும் மதிப்புக்குறைந்து விட்ட காரணத்தால், அவ்வாறு கொடுக்க முன்வராமல் நிறுத்திக் கொள்ளும்படி சிலரைத் தூண்டுவதன் மூலம் இச்சமநிலை மீண்டும் கொண்டுவரப்படுகிறது. ஆனால் இக்குறிப்பிட்ட விவகாரத்தில், கடன் ஈவோர், தங்களுக்கு மேற்குறிப்பிட்ட பல்வேறு பாதுகாப்புகள் அளிக்கப்பட்ட போதிலும் தொடர்ந்து கடன் கொடுத்துக் கொண்டிருப்பார்கள் என்று கூறுவது கடினமாக இருந்தது. அவர்கள் நடக்கப்போகும் ஒரு பொருளாதார சீர்குலைவை (collapse) நோக்கி பயந்து நாட்டை விட்டு ஓடினார்களே தவிர, ‘மாற்று வீத மதிப்பின் ஏற்ற இறக்கத்திற்கான நடைமுறைத் திட்டங்களைக் (nicely cirlculated less or more) கண்டு பயந்தோடவில்லை. மாற்று மதிப்பிறக்கம் (exchange depreciation) இப்பயத்தினை உறுதிப்படுத்தியது. மேலும் ஜெர்மனியில் பணவீக்கம் நீங்கி அப்போது எட்டு ஆண்டுகளே முடிவடைந்திருந்தன. அம் மாதிரியான பயங்கர இடையூறு (calamity) மீண்டும் ஏற்படுவதினின்றும் தப்புவதற்கு ஒரே வழி, செலாவணியை நிலையான பொன் மதிப்புடன் (fixed gold value) ஒப்பிட்டு மதிப்பிடுதலை உறுதியாகக் கடைப்பிடித்தலே என்று மக்கள் நம்பினர். இக் காரணங்களினால் இந் நாடுகளின் அரசாங்கங்கள் மாற்றுவீதங்களை மாற்றமின்றிக் காத்தலே தாங்கள் செய்ய வேண்டிய ஒரே பாதுகாப்பான வழியென்றும், அங்காடிக்கு வரும் அவைகளது செலாவணிகளின் அளிப்பை, அந்த மாற்று வீதத்தில் அவைகள்

தேவைப்படுகின்ற அளவுக்குமேல் போகாதபடி, குறைத்துவிட வேண்டுமென்றும் முடிவுக்கு வந்தன. முதலாவதாக இது, அயல் நாட்டு மூலதனத்தைத் (foreign capital) திருப்பி அடைதலைத் (withdrawal) தடைசெய்வதை உணர்த்தும். சில சமயங்களில் ஜெர்மனி அல்லது ஆஸ்டிரியா அல்லது ஹங்கேரியிலுள்ள கடனாளி யின் கடன்களை, அவைகள் திருப்பித் தருமாறு கேட்கப்பட்ட போதும் முதிர்வடைந்தபோதும்கூட, திருப்பித் தரக்கூடாதெனச் சட்டமியற்றப்பட்டிருந்தது. திருப்பித் தரப்பட்ட சில கடன் தொகை கள் அயல்நாட்டுக் கடன் ஈவோர் ஒருவரின் பெயரில் மைய பாங்கில் வைக்கப்பட்டுள்ள கணக்கில்தான் செலுத்தப்படலா மென்றிருந்தது. இக்கணக்குகள் அயல் நாட்டுச் செலாவணி களாக மாற்றப்படக் கூடாதனவாக இருந்தன—அதாவது இவை கள் 'தடைப்பட்டுள்ளன' (blocked) என்று பொருள்.

கடன்களின் அசலைத் (principal of debts) திருப்பி அடைக் கின்ற பிரச்சினைகளே இல்லாத போதும் இந்த விதமான இக்கட் டான நிலை (dilemma) ஏற்படுவதுண்டு. பண்டங்களின் வாணி பத்தில் சமனநிலையைக் கொண்டுவரும் முறையிலும் இந்த இக் கட்டானநிலை ஏற்படும். உதாரணமாக, ஒருநாடு, மந்தகாலத்தில் சற்றும் தேவைப்படாத ஓரிரண்டு பண்டங்களை ஏற்றுமதி செய்வ தாகவும், தனக்குத் தேவையான பல நுகர்ச்சிப் பண்டங்கள் பல வற்றை இறக்குமதி செய்வதாயும், தான் முன்னால் வாங்கிய கடன் களுக்கு வட்டி கொடுக்க வேண்டியதாயுமிருக்கலாம். (மந்த ஆண்டுகளில், பல தென் அமெரிக்க நாடுகள், இந்த நிலையில்தான் இருந்தன). இந்தச் சூழ்நிலையில், சமநிலையை மீண்டும் கொண்டு வருவதற்குத் தகுந்தவாறு ஏற்றுமதிகளைப் போதுமான அளவிற் குத் தூண்டுவதற்கும் இறக்குமதிகளைப் போதுமான அளவிற்குக் குறைப்பதற்கும் மாற்றுவீதம் செயல்படவேண்டும். மாற்று பேரங்களைக் கட்டுப்படுத்தி, இதே விளைவை நேரடியாக உண்டாக் குவது இன்னும் சிறந்த முறையாகும்.

ஒருநாடு போருக்குச் செல்லும் போதும் இதே தேவைதான் ஏற்படுகிறது. கிரேட்பிரிட்டனும், பிரான்சும் மாற்றுத்தடைகளை (exchange restrictions) 1939ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் விதித்த போது, அவைகளுடைய முக்கியக் குறிக்கோள் அயல் நாட்டுக் கடன் ஈவோரை, அவர்கள் கடன் கொடுத்த தொகையை திரும்பப்பெறுவதைத் தடை செய்வதாக இல்லை. இதற்கு நேர் மாருக, கடன் ஈவோரில் பெரும்பாலோருக்கு அவர்களது கடன் தொகைகள் திருப்பித் தரப்பட்டன. ஆனால் இருநாடுகளுமே போர் நீடிக்கும் வரையில் அயல்நாட்டுச் செலாவணிகளைப்

போதுமான அளவு தாங்கள் பெற்று, அதன் மூலம் தங்களது தேவைகளைப் பூர்த்திசெய்து கொள்ளுவதில் உள்ள இடர்ப் பாட்டை முன்கூட்டி உணர்ந்தே (foresaw) இருந்தன. தங்களின் ஏற்றுமதித் தொழில்களைப் பராமரிப்பதில் (maintain) அவைகள் அப்போது மும்முரமாக இருக்கும்; போர்த் தளவாடங்களை (munitions) ஏராளமாக இறக்குமதி செய்தல் தேவைப்படும். (போர் ஆரம்பித்த முதல் பதினெட்டு மாதங்களில் அமெரிக்கப் பண்டங்களை 'கையில் காசு, கப்பலில் பண்டம்' (cash and carry) என்கிற நிபந்தனைகளின் பேரில்தான் பெற முடிந்தது; தவணைக் கொள்முறை—Lend-Lease— என்னும் கண்டுபிடிப்பு பிற்காலத்தில் நன்கு பயன்பட்டது). மாற்றுத்தடைகளின் (exchange restrictions) முக்கிய நோக்கம் தடையை விதிக்கும் நாடுகளின் பொற்காப்பு களையும் (gold reserves) அயல் நாட்டுச் செலாவணியின் காப்பு களையும் (foreign currency reserves) பாதுகாப்பதேயாகும். தங்களது மூலதனத்தை, பாதுகாப்பை முன்னிட்டு, அமெரிக்கா வுக்குக் கொண்டு செல்ல விழைபவர்களுக்கு டாலர்களை அளிப்ப தற்காக இவைகளைப் பயன்படுத்துவதினின்றும் தடுப்பதற்கும், டாலர்களின் அரிதான அளிப்பை — நடப்பு ஈட்டத்தினின்றும் (current earnings) சேர்த்து வைக்கப்பட்ட (accumulated) காப்பு நிதிகளினின்றும் (reserves) பிரிட்டிஷ் குடிமக்களால் கோரப்பட்ட டாலர் சொத்துக்களினின்றும் அல்லது பொன் விற்பனைகள் மூலமும் கிடைத்த டாலர்களின் அளிப்பை—மிகவும் இன்றியமை யாத தேவைகளுக்கே பயன்படுத்துவதற்கும் இத் தடைகள் விதிக்கப்பட்டன.

மாற்றுத் தடைகள் (exchange restrictions) எத்தச் சூழ்நிலை களில் விதிக்கப்பட்ட போதிலும் அவைகளின் நோக்கம் எப்போ துமே, மற்ற நாட்டுச் செலாவணிகளை மாற்றுகப் பெறுவதற்கு முன்வருகின்ற நாட்டின் செலாவணியின் அளிப்பை குறைப்பதி லேயே இருக்கிறது. சிலவகைப் பேரங்களுக்கு (some forms of transactions) மாற்று அங்காடியின் வழியை அடைத்து விடுவதன் மூலம் இந்த நோக்கத்தை நாடு நிறைவேற்றிக் கொள்கிறது. இவ்வாறு பிறநாட்டுச் செலாவணிகளை மாற்றுக அடைவதற்கு வரும் தடை செய்யப்பட்ட (forbidden) பணம் அவ்வாறு தடை செய்யும் நாட்டின் குடிமக்களுக்கோ அல்லது அந்த நாட்டில் வாழும் மக்களுக்கோ சொந்தமாக இருக்குமானல், அந்தப் பணம் அந்த நாட்டினுள்ளேயே செலவழிக்கப்படும் அல்லது முதலீடு செய்யப்படும் அல்லது வேறு எந்த விதமாகவோ பயன்படுத்தப் படும் என்று கருத இடமுண்டு. இப்படி உள்நாட்டில் பணம் செலவழிக்கப்படுவதால், பணத்தின் சொந்தக்காரர் இரண்டாவது

மிகச் சிறந்த (second-best) கொள்முதலை (purchase) அல்லது சற்றுக் கவர்ச்சி குறைந்த முதலீட்டை அடைவார், அவ்வளவு தானே? ஆனால் அங்காடியின் வழி அடைக்கப்பட்ட பணம் பிற நாடுகளின் குடிமக்களுடையதாகவோ அல்லது அங்கு வாழ்பவர் களுடையதாகவோ (residents) இருக்கக்கூடும். மாற்றுக்கட்டுப் பாடு (Exchange control) 1931ஆம் ஆண்டு மத்திய ஐரோப்பா வில் முதன்முதலில் ஏற்படுத்தப்பட்டது. அயல்நாட்டினர் தங் களின் மூலதனத்தைத் திரும்ப எடுத்துச் செல்வதனின்றும் தடுப் பதற்காக மாற்றுக்கட்டுப்பாடு ஏற்படுத்தப்பட்டது. இன்னும் அயல் நாட்டினர், பண்டங்களை விற்றுச் சம்பாதித்த பணத்தை திரும்ப எடுத்துச் செல்வதைத் (withdraw) தடுப்பதற்காக பல வகையான மாற்றுத்தடைகள் (Exchange Restrictions) ஏற்படுத் தப்பட்டன. இது இன்னும் சற்றுக் கடுமையான தொன்றாகும். அயல் நாட்டினரும், அல்லது நாடு கடத்தப்பட்டவர்களும் அகதி யாக வந்த குடிமக்களும்கூட அவர்கள் வாழும் நாட்டின் பணத் தைப் பயன்படுத்தலாமே தவிர, நாட்டில் தடை செய்யப்பட்டுள்ள பணத்தைப் பயன்படுத்த முடியாது. ஹிட்லர் (Hitler) யூதர்களைக் கொடுமைப்படுத்திய (Persecutions of Jews) ஆண்டுகளில் ஜெர்மனியின் அகதிகள் (refugees) தங்களுக்கு ஜெர்மனியின் ஒரு மில்லியன் தடைசெய்யப்பட்ட (blocked) மார்க்குகள் (marks) இருப்பினும், இலண்டனில் அவர்கள் பட்டினி கிடக்க வேண்டிய நிலையை நன்குணர்ந்தனர். எனவே, தடை செய்யப்பட்ட தொகைகளையுடைய அயல் நாட்டினர் அவைகளைக் கழிவு செய்து விற்க (அப்படி விற்பதனாலாவது தங்களின் பணத்தை திரும்பப் பெற முடியுமென்றால்) தலைப்பட்டனர்.

அநேகமாக, தடைசெய்யப்பட்ட செலாவணி (restricted currency) ஒவ்வொன்றும் சில சமயங்களில் இவ்வாறுதான் அரசாங்க வீதத்திற்கும் (official rate) குறைவாக வாங்கவும் விற்கவும் படுகின்றன. இம்மாதிரியான வாணிபம் முற்றிலும் சட்ட விரோதமானதாகும்; இது கள்ளச்சந்தை (black market)யில் நடை பெறும் வாணிபமாதலால் இதில் ஈடுபடுபவர்கள் கடுமையாகத் தண்டிக்கப்படுவர். அரசாங்கங்கள் இதனை வெறுப்பதற்குக் காரணங்கள் உண்டு. ஒவ்வொரு செலாவணி பேரமும் (every currency transactions) ஒரு மாற்றாகும் (an exchange). கள்ளச் சந்தையில் பவுண்டுகள் (pounds) விலைமலிவாக விற்கப்படுமே யானால், யாரேனும் ஒருவர், அயல்நாட்டுச் செலாவணியை மாற்றாகக் கொடுத்து, அவைகளை வாங்கவேண்டும். அந்த ஒருவருக்கு பவுண்டுகளின்தேவை இருக்கவே தான் அவைகளை இவ்வாறு வாங்குகின்றார்; இல்லாவிடில் இவ்வாறு அவர் வாங்க

மாட்டார். கள்ளச்சந்தையில் அவைகளை அவர் மலிவாகப் பெற இயலவில்லையென்ருல், அவைகளை அவர் அரசாங்கவீதத்தில் சட்டபூர்வமான அங்காடியில் (official market) வாங்கக் கருது வார். அப்போது அவர் மாற்ருக அளிக்கும் அயல்நாட்டுச் செலாவணி, அரசாங்கம் பயன்படுத்துகிற சாதனங்களின் (resources) ஒருபகுதியாக இருக்கும். பவுண்டுகளில் நடைபெறும் ஒவ்வொரு கள்ளச் சந்தை பேரமும் (every black market transaction) பவுண்டுகளுக்கான கருவியல்பான தேவையின் (potential demand) ஒரு பகுதியைப் பயன்படுத்திவிடுகிறது. முதலாவது தடை என்பதே, அரசாங்கம் கடைப்பிடிக்க விரும்பும் மாற்று வீதத்தில் உள்ள அளிப்பை (supply) ஈர்த்துக் கொள்ளப் போதுமான தேவையில்லாத (inadequate demand) காரணத்தால்தான், கொண்டுவரப்படுகிறது. இதனுல், கள்ளச்சந்தை பேரங்கள் (black market transaction), கட்டுப்பாட்டை அமல்நடத்தும் ஆட்சியாளரின் (authorities) வேலையைக் கடினமாக்குகின்றன வென்பது, விளங்குகிறது.

கள்ளச் சந்தையைக் கட்டுப்படுத்தும் முயற்சியானது ஆட்சியாளர்களை பெரும்பாலும் இன்னும் கண்டிப்பான தடைகளை அயல்நாட்டினர் தங்களது தடை செய்யப்பட்ட (blocked) நிறுவைகளைப் (balances) பயன்படுத்துவதன் மீது, சுமத்தும்படி தூண்டுகிறது. முதலில் அவர்கள், அந்நிறுவைகளை அயல்நாட்டுச் செலாவணிகளுக்கு மாற்ருகக்கொடுக்கக் கூடாதென்றும் ஆனுல் அவைகளைத் தங்கள் விருப்பம் போல் தடை செய்யும் நாட்டினுள் (inside the restricting country) எவ்வாறு வேண்டுமானுலும் பயன்படுத்திக் கொள்ளலாமென்றும், கூறப்பட்டனர். ஆனுல் இது கள்ளச்சந்தையை ஊக்குவிப்பதாகவே யுள்ளது. உதாரணமாக A என்னும் அமெரிக்கரொருவர் லண்டனில் ‘தடை செய்யப்பட்ட’ (blocked) நிறுவையை (balance) வைத்திருக்கின்ருரென வைத்துக் கொள்வோம். அவரது நண்பராகிய B என்பவர் லண்டனுக்கு விடுமுறையைக் கழிப்பதற்கென செல்லுகிருரென்று வைத்துக்கொள்வோம். A எளிதாகத் தன்னுடைய ‘தடை செய்யப்பட்ட’ நிறுவைகளை B யின் பெயருக்கு (அவர் இங்கிலாந்தில் செலவு செய்ய) மாற்றி விடலாமல்லவா? A தனது மேற்படித் தொகையை B யிடமிருந்து டாலர்களாகப் பெற்றுக்கொள்ளலாம். ஆனுல் இது, B தான் செலவிடும் பவுண்டுகளை வாங்குவதற்கு அரசாங்கத்தினிடம் டாலர் எதையும் கொடுப்பதில்லை என்பதை உணர்த்துகிறது. இம்மாதிரியான காரணங்களால்தான் மாற்றின் மீது விதிக்கப்பட்ட ஒரு சாதாரண தடையானது (a simple prohibition) நாளடைவில் கடுமையான கட்டுப்பாடாக (tight control) மாறியது

இருந்த போதிலும் கள்ளச் சந்தையின் பேரங்களை (black market transactions) ஆட்சியாளர் கண்டும் காணாதது போல் (winked at) பல நிகழ்ச்சிகளில் இருந்துள்ளனர். எனவே 1940-ஆம் ஆண்டு ஆரம்ப மாதங்களில் பிரிட்டிஷ் அரசாங்கம் தடை செய்யப்பட்ட ஸ்டெர்லிங் நிறுவைகளின் அயல்நாட்டுச் சொந்தக்காரர்கள் அவைகளை வேறு அயல்நாட்டினருக்கு மாற்றிக் கொள்ளலாம் என்று அனுமதித்தது. தடை செய்யப்பட்ட ஸ்டெர்லிங் அங்காடி ஒன்று (a market of blocked sterling) நியூ யார்க்கில் தோன்றியது. இந்த அங்காடியில் மாற்று வீதம் அரசாங்க வீதத்தை விட, (official rate), 10 சதவீதம் அல்லது சில சமயங்களில் இன்னும் குறைவாகவும் இருந்தது. தங்களுடைய பணத்தைத் திரும்பப் பெறும் நோக்கத்துடன், தடை செய்யப்பட்ட ஸ்டெர்லிங்கைத் தங்கள் கையில் வைத்திருந்த அயல் நாட்டினர் அரசாங்கத்தால் பிடிபட்ட போதிலும், போர்க்கால மாகையால் அவர்களிடமிருந்து ஒரு குறிப்பிட்ட கட்டணத்தை வாங்கிக் கொண்டு அவர்களை அவ்வாறு செய்ய அனுமதிப்பதே (வரையறுக்கப்பட்ட ஒரு குறிப்பிட்ட காலம் வரை) சிறந்ததென்று அரசாங்கம் கருதியது. ஆனல், இந்த அரசாங்கச் சார்பற்ற (unofficial) அங்காடியில் பல்வேறு வழிகளில் வரும் ஸ்டெர்லிங் அளிப்பு (supply of sterling) அது பூரணமாக மறைந்து போகும் வரையில் படிப்படியாகக் (gradually) குறைக்கப்பட்டது.

சில சமயங்களில், மாற்றுத் தடையை (Exchange Restriction) விதிக்கும் நாடுகளின் ஆட்சியாளர்கள் (authorties) எந்த நிறுவைகளை (balances) எந்த நோக்கங்களுக்குப் பயன்படுத்தலாமென் பதையும், அவைகளை அயலநாட்டுச் செலாவணிகளுக்கு எந்தக் கழிவு வீதத்தில் விற்கலாம் என்பதையும், தாங்களே முனைந்து விளக்கினர். போருக்கு முன்புள்ள ஜெர்மனி (pre-war Germany) இதனை முதன் முதலில் செய்து காட்டியது. போருக்கு முன்னுலுள்ள கடைசி சில ஆண்டுகளில் (last few years) பல்வேறு சமயங்களில், ஏராளமாகப் பல்திறப்பட்ட ஜெர்மன் மார்க்குகள் இருந்தன. அவையாவன: ரிஜிஸ்டர் மார்க்குகள் (Register marks), பிளாக் மார்க்குகள் (Block marks), எஃபக்டென்ஸ்பெர் மார்க்குகள் (Effektensper marks). இந்த மார்க்குகள் ஒவ்வொன்றும் லண்டனில் 2 பென்சிலிருந்து 1 ஷில்லிங் 9 பென்சு வரையில் உள்ள பல்வேறு விலை வரிசையில் விற்கப்பட்டன.

இவ்வாறு ஒரு கழிவு செய்து (at a discount) நிதிகளை வெளிப்படுத்தும் முறை, அயல்நாட்டுக் கடன் ஈவோரின் வேண்டுகோளுக் கிணங்கவே, முதலில் கடைப்பிடிக்கப்பட்டது. அவ

களுக்கு இம்முறை ஒரு சலுகையாகவே இருந்தது. ஒரே செலாவணிக்கு இரு வேறு விலைகளைச் சிருட்டித்த இம் முறையில் சில நன்மைகள் இருப்பதை, தடை செய்யும் நாடுகள் சீக்கிரத்தில் புரிந்து கொண்டன. அயல் நாட்டுக் கடன் ஈவோர், மார்க்குகளை குறைந்த விலைக்கு விற்கிறார்களென்று வைத்துக்கொள்வோம். அவைகள் யார் எந்த நோக்கத்திற்காக வாங்குகின்றனர்? அதை வாங்குகின்றவர், ஜெர்மனியின் ஏற்றுமதிகளுக்குப் பணம் செலுத்துவதற்காக வாங்குகின்றாரென வைத்துக்கொள்வோம். தான் விரும்பும் மார்க்குகளை அவர் மலிவான விலைக்கு வாங்குவது, மேற்படி ஏற்றுமதிகளின் விலையைக் குறைத்ததற்குச் சமம். மாற்று வீதத்தில் செய்யப்படும் சாதாரண குறை மதிப்பு எவ்வளவு அளவு விற்பனையை அதிகரிக்குமோ அவ்வளவு அளவு இதுவும் அதிகரிக்கும். எனவே, அரசாங்கத்தினர், கழிவு செய்து விற்கப்படும் இச் செலாவணியின் விற்பனைகளைக் கட்டுப்படுத்துவதன் மூலமும் அனுமதிக்கப்பட்ட பேரங்களின் வகைகளை வெகு கவனமுடன் விளக்கிச் சொல்வதன் மூலமும் இம்முறையினின்றும் பெரும் பயனை அவர்கள் பெறக்கூடும். எனவே, அவர்களுக்கும் அவர்களின் குடிமக்களுக்குமானதொரு முறையை ஏற்பாடு செய்யும் முயற்சி (endeavour) அவர்களுடையது. அவர்கள் தங்களின் செலாவணியைக் கொடுத்துவிட்டு (offering) மாற்றாக அயல்நாட்டுச் செலாவணியைப் பெறும்போது (உதாரணமாக இறக்குமதிகளுக்குப் பணம் செலுத்தும்போது) தங்களது செலாவணியின் மதிப்பை அதிகரிக்கும் மாற்று வீதத்தையே அவர்கள் பயன்படுத்துவர். அவர்கள் தங்களது செலாவணியைத் தேவைப்படும் போதும் (demanding) அவற்றிற்கு மாற்றாக அயல் நாட்டுச் செலாவணியைப் பெறும்போதும் (உதாரணமாக ஏற்றுமதிகளிலிருந்து கிடைக்கும் வரவுகளை தாய்நாட்டிற்குக் கொண்டுவரும் போதும்) அவர்கள் தங்களது சொந்த செலாவணியை குறைந்த விலைக்குப் பெறமுடிகிறது. அவர்கள் அதிக விலைக்கு விற்கின்றனர்; குறைந்த விலைக்கு வாங்குகின்றனர். அதாவது அயல்நாட்டினர், அதிக விலைக்கு வாங்கி, குறைந்த விலைக்கு விற்பதை இது உணர்த்துகிறது. அவர்கள் தங்களிடமுள்ள மேற்சொல்லப்பட்ட தடைபட்ட செலாவணிகளின் இருப்புக்களை வெளிக்கொண்டுவரும் பொருட்டு அவைகளைக் குறைந்த விலைக்கு விற்க முன்வருவார்கள். இம்முறை முழுவதுமே இவ்விருப்பத்தை எதிர் நோக்கியேயிருக்கிறது. மற்றொன்றையும் இம்முறை விரும்புகிறது. அயல் நாட்டுக் கடன் ஈவோர் அவ்வாறு குறைந்த விலைக்கு விற்கும்போது, அவர்கள் தடைசெய்யும் அரசாங்கத்திற்கே விற்கவேண்டும். வேறு எந்த அயல்நாட்டினருக்கும் விற்கக் கூடாது. அயல் நாட்டினர் ஒருவர், தடை செய்யும் நாட்டின் செலாவணியை

வாங்க விழைந்தால் அவரிடம் முழுவிலையையும் வாங்க வேண்டும். இம்முறை, தடை செய்யும் அரசாங்கம் பலவகைப் பணத்தைத் தனித்தனியான பிரிவுத் துறைகளில் வைத்திருக்கும் திறமையை எதிர்நோக்கியிருக்கிறது. தவிரவும், நாட்டுக்குள்ளே சமமான மதிப்பையும் நாட்டிற்கு வெளியே சமன்கேடான (unequal) மதிப்பையுமுடைய இரு வகைச் செலாவணிகளையும் நாடு பெற்றிருப்பதை இந்த முறை நம்பியிருக்கிறது. அதாவது கடன் ஈவோரின் நிதிகளைப் பலமாகத் 'தடை செய்யும்' (block) திறனை இம்முறை எதிர் நோக்கியுள்ளது. தடை செய்யும் நாடு (Restricting country) நாட்டின் உள்ளும் புறமும் இலாபமடைகிறதெனில், அதற்குக் காரணம் அயல்நாட்டினர்தான் (foreigners). அதிலும் குறிப்பாக அயல்நாட்டுக் கடன் ஈவோரை (foreign creditor) மேற்படி நாட்டின் உள்ளும் புறமும் நஷ்டமடையச் செய்வதுதான், இலாபத்திற்குக் காரணம்.

கடைப்பிடிக்கப்பட்ட சரியான முறை ஒவ்வொரு நிகழ்ச்சியின் சூழ்நிலைகளுக்குத் தகுந்தாற்போல் வேறுபடுகின்றது. உதாரணமாக அரசாங்கக் கடனுக்கான (Government debt) வட்டியைச் செலுத்துவதற்காகப் போதுமான அளவு அயல்நாட்டுச் செலாவணியைப் பெறுவதே, அர்ஜென்டினாவில் 1939ஆம் ஆண்டிற்கு முன்பு அரசாங்கத்தின் முக்கிய நோக்கமாக (வெளிநாடுகளில் கடன்பட்டிருந்த அர்ஜென்டினாவின் குடிமக்களுக்கு இது உதவி செய்வதாக இல்லாமற்போயினும்) இருந்தது. இதற்கேற்ப, அதன் அயல்நாட்டு மாற்றின் (foreign exchange) சட்டங்களும் (regulation) இயற்றப்பட்டன. இவைகளின் முக்கிய நோக்கம் அரசாங்கக் கடன்களைத் திருப்பி அடைப்பதற்காக, மலிவான அயல்நாட்டுச் செலாவணியை (cheap foreign exchange) அளிப்பதும், அயல்நாட்டினருக்குச் செலுத்தவேண்டிய இதர செல்லுகளுக்கு விலைமிக்க அயல்நாட்டுச் செலாவணியை (dear foreign exchange) அளிப்பதுமாக இருந்தது. ஒவ்வொரு அர்ஜென்டினா குடிமக்களும், வெளிநாடுகளுக்குப் பண்டங்களை ஏற்றுமதி செய்து அவைகளை அங்கு விற்பதன் மூலமோ அல்லது வேறு வழியின் மூலமாகவோ, தான் பெற்ற அயல்நாட்டுச் செலாவணிகளைக் கண்டிப்பாக அர்ஜென்டினா அரசாங்கத்திற்கு விற்றுவிடவேண்டும். நிர்ணயிக்கப்பட்ட ஒருவிதத்தில் (at a fixed rate) இந்த அயல்நாட்டுச் செலாவணிகளை மாற்றுகக் கொடுத்துவிட்டு, அர்ஜென்டினாவின் செலாவணியாக பீசோக்களைப் (Pesos) பெற்றுக்கொள்ள வேண்டும். இவ்விதமாகத்தான் அர்ஜென்டினா அரசாங்கம் ஏராளமான அளவிற்கு அயல்நாட்டுச் செலாவணிகளைப் பெற்றது. அயல்நாடுகளுக்குத்தான் கொடுக்கவேண்டிய கடன் தொகைகளை

இவற்றிலிருந்து கொடுத்தது. எஞ்சிய செலாவணிகளை, பீசோக்களை வைத்துக்கொண்டு அயல்நாட்டுச் செலாவணிகளை மாற்றுகப் பெற விழைபவர்களுக்கு ஏலம் போட்டுவிட்டது. 1939ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் போர் துவங்கியது வரையிலும், அர்ஜென்டிரு அரசாங்கம் அயல்நாட்டுச் செலாவணியை வாங்கிய அரசாங்கவீதம் (official rate) ஒரு ஸ்டெர்லிங் பவுண்டிற்கு 15 பீசோக்களாக (Pesos) இருந்தது. ஆயினும் அயல்நாட்டுச் செலாவணி விற்கப்பட்ட வீதம் ஏறத்தாழ 17 பீசோக்களாக ஏறி இறங்கிக் கொண்டிருந்தது (fluctuated). இவ்விதமாக, அரசாங்கம் தனக்குத் தேவையான அயல்நாட்டுச் செலாவணியை மிகக் குறைந்தவிலைக்குப் பெற்றது. மேலும், தனக்குத் தேவையில்லாத அயல்நாட்டுச் செலாவணியின் மூலம் இலாபமும் அடைந்தது. இதனுல், ஏற்றுமதி செய்பவர்களும், வெளிநாடுகளில் கடன்பட்டிருந்தவர்களும் (அரசாங்கத்தைத் தவிர்த்து) மிகவும் பாதிக்கப்பட்டனர். ஏற்றுமதி செய்பவர்கள் (பெரும்பாலும், அர்ஜென்டினுவிலுள்ள அயல்நாட்டினர்) தங்களது அயல்நாட்டுச் செலாவணியைக் குறைந்த விலைக்கு விற்கவேண்டியதாக இருந்தது. (அதாவது பீசோசில் குறைந்த விலைக்கு, அல்லது இதை வேறு விதமாகச் சொல்லின் அவர்கள் தங்களுடைய பீசோக்களை அதிகமான வீதத்தில் வாங்கவேண்டியிருந்தது). வெளிநாடுகளில் கடன்பட்டிருந்த (அரசாங்கத்தைத் தவிர்த்த)வர்கள் (இவர்களும், பிரிட்டிஷரால் சொந்தமாக நடத்தப்பட்ட ரெயில்வே கம்பெனி போன்ற அயல்நாட்டு முதலாளிகளே) அயல்நாட்டுச் செலாவணியை அதிக விலைகொடுத்து வாங்கவேண்டியிருந்தது.

ஜெர்மனி ஏற்படுத்திய தடை (restriction)யின் நோக்கங்கள் முற்றிலும் வேருனவை. 1939-ல் போர் ஆரம்பிப்பதற்குப் பல ஆண்டுகள் முன்பே, ஜெர்மனி போர்ப் பொருளாதாரத்தில் (war economy) வாழ்ந்துகொண்டிருந்தது. ஜெர்மனியின் தொழில்கள் இறக்குமதி செய்யப்பட்ட கச்சாப் பொருள்களை நம்பியே இயங்கிவந்தன. மிகவும் கண்டிப்பான மாற்றுக் கட்டுப்பாடு (strict exchange control) நாசி (Nazi) அரசாங்கத்திற்கு ஜெர்மனியின் தொழில் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தும் அதிகாரத்தை அளித்தது. அவசியமான கருப்பொருள்களின் (materials) அளிப்புக்களை பங்கீடு செய்து தொழில்களைக் கட்டுப்படுத்தும் இந்த அதிகாரம், பொதுவான தொழில் கட்டுப்பாட்டின் (general industrial control) ஆயுதச்சாலையில் (armoury) ஒரு சக்தி வாய்ந்த போர்க் கருவியாகத் திகழ்ந்தது. இதைத்தவிர, இயன்ற அளவு ஏராளமாகக் கச்சாப் பொருள்களை இறக்குமதி செய்வதில் ஜெர்மனி முயன்றது. இக் கச்சாப் பொருள்கள் தொழி

லுக்காகவும் போர்க்கால காப்புகளாகவும் (war reserves) பயன் படுத்தப்பட்டன. ஜெர்மனி செலுத்தவேண்டிய தொகைக்கான ஏற்றுமதிகளை நிறைய அதிகரிப்பதற்கும் ஜெர்மனியின் முயற்சிகள் (efforts) பயன்படுத்தப்பட்டன. இவ்வாறு மேற்கொள்ளப்பட்ட சாதனங்களின் நோக்கத்தைப் பொறுத்தமட்டில், கடன்களைத் திருப்பி அடைத்தல் (payment of debts) இரண்டாவது முக்கியமான காரியமேயாகும். கடன் ஈவோர் செலுத்தும் தொகையை (payment of creditor) போர்ப் பொருளாதாரத்திற்கு நலனளிக்கும் வகையில் பயன்படுத்திக் கொள்வதன்மூலம் கடன் தொகைகளை யும் எளிதில் திருப்பி அடைக்க முடிந்தது. இவ்வாறு ஜெர்மானியர் கள் ஏற்படுத்திய முறை மிகவும் சிக்கலான முறையாக இருப்பினும் மிகவும் அறிவுக் கூர்மையுடன் நிருவகிக்கப்பட்டது. ஜெர்மனி விற்ற சில பொருள்களின் வெளி உலகத் தேவை (outside world's demand) நெகிழ்ச்சி உடையதாக இருந்தது—அதாவது விலை குறைப்பு அதிக விற்பனைகளை உண்டுபண்ணி, அதிகமான அயல் நாட்டுச் செலாவணிகளின் வருவாய்களை அளிக்கும். இப்பொருள் களை ஏற்றுமதி செய்தவர்கள் அப் பொருள்களின் விலைகளை, குறை மதிப்பு செய்யப்பட்ட மார்க்குகளில் கணக்கிட்டுக் கொள்ளும் ஒரு பூரண நலன் அளிக்கப்பட்டனர். இதனால் அயல்நாட்டினர், அப் பொருள்களைக் குறைந்த விலைக்குப் பெற்றமையால் ஏராளமான பொருள்களை விற்க முடிந்தது; அதிக இலாபத்தையும் பெற முடிந்தது. ஆனால் மற்றப் பொருள்களுக்கு அயல்நாட்டினர் ஜெர் மனியில் நிலவிய விலையே விதிக்கப்பட்டது; எவ்வித விலைகுறைப் பும் செய்யப்படவில்லை. ஜெர்மனிக்குப் போர்த் தளவாடங்களை உற்பத்தி செய்வதற்கான கச்சாப் பொருள்களை (raw materials) நிறைய வாங்குவதற்குப் பயன்படுத்துவதற்காக எவ்வளவு இயலுமோ அவ்வளவு அளவு அயல்நாட்டுச் செலாவணிகளை உலகத்தினின்றும் பெறுவதற்குச் சாதகமாக இம்முறை முழுவதும் இயங்கிவந்தது.

## மாற்றுத் தீர்வுகள்
## (Exchange clearings)

அயல்நாட்டவரிடமிருந்து எவ்வகையாலும் இலாபம் பெறும், இவ்வகையான சூழ்ச்சித் திறன்கள் (manipulations), அந்நாடு களால் எதிர்ப்போ, பழிவாங்குந்தன்மையோ (reprisal) இன்றி ஏற்றுக்கொள்ளப்பட்டனவென்று நாம் கற்பனை செய்துகொள்ளக் கூடாது. இவ்வாறு, பல நாடுகள் பழிவாங்குவதற்காகக் கடைப் பிடித்த முறைகளில் ஒன்று மாற்றுத் தீர்வாகும். மாற்றுத் தீர்வு என்றால் என்ன என்பதை ஓர் உதாரணத்தால்தான் நன்கு விளக்க

இயலும். 1929ஆம் ஆண்டின் மந்தத்திற்கு முந்திய சாதாரண மான ஆண்டில் ஜெர்மனி 627 மில்லியன் ரிக்மார்க்குகள்[1] பெறு மானமுடைய பண்டங்களை ஸ்விட்சர்லாந்திற்கு ஏற்றுமதி செய்தது. அதே ஆண்டில் அது 318 மில்லியன் ரிக் மார்க்குகள் பெறுமான பண்டங்களை ஸ்விட்சர்லாந்திலிருந்து இறக்குமதி செய்தது. இந் நிலையை, வழக்கமாகக் கையாளும் சொல் வழக்கில் (terminology) கூறவேண்டுமேயானால் இருநாடுகளுக்குமிடையேயுள்ள வாணிபச் செலுத்து நிலை (Balance of trade) ஸ்விட்சர்லாந்திற்கு பாதகமாக (unfavourable) (அல்லது ஸ்விட்சர்லாந்துப் பிற நாடுகளுக்குக் 'கொடுப்பல் நிலை'யில்—'Passive') இருந்தது. புலனுகா இனங்களி லும் (invisible items) மூலதனக் கணக்கிலும் ஸ்விட்சர்லாந்திற்கு அயல்நாடுகள் செலுத்தும் நிகர அயல்நாட்டுச் செலுத்துநிலையே (Net balance of payments) இருந்தது. (ஆல்ப்ஸ் மலைகளில் சுற்றுப் பயணம் செய்யும் ஜெர்மன் பயணர்களுக்காகவும், ஜெர்மனிக்கு ஸ்விட்சர்லாந்து கொடுத்தகடன் தொகைக்கான வட்டிக்காகவும்). ஆனல் புலனுகும் இனங்களையும் புலனுகா இனங்களையும் சேர்த்துக் கணக்கிட்டால் ஸ்விட்சர்லாந்து தான் ஜெர்மனியிடமிருந்து பெற்றதைவிட, அதிகமான செலுத்துக்களை ஜெர்மனிக்கு செலுத்த வேண்டியிருந்தது. ஜெர்மனியானது ஸ்விஸ் (Swiss) கடன்களின் வட்டியைத் தடை செய்தபோது (blocked), ஸ்விட்சர்லாந்து இதற்குச் சரியாக பழி தீர்த்துக்கொண்டது. ஸ்விட்சர்லாந்து மக்கள் தாங்கள் ஜெர்மனிக்குச் செலுத்தவேண்டிய செல்லுகளை ஜெர்மானியர்களுக்கு நேரடியாகச் செலுத்துவதைவிட ஸ்விஸ் நேஷனல் பாங்கு மூலந்தான் (Swiss National Bank) செலுத்த வேண்டுமென்று ஸ்விட்சர்லாந்து சட்டம் இயற்றியது. இச் செல்லு களைத் தன் கையில் வைத்துக்கொண்ட ஸ்விஸ் அரசாங்கம் ஜெர்மனியை, அது ஸ்விசுக்குச் சேரவேண்டிய வட்டிச் செல்லு களைச் செலுத்தாதவரையில் ஸ்விஸ் நேஷனல் பாங்கியில் செலுத் தப்பட்ட ஜெர்மனிக்குச் சேரவேண்டிய பணம் கொடுக்கப்பட மாட்டாதென, அச்சுறுத்தியது. ஸ்விட்சர்லாந்து கைப்பற்றியிருந்து பிணையாக வைக்கப்பட்டவரே (hostage) அசல் கைதியைவிட (original prisoner) அதிக விலைமதிப்புப் பெறுபவராக இருந்தமை யால் இந்த அச்சுறுத்தல் கோரிய பயனைத் தருவதாக இருந்தது. எனவே இரு நாடுகளுக்குமிடையே ஓர் உடன்படிக்கை ஏற்பட்டது. இரு நாடுகளும் ஒன்றுக்கொன்று செலுத்தவேண்டிய செல்லுகள் சரிக்கட்டப்பட்டன (offset). ஜெர்மானியர் ஒருவருக்கு ஸ்விட்சர்லாந்தினர் பணம் செலுத்தவேண்டியிருந்தால் அவர்

1 ரிக் மார்க் (reich mark) என்பது ஏறக்குறைய 1 ஷில்லிங் பெறுமான முடைய ஜெர்மன் செலாவணி. இது 1924-48 ஆண்டுகளில் ஜெர்மனியில் அமுலில் இருந்து வந்தது.

ஸ்விஸ் நேஷனல் பாங்கியில் (Swiss Naitonal Bank) பணம் செலுத்தவேண்டும். ஸ்விஸ் நேஷனல் பாங்கு, பயணர்களின் செலவுகளுக்கோ (Tourist expenses) அல்லது பண்டங்களை வாங்கியதற்கோ அல்லது ஏற்கெனவே வாங்கியிருந்த கடனின் வட்டியாகவோ ஜெர்மனி கடன்பட்டிருக்கும் வேருெரு ஸ்விஸ் காரருக்கு அதனைச் செலுத்தும். இதைப்போலவே, ஸ்விட்சர்லாந் திற்குக் கடன்பட்டிருக்கும் ஒரு ஜெர்மனிக்காரர் (a German debtor) அப் பணத்தை நேராக ஸ்விட்சர்லாந்திற்கு அனுப்பாமல், ரிக் பாங் கியில் (Reichs bank) செலுத்துவார். இதனை, ஸ்விட்சர்லாந்து கடன்பட்டிருக்கும் ஜெர்மனிக்காரர்களுக்கு, ரிக் பாங்கு அளிக்கும். எனவே இரு நாடுகளுக்கிடையே கைம்மாறிச் சென்றதெல்லாம், ஒரு பாங்கு மற்ருெரு பாங்கிற்கு இவ்வளவு அளவு செல்லுகள் (such and such payments) செலுத்தப்பட்டன என்ற அறிவிப்பே யாகும் (notification).

மாற்றுத்தீர்வின் (exchange-clearing) தத்துவமே இதுதான். போருக்கு முன்னருள்ள கடைசி சில ஆண்டுகளில் இவ்வாருன ஒப்பந்தங்கள் (agreements) பல நாடுகளின் சோடிகளுக்கிடையே (a great many pairs of countries) செய்யப்பட்டிருந்தன. ஆனல் ஒப்பந்தங்களின் விபரங்கள் வேறுபட்டிருந்தன. சில சமயங்களில் A நாட்டிலிருந்து B நாட்டிற்குச் செல்லும் செல்லுகள் B யிலிருந்து A க்குச் செல்லும் செல்லுகளைவிட அதிகமாக இருக்கும். அப் போது A நாடு B யின் குடிமக்களுக்குச் சேரவேண்டிய தொகை களைக் கொடுத்த பிறகு மிச்சமாக உள்ள நிலுவைத் தொகையை B யின் விருப்பம்போல் அதனைப் பயன்படுத்திக்கொள்ள அதனை விட்டுவிடும் (at the free disposal of B). சில சமயங்களில் இந்தத் தடையற்ற நிலுவை, ஒப்பந்தத்தின் ஆரம்பத்திலேயே அறுதி யிடப்படும். ஆனல் மாற்றுத் தீர்வின் அடிப்படையான கருத் தென்னவோ ஒன்ருகத்தானிருந்தது—அதாவது பேரங்கள் அயல் நாட்டு மாற்று அங்காடியின் வழியாகச் செல்லவேண்டியனவாக இல்லாமல், செல்லுகளைச் சரிக்கட்டிக்கொள்ளுதல் மூலமே இயங்கி வந்தன.[1]

1 கண்டிப்புச் சற்றுக் குறைவாக உள்ள ஒப்பந்தமொன்றுள்ளது. அதற்கு மாற்றுச் செலுத்து ஒப்பந்தம் (exchange payments ageement) என்று பெயர். 1937 ஆம் ஆண்டில் கிரேட் பிரிட்டனும் ஜெர்மனியும் செய்துகொண்ட ஒப்பந்தம் இதற்கு உதாரணமாகும். வேறுவிதமாகக் கூறப்போனல், இங்கிலாந்து பாங்கைப் பொறுத்த வரையில் பிரிட்டனிலிருந்து ஜெர்மனிக்குச் செல்லுகள் தடை யேதுமின்றித் தாராளமாகவே செலுத்தப்பட்டு வந்தன. ஆனல் ஜெர்மன் குடி மக்கள் தாங்கள் பெறும் எல்லா அயல் நாட்டுச் செலாவணிகளையும் ரிக் பாங்கிற் குக் கொடுத்துவிட வேண்டும். அவர்கள் வெளிநாடுகளுக்குச் செலுத்தும் செல்லு களுக்கு (payments) வேண்டிய அயல் நாட்டுச் செலாவணிகளை அந்தப் பாங்கியி னின்றுதான் பெற்றுக்கொள்ள வேண்டும். இவ்வாறு பெறப்பட்ட பவுண்டுகளின்

**1931-39** ஆகிய இவ்வாண்டுகளின் இடையேயுள்ள ஆண்டுகளில் மாற்றுத் தீர்வு ஒப்பந்தங்கள் (exchange clearing agreements) பல ஐரோப்பிய நாடுகளிடையே செய்துகொள்ளப்பட்டது. ஜெர்மனியும் தென்னமரிக்க நாடுகளிடம் மாற்றுத்தீர்வு ஒப்பந்தங்களைச் செய்திருந்தது. இவ்வளவு நூற்றுக்கணக்கான ஒப்பந்தங்களில் ஏதோ இரண்டு ஒப்பந்தங்கள்கூட ஒரே மாதிரியாக இருக்கவில்லை. ஏற்கெனவே குறிப்பிட்டதுபோல், வருவாய்களில் (proceeds) சில பகுதிகள் (ஸ்பிட்சன்—spitzen என அழைக்கப்படுபவை) அயல் நாட்டுச் செலாவணிகளாக மாற்றிக்கொள்வதற்காகவே ஒதுக்கி வைக்கப்பட்டன. ஆனால் மாற்றுத் தீர்வு செய்யும் நாடுகளில் மிகப் பெரியதான ஜெர்மனி இம்மாதிரியான சலுகைகளை (concessions) அதிகமாக அளிக்கவில்லை. மேலும், ஸ்பிட்சன் என்பன எப்போதும் கீழ்ப்பகுதியிலிருந்து தான் கணக்கிடப்பட்டன. மாற்றுத் தீர்வு ஒப்பந்தங்கள் (exchange clearing agreements) உண்மையில் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டுள்ள இரண்டு நாடுகளுக்கு யிடையேயுள்ள வாணிபத்தை சமநிலைக்குக் கொண்டு வரத் துணை செய்தன. சாதாரணமாக, ஹங்கேரி (Hungary) ஒரு சமயம் தன்னுடைய நிலுவைகள் (balances) ஸ்விட்சர்லாந்தில் ஏராளமான அளவிற்குக் குவிந்திருப்பதை உணர்ந்தது. இவ்வாறு குவிந்துள்ள நிலுவைகளை, ஸ்விட்சர்லாந்தின் பண்டங்களை வாங்குவதற்குத்தான் பயன்படுத்தக்கூடியதாக இருந்தது. ஹங்கேரி இத்தொகைகளைத் தனது நஷ்டக் கணக்கில் எழுதிக் கொள்ளுவதைவிட, ஏதாவது பொருள்களாக ஸ்விட்சர்லாந்திலிருந்து அடைய விழைந்தது. ஏற்கெனவே வேறு நாடுகளில் தான் வாங்கிக்கொண்டிருந்த பொருள்களை ஸ்விட்சர்லாந்தில் வாங்க ஆரம்பித்தது; அல்லது தனக்குச் சற்றேனும் பயனில்லாத பொருள்களைக்கூட அதனிடமிருந்து விலைக்கு வாங்கியது. எனவே, ஒரு சமயம் ஹங்கேரியில் ஸ்விஸ் கைக்கெடிகாரங்கள் ஏராளமாகக் குவிந்து கிடந்தன. பன்னாட்டு வாணிபத்தின் பெரும்பகுதியும் பல நாடுகளையும் கொண்ட வழிகளைப் (channels) பின்பற்றுவதால், இதனுடைய விளைவு பொது சுபிட்சத்திற்கு (general prosperity)

---

ஒரு குறிப்பிட்ட சதவீதத்தை கிரேட் பிரிட்டனிடமிருந்து பண்டங்களை வாங்குவதற்காக ஒதுக்கி வைக்கப்பட வேண்டுமென்றும் (earmarked) இன்னும் ஒரு குறிப்பிட்ட சதவீதம் ஜெர்மனிக்கு பிரிட்டன் அளித்த கடன்களுக்கு வட்டி செலுத்துவதற்கும், தவணை கடந்த (overdue) கடன்கள் முதலியவற்றைத் திருப்பிக் கொடுப்பதற்கும் ஒதுக்கிவைக்கப்பட வேண்டுமென்றும் ஒப்பந்தத்தில் கண்டிருந்தது. இந்த ஒப்பந்தம், பிரிட்டிஷ் அரசாங்கம் முழுத்தீர்வையும் (full clearance) தான் கொணடுவரக்கூடும் என்று பயமுறுத்தியதாலதான், முடிவு செய்யப்பட்டது என்பது இங்குக் குறிப்பிடத்தககது. இதனை பிரிட்டன் எளிதாகச் செய்திருக்கக்கூடும்; ஏனெனில் ஜெர்மனிக்குச் செலுத்த வேண்டிய பிரிட்டிஷ் செல்லுகள் பிரிட்டனுக்கு ஜெர்மனி செலுத்த வேண்டிய செல்லுகளைவிடக் கணிசமான அளவிற்கு அதிகமாக இருந்தன.

ஊறு விளைவிப்பதாக இருந்தது. போருக்கு முந்திய சாதாரண காலங்களில் (normal times), பிரிட்டிஷ் சுயஆட்சி பெற்ற குடியேற்ற நாடுகள் (the British Dominions) ஜெர்மனிக்குக் கச்சாப் பொருள்களை விற்றன; ஜெர்மனி, ஸ்காண்டிநேவியாவிற்குச் செய் பொருள்களை (manufactures) விற்றது; ஸ்காண்டிநேவியா (Scandinavia) கிரேட் பிரிட்டனுக்கு மரத்தை (timber) விற்றது. இந்த வழியாகத்தான் கிரேட் பிரிட்டன் தனது முதலீடுகளிலிருந்தும் கிடைக்கக்கூடிய வட்டித் தொகைகளை, மரம் (timber) மூலமாகப் பெற்றுக்கொண்டது. இம்மாதிரியான இந்தத் தொடரில் எந்த இரண்டு சோடி நாடுகளுக்கு மிடையே வாணிபத்தில் சமநிலை இருக்கவில்லை. மாற்றுத் தீர்வானது, சமநிலையைக் கட்டாயமாகக் கொண்டுவந்து திணிக்குமானால், அது வாணிபம் முழுவதையும் (இதில் கலந்துகொள்ளும் நாடுகளனைத்தும் இலாபம் பெறுகிற வாணிபம் முழுவதையும்) சேதப்படுத்தியே அவ்வாறு கொண்டு வந்துள்ளதென்று பொருள். எல்லா நாடுகளின் உட்பிரிவுகளுக்கிடையே ஒப்பந்தம் செய்யப்படுவது இயலுமானால், மாற்றுத் தீர்விலுள்ள குறைபாடு குறைக்கப்பட்டிருக்கும். பொதுவாகச் சொல்லுமிடத்து இது இயலாததாக இருந்தது—பிரிட்டிஷ் அரசாங்கம் பிறநாடுகளுக்குச் செலுத்தவேண்டிய செல்லுகள், மாற்றுத் தீர்வு ஒப்பந்தங்கள் (exchange clearing agreements) ஆகிய எல்லாவற்றிலும் ஸ்டெர்லிங்கைச் செலவு செய்வதற்கு ஒரு பரந்த எல்லை வழங்கப்பட்டபோதிலுங்கூட இது இயலாததாகவே இருந்தது. கிரேட் பிரிட்டனிலும், ஸ்டெர்லிங் பிரதேசத்திலும் (sterling area),[1] ஒப்பந்தத்தின் மற்றொரு தரப்பினர்கள் (the other parties to the agreement), தங்களிடம் சேர்த்துவைக்கப்பட்டுள்ள ஸ்டெர்லிங்குகளைச் செலவழிப்பதற்கும் பரந்த எல்லை கொடுக்கப்பட்டிருந்தது.

மாற்றுத்தடைகளோடு (exchange restrictions) ஒப்பிடும் போது, மாற்றுத் தீர்வுச் சிறப்புடையதாக இருக்கின்றது. வரை

1 பிரிட்டிஷ், மாற்றுத்தடைகள் ஏற்படுவதற்கு முன்பு ஸ்டெர்லிங் பிரதேசமென்பது, தங்களின் செலாவணிகளைப் பவுண்டு ஸ்டெர்லிங்குடன் (pound sterling) கணக்கிட்டு நிலையாக வைத்துக் கொண்டிருந்த நாடுகளைக் குறிக்கும். 1940ஆம் ஆண்டிலிருந்து, இது தங்களின் நிதிகளை அப்பிரதேசத்தில், ஏறக்குறைய தடையேதுமின்றி மாற்றிக் கொள்வதற்காக, ஒன்று சேர்ந்த நாடுகளைக் குறித்தது. இதன்படி வேறு செலாவணியைக் கொடுத்துவிட்டு மாற்றாக ஸ்டெர்லிங் பிரதேசத்தின் செலாவணியைக் கொடுப்பதைக் கட்டுப்படுத்த மேற்படி கூட்டுக்கட்டுப்பாடு (joint control) ஏற்படுத்தப்பட்டது. ஸ்டெர்லிங் பிரதேச நாடுகள் அவைகளின் டாலர்களின் அளிப்பையும் ஒன்று திரட்டின. ஸ்டெர்லிங் பிரதேசத்தின் எல்லைகளும் (boundaries of the sterling area) சமயத்திற்குச் சமயம வேறுபட்டுக் கொண்டேயிருந்தன. ஆயினும், பிரிட்டிஷ் காமன் வெல்த்தும் (கானடா, நியூபவுண்ட்லாண்டு ஆகிய இருநாடுகளையும் தவிர்த்து) ஐஸ்லாந்து Iceland) ஈராக் (Iraque) போன்ற ஒரு சில நாடுகளும் சேர்ந்து, ஸ்டெர்லிங் பிரதேச வளர்ச்சிக்கு நிரந்தர ஆதாரநாடுகளாக இருந்தன.

யறுக்கப்பட்ட வழிகளில் அது வாணிபத்தைப் பெருக்கமடையச் செய்கின்றது. பன்னாட்டுப் பேரங்களில் (international transactions), பணத்தைப் பயன்படுத்துவதைத் தடைசெய்துகொண்ட பல நாடுகள், பணமற்ற வாணிபத்தை (Moneyless trade) அல்லது பண்டமாற்றை மேற்கொள்ளவும் ஆரம்பித்தன. மாற்றுத் தீர்வு முறையை மேற்கொள்ள ஆரம்பித்ததும் ஒவ்வொரு நாட்டிலுள்ளும் பணம் பயன்படுத்தப்படுகிறது. ஜெர்மனியிலுள்ள ஸ்விஸ் கடனாளிகள் ஜெர்மனியிலுள்ள ஸ்விஸ் கடன் ஈவோருக்குப் பணம் செலுத்துகின்றனர். இதைப் போலவே ஸ்விட்சர்லாந்திலுள்ள ஜெர்மன் கடனாளிகள் அங்குள்ள ஜெர்மன் கடன் ஈவோருக்குப் பணம் செலுத்துகின்றனர். ஆனால் ஒவ்வொரு நாட்டிலும் இது மையபாங்கின் மூலம் நடக்கிறது. ஸ்விஸ் நாட்டின் இருதரப்பினரும், ஜெர்மனி நாட்டின் இருதரப்பினரும் (Two parties) ஒருவரையொருவர் இன்னாரென்று அறியமாட்டார்கள். போருக்கு முன்னுள்ள ஆண்டுகளில், சில நாடுகள் கிட்டதட்ட பண்டமாற்று முறையில் வாணிபத்தை நடத்த ஆரம்பித்தன. வணிகர்கள் நேரடியாக கோதுமையைக் கொடுத்துவிட்டு எஃகை (steel) வாங்கினர். இத்தகைய பரிவர்த்தனை வாணிபத்தில் பணம் முக்கியமாக ஒரு கணக்கலகாகவே பயன்பட்டது. எத்தனை அந்தர் (hundredweight) கோதுமை எத்தனை டன்கள் எஃகிற்குப் பரிவர்த்தனை செய்யப்பட்டன என்பதைக் கணக்கிடும் கணக்கலகாகவே பணம் பயன்படுத்தப்பட்டது. இப்பேரங்களில் ஒவ்வொரு பக்கத்துப் பேரமும் மற்றொன்றை ஈடுசெய்வதற்காக (compensate) கணக்கிடப்படுவதால் இவ்வகையான வாணிபம் ஈடுசெய்யும் வாணிபம் என்றழைக்கப்பட்டது. இதில் சம்பந்தப்பட்ட பேரங்களில் பெரும்பான்மையும், சம்பந்தப்பட்ட ஒவ்வொரு நாட்டிலும், பணமாற்றையே (money exchange) தழுவியுள்ளன; எனவே, கோதுமையை ஏற்றுமதி செய்யும் ருமேனிய (Rumanian) ஏற்றுமதியாளரொருவர் தாம் மாற்றுகப் பெற்ற (got in exchange) ஜெர்மனியின் எஃகை, தானே பயன்படுத்திக் கொள்ளவில்லை. அதை வேறு யாருக்கோ விற்றுவிட்டார். தீர்வுக்கும் (clearing) ஈடுசெய்தலுக்கும் உள்ள வேறுபாடு என்னவெனில், பண்டங்களின் ஏற்றுமதி இறக்குமதி ஆகிய இரண்டு பகுதிகளும், கீழ்க்கண்டவாறு ஏற்பாடு செய்யப்படாத வரையில் ஈடுசெய்தலுக்கு (compensations) அனுமதி கொடுக்கப்பட மாட்டாது: அவ்வேற்பாடு என்னவெனில் இரண்டு நாடுகளுக்கு மிடையே எந்தவிதமான செல்லும் (payment) இருக்கக்கூடாது; அயல்நாட்டிற்குச் சொந்தமான மையபாங்கின் கணக்கொன்றிற்குச் செலுத்தும் செல்லு ஒன்றும் (payment into an account) இருக்கக்கூடாது.

சில நாடுகள், தடைகள் முறை முழுவதையும் (the whole system of restrictions) மெதுவாக நீக்கிவிடுவதற்காக இவ்வாருன பலவகைப்பட்ட மாற்றங்களை மாற்றுத் தடைகளில் (exchange restrictions) செய்தன. இதற்குச் சிறந்த உதாரணம் 1938ஆம் ஆண்டில் நாசிகளால் (Nazis) வீழ்த்தப்படுவதற்கு முன்பிருந்த ஆஸ்டிரியாவாகும். ஆஸ்டிரியாவில் ஆரம்பத்தில் மாற்றுத் தடைகள், அந்நாட்டிற்குக் கடனுகக் கொடுக்கப்பட்ட அயல் நாட்டுக் குறுந்தவணை மூலதனம் (short-term capital) ஏற்றுமதி யாவதைத் தடுப்பதற்காகவே விதிக்கப்பட்டன. ஆனுல் முதல் பீதி (panic) முடிவடைந்ததும் குறுந்தவணைக் கடன் ஈவோரிடம் ஓர் ஏற்பாடு செய்துகொள்ளப்பட்டது. அதாவது கடன் திருப்பித் தருதலைச் சற்று நீண்ட காலத்திற்குப் பரவலாக ஏற்குமாறு ஓர் ஏற்பாடு செய்யப்பட்டது. மதிப்பிறக்கம் செய்யப்பட்ட பவுண்டு ஸ்டெர்லிங் போன்ற செலாவணிகளுக்கு இணையாக ஒரு முறை ஆஸ்டிரியாவின் செலாவணியாகிய ஷில்லிங் (shilling) கும் மதிப் பிறக்கம் செய்யப்பட்டிருந்தால் அது தானே பிற முறைகளின் உதவி எதையும் எதிர்பாராமல் திறம்பட புழங்கி வந்திருக்கும். ஆஸ்டிரியாவில் வேறு எப்போதையும் விட அப்போது மிகப் பயங் கரமான தோர் பணவீக்கம் இருந்தது. ஷில்லிங்கின் மதிப்புக் குறைக்கப்படும் என்று அரசாங்கம் அறிவித்ததானது, இன்னொரு பீதியைக் கிளப்பியிருக்கக்கூடும். எனவே, கிரமமான 'அரசாங்க' (official) வீதத்திற்கும் குறைவான மாற்று வீதங்களை, பல்வேறு மாற்றுத் தீர்வு ஒப்பந்தங்களிலும், ஈடு செய்தல் ஒப்பந்தங்களிலும் நிர்ணயிக்கும் முறை கடைப்பிடிக்கப்பட்டது. 'கறுப்புச் செலா வணி' (black bourse) யின் மீதுள்ள தடைகள் (prohibitions), அச் செலாவணி சிறிது சிறிதாக வெள்ளையாக மாறிப் பூரணமாக வெள்ளைச் செலாவணியாக மாறும் வரையிலும், ஒவ்வொன்ருகத் திரும்பப் பெற்றுக்கொண்டே வரப்பட்டன. இவ்வாருக ஆஸ் டிரியா, மூலதன ஏற்றுமதியைத் தவிர, மற்றத் தடைகள் யாவை யையும் நீக்கவல்லதாக இருந்தது.

திறமைமிக்க நாசிகளுக்கு (Nazis) மாற்றுத் தீர்வு போர்ப் பொருளாதாரத்தை வளர்க்கும் சக்திவாய்ந்த ஆயுதமாக இருந் தது. மாற்றுத் தடைகளை (exchange restrictions) எவ்வாறு தங்களின் நன்மைக்குப் பயன்படுத்தினரோ, அதைப்போலவே முன்னுல் நஷ்ட ஈட்டிற்காக (reprisal) தங்கள் மீது திணிக்கப்பட்ட மாற்றுத் தீர்வுகளை (exchange clearings) எவ்வாறு பயன் படுத்துவதென்பதையும் கண்டுபிடித்தனர். இது எவ்வாறு பயன் படுத்தப்பட்ட தென்பதை அறிந்துகொள்வதற்கு, போர்க்காலப் பொருளாதாரத்திற்கும், அமைதிக் காலப் பொருளாதாரத்திற்கு

மிடையேயுள்ள வேறுபாட்டை நாம் நன்குணர வேண்டும். சாதாரணமான ஓர் அமைதிக்காலப் பொருளாதாரத்தில், அதிலும் குறிப்பாக ஒரு மந்த காலத்துப் பொருளாதாரத்தில், அயல் நாட்டு வாணிபம் (foreign trade) முக்கியமான தொரு வேலை அளிக்கும் சாதனமாகக் (as a means of providing employment) கருதப்பட்டது. வேலையளிக்கும் சாதனமாக இருந்தமையால் ஏற்றுமதிகள் அதிகரிக்கப் பட்டன; உள்நாட்டுத் தொழிலாளருடன் போட்டியிடுவதாகக் கருதப்பட்டமையால் இறக்குமதிகள் குறைக் கப்பட்டன. ஆனால் போர்ப் பொருளாதாரத்தில், தொழிலாளர் தட்டுப்பாடு (shortage of labour) இருப்பதாலும், அதிகமான உற்பத்திக்குத் தணிக்க முடியாத தேவை (insatiable demand) இருப்பதாலும், மேற்கூறிய ஏற்றுமதி இறக்குமதிகளின் அதிக ரிப்பும் குறைப்பும் தலைகீழாக இருக்கும். அப்போது கச்சாப் பொருள்களாகவும், செய்பொருள்களாகவும் இறக்குமதிகள் முக்கிய மாகத் தேவைப்பட்டன. ஏற்றுமதிகள் ஒரு துரதிர்ஷ்ட அவசியப் பொருளாகக் (unfortunate necessity) கருதப்பட்டன—தொழிலா ளர்கள் பற்றுக் குறையாக இருக்கும்போது அவர்களில் சிலர் தேவைப்படுவதால் துரதிருஷ்டமான தென்றும், இறக்குமதிகளுக் கான செல்லுகளை செலுத்துவதற்காக ஏற்றுமதிகள் அவசியமாக இருத்தலால் அவசியப் பொருளென்றும், ஏற்றுமதிகள் கருதப் பட்டன. சுருக்கமாகக் கூறுமிடத்து, சமாதானப் பொருளாதாரம், முக்கியமாக அயல்நாடுகளுக்குப் பண்டங்களை விற்பனை செய் வதில் முக்கியமாக ஆர்வமாக இருக்கும்; போர்ப்பொருளாதாரம் அயல்நாடுகளிலிருந்து பண்டங்களை வாங்குவதில் ஆர்வமுடைய தாக இருக்கும்.

மாற்றுத் தீர்வு (exchange clearing) பண்டங்களை விற்பதற் கான சாதனமாகக் கருதப்படுமேயானால், அது அவ்வளவு சிறந்த சாதனமாக இல்லை என்று தான் கூறவேண்டும். ஏனெனில், மாற் றுத் தீர்வில் செல்லுகளைப் பண்டங்கள் மூலமாகத்தான் பெற முடியும். இதில் உள்ள இன்னும் அதிகமான வசதியின்மை என்ன வெனில், ஒரு குறிப்பிட்ட நாட்டின் பண்டங்களை செல்லாகப் பெறு வதே. ஆனால், வாங்கும் சாதனமாக இருப்பதைப் பொறுத்த மட்டில், மாற்றுத் தீர்வு மிகச் சிறந்த சாதனமாக இருக்கிறது— அதிலும் சிறப்பாக, அயல் நாட்டுச் செலாவணிகளின் காப்பு நிதிகளைப் பெற்றில்லாத ஒரு நாட்டிற்கு இது மிகவும் சிறந்த சாதன மாக இருக்கிறது. இம்முறையில் வாங்கும் பண்டங்களுக்கு, மாற் றுகப் பண்டங்களை அனுப்ப இயலும் வரையில், பணம் செலுத்தப் படவேண்டிய தேவையில்லை. ஆரம்ப முதற்கொண்டே ஜெர்மனி, தான் மாற்றுத் தீர்வு ஒப்பந்தம் செய்திருந்த நாடுகளிலிருந்தே

தன் கொள்முதலே அதிகரித்துக்கொண்டிருந்தது. இப்படிச் செய்வதன் மூலம் சிக்கனப்படுத்தப்பட்ட அதன் அயல்நாட்டுச் செலாவணிகளின் அளிப்பை, மாற்றுத் தீர்வு நாடுகளிலிருந்தும் வாங்க முடியாத பண்டங்களுக்குப் பயன்படுத்தியது. ஜெர்மனி மாற்றுத் தீர்வைக் கடைப்பிடிக்கும் நாடுகளிலிருந்துதான், அவைகள் ஜெர்மனியிடமிருந்து பண்டங்களை வாங்குவதற்குத் தயாராக இருந்ததைவிட அல்லது இயன்றதைவிட, அதிகப்படியான பண்டங்களை விலைக்கு வாங்கியது. இதனால் ஜெர்மனிக்கு நிறையக் கடன் ஏற்பட்டது. அயல் நாடுகளுக்குச் சொந்தமான நிலுவைகள் ஏராளமாக பெர்லினில் குவிந்துகிடந்தன. ஜெர்மனி கொடுக்கவேண்டிய இக் கடனைத் தீர்த்துக்கொள்ளவேண்டுமாயின், ஜெர்மனியின் பண்டங்களை வாங்குவதன் மூலந்தான் தீர்த்துக்கொள்ள முடியும்—அதாவது ஜெர்மனி அளிக்கக்கூடிய பண்டங்களை வாங்குவதன் மூலம். போர் ஆரம்பித்ததற்குப் பிறகு கிரேட் பிரிட்டன் இதே நிலையில்தானிருந்தது. இதுதான் பிரசித்திபெற்ற 'ஸ்டெர்லிங் நிலுவைகளுக்கு' அடிப்படையான காரணமாகும். இந்த ஸ்டெர்லிங் நிலுவைகளைத் திருப்பி அடைப்பதில் இங்கிலாந்திற்குப் பல ஆண்டுகளுக்குத் தொல்லையாக இருந்தது.

மாற்றுத் தீர்வுகளின் (exchange clearings) அடுத்த கட்டம், அவற்றை ஜெர்மனி தனது அரசியல் ஆதிக்கத்தையும் பொருளாதார ஆக்கிரமிப்பையும் தென் கிழக்கு (south-eastern) ஐரோப்பிய நாடுகளில் பரப்புவதற்குப் பயன்படுத்தியதேயாகும். இந்நாடுகளிலிருந்து ஏராளமான அளவு தானியங்களை ஜெர்மனி வாங்கியது; இதற்குப் பதில் ஜெர்மனியின் செய்பொருள்களை (manufactures) ஏராளமான அளவு அதிக விலை கொடுத்து வாங்கும்படி கட்டாயப்படுத்தியது. ஜெர்மனியின் இந்தப் பண்டங்கள், இந் நாடுகளின் செய்பொருள்களின் அளிப்பில் முக்கிய மாறுதலை உண்டுபண்ணிற்று. அவைகளின் அதிக விலைகள், ஜெர்மானியர்கள் தானியங்களுக்குக் கொடுத்த நல்ல விலைகளுடன் சேர்ந்து, அவைகளின் உள்நாட்டு விலை மட்டங்களை (internal price levels) அதிகரிக்கச் செய்தது. இதனால் இவைகளோடு மற்ற நாடுகள் கொண்ட தொடர்பு அறுந்துபோயிற்று. ஏனெனில், அதிகரித்திருந்த உள்நாட்டு விலை மட்டம் இவைகள் ஏனைய உலக நாடுகளுடன் போட்டியிடுவதைக் கடினமானதாகச் செய்துவிட்டது. இதன் காரணமாக அவைகள் ஜெர்மனியுடன் இன்னும் அதிகமாக வாணிபம் செய்யும்படி நேரிட்டது. ஏன் இந்த நாடுகள், தாங்கள் பயந்துகொண்டிருக்கும் ஒரு நாட்டினிடம் ஒவ்வோர் ஆண்டிலும் அதிகமாக, எதிர்பார்த்துக்கொண்டிருக்கும்படி செய்யும் ஒரு முறையை விடாமல் தொடர்ந்து கடைப்பிடிக்கச் சம்மதிக்கின்றன என்று கேட்

கல்லாம். இதற்கு விடை யாதெனில், ஜெர்மனி ஒன்றுதான் அவர்களது விவசாயப் பண்டங்களை மிக அதிகமான அளவிற்கு வாங்கியது. அது மட்டுமல்லாமல் ஜெர்மனி ஒன்றுதான் உலக அங்காடியின் விலையைவிட (world market price) அதிகமான விலையைக் கொடுத்தது (ஜெர்மனியின் நுகர்வோர் இந்த அதிகப்படியரான தொகையைக் கொடுக்கும்படி செய்வது சாத்தியமாக இருந்தது). இந்த நாடுகளனைத்திலும், விவசாயப் பொருள்களே அடிப்படையான நாட்டுச் செல்வமாக (national wealth) இருந்தன. ஜெர்மனி அளித்த அதிகப்படியான விலை அவைகளை இயற்கையில், கவரச் செய்தது. அதேசமயத்தில் அவைகள் ஜெர்மனியின் செய் பொருள்களை நம்பியிருக்கவேண்டியிருந்தது; சில சமயங்களில் மற்ற நாடுகளின் பண்டங்கள் சிறந்தனவாகவும் விலை குறைந்தனவாகவுமிருப்பினும் அவைகளையே அந்நாடுகள் வாங்கவேண்டியிருந்தன.

தனது வாங்குந் திறனைக் (buying power) கொண்டு, ஜெர்மனி தனது ஆதிக்கத்தை நிலைநிறுத்தியது. மாற்றுத் தீர்வு (exchange clearing mechanism) முறைகளைக் கொண்டு செய்யப்பட்ட சூழ்ச்சிகளுக்கு (tricks) முடிவேயில்லாமலிருந்தது. உதாரணமாக, ஜெர்மன் வணிக நிறுவனங்கள் (German firms) ருமேனியக் குடியானவர்களுக்கு சைக்கிள் வண்டிகளைத் தவணை கொள்முறையில் (hire-purchase terms) பல ஆண்டுகளில் அடைக்கும்படியான ஏற்பாட்டில் விற்றன. சைக்கிள் வண்டிகள் நாட்டின் எல்லையைத் தாண்டியதும், அவைகளுக்கீடான ருமேனியக் கோதுமை அல்லது எண்ணெய், ருமேனியாவிலிருந்து வெளியேற்றப்பட்டது. பெர்லினிலுள்ள தீர்வுக் கணக்கி (clearing account) லிருந்து, ஜெர்மன் வணிக நிறுவனங்கள் (German firms) உடனடியாகப் பணம் செலுத்தப்பட்டன. ஆனால் உண்மையில் நெடுங்காலக் கடனைக் கொடுத்தவர்கள் ருமேனியா மக்களே. ஏனெனில், புகாரெஸ்டிலுள்ள (Bucharest) தீர்வுக் கணக்கில் (clearing account) சைக்கிள்களுக்காகப் பணம் செலுத்தப்படும் வரையில், ருமேனிய ஏற்றுமதியாளர்கள் காத்திருக்கும்படி வற்புறுத்தப்பட்டனர். இவ்விதமாகவே, அவர்கள் விரும்பிய கோதுமைக்கு அல்லது எண்ணெய்க்குப் பணம் செலுத்த ஒரு புதிய வழியினைக் கண்டுபிடித்தனர்; தேவையாக இருந்த கடனை வாங்கும்படி ருமேனியாவைக் கட்டாயப்படுத்தினர்.

ஒரு நாடு சமாதானப் பொருளாதாரத்திலிருந்து போர்ப் பொருளாதாரத்திற்குச் செல்லும்போது, தனது செலாவணிக்கும் மற்ற நாட்டின் செலாவணிக்கு மிடையேயுள்ள மாற்றுவீதத்தில்

(exchange rate) அதனுடைய போக்கும் வேறுபடும். போருக்கு முன்னுலுள்ள ஆண்டுகளில் நாடுகளின் இயல்பான போக்கு (normal tendency) தங்களது செலாவணிகளுக்குக் குறைவான மதிப்பைத் தேடுவதாக அல்லது குறைந்தபட்சம் மிகை மதிப்பைத் தவிர்ப்பதாக இருந்தது. அவைகளின் ஏற்றுமதிகளுக்குந் தடையேதுமில்லாமலிருக்கும்பொருட்டே இவ்வாருன ஒரு கைக்கோளை அவைகள் கடைப்பிடிக்கலாயின. செலாவணியின் குறைமதிப்பு இறக்குமதிகளின் விலைகளை அதிகரிக்கச் செய்ததென்பது, நாட்டிற்குக் குந்தகம் விளைவிப்பதாக இருப்பதைவிட, நன்மை செய்வதாகவே யிருந்தது. ஒரு நாடு பொருள்களை விற்பதைவிட வாங்குவதில் நாட்டம் செலுத்தும்போது, பொருள்களை விலை மலிவாக வாங்கும்பொருட்டு, தனது செலாவணிக்கு அதிகமதிப்புத் தேவைப்படும். மிகவும் அதிகமான மதிப்பும் நாட்டின் குறிக்கோளை முறியடித்துவிடும்; ஏனெனில் நாட்டின் ஏற்றுமதிகள் மிகவும் விலை ஏறிவிடுவதால் அவைகள் பாதிக்கப்படும். ஆனுல் மாற்றுத் தீர்வு (exchange clearing) முறையில் இவ்வாறு நடப்பதில்லை. ருமேனியாவின் லியூ (leu)[1] வுக்கு ஒப்பாக ரிக்மார்க் (Reichmark) கின் மதிப்பை ஜெர்மனி உயர்த்தியது. இதனுல் ஜெர்மனி ருமேனிய கோதுமைக்கு 'லாயி' (லியூவுக்குப் பன்மை—lei) கணக்கில் கவர்ச்சியான விலையை அளித்தது. அதே சமயத்தில் ரிக்மார்க் கணக்கின்படி பார்த்தால் ஜெர்மனிக்கு அதிக செலவில்லாமல் தான் இருந்தது. ஜெர்மனியின் பொருள்கள் ருமேனியாவில் விலை அதிகமாக இருந்தால் அதனுல் ஜெர்மனிக்கு என்ன நஷ்டம்? ருமேனியர்கள் ஜெர்மனியின் பொருள்களை எவ்வளவு விலை அதிகமாகக் கொடுத்தும் வாங்கும்படி கட்டாயப்படுத்தப்பட்டனர். அவர்கள் அவ்வாறு வாங்கினுல்தான் தங்களது கோதுமையின் விற்பனை மூலம் ஏதாவது பலனைக் (return) காணமுடியும். உண்மையில், ஜெர்மனியின் பொருள்கள் விலை அதிகமாகச் செல்லச் செல்ல அது ஜெர்மனிக்கு இலாபமாக இருந்தது. ஏனெனில் ஒரு டன் கோதுமைக்கு விலையாக சிறிதளவு ஜெர்மனியின் பொருள்களைக் கொடுத்தாலே போதுமானதாக இருந்தது. கிரேட் பிரிட்டனின் ருமேனிய அங்காடி (Rumanian market of Great Britain) இதற்கு நேர் எதிரிடையாக இருந்தது. இந்த ஆண்டுகளில் கிரேட் பிரிட்டனின் செலாவணி தொடர்ந்து குறை மதிப்புச் செய்யப்பட்டு வந்தது. ருமேனியா, கிரேட் பிரிட்டனுக்குத் தனது கோதுமையை விற்க இயலாமலிருந்தது. ஏனெனில் அதனுடைய உலக அங்காடியின் விலை, ஸ்டெர்லிங்கிலிருந்து லாயியாக, குறைந்த ஸ்டெர்லிங் வீதத்தில் மாற்றப்படும்போது, ஜெர்மனிக்கு விற்பதன் மூலம்

1 லியூ (leu) என்பது ருமோனியாவின் ஃபிரான்டு (franc)

கிடைக்கக்கூடிய விலையைக் காட்டிலும் மிகக்குறைவாக இருந்தது. கிரேட் பிரிட்டனின் பொருள்கள் விலை மலிவாக இருந்தபோதிலும், ருமேனியா அவைகளை வாங்க இயலாமலிருந்தது. ருமேனியா, பிரிட்டனுக்குப் பொருள்களை விற்க இயலாமலிருந்தமையால், பிரிட்டனின் பொருள்களுக்கு பணம் செலுத்துவதற்கு ருமேனியா விடம் பவுண்டுகளும் (Pounds) இல்லாமலிருந்தன. லீயூவுக்கு இணையாக பவுண்டின் மதிப்பை உயர்த்துவதின் மூலம், அல்லது தான் ருமேனியாவிலிருந்து வாங்கும் பண்டங்களுக்கு உலக விலை யைக் (world price) காட்டிலும் அதிக விலையைக் கொடுப்பதன் மூலமும் தான், ருமேனியாவின் வாணிபத்தின் பெரும்பகுதியை பிரிட்டன் அடைந்திருக்கக்கூடும்.

ஆனால், ஒரு தடையிலா அங்காடியில் (Free market)— லண்டனில் அப்போதிருந்த அயல்நாட்டு மாற்று அங்காடியைப் போல—ஸ்டெர்லிங்கின் மதிப்பை வேறு இடங்களில் மாற்ற மடையச் செய்யாமல் ருமேனியாவில் மட்டும் மாறச் செய்வதிய லாது. தடையிலா அங்காடிகளில், ஓரே செலாவணிக்கு ஓர் இடத்தில் அதிக மதிப்பும் மற்றோர் இடத்தில் குறைவான மதிப்பும் இருக்கும்படி செய்தல் இயலாது. கட்டுப்பாட்டு முறையினால் (Controlled system) ஜெர்மானியர் இந்த மிகப்பெரிய நன்மையை அடைந்தனர். ஜெர்மனி பலதிறப்பட்ட பேர எதிர்ப்பு (bargain-counter) மார்க்குகளைப் (marks) பெற்றிருந்ததனால்தான், ஒவ்வொரு பண்டத்திற்கும் ஏற்றாற்போல் மாற்று வீதத்தை அமைத்துக்கொள்ள முடிந்தது. மாற்றுத் தீர்வுகள் தான் அவர் களைப் பல்வேறு மதிப்புள்ள மார்க்குகளைக் கடைப்பிடிக்கத் துணை செய்தன. அவர்களது வாங்குந் திறன் சாதகமான பேர நிலையி லிருந்தால் (Strong bargaining position) மார்க்கின் மதிப்பு அதிகரிக்கப்படும். அதே சமயத்தில், அதிகமாகப் போட்டியுள்ள அங்காடிகளில் அவர்களுடைய ஏற்றுமதியாளர்களுக்கு உதவி செய்ய வேண்டுமாயின், அப்போது மார்க்கின் மதிப்புக் குறைக் கப்படும்.

எனவே, மாற்றுத் தீர்வுகளென்பவை ஆக்கிரமிப்பு எண்ண முடைய ஒரு நாட்டால், சக்திவாய்ந்த போர்ப்பொருளாதார ஆயுதமாக வஞ்சகமாகக் கைக்கொள்ளப்படுகின்றன. ஆனால் இதை வைத்துக்கொண்டு அமைதியை விரும்பும் நாடுகள் (peace-loving countries) இம் முறையைக் கையாளுதலைக் கண்டனஞ் செய்தல் கூடாது; ஏனெனில் அவைகளும் தங்களது வாடிக்கைக் காரர்களை ஏமாற்றவும், கொடுமை செய்வனவாகவுமிருக்கின்றன. கொள்கை அளவில் என்னதான் நன்மைகள் இருந்தபோதிலும்,

நாசிகள் (Nazis) மாற்றுத் தீர்வுகளைப் பயன்படுத்திய முறை, பெரும்பான்மையான மக்களின் கண்களில் ஓர் அவக்கேடாக உறுத்திக்கொண்டே யிருந்தது.

## மாற்றுக் கட்டுப்பாட்டின் நன்மைகள்
## (The Merits of Enchange Control)

மாற்றுக் கட்டுப்பாட்டின் நன்மைகளைப்பற்றி நாம் எந்தப் பொதுவான கருத்தைத் தெரிவிக்கலாம்? எந்தக் கருத்தும் சில வரையறைக்குட்பட்டதாகவே யிருக்கும். தலையீட்டைக் (intervention) குற்றமற்றதென்று நாம் தள்ளிவிடலாம். தலையீட்டினால், மதிப்பு மாறிய செலாவணியை (distorted currency), நீண்ட காலத்திற்கு அவ்வாறே வைத்திருத்தல் கடினமென்பதை இந்த அத்தியாயத்தில் 'தலையீடு' என்னும் உட்பிரிவில் (section) பார்த்தோம். ஒரேபக்கத்திலேயே அமுக்கப்படும்போது தலையீட்டிற்குக் (intervention) கிடைக்கும் சாதனங்கள் சிறிது காலத்திலோ அல்லது நெடுங்காலத்திலோ தீர்ந்துவிடுகின்றன. நிரந்தரமாகத் தலையீடு செய்யவேண்டியதொன்று அன்றாட ஏற்ற இறக்கங்களை (fluctuations) மாற்று அங்காடியிலிருந்து நீக்குவது தான். இது மிகவும் மெச்சத் தகுந்த தொன்றேயாகும்; இது செலாவணியின் நிரந்தரமான நிலைத்தன்மைக்கும் அதிக நிலையற்ற தன்மைக்கும் நடுவில் உள்ள ஒரு முறையாகும். இம்முறையின் அடிப்படையில் எதிர்காலத்தில் பன்னாட்டுச் செலாவணி முறை அமைக்கப்படலாம் என்பதை நாம் பிறகு பார்ப்போம். நிலைத்த தன்மையை உண்டுபண்ணும்தலையீட்டில் (Stabilizing Intervention) நாம் தெரிந்துகொள்ளவேண்டியது யாதெனில் அதைக் கையாளுவது கடினம் என்பதே. அங்காடியில் பின்னர் தலைகீழாக மாறக்கூடிய தாற்காலிக அமுக்கம் (temperary pressure) எது, சூழ்நிலைகளால் ஏற்படுத்தப்பட்ட நிரந்தாமான மாற்றம் எது என்பதை அரசாங்கம் முடிவு செய்வதற்கு முன்னால், அதனுடைய செலாவணியின் சமநிலையான மாற்றுவீதம் (equilibrium rate of exchange) என்னவென்று ஒரு சரியான மதிப்பீட்டை (accurate estimate) மனத்தில் கொள்ளவேண்டும். இவ்வாறு கொள்வது எளிதான காரியமல்ல. அரசாங்கங்கள், பிடிவாதமாகத் தங்களால் இயலாத வீதங்களில் பற்றிக்கொண்டிருக்கும் (தாங்கள் நிலைத்த தன்மையை உண்டுபண்ணுகிறோம் என்ற நினைப்பில்). இவ்வுதாரணங்களைச் சமீப ஆண்டுகளின் பண வரலாற்றில் நிறையக் காணலாம். எனவே, தப்பாகக் கணக்கிடுதல், நாட்டின் சாதனங்களையும் வரவையும் (credit) வீணான நம்பிக்கையுடன் பயன்படுத்துதலில் கொண்டுபோய் நிறுத்தும். மேலும், தனது செலா

வணியின் சமநிலை வீதத்தை (equilibrium rate) ஓர் அரசாங்கம் சரியாக ஊகித்திருந்த போதிலும் தனது சாதனங்களை (resources), தன் சொந்தச் செலாவணியிலோ அல்லது அயல் நாட்டுச் செலாவணிகளிலோ எளிதாகக் குறைமதிப்பீடு (under estimate) செய்யக்கூடும். இது, தாற்காலிகமாக ஏற்படும், ஆனால் பலமாதங்கட்கு நீடிக்கும், அதிகமான தேவை அல்லது அளிப்பைச் சமாளிக்க அவசியமானதாகும். இந்த அதிகமான தேவை (excess demand) அல்லது அளிப்பு அவைகள் மீண்டும் பழைய நிலைக்கு வரும் வரையில் ஏராளமான பணச் செலவை உண்டுபண்ணும்.

மாற்றுத்தடை (Exchange Restriction)யின் மீது பொதுவாகக் கூறப்படும் எந்த முடிவும் ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சியைச் சுட்டிக்காட்டவே வேண்டும். குடிமக்களைத் தாங்கள் விரும்பியவற்றைச் செய்ய வொட்டாமல் தடுக்கும் வேறு பொருளாதாரச் சட்டத்தைப் போன்றே மாற்றுத் தடையும் மகிழ்ச்சியற்ற தொன்றாகும் என்பது யாவராலும் ஒப்புக்கொள்ளப்படும். அது புதியவகைக் குற்றச் செயல்களை (criminal offence) உண்டு பண்ணுகிறது. மாற்றுத்தடையானது மகிழ்ச்சி தராததொன்றாக இருந்தாலும் அது சில சமயங்களில் அவசியம் தேவையான தொன்றாக இருக்கிறது. 1947ஆம் ஆண்டில், இந்த மூலநூல் அச்சிற்குக் கொடுக்கத் தயாராகிக் கொண்டிருக்கும்போது, ஐரோப்பிய நாடுகள் இருந்த நிலைமையை இதற்கு ஓர் உதாரணமாகக் கூறலாம். அவைகள் தாங்கள் வாழ்வதற்குப் போதுமான உணவையும், தொழில் செய்வதற்குப், போதுமான கச்சாப் பொருள்களையும் வாங்குவதற்கு, டாலர்கள் அவசரமாகத் தேவைப் பட்டன. அவைகள், போரின் பொருளாதார விளைவுகளால் மிகவும் பாதிக்கப்பட்டன. அவைகளின் இயல்பான வாணிபம் (normal business) சீர்குலைந்தது; தொழிற் சாதனங்கள் குறைந்துவந்தன; அயல்நாட்டுச் செலாவணிகளை அவைகள் தேவைப்பட்ட அளவிற்குச் சமமான ஏற்றுமதிகளைச் செய்யவும் அவைகளால் இயலாமலிருந்தது. இந்தச் சூழ்நிலைகளில், இந்த நாடுகளுக்குச் சமநிலையான மாற்றுவீதம் (equilibrium rate of exchange) இல்லாமலிருந்தது. எவ்வளவுதான் டாலர்களை அதிக விலை மதிப்புள்ளதாகச் செய்யினும், அது அவர்களது தேவைகளான கோதுமையையும் எஃகையும் (wheat and steel) சற்றேனும் குறைக்கவில்லை. இவையிரண்டும் அப்போது ஐக்கிய அமெரிக்காவிலிருந்து தான் வாங்கவேண்டியதாகவும் உலகத்தில் வேறு எங்கும் பெறமுடியாததாகவும் இருந்தது. ஏற்றுமதிப் பொருள்களை, எவ்வளவு விலை மலிவாகச் செய்தபோதிலும், அதிகரிக்க முடியாமலிருந்தது. இவை

களைக் குறைவாக இருக்கும்படி செய்தது அவைகள் விற்கப்பட இருந்த விலையல்ல, அவைகளை உற்பத்தி செய்வதில் இருந்த இடர்ப் பாடே. இவ்வாறான சூழ்நிலைகளில் மாற்று அங்காடி யாதொரு கட்டுப்பாடு மின்றித் தாராளமாக விட்டுவிடுதல், தேவைக்கும் அளிப்பிற்கும் இடையிலுள்ள இடைவெளியை (gap) மூடுவதற்கு யாதொன்றும் செய்யாமல், ஐரோப்பியச் செலாவணிகளைப் பள்ளத்தில் வீழ்த்துவதாகும்.

இம்மாதிரியான சந்தர்ப்பங்களில் தடை (restriction) மிகவும் அவசியமானதாகும். ஆனால் இவைகள் போர்க்கால நிலை குலைதலின் நிகழ்ச்சிகளாகும். இயல்பான காலங்களில் (normal times) ஒவ்வோர் உற்பத்தியாளருக்கும் பல்வேறு சாதனங்களின் அளிப்பு (sources of alternative supply) இருப்பினும் மாற்று அங்காடியின் ஒழுங்குபடுத்தும் சாதனங்கள் தங்களது சக்தியை மீண்டும் பெறும். சாதாரணமாக ஒவ்வொரு செலாவணிக்கும் ஒரு சமநிலை வீதம் (equilibrium rate) இருக்க வேண்டும்—அதாவது இந்தவீதத்தில் இறக்குமதிகளுக்குப் பணம் செலுத்துவதற்காகப் போதுமான அளவு அயல்நாட்டுச் செலாவணிகளை ஈட்டும் ஏற்றுமதிகளிருக்கும்—ஒரு சில விதிவிலக்குகளைத் தவிர்த்து, சமநிலைவீதம், உண்மையான வீதத்திற்கு (actual rate) மிகவும் புறம்பாக இருக்கக்கூடாது. சமநிலைவீதம் உண்மையான வீதத்திற்கே வந்துவிடுமானால், அது நாட்டுப் பொருளாதாரத்திற்கு (national economy) மிகவும் அதிர்ச்சியை உண்டு பண்ணும். போர்க்காலத்தின் தனித்தன்மையான சூழ்நிலைகளிலும், போருக்குப் பின்னலுள்ள புனரமைப்பின்போதும் (readjustment) —இவைகள் பல ஆண்டுகளுக்கு நீடிக்கும்—மாற்றுத் தடையின் (Exchange Restriction) அவசியத்தை ஏற்பது சரியான நோக்கமாகக் காணப்படுகிறது. போரின் சீர்குலைவிற்குப் பிறகு, மாற்று அங்காடியின் வழியிலுள்ள தடைகள் சீராகத் தளர்த்தப்படுவது இயலுமென்றும், நிலைத்ததன்மையை உண்டாக்கவல்ல அரசாங்கங்களின் தலையீட்டைக் (intervention) கொண்டோ அல்லது இல்லாமலோ தேவை, அளிப்பு இவைகளின் தடையற்ற போக்கால் மாற்று வீதங்கள் தீர்மானிக்கப்படுவது இயலுமென்றும் இன்றும் நம்புவதும் சரியானதாகவே யிருக்கிறது.

எனினும் இதற்கு ஒரு பெரிய, நிரந்தரமான விதிவிலக்கு ஒன்றுள்ளது. மாற்று அங்காடியில். பண்டங்கள் விற்பனையாலும் கொள்முதலாலும் மட்டும், பேரங்கள் எழுவதில்லை; மூலதனத்தின் பெயர்ச்சிகளாலும் (movements of capital) ஏற்படுகின்றன. பின்னர்க் கூறப்பட்டது நடைமுறை பேரங்களை (current-

transactions) விழுங்குமளவிற்கு மிகப்பெரியது. மாற்றுத்தடையைப் பயன்படுத்தாமல், நடைமுறை பேரங்களுக்குத் தேவையான (current transactions) செலாவணியின் தேவையையும் அளிப்பையும் சமனப்படுத்துவது ஒரு நாட்டிற்கு இயன்ற போதிலும் மூலதனப் பெயர்ச்சியைச் சமாளிக்க முடியாமலேயே இருந்தது. மாற்றுத் தடையானது 1931ஆம் ஆண்டில், மத்திய ஐரோப்பாவிலிருந்து, மூலதனம் பீதியால் நெருங்கியடித்துக்கொண்டு வெளியேறுவதைத் தடுக்கும் பொருட்டு ஏற்படுத்தப்பட்டது. பிரஞ்சு முதலாளிகளின் போக்கால், பிரான்சு, போருக்கு முந்திய பத்தாண்டுகளில் மிகவும் இன்னலுற்றது. பிரஞ்சு அரசாங்கம் பாதகமாக ஏதாகிலும் செய்யும் போதெல்லாம், பிரஞ்சு முதலாளி தனது மூலதனத்தை நாட்டை விட்டு வெளியே அனுப்பும் ஒரு பழக்கம் அப்போது குடிகொண்டிருந்தது. போரின்போது பிரிட்டன் ஏராளமான அளவு கடன்களை வைத்துக்கொண்டிருந்தது. பிறநாடுகளிலிருந்து பெற்ற பண்டங்களாலும் பணிகளாலும் இக்கடன்கள் ஏற்பட்டன. இவைகள் பெரும்பாலும் லண்டனில் பாங்கு இருப்புக்களாகவும் (bank balances) குறுங்கால முதலீடுகளாகவும் (Short term investments)வைக்கப்பட்டிருந்தன. மாற்று அங்காடியில் பிறநாட்டுச் செலாவணிக்கு மாற்றுகக் கொடுக்க அவைகள் தாராளமாக அனுமதிக்கப்பட்டிருந்தால், அங்காடி சமநிலையிலிருந்தபோதிலும், அதை அவைகள் மூழ்கடித்திருக்கும். இவ்வாறு தப்பித்துக் கொண்டு ஓடுகிற மூலதனத்தைப் பெற்றுக்கொள்ளுவதும், பூரணமாக மகிழ்ச்சியானதொரு நடவடிக்கையாக இல்லை. ‘சுடும்’ பணம் (hot-money) என்றழைக்கப்பட்ட பணத்தைப் பெற்று இருப்பு வைத்துக்கொள்ள ஐக்கிய அமெரிக்கா அழைக்கப்பட்டது. இச்சுடும் பணத்தின் அளவைக் குறித்து போருக்கு முன்னர் அமெரிக்காவில் ஏராளமான எதிர்ப்புகள் தோன்றின.

இந்தக் காரணங்களுக்காகவே, பிரட்டன் வுட்ஸ் உடன்படிக்கைகளில் (Brettonwoods Agreements) உலகத்தின் பெரும்பாலான அரசாங்கங்கள், சந்தர்ப்பங்கள் அனுமதிக்கும்போது நடப்புப் பேரங்களின் (current transactions) மீதுள்ள தடைகளை (restrictions) நீக்கிவிடவேண்டுமென்னும் கோட்பாட்டை (doctrine) ஆதரித்தன. மூலதன பேரங்களின் மீதுள்ள (Capital transactions) மீதுள்ள தடைகள் காலவரையறையின்றி நீடிக்க வேண்டுமென்றும், அவைகள் ஒப்புக்கொண்டன. இது மிகவும் அவசியமான தொன்றாக இருந்தது; ஆனால் இதில் ஓரிரண்டு விதிவிலக்குகள் செய்யப்பட வேண்டியதாக இருந்தது. முதலாவது நடப்புப் பேரத்திற்கும் (current transactions) மூலதன பேரத்திற்கும் மீதுள்ள

(Capital transaction) உள்ள வேறுபாடு கோட்பாட்டளவில் தெளிவாக இருந்தபோதிலும், அனுமதி கோரப்படும் ஒரு குறிப்பிட்ட பேரம் நடைமுறை பேரமா அல்லது மூலதன பேரமாஎனக் கூறுவது கடினமாக இருந்தது. இது 1947ஆம் ஆண்டு ஜூலை மாதத்தில் அமெரிக்கா ஏலங் கேட்டபோது (American bidding) தெளிவாக்கப்பட்டது; நடைமுறை பேரங்களுக்குப் பவுண்டு ஸ்டெர்லிங் மாற்றப்படக் கூடியதாக (convertible) இருந்தது. இது, நடைமுறை பேரங்களுக்குக்கூட, தடை முழுவதும் நீக்கப்பட்டதாக இல்லை. ஏனெனில் ஸ்டெர்லிங்கை சொந்தமாக வைத்துக்கொண்டிருக்கும் பிரிட்டிஷ்காரர்கள் தங்களது பவுண்டுகளை விற்பனைக்குக் கொடுக்கும் அதிகாரம், ஏற்கெனவே இருந்ததுபோல் மிகவும் கடுமையாகத் தடை செய்யப்பட்டது. ஆனால் 'மாற்றுரிமை' (convertibility) என்பது, நடைமுறை பேரங்களின் (அதாவது, மூலதன மல்லாத) விளைவாக ஸ்டெர்லிங் பவுண்டுகளைப் பெற்ற அயல்நாட்டினர் 1947ஆம் ஆண்டு ஜூலை மாதம் 15ந் தேதிக்குப் பிறகு அவைகளை அயல்நாட்டுச் செலாவணிகளுக்கு மாற்றாக அளிக்க அனுமதிக்கப்பட்டதைக் குறிக்கும்—அதாவது நடைமுறை ஸ்டெர்லிங் எதுவுமே இனி தடை செய்யப்படக் கூடாது (not to be blocked) என்பதைக் குறிக்கும். இதனுடைய நோக்கம் என்னவெனில் இச்சலுகையை நடைமுறை வாணிபத்தின் பேரங்களுக்கு மட்டுமே (transactions arising out of current trade) அளிப்பதும், மூலதன பேரங்களை இன்னும் அதிகமான தடைகளுடன் வைப்பதுமாகும். ஆனால் உண்மையில், நடப்பு பேரங்கள் என்ற போர்வையின் கீழ் ஏராளமான அளவு மூலதனம் மாற்றப்படுவதற்காகக் கொண்டுவரப்பட்டன. இவைகளுக்குக் கொடுக்கப்பட்ட சலுகை பின்னர் ஐந்து வாரங்கள் கழித்துத் திரும்பப்பெற (withdrawn) வேண்டியதாக இருந்தது. ஆகவே இதனால் நாம் தெரிந்துகொள்ளக்கூடியது யாதெனில் நடப்பு பேரங்களுக்கும் மூலதன பேரங்களுக்குமிடையே ஏற்படுத்திய வேறுபாடு அதிகமான பயன் ஒன்றையும் அளிப்பதாக இல்லையென்பதே. மூலதனம் நாட்டைவிட்டு வெளியேறுவதற்கோ அல்லது நாட்டினுள் நுழைவதற்கோ அதிகமான தேவை ஏற்படும்போது, நடப்பு பேரங்கள் சமநிலையில் இருந்தபோதிலும்கூட, நடப்பு பேரங்கள் மீதும் மூலதன பேரங்கள் மீதும் மாற்றுத் தடைகளை விதிப்பது அவசியமானதாக இருக்கலாம்.

இரண்டாவதாக, மூலதன பேரங்களின் மீது தடை விதிக்கப்படும் நோக்கத்தை பன்னாட்டுப் பண முறையின் நிரந்தரமான அங்கம் என்று மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்ள முடியாது. அதிக வருவாயைத் (highest yield) தரும் நாடு விட்டு நாடு பெயர்ந்து

செல்லும் மூலதனத் தன்னுரிமை (freedom of Capital)—அதாவது அதனுடைய முதலீடு மிகவும் கூடுதலான புதிய செல்வத்தை (largest increment of new wealth) உண்டுபண்ணக்கூடிய இடங்களை நாடிச் செல்லும் தன்னுரிமை—உலகத்தின் உற்பத்தித் திறனை வளர்க்கும் சக்தி வாய்ந்த ஆயுதங்களில் ஒன்ருக இருந்து வந்தது. அது, தற்போது, இல்லாமல் போகுமானுல், உலகம் மிகவும் ஏழ்மையாகிவிடும். மூலதனப் பெயர்ச்சியின் தன்னுரிமையை (freedom of movement for capital) திரும்பப் பெறுவதற்கு நீண்டநாள் பிடிக்கலாம். ஆயினும், அவ்வாருன ஒரு திட்டத்தில் அது அவசியம் இடம்பெறவே வேண்டும். மூலதன பேரங்களின் மீதுள்ள தடையை (restriction) நிரந்தரமாக்க வேண்டுமென்ற எந்த உணர்ச்சியும் தடுக்கப்படவேண்டும். மூலதனத் தடை எவ்வளவு காலத்திற்குத் தேவையென்பது அயல்நாட்டுச் செலாவணிகளின்மீதுள்ள இடர்ப்பாடான விளைவுகளாலும், டாலரின் மிகப்பெரிய சக்தியினுலும் தீர்மானிக்கப்படுகின்றது. இதனைப்பற்றிப் பத்தாம் அத்தியாயத்தில் முதல் உட்பிரிவில் அதிகமாகக் கூறுவோம். வருகிற ஆண்டுகளில், உலகத்தின் மற்றப்பகுதி நாடுகள் (rest of the world) தங்களின் செலாவணிகளுக்கும் டாலருக்கும் மாற்றுவீதத்தில் சமநிலையைக் கொண்டு வருவது சாத்தியமாகலாம் (அல்லது சாத்தியமாக இல்லாமலும் போகக்கூடும்). இந்தவீதத்தில் அந்தநாடுகளின் மக்கள் தங்களின் நடப்பு பேரங்களுக்குத் தேவைப்படும் டாலர்களும் அவர்கள் ஈட்டும் (earn) டாலர்களும் சமமானதாக இருக்கும் (இங்கே 'அந்த நாடுகள்' என்று குறிப்பிட்டிருக்கும் நாடுகள் டாலரைச் செலாவணியாக வைத்திராத உலகத்திலுள்ள அத்தனை நாடுகளையும் குறிக்கும்). அப்படியானுல், டாலருக்கும் மற்றச் செலாவணிகளுக்குமிடையே நடக்கும் நடப்பு பேரங்களின் (current transactions) மீதுள்ள தடைகள் இனி அவசியமற்றவைகளாகப் போய்விடும். ஆனுல், ஐக்கிய அமெரிக்கா, தடையின்றி பெயர்ந்து செல்லும் எந்த மூலதனத்தையும் (அது அரசியல் பாதுகாப்பைத் தேடி, பயந்து செல்லும் மூலதனமாக இருந்தாலும் அல்லது வால் ஸ்ட்ரீட்டை (wall street) நோக்கி இலாபம் சம்பாதிக்கும் பொருட்டுச் செல்லும் யூகபேர மூலதனமாக (speculative capital) இருந்தாலும் அல்லது இலாபந்தரவல்ல நெடுங்கால முதலீட்டைத் தேடிச் செல்லும் 'போர்வீரன் மூலதனமாக' (soldier capital) இருந்தாலும்) தன்பால் ஈர்க்கும் சக்தி வாய்ந்ததொரு காந்தமாக (powerful magnet) இருந்தது. ஐரோப்பிய மூலதனம் அமெரிக்காவிற்குச் சென்றுகொண்டிருப்பதற்கான பலமான தொடர்ந்த போக்கு (strong and continuing tendency) நீடித்திருக்குமானுல், ஐரோப்பிய நாடுகள் தங்களுக்குத்தேவையான டாலர்களின்

அளிப்பை (supply of dollors) ஈட்டுவதென்பது முற்றிலும் இயலாததாகிவிடும். எனவே, மூலதனமானது, அட்லான்டிக் பெருங்கடலைத் தாண்டிச் செல்லுவதை இயன்ற அளவு தடை செய்வதும் அல்லது குறைந்தபட்சம் அதற்குப் பங்கீடு முறையைக் கொணர்வதும் அவசியமானதாக இருக்கலாம்.

மாற்றுத்தடை முறையில் (Exchange Restriction) சில நியாய மான அல்லது குறைந்தபட்சம் அவசியமான பயன்கள் உள்ளன வென்றுகூறலாம். ஆனால் மாற்றுத்தடையானது முற்றிலும் முறை யற்ற சில பயன்களுக்குப் பயன்படுத்தப்பட்டிருப்பதை அல்லது பயன்படுத்தப்படப் போவதை யாரும் உண்மையில்லை என்று கூறிவிடமுடியாது. உதாரணமாக, சமநிலை வீதம் (equilibrium) என்று ஒன்று இருக்கும்போதும் அந்த வீதத்தில் ஒரு நாட்டின் கணக்குகள் (தடையற்ற அங்காடியில்) சமனமாக்கப்படலாமாத லாலும், மாற்றுக் கட்டுப்பாடு (exchange control) மூலம் தனது செலாவணியின் மதிப்பை நிலைகுலையச் செய்து வைத்திருப்பது ஒருநாட்டிற்கு எப்போதும் தவறான செய்கையாகும். நாம் ஏற் கெனவே உதாரணங் காட்டிய ஆஸ்டிரிய நிகழ்ச்சி போல் நாடு தன்னுடைய சமநிலை வீதத்தை விட்டுப் பின்னடையும்போது அதனைச் சரிப்படுத்தி மீண்டும் சமநிலைக்குக் கொண்டு வருவதற் காகப் பயன்படுத்துவதே, மாற்றுத்தடையை நியாயமாகப் பயன் படுத்தும் ஒரே வழியாகும். போர்ப் பொருளாதாரத்தின் நலனை உத்தேசித்து நாசிகள் (Nazis) கையாண்ட முறையான மாற்றுக் கட்டுப்பாடு (exchange control) பிறநாடுகளை ஏமாற்றுவதாகவும் ஆக்கிரமிப்பதாகவும் உள்ளதென்பதையும் எனவே நாடுகளில் இதனைக் கடைப்பிடிக்க அனுமதித்தல் கூடாதென்பதையும் எடுத்துக்கூறத் தேவையில்லை.

ஆகவே, பொதுவான மாற்றுக் கட்டுப்பாட்டைப் பற்றிப் பொதுவாக ஒரு முடிவு கூறலாம். அதாவது எங்கெல்லாம் இயலு கின்றதோ அங்கெல்லாம் இது தவிர்க்கப்படவேண்டுமென்பது தான். ஆனால் சூழ்நிலைகள் இதனைப் பலமுறை அவசியமாக் கலாம். எந்தச் சூழ்நிலைகளில் எந்தவிதமான மாற்றுக்கட்டுப்பாடு நியாயமானதென்று விளக்கவும், மாற்றுக்கட்டுப்பாட்டைத் தவறாகப் பயன்படுத்துவதைத் தடை செய்யவும் பன்னாட்டுச் சட்டத்தைக் கொண்டுவர முயற்சிகள் எடுக்கப்பட்டு வருகின்றன. 1944ஆம் ஆண்டில் நடந்த பிரட்டன்வுட்ஸ் உடன்படிக்கை களால் (Bretttonwoods Agreements) ஏற்பட்ட பன்னாட்டுப் பண நிதியாலும் (International Monetary Fund), பன்னாட்டு வாணிப நிறுவனத்தை (International Trade Organization) தோற்றுவிப்பு

தற்குக் காரணமாக இருந்த உடன்படிக்கை ஏற்பாடுகளாலும் (negotiations) இத்துறையில் ஏற்கெனவே முயற்சிகள் ஆரம்பமாகி விட்டன. இம்முறை வெற்றி பெறுமா என்பது, அமெரிக்கர் விரும்புவது போல் எல்லா நாடுகளுக்கும் பொருந்துமாறு பொதுவான கோட்பாடுகளை ஏற்படுத்துவதை நாடுகள் விரும்புகின்றனவா அல்லது ஒவ்வொரு நிகழ்ச்சியின் தன்மையை ஆராய்ந்து, அம் முன்னிகழ்ச்சிகளைப் பின்பற்றி (based on precedents), தெளிவான வழக்குச் சட்டத்தை (case law) இயற்றுவதில் நாடுகள் (சற்றுக் குறைவான பேர் வரவுடன்) நாட்டம் கொண்டுள்ளனவா என்பதைப் பொறுத்தே இருக்கும்.

இவ்வத்தியாயத்தில் இதுவரையிலும் ஆராயப்பட்ட 'மாற்றுக் கட்டுப்பாடு' (Exchange control) பல வழிகளில் கையாளப்படலாமென்பது இருபது ஆண்டுகட்கு முன்னர் தான் கண்டுபிடிக்கப் பட்டது. எனினும் ஒரே ஒரு வகையான தலையீடுதான் (Intervention) மிகப் பழமையானதும் எல்லாநாடுகளாலும் கடைப் பிடிக்கப்படுவதுமாகும். இம்முறை அயல்நாட்டுச் செலாவணி மாற்றுக்குப் பெரும்பாலும் இயல்பான முறையாகவும் சரியான முறையாகவும் கருதப்பட்டது. அது என்ன முறை? அம்முறையே பொன்திட்டமாகும் (gold standard). இதனை அடுத்த அத்தியாயத் தில் காண்போம்.

# ௯. பொன் திட்டம்
## (The Gold Standard)

### பொன் திட்டத்தின் பணிகள்
### (The Functions of The Gold Standard)

மாற்று வீதங்களில் நிலையான தன்மையை (Stability) ஏற்படுத்துவதற்கான சாதனங்களில் பொன் திட்டம் (Gold standard) மிகச் சிறந்த சாதனமாகக் (device) கருதப்படுகிறது. இதனை ஆராய்வதற்கு முன்னர், மாற்றுவீதங்களில் (exchange rates) நிலையான தன்மை விரும்பப்படுவதற்குக் காரணமென்ன என்பதை ஆராய்வோம்.

மாற்றுவீதங்களில் ஏற்ற இறக்கங்கள் சிறிதளவேயிருந்தால் அதனால் இடைஞ்சலொன்றும் ஏற்பட்டுவிடாது. பல்வேறு நாடுகளின் விலைகள் செலாவணிகளின் பெருமளவு பெயர்ச்சிகளைத் தூண்டுமளவுக்கு வேகமாக வேறுபட்டுச் செல்வதில்லையென்பது ஏட்டளவில் (in theory) உண்மை என்றாலும், நடைமுறையில் மாற்றுவீதங்கள் கட்டுப்பாடெதுவுமின்றித் தாராளமாக விடப் படுமேயானால், ஏற்ற இறக்கங்கள் (fluctuations) கணிசமான அளவிற்கு இருக்குமென்பதைப் பல்வேறு காரணிகள் (a number of factors) உறுதிப்படுத்துகின்றன. பருவகால காரணிகள் (seasonal factors) ஒரு செலாவணியின் மதிப்பை ஓர் ஆண்டில் ஒரு சமயம் அதிகப்படுத்துகின்றன; மற்றொரு சமயம் குறைத்து விடுகின்றன. எதிர்பாராத விதமாக ஒரு பக்கம் நோக்கியே ஏராளமான செலுத்துக்கள் (payments) அதிக அளவில் செலுத்தப் படுமானால் அது ஒரு செலாவணியின் மாற்றுமதிப்பை திடீரெனக் குறையச் செய்து மற்றொன்றின் மாற்றுமதிப்பை அதிகரிக்கச் செய்யும். வதந்திகளாலும் (rumours) அல்லது ஏறக்குறைய அறிவுக்கூர்மையான எதிர்பார்த்தலாலும் (intelligent anticipation)

நடைபெறுகிற யூக பேரத்தால் (speculation) ஒரு மாதத்தில் ஏராள மாக வாங்குதலும் (a flood of buying) அதனை அடுத்த மாதத்தில் ஏராளமாக விற்பனை செய்தலும் ஏற்படுகின்றன. இந்நிலையில் பன்னாட்டு வாணிபம் மிக்க தொல்லைக்கு உட்படவேண்டி வரும்.

மாற்றுவீதங்களில் ஏற்படும் ஏற்ற இறக்கங்கள் பன்னாட்டு வாணிபத்தில் (international trade) ஒரு பெருந்தடையாக இருப்பது நமக்குத் தெளிவாக விளங்கும். வணிக பேரத்தின் ஆரம்பம் முடிவு ஆகிய இருகாலங்களுக்கும் இடையேயுள்ள காலத்தில் மாற்றுவீதத்தில் ஏற்படும் மாறுதலானது அவ்வணிக பேரத்தின் இலாபத்தினை முழுவதும் போக்கிக் கடுமையான நஷ்டத்தை விளைவிக்கும். செலாவணிகளின் மதிப்பு ஏறி இறங்கிக் கொண் டிருக்கும்போது (fluctuating) வணிகர்கள் நிலையற்ற சூழ்நிலையில் (atmosphere of uncertanity) வாணிபஞ் செய்யவேண்டியவர்களா யிருத்தலால், வாணிபத்தின் அளவு (volume of trade) இதனால் பெரிதும் பாதிக்கப்படுகிறது. ஆனால், வாணிபம் முழுவதுமே இதனால் பாதிக்கப்படுவதில்லை; ஏனெனில் ஓர் ஒப்பந்தத்தில் ஏற் படும் நஷ்டம் பிறிதொன்றின் இலாபத்தால் ஈடுசெய்யப்படும். ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்குக் கொடுக்கப்படும் கடன் தொகைகள்தாம் (loans) பன்னாட்டு நிதியத்தை (international finance) எளிதாக இயங்கச் செய்யப் பெரிதும் துணை செய்கின்றன. இத்தகைய கடன்களுக்கான ஒப்பந்தம் கடனாளி நாட்டின் செலா வணியில் செய்யப்படுமேயானால், கடனாளிக்கு, தனது செலா வணியில் ஆண்டுதோறும் எவ்வளவு வட்டி கட்டவேண்டுமென்று ஒப்பந்தம் செய்யப்பட்டதென்றோ அல்லது கடனைத் திருப்பி அடைக்கும்போது கடன் சுமை எவ்வளவு இருக்குமென்றோ தெரி யாது. கடன் ஒப்பந்தம் கடனாளியின் செலாவணியில் செய்யப் படுமேயானால், கடன் கொடுப்பவருக்கு இதேபோன்று தமக்கு எவ்வளவு வட்டி வருமென்றும் முடிவாக எவ்வளவு செலுத்த வேண்டுமென்றும் தெரியாது. எல்லாக் கடன்களிலும் கடன் ஈவோரின் கையே மேலோங்கி யிருப்பதால், கடன்கள் கடன் ஈவோரின் செலாவணியிலேயே அளிக்கப்படுகின்றன. இதனால் கடன் பெறுபவருக்கு நிறைய இடைஞ்சல்கள் ஏற்படுகின்றன. இதனால் பன்னாட்டுக் கடன்களின் (international loans) எண்ணிக் கையும் அளவும் குறைகின்றன.

ஏற்ற இறக்கங்களைக் கொண்ட மாற்றுவீதங்கள், இயல்பான காலங்களில் கூட (normal times) பன்னாட்டு வாணிபத்திற்கும் நிதிக்கும் இடையூறுகளை ஏற்படுத்துகின்றன. இயல்புகடந்த காலங்களில், செலாவணிகள் யூகபேர (speculative) ஏற்ற இறக்

கங்களை மிகவும் பரவலாகப் பெற்றிருக்கும் போதும், ஏற்றுமதி களைத் தூண்டுமென்ற நம்பிக்கையில் அரசாங்கம் தங்களது சொந்தச் செலாவணிகளைச் செயற்கையாக மதிப்பைக் குறைக்க (depreciate) முயலும்போதும், இடையூறுகள் உச்சமாக இருக் கின்றன. நிலையான தன்மை (stability), அதிக தீமைகளின்றி நிலைநிறுத்தப்படுமானால், அது வரவேற்கத் தகுந்ததாகும்.

இதனால், செலாவணிகளின் நிலையான தன்மையை (stability) நிலைநிறுத்துவதே நோக்கமாக இருக்கவேண்டு மென்பதில்லை. அவ்வாறு நிலைபெறச் செய்தலினால், பன்னாட்டு வாணிபத்தில் கிடைக்கக்கூடிய நன்மைகளைப் போலவே, உள்நாட்டு வாணி பத்தில் தீங்குகளும் உண்டென்பதை நாம் பார்க்கப்போகிறோம். இந்நலன்களையும் தீமைகளையும் சீர்தூக்கிப் பார்த்து, தீமைகளை விட நலன்கள் அதிகமாக உள்ளன என்று முடிவு செய்யப்பட்ட தால்தான் பொன் திட்டம் கொண்டுவரப்பட்டது எனக் கருதுவது தவறாகும். இவ்வாறு நலனையும் தீமையையும் சீர்தூக்கிப் பார்த்தே பொன் திட்டம் கொண்டுவரப்பட்டதென சில சமயங்களில் வாதிக் கப்படுகிறது. ஆனால் இதற்காகவோ அல்லது வேறு எந்த நோக் கத்திற்காகவோ பொன் திட்டம் கொண்டுவரப் படவில்லை. இதற்கு எதிரிடையாக, பொன்திட்டம், பணத்தின் வரலாற்று வளர்ச்சியினால் (historical development) அது இயற்கையாக வளர்ந்தது. ஆரம்பத்தில் செலாவணிகள் உலோகங்களாலாகிய நாணயங்களாக இருந்தன. நாளடைவில் பொன்னே தலைசிறந்த பண உலோகமாகத் (monetary metal) திகழ்ந்தது. தற்போது, இரண்டு செலாவணிகளில் ஒவ்வொன்றும் பொன் நாணயங்களா லானவை என்று வைத்துக்கொள்வோம். ஒரு செலாவணியின் மதிப்பின் நிலைத்த தன்மை மற்றொன்றின் மதிப்பினுடைய நிலைத்த தன்மையைப் பொறுத்திருக்கும். 25 குன்றிமணி எடை பொன் னிற்கும் 100 குன்றிமணி எடையுள்ள பொன்னிற்கும் (grains of gold) உள்ள ஒப்பீடான மதிப்பில் (relative value) எந்தவித ஏற்ற இறக்கமும் இருப்பதில்லை. பொன் நாணய முறையிலிருந்துதான் தற்காலக் காகிதச் செலாவணிகள், படிப்படியாகத் தோன்றின. முதற்படியாக, பொன் நாணயங்களுடன், ஒரு குறிப்பிட்ட விகித அளவு பணத்தாள்கள் (notes), பொன்னால் தாங்கப்பட்டும் (backed by gold) பொன்னாக மாற்றப்படக்கூடியனவாகவும் இருக்கும்படி அனுமதிக்கப்பட்டன. ஆரம்பத்தில், பாங்கு நோட்டுக்கள் பொன்னாக மாற்றப்படக் கூடியனவாக இருந்தன (convertible into gold). அவைகள் பாங்கரின் கடன்பத்திரங்கள் (ஐ. ஓ. யூக்கள்). அவைகள் தாராளமாக பொன்னைக் கொடுத்து மீட்கப்படாத வரையில் பணமாகப் புழங்கப்படுவதற்குத் தகுதியாக, அவை

களின் மேல் போதுமான நம்பிக்கை (confidence) இருக்காது. பணவளர்ச்சியின் அடுத்த கட்டமான (next stage) பாங்கு வைப்புகள் (bank deposits) செக்குகள் ஆகியவற்றின் வளர்ச்சி யிலும் (evolution) இந்த நிலைதானிருந்தது—ஆரம்பத்தில் அவை களும், நம்பிக்கையைப் பெறுவதற்காகப் பொன்னால் மீட்கப்படக் கூடியனவாக (redeemable) இருந்தன. ஆரம்பத்தில், பாங்கு நோட்டுகளும் பாங்கு வைப்புகளும் மொத்தப் பணத்தில் (total money) ஒரு சிறு பகுதியாகவே (small part) இருந்தன. அவை கள் மொத்தப் பணத்தில் மிகப் பெரும்பகுதியாக வளர்ச்சியடைந்த போதிலும், அவைகள் பொன்னாக மாற்றப்படுதல் (convertible into gold) நெடுங்காலமாகப் பாதுகாக்கப்பட்டது. பொன்பணமும் தாள் பணமும் (paper money) ஒன்றாகப் புழங்கும் வரையில் ஒன்றுக் கொன்று மாற்றப்படக் கூடியனவாக (interchangeable) இருக்க வேண்டும். ஏனெனில் வேறுபட்ட மதிப்புகளை உடைய இரு வகைப் பணத்தை ஒன்றாகப் புழக்கத்தில் வைத்திருப்பது கடினம். ஒரு தலைமுறைக்கு முன்னால் கடைசியாக இருந்த பொன் நாணயங் களும் மறைந்துவிட்டபடியால், இனிமேல் பாங்கு நோட்டுக்களைப் பொன்னால் மீட்கப்படுவது அவசியமற்றதாக இருந்தது. ஆனால் அவ்வாறு மீட்கப்படுவது முன்போலவே இயன்றதாகவும் இருந் தது. தற்காலத்தில் உலகத்தின் ஒவ்வொரு செலாவணியும் (துணை நாணயங்களான செப்பு, வெள்ளி, நிக்கல் நாணயங்களைத் தவிர்த்து) தாளினாலானதாகவே யிருக்கின்றது. காகிதப்பணமும் (paper money) ஒரு நிர்ணயிக்கப்பட்ட விகிதத்தில் (fixed ratio) பொன்னாக மாற்றப்படுவதற்குச் சட்டப்படி அனுமதிக்கப்படு மானால், அச்செலாவணி பொன் திட்டத்திலுள்ளதெனக் கூறலாம். இவ்வாறு ஒரு காகிதச் செலாவணி ஒரு நிர்ணயிக்கப்பட்ட விகிதத்தில் பொன்னாக மாற்றப்படக் கூடியதாக இருக்கும் இம் முறை ஒரு புதிய பணமுறையின் கண்டுபிடிப்பு (a monetary invention) என்பதோடல்லாமல், இது பல நூற்றாண்டுகளாக வளர்ந்து வந்த ஒரு முறை என்பதையும் தெரிவிக்கின்றது.

பொன் திட்டத்தின் வளர்ச்சியின் பல்வேறு நிலைகள் தனியாக வேறுபடுத்திக் கூறத்தக்க பெயர்களைத் தாங்கியுள்ளன. ஒரு செலாவணி முறையில் பொன் நாணயங்களே முழுவதும் புழக்கத்தி லிருந்தாலும், அல்லது பொன் நாணயங்களும் காகிதப் பணமும் சரிசமமாகப் புழங்கிக் கொண்டிருந்தாலும் அம்முறை, 'முழுப் பொன்திட்டம்' (full gold standard) என்று அழைக்கப்படும். பொன் நாணயங்கள் புழக்கத்திலில்லாமல், மையபாங்கு (Central Bank) ஒரு நிர்ணயிக்கப்பட்ட வீதத்தில் எவ்வளவு அளவு வேண்டுமானாலும் (சில சமயங்களில் இந்த அளவு மிகக் குறைந்த

அளவாக இருந்ததே தவிர மிக உயர்ந்த அளவாக இருக்கவில்லை) செலாவணிக்கு மாற்றுகப் பொன்னை வாங்கவோ விற்கவோ சட்டப்படி கடமைப்பட்டிருந்தது (under legal obligations). இந்த முறைக்கு 'பொன்கட்டித் திட்டம்' (gold bullion standard) என்று பெயர்; ஏனெனில் இம்முறையில் செலாவணி பொன் நாணயமாக மாற்றப்படத்தக்கதாக இல்லாமல் பொன் கட்டியாக (gold bullion) மாற்றப்படத்தக்கதாக இருந்தது. மூன்றுவது வகை, 'பொன் மாற்றுத் திட்டம்'(gold exchange standard). இதன்படி மையபாங்கு, செலாவணியைப் பொன்னைக் கொடுத்து மீட்காமல் பொன்னுக மாற்றப்படத்தக்க (convertible into gold) செலாவணியால் மீட்க வேண்டுமென சட்டப்படி கடமைப்பட்டிருந்தது. பொன் மாற்றுத் திட்டம் எப்போதும் சிறிய அல்லது ஏழை நாட்டால்தான் மேற் கொள்ளப்படுகிறது. இம்முறையில் இந்த நாடு தனது காகிதப் பணங்களை ஒரு நிர்ணயிக்கப்பட்ட வீதத்தில், மிகப் பெரிய பொன் திட்ட நாடுகளில் ஒன்றின் செலாவணியால் மீட்கும். நான்காவது வகைத் திட்டமொன்றுள்ளது. இத்திட்டத்தின்படி அரசாங்கம் தனது செலாவணியை வேறு எந்தவிதமாகவும் மாற்றித்தரத் தேவையில்லை. ஆனால் பொன்னின் மதிப்பில் (in terms of gold) தனது செலாவணியின் மாற்று வீதத்தை நிலையானதாக (stable) வைத்துக்கொள்ளும் கடமையை ஏற்றுக்கொள்கின்றது. நான் காவது வகைத் திட்டத்தை 'பொற் சமன் திட்டம்' (gold parity standard) என நாம் அழைக்கலாம். இம்முறை, எதிர்காலத்தில் பன்னுட்டுப் பணநிதியின் தலைமையில் இயங்குகின்ற முறைக்குச் சமமானதாக இருக்குமென்பதை, இனி நாம் பார்ப்போம். பொன் திட்டம் எந்த வடிவத்தில் இருந்தாலும் அதனுடைய இன்றியமை யாத பண்பானது, அதனுடைய செலாவணி நேர்முகமாகவோ அல்லது மறைமுகமாகவோ, அளவில் அல்லது மதிப்பில் (either in volume or in value) பொன்னுடன் இணைக்கப்பட்டிருப்ப தாகும்.

பன்னுட்டுப் பண உலோகம் (international monetary metal) வெள்ளியாக அல்லது பிளாடினமாக (platinum) இல்லாமல் பொன்னுக இருப்பதற்கு அதனுடைய தொழிற் பயன் சிறப்பை (technical excellence) ஒரு பங்கு காரணமாகக் கூறலாம். ஆனுல் அதை ஒரு வரலாற்று எதிர்பாராத நிகழ்ச்சியென்றே குறிப்பிடலாம். இதுவே முக்கியமான காரணமுமாகும். பொன் திட்டத்தில் இல்லாதிருக்கும் செலாவணியை விட, பொன்திட்டத்திலுள்ள செலாவணி அதிக மதிப்புவாய்ந்ததென்று பொதுமக்களின் கருத்து நிலவுகிறது. தற்கால உலகத்தில் அம்மாதிரியான எந்த ஒரு ஆதாரமு மிருக்கவில்லை. செலாவணிக்குள்ள ஒரே மதிப்பு அத

னுடைய வாங்குந்திறனைப் பொறுத்தேயுள்ளது. இந்த வாங்குந் திறன், முன்னருள்ள அத்தியாயங்களில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளதைப் போன்று பலதிறப்பட்ட காரணிகளைப் பொறுத்தது. ஆனால், செலாவணியின் மதிப்பு, ஒரு நிர்ணயிக்கப்பட்ட பொன் மதிப்பை (gold value) உடையதா இல்லையா என்பதைப் பொறுத்ததல்ல. நெடுங்காலத்தில் செலாவணியின் மதிப்பு மக்கள் அதன் மேல் கொண்டுள்ள நம்பிக்கையைப் பொறுத்தே யிருக்கிறது. செலாவணி அசல் பொன் நாணயமாக இருந்தால் எவ்வளவு நம்பிக்கை யிருக்குமோ அதே நம்பிக்கை அச்செலாவணி பொன்னுக மாற்றப்பட முடியாத காகிதமாக இருந்தாலும் இருக்கக் கூடும்.

தற்கால பொன் திட்டம் இரண்டு பணிகளைப் புரிவதைத் தெளிவாகக் கூறலாம். முதலாவதாக, அது செலாவணியின் அளவைக் கட்டுப்படுத்தும் ஒரு முறையாகும். ஒரு குறிப்பிட்ட அளவு பொன்னைக் காப்பாக வைத்துக்கொண்டுதான் காகிதப் பணங்களை (notes) வெளியிட வேண்டுமென்று செலாவணிச் சட்டங்கள் கோருகின்றன. இதன்படி கிரேட் பிரிட்டனில் 1939ஆம் ஆண்டு போர் துவங்கியதுவரையில் பொன்னைக் காப்பாக வைத்துக்கொள்ளாமல் £ 400,000,000 வரை காகிதப் பணத்தை 'நம்பிக்கை வெளியீடாக (fiduciary issue) வெளியிட இங்கிலாந்து பாங்கு அனுமதிக்கப்பட்டது. ஆனால் இந்தத் தொகைக்கு மேற்கொண்டு வெளியிடப்படும் ஒவ்வொரு காகிதப் பணமும் ஒரு பவுண்டு காகிதப் பணத்திற்கு ஒரு பவுண்டு பொன் வீதம் பொன்னால் தாங்கப்பட்டிருக்க (backed by) வேண்டும். ஆரம்பத்தில் 'நம்பிக்கை வெளியீடு' என்பது மொத்த அளவு வெளியீட்டில் ஒரு சிறு பகுதியாகவே யிருந்தது. ஆனால் இது சீராக, 1939ஆம் ஆண்டில் இங்கிலாந்து பாங்கின் மொத்தக் காகிதப் பண வெளியீட்டளவில் நம்பிக்கை வெளியீடு ஐந்தில் நான்கு பங்காக அதிகரிக்கும் வரை, வளர்ச்சியடைந்தது. எஞ்சியுள்ள ஐந்தில் ஒரு பங்கே பொன்னால் தாங்கப்பட்டிருந்தது. அப்படியும், காகிதப் பண வெளியீட்டில் ஏற்படும் ஒவ்வோர் அதிகரிப்பும் பொற்காப்பு நிதியின் (gold reserve) அதிகரிப்பைப் பொறுத்தேயிருந்தது. எனவே, செலாவணியின் அளவை (Volume of currency) காப்பாக வைக்கப்பட்டுள்ள பொன்னின் அளவோடு சம்பந்தப்படுத்தும் இந்தக் கோட்பாடு இவ்வாறு பாதுகாக்கப்பட்டது. போர் துவங்கியபோது காப்பாக வைக்கப்பட்டிருந்த பொன்னையும் வெளிக் கொண்டுவர வேண்டியதாக இருந்தது. இங்கிலாந்து பாங்கின் பொன் காப்பு (gold reserve) அரசாங்கத்திற்கு விற்கப்பட்டது. அக்காப்புகளுக்குப் பதிலாக அரசாங்கக் கடன் பத்திரங்கள் வைத்துக்கொள்ளப்பட்டன; 'நம்

பிக்கை வெளியீட்டின்' அளவும் ஏறத்தாழ மொத்த வெளியீட்டள விற்குச் சமமாக இருந்தது—போரின்போது பல சமயங்களில் இன்னும் இந்த அளவு அதிகரித்துக்கொண்டே யிருந்தது. 1947ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 16ந் தேதி நம்பிக்கை வெளியீடு £ 1,450,000,000 ஆகி இருந்தது. அப்போது புழக்கத்திலிருந்த காகிதப் பணத்தின் அளவு £ 1,396,530,913 தான்; மேலும் £ 53,716,920 இங்கிலாந்து பாங்கின் பாங்குத் துறையில் வைப் பாக வைக்கப்பட்டிருந்தது. அப்போது பாங்கு £ 247,833களை மைய இருப்பாக வைத்துக்கொண்டிருந்தது. எனவே இங்கிலாந்து பாங்கின் காகிதப்பண வெளியீடு அதனுடைய பொன் இருப்பின் அளவிற்கே இருக்க வேண்டும் என்னும் வரையறை இறந்து விட்டது; அதனுடைய பேயுருவம் (ghost) மட்டுமே தற்காலத்தில் உலவிக்கொண்டிருக்கிறது. ஐக்கிய அமெரிக்காவில் ஐக்கிய ரிசர்வு பாங்குகள் (Federal Reserve Banks) தாங்கள் வெளியிடும் நோட்டுக்களின் மொத்த வெளியீட்டின் மதிப்பில் 40 சதவீதத் தைப் பொன்னுகவோ அல்லது பொன்சான்றிதழ்களாகவோ (gold certificates)[1] இருப்பு வைத்துக்கொள்ள வேண்டுமென்று சட்டப்படி கட்டளையிடப்படுகின்றது. தற்காலப் பணமுறையின் தன்மையை, பிரிட்டிஷ் பாங்குச் சட்டம் மதிப்பதைவிட அதிகமாக மதிக்கும் அமெரிக்கச் சட்டம், ஐக்கிய ரிசர்வுபாங்குகள் தங்களின் வைப்பு பொறுப்புக்களில் 35 சதவீதத்தை [2] (அதாவது அங்கத்தி னர் பாங்குகளின் ரொக்கக் காப்புகள்) காப்பாக வைத்துக்கொள்ள வேண்டுமென்று குறிப்பிடுகிறது. மற்ற நாடுகள் இன்னும் பல திறப்பட்ட காப்புகளை வைத்துள்ளன அல்லது ஏற்கெனவே வைத் துக்கொண்டிருந்தன. அவற்றில் பிரிட்டிஷ் நிர்ணயிக்கப்பட்ட நம்பிக்கை வெளியீடு முறை (British fixed-fiduciary system) யை விட சதவீத காப்புமுறை (percentage-reserve system) யே அதிக மாகப் புழக்கத்திலுள்ளது. காப்புத்தொகை எவ்வளவு வைத்துக் கொண்டிருக்க வேண்டுமென்பது பலவகையாக இருப்பினும், அது அமுலில் இருக்கும்வரையில் மைய பாங்கின் செலாவணி வெளி யிடும் திறனைக் கட்டுப்படுத்துகிறது. பொன் திட்டத்திலிருக்கும் ஒரு மையபாங்கு தனது பொன் இருப்புக்கள் (gold holdings) அனு மதிப்பதைவிட குறைவான அளவு நோட்டுக்களை வெளியிடுவதையே தேர்ந்தெடுத்துக் கொள்ளக்கூடும்—உண்மையில் பொன் திட்டத் தின் கீழுள்ள எல்லா மைய பாங்குகளும் தங்களது பொன் இருப்புக்

1 பொன்சான்றிதழ்களென்பவை, ஐக்கிய அமெரிக்காவின் கருவூலத்தால் (United States Treasury) வெளியிடப்பட்ட தனிவகை நோட்டாகும்இந்நோட்டுக் கள் 100 சதவீதம் பொன்னுல் தாங்கப்படவேண்டும்.

2 இவற்றைப் பொன்னுகவோ அல்லது செலாவணியாகவோ அவைகள் வைத்துள்ளன. 40 சதவீதம் பொன் காப்பு நிதியாக (gold reserve) வைக்கப் பட்டுள்ளது.

களில் சிலவற்றை நெருக்கடிகாலங்களுக்கான (emergencies) ஒரு காப்பு நிதியாக வைத்திருந்தன. ஆனால், சட்டத்தை மீறாமல் தனது பொன் இருப்புக்கள் அனுமதிப்பதைவிட அதிகமாக நோட்டுக்களை வெளியிட அதனால் முடியாது. இது, செலாவணியின் அளவு (volume of currency) திடீரென்றும், தன்முனைப்பாகவும் (arbitrary) அதிகரிப்பதைத் தடுக்க முயற்சிக்கும் ஆரம்பமான வழி (rudimentary way) யாகும்.

பொன் திட்டத்தின் இரண்டாவது பணி (second function) மாற்று வீதங்களின் நிலைத்த தன்மையைப் பாதுகாப்பதாகும். பொன் திட்டத்திலுள்ள நாடு அதன் பண ஆட்சியாளர்களுக்கு (monetary authorities)—அதாவது மைய பாங்கிற்கு—கீழ்க்கண்ட கடமையை ஏற்படுத்துகிறது. அதாவது மையபாங்கு தன்னிடம் விற்பனைக்குக் கொண்டுவரப்படும் எல்லாப் பொன்னையும் நிர்ணயிக்கப்பட்ட விலைகளில் எவ்வளவு வேண்டுமானாலும் வாங்கவும் அதனால் தேவைப்படும் எல்லாப் பொன்னையும் அதேபோன்று நிர்ணயிக்கப்பட்ட விலைகளில் எவ்வளவு வேண்டுமானாலும் விற்கவும் கடமைப்பட்டுள்ளது. 1914ஆம் ஆண்டிற்கு முன்பும், மீண்டும் 1925 லிருந்து 1931 வரையிலுள்ள ஆண்டுகளிலும், இங்கிலாந்து பாங்கு, ஒரு திட்ட அவுன்சு (Standard ounce) பொன்னை £3 17 ஷில்லிங் 9 பென்சுக்கு வாங்கவும் £3 17 ஷில்லிங் $10\frac{1}{2}$ பென்சுக்கு வாங்கவும் சட்டப்படி கடமைப்பட்டிருந்தது. 1925ஆம் ஆண்டிலிருந்து 1931 வரையிலும், 400 அவுன்சுகளுக்கு குறைவான அளவுகளில் பொன்னை பாங்கு வாங்கவோ அல்லது விற்கவோ தேவையில்லை என்றதொரு கட்டுப்பாடு இருந்தது. ஆனால் இந்தக் கால அளவின் போதோ 1914ஆம் ஆண்டிற்கு முன்பாகவோ, பாங்கினின்றும் கேட்கப்பட்ட தேவைகளுக்கு (demands) எந்தவிதமான உயர்ந்தபட்ச (maximum) எல்லையும் நிர்ணயிக்கப்பட்டிருக்கவில்லை. அங்காடியில், எல்லையில்லாமல் நிர்ணயிக்கப்பட்ட விலைகளில் வாங்குபவரும் விற்போரும் இருப்பதால்தான், தீர்மானமாக அங்காடி விலை (market price) நிர்ணயிக்கப்படுகிறது. சட்டங்கள் அமுலில் இருக்கும்வரை லண்டன் பொன்கட்டி அங்காடியில் (London Bullion market) ஒரு திட்ட அவுன்சுக்குப் பொன்னின் விலை $1\frac{1}{2}$ பென்சுக்கு மேல் மாற்றமடைய இயலாது. எல்லாவித எண்ணங்களுக்காகவும் நோக்கங்களுக்காகவும் இது நிலையாக வைக்கப்பட்டுள்ளது. மற்றப் பொன் திட்ட நாடுகளிலும் இதைப் போன்ற ஏற்பாடுகளிருந்தன. ஆனால் இவைகளில் ஓர் அவுன்சு பொன்னிற்கும் செலாவணியின் ஒரு அலகிற்குமிடையே (unit of currency) பல்வேறுபட்ட நிர்ணயிக்கப்பட்ட வீதங்களிருந்தன (different fixed ratios). மாற்று வீதங்களின் நிலையான தன்மையில்

(Stability of exchange rates) இவற்றின் விளைவு அற்பமானதாக இருக்கிறது. யூக்லிட் (Euclid) அவர்களின் கூற்றுப்படி இரண்டு வெவ்வேறு பொருள்கள் ஒரே பொருளுக்குச் சமமென்றால் அவைகள் ஒன்றுக்கொன்று சமம். £1ம் $4·86⅔ம், 113 குன்றிமணி எடையுள்ள தூய பொன்னிற்குச் (fine gold) சமமென்றால், மேற்படி பவுண்டும் டாலரும் ஒன்றுக்கொன்று சமமென்றாகிறது. எனினும் இவ்வாறு சமமாக இருப்பதை, மிகவும் சரிநுட்பமாகச் சமமாக இருக்குமென்று, கூற முடியாது. ஏனெனில் £1 லண்டனில் 113 குன்றிமணி பொன்னுக்குச் சமம். அதுபோல $4·86⅔ நியூயார்க்கில் அதே 113 குன்றிமணி பொன்னுக்குச் சமம். நியூயார்க்கும் லண்டனும் காலத்தாலும் தூரத்தாலும் பிரிக்கப்பட்டிருப்பதால், ஒன்று மற்ற நாட்டிற்குச் செல்வதற்குப் பணச் செலவாகும். £1ம் $4·36⅔ம், இவைகளுக்குச் சமமான அளவு பொன்னை அட்லான்டிக் பெருங்கடலைத் தாண்டி அனுப்புவதற்கு கப்பற் செலவு ஆகுமாதலால், சமமாக இருப்பதினின்றும் விலகி நிற்கும். இச் செலவுகளில் மூன்று வகையான செலவுகள் அடங்கியுள்ளன. அவையாவன: கப்பற் கட்டணம் (Freight), காப்புறுதிக் கட்டணம் (Insurance) நாடு கடந்து செல்லுவதற்குப் பிடிக்கும் காலத்திற்கு வட்டி இழப்பு (loss of interest for the time taken) ஆகியவைகளாம். ஆனால் இச் செலவுகள் சொற்பமாகவேயிருக்கின்றன. 1 பவுண்டுக்குச் சமமான பொன்னை அட்லான்டிக் பெருங்கடலைத் தாண்டி அனுப்புவதற்கான செலவு 1¾ அமெரிக்க சென்டுகளென 1925ல் கணக்கிடப்பட்டது. எனவே, 'நாணயச்சாலை சமநிலை' (mint parity) $4·86⅔=£1 ஆக இருக்கும்போது, மாற்று அங்காடியில் டாலர்களை வாங்குவதைக் காட்டிலும், இங்கிலாந்து பாங்கிலிருந்து பொன்னை வாங்கி அமெரிக்காவிற்குக் கப்பல்மூலம் கொண்டுவந்து ஐக்கிய ரிசர்வு பாங்கிற்கு விற்று டாலர்களைப் பெறுவது விலைமலிவாக இருந்தது. இதைப்போலவே மாற்றுவீதம் $4·885 டாலர்களாக அதிகரித்தால், பவுண்டுகளை (pounds) வாங்குவதைவிட பொன்னை (gold) இறக்குமதி செய்வதே மலிவாக (cheaper) இருக்கும். பொன் பெயர்ச்சிகளை இலாபகரமாக்கும் இம்மாற்று வீதங்கள் முறையே 'பொன் ஏற்றுமதி நிலை' (gold export point) என்றும் 'பொன் இறக்குமதி நிலையென்றும்' (gold import point) அழைக்கப்பட்டன. இவையிரண்டுக்குமிடையே மாற்றுவீதம் (rate of exchange) தடையின்றி இயங்கிக்கொண்டு வந்தது. ஆனால், இரண்டு பொன் நிலைகளுக்குமிடையேயுள்ள வேறுபாடு, சமநிலை வீதத்தில் ஒரு சத வீதத்திற்கும் குறைவாகவேயிருப்பதால், அயல் நாட்டு மாற்று அங்காடியின் சிக்கல்களில் சம்பந்தப்படாத சாதாரண வணிகர்களின் கருத்துப்படியும், நோக்கங்களின்படியும் மாற்றுவீதம் மாறும்ல் நிலையாக இருக்கிறதெனக் கருதப்படுகிறது.

இவ்வாறு ஏற்படுத்தப்பட்ட நிலைத்த தன்மை (stability) எவ்வாறு ஏழாம் அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ள கோட்பாட்டுடன் பொருந்துமென்பது இங்கே ஆராயத்தக்கது. ஏழாம் அத்தியாயத்தில் மாற்று வீதங்களின் நிலையற்ற தன்மை, எவ்வாறு ஒன்றுக்கொன்று மாற்றுச் செய்யப்படும் செலாவணிகளின் மொத்தத் தேவையின் மாற்றத்தையும் அளிப்பின் மாற்றத்தையும் நம்பியிருக்கிறதென்பது நன்கு விளக்கப்பட்டுள்ளது. பொன் திட்டத்தில் வீதமானது $4·849 என்ற நிலையை அடைந்தபோது, மாற்று அங்காடியில், திருப்தி செய்யப்பட இயலாத, டாலர்களுக்கான ஒவ்வொரு தேவையும் இங்கிலாந்து பாங்கிற்கு வேறுவழியாகச் செலுத்தப்பட்டு, டாலர்களை வாங்குவதற்கு அவை பயன்படுத்தப்பட்டன. இவ்வாறு அதிகப்படியான தேவை பிரித்தெடுக்கப்பட்டு, சுற்று வழியில் திருப்தி செய்யப்படுகிறது. அப்போது தான் அங்காடியில் (in the market) தேவையும் அளிப்பும் சமமாக இருக்கும். எனவே செயல்முறையான கருத்தின்படி பார்த்தால் (from the technical point of view) பொன் திட்டமானது மாற்று அங்காடியில் (in the exchange market) செலாவணிக்கான தேவை அளிப்பு ஆகியவை ஒன்றுக்கொன்று எப்போதும் சமமாக இருக்கும்படி—இன்னும் சரி நுட்பமாகச் சொல்லப்போனால், மாற்றுவீதம் ஒரு சத வீதத்திற்கு மேல் செல்லாமல் இருக்கும்படி அவை வேறுபடாமல் செய்யவல்ல ஒரு சாதனமாக இருந்துவருகிறது. [1] சுருக்கமாகச் சொல்லப்போனால் இது தனி வகையான நிலைப்படுத்தலாகும். (a special form of pegging)

பொன்திட்டத்தின் இரண்டு பணிகளும் மிகத் தெளிவாக நமக்கு விளங்குகின்றன. முதலாவது பணி, நோட்டுகள் வெளியீட்டின் அளவைக் கட்டுப்படுத்தும் நோக்கத்துடன், செலாவணியின் அகமதிப்பைப் பொறுத்ததாக இருக்கிறது. இதனை நாம் உள்நாட்டுப் பொன்திட்டம் (domestic gold standard) என அழைப்போம். இரண்டாவது பணி, செலாவணியின் புறமதிப்பை நிலைநிறுத்துவதாகும்; இதனைப் பன்னாட்டுப் பொன் திட்டமென்று (international gold standard) அழைப்போம். உள்நாட்டுப் பொன்திட்டத்தில் (domestic gold standard) அடிப்படையாக இருப்பது பொன்காப்பிற்கும் (gold reserve) செலாவணிக்குமிடையே (சட்டப்படி வகுக்கப்பட்டுள்ள)யுள்ள அளவின் விகிதமாகும் (proportion of volume). செலாவணியைப் பொன்னாக மாற்றக்கூடும் உரிமையே (convertibility of currency into gold)

1 இருமையங்களும் (centres) நியூயார்க், லண்டன் ஆகிய இவ்விரண்டைவிட சமீபமாக இருக்கும் பட்சத்தில், இரு பொன்நிலைகளுக்கும் (two gold points) இடையேயுள்ள வேறுபாடு சிறிதளவேயிருக்கும்.

பன்னாட்டுப் பொன்திட்டத்தின் (international gold standard) முக்கியமான இயல்பாகும்—அதாவது ஓர் அலகு (unit) பொன்னிற்கும், ஓர் அலகு செலாவணிக்குமிடையேயுள்ள நிர்ணயிக்கப்பட்ட மதிப்பின் (value) விகிதமாகும். நாடு சிலசமயங்களில் ஒரு பணியை நிறுத்திவிட்டு மற்றொரு பணியைச் செய்யும். உதாரணமாக, 1931ஆம் ஆண்டில் பவுண்டு ஸ்டெர்லிங் பொன்திட்டத்தை விட்டு விலகியபோது (அதாவது பன்னாட்டுப் பொன் திட்டத்தை விட்டு), மாற்றுரிமையை (convertiblity) அளிக்கும் பாங்குச் சட்டம் (Bank Act) நிறுத்திவைக்கப்பட்டது. இங்கிலாந்து பாங்கிற்கு, பொன்னை ஒரு நிர்ணயிக்கப்பட்ட விலைக்கு (fixed price) அல்லது எந்த விலைக்குமே, விற்கும் கடமையும் இல்லாமற் போய் விட்டது. ஆனால், இங்கிலாந்து பாங்கு தனது பொன் காப்பின் (gold reserve) அளவிற்கே தனது நோட்டு வெளியிடும் அளவை (size of its note issue) அமைத்துக்கொள்ளவேண்டுமென்ற கட்டுப்பாட்டை ஏற்படுத்திய, செலாவணி பாங்கு நோட்டுகளின் சட்டம் மட்டிலும் அமுலில் இருந்தது (1939ஆம் ஆண்டு வரையில் இந்தப் பொற்காப்பு பழைய நிர்ணயிக்கப்பட்ட விலை மதிப்பின் அடிப்படையில் வைக்கப்பட்டிருந்தது. இந்தப் பழைய விலை சற்றும் செல்லுபடியாகாததாக இருந்தது). இதற்கு எதிரிடையாக, நாட்டில் செலாவணியைப் பொன்னாக மாற்றப்படத்தக்கவாறு, செலாவணியின் அளவிற்கும் பொன்னின் அளவிற்குமிடையே (between volume of currency and volume of gold) எவ்வித சட்டப் பிணைப்பும் (legal tie) இன்றி, வைத்துக்கொள்ளுவதும் அதன் வழியாக பன்னாட்டுப் பொன்திட்டத்தில் வைத்துக்கொள்ளுவதும் நிச்சயமாக முடியும். 1914ஆம் ஆண்டிற்கு முன் ஃபிரான்சில் இவ்வாறான நிலைதானிருந்தது. இந்த இரண்டு பணிகளும் வெவ்வேறானவையாகவும், பிரிக்கப்படத்தக்கனவையாகவும் இருப்பதுடன் இரண்டும் அடிக்கடி ஒன்றுக்கொன்று முரண்பட்டிருக்கின்றன. பொன் காப்புநிதி (gold reserve) யானது செலாவணிக்கு ஆதாரமாக (as a backing) வைத்திருக்கப்பட வேண்டும்போது, பொன், ஏற்றுமதிக்குக் கிடைக்காதெனக் காரணங்காட்டப்படுகிறது. அதைப்போலவே, ஏற்றுமதிக்குக் கிடைக்கும்போது, காப்புநிதியாக வைத்துக்கொள்வதற்கு கிடைக்காதெனக் கருதப்படுகிறது. இதன் பயனாக, உள்நாட்டுத் திட்டம், பன்னாட்டுத் திட்டம் ஆகிய இரு திட்டங்களையுங் கொண்ட ஒவ்வொரு நாடும், செயலளவில், இருப்பு வைத்துக்கொள்வதற்கும், பயன்படுத்துவதற்குமாகவும், இரு பொற்காப்புகளை (gold reserves) வைத்துக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது.

இவையிரண்டிலும் பன்னாட்டுத் திட்டம் மிகவும் முக்கியம் வாய்ந்ததாகும். உள்நாட்டுத் திட்டம் செயலை ஒழுங்கீனமாகச்

செய்து முடிப்பதற்குச் (clumsy way) சமமாகும். ஏனெனில் அதன் நோக்கத்தை மற்ற முறைகள் (other methods) சிறப்பாக நிறை வேற்ற இயலும். மற்றொருபுறம், பன்னாட்டுப் பொன் திட்டமே (international gold standard) நெடுங்காலம் மாற்றுவீதத்தை நிலை யானதாகச் செய்யும் ஆற்றல் வாய்ந்த ஒரே சாதனமாக இருக் கிறது. எனவே உள்நாட்டுத் திட்டத்தைப் பற்றி(domestic standard) நாம் கடிதில் ஆராய்வோம். இந்நூலில் அதனை அடுத்து எஞ்சி யுள்ள பகுதியில் ஏறக்குறைய நேரடியாக நாம் பன்னாட்டுப் பொன்திட்டத்தையே ஆராய்வோம்.

## உள்நாட்டுப் பொன் திட்டம்
## The Domestic Gold standard

நாட்டின் காப்புகளில் (reserves)உள்ள பொன்னின் அளவிற் கும் செலாவணியின் அளவிற்குமுள்ள தொடர்பானது மிகத் தொன்மையானது; அது, அசல் நாணயத்திற்குப் (solid coin) பதிலிகளான (substitutes) காகிதப் பணம், பாங்கு செலாவணி (bank credit) இவைகளின் மூலாதாரத்தைக் குறிக்கும் சின்னமாக இருக்கிறது. ஆனால் பல ஆண்டுகளாக இதனைக் கடைப்பிடிப்ப தானது, ஒரு பிடிவாதமான மூடநம்பிக்கையின் (superstition) சின்னமாக இருக்கிறது. அந்த மூடநம்பிக்கை யாதெனில், பணம் 'திடமான' (sound) பணமாக இருக்கவேண்டுமெனில் பொன்னை, அது மக்களுக்குக் கிட்டாதவாறு இருப்பறைகளில் வைத்துப் பூட்டப்படினும், அடிப்படையாகக் கொண்டிருக்கவேண்டு மென்பது. உதாரணமாக, தற்கால கிரேட்பிரிட்டனில், ஒரு பவுண்டு நோட்டுஒன்றைவைத்திருக்கும் ஒருவர், அக்காகிதத்தைப் பொன்னாக மாற்றமுடியாது. உண்மையில் தானும் தனது உடன் உறை குடிமக்களும் (fellow citizens) அதனைப் பணமாக ஏற்றுக் கொள்ளுவதால்தான், அக்காகிதப் பவுண்டிற்கு மதிப்பு இருக் கிறது. இருந்தபோதிலும், சாதாரணக் குடிமகன் பல லக்ஷக் கணக்கான ஆண்டுகளாக பொன்னின் மீதிருக்கும் கண்மூடித்தன மான பெருமதிப்பு மிக அதிகமாக இருந்து வருதலால், சாதாரணக் குடிமகனை அணுகி பவுண்டு நோட்டுக்களுக்கு எக்காரணத்தால் மதிப்பு இருக்கிறதெனக் கேட்டால், அவைகள் 'இங்கிலாந்து பாங்கின் பொன்னால் தாங்கப்படுவதால்தான்' மதிப்புடையதாக இருக்கின்றன என்று பதில் கிடைக்கும். எனினும் இம் மூட நம்பிக்கை கொஞ்சங் கொஞ்சமாகத் தேய்ந்துகொண்டுவருகிறது. 1939ஆம் ஆண்டில் போர் துவங்கியபோது, இங்கிலாந்து பாங்கி லுள்ள பொன் காப்பு (gold reserve) அனைத்தும் செயலளவில் மாற்றுச்சமன் கணக்கிற்கு (Exchange Equalization Account)

மாற்றப்பட்டுவிட்டது. நாட்டின் வெளிப் பயன்பாட்டிற்கு மட்டும் (external use) அது பயன்படுத்தப்பட்டது. 1947ஆம் ஆண்டில் இளவேனிற்காலத்தில் ஒவ்வொரு பவுண்டு நோட்டும் பென்சுக்கும் குறைவான மதிப்புடைய பொன்னுல் தாங்கப்பட்டிருந்தது—அப்படியும் செலாவணியின் மீதிருந்த நம்பிக்கை சீர்குலேயாமலிருக்கிறது.

தற்காலத்தில், செலாவணிக் கெதிராக குறைந்தபட்ச பொன் காப்புகளை (gold reserves) வைத்துக்கொள்ள வேண்டுமென்று கூறும் சட்டங்களின் சிறந்த நோக்கமே அதிகப்படியாக செலாவணியின் பெருக்கம் ஏற்படுவதைத் தடுப்பதற்காகவே. ஆனல் இந்நோக்கத்தை நிறைவேற்ற இன்றும் செலவு குறைவான வழிகள் பல உள்ளன. 1914-ல் பிரான்சில் எவ்வளவு அதிகமாகப் பொன் செலாவணிக்காகக் காப்பாக (reserve) வைக்கப்பட்டபோதிலும், நோட்டுக்களை வெளியிடுதல் ஒரு குறிப்பிட்ட அளவிற்கு மேல் பயன்படக்கூடாதென்று பிரான்சில் 1914-க்கு முன்பு சட்டமியற்றப்பட்டதுபோல், சட்டமியற்றி அதன்மூலம் செலாவணியின் பெருக்கத்தைத் தடுக்கலாம். மிகவும் புத்திசாலித்தனமான வழி யாதெனில், எந்தவிதமான கட்டுப்பாட்டையும் விதிக்காமல் பண அதிகாரிகளின் (monetary authorities) திறமையை நம்பியிருத்தலேயாகும். செலாவணியின் அதிகரிப்பானது பணவீக்கத்தின் பிற்பட்ட நிகழ்ச்சியே யாகும்; செலாவணியின் பெருக்கத்தை வரையறை செய்வதன் மூலம் பணவீக்கத்தைத் தவிர்க்க எண்ணுவதானது, மலேயின் மேலிருந்து கீழ்நோக்கி வந்துகொண்டிருக்கும் மோட்டார்காரை நிறுத்துவதற்கு அதனுள் ஓடிக்கொண்டிருக்கும் பெட்ரோலே, நிறுத்துவதற்குச் சமமாகும். மலே மேலிருந்து கீழ்நோக்கி வந்துகொண்டிருக்கும் மோட்டார்காரின் பொறியுள் ஓடிக்கொண்டிருக்கும் பெட்ரோலே நிறுத்தினுல் கார் கட்டுக்கு மீறி மலேயின் இறக்கத்தை நோக்கிச் செல்லும்; அதனைக் கட்டுப்படுத்தி ஓட்டுதல் கடினம் என்பது இங்கு அறியற்பாலது. பண அதிகாரிகள் (money authorities) பணவீக்கத்தை ஏற்படுத்தும்போது அவர்கள் மீது அவநம்பிக்கை கொண்டால், அது பண அளிப்பைக் கட்டுப்படுத்தச் சற்றும் பயனளிக்காது; அவநம்பிக்கை பாங்கு நெருக்கடியையும் (banking crisis)ஏற்படுத்தும்.

குறைந்தபட்ச பொன்காப்பு செலாவணியின் அளவை ஒழுங்குபடுத்துவதில் விரயமான (wasteful) முறை மட்டுமல்லாமல், ஒழுங்கற்ற முறையுமாகும். அது செலாவணியின் அளவை (volume of the currency) நிலேயானதாகச் செய்வதில்லே. அது, பொன் அளவிற்கும் செலாவணியின் அளவிற்குமுள்ள தொடர்

பையே நிலையானதாகச் செய்கின்றது. உள்நாட்டுப் பொன்திட்டம் (domestic gold standard) செலாவணியின் அளவை நிலையான தாகச் செய்வதில்லை; அதில் ஏற்ற இறக்கங்களை (fluctuations) உண்டுபண்ணுகிறது.

உலகத்தின் எல்லா செலாவணிகளுக்கும் காப்பாக (reserve) வைக்கப்படுகின்ற பொன்னின் அளவில் பயங்கர ஏற்ற இறக்கம் (fluctuation) இருப்பதில்லை என்னும் கருத்தில், சற்று உண்மை இருக்கத்தான் செய்கிறது. பொன் என்பது ஏறக்குறைய ஒரு அழிவில்லாத (undestructible) பொருளாகும். குறுங்காலத்தில் பொன் சுரங்கங்களிலிருந்தும் கிடைக்கும் பொன்னின் அளவு, இருக்கின்ற பொன்னின் அளவில் ஒரு சிறுபகுதியாகவே (a small fraction) இருக்கும். எனவே, பொன்னின் தற்போதுள்ள சரக் கிருப்பு (existing stock) அதன் ஆண்டு உற்பத்தியைப் போல் இருபது மடங்கென்றால், ஆண்டு உற்பத்தியைப்போல் இருமடங்கு பொன், மொத்தப் பொன்னின் இருப்பில் 5 சதவீத வேறுபாட்டையே உண்டுபண்ணும். ஆனால் இவ்விளைவு நிச்சய மாகத் தோன்றும் என்றும் சொல்வதற்கில்லை. ஏனெனில் இது எல்லாப் பயன்களுக்குமான (in all uses) பொன்னின் மொத்த இருப்பைப் (total stock) பாதிக்கும். ஏனெனில், பணமாக வழங்கும் பொன்னின் இருப்பு (monetary stock of gold) மேற்குநாடு களிலுள்ள புண்ணியவான்களான முதலாளிகளும் (saved capitalists) அல்லது கீழ்த்திசை நாடுகளிலுள்ள பிரபுக்களும் குடியான வர்களும் தங்களது பொன் சேமிப்பில் செய்யும் அதிகப்படியான சேமிப்பு அல்லது செலவு இவற்றினாலும் மொத்தப் பொன்னின் இருப்பு (total stock of gold) பாதிக்கப்படும். மேலும், முன் னேறும் நோக்கமுடைய வளரும் உலகம், செலாவணியின் அதி கரித்த அளிப்பை வேண்டியுளது. ஓர் ஆண்டில் பொன் இருப்பில் ஏற்படும் சதவீத அதிகரிப்பு (percentage increase) அந்த ஆண்டில் செலாவணியின் தேவையில் ஏற்படும் சதவீத அதிகரிப் பிற்கும் (percentage increase) சமமாக இல்லாவிட்டால், அப்போது செலாவணியில் அதிகரிப்போ அல்லது பற்றாக்குறையோ (deficiency) ஏற்படக்கூடும்; இதன் காரணமாக விலைகள் அதிகரிக்கவும் குறையவும் செய்யும். நான்காம் அத்தியாயத்தில் நாம் ஏற்கெனவே விளக்கியதுபோல் இதனைப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பண வரலாற்றில் தெளிவாகக் காணலாம். 1820ம் ஆண்டிற்கும் (நெப்போலியப் போர்களை யொட்டிய செலாவணிக் குழப்பங்கள் முடிவடைந்தபோது) 1850ம் ஆண்டிற்கு மிடையேயுள்ள ஆண்டு களில், உற்பத்தியின் அதிகரிப்பிற்குத் தகுந்தவாறு செலாவணி அதிகரிக்கவில்லை. இதன் காரணமாக, சில ஆண்டுகளில்

விலைகள் அதிகரித்தும் சில ஆண்டுகளில் குறைந்தும் இருந்த போதிலும், விலைகளின் சராசரியான போக்குக் கீழ்நோக்கியே யிருந்தது. எனினும் 1850ம் ஆண்டிலிருந்து காலிஃபோர்னியா விலும் (California) ஆஸ்டிரேலியாவிலும் பொன் கண்டுபிடிக்கப் பட்டதானது அதன் அளிப்பை அதிகப்படுத்தியது; விலைகள் இதனால் அதிகரிக்கத் தலைப்பட்டன. 1873ஆம் ஆண்டிலிருந்து, அதிலும் குறிப்பாக, ஜெர்மன் பேரரசு போன்ற நாடுகள் பொன் திட்டத்தை முதன்முதலாக அமலாக்கிக் கொண்டிருக்கும்போது, பொன் உற்பத்தி மீண்டும் தேவையைப் பூர்த்திசெய்ய இயலாத தாக இருந்தது. எனவே புதிதாகக் கிடைத்த குறைந்த அளவு பொன் அளிப்பிற்கு (limited supply of new gold) போட்டி அதிக மாக இருந்தது. 1870ம் ஆண்டை அடுத்த பத்தாண்டுகளிலும் 80ஐ அடுத்த பத்தாண்டுகளிலும் நீண்ட மந்தங்கள் (long depressions) ஏற்பட இதுவே முக்கிய காரணங்களுள் ஒன்றாக இருந்தது. கடைசியாக, தென் ஆப்ரிக்காவில் 1896ஆம் ஆண்டு பரந்த ராண்ட் (Rand) பொன்வயல் கண்டுபிடிக்கப்பட்டதும் அது சமயம் பொன்னை வெட்டி யெடுப்பதில் மிகத் திறமையான வழிகள் கண்டுபிடிக்கப்பட்டதும் விலைகளை மீண்டும் அதிகமாக உயர்த்தின.[1]

எனவே செலாவணியைப் பொன்னோடு பிணைப்பதன் மூலம் அதன் அளவில் ஏற்படும் தன் முனைப்பான (arbitrary) ஏற்ற இறக்கங்களினின்றும் (fluctuations) செலாவணியைக் காப்பாற்ற முடியுமென்பதற்கு எந்தவிதமான சான்றுமில்லை. 1928-30

1 இந்தக் காலங்களைனத்தும் சர்வால்டர் டி. வேய்டன் அவர்களும் ஜியாப்ரே கிரௌத்தர் அவர்களும் எழுதியுள்ள 'விலைகளைப்பற்றிய முன்னுரை' (An Introduction to Prices) என்னும் நூலில் விவரிக்கப்பட்டுள்ளன. பணத்தின் அளிப்பு நெடுங்காலத்தில் கூட, விலைமட்டத்தின் நிலைக்குக் காரணமாக இருப்பதில்லை யென்பதும், அதை அதிகரிக்காதவண்ணம் கட்டுப்படுத்துமென்பதும் ஈண்டுக் கவனிக்கத்தக்கது. பணவீக்கததினால் ஏற்படும் விலைகளின் அதிகரிப்பு, ஏதாவ தொன்றினால் தடுத்து நிறுத்தப்படாதவரையில், தொடர்ந்து நீடிக்கும். செலா வணியின் குறைவினால் (அதாவது அங்கத்தினர் பாங்குகளின் காப்பு ரொக்கங்கள் குறைவாக இருக்கும்போது), அதாவது பொன்னின் அளவு குறைவினால் (அதாவது மையபாங்கின் காப்புவீதம் சட்டப்படி வைத்துக்கொள்ள வேண்டிய குறைவான காப்பு வீதத்தை அணுகும்போது) ஏற்படும் கடன் அளிப்பின் குறைவு (shortage of credit) இந்த ஆண்டுகளில் பணவீக்கத்தினால் ஏற்படும் விலைகளின் அதிகரிப்பைத் தடுத்து நிறுத்தும் ஒரு சாதனமாக இருந்தது. எனவே பண அளிப்பின் பணியானது (the functions of the supply of money), கிராமபோன் இயக்கியிலுள்ள (gramaphone motor) வேக ஒழுங்குபடுத்தியின் (governor) பணிக் குச் சமமாக இருககிறது. அது வேகத்தை அதிகப்படுத்துவதில்லை, வேகத்தை அதிகரிக்க வொட்டாமல் தடுப்பதே அதன் வேலையாக இருக்கிறது. வேக ஒழுங்குபடுத்தி இருப்பினும் இல்லாவிடினும், மூல வில் (spring) தளர்ந்தால் வேகம் குறையும். இதைப்போலவே பொன் அளிப்பினால் கட்டுப்படுத்தப்பட்ட பண அளிப்பு (supply of money) விலைகளை ஒரு குறிப்பிட்ட புள்ளிக்குமேல் அதிகரித்துச் செல்வதைத் தடுக்கிறது; ஆனால் விலைகள் அப்புள்ளிக்கும் கீழ் குறைந்து செல்வதை அதனால் தடுக்கமுடியாது.

ஆண்டுகளில், அதாவது 1914-18 ஆண்டுகளின் போருக்குப் பின்பு திரும்பவும் கொண்டுவரப்பட்ட பொன்திட்டம் பெரிய மந்தத்தினுல் (Great depression) உடைத்தெறியப்படுவதற்கு முன்பு, பொன் குறைந்துகொண்டே சென்றது என்பதை நம்புவதற்கு தகுந்த காரணம் இருக்கிறது. அப்போதிருந்து பொன்வயல்களின் (goldfields) உற்பத்தி இவ்வளவுதானிருக்கும் என்று தெளிவாக முன்கூட்டியே கூறும்படியாக இருந்தது. பொன்வயல்கள் புதியதாகக் கண்டுபிடிப்பதற்கும் வழியில்லாமலிருந்தது. இதனைப் பொருட்படுத்தத் தேவையில்லை என நிலஉட்கூற்றியல் வல்லுநர் கருதுகின்றனர். இந்த நூற்ருண்டின் முப்பதை அடுத்த பத்தாண்டுகளிலும், நாற்பதை அடுத்த பத்தாண்டுகளிலும் தொழிலும் வாணிபமும் வளர்ச்சியடைவதற்குத் தகுந்தாற்போல் பொன்னின் பண இருப்பு (monetary stock of gold) அதிகரிக்காதெனத் தெளிவாகத் தெரிந்தது. இதனுல் விலைகளின் இறக்கமும், மந்தமும் ஏற்படக்கூடியதாக இருந்தது.

இருந்தபோதிலும் நிகழ்ச்சிகளின் போக்கு வேறு விதமாக மாறியது. 1931ஆம் ஆண்டு முதற்கொண்டு உலக செலாவணிகள் (world's currencies) பொன்னுக்கு ஒப்பீடாக (relatively to gold) மதிப்பிறக்கம் செய்யப்பட்டன (depreciated). உதாரணமாகப் பவுண்டு ஸ்டெர்லிங் கால் அவுன்சு தூய பொன்னுக்கும் சற்றுக் குறைவான மதிப்புடையதாக இருந்தது. அது ⅛ அவுன்சு பொன்னுக்கும் சற்றுக் குறைவான மதிப்பில் குறைந்தது. டாலர் அதனுடைய முன்னுலிருந்த பொன் மதிப்பில் ஐந்தில் மூன்று பங்கு (three-fifths) மதிப்புடையதாகவே தற்போது உள்ளது. பிரெஞ்சு ஃபிரான்கும் இன்னும் மதிப்பில் குறைவடைந்தது. பவுண்டானது (pound) குறைவான பொன்மதிப்பை உடையதாக இருக்கும்போது, ஓர் அவுன்சு பொன் அதிக பவுண்டுகளின் மதிப்பைப் பெறுகிறது என்பது இதனுல் தெளிவாகிறது; உண்மையில் லண்டனில் ஒரு தூய அவுன்சு பொன்னின் விலை 85 ஷில்லிங்கிலிருந்து 172 ஷில்லிங்காக அதிகரித்தது. இது, உலகத்தின் பொன் காப்புகள் (gold reserves), அவைகள் மாருமல் அதே நிறையில் (weight) இருந்தபோதிலும், அவைகள் மதிப்பில் மிகவும் அதிகமாக அதிகரித்திருக்கக் கூடும். 1928-30 ஆண்டுகளில் பொன் இருப்பில் குறைவு ஏற்படக்கூடும் என்று முன்கூட்டியே கூறப்பட்டது (predicted). இது, மதிப்பினுல் அளவிடப்பட்டபோது பொன் இருப்பில் குறைவு (shortage) தென்பட்டதை உணர்த்தியது. இந்தச் சூழ்நிலையில், பொன்னின் விலை ஏறினுல், அது பயமுறுத்தும் பொன் இருப்புக் குறைவை (threatening shortage) பொன் இருப்புஉபரி (surplus) யாக மாற்றும். உண்

மையில், விலையின் அதிகரிப்பு உற்பத்தியின் அதிகரிப்பைத் தூண்டும். பொன் வெட்டி எடுக்கும் கம்பெனிகளின் சுரங்கத் தொழிலாளர்களுடைய கூலிகளும் (miners' wages) இன்னும் இதர செலவுகளும் பணத்தில்தான் நிர்ணயிக்கப் பட்டுள்ளன; பொன்னில் நிர்ணயிக்கப்படுவதில்லை; அவைகள் பொன் விலையில் அதிகரிப்பு விகிதத்தில் அதிகரிப்பதில்லை. எனவே, பொன் வெட்டி யெடுத்தல் (Gold mining) மிகவும் இலாபமான தொழிலாக இருந்தது; இதுவரையில் இலாபகரமாக இல்லாத மட்டமான பொன் உலோகக் கலவைகளும் தற்போது வெட்டி யெடுக்கப் படும். உலக பொன் உற்பத்தி 1929ஆம் ஆண்டில் 19½ மில்லியன் அவுன்சுகளாக இருந்தது. 1939ஆம் ஆண்டில் அது 39 மில்லியன் களாக அதிகரித்தது; மேலும், 1929ஆம் ஆண்டில் ஓர் அவுன்சு பொன் 85 ஷில்லிங் வீதம் மொத்த உற்பத்தியின் மதிப்பு £83 மில்லியன்களாகவும், 1939ஆம் ஆண்டில், ஓர் அவுன்சு 168 ஷில்லிங் வீதம், மொத்த உற்பத்தி £328 மில்லியன்கள் மதிப் புடையதாகவுமிருந்தது. மக்கள் அதிக விலையினால் தூண்டப் பட்டுத் தங்களது பொன் நகைகள் (gold-ornaments) அல்லது பொன் சேமிப்புக்கள் (hoards) இவைகளை விற்பதன் காரணமாக, இருக்கின்ற பொன் இருப்பின் (existing stock of gold) பண மதிப்பு அதிகரிப்பிலும், நடப்பு உற்பத்தியின் (current production) நிறை யிலும் (weight) மதிப்பிலும் (value), பணப் பொன்னிருப்பில் (monetary stock of Gold) அதிகரிப்பு ஏற்பட்டது. எனவே பொன் இருப்புக் குறைவாகிய விபத்து ஒரு பத்தாண்டு காலத்திற் குள்ளாகவே (within a decade of a shortage of gold) குறைவு பெரும் உபரியாக மாறியது.

இம்மாதிரியான திடீர் மாறுதல், செலாவணியின் அளவிற்கும் (volume of currency) பொன்னின் அளவிற்கும் (volume of gold) இடையேயுள்ள தொடர்பை ஏற்படுத்தும் சட்டங்களைக் கடைப் பிடிப்பது நிலையான தன்மைக்கு (stability) உத்தரவாதமாக (guarantee) இருப்பதில்லை என்பதை எண்பித்தது. பொன்னின் வாங்குந்திறனிலும், பொன்னை அடிப்படையாக் கொண்ட செலா வணிகளின் வாங்குந்திறனிலும் (purchasing power) நிலையான தன்மையைக் கொண்டு வருவதற்கு அவ்வப்போது பல திட்டங்கள் அமைக்கப்பட்டன. இந்த எல்லாத் திட்டங்களும் பொன்னின் தேவை, அளிப்பு ஆகிய இவ்விரண்டின் நிலைகளிலும் சில வகை யான தலையிடுதலை (interference) ஏற்படுத்தின. செலாவணிக் கெதிராக ஒரு குறிப்பிட்ட அளவு பொன் வைத்துக்கொள்ள வேண்டுமென்ற நியதி இருக்கும் வரையில், பொன்னுக்கான தேவை (the demand for Gold) செலாவணியின் தேவையின் ஒரு பகுதி

யாக இருந்தது; பணத்திற்கான தேவையானது (demand for money) செய்யப்படவேண்டிய 'பணவேலை' (money work) யைப் பொறுத்திருந்தது: நடத்தப்படவேண்டிய பேரங்களைப் (transaction) பொறுத்தும் (மாற்றுக் குறிக்கணக்கின் ஒருவகையின் படி), அல்லது மக்கள் தங்களின் வருமானங்களைப் பணமாக இருப்பு வைத்துக்கொள்ள விழையும் விகித அளவைப் பொறுத்தும் (மற்றொரு வகைக் குறிக்கணக்கின்படி) இது இருந்தது. ஒவ்வோர் ஆண்டின் புதிய பொன் உற்பத்தியினால் இருக்கின்ற பொன் இருப்பின் (existing stock of Gold) அளவு கூடுதலாக்கப்பட்டது. பொன்னின் அளிப்பைவிட தேவை விரைவாக அதிகரித்துக் கொண்டு சென்றால் (அதாவது பொன் சரக்கிருப்பு (stock of gold) அதிகரிப்பதைவிட உலகத்தின் பொருளாதார வளர்ச்சி அதிக வேகமாக இருந்தால்) பொன்னின் மதிப்பு அதிகரிக்கும். இதைப் போலவே பொன்னின் அளிப்பைவிட தேவை விரைவாக குறைந்துகொண்டு செல்லும்போது, பொன்னின் மதிப்புக் குறையும். பொன்னின் விலையானது அதிகரிக்க இயலாமல் நிலையாக இருக்கும் வரையில், மற்ற எல்லாப் பொருள்களின் விலைகள் அதிகரிப்பு மூலமே—அதாவது விலைமட்டத்தின் இறக்கத்தின் மூலமே—பொன் தனது மதிப்பை அதிகரித்துக்கொள்ள முடியும். இப்பிரச்சினையை இவ்விரு வழிகளில் எந்த வழியினாலும் சமாளிக்கலாம். முதல்வழி யாதெனில் தேவையின் மாறுதல்களுக்கேற்பப் பொன்னின் அளிப்பைத் (supply of gold) தயார் செய்துகொண்டு, அதன்மூலம் பொன்னின் மதிப்பில் ஏற்படும் ஏற்ற இறக்கங்கள் ஏற்படாமல் பார்த்துக்கொள்ளுதலாகும். இரண்டாவது வழி, அப்படி பொன்னின் மதிப்பில் ஏற்படும் ஏற்ற இறக்கங்கள் (fluctuations) தடுக்கப்பட முடியாமலிருந்தால், பொன்னைத் தவிர்த்த ஏனைய பொருள்களுடைய விலைகளின் போக்கினால் அல்லாது, பொன்னின் விலைகளில் ஏற்படும் மாற்றங்களினாலேயே, அவைகளைத் தடுக்கலாம். இதுவே இரண்டாவது வழியாகும்.

இவ்வழிகள் ஒவ்வொன்றுக்கும் பலவாறான வழிமுறைகள் கூறப்பட்டன. முதலாவது முறை பன்னாட்டு முறையாகும். பொன் அளிப்பை தனிப்பட்ட ஒரு நாடு தீர்மானிப்பது இயலாதாகையால் இம்முறை ஆராயப்பட்டது. தேவைப்படுகின்ற பொன்னின் அளவிற்கேற்ப பொன்னை, இலாபம் வந்தாலும் வராவிட்டாலும், உற்பத்தி செய்வதற்கு பன்னாட்டு நிதியத் தொகுப்பொன்று (an international consortium) உலகத்திலுள்ள எல்லாப் பொன் சுரங்கங்களையும் ஏற்று நடத்தினாலும், போதிய அளவு பொன் கலந்த கனி உலோகக் கலவைகள் (auriferous ores) கிடைக்காதாகையால், இம்முறை, பயனற்றதாகவே யிருக்கும்.

இம்முறை பொன்னின் அளிப்பை ஒழுங்குபடுத்துவதைக் கூறுது, பொன்னையொத்த ஒன்றை ஒழுங்குபடுத்தும் முறையினையே கூறு கிறது. உதாரணமாக, உலக மையபாங்குகளின் பொன் இருப் புக்கள் (gold stocks of the world's central bank) ஒரு பன்னுட்டு மேலாண்மைக் குழுவுக்கு (an international authority) மாற்றப் படவேண்டுமென்றும், அக்குழு அவைகளுக்குப் பதிலாக பொன் சான்றிதழ்களை (gold certificates) வழங்குமென்றும், இப்பொற் சான்றிதழ்கள் மையபாங்குகளால் காப்புகளாக(reserves)வைக்கப் படலாமென்றும், இவ்வாறு ஒரு மையபாங்கிலிருந்து மற்ருரு மையபாங்கிற்கு, பொன்னை மாற்றுவதற்குப் பதிலாக (transfer) இப்பொன் சான்றிதழ்களையே அனுப்பி மாற்றலாமெனவும், தீர்மா னிக்கப்பட்டது. இதன்படி பன்னுட்டு மேலாண்மைக்குழு தான் பொன் இருப்பை வைத்திருப்பதைக் காட்டிலும் அதிகமாகவோ அல்லது குறைவாகவோ பொற்சான்றிதழ்களை வெளியிட்டு, அதன் மூலம் பண நோக்கங்களுக்கான (monetary purposes) சீரான பொன் அளிப்பை (even supply of gold) அளிக்கக்கூடும். ஆனுல், நாடுகள் தங்களின் அரசுரிமையை (sovereignty) பாதுகாத்துக் கொள்ள வேண்டுமென்று நினைக்கின்ற வரையிலும், ஒவ்வொரு நாடும் மற்ருென்றை நம்பாமலிருக்கின்ற வரையிலும், பொன் மதிப்பு வாய்ந்த ஒரு பொருளாக இருக்கின்ற வரையிலும், இத் திட்டம் நடைமுறையில் இயலாத தொன்ருகவே யிருக்கும். இத் திட்டத்திற்கு ஒரு திருத்தமும் (modification) கூறப்பட்டது. அதாவது பன்னுட்டு மேலாண்மைக் குழு தான் இருப்பு வைத்துக் கொண்டிருக்கும் சான்றிதழ்களுடன் கூடுதலாக (in addition) குறைவான அளவு 'பொன் சான்றிதழ்களையே' வெளியிட வேண் டும். மைய பாங்கு தற்போது வைத்துள்ள பொன்னை அல்லது பொன்னின் மீதுள்ள சொத்துரிமையை (ownership) விட்டுவிடும் படி அதனைக் கேட்காமல், மேலாண்மைக் குழு இதனைச் செய்து முடிக்க வேண்டும். இவ்வாருன திருத்தத்துடன் கூடிய திட்டம், எல்லா நாடுகளாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தால் பொன் இருப்புக் குறைவு என்னும் இடர்ப்பாட்டினைத் தீர்க்க இயலும். ஆனுல் பொன் உபரியாக இருப்பதைத் தடை செய்வதும் நிலை யான (stability) தன்மையைப் பாழ்படுத்துமாதலால் பயனற்றதா கவே இருக்கும்.

இப்பிரச்சினையைத் தீர்க்க வல்ல மற்ருரு வழி பொன்னின் மாறுகின்ற (variable) மதிப்பிற்குத் தக்கவாறு அதனுடைய விலையை மாறும்படி செய்தல். இதுவும் பன்னுட்டு ரீதியில்தான் செய்யப்படவேண்டும். ஆனுல் இம்முறையிலுள்ள சிறந்த அம்சம் யாதெனில் இது ஒவ்வொரு நாட்டாலும், தனியாகவே நிறை

வேற்றப்படக்கூடும். இந்த வகையில் பிரபலமான திட்டம் பேராசிரியர் இர்விஸ் ஃபிஷர் அவர்களால் கூறப்பட்ட 'பண்ட டாலர்' (commoditiy dollar) திட்டம் என்று அழைக்கப்படும் திட்டமாகும். இத் திட்டத்தை ஃபிஷர் அவர்கள் வெகு காலத்திற்கு முன்னரே கூறினார்கள். அமெரிக்க அரசாங்கம் இதனை அரசாங்க கைக்கோளாக 1933ம் ஆண்டு இலையுதிர் காலத்தின்போது (autumn) சில மாதங்கள் கடைப்பிடித்தது. எப்போதுமே பொதுவான விலைமட்டத்தில் 1 சதவீதம் குறைவானது பொன்னின் மதிப்பில் (value) 1 சதவீதம் அதிகரிப்பிற்குச் சமமென்று, இத் திட்டம் கூறுகிறது. பொன், தனது மதிப்பின் அதிகரிப்பை, மற்ற பண்டங்களின் விலைகுறைவினால் அறிவிப்பதைவிட, அதன் அதிகரித்த விலையினாலேயே நன்கு விளக்கும்.

இக் கோட்பாடு எளிதாகவும், கணிதச் சரி நுட்பம் வாய்ந்ததாகவும் (mathematical precision) இருக்கிறது. ஆனால், இது பணியாற்ற இயலும் என்று நம்புவதற்கில்லை, பொன்னின் விலையை அதிகரிப்பதற்கான ஒரே வழி மைய பாங்கு வைத்துள்ள பொற்காப்பின் (gold reserve) மதிப்பை அதிகரித்து, அதன் மூலம் அதிகமான செலாவணிகளை அது வெளியிடத் துணைசெய்வதாகும். ஆனால் குறுங்காலத்தில், விலைகளின் போக்கிற்கும் பண அளிப்பிற்கும் எவ்விதத் தொடர்புமில்லை. 1930-33ல் ஏற்பட்ட மந்தத்தைப் போன்ற மந்த காலங்களில் பண அளிப்பு அதிகரித்துச் சென்றாலும் விலைகள் இறங்கும். விலைகளின் இறக்கமும் (fall of prices) பொன்னின் மதிப்பு அதிகரித்தலும் ஒன்றுதான்; ஆனால் அது பொன்னின் மதிப்பில் ஏற்படும் அதிகரிப்பே விலைகளின் இறக்கத்திற்குக் காரணம் என்பதை உணர்த்தாது. நாம், சென்ற அந்தியாயங்களில் பார்த்தது போல், விலைகளின் இறக்கம் சில சமயங்களில் சேமிப்பு, மூலதனம் ஆகியவைகளோடு தொடர்பு கொண்ட சில சிக்கலான நிகழ்ச்சிகளால் ஏற்படக்கூடும். இதனோடு பண அளிப்பின் அளவிற்கு (volume of supply of money) ஐக்கிய அமெரிக்காவில் 'பண்ட டாலர்' (commodity dollar) முறை கொண்டுவரப்பட்டபோது அது அடைந்த அனுபவம், மேற்படி கருத்தியலான (theoretical) குறைகூறுதலுக்குத்(criticism) தகுந்த சான்றாக இருந்தது.

பொன்னின் மதிப்பை நிலையானதாகச் செய்வதற்கான மற்றொரு திட்டம்—அல்லது இன்னும் சரியாகச் சொல்லப்போனால் பொன்னின் இருப்புக் குறைவை (shortage of gold) தவிர்ப்பதற்கான திட்டம்—இரு உலோக முறையாகும் (bimettalism). இது பொன்னையும் வெள்ளியையும் பயன்படுத்தும் முறை. இருநூறு

ஆண்டுகட்டு முன்னர் வெள்ளிதான் முக்கியமான பண உலோக மாக (money metal) இருந்தது. இன்னும் பணத்தையும் வெள்ளியையும் உணர்த்தும் பிரஞ்சு சொற்கள் (french words) ஒன்றுகவே உள்ளன. பொன், முதல் முதலில் கிரேட் பிரிட்டனில் தான், ஒரே உலோகமாக (gold standard) அமைக்கப்பட்டது. பிறகு மெள்ளமெள்ள பத்தொன்பதாம் நூற்றுண்டில் பெருவாரி யான மற்றப் பெரு நாடுகளிலும் இது அமைக்கப்பட்டது. ஆயினும் சிலர் எப்போதும் வெள்ளி, உலோக முறையினின்று நீக்கப்பட்ட மைக்கு வருந்தி, அதனை மீண்டும் உலோக முறையில் அமைக்கு மாறு வாதாடினர். இவ் 'வெள்ளிக் கட்சி' (silver party)யின் பல மான கூட்டம், வெள்ளிச்சுரங்கங்களின் சொந்தக்காரர்களேயாவர். இவர்கள், வெள்ளியின் தேவையை அதிகரித்து அதன் விலையை உயர்த்துவதில் அக்கறை காட்டியதில் வியப்பில்லை. பொதுவான விலையின் நிலை (general price level) குறையும்போது பொன்னின் இருப்புக் குறைவே (shortage) அதற்குக் காரணங்காட்டப்பட்டது. எனவே வெள்ளி மீண்டும் பண உலோகமாகக் (remonetization) கொண்டு வருதல், விலைகளின் இறக்கத்தினின்றும், மந்தத்தினின் றும் காப்பாற்றும் எனத் தோன்றியது. விலைகளின் இறக்கத்தால் மிகவும் பாதிக்கப்பட்ட மக்களுக்கு—அதிலும் சிறப்பாக விவசாயி களுக்கு—இரு உலோக முறை (bimettalism) ஒரு சிறந்த திட்ட மாகத் தோன்றியது. ஐக்கிய அமெரிக்காவில் அடுத்தடுத்து, வெள்ளியையும் பண உலோகமாக வைக்க வேண்டுமென்று, அடுத்தடுத்து நிகழ்ந்த போராட்டங்களுக்கு இவை ஓரளவு காரண மாக இருந்தன. ஏனெனில், எதிர்பாராத விதமாக ஐக்கிய அமெரிக்காவின் அரசியல் அதிகாரம் அதிகமுடைய மேற்குப்பகுதி மாநிலங்கள் (western states) விவசாய மாநிலங்களாகவே யிருந் தன; அங்கே வெள்ளிச் சுரங்கங்களும் நிறைய இருந்தன. 1896 ஆம் ஆண்டு ஜனுதிபதியின் தேர்தல் பிரசாரத்தின் போது இந்த மேனுட்டு விவசாயிகளின் சங்கம் (association of the western agrarians) நன்கு பயன்படுத்திக்கொள்ளப்பட்டது. 1880 ஐ அடுத்த பத்தாண்டுகளிலும் 1890 ஐ அடுத்த பத்தாண்டுகளிலும் ஏற்பட்ட மந்தத்தின் கடைசிப்பகுதியில் நிகழ்ந்த இத் தேர்தல் பிரசாரத்தின்போது, பொதுக் குடியாட்சி கட்சியினரின் ஜனுதிபதி பதவிக்கு வேட்பாளராக (candidate) நின்ற வில்லியம் ஜெனிங்ஸ் பிரையன் (William Jennings Bryan) என்பவர் தமது தேர்தல் சொற்பொழிவை மனித சமுதாயத்தைப் 'பொன் என்னும் சிலுவை யில் அறைந்து கொடுமைப்படுத்துவதை'த் (crucification upon a cross of gold) தடுத்து நிறுத்தும் குறிக்கோளின் அடிப்படையில் மிகத்தீவிரமாக (ஆனல் சற்று மங்கலான தெளிவுடன்) ஆற்றினர்.

பொன்னுக்குப் பதில் வெள்ளியையே பண உலோகமாக வைத்துக்கொள்ள வேண்டுமென்று கூறப்படவில்லை. ஆனால் பொன்னோடு வெள்ளியும் இரண்டாவது பண உலோகமாக (second monetary metal) வைக்கப்பட வேண்டுமென்றுதான் ஆலோசனை கூறப்படுகிறது. செலாவணிகள் நிர்ணயிக்கப்பட்ட வீதங்களில் பொன்னாகவோ அல்லது வெள்ளியாகவோ மாற்றப்படக் கூடியனவாக இருக்க வேண்டும். (பிரையன் அவர்களால் கோரப்பட்ட விலைகள் 1 அவுன்சு பொன்னுக்கு $20.67-ம், ஒரு அவுன்சு வெள்ளிக்கு $1.29ம் ஆகும்). செலாவணிக் கெதிராக வைத்துக் கொள்ளப்பட வேண்டிய குறைந்தபட்ச உலோகக் காப்பு (metallic reserve) பொன்னாகவோ அல்லது வெள்ளியாகவோ இருக்கலாம். இத் திட்டத்தின் குறைபாடு யாதெனில் இவ்விரு உலோகங்களின் மதிப்புகளுக்கிடையே ஒரு நிலையான வீதத்தை (a definite ratio) நிரந்தரமாக நிர்ணயிப்பது கடினம். ஏனெனில் ஒவ்வோர் உலோகமும் முற்றிலும் வெவ்வேறான தேவை, அளிப்பு நிலைகளைப் பெற்றுள்ளன. இதனால், நிர்ணயிக்கப்பட்ட வீதம் ஓர் உலோகத்தை எந்த சமயத்திலும் மிகைமதிப்பு செய்யவோ அல்லது மற்றொன்றைக் குறைமதிப்பு செய்யவோ கூடும். ஒரு நாடு மட்டுமே இரு உலோக முறையைக் கையாண்டு (உதாரணமாக ஐக்கிய அமெரிக்கா) மற்ற நாடுகள் வெள்ளிக்கு நிர்ணயிக்கப்பட்ட விலையைக் கையாளவில்லையென்றால், அமெரிக்காவில் வெள்ளியானது 1 அவுன்சு $1.29 என்ற நிர்ணயிக்கப்பட்ட வீதத்தில், மற்ற நாடுகளைவிட விலை மலிவாகவோ அல்லது அதிகமாகவோ எப்போது மிருக்கும். அங்கு வெள்ளி விலை மலிவாக இருந்தால் உலகத்திலுள்ள மற்ற நாடுகள் வெள்ளிக்கு மாற்றாகப் பொன்னை அனுப்பிக்கொண்டிருக்கும்; இதனால் அமெரிக்க அரசாங்கம் விரைவில் தன்னிடமுள்ள வெள்ளி யாவற்றையும் இழக்கும். வெள்ளி விலை அமெரிக்காவில் அதிகமாக இருப்பின், உலகத்திலுள்ள மற்ற நாடுகளனைத்தும் தங்களிடமுள்ள வெள்ளியை அமெரிக்காவுக்கு விற்று விட்டு அதற்கு மாற்றாகப் (in exchange) பொன்னைப் பெற்றுக் கொள்ளும்; இதனால் அமெரிக்கா தன் வசமுள்ள பொன்னை விரைவில் இழக்கும். இரு உலோகமுறை உலக முழுவதும் கடைப்பிடிக்கப்பட்டால் அது வெற்றிகரமாக இயங்கும் சந்தர்ப்பத்தை அதிகமாகப் பெறும். அப்போது இவ்விரு உலோகங்களிடையே உள்ள நிர்ணயிக்கப்பட்ட தொடர்பானது, ஒன்று மற்றொன்றைக் காட்டிலும் எந்தச் சமயத்திலும் சுரங்கத்திற்கு (mine) இலாபம் அளிப்பதாக இருக்கும் நிலையை ஏற்படுத்துகிறது. இரு உலோக முறையால் செலாவணி பொன், வெள்ளி ஆகிய இரு உலோகங்களின் அடிப்படையில் அமைக்கப்படவில்லை. ஆனால் அது பொன்னின் அடிப்படையிலாவது அல்லது வெள்ளி

யின் அடிப்படையிலாவது தான் அமைக்கப்பட்டுள்ளது. இதன் காரணமாகவே உலக முழுமைக்கும் இதனுல் விடை காண முடியவில்லை.[1]

வெள்ளியானது பண உலோகமாக இருப்பதினின்றும் நீக்கப்பட்டதிலிருந்து அதனுடைய, பொன்னுக்கு ஒப்பீடான மதிப்பு (value relatively to that of gold)மிகவும் கணிசமாகக்குறைந்தது. 1932–ஆம் ஆண்டு இறுதியில் அதன் மதிப்பின் வீதம் (வெள்ளி: பொன்) பிரையனின் ஆலோசனைப்படி 16:1 ஆக இருந்தது, 82 க்கு 1 ஆக இருந்தது. 1933-ஆம் ஆண்டிலும் 1934-ஆம் ஆண்டிலும் ஐக்கிய அமெரிக்காவில் வெள்ளியின் விலையை அதிகரிக்க முயற்சிகள் எடுக்கப்பட்டன. 1934-ஆம் ஆண்டு இறுதியில் விகிதம் (ratio) சற்றேறக் குறைய 70 க்கு 1 என்றபடி இருந்தது. எனினும் பின்னர், மீண்டுமிருந்த நிலையே ஏற்பட்டது. 1939-ஆம் ஆண்டில் போர் துவங்கியபோது விகிதம் 96 க்கு 1 என்று இருந்தது. உலகத்தில் பெரும் பகுதியான நாடுகளில், அதாவது வெள்ளியானது வேருேர் உலோகமாகமட்டும் இருக்கும் நாடுகளில், இம் மாறுதல்கள் எந்தவித விளைவையும் ஏற்படுத்திவிட மாட்டா. ஆனுல் உலகத்தின் ஒரு பகுதியில் மட்டும் அவைகள் மிகவும் முக்கியம் வாய்ந்தவைகளாக இருக்கின்றன. சீனுவின் செலாவணி வெள்ளித் திட்டத்தில் இருந்தது. சீனச் செலாவணிக்கும், பொன் திட்டத்திலிருந்த நாடுகளின் செலாவணிகளுக்குமிடையேயுள்ள மாற்று வீதம், பொன்னுக்கும் வெள்ளிக்கு

[1] இவ்விடர்ப்பாட்டினை நீக்க மார்ஷல் (Marshall) ஒரு மாற்றத்தைக் கொணடுவந்தார். இமமுறைக்கு கலவை உலோகமுறை (symmetallism) எனப் பெயரிட்டார். இத்திட்டத்தின்படி செலாவணி பொன் அலலது வெளளியால் தாஙகப்படமாட்டாது (not backed by); அதேபோல் செலாவணியை பொது மக்கள் அல்லது மையபாஙகின விருபபப்படி பொன்னுகவோ அல்லது வெள்ளியாகவோ மாற்றிக் கொளளமுடியாது (not convertible). ஆனுல் பொன்னும் வெள்ளியும் (gold and silver) கலந்த ஒரு கலவைப்பாளமாக (a bar of amalgam) மாற்றிக கொளளபபடககூடும. இக கலவைப்பாளத்திற்கு ஒரு விலை நிர்ணயிக்கப்படும. உதாரணமாக ஒரு அவுன்சு பொன்னுக்கும் 10 அவுன்சு வெளளிக்குமான விலை நிர்ணயிக்கப்படும். மையபாங்கு இந்தக் கலவை உலோகத்தை வரையறையின்றி (without limit) வாஙகவோ அலலது விற்கவோ கடமைப்பட்டது. ஆனுல் அது எந்த ஒரு உலோகத்தையும் தனியாக வாங்கவோ அல்லது விற்கவோ கடமைப்படடதல்ல. காபபுகளும் (reserves) இக்கலவை உலோகத்தின் மதிப்பில்தான் கணககிடப்படும். இந்த ஏற்பாட்டின்படி பொன், வெள்ளி ஆகிய இவற்றின் தனித்தனியான விலைகள் தாராளமாக மாறுவதற்கு அனுமதிக்கப்படும்; ஆனுல் அவைகளின் ஒன்று சேர்ந்த (combined) விலைகள் மட்டும் மாருமலிருகக வேணடும். இவ்விதமாக இரு உலோகங்களின் ஒன்று சேர்ந்த அளிப்பை (combined supply) உலக செலாவணிகளுக்கு அடிப்படையாகப் (base of the world's currencies) பயன்படுத்தககூடும். உலோக அடிப்படை (metallic base) இன்றியமையாதிருககும்போதும. பொன்னிருப்பின் அளவு குறையும் எனறு எதிர்பார்க்கும்போதும், கலப்பு உலோகமுறை பொன் உலோகமுறையைக் காட்டிலும் சிறந்ததாக இருககும. ஆனுல் இககலப்பு உலோகமுறையால் பொன்னின் இருப்பு அதிகமாகப் போகக்கூடும; இமமுறையில் இது தவிர்க்க முடியாததொனருக உள்ளது.

மிடையேயிருந்த மதிப்பு விகிதம் மாற்றமடைவதற்கேற்ப, மாற்றமடைந்தது. 1933-ஆம் ஆண்டு வரை, சீனச் செலாவணி சீராக மதிப்பிறக்கம் (depreciated) செய்யப்பட்டது. அதற்குப் பிறகு வெகு வேகமாக அது மதிப்பேற்றம் (appreciated) செய்யப்பட்டது. சீனு முதலில் தனது செலாவணியின் குறை மதிப்பினுல் துன்புற்றது; பிறகு மிகை மதிப்பினுல் (over valuation) துன்புற்றது. இவ்விரு நிலைகளில் யாதொன்றுமே நாட்டின் நிலையான பொருளாதார நிலைமைக்குத் (stable economic conditions) துணை செய்யாது. ஆனுல் மிகை மதிப்பு நாட்டை பயங்கரமான கெடுதலுக்கு அழைத்துச் செல்லும். 1933-க்குப் பிறகு சீனுவில் ஏற்பட்ட செயற்கையான பொருளாதார மந்தத்தினுல் (artificial depression) ஏற்பட்ட தீமை, ஐக்கிய அமெரிக்காவிற்கு வெள்ளி விலை அதிகரிப்பு செய்த நன்மையைக் காட்டிலும் அதிகமாக இருந்தது. மீண்டும் வெள்ளியைப் பண உலோகமாகக் கொண்டு அமெரிக்கா செய்த முயற்சியானது ஒரு முரண்பாடான விளைவைத் தந்தது. அது, சீனுவை வெள்ளித் திட்டத்திலிருந்தும் ஓட்டியதோடல்லாமல் அதனுடைய செலாவணிக்கு ஒரு புதிய அடிப்படையைத்தந்தது. 1939-ஆம் ஆண்டு வரையிலும் சீனுவின் செலாவணி பவுண்டு ஸ்டெர்லிங் (pound sterling) அடிப்படையில் நிலைப்படுத்தப்பட்டது.

எனவே, உள் நாட்டுப் பொன் திட்டத்திற்கான பல திட்டங்கள் உள்ளன—பன்னுட்டுப் பொன் நிதியத் தொகுப்பு (international gold consortium), இரு உலோக முறை (bimetallism), கலவை உலோக முறை (symmetalism) முதலிய திட்டங்கள். இத்திட்டங்கள் யாவற்றிலுமே அடிப்படையான குறைபாடுகளிருக்கின்றன. அதாவது எப்போது இத்திட்டங்களின் பயன் தேவைப்படுகிறதோ அப்போது அவை பயனளிப்பதில்லை. இவைகள் பணக் கணியக் கோட்பாட்டின் மீது அமைக்கப்பட்டுள்ளன. பணக்கணியத்தில் (quantity of money) ஏற்படும் ஏற்ற இறக்கங்களினுல் (fluctuations) வாணிபச் சகடம் (trade cycle) ஏற்படுகின்றன என்றும் எனவே பணக் கைக்கோளின் முதலாவது நோக்கம் பண அளிப்பை நிலையானதாகச் செய்வதாகவே யிருக்க வேண்டும், என்ற நம்பிக்கையின் பேரில் இக்கோட்பாடுள்ளது. நாம் ஏற்கனவே முன் அத்தியாயங்களில் பார்த்தது போல் இது மிகவும் அறிவாற்றல் குறைந்த (simple-minded) வாதமேயாகும். பண இருப்புக் குறைவினுல் மந்தம் ஏற்படுமென்பது உண்மையே. ஆனுல் இதுவே மந்தம் ஏற்படுவதற்கு ஒரே காரணமாகவோ அல்லது பெரும்பான்மையான காரணமாகவோ இருப்பதில்லை. அதே போல, மாருமலிருக்கிற பணக் கணியத்தை (unvarying

quantity of money) வைத்துக்கொள்வதானது, நாட்டை மந்தத் தினின்றும் காப்பாற்றி விடாது. சென்ற சில வாக்கியங்களில் பணக் கணியத்தைப் பற்றிக் கூறி வந்தோம். உள்நாட்டுப் பொன் திட்டத்தை மாற்றியமைப்பதற்கான பல்வேறு வழி முறைகள்— உண்மையில், உள்நாட்டுப் பொன் திட்டமே, கூட—செலாவணி யின் கணியத்தை (quantity of currency) மட்டுமே ஒழுங்குபடுத்து வதில் பயன்படுகின்றன. செலாவணியின் கணியத்தைக் குறைப்பதானது பணக் கணியத்தைக் குறைக்கலாம் அல்லது குறைக்காமலும் போகலாம். இவை யிரண்டும், சில சமயங்களில் எதிரிடையாகவும் இயங்கக்கூடும். பல வகையான பணத்தின் மொத்தக் கணியத்தின் இறக்கமும் (a fall in the total quantity of money of all kinds) பாங்குகள் மீதுள்ள அவநம்பிக்கையும் ஒன்றுக நிகழும் போது (1930-33-க்கிடையேயுள்ள ஆண்டுகளில் ஐக்கிய அமெரிக்காவில் நிகழ்ந்தது போல) மொத்தப் பணக் கணியம் குறைந்து செல்வதைவிட அதிகமான விகிதத்தில் செலாவணியை இருப்பு வைத்துக்கொள்ள விழைவார்களாதலால், புழக்கத்தி லுள்ள செலாவணியின் அளவு அதிகமாகும். இதனைத் தடுத்து நிறுத்துவதும் எந்தவிதப் பயனையும் தராது; அது போலும் கடுமை யான பாங்கு நெருக்கடியையே ஏற்படுத்தும். நாட்டிலிருக்கும் செலாவணியின் கணியம் (quantity of currency in existence) விலை மட்டத்தையும் வாணிப நிலையையும் ஓரளவிற்குப் பாதிக்கிறதென் பது உண்மையே. ஆனால் புழக்கத்திலுள்ள செலாவணியின் கணியம் (quantity of currency in existence) பேரங்களின் அளவைப் பொருத்திருக்கும். அதாவது, நடைமுறையிலுள்ள விலைகளின் மட்டத்திலும் வாணிப நிலையிலும், பொது மக்கள் செக்குகளினலல்லாமல் அயன் ரொக்கத்தைக் (hard cash) கொடுத்தே நிகழ்த்தும் வாணிப பேரங்களைப் பொறுத்தது. இதை ஒரு காரணம் என்று கூறுவதைவிட விளைவு என்றுதான் கூற வேண்டும். எனவே செலாவணியின் கணியத்தைப் (quantity of currency) பாதிக்கும் எந்த சாதனமும் பொதுவான பண, பொருளா தார நிலைபேற்றைக் (general monetary and economic stability) கொண்டு வருவதில் சற்றும் பயன்படுவதில்லை.

உள்நாட்டுப் பொன் திட்டத்தை (domestic gold standard) கை விட்டு விடாமல் தொடர்ந்து கடைப் பிடிப்பதற்கு ஏதாவதுகாரணம் இருக்கிறதா என ஆராய்வோம். உள்நாட்டுப் பொன் திட்டத்திற் கும் பன்னாட்டுப் பொன் திட்டத்திற்கு மிடையேயுள்ள தொடர்பு களில் இதற்கான காரணத்தைக் கண்டு பிடிக்கலாம். பொன், நாட்டை விட்டு வெளியேறிக் கொண்டிருக்கும் போது, நாட்டின் பண மேலாண்மையாளர் (monetary authorities), விலைகளைக்

குறைக்கும் நோக்கத்துடன், கடன் குறைப்பை (restriction of credit) கொண்டு வருவர். பன்னாட்டுப் பொன் திட்டத்தில் இது முக்கியமான அங்க மென்பதை விரைவில் பார்ப்போம். இதே போன்று பொன்னானது எதிர்த் திசையில் (அதாவது நாட்டை நோக்கி) வந்து கொண்டிருக்கும்போது, கடன் அதிகரிப்பைக் (expansion of credit) கொண்டு வருவர். பொன்னானது காப்பு நிதியிலிருந்து திரும்பப் பெறப்பட்டு வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப் படுமேயானால் செலாவணி குறைக்கப்பட வேண்டும் (contracted). பொன் ஏற்றுமதி செய்யப்படுவதால் நல்ல விளைவுகள் ஏற்படும் என்பதற்கு மேற்படி செயலே சரியான ஆதாரமாகும். பழங்காலங்களில் பண அளிப்பில் பெரும்பான்மையான இடம் பெற்றது செலாவணியே. பொன் நாணயமே அப்போது முக்கிய மான செலாவணியாக இருந்தது. அப்போதெல்லாம் இம் முறையே சிறந்த பலனளிக்கும் முறையாக இருந்தது. இம்முறையில், பொன் நாணயக் குறைப்பு (reduction in the gold coin) அதற்குச் சமமான குறைப்பை மொத்தப் பண அளிப்பிலும் உண்டு பண்ணுவதாக இருந்தது. ஆனால் தற்காலப் பண முறையில், பொன்னுக்குச் சாதகமாகக் கூறப்படும் வாதமும் (argument for gold) மேலே குறிப்பிட்ட குறைபாட்டினையே பெற்றிருக்கிறது—அக்குறைபாடு யாதெனில் இவ்வாதம் கணியக் கோட்பாட்டினை ஏற்றுக் கொள்வதோடு பொன் காப்புகளின் அளவில் (gold reserves) ஏற்படும் ஏற்ற இறக்கங்கள் (fluctuations), மொத்தம் பண அளிப்பிலும் அதே அளவு ஏற்ற இறக்கங்களை உண்டு பண்ணும் என நம்புவதாகும். பன்னாட்டுப் பொன் திட்டத்திற்கு (அது மீண்டும் கொண்டுவரப்படுகிற தென்கிற நம்பிக்கையிலும்) உள்நாட்டுப் பொன் திட்டம் அரைகுறையான உதவியளிக்க வல்லது என்கிற ஒரே காரணத்திற்காக அதனைக் கடைப்பிடித்தல் அறிவீனமேயாகும். மேலும் நாம் ஏற்கெனவே குறிப்பிட்டபடி, வேறொரு வழியிலும், இவ்விரு பொன் திட்டங்களும் ஒன்றை யொன்று வழி மறிக்கின்றன. புழக்கத்திலுள்ள செலாவணிகளுக் கேற்ப காப்பு நிதியில் பொன் வைத்திருக்க வேண்டுமாதலால், அது ஏற்றுமதிக்கான பொன் அளவைக் குறைக்கின்ற காரணத் தால், இவ்வாறான நிலை ஏற்படுகின்றது.

பொன்னுக்குப் புனிதமான மதிப்பு இருந்த வரையிலும், தங்கள் செலாவணி திடமான பொன்னால் தாங்கப்பட்டிருப்பின் அதன் மீது சாதாரண ஆண்களும் பெண்களும் அதிகமான நம்பிக்கை வைத்துக்கொண்டிருந்த வரையிலும் — இவ்வாறு செலாவணியைத் தாங்குவதற்கு ஒவ்வொருநாட்டிலும் போதுமான அளவு பொன்னிருந்த வரையிலும்—உள்நாட்டுப் பொன் திட்டத்

தைக் கைவிடாமல் கடைப் பிடிப்பதற்குத் தகுந்த வலுவான உள்ளுணர்வான (psychological) காரணம் இருந்தது. ஆனால் இரண்டு போர்களும் (two wars) இவைகளுக்கிடையே ஏற்பட்ட பொருளாதாரக் குழப்பக் காலமும் மேற்படி காரணத்தை ஒதுக்கித் தள்ளி விட்டன. உலகத்திலுள்ள பெருவாரியான நாடுகள் தங்களது பொன் காப்புகளை (gold reserves) எடுத்து விற்றுவிட்டு போர்த்தளவாடங்களை வாங்கும்படி நேர்ந்தது. அந்நாடுகளின் மக்கள் பொன்னால் தாங்கப் படாத செலாவணிகளைக் கையாளும் படி நேர்ந்தது—பண மேலாண்மையாளர்கள் (monetary authorities) நியாயமாகவும் நிதானமாகவும் இம்முறையைக் கையாளும் பட்சத்தில், இம்மாதிரியான செலாவணிகள் முற்றிலும் நம்பிக்கையானவைகளாக ஏற்றுக் கொள்ளப்படும். உண்மையில், உள்நாட்டுப் பொன் திட்டம் நாளுக்கு நாள் தனது இயற்கையான மரணத்தை கொஞ்சம் கொஞ்சமாக அடைந்து வருகிறது; தனது மற்றொரு பணியாகிய பன்னாட்டுச் செலாவணிகளுக்கிடையேயுள்ள ஒப்பீட்டு முறைகளை ஒழுங்குபடுத்துவதில், பொன் அதிகமாகப் பயன்படுத்தப்படுகிறது.

## பன்னாட்டுப் பொன் திட்டம்
(The International Gold Standard)

உள்நாட்டுப் பொன் திட்டம் முக்கியமாக, உள்நாட்டு விலை மட்டத்தை பாதிக்கும் பண அளவு சம்பந்தப்பட்டதே யாகும். பன்னாட்டுப் பொன் திட்டம் (International gold standard)செலாவணியின் புற மதிப்பு, அயல்நாட்டுச் செலாவணிகளின் நிலையான தன்மையை உண்டுபண்ணுவது ஆகிய பிரச்சினைகளை மேற்கொள்ளுகிறது. பொன் திட்டம் எந்த ஓர் உள்ளுணர்வான நோக்கத்திற்காகவும் (Conscious purpose) கண்டுபிடிக்கப்பட்டதல்ல என்பதை மீண்டும் இங்குக் கூறுதல் பொருத்தமாக இருக்கக் கூடும். அதன் உள்நாட்டுப் பணிகள் (domestic functions) என்று நாம் அழைத்த பணிகள் பெரும்பாலும் அதன் பணத்தை உலோக வடிவில் கொண்டுள்ள காகிதப் பணத்தின்மீது மக்கள் கொண்ட அதிருப்தியின் காரணமாக எழுந்தவையே. பொன்னோடு நோட்டுகளும் புழங்கும்படி அனுமதிக்கப்படும்போது, நோட்டுகள் பொன்னுக்குப் பதிலிகளாக மட்டும் (substitutes) இருக்கும்படியும், அதிக அளவில் அவைகள் வெளியிடப்படாதபடியும் அந்நோட்டுகளைப் பொன்னால் மீட்கப்பட வேண்டியதற்கு (redeeming) வேண்டிய பொன் எப்போதும் தயாராக இருக்கும்படியும் பார்த்துக்கொள்ள அதிக கவனம் செலுத்தவேண்டும். செயலளவில் எல்லாப் பணமும் காகிதப் பணமாக இருக்கும். இந்நாளில் இவ்விதமான எச்சரிக்

கைகள் பொருத்தமின்றியே இருந்தன. மேலும், ஒருவர் தமது காகிதப் பணத்தைப் பொன்னுக மாற்றுகின்ருரென்ருல் அவர், சாதாரணமாகப் பொன் பணத்தைத் தான் வைத்துக்கொள்ள விழைகிருரென்று பொருளல்ல; அவர் அவ்வளவு பொன்னைப் பெற விழைவது வெளிநாடுகளுக்கு அனுப்புவதற்காகவே யாதலால், இவ்விதமான ஒருகாலத்தில் இவ்வெச்சரிக்கைகள் பொருத்தமின்றி உள்ளன என்று கூறப்பட்டது.

பொன் திட்டத்தின் பன்னுட்டுப் பணிகள் பொறுத்த வரையி லும் கூட இவ்விதமாகத்தானுள்ளது. நாட்டின் பெருவாரியான பண அளிப்புகளுக்குப் பொன் நாணயங்களே வழங்கியபோது இவ்விரு பொன் செலாவணிகளுக்குமிடையே யிருந்த மாற்று வீதத் தில் துல்லியமான வேறுபாடுகள் காணப்பட்டனவே தவிர அதிக அளவில் எவ்வித மாறுபாடும் காணப்படவில்லை—ஆனுல் இவ்விரு செலாவணிகளுமே ஒரே நிறையில் வைக்கப்படுவதுடன் அவைகள் கத்தரித்து வெட்டி எடுத்துக் கொள்ளப்படாமலும், கையாளப்படும் போது வியர்வையால் பாழாகாமலும், அதிகப்படியான தேய்மானத் தால் நிறைய எடையை இழக்காமலும் இருக்க வேண்டும். புழக் கத்திலுள்ள செலாவணிகளில் ஒரு பகுதியாக நோட்டுகள் இருக்கும் போது அவைகள் உடனடியாகப் பொன்னுக மாற்றப்படக்கூடிய தன்மையும் (Convertibility) அவைகளின் குறைவான அளவும், இதற்கு முன்பிருந்த தன்னியக்கமான (automatic) மாற்றுவீத நிலையான தன்மையை (exchange stability) மாற்ருத வண்ணம் தடுக்கின்றன. பின்னர், பாங்குச் செலாவணியும் பண அளிப்பில் ஒரு முக்கியமான பகுதியாக இருந்தமையால், நிலைமை சற்றுச் சிக்கலாக மாறியது. பாங்கு வைப்புக்கள் (bank deposits) நிர்ண யிக்கப்பட்ட வீதத்தில் தாராளமாகப் பொன்னுக மாற்றப்படக் கூடியதாக இருக்கும் வரையிலும் லண்டனிலுள்ள ஸ்டெர்லிங் பாங்கு வைப்பிற்கும் நியூயார்க்கிலுள்ள டாலர் பாங்கு வைப் பிற்கும் இடையேயுள்ள பாங்கு வீதம் மிகவும் சிறிதளவு பொன் வித்தியாசத்திற்கு மேல் அதிகமாக மாறுபாடு அடைவதில்லை. ஆனுல் இம் முறையைக் கண்மூடித்தனமாகக் கையாளுவதோ அல்லது தானே இயங்கும்படி விட்டுவிடவோ முடியாது. எனவே மாற்றுரிமை (Convertibiity) என்பது இம் முறையில் உட்செலுத்தப்பட்டிருக்கிறது. நாட்டின் பணம் பெரும் பாலும் பொன்னுக இருக்குமானுல், அதனைப் பொன்னுக மாற்ற இயலும் பிரச்சினையே எழாது; ஏனெனில் அந்தப் பணந்தான் ஏற்கெனவே பொன்னுக இருக்கிறதே! ஆனுல் நாட்டின் பணம் காகிதத்தாலானதாக இருந்தால், அல்லது அதைவிட இன்னும் மதிப்புக்குறைந்த பொருளாலானதாக இருந்தால் உதாரணமாக

பாங்கு வைப்புகளாக இருந்தால், அதனைப் பொன்னுக மாற்றப் படக்கூடிய திறன் தானே இயங்கக்கூடியதாகவோ (automatic) அல்லது தானே விளங்கக்கூடியதொரு உண்மையாகவோ (aviomatic) இருப்பதில்லை. மாற்றும் தன்மையை (convertibility) நிலை நிறுத்துவதற்கான பல்வேறு வழி முறைகளை நாம் விரைவில் விரிவாக ஆராய்வோம்.

ஆனால் இவ்வளர்ச்சியின் முறை (process of deovelopment) சீரானதாகவே யிருக்கிறது. இம் முறையில், மாற்று வீதங்களில் நிலையான தன்மையை உண்டுபண்ணுவதற்கு கையாளப்பட வேண்டிய வழிகள் ஆரம்பத்தில் இயற்கையான முறைகளாகவே யுள்ளன. பொன் திட்டத்தின் வரலாற்று வளர்ச்சியில் (historic development) எந்தப் பகுதியிலுமே (1914ஆம் ஆண்டிற்கு முன் இருந்த பொன் திட்டத்தில்) மாற்று வீதங்களில் ஒரு நிலையான தன்மையை உண்டுபண்ணுவதற்கு ஓர் உள்ளுணர்வான முடிவு (conscious decision) எடுக்கப்படவில்லை. இதற்கெதிராக, முதல் உலகப் போர் ஆரம்பிக்கும் வரையிலும் மாற்று வீதங்களில் நிலையான தன்மையை உண்டுபண்ணும் நோக்கத்தை ஒருவரும் எதிர்க்கவில்லை. ஒரு நூற்றுண்டிற்கு மேல் நிலையான தன்மை (stability) இயல்பானதொரு நிலை (normal state) யாக இருந்தது. நிலையற்ற தன்மைக்குக் காரணங்கள், போர், புரட்டு அல்லது நிதிய இடையூறு (financial calamity) இவைகளாகும்.[1] மாற்று நிலைபேற்றைத் (exchange stability) தவிர்ப்பதற்கு நல்ல காரணங்களிருக்கிற தென்பதை, சமீபத்தில், முப்பதாண்டுகளாகத்தான், உணரலாயினர்.

பொன் திட்டம் மாற்று நிலைபேற்றினைக் (exchange stability) கடைப்பிடிக்கும் முறை ஏற்கெனவே விளக்கப்பட்டது. அயல் நாட்டு மாற்று அங்காடியில், 'நாணயச்சாலை சமன்பாட்டின்' (mint parity) இருபக்கத்திலும் ஒருவீதத்தில் பாதிக்கும் குறைவான வீதத்தில் நேரடியாக மாற்றுச் செய்வதன் மூலம் திருப்தி செய்யப்பட இயலாத அயல்நாட்டுச் செலாவணிகளின் தேவையானது அயல்நாட்டு மாற்று அங்காடியை விட்டு வெளியேற்றப் பட்டுப் பொன் அங்காடிக்குச் (gold market) செலுத்தப்படும். இவ் விதமாகவே அயல்நாட்டு மாற்று அங்காடியில் எந்தச் செலாவணிக்கான தேவையும் அந்த அங்காடியில் அளிப்புக்குச் சமமாக

1 பொன் செலாவணிகளுக்கும் வெள்ளிச் செலாவணிகளுக்குமிடையேயுள்ள மாற்று வீதங்களில நிலையற்ற தன்மையைத் தவிர்த்து, மற்ற நிலையற்ற தன்மைக்கான காரணங்கள, மேற்படி இரு செலாவணிகளுக்குமிடையேயுள்ள மாற்றுவீதங்களிலுள்ள நிலையற்ற தன்மையை, நிலையான தன்மையக சொணரும் இரு வேறு முறைகளுக்கிடையேயுள்ள வேறுபாடுகள் (divergences) எனக் கூறலாம்.

வைக்கப்படுகிறது. இம்முறை கீழ்க்கண்ட நிகழ்ச்சியை முற்றிலும் பொறுத்துள்ளது. பொன் அங்காடியில் செலுத்தப்படும்போது நிர்ணயிக்கப்பட்ட ஒரு விலையில் அளவற்ற பொன் (unlimited quantities) திரட்டப்படுவதைப் பொறுத்தது இம்முறை. இது நிச்சயமாக இல்லாமலிருக்குமானால் அயல்நாட்டுச் செலாவணிகளை விரும்பும் மக்கள் அவைகள் பொன் அங்காடிக்குத் திருப்பப்படுவதை எதிர்ப்பார்கள். அவர்கள், தங்களது பொன்னை நிர்ணயிக்கப்பட்ட விலைக்குப் பெறக்கூடும் என்று நிச்சயமாக இருக்கும் வரையில் (நிர்ணயிக்கப்பட்ட விலையானது அவர்களை ஒரு பவுண்டிற்கு $ 4·85 களைப் பெற உதவும்) அவர்கள் அயல்நாட்டு மாற்று அங்காடியிலிருப்பதை விரும்புவார்கள். மேலும், டாலர்களுக்கு மாற்றாகப் பொன்னை அளிக்க முன்வருபவர்களிடம் போட்டியிட்டுக் கொண்டு அவர்கள், மாற்றுவீதத்தை 4·84 டாலருக்கு அல்லது இன்னும் குறைவாகவும் இருக்கும்படி செய்வார்கள். உண்மையில் அவர்களுக்கு லண்டனில் £ 1க்கு 113 குன்றிமணி பொன்னைப் பெற இயலுவதற்கான உறுதி நிலையும் (assurance) நியூயார்க்கில் (கப்பற்கட்டணத்தை அவர்கள் செலுத்திவிட்ட பிறகு 113 குன்றிமணி பொன்னுக்கு 4·86) டாலர்களைப் பெறுவதற்கான உறுதி நிலையும், தேவைப்படுகின்றன. பணத்தைப் பொன்னாகவும் பொன்னைப் பணமாகவும் தாராளமாக மாற்றக்கூடிய நிலையில்லாத போது, பொன் திட்டம் மாற்று வீதங்களின் நிலையான தன்மைக்கு உத்தரவாதமாக இருக்க முடியாது. எனவேதான், பொன் திட்டமானது செலாவணிகள் பொன்னாக மாற்றப்படக்கூடிய பிரச்சினையைத் தனது பிரச்சினைகளுள் ஒன்றாக மேற்கொண்டுள்ளது.

சமன் செய்யப்படாத பேரங்களின் அளவு (margin of unbalanced transactions) அதிகமானதாக இல்லாமலும் நிலையானதாக இல்லாமலும் (இவைகள் பொன் பெயர்ச்சிகளால்தான் பாதுகாக்கப்பட முடியும்) இருந்தால்தான் மாற்றுத் தன்மையை (convertibility) வைத்துக் காக்க முடியும். எனவே, சாதாரணமான பொன் திட்டக் காலங்களில் (normal gold-standard times) ஏதாவது ஒரு நாளில் பவுண்டுகளுக்கு மாற்றாகப் பொன் திட்டவீத எல்லையாகிய $ 4 84 லிருந்து $ 4·89 வரை தேவைப்படும் டாலர்களின் எண்ணிக்கையானது பவுண்டுகளுக்கு மாற்றாக அளிக்கப்படும் டாலர்களின் எண்ணிக்கையைவிட அதிகமாக அந்த நாளில் இருக்குமானால், இங்கிலாந்து பாங்கு இவ்வதிகப்படியான உள்ளதைத் தன் பொன் அளிப்பினால் ஈடுசெய்யும். இதற்காக பொன் காப்பிலிருந்து எடுக்கப்பட்ட பொன்னும் மிக அதிக அளவில் இருந்துவிடாது; அது ஒரு சில ஆயிரம் பவுண்டுகள் மதிப்புடைய சிறிதளவு பொன்னாகவே யிருக்கும். அடுத்த நாளில் இதைப்

போன்ற தேவை மீண்டும் கோரப்பட்டு அத் தேவை பூர்த்தியும் செய்யப்படும். இதைப்போன்று பல வாரங்களுக்கு தினமும் நடக்கும். ஆனால் தனது பொன்காப்பு நிதிகள் எல்லையின்றி பெரியதாக இல்லாமலிருக்கின்ற காரணத்தால் (ஒரு குறிப்பிட்ட அளவே பொன் காப்பு நிதி யிருக்குமாதலால்), காலவரையறையின்றி இந்நிலை நீடிப்பதை இங்கிலாந்து பாங்கு அனுமதிக்காது. தொடர்ந்து பொன் வந்து கொண்டிருப்பதனால் உள்ள இடைஞ்சல்கள் வெளிப்படையாகத் தெரியாவிடினும், இடைஞ்சல்கள் இருந்துகொண்டுதானிருக்கின்றன. பாங்கானது ஒவ்வொரு நாளும் பொன்னை வாங்கிக் கொண்டிருக்குமானால், தனது பொன் வருவாய்களை அதன் பேழையில் வைத்துப் பூட்டி வைத்துக்கொள்ள வேண்டிய நிலை ஏற்படும். இவ்வாறு பூட்டி வைக்கப்படும் பொருள், அரசாங்கக் கடன் பத்திரங்களைப் போன்று (Government securities) எத்தவிதமான வட்டியையும் (interest) அளிப்பதில்லை. பாங்கானது, ஒரு குறிப்பிட்ட அளவிற்குப் பிறகு, பொன்னை தன்னுள்ளே கொள்வதற்கு மறுக்கும்; பொன் பாங்கினுள் வருவதைத் தடுக்க முயற்சி செய்யும். அதிக அளவு கூடுதலான பொன் அளிப்புகளைச் சிருட்டி செய்வதன் மூலம் இதனைச் செய்ய முயற்சி செய்யும். நிர்ணயிக்கப்பட்ட மாற்றுவீதங்களில், பவுண்டுகளின் அங்காடி அளிப்பினால் திருப்தி செய்யப்பட முடியாத பவுண்டுகளுக்கான அதிகமான தேவையைச் (Surplus demand) சமாளிப்பதற்காகவே இக்கூடுதலான பவுண்டுகளின் அளிப்புகள் சிருட்டிக்கப்படும் பொன்னானது, தொடர்ந்து உள்ளே வந்துகொண்டிருப்பதில் (Continuous inflow) வரும் தீமை அது தொடர்ந்து வெளியேறிக் கொண்டிருக்கும் தீமையைவிடக் குறைவாகவேயிருக்கின்றது. நாட்டின் வரலாற்றிலேயே பொன் தேவைக்கு மேல் அதிகமாக இருந்து நாடு பொன்னைத் தன்னகத்தே கொள்வதற்கு மறுத்த நிகழ்ச்சி ஒன்றே ஒன்றுதானுண்டு (1914-18 ஆண்டுகளில் நடந்த போரின்போது ஸ்வீடன் நாட்டில் நடந்த நிகழ்ச்சி). அதே நேரத்தில் தங்களது பொன் காப்புகள் வறண்டுவிட்ட காரணத்தால் பொன்னை அளிப்பதற்கு மறுத்துவிட்ட நிகழ்ச்சிகள்தாம் அநேகம். எனினும் குறைந்தபட்சம் கோட்பாட்டளவிலாவது (in theory at least) இந்த வாதம் (argument) இருவழிகளிலும் செல்லுபடியாகக்கூடியதாக இருக்கிறது. பொன்னும் பணமும் ஒன்றையொன்று தாராளமாக மாற்றிக்கொள்ளுதற்குரியனவாக (Free inter-convertibility) இருக்கும்படி செய்வதற்கான ஒரேவழி, அயல்நாட்டு மாற்று அங்காடியில் செலாவணிக்கான தேவையும் அளிப்பும் நிரந்தரமாக சமனக்கேடு (out of balance) அடையாதவாறு பார்த்துக்கொள்ளுதலேயாகும். தேவை அல்லது அளிப்பு மிகுதியினால் தாற்காலிகமாக ஏற்படும் ஒழுங்கீனங்களைப் பொன் பெயர்ச்சிகள் (gold move-

ments) சரி செய்துவிடும். ஆனால் அவைகள் காலவரையறையின்றித் தொடர்ந்து ஏற்படும் மிகை ஒழுங்கீனங்களைச் சரிசெய்ய இயலாதனவாக இருக்கும்.

எனவே, பன்னாட்டுப் பொன்திட்டமானது (international gold standard) தேவைக்கும் அளிப்புக்குமிடையே ஏற்படும் சமன் கேட்டைக் (disequilibrium) களைவதற்கான வழிமுறைகளைப் (devices) பெற்றதாக இருக்கவேண்டும். ஏழாம் அத்தியாயத்தின் முடிவுரையில் நாம் கூறியவற்றை இங்கு மீண்டும் நினைவுபடுத்திக் கொள்ளலாம். நீண்டகாலத்தில் (long run) செலாவணியின் தேவை அளிப்பு ஆகியவைகள் அந்நாட்டின் விலைகள் (prices) உற்பத்திச் செலவுகளுக்கும் (costs) உலகத்தின் மற்ற நாடுகளின் விலைகள் உற்பத்திச் செலவுகளுக்குமிடையேயுள்ள தொடர்பைப் பொறுத்திருக்கும். ஒரு நாட்டின் விலைகள் மற்ற நாடுகளின் விலைகளைவிட அதிகமாக இருந்தால் அதனுடைய செலாவணிக்கான தேவை குறையும்; அதனுடைய செலாவணியின் அளிப்பு அதிகரிக்கும். பொன்திட்டச் சூழ்நிலைகளில் இது, பொன் நாட்டைவிட்டு வெளியேறுவதற்கு வழி செய்யும்.—ஏதோ சிதறலாக (sporadic) பொன் நாட்டைவிட்டு வெளியேறுவதில்லை, தொடர்ச்சியாகவும் குவிதலாகவும் (cumalative) அதிகமாகவும் பொன் நாட்டைவிட்டு வெளியேறும். இதற்கு எதிரிடையாக நாட்டின் விலைகள், ஏனைய நாட்டின் விலைகளைவிடக் குறைவாக இருந்தால், நாட்டை நோக்கிப் பொன் தொடர்ந்து (continuous inflow) வந்து கொண்டேயிருக்கும். எனவே மாற்றுத்தன்மையை (convertibility) நிலைநாட்டும் வழி யாதெனில், பொன் நாட்டைவிட்டு வெளியேறிக் கொண்டிருக்கும் போது விலைகளின் இறக்கத்தைக் கொண்டு வரவேண்டும்; பொன் நாட்டை நோக்கி வந்துகொண்டிருக்கும் போது விலைகளை அதிகப்படுத்தவேண்டும்.

விலைகளைக் கட்டுப்படுத்தும் எந்த நடவடிக்கைக்கும் அதன் நோக்கத்தை நிறைவேற்றச் சற்று காலம் பிடிக்கும். இதற்கிடையேயுள்ள இடைவேளையில் பொன்னின் ஓட்டத்தை நிறுத்த மற்ற நடவடிக்கைகளை எடுக்கவேண்டும். ஏழாவது அத்தியாயத்தில், செலாவணியின் தேவை அளிப்பு ஆகியவற்றைப் பல தாற்காலிகக் காரணிகள் (a number of temporary factors) இயக்குகின்றன என்பதை ஆராய்ந்தோம். இதனை மீண்டும் இங்கு நினைவுபடுத்திக்கொள்வோம். இந்த தாற்காலிகக் காரணிகளாவன: நீண்டகால மூலதனப் பெயர்ச்சிகள், குறுங்கால மூலதனப் பெயர்ச்சிகள், ஊகபேரம் (speculation) ஆகியவைகளாம். நிலையாக ஏற்படுத்தப்பட்ட பொன் திட்டச் செலாவணியைப் பொறுத்த வரையில் ஊக

பேரத்தைப் பற்றி நாம் சிறிதளவும் பொருட்படுத்தவேண்டிய தில்லை. ஏனெனில் பொன் திட்டத்தைக் கடைப்பிடிக்கும் வரையில் மாற்றுவீதம் (exchange rate) 1 சதவீதத்திற்கு மேல் ஏற்ற இறக்கம் அடைவதில்லை. எனவே யூகபேர இலாபத்திற்கு இதில் சற்றும் இடமேயில்லை. பொன் பெயர்ச்சிகளைப் பற்றிப் பார்ப்போம். ஏழாம் அத்தியாயத்தில் அவைகள் செலாவணியின் மதிப்பை நிர்ணயிப்பதில் செலுத்தும் அதிகாரம் நிரந்தரமாக இருக்கக் கூடியதல்ல எனக் கூறப்பட்டது. ஆனால் குறுங்காலத்தில் (short run) அது இருக்கக்கூடும். விலை மட்டங்களின் மிகவும் மெதுவாகப் போய்க்கொண்டிருக்கிற ஆனால் நிரந்தரமான மாறுதல்கள் பாதிக்கப்படும் வரையில், இந்நிலையை எட்டிப்பிடிப்பதற்கான ஒரு காரணியை நாம் எப்படியும் தேடிக்கொண்டுதானிருக்க வேண்டும்.

பொன், நாட்டைவிட்டு வெளிச் சென்றுகொண்டிருக்கும் போது, மையபாங்கு விலைகளின் இறக்கத்திற்கான திட்டங்களை வகுக்கவேண்டும்; அதேசமயத்தில் மூலதனம் நாட்டை நோக்கி வருவதற்கும் அல்லது குறைந்த பட்சம் மூலதனம் நாட்டைவிட்டு வெளியேறுவதைத் தடுக்கவேண்டும். இவ்விரு நோக்கங்களையும், பாங்கு வீதத்தை உயர்த்துவதன் மூலமும், கடன் தடை (credit restriction) ஆகிய இவ்விரு முறைகளாலும் நிறைவேற்றலாம். விலை மட்டத்தைக் கட்டுப்படுத்த மையபாங்கு செய்யும் முயற்சிகள் முற்றிலும் வெற்றிபெறுமா என்று ஐயுறுவதற்கான காரணங்களை ஆறாம் அத்தியாயத்தில் பார்த்தோம். ஆனால் பாங்குவீத அதிகரிப்பும் (increase in the Bank rate) கடன் தடையும் (restriction of credit) நிச்சயமாக விலைகளைக் குறைக்க உதவும். அதேசமயத்தில் பாங்கு வீதத்தின் அதிகரிப்பு (rise in the Bank rate) மூலதன அங்காடியை (capital market) பாதிக்கும். குறுங்காலக் கடனுக்கான வட்டிவீதம்—பாங்குகளால் கொடுக்கப்படும் தேவை கடன்கள் (demand loans) மாற்று உண்டியல்களின் மீது அளிக்கப்படும் கழிவு வீதம் (rate of discount on bills of exchange), கருவூல உண்டியல்கள் முதலியன—உடனடியாகப் பாதிக்கப்படும். குறுங்கால முதலீடுகள் செய்யப்பட்டுள்ளன. இந்நிதிகள் அதிக பாங்கு வீதம் (higher bank rate) உள்ள இடத்தை நோக்கிச் செல்லும். லண்டனில் பாங்கு வீதம் உயர்த்தப்பட்டால், பிரிட்டிஷ் பாங்குகளும் பாங்கு அகங்களும் (banking houses) தாங்கள் நியூயார்க்கிலும். பாரீசிலும் (Paris) கொடுத்து வைத்துள்ள நிதிகளை திரும்பப் பெறும். அதேபோல் அயல்நாட்டுப் பாங்குகளும் தங்களது வைப்புகளை இருப்பு வைப்பதற்கு லண்டனைக் கவர்ச்சிமிக்க இடமாகக் (attractive centre) கருதும். இந்நிதிகள் லண்டனை நோக்கிப் பாய்

வதானது பவுண்டுகளுக்கான தேவையை (demand for pounds) அதிகரித்து, பொன் ஏற்றுமதியையும் நிறுத்தும். 1914ஆம் ஆண்டிற்கு முன்பு உலகத்தின் பெரும்பகுதி வாணிபமும் லண்டனி லிருந்து பெறப்பட்ட மாற்று உண்டியல்களால் (bills of exchange) நிதியளிக்கப்பட்டபோது (financed) லண்டன் கழிவு அங்காடியில் (London Discount market) நிலவுகின்ற வட்டிவீதத்தில் ஏற்படும் அதிகரிப்பு, பெற்றுக்கொள்ளப்படும் உண்டியல்களின் அளவில் குறைவை (reduction) ஏற்படுத்தும். முதிருந்தருவாயிலுள்ள பழைய உண்டியல்களுக்காக லண்டனுக்குச் செலுத்தப்படும் நிதிகள் (fund), புதிய உண்டியல்கள் அங்காடியில் கழிவு செய்யப் படுவதால் லண்டனிலிருந்து செலுத்தப்படும் நிதிகளின் எதிர் ஓட்டத்திற்கு (return flow) மேல், அதிகரிக்க ஆரம்பிக்கும். எனவே பவுண்டுகளுக்கான தேவையில் அதற்கு ஒப்பீடான அளிப் பைக் காட்டிலும் (relatively to the supply) உடனடியானதும் (immediate) தன்னியக்கமானதுமான (automatic) ஓர் அதிகரிப்பு ஏற்படும்.

பாங்குவீத அதிகரிப்பானது நெடுங்காலக் கடன் பத்திரங்களி னின்றும் (long term securities) கிடைக்கக்கூடிய வட்டிவீதத்தை பாதிக்கும். பாங்கு வீதத்தில் ஏற்படும் ஓர் அதிகரிப்பானது, அநேகமாக எப்போதுமே பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கடன் பத்திரங்களின் (British Government securities) விலைகளைக் குறைக் கும். மூலதன அங்காடியின் (capital market) ஒவ்வொரு மூலைமுடுக் கிலும் வட்டிவீத அதிகரிப்பு பரவுவதற்கு பலதடைகள் (obstacles) உண்டென்பதை ஆறும் அத்தியாயத்தில் பார்த்தோம். ஆனால் பாங்குவீதம் அதிகரிக்கும்போது, எல்லா வட்டிவீதங்களும் அதிகரிப்பதற்கானதொரு போக்கு (some tendency) உண்டென் பதை யாரும் மறுக்கமுடியாது. லண்டனில் வட்டிவீதம் அதிகரித் துக் கொண்டு செல்லும்போது அயல்நாட்டிலிருந்து கடன்வாங்க வருபவர்கள் லண்டனில் கடன்பெற நேர்ந்தால் அதிக வட்டி கொடுத்துக் கடன் பெற நேரிட்டது. எனவே அவர்கள் வெளியில் வேறு எங்காவது கடன் வாங்குவதையே விரும்பினர் அல்லது கடன் பெறுவதை ஒத்திப்போட விழைந்தனர்.

பாங்குவீத அதிகரிப்பானது அயல்நாட்டினரால் கடன் பெறப்படும் கடன் தொகையின் அளவைக் குறையச் செய்யும். எனவே அதிகரிக்கப்பட்ட பாங்குவீதம் (increased bank rate) கடன் தடையுடன் (restrictions of credit) சேர்ந்து மூன்று விளைவு களை உண்டுபண்ணும். மிகவும் உடனடியான விளைவு யாதெனில் குறுங்கால பாங்கு நிதிகளை (short-term banking funds) அது

ஈர்க்கும் (அதாவது செலாவணிக்கான தேவையை அதிகரிக்கும்). இரண்டாவதாக ஏற்படும் நிகழ்ச்சி அயல்நாட்டினருக்கு அளிக்கப் படும் கடன்களைக் குறையச் செய்வதாகும். (அதாவது அயல்நாட்டு மாற்று அங்காடிக்கு வரும் செலாவணியின் அளிப்பைக் குறையச் செய்வதாகும்). மிகவும் மெதுவாக ஏற்படுகிற மூன்ருவது விளைவு, விலைகள் இறங்குவதற்கான போக்காகும். இதனுல் செலாவணிக் கான தேவை அதிகரிப்பதுடன் அதனுடைய அளிப்பும் குறையும். இதற்கு எதிரிடையாக, பாங்குவீதக் குறைவும் கடனைத் தடை யின்றி தாராளமாக வழங்குதலும் (relaxations of credit) குறுங்கால பாங்கு நிதிகள் நாட்டைவிட்டு வெளியேறுவதை ஏற்படுத்தும். மேலும், இவை அயல்நாட்டுக் கடன் கொடுத்தல் அதிகரிப்ப தோடு விலைகளையும் அதிகரிக்கும். இவை ஒவ்வொன்றும் செலா வணியின் தேவையைக் குறையச் செய்வதோடு, அளிப்பிற்கு ஒப்பீடாக செலாவணிக்கான தேவையையும் (demand for the currency relatively to the supply of it) குறைக்கும்.

1914-18 ஆண்டுகளுக்கு முன்னுல் இருந்த பன்னுட்டுப் பொன் திட்டத்தின் அமைப்பினுடைய எளிதான சிறுவிளக்க மாகும். அது வகுக்கப்பட்ட நோக்கத்தின்படி எப்போதாவது வேலை செய்து வந்திருக்கிறதா என்ருல், இல்லையென்று தான் கூற வேண்டும். அதனுடைய வேலையை ஒவ்வொரு வகையிலும் தடை செய்வதற்கு எப்போதும் சில தடைச் சாதனங்கள் இருந்து கொண்டேயிருந்தன. உண்மையில், பாங்கு வீதத்தில் ஏற்படு கின்ற மாற்றங்கள் மேலே கூறப்பட்ட விளைவுகளைத் தராதுபோகும் நிகழ்ச்சிகள் பல இருந்தன. உதாரணமாக, உள்நாட்டுப் பாங்குக் கோளாறு ஏற்படும் (internal banking trouble) என்று எதிர்பார்க் கப்படுவதன் காரணமாகவோ அல்லது பொன்திட்டத்தை நிறுத்தி வைப்பது தவிர்க்கமுடியாதது எனக் கருதப்படுவதன் காரண மாகவோ, லண்டன் பண அங்காடியில் (London money market) மக்களுக்கு நம்பிக்கையில்லை யென்று வைத்துக்கொள்வோம். இந்தச் சூழ்நிலைகளில் பாங்குவீதத்தில் ஏற்படும் எந்த அதிகரிப்பும் ஸ்டெர்லிங்கின் தேவையைப் போதுமான அளவிற்குத் தூண்டாது. மூலதனமானது 20 அல்லது 30 சதவீதம் இழக்கப்பட்டுவிடும் என்று எதிர்பார்க்கப்படும்போது ஆண்டொன்றுக்கு அல்லது 2 சதவீத பாங்குவீத உயர்வால் குறுங்கால நிதிகள் (short-term funds) அதிகரித்துவிடுவதில்லை. அதேபோன்று நெடுங்கால மூல தனத்திற்கும் (long-term capital) யாதொரு நன்மையும் இருப்ப தில்லை. நெருக்கடி ஏற்படக்கூடிய நிலையிலிருக்கிறதெனக் கருதப் படுகிற ஒரு நாட்டிற்கு ஒருவரும் கடன் கொடுக்க முன்வரமாட் டார்கள். மேலும் ஆங்கிலேயர்களும் அயல்நாட்டினரும் ஒருவ

ரோடொருவர் விழுந்தடித்துக் கொண்டு தங்களது மூலதனத்தை, முறிவு (crack) ஏற்படுவதற்கு முன்னர், நாட்டைவிட்டு வெளிக் கொண்டு செல்ல முயற்சிசெய்வர். உண்மையில், பாங்குவீத அதிகரிப்பானது மூலதனப் பெயர்ச்சி என்னும் புயலை முன்கூட்டி யுணர்த்தும் ஓர் முன்னறிவிப்பாளராகவே (harbinger) இருக் கிறது.

எனவே, பொன்திட்டச் செயல் முறையை (the gold standard mechanism) இயல்பான காலங்களுக்கேற்றதும், மற்றவைகள் மாருதிருக்கும் போது மட்டுமே இயங்கவல்லதுமான ஒரு செயல் முறையாகக் கொள்ளல்வேண்டும். இருந்தபோதும், 1914ஆம் ஆண்டிற்கு முற்பட்ட பல பத்தாண்டுகளில் அது நன்கு இயங்கி வந்ததென்பதும், சிறப்பாக கிரேட்பிரிட்டனிலும் இன்னும் வெளி அங்காடி (open market) முறையைக் கையாண்ட பலநாடுகளில் அது நன்கு இயங்கிவந்ததென்பது வரலாற்று உண்மையாகும். இதற்குக் காரணம் போருக்கு முந்திய காலம் இயல்பான காலமாக (normal time) இருந்தமையே. அக்காலத்தில் பன்னாட்டு மூலதனப் பெயர்ச்சிகள் (international capital movements) மிகவும் அதிக மாக இல்லாமலும் நிதானமின்றி (unsteady) இல்லாமலும் இருந்தன; குறுங்கால நிதிகளின் (short-term funds) யூகபேரப் பெயர்ச்சிகளும்(speculative movement)செயலளவில் இல்லாமலிருந் தன. 1914ஆம் ஆண்டிலிருந்து உலகத்தின் முக்கியச் செலாவணி களில் ஏதேனும் ஒன்று பலமற்றது என ஐயப்படப்படாத ஆண்டே இல்லை யெனலாம். ஆனல் போருக்கு முந்திய காலங்களில் முக்கியமான செலாவணிகள் யாவும் ஐயப்படப்படாமல் புழங்கி வந்தன. அந்தக் காலங்களில் லண்டன் யாவராலும் ஒப்புக் கொள்ளப்பட்டதொரு உலக நிதிபத் தலைநகரமாக (financial capital of the world) விளங்கியது. லண்டனின் மூலமாகச் சென்ற பன்னாட்டுச் செலுத்துகளின் அளவு (volume of paymen.s) மற்ற இடங்களின் மூலமாகச் சென்ற செலுத்துகளைக் காட்டிலும் பன் மடங்கு அதிகமாக இருந்தது. ஆனல் இம்முறை முழுவதும் இயங்குவதற்குக் காரணமான, இங்கிலாந்து பாங்கின் பொன் காப்பு (gold reserve) பிரான்சு அல்லது ஐக்கிய அமெரிக்காவின் காப்பு நிதியைவிடக் குறைவாக இருந்தது; மேலும், இரண்டு போர்களுக்கிடையே பொன்திட்டத்தைக் கையாண்ட மையபாங்கு களின் பொன் காப்புகளை ஒப்பிடும் போது, இங்கிலாந்து பாங்கின் பொன் காப்பு மிகவும் குறைவானதே[1]. பாங்குவீதம் என்னும்

[1] 1913ம் ஆண்டில் இங்கிலாந்து பாங்கின் பொன்இருப்புகள் £35,000 000 ஆக இருந்தன. இதில் £ 10,000,000 ஐ கூடுதலாக வெளியிடப்பட்ட நோட் டுக்களுக்கு காப்பாகவும், £ 25,000,000 ஐ பொன் ஏற்றுமதிக்கான தேவை

ஆயுதம்—போருக்கு முன்னல் உடனடியாகவுள்ள ஆண்டுகள் வரை வெளி அங்காடி நடவடிக்கைகளால்கூட துணைசெய்யப்பட வில்லை (உள்ளுணர்வாகவும்)—இக்காப்பு மிகவும் அதிகமாகக் குறைவடைதலினின்றும் அதிகமாக அதிகரித்தலினின்றும் தடுப்ப தற்குப் போதுமானதாக இருந்தது.

பொன் திட்டத்தின் பொன்போன்ற விதி இதுதான்; நாட்டினுள் பொன் வந்துகொண்டிருக்கும்போது பாங்குச் செலாவணியை அதிகரிக்கவேண்டும். பொன் வெளியே சென்றுகொண்டிருக்கும்போது பாங்குச் செலாவணியைச் சுருக்க வேண்டும். ஒருமைய பாங்கு, பொன்னை இழக்கவோ அல்லது அடையவோ தயாராக இருக்குமானல், இவ்விதியை ஒருகால் புறக்கணிக்கலாம். உண்மையில் சில சமயங்களில் இவ்விதியைக் கடைப்பிடிப்பது முட்டாள்தனமாகவும் இருக்கிறது. 1914-18 ஆண்டுகளின் போருக்கு முன்னல், இலையுதிர் காலத்தில் பவுண்டிற்கும் காலவலுவின்மை (Seasoned weakness) பொன் நாட்டை விட்டு வெளியேறுதலினல் தான் பின் தொடரப்பட்டது (accompanied); இளவேனிற் காலத்தின்போது பவுண்டு காலத்தால் வலுவடைந்தபோது பொன் திரும்பி வந்து நாட்டை அடைந்தது. எனவே ஒவ்வோர் இலையுதிர் காலத்தின் போதும் பாங்குச் செலாவணியைக் குறைத்தலும் ஒவ்வொரு இளவேனிற் காலத்தில் பாங்குச் செலாவணியை அதிகரித்தலும் தேவையற்றனவாகத் தோன்றுகின்றன. ஆனல், பொன் பெயர்ச்சிக்கான காரணம் பருவகாலக் காரணமாகவோ அல்லது தாற்காலிகக் காரணமாகவோ இல்லாதிருக்கும்போது, மையபாங்கு இந்த விதியை, மிகவும் அதிகமாகப் பின்னல் இவ்விதிக்குக் கீழ்ப்படிய வேண்டும் என்ற நிலைமையில்தான், புறக்கணிக்கலாம்.

பணவரலாற்றின் ஆரம்ப காலங்களில், பொன் நாணயமே பணஅளிப்பில் முக்கியமான பகுதியாக இருக்கும்போது, உள்

---

களைப் பூர்த்தி செய்வதற்கும் வைத்துக்கொள்ளப்பட்டது. 1939ம் ஆண்டு மார்ச்சு மாதம் 31ந்தேதி இங்கிலாந்து பாங்கின் பொன் காப்புகளும், அரசாங்கத்தின் பொன்காப்புகளும் (Government reserves) சேர்ந்து £ 560,000,000 ஆக இருந்தன. இந்தத் தொகையில் £210,000,000 புழக்கத்திலுள்ள நோட்டுக்களுக்குக் காப்புநிதியாகவும், எஞ்சியுள்ள தொகையாகிய £ 350,000,000, ஏற்றுமதிக்கும் வைத்துக்கொள்ளப்பட்டன. ஆனல் இத்தகைய பாகுபாடு ஏதோ ஒரு மரபொழுக்கமாக (formality) ஏற்பட்டதே தவிர, அசைக்க முடியாத ஒரு சட்டமாக இருக்கவில்லை. பொன்னை ஒரு இனத்திலிருந்து மற்றொரு இனத்திற்கு மாற்ற கருவூலத்திற்கு அதிகாரமிருந்தது. உதாரணமாக போர் ஆரம்பத்தின் போது செயலமுறையில் (virtually) பொன் முழுவதுமே ஏற்றுமதிக்காகப் பயன்படுத்தப்பட்டது. போருக்குமுன்பே இவ்வளவு அதிகமான தொகைகள், ஏற்றுமதியின் பொருட்டு வைத்துக்கொள்ளப் படவேண்டியிருந்தனவென்பது, இரு போர்களுக்கும் முன்பு எவ்வாறு அயல்நாட்டு மாற்று அங்காடி பெருக்கமடைந்திருந்த தென்பதை உணர்த்துகிறது.

நாட்டுச் செலாவணியின் நிலையில் பொன் பெயர்ச்சியினால் ஏற்படும் எதிர்விளைவு (reaction) அநேகமாக தன்னியக்கமானதாகவே (automatic) இருக்கிறது. ஏனெனில் பொன் ஏற்றுமதி செய்யப்பட்டபோது, அந்த ஏற்றுமதியே பண அளிப்பின் குறைதலை (contraction) உண்டுபண்ணும். 1914-ஆம் ஆண்டு வரையிலுங்கூட, இத்தொடர்பு மிகவும் நெருக்கமாக இருந்த காரணத்தால் பெருவாரியான மக்கள் இதனைத் தன்னியக்கமானதென்றே கருதினர். இங்கிலாந்து பாங்கின் உபரி காப்பு நிதிகள் (surplus reserves) மிகவும் கொஞ்சமாக இருந்த காரணத்தால் பாங்கு தனது வகையுள்ள நிலையை (solvency) நிலை நாட்டும் பொருட்டு அக்காப்புகளிலிருந்து (reserves) பேற்றுரிமைச் சீட்டெழுதிப் (draft) பணம் பெறுவதில் உடனடியாக கவனம் செலுத்தவேண்டியதாக இருந்தது. மேலும், இக்காப்பு நிதி இரண்டு முக்கிய செலவினத்திற் குட்பட்டிருக்கிறது. கிரேட் பிரிட்டனில் விலைகள் அதிகரித்துக்கொண்டிருக்கும்போது, மற்ற நாடுகளைவிட அதிவேகமாக அதிகரித்துக்கொண்டிருக்கும் போதும், பொன் ஏற்றுமதி செய்யப்படுவதற்கான ஒரு போக்குக் (tendency) காணப்படும். ஆனால் அதே சமயத்தில் இங்கிலாந்து பாங்கு பொதுமக்களின் பைகளில் பொன் நாணயங்களின் புழக்கத்தை அதிகரிக்கவும், வணிக பாங்குகள் தங்களின் பேழைகளில் வைத்துக்கொள்ளும் ரொக்கத்தை அதிகரிப்பதற்காகவும், பொன்னைத் தேவைப்படுவதற்கான ஒரு போக்குக் (a tendency for the demand for gold) காணப்படும். இதற்கு எதிரிடையாக, இங்கிலாந்தில் மற்ற நாடுகளைக் காட்டிலும் விலை அதிவேகமாக இறங்கிக்கொண்டிருக்கும் போது, அயல்நாடுகளிலிருந்தும் பிரிட்டிஷ் பொதுமக்களிடமிருந்தும் பொன் இங்கிலாந்து பாங்கில் வந்து குவிந்து கொண்டிருக்கும். ஆகவே, பாங்கு, தனது நலனை உத்தேசித்து, பொன் பெயர்ச்சியை ஒரு சிலவாரங்களுக்குக் கூட நீடிப்பதை அனுமதிக்க இயலாது; தன்னியக்கமானதாக இல்லாமற்போனால் தன்னியக்கத் தன்மையின் முழுத் தோற்றத்தையும் கொண்ட (appearance of automatism) பொன்விதிக்கு (golden rule) ஒருவகையில் கீழ்ப்படிய இங்கிலாந்து பாங்கு கட்டாயப்படுத்தப்பட்டது.

1914-ஆம் ஆண்டிற்கு முன்பிருந்த சூழ்நிலைகளில் பொன் திட்டம் மிகச் சிறப்பாகப் பணிசெய்தது. மாற்றுவீதங்களில் (exchange rates) நிலையானதன்மை (stability) மிகக்குறைவான உள்ளுணர்வு (conscious) முயற்சியினால் ஏற்படுத்தப்பட்டதால், அந்நிலையான தன்மை இயற்கையிலுள்ளதாகக் கருதப்பட்டது. அந்த காலங்களில், பலதிறப்பட்ட நாடுகளின் பொருளாதாரக் கட்டுக் கோப்புகள் (economic structures) தற்போதுள்ளவாறு

இல்லாமல், வெகுவாக வேறுபட்டிருந்தன. அமெரிக்கப் புல்வெளிகளின் (prairies) பொருளாதார வளர்ச்சியின் வேகம், லங்காஷையர் (Lancashire) பள்ளத்தாக்குகளின் பொருளாதார வளர்ச்சியின் வேகத்தினின்றும் (தற்காலத்தில் உள்ளதுபோல் அல்லாமல்) வேறுபட்டிருந்தது. ஆனால் பன்னாட்டுப் பொன் திட்டம் என்னும் சாதனத்தால் இத்தகைய வேறுபட்ட பொருளாதார முறைகள், பன்னாட்டு முறைகள் என உண்மையாகக் கருதப்படக் கூடியனவும் ஏறக்குறைய ஒரே மாதிரியாகவுள்ளனவுமான பணமுறை, (monetary system) விலைமுறை (price system) ஆகிய இவைகளுக்குட்பட்டு, இயங்கி வந்தன. ஒவ்வொரு நாட்டின் பணமும் பன்னாட்டுப் பணத்தின் ஒரு பிரிவாகவே—அதாவது பொன்னாகவே—இருந்தது; ஒவ்வொரு நாட்டின் பொருளாதாரமும் ஒன்றையொன்று நம்பி வாழும் நாடுகளைக் கொண்ட உலகத்தின் ஒருதுறை (sector) யாக இருப்பது போலவே தோன்றுகிறது. இவ்வாறு உலகத்தின் பல்வேறு செலாவணிகளுக்கிடையே சமநிலை (balance), ஒத்தியங்கும் தன்மை (harmony) ஆகியவற்றை வெற்றிகரமாக நிலை நிறுத்தப்பட்டதன் நினைவுதான், பொன்திட்டத்தை மீண்டும் கொண்டுவந்தால் அது இதே ஒத்தியங்கும் தன்மைக்கான நிலைகளைத் தற்கால உலகத்திலும் கொண்டு வருமென பாங்கர்களும் (bankers) ஆட்சியாளர்களும் (statesmen) கருதுவதற்கு அடிப்படையான காரணமாக இருக்கிறது.

ஆனால், பொன்திட்டமானது மிகவும் சந்தேகமுடைய ஒரு கடவுளாகும். அதற்குத் தனியான வழிபாடு (exclusive devotion) செய்தால்தான் அது வேலை செய்யும். மையபாங்கு மாற்று வீதங்களின் நிலையான தன்மையை உண்டுபண்ணுவதற்காகவே வேலை செய்யத் தயாராக இருக்க வேண்டும்; அது வெளிநாடுகளிலிருந்து பொன்னைப் பெற்றுக் கொண்டிருக்கும்போது—பெற்றுக் கொண்டிருக்கும்போது மட்டிலுந்தான்—அது, பாங்குக் கடன்மதிப்பை அதிகரிக்கத் தயாராக இருக்கவேண்டும். அது பொன்னை ஏற்றுமதி செய்வதனால் பொன்னை இழந்து கொண்டிருக்கும் போது—ஏற்றுமதி செய்வதனால் பொன்னை இழந்துகொண்டிருக்கும்போது மட்டும்—அதன் கடன்மதிப்பைச் சுருக்கிக் கொள்வதற்குத் (contract) தயாராக இருக்க வேண்டும். பொன் ஏற்றுமதியினால் தோற்றுவிக்கப்படும் கடன் குறைப்பு, முதலீடு (investment) சேமிப்பைவிட (savings,) அதிகரிக்கும்போதும், உள்நாட்டின் காரணங்களுக்காக பாங்குச் செலாவணியின் சுருக்கம் வரவேற்கப்படும் போதும், ஏற்படும்—அல்லது மேற்சொன்ன சமயங்களில் கடன் குறைப்பு (contractions of credit) இல்லாமல் போனாலும் போகலாம். அதேபோன்று செலாவணியின்

பெருக்கம், முதலீட்டைத் தூண்டுவதற்குத் தேவைப்படும்போது ஏற்படலாம்—அல்லது ஏற்படாமலும் போகலாம். இதனுல் மைய பாங்கு முரட்டுத்தனமான விதியைக் கடைப்பிடித்தாக வேண்டு மென்பதில்லை; தனது பொன் காப்பு நிதியில் தான் தனியாக கவனம் செலுத்த வேண்டு மென்பதுமில்லை. ஆனுல் அதனுடைய வேலை களின் முக்கிய நோக்கம் அதன் செலாவணியின் மாற்றுத் தன்மையை (convertibility) நிலை நிறுத்துவதாக இருக்க வேண்டு மென்பதை இது உணர்த்துகிறது. இதேபோன்று மற்ற நோக்கங் களும் (aims) அவைகள் மேற்சொன்ன நோக்கத்திற்கு குறுக்கே வராமலிருக்கும் வரையில் மேற்கொள்ளப்படலாம். நடைமுறையில் மையபாங்கு தனது பொன் காப்புகளைப் பாதுகாவல் செய்வதை விடுத்து, இன்னும் அடுத்தபடியாக உள்ள நோக்கங்களான விலைகளை நிலையானதாகச் செய்தல் (price stabilization) அல்லது பொருளாதாரக் கட்டுப்பாடு (economic control) ஆகியவற்றை இரண்டு சந்தர்ப்பங்களில்தான் சிந்திக்க ஆரம்பிக்கும். அவைக ளாவன; கவலையில்லாத அளவிற்கு அது பொன் காப்புகளை ஏராள மாகப் பெற்றிருக்கும்போதும் அல்லது அதிருஷ்டவசமான ஒத்த நிகழ்ச்சியாக (by lucky coincidence) மாற்றுத்தன்மையைக் கடைப் பிடிப்பதற்கான சரியான கைக்கோளே, விலை பேற்றைப் (price stability) பாதுகாக்கும் சரியான கைக்கோளாக இருக்கும் போதும் அல்லது வேறு எந்த நோக்கத்திற்கேனும் சரியான கைக் கோளாக இருக்கும்போதும் எனலாம்.

எடுத்த எடுப்பில் இவ்வித அதிருஷ்டவசமான ஒத்த நிகழ்ச்சிகள் (lucky coincidences) அடிக்கடி தோன்றுவது போல் காணப்படும். பொன் வெளியேறிக்கொண்டிருக்கும் போது பாங்குச் செலாவணியின் சுருக்கம் (contraction of credit) மேற் கொள்ளப்படும்; அதேபோன்று விலைகள் மிக அதிகமாக இருக்கும் போது பொன் நாட்டை விட்டு வெளியேறும். எனவே, பொன் விதி (golden rule) யானது விலைகளையும் அத்துடன் மாற்று வீதங் களையும் நிலையானதாக்க இயங்கவல்லது போன்று தோன்றும். ஆனுல் இது வெறும் ஏமாற்றுத் தோற்றமே. விலைகளின் அதி கரிப்பு மட்டுமே பொன் வெளியேறுவதையும் பாங்குச் செலா வணியின் சுருக்கத்தையும் கொண்டுவந்து விடாது; அவ்விலைகள் இதர நாடுகளின் விலைகளோடு ஒப்பிடும்போது (relative to prices in other countries) அதிகரித்ததாக இருக்கவேண்டும். தற்போது, உலக விலை மட்டம் (world price level) குறைந்துகொண்டும் பிரிட்டிஷ் விலைகள் நிலையானதாகவும் இருக்கின்றனவென வைத்துக்கொள்வோம்; அப்போது பிரிட்டிஷ் விலைகளில் ஒரு இணையான அதிகரிப்பு (a relative rise) இருக்கிறதென்று பொருள்

இச்சமயத்தில், பிரிட்டிஷ் விலைகள் மற்ற நாட்டின் விலைகளைப் போன்றே வெகுவாக அதிகரித்துள்ளதை உறுதிப்படுத்தும் பொருட்டு பொன் விதி (golden rule) கிரேட் பிரிட்டனின் மீது செலாவணியின் சுருக்கத்தைத் திணிக்கும். இதைப் போன்றே, பிரிட்டிஷ் விலைகள் குறைந்து செல்லுகின்ற காரணத்திற்காக அல்லது மற்ற ஒவ்வொரு நாட்டின் விலைகள் அதிகரித்துச் செல்லுகின்ற காரணத்தால் செலாவணியைப் பெருக்கமடையச் செய்தல் மேற்கொள்ளப்படும். எனவே பொன்விதியானது (golden rule) விலைமட்டத்தின் (price level) நிதானமான தன்மையைப்(sobriety) பாதுகாக்கும் சாதனமாக இல்லாமல், ஒவ்வொரு நாட்டின் விலை மட்டமும் மற்ற நாட்டினுடைய விலை மட்டத்தைப் போலவே குடி போதையிலுள்ளதென உறுதிப்படுத்திக் கூறும் சாதனமாகவே யிருக்கிறது. பொன் திட்டம் அமலில் இருப்பதிலிருந்து ஒவ்வொரு மைய பாங்கும் மாற்று வீதங்களின் நிலையான தன்மையை (stability of exchange rates) நிலைநாட்டுவதற்குக் கருதுகிறது. ஆனால் அவைகளில் ஒன்று கூட பணவீக்கம், பண வாட்டம் ஆகியவைகளின் பருவ ஊசலாட்டங்களை (periodical swings)— மிகை முதலீடு (over-investment) குறை முதலீடு (under-investment,) அதிக விலைகள் (higher prices) குறைந்த விலைகள் (low prices) ஆகியவை—எதிர்த்துத் தடுக்க முயற்சி செய்வதில்லை. இந்த ஊசலாட்டங்கள் தங்களால் இயன்ற தூரத்திற்கு தடையில்லாமல் ஊசலாடுகின்றன. இம் மேடுபள்ளங்களைத் தவிர்ப்பதற்கு பொன் திட்டம் யாதொன்றும் செய்வதில்லை; ஆனால் யாவும் ஒரே சமயத்தில் மேடுபள்ளங்களை உடையனவாக (lurches) இருக்குமென்பதை உறுதிப்படுத்துகிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் இக் குறைபாடு, அயல்நாட்டுச் செலாவணிகளின் தன்னியக்கமான நிலைபேற்றால் (automatic stability)வரும் பெரு நன்மைகளை விஞ்சுகின்ற அளவிற்கு (outweigh), அவ்வளவு பெரிதாக இல்லை. ஏனெனில் பல ஆண்டுகளாக உலக முழுவதும் பரவியிருந்த பொன் வளர்ச்சிகள் கண்ணுக்குப் புலப்படுமளவுக் கிருந்தாலும், அதிகமானதாகவோ அல்லது உடனடியானதாகவோ இல்லாமலிருந்ததும் இதற்குக் காரணமாகும். ஆனால் தற்கால உலகத்தில் பணமுறைகளின் நிலையற்ற தன்மை வெகுவாக இருப்பதாலும் அவைகளின் விளைவுகள் துன்பம் விளைவிப்பனவாக இருப்பதாலும், ஒவ்வொரு நாடும் (அயல் நாட்டுச் செலாவணிகளின் நிலையான தன்மை அவைகள் அதிகமாக வெளியிடப்படுவதால் சீர்குலைந்தாலும்) தன்னால் இயன்ற மட்டும் அவைகளைக் குறைக்கும்படி கட்டாயப் படுத்தப்படுவதை உணர்கிறது.

## போருக்கிடையேயுள்ள ஆண்டுகளில் பொன் திட்டம் : திருப்பக் கொணர்தல்.
## (The Inter-war Gold Standard : Restoration)

1914-ல் போர் ஆரம்பிக்கப்பட்ட சில வாரங்களுக்குள்ளாகவே பொன் திட்டம் தகர்த்தெறியப்பட்டது. ஐரோப்பாவில் போரில் ஈடுபட்ட ஒவ்வொரு நாடும் (every belligerent country) இன்னும் மற்றக் கண்டங்களில் பல நாடுகளும் போர் ஆரம்பித்த ஒரு சில நாட்களுக்குள்ளாகவே மாற்றுரிமை என்னும் இப்பேருரிமையை (privilege of convertibility) நீக்கிவிட்டன. இன்னும் போரின் போது, போரில் ஈடுபடாத பொதுவாக உள்ள நாடுகளும் (neutrals) இச்செயலைத் தொடர்ந்து செய்தன. கிரேட்பிரிட்டனில், நிர்ண யிக்கப்பட்ட விலைகளில் (fixed prices) பொன்னை வாங்கவும் விற்கவும் இங்கிலாந்து பாங்கு சட்டப்படி கடமைப் பட்டுள்ளது மட்டும் விடாமல் வைத்துக்கொள்ளப்பட்டது. ஆனால், பொன் நாணயத்தை உருக்குதலும், பொன்னை ஏற்றுமதி செய்தலும் தடை செய்யப் பட்டிருந்தபோது, நோட்டுக்களைப் பொன்னாக மாற்றுவதற்கு விண்ணப்பித்துக் கொள்வதில் எவ்வித பயனுமில்லை: உண்மையில் மாற்றுரிமை (convertibility) அப்போது திண்மை யாக நிறுத்திவைக்கப்பட்டது; சட்டப்படி மாற்றுரிமை செல்லுபடி யாகாததொன்றாக ஆகியது. மாற்றுரிமை நிறுத்தி வைக்கப்பட்ட தற்கு உடனடியான காரணம் பொன் காப்பைப் (gold reserve) பத்திரமாகப் பாதுகாப்பதே யாகும். போரின்போது போரில் ஈடுபட்டிருந்த ஒவ்வோர் ஐரோப்பிய நாட்டிலும் புழக்கத்திலிருந்த பொன் திரும்பப் பெறப்பட்டு (withdrawn) அந்த நாட்டின் மைய பாங்கில் (central) செலுத்தப்பட்டது. இப் பொன்னிற்குப் பதிலாக மையபாங்கு நோட்டுக்களை வெளியிட்டது. கிரேட் பிரிட்டனை உள்ளிட்ட, போரிட்டுக்கொண்டிருந்த நாடுகளில் பல இவ்வாறு வசூலிக்கப்பட்ட பொன்னின் ஒரு பகுதியை போரில் ஈடுபடாது பொதுவாக இருந்த நாடுகளிலிருந்து பெற்ற தங்களின் தேவை யான இறக்குமதிகளுக்குப் பணம் செலுத்தப் பயன்படுத்தின. எனவே 1914-ல் பொன் திட்டத்தை நிறுத்தி வைக்கப்பட்ட தானது போர் அல்லது அரசியல் காரணத்திற்காகத்தான் எனக் கூறலாம்.

பொன்திட்டம், போர்வழிக் காரணங்களுக்காக (strategical reasons) நிறுத்தி வைக்கப்பட்டிராது போயிருந்தாலும், பொருளா தாரக் காரணங்கள் மட்டிலுமே, இதற்கு வெகு முன்பே, தகுந்த காரணங்களாக அமைந்திருக்கக் கூடும். வரிவசூலிப்பு, மக்களின் உண்மையான சேமிப்பைக் (genuine savings) கடன் வாங்குவதால்

கிடைக்கும் தொகை ஆகியவைகளைவிட போர்ச் செலவு மிகவும் அதிகமானதாக இருக்கும். இப்போர்ச் செலவின் பெரும்பகுதியும் நேரடியான பணவீக்கத்தைக் (outright inflation) கொண்டு வருவதன் மூலம் சமாளிக்கப்பட்டது. இப் பணவீக்கம், பாங்குச் செலாவணி (credit and currency) ஆகியவற்றின் அளிப்புகளை அரசாங்கத்தின் தேவைக்காக சிருட்டித்தலால் ஏற்படுவதாகும். இப் பணவீக்கம் விலைகளின் அதிகரிப்பைக் கொணர்ந்தது—உண்மையில் பணவீக்கத்தின் நோக்கமே இதுதான். இவ்விலைகளின் அதிகரிப்பால் பொதுமக்கள் தங்களின் நுகர்ச்சியைக் (consumption) குறைத்துக்கொள்ளக் கட்டாயப்படுத்தப்படுவதால், நாட்டின் சாதனங்கள் (resources) அரசாங்கத்தின் பயனுக்குத் தாராளமாகக் கிடைக்கின்றன.

போர் செய்வதற்கு மிகவும் அவசியமான, விலைகளின் அதிகரிப்பு, பொன் திட்டம் கடைப்பிடிக்கப் பட்டிருக்குமானால் ஏற்பட்டே யிருக்காது. ஏனெனில் பொன் திட்டம் பொன் ஏற்றுமதியாவதையும் பாங்குச் செலாவணியின் சுருக்கத்தையும் விளைவிக்கும்.[1] பொன் காப்பு நிதிக்குத் தேவையான பொன்னைச் சேகரித்து வைத்தலால் கூட, அரசியல் காரணங்களால் மாற்றுரிமையை நிறுத்திவைக்க இயலாவிட்டாலும், போருக்கு பாங்குச் செலாவணியின் தொடர்ந்த பெருக்கத்தால் நிதியளிப்பதை அனுமதிக்கும் பொருட்டு, அது நிறுத்தி வைக்கப்பட வேண்டி யிருக்கும். எப்படியும் பொன் திட்டத்திற்கு ஒரு முடிவு காணப்பட்டது.

போருக்குப் பிறகு, தீவிரமான பூரிப்பும் மந்த நிலையுமிருந்தது. இச்சமயத்தில் உலகத்தில் அநேகமாக ஒவ்வொரு நாட்டிலும் பொன்திட்டம் மீண்டும் கொண்டுவரப்பட்டது. இவ்வாறு மீண்டும் பொன்திட்டம் கொண்டுவரப்பட்டதற்கு இரு காரணங்களிருந்தன. முதல் காரணம் இயல்பான நிலைமை (normality)—அதாவது 'போருக்கு முந்திய நிலையை' (back to pre-war)—அடைவதற்கான இயற்கையான விருப்பம். செலாவணியின் ஏற்பாடுகளில் இயல்பான தன்மை யென்பது (normality in currency arrangements) பொன்திட்டத்தையே குறிக்கும். அதிகார பீடத்தில் உள்ள பெருவாரியான மனிதர்களுக்கு, ஏன், அதிகார பீடத்திலுள்ள அனைவருக்குமே, அமைதியானது போரினால் பின்தொடரப்படுவதைப் போன்று, பன்னாட்டு முறை பொன் மாற்றுரிமை

[1] விலைகளின் அதிகரிப்பு ஒவ்வொரு பொன்திட்ட நாட்டிலும், அது போரிட்டுக் கொண்டிருந்த நாடாயிருந்தாலும், அல்லது போரில் ஈடுபடாத பொது நாடாக இருந்தாலும் ஏறக்குறைய ஒரே அளவாகவே இருக்குமென்றால், கோட்பாட்டளவில் இது உண்மையாக இருக்கமுடியாது. ஆனால் நடைமுறையில் இவ்வாறான நிலை இயலாத தோன்றுகையால் இதனை நாம் பொருட்படுத்த வேண்டியதில்லை.

(international system of gold convertibility), போர்க்கால மாற்றுரிமையற்ற நிலையால் பின்தொடரப்படும் எனக் கருதுகின்றனர். இரண்டாவதான திணிக்கும் சக்தி, ஐரோப்பாக் கண்டத்தில், போருக் கிடையேயுள்ள ஆண்டுகளில ஏற்பட்ட பணவீக்கம் விளைவித்த மாபெரும் குழப்பமாகும். இப்பணவீக்கம் ஜெர்மனியில் விலைகளை அவைகளின் போருக்கு முந்திய நிலையைவிட ஒரு மில்லியன் மில்லியன் (one million million times) மடங்கு அதிகரித்தது. மற்ற நாடுகளில் விலைமட்டம் இதைவிட சிறிதளவே குறைவாக இருந்ததெனக் கூறலாம். இப் பணவீக்கத்தால் ஏற்பட்ட துயரமும் (misery) சீர்குலைவும் (dislocation), அதை அனுபவித்தவர்களின் மனத்தில் ஆழமாகப் பதிந்துவிட்டன. எனவே மீண்டும் அவ்வனுபவத்தைத் திரும்பப் பெறுவதைத் தடுப்பதே பணமுறையின் (monetary system) தலைசிறந்த அறிவாகக் கருதப்படுகிறது. பொன் திட்டத்தினிடம் வேறு எந்தக் குறைகளிருப்பினும், கொடுமையான பணவீக்கத்தை முளையிலேயே கிள்ளி எறிவதில் மட்டும் அது தவறுவதே யில்லை. இவ்வாறான ஒரு நிலையான தன்மையைக் கொண்டுவரும் ஓர் உறுதி மனப்பான்மையே பொன் திட்டத்தை மீண்டும் கொண்டுவருவதற்கான விருப்பத்தை வெளிக்காட்டுகிறது. இவ்விருப்பத்தால் சமாதானம் அடையப்பெற்ற பத்து ஆண்டுகட்குள்ளாகவே பொன் திட்டத்தை மீண்டும் கொண்டுவருவதற்கான நோக்கம் நிறைவேறியது.

பொன் திட்டத்தை மீண்டும் கொண்டுவரும் பிரச்சினை வெவ்வேறு நாடுகளில் வெவ்வேறு விதமாக இருந்தது. ஐக்கிய அமெரிக்கா மட்டுமே, ஒரே ஒரு தாற்காலிகமான விதிவிலக்குடன், பொன்திட்டத்தை முழுமையும் கடைப்பிடித்தது. எனினும், அமெரிக்க விலைமட்டம் (American price level) நிலையானதாக இருக்கவில்லை. நியூயார்க்கிற்கு ஏராளமான அளவு பொன், போர்த்தளவாடங்கள் இன்னும் மற்ற அளிப்புகள் ஆகியவற்றிற்கு செலுத்தப்பட்டது. மேலும், 1914-ல் கொண்டுவரப்பட்ட ஐக்கிய ரிசர்வு சட்டம் (Federal Reserve act) செலாவணி, பாங்குச் செலாவணி ஆகிய இவற்றை வழங்குவதற்கான ஒரு நெகிழ்ச்சியுள்ள (elastic) முறையைக் கொண்டுவந்தது. இதன்படி, கூடுதலான பொன் அளிப்பும், பொன் அடிப்படையில் அமைக்கப்பட்ட அதிக நெகிழ்ச்சியுள்ள செலாவணியும், செலாவணியின் அடிப்படையில் அமைக்கப்பட்ட பாங்குச் செலாவணியின் அதிக அளிப்பும், ஏற்பட்டன. ஆகவே, பெரிய போர்க்கால பூரிப்பின்போது (the great wartime boom) அதற்கு எந்த விதமான பணமுறைத்தடையும் (monetary check) இல்லாமலிருந்தது; விலைகள் இதனால் அதிக

ரித்தன. 1920-21ல் ஏற்பட்ட நெருக்கடிக்குப் (crisis) பிறகும் அமெரிக்க விலைகளின் சராசரி மட்டம் (average level of American prices) அதற்கு முன்பிருந்த விலைமட்டத்தில் கிட்டதட்ட 50 சதவீத மிருந்தது. 1896-1914 ஆண்டுகளுக் கிடையே இருந்த, அதி கரித்த பொன் அளிப்பின் காரணமாக (increased supply of gold) பொன்திட்டம் முழுவதும் நிகழ்ந்தவற்றை, ஐக்கிய அமெரிக்கா நான்கு ஆண்டுகளில் நிறைய அளவு அனுபவித்தது. டாலர் மட்டுமே பொன் முறையில் இருந்த காரணத்தால், பொன்னின் மதிப்பு டாலரின் மதிப்பால் நிர்ணயிக்கப்பட்டது. எனவே 1922-ம் ஆண்டில் பொன்னின் வாங்குந்திறன் (purchasing power of gold), போருக்கு முந்திய அதன் வாங்குந்திறன் மட்டத்தில் மூன்றில் இரண்டு பங்கே இருந்தது. பொன்னின் வாங்குந்திறனில் ஏற் பட்ட இக்குறைவு (reductions) இரண்டு வழிகளில் செய்து முடிக்கப்பட்டது. முதல் வழி, ஐரோப்பாவில் பொன்னை அதிகம் குவியச் செய்து அதன் மையபாங்குகளின் காப்புகளில் (reserves of Central Banks) நிறையப் பொன்னைச் செலுத்தி, அதன்மூலம் ஏற்கெனவே புழக்கத்திலிருந்ததைவிட அதிக அளவு செலாவணி யையும், பாங்குச் செலாவணியையும் அதிகரிக்கச் செய்தல். இரண்டாவது வழி ஐக்கிய அமெரிக்காவிற்குச் சாதகமாக பொற் காப்புகளை மறுபகிர்வு செய்தமை.

பெருவாரியான நடுநிலைமை நாடுகள் (neutrals) ஐக்கிய அமெரிக்காவின் நிலையில்தானிருந்தன. அவைகள், உண்மையில், மாற்றுரிமையை (convertibility) நிறுத்திவைத்திருந்தன. ஆனால், அவைகள் பணவீக்கத்தில் அதிகமான அளவிற்குத் திளைத்திருக்க வில்லை. அவைகளின் விலைமட்டங்கள் ஏறக்குறைய பொன் விலை மட்டத்தை (அதாவது அமெரிக்க விலைமட்டத்தை) யொட்டியே இருந்தன. ஆகவே, அவைகளால் மாற்றுரிமையை முன்னு லிருந்த சமன்பாடுகளில் (previous parities) மீண்டும் கொண்டுவர முடிந்தது. குறிப்பாக ஸ்விட்சர்லாந்து, ஹாலந்து, ஸ்காண்டி நேவிய நாடுகள் இவைகளால் இவ்வாறு இயன்றது. ஆனால், ஐரோப்பாவில் ஸ்பெயின் நாடு ஒன்றுதான் போருக்கிடையே யுள்ள கால முழுவதும் பொன்திட்டத்தை மீண்டும் கொண்டுவராம லிருந்தது.

கிரேட் பிரிட்டனும் நடுநிலைமை நாடுகளின் நிலையையொத்தே யிருந்தது. பிரிட்டிஷ் விலைமட்டம் (British price level), உண் மையில், அமெரிக்க விலைமட்டத்தைவிட அதிகமாக அதிகரித்தே யிருந்தது. ஆனால், 1922ஆம் ஆண்டு ஆரம்பத்தில் இந்த வேறு பாடு (மொத்த விலை குறியீடுகளுடன் ஒப்பிடும்போது) 20 சதவீதத்

திற்கும் குறைவாகவே யிருந்தது. அந்த ஆண்டின்போது பிரிட்டிஷ் விலைகள் அமெரிக்க விலைகளைக் காட்டிலும் வெகு விரைவாகக் குறைந்தன. இதன் விளைவாக அந்த ஆண்டின் இறுதியில் இவ்விரு விலைமட்டங்களுக்கு மிடையில் மிகக் குறைவான வேறுபாடே யிருந்தது. 1923ஆம் ஆண்டின் போதும் 1924ஆம் ஆண்டின் ஒரு பகுதியிலும் கிரேட்பிரிட்டனில் விலைகளின் அதிகரிப்பு மீண்டும் இடைவெளியை உண்டாக்கியது. ஆனால் 1924ஆம் ஆண்டின் பிற்பகுதியில் அது மீண்டும் சரிப்பட்டு விட்டது. 1925ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் பிரிட்டிஷ் அரசாங்கம் பவுண்டு ஸ்டெர்லிங்கின் மாற்றுரிமையை போருக்கு முந்திய $ 4.86⅔=£1 என்னும் சமன்பாட்டில் திரும்பக் கொண்டுவந்தது.

இந்த முடிவு இதற்குப் பின்னர் வந்த ஆண்டுகளில் அடிக்கடி வாதிக்கப்பட்டும் குறைகூறப்பட்டும் வந்தது. அந்தச் சமயத்திலும் பவுண்டின் பழைய, போருக்கு முந்திய சமன்பாடு அதனுடைய உள்மதிப்பைக் காட்டிலும் அதிக மதிப்பைக் கொடுத்தது என்பதும், பவுண்டு அப்போதுள்ள சமநிலை வீதத் (existing equilibrium rate) திற்கு ஒப்பீடாக மிகை மதிப்பு செய்யப்பட்ட தென்பதும் பொதுவாக யாவராலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது. 'டாலரை முகத்தில் பார்க்கும்' (look the dollar in face) இந்த முயற்சியானது கட்டைவிரல்களால் நடப்பதை யொக்குமாதலால், நிலைமை சமானமாக வருவதற்கு முன்னர் அதிக உழைப்பைக் கோருகின்ற காலத்தை நிச்சயம் எதிர்பார்க்கலாம்—அதாவது பவுண்டானது டாலர் அளவிற்கு மேல் வளருவதற்கு முன்னால் (கிரேட்பிரிட்டனில் விலைகளின் இறக்கத்தின்மூலம்) அல்லது டாலரானது பவுண்டின் அளவிற்குக் குறைந்து வருவதற்கு முன்னர் (ஐக்கிய அமெரிக்காவில் விலைகளின் அதிகரிப்பு மூலம்). ஆட்சியாளர்களுக்கு இம் மிகு உழைப்புக் காலம் தவிர்க்க முடியாத தென்று நன்கு தெரியும். ஆனால் லண்டன் நகரத்தின் நற்பெயரின் (prestige) முக்கியத்துவத்தை உத்தேசித்தும், பிரிட்டிஷ் நிதிய பேரங்களுக்கும், வரலாற்று முக்கியம் வாய்ந்த சமன்பாட்டை (historical parity) மீண்டும் கொண்டுவருதலிலும் உள்ள முக்கியத்துவத்தை உத்தேசித்தும், அவர்கள், மிகு உழைப்பைக் கோருகின்ற குறுங்காலம் (short period of strain) மேற்கண்ட நலன்களுக்காக அளிக்கப்படும் நியாயமான விலையே என்று அவர்கள் கருதினர். ஆனால் அவர்கள் இரு தப்புக் கணக்குகளைப் போட்டுவிட்டனர். முதலாவதாக, அவர்கள், பழைய சமன்பாடு (old parity) பவுண்டை மிகைமதிப்புச் செய்த (over valued) அளவினைக் குறை மதிப்பீடு (under estimate) செய்தனர். மூன்று பிரிட்டிஷ் மொத்த விலைக் குறியீடுகளின் சராசரியை (average of

three British wholesale price indices) நான்கு அமெரிக்க மொத்த விலைக்குறியீடுகளின் சராசரியோடு ஒப்பிடும்போது, பிரிட்டிஷ் விலைகள் அமெரிக்க விலைகளைவிட (1913ஆம் ஆண்டின் விலை மட்டத்தைக் காட்டிலும்) 5 சதவீதம் அதிகமாக இருக்கும். ஆனால், நாம் ஏழாம் அத்தியாயத்தில் வாங்குந்திறன் சமநிலைக் கோட்பாட்டை (purchasing power parity theory) ஆராய்ந்தபோது பார்த்ததுபோல, மொத்த விலைக் குறியீடுகள் (wholesale price indices) சமநிலை வீதங்களைக் (equilibrium rates) கணக்கிடுவதற்கு அவ்வளவு பொருத்த முடையனவல்ல. உண்மையில், பிரிட்டிஷ் மொத்த விலைக்குறியீடுகள், இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களையே பெரும்பாலும் தழுவியிருப்பதாலும், அப்பொருள்களின் விலைகள் மாற்று வீதத்தால் ஆளப்படுவதாலும், அக்குறியீடுகளால் காட்டப்படும் விலைகள், மாற்றுவீதத்தால் ஆளப்படும் விலைகளையொத்தே யிருக்கும். வேறு வழியில் கூறுவோமானால், மொத்த விலைக் குறியீடுகளின் அடிப்படை கணக்கிடுதல், இருக்கின்ற வீதத்திற்கும் (actual rate) சமநிலை வீதத்திற்குமுள்ள வேறுபாட்டைக் குறைத்துக் கூற வழிசெய்கிறது. மொத்த விலைகளால் குறிக்கப்பட்ட வேறுபாடு 5 சதவீதத்திற்கும் அதிகம் என்பது ஏறக்குறைய நிச்சயமானதாகும்; அது 10 சதவீதம் மிகைமதிப்பீடு செய்யப்பட்டதென்பதே பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்டதொரு மதிப்பீடாகும்; ஆனால் அது இன்னும் அதிகமாகக்கூட இருக்கக் கூடும். அதாவது, பவுண்டுக்கும் டாலருக்கு மிடையேயுள்ள சமநிலைமாற்றுவீதம் $ 4 86⅔=£1 என்பதைக்காட்டிலும் $ 4.38=£1 ஆகவோ அல்லது இன்னும் குறைவாகவோ இருந்தது.

இரண்டாவது தவறான கணக்கு (miscalculation) பிரிட்டிஷ் உற்பத்திச் செலவுகள், விலைகள் ஆகியவற்றின் மட்டத்திற்கும் (level of British costs and prices) ஐக்கிய அமெரிக்காவின் உற்பத்திச் செலவுகள், விலைகளின் மட்டத்திற்கு மிடையேயுள்ள தொடர்பு எளிதாகப் போக்கப்படக் கூடும் என்பதாம். குறிப்பாக, பாங்குச் செலாவணியின் சுருக்கம் பிரிட்டிஷ் உற்பத்திச் செலவுகளைக் குறைக்கும் என்பதாம். ஆனால் காலப்போக்கில் இக்கணக்கு முற்றிலும் தவறாகியது. பாங்குச் செலாவணியின் சுருக்கமும் (credit contraction) அதிக வட்டி வீதங்களும் (high interest rates) வேலையின்மையை உண்டாக்கி வணிக இலாபங்களைக் குறையச் செய்தன. ஆனால், வேலையின்மையும் குறைந்த இலாபமும் கூலிகளைக் குறைக்கத் தவறின. 1926ஆம் ஆண்டில் தொழில் தகராறுகளும், உற்பத்திச் செலவுகள் அடிக்கடி அதிகரித்தலும் இருந்தபோதிலும், இக்காலம் முழுவதும் பவுண்டு, 1931 ஆம் ஆண்டில் இரண்டாவது முறையாக பொன் திட்டம் நிறுத்தி

வைக்கப்பட்ட வரையில், மிகை மதிப்பு செய்யப்பட்டதாகவே யிருந்தது. அதன் சரியான நிலை கொண்டு வரப்படாமலேயே போய்விட்டது. கிரேட் பிரிட்டன் இந்த ஆண்டுகளில், மிகை மதிப்பு செய்யப்பட்ட செலாவணியை வைத்திருப்பதால் வரும் தீமைகளை நன்குணர்ந்தது. இந்தத் தீமைகள் பொதுவானவை களாகவும், குறிப்பிடும்படியானவைகளாகவும் (specific) இருந்தன. இங்கிலாந்து பாங்கு தனது பொன் காப்பை (gold reserve) இழந்து விடப் போகக் கூடும் என்னும் பயம் காரணமாக தாராள பாங்குச் செலாவணிக்கான சூழ்நிலைகளை அனுமதிக்க முடியாத நிலையால் இப் பொதுவான தீமைகள் ஏற்பட்டன. அயல் நாட்டு நிதிகளை ஈர்க்கும் பொருட்டு பண வீதங்கள் (money rates) அதிக அளவில் அதிகரித்து வைக்கப்படுவதன் மூலம் அயல்நாட்டு மாற்று அங்காடி யில் (exchange market) இங்கிலாந்து பாங்கின் பொன் காப்பைப் (gold reserve) பாதுகாப்பதற்கும், பவுண்டுகளின் அளிப்பை ஏற்றுக்கொள்வதற்கும் போதுமான அளவிற்கு பவுண்டுகளுக் கான தேவை ஏற்பட்டது. பாங்குச் செலாவணி தடை செய்யப் படவில்லை யெனில், அது எப்போதுமே வசதியாக தளர்த்தப்பட்டு மிருக்காது. குறிப்பிட்ட தீமைகள் (specific disadvantages), பிரிட்டிஷ் ஏற்றுமதித் தொழில்களுக்கே ஏற்பட்டன. இத் தொழில் களின் உற்பத்திச் செலவுகள் (cost of productions) பிரிட்டிஷ் விலை மட்டத்தால் நிர்ணயிக்கப்பட்டன; அவைகளின் விற்பனை விலைகள் உலக விலைமட்டத்தால் (world price level) நிர்ணயிக்கப் பட்டன. மிகை மதிப்பு செய்யப்பட்டதன் விளைவாக பிரிட்டிஷ் விலை மட்டம், உலக விலைமட்டத்தைவிட அதிகமாக இருந்தமை யால், பிரிட்டிஷ் ஏற்றுமதியாளர்கள் உலக அங்காடிகளில் போட்டி யிடவோ அல்லது இலாபம் சம்பாதிக்கவோ இயலாமலிருந்தனர்.

போரில் ஈடுபட்டிருந்த மற்ற ஐரோப்பிய நாடுகள் அவை களின் போருக்கு முந்திய சமன்பாடுகளில் (pre-war parities) பொன் திட்டத்திற்கு மீண்டும் வர சந்தர்ப்பம் இல்லாமற் போய்விட்டது. கடைசியாகக் கடைப்பிடிக்கப்பட்டச் சமன்பாடுகள் முக்கியமாக, விலைகளின் வீக்கம் (inflation) நீடிப்பது அனுமதிக்கப்படுவதைப் பொறுத்திருந்தது. எனவே பிரான்சில், பிரஞ்சு விலைகள் பிரிட்டிஷ் அமெரிக்க விலைகளைப் போல் ஐந்து மடங்கு அதிகமாக இருந்தன வாகையால், புதிய சமன்பாடு (new parity) பழைய சமன்பாட்டில் ஐந்தில் ஒரு பங்காகவேயிருந்தது. (25 ஃபிராங்குகள் = £ 1 என் பதற்குப் பதிலாக 124 ஃபிராங்குகள் = £ 1 ஆக இருந்தது). பண வீக்கத்தால் மிகவும் அல்லலுற்ற நாடுகளில், முற்றிலும் புதிய செலாவணிகள் ஏற்படுத்தப் பட்டன (மார்க்குகள், கிரௌன்களுக் குப் பதிலாக, ஜெர்மனியில் ரிக்மார்க்கும் ஆஸ்டிரியாவில் ஷில்லிங்

கும் (schilling) ஹங்கோரியில் பெங்கூவும் ஏற்படுத்தப்பட்டன). பண வீக்கத்தின் அளவிற்கு ஏற்றவாறுள்ள விகிதங்களில் (ratios corresponding to the degree of inflation) பழைய செலாவணிகளைக் கொடுத்துவிட்டுப் புதிய செலாவணிகள் மாற்றுகப் பெறப்பட்டன. போருக்கு முந்திய பழைய மார்க்கு (old pre-war mark) பவுண்டிடம் கொண்டிருந்த சமன்பாட்டைப் போன்று (parity) அதே சமன்பாட்டை ரிக்மார்க் (reich mark) பவுண்டிடம் கொண்டிருந்தது. ஆனால் ஒரு ரிக்மார்க்கு (reich mark) பழைய மார்க்குகள் ஒரு பில்லியனுக்குக் (billion) குறையாமல் மாற்று செய்து கொள்ளப்பட்டது. புதிய சமன்பாடுகள் நிர்ணயித்தலானது, பழைய சமன்பாடுகளை மீண்டும் கொண்டு வருவதைப் போன்று செலாவணியின் மிகைமதிப்பையோ அல்லது குறைமதிப்பையோ கொண்டுவரக்கூடும். அச்சமயத்தில் புதிய சமன்பாடு, சமநிலை வீதத்திற்கும் மேல் அல்லது கீழே நிர்ணயிக்கப்பட்டுள்ளதற்கு ஏற்றவாறே, மேற் சொன்னவாறு செலாவணியின் மிகைமதிப்பு அல்லது குறை மதிப்பு கொண்டுவரக்கூடும். மிகவும் ஒரு சில நாடுகளே இவற்றையெல்லாம் சரியாக உய்த்துணர்ந்தன (guessed). உதாரணமாக இத்தாலி தனது லிராவை (lira) மிகைமதிப்புச் செய்தது. எனவே சமமான நிலையை அடைவதற்கு முன்னர் விலைகள் குறைக்கப்பட வேண்டி இருந்தன. மற்ற நாடுகள் தங்களது செலாவணிகளைக் குறைமதிப்புச் செய்தன. இதற்கு பிரான்சு ஒரு தலை சிறந்த எடுத்துக் காட்டாக விளங்கியது; ஃபிரான்கின் (franc) புதிய சமன்பாடு அதனை மிகவும் குறை மதிப்புச் செய்திருந்த காரணத்தால், ஏற்பட்ட விலைகளின் சீரான அதிகரிப்பால் (வெளி உலகத்தில் விலைகள் குறைந்து சென்றதற்கு எதிரிடையாக) பிரான்சு நாட்டின் தொழில்கள், பல ஆண்டுகள், இலாபமடைந்தன. அதே சமயத்தில் பிரஞ்சு ஏற்றுமதித் தொழில்கள், அவைகளின் உற்பத்திச் செலவுகள் ஃபிரான்சில் கணக்கிடப்பட்டதாலும், உலக அங்காடியைப் பொறுத்தவரை இந்த ஃபிரான்து மிகவும் மலிவானதொரு (far cheap) செலாவணியாக இருந்தமையாலும், வாணிபப் போட்டியில் பிரான்சு பெருவாரியான நன்மையை அடைந்தது.

பொன் திட்டத்தை மீண்டும் கொண்டு வரும் முயற்சியானது 1924ஆம் ஆண்டு ஜெர்மனி ஏற்படுத்திய நிலையேற்றின் போதும் (German stabilization), 1925ஆம் ஆண்டு பவுண்டு ஸ்டெர்லிங் மீண்டும் கொண்டுவரப்பட்டபோதும், ஆரம்பித்தது. செயலளவில் இம்முயற்சி 1928ஆம் ஆண்டில் நிறைவேறியது. அப்போது பிரெஞ்சு ஃபிரான்கின் நிலைபேறு (stabilization of the french franc), சட்டப்படி உண்டாக்கப்பட்டிருந்தது. உண்மையில்

இவ்வாறு சட்டப்படியான நிலைபேறு இரண்டு ஆண்டுகளுக்கு முன்னரே நிலைநாட்டப்பட்டது. பலவழிகளிலும், போருக்கிடையேயுள்ள ஆண்டுகளிலிருந்த பொன்திட்டம் (inter-war gold standard) போருக்கு முன்னிருந்த பொன்திட்டத்தைக் காட்டிலும் அதிகமாகப் பரவியிருந்தது. உதாரணமாக, அது பலநாடுகளில் கடைப்பிடிக்கப்பட்டது. போருக்குமுன்னர் பொன்திட்டத்தையே கையாளாத பல ஐரோப்பிய நாடுகள் தங்களின் செலாவணிகளைப் பொன்னுடன் தொடர்புபடுத்தி நிலைபெறச் செய்தன. செயலளவில், எல்லா தென்னமரிக்கக் குடியரசுகளும் (South American Republics) —1914ஆம் ஆண்டில் இவைகளில் அநேக நாடுகள் மாற்றப்படஇயலாத (inconvertible) செலாவணிகளையே வைத்திருந்தன— இவ்வாறு நிலைபேறு உண்டாக்குவதைப் பின்பற்றின. 1929 ஆம் ஆண்டின் மத்தியில் சீனு (China), ஸ்பெயின் (Spain) மெக்ஸிகோ (Mexico) ஆகிய நாடுகளைத் தவிர்த்து, அநேகமாக மற்ற நாடுகளனைத்தும் பொன்திட்டத்தில்தானிருந்தன[1]. ஆனால் இந்த நாடுகளனைத்தும் முழு பொன்திட்டத்தை (full gold standard) அல்லது பொன் கட்டித்திட்டத்தைக்கூட (gold bullion standard) மேற்கொள்ளவில்லை. ஆனால் அவை பொன் மாற்றுத்திட்டத்தையே (gold exchange standard) பரவலாக மேற்கொண்டன.

இவ்வாறு பொன்திட்டம் மீண்டும் கொண்டுவரப்பட்டதானது ஒரு புதிய வகையான திட்டத்தைப் பின்பற்றத் தூண்டியது. 1920ஆம் ஆண்டில் பிரஸ்ஸல்ஸ் மாநாடுகள் (conferences of Brussels) நடந்தபோதும், 1922ல் ஜெனீவா (Genoa) மாநாடுகள் நடந்தபோதும் பொன்திட்டத்தின் அமைப்புமுறைகள் (outlines of the gold standard) போர்க்கால மாதிரியில் (inter-war model) ஏற்படுத்தப்பட்டன. இவற்றை அடுத்த ஆண்டுகளில், சர்வதேச சங்கம் (League of Nations) இதே கருத்துக்களைப் பரப்புவதில் மிகவும் பயனுள்ள முறையில் பணிபுரிந்தது. இக் கருத்துக்களில் முதன்மையானது யாதெனில் அரசாங்கக் குறுக்கீடற்ற (free of Government interference) மையபாங்கு ஒன்றை (Central Bank) ஒவ்வொரு நாடும் வைத்துக்கொள்ளவேண்டும். இந்த மையபாங்கினிடம் பொன் (அல்லது பொன் மாற்று) காப்புநிதிகள் (gold reserves), வணிக பாங்குகளைக் (Commercial Banks) கட்டுப்படுத்துதல், அயல்நாட்டு அங்காடிகளை ஒழுங்குபடுத்துதல் ஆகியவை ஒப்படைக்கப்படவேண்டும். இந்த ரீதியில் அமைக்கப்பட்ட மையபாங்குகள், உண்மையில், போர்க்காலப் பொன்திட்டத்தை விஞ்சும்படி இருந்தன (outlive), மையபாங்கைப் பெற்றிராத

[1] ருஷ்யாவின் செலாவணித்திட்டம் இன்ன வகையைச் சேர்ந்தது எனக் குறிப்பிட முடியாதவாறு இருந்தது.

நாடோ அல்லது மையபாங்கைப் பெறுவதற்கு முயற்சிசெய்யாத நாடோ உலகத்தில் இல்லை என்னும் நிலை இச்சமயத்தில் இருந்தது. ஜெர்மனியின் நட்ட ஈடு சம்பந்தமாக ஆலோசனை கூறுவதற்காக ஏற்கெனவே அமர்த்தப்பட்ட 'யங் குழுவினர்' (Young Committee) 1930ஆம் ஆண்டில் அளித்த அறிக்கையின் விளைவாக, மைய பாங்குகளை முறைப்படி இணைத்துப் பன்னாட்டுத் தீர்வு பாங்காக (International Bank for settlements) ஒருமுகப்படுத்த முயற்சி செய்யப்பட்டது. பி.ஐ. எஸ்ஸுக்கு (B.I.S.)—இது இவ்வாறு சுருக்கமாக அழைக்கப்படுகிறது—போர் நஷ்டஈடு (Reparation) இன்னும் நேசநாடுகள் செலுத்தவேண்டிய போர்க்கடன்கள் ஆகியவைகளை வசூலித்தல், பிரித்துக் கொடுத்தல் ஆகிய பணிகள் கொடுக்கப்பட்டிருந்தன. இந்த பாங்கு நாளடைவில் மையபாங்குகளுக்கெல்லாம் ஒரு கழிவகமாக (clearing house) வளர்ச்சி அடைந்து அதன் மூலம் மையபாங்குகளுக்கெல்லாம் மையபாங்காக வளர்ச்சி அடையவேண்டுமென விழையப்பட்டது. போர்க்காலச் செலாவணிச் சீரமைப்புத் (inter-war currency re-construction) திட்டத்தில் பொன்திட்டமே முக்கிய இடம் பெறவேண்டுமென்ற கோட்பாட்டிற்கிணங்க பி. ஐ. எஸ், பொன் செலாவணிகளில் தான் (gold currencies)பேரங்களை நிகழ்த்தலாம் என்ற கோட்பாடு அதன் சட்டத்தில் இடம்பெற்றது. பொன்திட்டம் கொண்டு வரப்பட்ட மூன்று ஆண்டுகட்குள்ளாகவே அது பெரும்பாலான நாடுகளில் கைவிடப்பட்டுவிட்டதாலும், இதனுடன் போர் நஷ்டஈடுகளும், போர்க் கடன்களும் (Reparation and war debts) நிறுத்திவைக்கப்பட்டதாலும், பி. ஐ. எஸ்ஸின் நடவடிக்கைகள் பெரும்பாலும் முடக்கப்பட்டுவிட்டன. மேலும், 1939-45ஆம் ஆண்டிற்குப் பிறகு, அமெரிக்காவின் தலைமையின் கீழ், பன்னாட்டுப் பண நிதி (International Monetary Fund) என்னுமொரு புத்தம் புதிய நிலயம் (இதனைப் பற்றி விரைவில் நாம் ஆராய்வோம்) பி. ஐ. எஸ்ஸின் வேலைகளில் பலவற்றைச் செய்வதற்காக ஏற்படுத்தப்பட்டது. ஆனால் பி. ஐ. எஸ் இன்னும் இருந்துகொண்டுதானிருக்கிறது; எதிர்காலத்தில் அது ஆற்றுவதற்கான பணிகள் இன்னும் நிறைய உள்ளன.

## இருபெரும் போர்களுக்கிடையே பொன் திட்டம்: முறிவு

(The Inter-war Gold Standard: Collapse)

கிரேட்பிரிட்டனில், பொன்திட்டமானது 1915ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் மீண்டும் திரும்பக்கொண்டு வரப்பட்டது. 1931ஆம் ஆண்டு செப்டெம்பர் மாதம் அது மறுபடியும் நிறுத்திவைக்கப்

பட்டது. கிரேட்பிரிட்டனையொட்டி ஸ்காண்டிநேவிய நாடுகளும் (Scandinavian countries) கிரீஸும் (Greece), ஐரோப்பாவில் போர்ச்சுகலும், தென் ஆப்பிரிக்காவும், ஜப்பானும் பொன்திட்டத்திலிருந்தும் விலகிக்கொண்டன. 1933ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் எல்லாவல்லமையும் (almighty) பெற்ற டாலர்கூட பொன்மாற்றுரிமையை நிறுத்தி வைத்து மதிப்பிறக்கம் செய்தது. மத்திய ஐரோப்பாவில் பெரும்பாலான நாடுகள், தங்களது செலாவணிகளை சமன்பபட்டில் (Parity) வைத்துக்கொள்ளப் பெருமுயற்சி செய்து கொண்டிருந்தாலும், மாற்றுரிமையை (convertibility) முற்றிலும் நிறுத்திவைத்ததோடு எல்லா மாற்று பேரங்களையும் மிகவும் கண்டிப்பானக் கட்டுப்பாட்டின் கீழ்க்கொண்டு வந்தன. மேற்கு ஐரோப்பாவில், ஒரு சில நாடுகளே (இவற்றில் பிரான்சு முதன்மையானது) இதற்கப்பாலும் ஒருசில ஆண்டுகளுக்குப் பொன் திட்டத்திலிருந்தன. ஆனால் அவைகளும் 1933ஆம் ஆண்டில் பொன்திட்டத்தைக் கைவிட்டுவிட்டன. போருக்குப் பின்னர் அது, அவதரித்த (reincarnation) ஐந்தாவது ஆண்டுகளுக்குள்ளாகவே, பெரும்பாலான நாடுகளால் மீண்டுமொரு முறை கைவிடப்பட்டது. இந்நூல் ஒருவரலாறு அல்ல; எனவே இம் மாபெருந்திட்டம் தோற்றுப்போன விந்தையெல்லாம் விளக்குவது நமது வேலையுமல்ல. ஆனால் பொன்திட்டம் தோற்றுப்போனதற்கான ஒருசில காரணங்களைத் தெரிவிப்பதானது பொன் திட்டத்தின் தன்மையை நாம் நன்கு புரிந்துகொள்ளத் துணை செய்யும்.

அக்காரணங்களை மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம். முதலாவதாக உள்ள காரணம் உலகத்திலுள்ள பண மேலாண்மையாளர் (monetary authorities) பொன்திட்டத்தின் நோக்கங்களில், அவர்கள் போருக்கு முன்னர் கவனம் செலுத்தியதுபோல், தனியான கவனத்தைக் காட்டவில்லை. அவர்கள் மாற்றுவீதங்களின் நிலைபேற்றை (stability in exchange rate) விழைந்தனர்—அவர்களில் சிலர் பணவீக்கத்தை நினைவில் கொண்டு, இந் நிலைபேற்றை ஆர்வமுடன் விழைந்தனர். ஆனால், நாம் ஏற்கெனவே பார்த்ததுபோல், பொன்திட்டம் மாற்றுவீத நிலைபேற்றினை (exchange stability) ஏதாவதொன்றைக் கொடுத்தே பெறவேண்டும். அதாவது மற்ற நோக்கங்களையெல்லாம் புறக்கணித்தோ அல்லது விட்டுக் கொடுத்தோ தான் இதனைப்பெற முடியும். ஒவ்வொரு நாடும் மற்றநாடுகளுடன் ஒத்து இயங்கினால் தான் பொன்திட்டம் இயங்கக்கூடும். ஆனால், போருக்குப் பின்னர், மையபாங்குகள் இவ்வாறு செய்வதற்குத் தயாராக இல்லை. போரினால், ஏற்பட்ட பொருளாதாரக் குழப்பங்கள் ஏராள

மாக இருந்ததால், எந்த ஒருநாடும் உலகப் பொருளாதாரத்தின் வேக நடையுடன் ஒத்துஇயங்குவதற்குத் தயாராக இல்லை. போரின் போது உலக விலைமட்டம் (world price level) அதிகரித்தது; 1920—1921 ஆகிய ஆண்டுகளில் அவ் விலைமட்டம் மிகவும் அதிகமாக மந்தமடைந்தது. எந்த நாடும் இவ் விலைமட்டத்தின் எதிர்காலச் சுழல்களில் (gyrations) மாட்டிக்கொண்டு தத்தளிக்க விரும்பவில்லை. சில நாடுகளுக்கு உண்மையில், இவ்வாறு உலக விலைமட்டத்தின் சுழற்சிகளில் பிடிபடாது தப்புவது இடைஞ்சலாகவும் இயலாததாகவுமிருந்தது. உதாரணமாக, 1929ஆம் ஆண்டிற்குப் பிற்பட்ட ஆண்டுகளில் ஆஸ்திரேலியா தனது உள்நாட்டு விலைமட்டத்தை (internal price level) உலகவிலை மட்டத்தின் போக்குடன் இணைந்திருக்கும்படி செய்திருந்தால்—அல்லது இன்னும் சரிநுட்பமாகச் சொல்லப்போனால் அது சம்பந்தப்பட்டிருந்த விலைமட்டத்தின் போக்குகளுடன், அதாவது, கம்பளி, கோதுமை ஆகியவற்றின் விலைகள்—அது தனது நாட்டு வருமானத்தில் பாதியைக் குறைத்துக்கொள்ள வேண்டியிருந்திருக்கும். அதாவது அதன் மக்களில் ஒவ்வொருவருடைய ரொக்க வருமானத்திலும் (cash income) 50 சதவீதத்தைக் குறைத்துக்கொள்ள வேண்டியிருந்திருக்கும்[1].

இம்மாதிரியான சூழ்நிலையில் பொன்திட்டத்தைக் கடைப்பிடிப்பதென்பது இயலாது. மிகவும் படுமோசமாகப் பாதிக்கப்படாத நாடுகள், 1929ஆம் ஆண்டில் ஏற்பட்ட விலைகளின் அதிகரிப்புக்கு வெகு முன்பே, பொன்திட்டத்தின் மதத்தைச் சாராத வேறு கடவுளர்களை வணங்க ஆரம்பித்தன. கிரேட்பிரிட்டனில் விலைகளின் நிலைபேற்றினை நிலைநாட்டும் கைக்கோளைப் பின்பற்றும்படி, தொழிலதிபர்களால் ஆதரிக்கப்பட்ட பொருளாதார நிபுணர்கள் கருத்துத் தெரிவித்தனர். ஐக்கிய அமெரிக்காவிலும் அமெரிக்கக் காங்கிரஸ் இதே கோரிக்கையை நிறைவேற்றும்படி பலதடவை வற்புறுத்தப்பட்டது. ஐக்கிய ரிசர்வு பாங்குகள் விலைகளை நிலைபெறச் செய்வதை கடைபிடிக்கும்படி அவைகளைச் சட்டப்படி கட்டுப்படுத்த பல மசோதாக்கள் அமெரிக்க காங்கிரஸில் கொண்டுவரப்பட்டன. இந்த மசோதாக்களில் எதுவும் சட்டமாக்கப்படவில்லையாயினும், பண மேலாண்மையாளர் (monetary authorites) விலைகளின் நிலைபேற்றை (மாற்றுவீதங்களின் நிலைபேற்றைக் காட்டிலும்) நிலைநாட்டுவதே அவர்களின் தலையாய கடன் என்னும் எண்ணம் வலுத்துக்கொண்டே வந்தது. விலைகளின் நிலைபேற்றினைக் கடைப்பிடித்தல் பொன்திட்டத்தில்

[1] துக்ளாஸ் காப்லாண்ட் (Douglas Copland) எழுதியுள்ள 'போர் நெருக்கடியில் ஆஸ்திரேலியா' (Australia in World Crisis) என்னும் நூலினைப் பார்க்கவும்.

இயலாத காரியமென்று ஏற்கெனவே தெளிவாக்கப்பட்டது. எந்த நாடாவது விலைகளின் நிலையானதன்மையை நாட முயற்சிப்பதோடு, நிலையானதன்மைக்கு அறிகுறியாக ஒரு குறியீட்டெண்ணை நம்புவதுடன், நிலைபேற்றை நிலைநாட்டுவதில் வெற்றியும் பெற்றுவிட்டால் அது மேற்சொன்ன இயலாமைக்கு ஓர் அரிதான விதிவிலக்காகும். உலக விலைமட்டம் (world price level) நிலையானதாக இருந்தால்தான் அது மாற்றுவீதங்களையும் நிலைபேருன விலைகளுடன் நிலையானதாகச் செய்யும். ஒவ்வொரு மையபாங்கும் அதன் நோட்டுகளின் மாற்றுரிமையை முதன்மையாகக் கவனிக்கும்படி சட்டத்தால் கட்டாயப்படுத்தப்படுமானல், விலைகளைக் கட்டுப்படுத்தும் பணியில் ஒன்றுகூட இறங்காது. இந்தக் குழப்பமானதொரு நோக்கம், கடைப்பிடிக்கப்பட்டு வந்த கைக்கோள்களையெல்லாம் எவ்வாறு பாதித்ததென்பதை விரைவில்காண்போம். பொன்திட்டத்தை மீண்டும் கொண்டுவந்தலானது, அதனுடைய முக்கியக் கைக்கோளின் நோக்கமான மாற்றுவீதங்களை நிலைப்படுத்தலுடன், நிலையான விலைகளுக்கான (stable prices)தொரு முரண்பாடான எதிர்வேத விழைவை (heretical desire) முற்றிலும் நீக்கிவிடவில்லை.

போருக்குப் பிந்திய பொன்திட்டம் (post war gold standard) சரிவர இயங்குவதற்குக் குறுக்கே இருந்த இரண்டாவது வகை இடையூறுகள் (second group of difficulties), போருக்கு முன்னல் இருந்ததைவிட, மாற்றுவீத நிலைபேற்றை நிலைநிறுத்துவது செயல்முறையில் பெரும் வேலையாயிருந்தமையால், ஏற்பட்டவைகளே. நாம் ஏற்கெனவே ஆராய்ந்ததுபோல, பொன்திட்டத்தின் நோக்கம் இருவகைப்பட்டதாகும். ஒன்று, பொன் பெயர்ச்சிகளின் மூலம், செலாவணிகளின் நிலையான தன்மையை உண்டுபண்ணுதல்; இரண்டாவது வழி, பல்வேறு நாடுகளின் உற்பத்திச் செலவுகள், விலைகள் இவைகளுக்கிடையே ஓர் ஒத்த நிலையை ஏற்படுத்துவதன் மூலம் பொன் பெயர்ச்சிகளைத் தடுத்தலாகும். முதல் வேலையான நிலைபேற்றைப் பாதுகாப்பது செயல்முறையின் (mechanism) இரண்டாவது பகுதி சரிவர வேலை செய்தாலொழிய இயலாது—அதாவது பல்வேறு நாடுகளின் விலைமட்டங்களைச் சிறு சரிப்படுத்தல்களால் ஒத்தவாறு செய்தாலொழிய நிலைபேற்றினைப் பாதுகாப்பதரிது. எனினும், போருக்குப் பிறகு இவ்வாறு மீண்டும் மீண்டும் விலைகளைச் சரிப்படுத்தல் மிகவும் கடினமானதாக இருந்தது. முதலாவது இவ்வாறு மீண்டும் செய்யும் இடைவெளிகள் மிக அகலமானவைகளாக இருந்தன. பவுண்டை 10 சதவீதம் அல்லது அதற்கும் அதிகமாக மிகை மதிப்பு செய்யுமாறு அப்போது ஆலோசனை கூறப்பட்டது; இதே அளவிற்கு பிரெஞ்சு ஃபிரான்கும்

குறைமதிப்புச் செய்யப்படுவதும் நிகழக்கூடியதாக இருந்தது. இவற்றிக்கிடையேயுள்ள குறைந்தது 20 சதவீதம் வேறுபாடு (divergence), களையப்பட வேண்டியதாக இருந்தது. போருக்கு முன்னர் உள்ள காலத்தில் குறுகிய வேறுபாடுகளை எளிதாகக் களையமுடிந்தது. ஆனால் இவ்வேறுபாடுகளைக் களைவது கடினமான தாகவேயிருந்தது. இரண்டாவதாக, சில விலைகள் சரிசெய்யப் படவே முடியாதனவாக இருந்தன. கீழ்நோக்கிச் சரிசெய்வதில் (downward road) இது மிகவும் உண்மையாக இருந்தது. 1926ஆம் ஆண்டிற்குப் பிறகு பிரிட்டிஷ் உற்பத்திச் செலவுகளைக் கீழ்நோக்கிச் சரிசெய்தல் இயலாததாக இருந்தது. தொழிற்சங்கங் கள் (trade unions) கூலிகளைக் குறைப்பதற்கு முழுமூச்சுடன் எதிர்த்துநின்றன. கூலிகளைக் குறைப்பதற்கு தங்களது கோரிக் கைகளை விட்டுக் கொடுப்பதைவிட வேலைநிறுத்தம் செய்யத் தயாராக இருப்பதை 1926ஆம் ஆண்டில் அவைகள் அறிவித்தன. விலைகளின் நெகிழாத்தன்மைக்கு இது ஓர் அதிதீவிர (extreme) உதாரணமாகும். போர்க்காலத்தின் விரைவான மாறுதல்களால், உலகத்தின் பல்வேறு பிரிவு மக்களும் விலைமாற்றங்களின் முக்கியத் துவத்தை நன்கறிவிக்கப்பட்டிருந்தனர். அதேபோல் அவ்விலை மாற்றங்கள் பாதகமாக (unfavourable) இருக்கும்போது அவைகளை ஏற்க அவர்கள் தயங்கினர். பொதுவாக, பொன்திட்டத்தில் விலை களின் நிலைபேறு (stability of prices) ஒரு முரண்பாடாக இருப்பது போலவே, குறிப்பிட்ட விலைகளின் (Particular prices) நெகிழ்வற்ற தன்மையும் இவ்வாறே உள்ளது. பொருளாதார அமைப்பில் இவ் விலைகள் முக்கியமானவைகளாக இருந்தால் (கூலிகளைப்போன்று), அவை பொன்திட்டத்தின் வேலையைத் தடைசெய்யும்.

பொன்திட்டத்தின், மீண்டும் சரிப்படுத்தும் பணிக்கு (readjusting function) தடைகளான மற்ற உதாரணங்களை இங்கே குறிப்பிடலாம். பொன்திட்டம் தடையின்றி இயங்குவது குறுங்கால பாங்கு நிதிகள் (short-term banking funds) வட்டிவீதத்தில் ஏற்படும் மாறுதல்களால் ஆளப்படுவதன் (influenced) அளவைப் (degree) பொறுத்துள்ளதென்பது ஈண்டு கவனத்தில் கொள்ளத் தக்கது. 1914ஆம் ஆண்டிற்கு முன்பு இங்கிலாந்து பாங்கின் பாங்கு வீதத்தில் ஏற்படும் 1 சதவீத அதிகரிப்பானது, பிரிட்டிஷ் பாங்கர்கள் நாடுகளில் வைத்துள்ள நிதிகள் திரும்பப் பெறப்பட்டு அவைகள் லண்டனை நோக்கிக் குவிதலை உண்டுபண்ணுவதுடன், அயல்நாட்டினர் தங்களது வாணிபத்திற்கு லண்டனில் கழிவுகள் செய்யப்படத்தக்க உண்டியல் மூலம் (bill discountable at London) நிதியளிப்பதற்கான அவர்களின் விருப்பம் குறைவடைதலையும் ஏற்படுத்தும் (அதாவது லண்டன் கழிவு அங்காடியில் கடன்

வாங்குவதைக் குறைக்கும்). இவைகள் யாவும் விற்பனைகளுக்கு ஒப்பீடாக, ஸ்டெர்லிங்குகள் வாங்கப்படுதலை அதிகரிக்கும். ஆனால் போருக்குப் பிற்காலத்தில், மேற்சொன்ன காரணிகள் (factors) இயங்கிவந்தபோதிலும், அவைகள் பலமின்றி இயங்கிவந்தன. 'லண்டனில் பணம் பெறத்தக்க ஸ்டெர்லிங் உண்டியல்களால் மிகக் குறைந்த அளவு வாணிபமே நடைபெற்றது. எனவே, லண்டனில் ஏற்படும் பாங்குவீத மாற்றங்களால் நிதிகளின் போக்கு மிகவும் குறைந்த அளவே பாதிக்கப்படுவனவாக இருந்தன. மேலும், வட்டிவீதங்களின் போக்குகளால் ஏற்பட்ட நாட்டு எதிர் விளைவுகள் (national reactions) பெருமளவு பன்னாட்டுக் குறுங்கால நிதிகளால் (சாதாரணமான வட்டியின் தூண்டுதல்களால் தூண்டப்படும் குறுங்கால நிதிகளைவிட, யூகபேரம் அல்லது பயத்தினால் தூண்டப்படும் குறுங்கால நிதிகள்) மூடப்பட்டுச் செயலற்று விடுகின்றன. பாங்குவீதத்தில் ஏற்படும் அதிகரிப்பு ஒரு பலவீனமாகக் கருதப்படுவதில்லை. இது குறுங்கால நிதிகளின் இறக்குமதியைவிட ஏற்றுமதியையே அதிகரித்தது. போரின் இடைக் காலத்தின் இறுதியில், குறுங்கால நிதிகளாகிய இந்தப் பணம் (corpus) ஒரு பெருந் தொல்லையாக (unmitigated nuisance) இருந்தது. ஏனெனில் அது விளைவித்த பெயர்ச்சிகள் (movement,) மற்ற பேரங்களனைத்தையும் விஞ்சும்படியாக இருந்ததுடன் அவைகள் மையபாங்குகளின் ஆயுதச் சாலையில் (armoury) உள்ள எந்த ஒரு கட்டுப்படுத்தும் ஆயுதத்திற்கும் (weapons of control) கட்டுப்படுவதாகவும் இல்லை; எனவே அது 'கெட்ட பணம்' (bad money) என்னும் பெயரினை நன்கு பெற்றது.

போருக்குப் பின்னருள்ள காலத்தில் (post-war period) ஆட்சி முறையும், பொன்திட்டம் எளிதாகத் தடையின்றி நடப்பதற்கு (smooth running) மும்முரமாக முயற்சி செய்வதாக இருந்த போதிலும் அதன் கைக்கோள் அதற்குப் பல தடைகளைக் கொண்டதாகவு மிருந்தது; போர் நஷ்ட ஈடுகள் திணிக்கப்பட்டதும், போர்க்கடன்களை திருப்பிக் கொடுக்கும்படி வற்புறுத்தப்பட்டமையும் இது சம்பந்தமாக அடிக்கடி குறிப்பிடப்படுகின்றன. இந்தச் செலுத்துகள் (payments) அயல்நாட்டு மாற்று அங்காடியில் பொன் திட்டத்தின் ஆயுதங்களினால் கட்டுப்படுத்தப்பட முடியாத தொன்றைப் புகுத்தின. பாங்கு வீதம் எதுவாக இருந்தபோதிலும் அல்லது பொன் இருப்பு நிலை எவ்வாறு இருந்தபோதிலும், ஜெர்மனி போர் நஷ்ட ஈடுகளைச் செலுத்துவதற்கு. அதன் மார்க்குகளை (marks) விற்கவேண்டி யிருந்தது. போர்க்கடனாளிகள் (war debtors) தங்களது தவணை செலுத்துதல் (instalments) தவக்கப்பட்ட போதெல்லாம் அவைகளைச் சரிவரச் செலுத்துவதற்கு டாலர்

களை வாங்கவேண்டி யிருந்தது. மார்க்குகளின் அளிப்பிலும் டாலர்களின் தேவையிலும் உள்ள இக்கருப் பொருள்கள் (elements) நிலையானவைகளாக இருந்தன. மைய பாங்குகளின் எத்தகைய பாதிப்பினுலும் (influence) அவைகள் அசைக்க முடியா வண்ணமும் நிலையானவைகளாகவு மிருந்தன. ஆனுல், இந்த விதத்தில், போர் நஷ்டஈடுகளும், போர்க்கடன்களும் பொதுவாக பன்னுட்டுக் கடனிலிருந்து (international indebtedness) மாறுபட்டவைகளாகத் தோன்றவில்லை. ஏனைய கடன்களின் மொத்தத் தொகையோடு ஒப்பிடப்படும்போது அவைகள் அதிகமில்லை என்றுதான் கூற வேண்டும். அவைகள், பொருளாதாரத் தூண்டுகோள்களாக இருப்பதைவிட அரசியல் தூண்டுகோள்களாகவே பெரிதுமிருக்கின்றன. பன்னுட்டு கடன்கள் என்னும் இத்தலைப்பு முழுவதும் அடுத்த அத்தியாயத்தில் ஆராயப்பட்டுள்ளது. ஆனுல் பன்னுட்டுக் கடன்கள், அவைகள் போர்க்காலத்திற்குப் பிந்திய காலத்தில் (post-war era) இருந்ததைவிட அதிகமாக இருக்கும் போது, பொன்திட்டத்தின் வேலை நிறைவேற்றப்படுவது அந்த அளவிற்கு கடினமாகவே உள்ளது.

அநேகமாக ஒவ்வொரு நாட்டிலும் போர்க்கடன்கள், போர் நஷ்டஈடுகள் இவைகளைவிட அதிகப்படியான சுங்கவரிகளே (excess tariffs) மிகவும் முக்கியம் வாய்ந்தவைகளாக இருந்தன. சுங்கவரிகளே பொன்திட்டத்தின் வேலைமுறைக்கு ஒருதடையாக இருந்தன என்றும் சொல்வதற்கில்லை. 1914ஆம் ஆண்டிற்கு முன்பும் சுங்கவரிகள் இருந்தன. ஆனுல் பொன்திட்டமானது, நாடானது, விலைகளைக் குறைப்பதன் மூலமும், ஏற்றுமதிகளை அதிகரிப்பதன் மூலமும் அதன் செலாவணிக்கான தேவையை அதிகரிப்பதற்கு, தான் பொன்னை இழப்பதை அனுமதிக்கும்படியான ஒரு போக்கை வெளிக்காட்டினுலொழிய, அதனுல் வேலை செய்ய இயலாது. போருக்குப் பிந்திய காலத்தில் இவ்வாறு அவசியமான சரிப்படுத்துதல்கள் (adjustments), அடிக்கடியும் (frequent) அதிகமாயும் (excessive) விதிக்கப்பட்ட அதிகமான சுங்கவரிகளால் (higher tariffs) வேண்டுமென்றும் பலமாகவும் தடை செய்யப்பட்டன. தனது ஏற்றுமதிகளைப் பெருக்குவதன் மூலம் சமன நிலையை (balanced position) அடைவது ஒரு நாட்டிற்கு இயலாததாக இருந்தது. தனது இறக்குமதிகளைக் குறைத்துக் கொள்வதே இதனை அடையும் மற்ருெருவழியாக இருந்தது. இறக்குமதிகளைக் குறைத்தலானது, பன்னுட்டு வணிகத்தின் மந்த நிலையை அதிகரிக்கக் கூடியதாகவும், போட்டி போட்டுக் கொண்டு பாதுகாப்பளிக்கும் வருந்தத்தக்க செயலை வளர்ப்பதாகவு மிருந்தது, பயங்கரமும், பொருமையும் கொண்ட, நாட்டுநலன் பேணும்

வாணிபமுறையுடன் பன்னாட்டு நிதிமுறை யொன்றை(an international Financial system) வைத்து நடத்துதலென்பது இயலாத காரியமாகும்.

போருக்குப் பிற்காலத்திய பொன்திட்டம் வீழ்ச்சியுற்றதற்கு மூன்றுவது காரணம் மையபாங்குகள் செயல்முறை இடையூறுகளை (technical difficulties) உணர்ந்திருந்தமையாலும், அவைகளுக்குள்ளேயே ஒற்றுமை யில்லாமலிருந்த காரணத்தாலும் பொன் விதியைக் (golden rule) கடைப்பிடிக்காமையே பொன் நாட்டினுள் வந்து குவிந்துகொண்டிருக்கும் சமயம் அவைகள் தங்களது காப்பு நிதிகளில் அப்பொன் வந்து குவியும்படி அனுமதித்ததுடன், விலைகள் அதிகரிக்கும்படி அவைகள் பாங்குச் செலாவணிகளை அதிகரிக்கவில்லை. அதே போன்று, பொன் ஏற்றுமதி செய்யப்பட்டபோது, அவைகள் தங்களது காப்புகளை, பாங்குச் செலாவணிகளைத் தடை செய்யாமலும், விலைகளைக் குறையும்படி செய்யாமலும், குறைத்துக் கொண்டன. இந்த வகையில் ஐக்கிய அமெரிக்கா, பிரான்சு ஆகிய இரு நாடுகள் மட்டிலுமே பாவிகளென (sinners) ஆங்கில விவரண ஆசிரியர்கள் விரைந்து எண்ணினர். அமெரிக்காவின் கைக்கோள் மிகவும் சரியானதெனக் கொள்ளப்படினும், உண்மையில் இரு நாடுகளுமே குறை கூறப்படத்தக்க முறையில் தானிருந்தன. உதாரணமாக ஐக்கிய அமெரிக்காவின் பாங்கு வைப்புக்களின் மொத்தம் (Total of Bank Deposits) இவற்றை மொத்தப்பண அளிப்பின் பிரதிநிதி என்று கூடக்கூறலாம். 1920 லிருந்து 1929ம் ஆண்டுவரையுள்ள காலத்தில், நாட்டின் பொன் காப்பு (gold reserve) எந்த வீதத்தில் அதிகரித்ததோ, அந்த வீதத்தில் அதிகரித்தது. மற்ற மையாங்குகளை விட, ஐக்கிய ரிசர்வுபாங்குகள் (Federal Reserve Banks.) தங்கள் பொறுப்புகளில் அதிக வீதத்தை பொன்காப்பாக வைத்திருந்தன என்பதைவேண்டுமானுல் ஒரு தீமை எனக் கூறலாம்.[1] பிரான்சின் மீது கூறப்பட்டிருப்பது தெளிவாகவே யுள்ளது. ஏனெனில் அது 1928ஆம் ஆண்டு முதற்கொண்டு, போதிய அளவிற்குப் பாங்குச் செலாவணிகளை அதிகரிக்காமலேயே தொடர்ந்து பொன்னைப் பெற்றுக்கொண்டே யிருந்தது. ஆனல் கிரேட் பிரிட்டனையும் குற்றம் சொல்லாமலிருப்பதற்கில்லை. ஏனெனில் பொன் ஏற்றுமதியை அது தொடர்ந்து புறக்கணித்துக்கொண்டே யிருந்தது. இங்கிலாந்து பாங்கு பாங்குச் செலாவணிகளைக் குறைத்து அதன் மூலம் விலைகளைக் குறைக்க முற்படாமல் அவைகளைத் தாராள

1 ஆனல் மொத்தப் பணத்திற்கான (total money) பொன்காப்புகளின் (gold reserves) விகிதம (ratio) மற்றப் பெரும்பாலான நாடுகளைவிடக் குறைவாகவே உளளதென அமெரிககர்கள் ஓரளவிற்கு நியாயமாகவும் கூறுகின்றனர்.

மாக, தனது பலம் குறைந்த சக்திக்கு மேற்பட்டே வைத்துக் கொள்ள விழைந்தது. பிரிட்டிஷ் கைக்கோளின் எடுத்துக்காட்டு இது சம்பந்தமாகப் புகழ்ந்து கூறுவதையோ அல்லது இகழ்ந்து கூறுவதையோ ஒரு வேடிக்கையான செயலென்பதை உணர்த்து கிறது. 1925-29க்கிடையே யுள்ள காலமுழுவதும் கிரேட் பிரிட்டன் மந்த நிலையிலேயே இருந்தது. இந்த மந்த நிலையின் போது இன்னும் மற்ற நிலையை அடையும்படி தூண்டுவது பொருளற்ற செயலாகவே இருந்தது. இச்சமயத்தில் அமெரிக்கா சுபிட்சமாக இருந்ததுடன், விநோதமான ஆனால் பலமான பண வீக்கத்தில் ஈடுபாடுடையதாக இருந்தது. அது இன்னும் பண வீக்கத்தை அதிகப்படுத்த வேண்டு மென்று கூறுவது அர்த்த மற்றதாக இருந்தது. உண்மை யெதுவெனில் பொன் திட்டத்தை நிறை வேற்றுவதற்காக அதிகமான ஏற்பாடுகள் கோரப்பட்டன. வட்டி வீதங்களில் செய்யப்படும் மாற்றங்கள் அல்லது பாங்குச் செலாவணிகளின் அமைப்பால், சரிசெய்யப்படமுடியாத அள விற்கு சமன்கேடுகள் (disequilibrium) அதிகமாக இருந்தன.

இவ்வாறு அடிப்படையான சமன் கேடுகளுக்கான சில விளக் கங்களை அடுத்த அத்தியாயத்தில் காண்போம். ஆனால் தேவையான சரிசெய்தல்கள் (adjustments) செய்யப்பட வில்லை என்பதை இங்குக் குறிப்பிடுவதே போதுமானது; பொன் பெயர்ச்சி களுக்கு, வழிந்தடைகளை ஏற்படுத்த முடிந்ததே தவிர, தடை செய்ய முடியவில்லை. உலகநாடுகள், பொன்னைத் தொடர்ந்து இழக்கும் நாடுகள், பொன்னுக்காக அலைந்துகொண்டிருக்கும் நாடுகளென, இரு பெரும்பிரிவுகளாகப் பிரிந்தன. இவற்றுள் முன்னதாகக் கூறப்பட்டுள்ள (former) நாடுகளின் காப்புகள் (reserves) குறைக்கப்பட்டன; பின்னதாகக் கூறப்பட்டுள்ள நாடு களின் காப்புகள் அதிகரிக்கப்பட்டன. சிறிது காலத்திற்கு, பொன்னை இழந்து கொண்டிருந்த பிரிவைச் சார்ந்த நாடுகளின் காப்புகள் (reserves), பொன்னைப் பெற்றுக்கொண்டிருந்த நாடு களிடமிருந்து கடன் வாங்குவதன் மூலம், காக்கப்பட்டன. கிரேட் பிரிட்டன், அதிகவட்டி வீதங்களை லண்டனில் கடைப்பிடிப்பதன் மூலம், கடன் வாங்கியது. 1929ம் ஆண்டு வரையிலும், ஜெர்மனி, நெடுங்கால அரசாங்கக் கடன் பத்திரங்களை, குறிப்பாக நியூயார்க் கிலும் லண்டனிலும் (லண்டன் தான் சொந்தமாகப் பெற்ற கடன்களின் ஒருபகுதியை ஜெர்மனிக்கு அனுப்பிக் கொண் டிருந்தது), வெளியிடுவதன் மூலம் கடன் வாங்கியது. 1929ஆம் ஆண்டுக்குப்பிறகு நெடுந்தவணைக் கடனை ஒருவரும் விரும்ப வில்லை. ஜெர்மனியும் குறுந்தவணைக் கடனையே நாடியது. ஐரோப்பாக் கண்டத்தை அப்போது உலுக்கிக் கொண்டிருந்த

பீதியானது, குறுந் தவணைக்கடன் கொடுத்திருந்தவர்களை யெல்லாம் தங்கள் கடனைத் திருப்பிக் கேட்குமாறு செய்தது. கடன் முழுவதையும் திருப்பித்தர இயலாத நிலையிலிருந்தன. 1931 ஆம் ஆண்டு மே மாதம் ஆஸ்டிரியாவும் ஜூலைமாதம் ஜெர்மனியும் அயல் நாட்டினருக்கு கடன் தொகைகளை திருப்பித்தருவது தடை செய்யவேண்டியதாக இருந்தது. கிரேட்பிரிட்டனுக்குக் கடன் ஈந்த நாடுகள் அதனிடமிருந்து பொன்னாகவே தங்களது கடனைத் திரும்பப் பெற்றுக்கொண்டிருந்தன. அவைகள் 1931 ஆம் ஆண்டு செப்டம்பர் வரை (அதாவது இங்கிலாந்து பாங்கின் பொன் காப்புகள் வறண்டுபோகும் வரை) இவ்வாறு பொன்னாகவே தங்கள் கடன்களைத் திரும்பப் பெற்றன. இவ்வாறு 1931 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்திற்குப்பிறகு, இங்கிலாந்து பாங்கின் பொன்காப்பு வறட்சியானது பொன்திட்டத்தைத் தள்ளி வைக்கும்படி அரசாங்கத்தை வற்புறுத்தியது. 1931 ஆம் ஆண்டு நெருக்கடி (crisis) திடீரென்று ஏற்பட்டதாயினும், நெருக்கடிக்கான வித்துகள் பல ஆண்டுகட்கு முன்பே விதைக்கப்பட்டிருந்தன.

1929ம் ஆண்டு ஏற்பட்ட பெரிய மந்தத்திற்கு, இவ்வாறு தொடர்ச்சியாக இருந்துகொண்டிருந்த சமன்கேடும் (maladjustment) ஒரு காரணமாகும். இதனைப்பற்றி அதிகமாக அடுத்த அத்தியாயத்தில் கூறப்படும். பொன்திட்டம் மந்தத்திற்குக் (depression) காரணமாக இல்லை யென்னும் கருத்து இங்கே தெளிவுபடுத்தப்படவேண்டும். ஒரேவிதமான சமன்கேடுகளே (disequilibrium) மந்தத்தையும் தோற்றுவித்து, பொன்திட்டத்தையும் நிர்மூலமாக்கிவிட்டன.

## நிலைபேறற்ற செலாவணிகள்.
(Unstable Exchanges)

1931 ஆம் ஆண்டிற்கும், போர் தொடங்கிய எட்டாண்டிற்குப் பின்னரும் உலகத்தின் பெரும்பகுதியான நாடுகள் மாற்றப்படக் கூடாதனவும் ஏற்ற இறக்கங்களைக் கொண்டனவுமான செலாவணிகளைக் கொண்டே செயல் நடத்திக் கொண்டு வந்தன. பவுண்டானது முதன்முதலில் மதிப்பிறக்கம் செய்யப்பட்ட போது, குறிப்பாக ஐரோப்பிய நாடுகளில், அதற்கு நிறைய எதிர்ப்புகள் தோன்றலாயின. இந்நாடுகள் போருக்குப் பின்னர் ஏற்பட்ட பணவீக்கத்தத்தால் மிகவும் பாதிக்கப்பட்ட நாடுகளாகும். இவ்வகைப்பட்ட எதிர்ப்புகளுடன், கிரேட் பிரிட்டனைப்பற்றிய ஒரு கருத்தும் நிலவியது. அதாவது மதிப்பிறக்கம் செய்தவன் மூலம் சுகமான

பாதையைத் தேர்ந்தெடுத்துவிட்ட கிரேட் பிரிட்டன் விலையை சீர்கேடாகச் செய்துகொள்ளும் என்று நாடுகள் முன்னறிவிப்புச் செய்தன. ஆனால் இத்தகைய முன்னறிவிப்புகளெல்லாம் பொய்த்துவிட்டன. கிரேட் பிரிட்டனில், 1931ஆம் ஆண்டிற்குப் பிறகு ஒருசில ஆண்டுகளாகப் பொதுவான விலைகளின் மட்டம் (general level of prices) குறிப்பிடப்படும் வகையில் நிலையாக இருந்தது. அதாவது அதற்கு முன்பிருந்த பிரிட்டிஷ் விலைகளுடனும், பொன்னின் அடிப்படையில் செலாவணிகளைக் கொண்டிருந்த நாடுகளில் ஏற்பட்ட தொடர்ச்சியான விலை இறக்கங்களுடனும் ஒப்பிடும்போதும், இதனை நிலையானதென்றே குறிப்பிட வேண்டும். மேற்குறிப்பிட்டவாறு, கோழைகளின் பயத்திற்கும்சில சாக்குப் போக்குகள் இருந்தன. கடுமையான பணவீக்கமும் (இது உள்நாட்டுப் பொன்திட்டத்தின்பாற்பட்டதாகும்) செலாவணியின் நிலைபேறற்ற தன்மையும் (இது பன்னாட்டுப் பொன் திட்டத்தின் பாற்பட்டதாகும்) வேறுபட்டனவானாலும், 1931 ஆம் ஆண்டிற்கு முன்பு இரண்டும் ஒருங்கு சேர்ந்தே நிகழ்ந்துவந்தன. பொன் திட்டத்தை விட்டொழிந்த கிரேட் பிரிட்டனும் இன்னும் மற்ற நாடுகளும் நன்மையை அடைந்த காரணத்தால் மாற்றுரிமையற்ற (inconvertible) இந்தச் செலாவணிகளுக்கு நிறைய ஆதரவு கிடைத்தது. உண்மையில், 1933ஆம் ஆண்டில் டாலரில் செய்யப்பட்ட மதிப்பிறக்கம் (depreciations) ஓரளவிற்கு, மாற்றுரிமையற்ற செலாவணிகளால் ஏற்படும் நன்மைகளை அடைய வேண்டும் என்ற விருப்பத்தின் காரணமாகவே செய்யப்பட்டதெனக் கூறலாம். அந்த நன்மைகள், வெளிப்படையான தோற்றத்திற்காவது, பெரியனவாகக் காட்சியளித்தன. ஏனெனில், பொன்திட்டத்தை நிறுத்திவைத்துத் தனது செலாவணியை மதிப்பிறக்கம் செய்த ஒவ்வொரு நாடும், பொருளாதார மந்தத்தின் (economic depression) பயங்கர விளைவுகளின்றும் ஒரு மீட்சியை (recovery) அதிக அளவிலோ அல்லது குறைந்த அளவிலோ அடைந்தன. ஆனால், அதேசமயத்தில் பொன் அடிப்படையில் செலாவணிகளை மேலும் சில ஆண்டுகளுக்கு வைத்துக்கொண்டிருந்த நாடுகள், மந்தத்தின் ஆழத்திலேயே புதையுண்டு கிடந்தன.

செலாவணிகளின் நிலைபேறற்ற தன்மையின் விளைவுகளையெல்லாம் சிறந்த நன்மைகளெனக் கூறுவது தவறாகும். பொன் திட்டத்தை விட்டு முதன்முதலாக நீங்கிக்கொண்ட, அதனால் பெரும்பயனை அடைந்த கிரேட் பிரிட்டன்கூட 'ஸ்டெர்லிங் அணி' (Sterling block) என்றழைக்கப்பட்ட ஓர் அமைப்பை ஏற்படுத்துவதில் தலைசிறந்து விளங்கியது. இந்த 'ஸ்டெர்லிங் அணி' பிரிட்

டிஷ் பேரரசு முழுமையையும், ஸ்காண்டிநேவிய நாடுகளையும், போர்ச்சுகல், தென்னமரிக்காவில் ஓரிரு நாடுகளையும் கொண்டதாக இருந்தது. 'ஸ்டெர்லிங் அணி'யிலிருந்த எல்லா நாடுகளும் தங்களது செலாவணிகளை ஸ்டெர்லிங்கிற்கு ஒப்பாக நிலைபேறுடையவைகளாக வைத்திருந்தன.[1] இதனால் கிரேட் பிரிட்டனின் பெரும் பகுதி வாணிபம் நிலைபேறுள்ள செலாவணி வீதங்களின் அடிப்படையில் நடந்தது. உண்மையில், கிரேட் பிரிட்டனுக்கு பொன் திட்டத்திலிருந்து விலகியதால் ஏற்பட்ட நன்மைகளில், அது மிகை மதிப்பு (Overvaluation) செய்வதனின்றும் தன்னை விடுவித்துக் கொண்டதனால் ஏற்பட்டவைகளாகும்; செலாவணிகளின் வீதங்களில் ஏற்பட்ட ஏற்ற இறங்கங்களால் (fluctuations) ஏற்பட்டவையல்ல.

பொன் திட்டத்திலேயே இருந்துகொண்டிருந்த நாடுகளில் செலாவணிகளின் நிலைபேறற்ற தன்மையினால் ஏற்படும் விளைவுகளையும் நாம் சிந்திக்க வேண்டும். பொன் திட்ட நாடுகளில் தொடர்ந்து ஏற்பட்ட மந்தத்திற்கு (Continued depression) மற்ற நாடுகள் தங்கள் செலாவணிகளில் செய்துகொண்ட மதிப்பிறக்கத்தின் விளைவாகவும் ஓரளவிற்கு இருந்தது. உதாரணமாக, ஒரு நாட்டின் செலாவணியானது மதிப்பில் குறைகிறதென வைத்துக் கொள்வோம். அந்த நாட்டின் ஏற்றுமதியாளர்கள் (exporters) தங்களின் பொருள்களை செலாவணிகளின் மதிப்புக் குறையாத மற்ற நாடுகளில் விற்கும்போது, அவ்விற்பனைக்கேற்ப அவர்களுக்கு அரசாங்கக் கொடை (bounty) வழங்கப்படுகிறது. பவுண்டானது 120 ஃபிரான்குகளிலிருந்து 80 ஃபிரான்குகளாக மதிப்பில் குறைவடையும்போது, ஒரு பிரிட்டிஷ் ஏற்றுமதியாளர் (British exporter) தமக்கு ஒரு பவுண்டு அடக்கவிலையான ஒரு பொருளை 100 ஃபிரான்குகளுக்கு விற்று அதன்மூலம் 5 ஷில்லிங் அதிகப்படியான இலாபத்தைப் பெறவும் கூடும். பிரான்சின் ஏற்றுமதித் தொழில்களும், பிரிட்டிஷ் பொருள்களுடன் போட்டியிட்டுக்கொண்டிருந்த அதன் தொழில்களும் இதனால் பாதிக்கப்படுகின்றன. ஒன்று, அத்தொழில்கள் தங்களது வாணிபத்தை இழக்கின்றன அல்லது விலைகளைக் குறைத்துக்கொள்கின்றன, அல்லது இரண்டையும் செய்கின்றன. எப்படியிருந்தாலும் பிரெஞ்சு விலைகள் (French prices) குறைகின்றன; வேலையின்மையும் அதிகரிக்கின்றது. இந்த வாதத்தை (argument) இன்னும் நீட்டித்துக் கொண்டே

1 ஓரிரண்டு தடவைகள் மாற்றுவீதம் காலத்தையொட்டி அவ்வப்போது மாற்றப்பட்டது. ஆனால் ஒரு மாற்றுவீத மாற்றத்திற்கும் அடுத்த மாற்றுவீதத்திற்குமிடையேயுள்ள இடைவெளி காலத்தில் மாற்றுவீதம் நிலைபேறுடையதாக வைக்கப்பட்டது.

செல்லலாம். பொன் திட்டத்தைக்கொண்ட நாடுகளில் தொடர்ந்து இருந்துகொண்டிருந்த மந்தத்தின் ஒரு பகுதியும், பொன் திட்டத்தைப் பின்பற்ருத நாடுகளின் மீட்சியின் (recovery) ஒரு சிறிய பகுதியும், இவ்விருவகைப்பட்ட நாடுகளின் ஏற்றுமதித் தொழில்களின் போட்டியிடும் திறனில் ஏற்பட்ட மாற்றங்களால் ஏற்பட்டன வென்று எளிதாக எடுத்துச் சொல்ல முடியும். எனினும், உலகத்தின் எந்த ஒரு பகுதியிலும் மந்தத்தை (depression) அதிகப்படுத்தும் (அந்த அதிகரிப்பு எவ்வளவு குறைவாக இருந்தபோதிலும்) ஒரு நிலைமையை (State of affairs) ஒரு நிரந்தரமான நிலையமாக (permanent institution) மனப்பூர்வமாக சிபாரிசு செய்யப்பட இயலாது.

மேலும், பொன் செலாவணி நாடுகள் (gold countries) வாணிப நடவடிக்கைகள் 'செலாவணிகளின் குவித்தல்' (exchange dumping) என்று அழைக்கப்படும் ஒரு நிகழ்ச்சியால் சீர்குலைக்கப்படுகின்றன என்று கருதவும் கூடாது. ஏனெனில் அந்நாடுகள் அதிகமான சுங்கவரிகளை விதிப்பதன் மூலம் இச் 'செலாவணி குவித்தலின்' செயலை ஓங்கவொட்டாத வண்ணம் செய்துவிடுகின்றன. பொன் திட்டத்தில் இல்லாத நாடுகளிலிருந்து வரும் பொருள்களுக்கு மட்டும் குறைந்த பங்களவுகளைக் (Quotas) கொடுப்பதன் மூலம் 'செலாவணி குவித்தலை' (exchange dumping) தடுத்து வந்தன. பொன் திட்டத்தில் இல்லாத நாடுகள், தங்களால் இது போன்ற நடவடிக்கைகளை எடுக்க இயலாத தென்பதை நன்குணர்ந்திருந்தமையால் வேறுவகைகளில் அவைகள் பழிதீர்த்துக் கொள்ள ஆரம்பித்தன. எனவே, பொதுவாக வாணிபத் தடைகள் பெருகின. இவ்வாறு அதிகரித்த வாணிபத் தடைகள் பொன் திட்டத்திலுள்ள நாடுகள், பொன் திட்டத்தில் இல்லாத நாடுகள் என்னும் இரு பெரும் பிரிவுகளால் ஏற்பட்ட விளைவு என்றும் சொல்ல முடியாது. மாற்றுத் தன்மையற்றதும், ஏற்ற இறக்கங்களை உடையனவுமான செலாவணிகளையுடைய இரு நாடுகளுக்கிடையே மாற்று வீதத்தின் போக்குகள் எந்தச் சமயத்திலும் ஏற்றுமதித் தொழில்களில் போட்டியினுல் ஏற்பட்டுள்ள ஒரு சமன்பாட்டு நிலையை (competitive balance) நிலைகுலையச் செய்வதுடன், ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்கு ஏராளமான அளவு இறக்குமதிகள் வந்து குவிதலால் தொழில்கள் தங்களுக்குரிய பாதுகாப்பைத் திடீரென இழப்பதன் காரணமாக அவைகளின் பரிதாபக் குரல்களையும் உண்டுபண்ணுகின்றன. 1931-34க்கு இடையேயுள்ள ஆண்டுகளில் நடந்த நிகழ்ச்சிகள் மாற்று வீதங்களின் நிலைபேறின்மை (instability of exchange rates) கடுமையான மந்தமும் ஒன்று சேரும்போது, பன்னாட்டு வாணிபத்தில் தடைகள்

நீக்கப்படுவதற்குப் பதிலாக தடைகளை ஏற்படுத்தும் போக்கே அதிகமாகக் காணப்படும்.

எனினும் சூழ்நிலைகளைப் பொறுத்தே மேற்படி முடிவைக் கூற முடியும். மாற்று வீதங்களின் போக்குகள் நியாயமான வரையறைக்குள் வைக்கப்பட்டிருந்திருக்குமானால், சமநிலை வீதங்களினின்றும் அவைகள் வேறுபடாதிருந்திருக்குமானால், பன்னாட்டு வாணிபத்தில் ஏற்பட்ட இடையூறுகள் குறைவாகவே இருந்திருக்கும். தனது அண்டை நாட்டின் செலாவணியில் குறைமதிப்புச் செய்யப்படுவதால் ஏற்படும் ஏற்ற இறக்கங்களால் தனக்கு பாதகம் ஏற்படுகிறதென்று எந்த நாடும் குறைபடத் தேவையில்லை. ஆனால் அவ்விதமான ஏற்ற இறக்கங்களால் தனது செலாவணியில் குறை மதிப்பு ஏற்படும்போது, பாதிக்கப்படுவதாக நினைப்பதற்கு வழி இருக்கிறது. இந்த ஆண்டுகளில் பல நாடுகள் தாங்கள் வாணிப இலாபங்களை அடையும் நோக்கத்துடன், தங்களின் செலாவணிகளை வேண்டுமென்றே குறை மதிப்பு செய்துள்ளன. இவ்விதமான முயற்சிகள், இயற்கையாகவே எதிர்ப்பையும் பழிவாங்குதலையும் பிறநாடுகளிலிருந்து பெற்றன. எனவே குறை மதிப்புச் செய்வதன் மூலம் தாற்காலிக நன்மைகளை அடைய முடிந்ததே தவிர, எந்த நாடும் நிரந்தரமான நன்மைகளை அடைய முடியவில்லை.

ஏற்ற இறக்கங்களைக் கொண்ட செலாவணிகளின் காலம் 1931ஆம் ஆண்டு செப்டெம்பர் மாதம் பவுண்டின் மதிப்புக் குறைய ஆரம்பித்தது முதற்கொண்டு, ஆரம்பித்தது. ஐந்தாண்டுகள் அனுபவத்திற்குப் பிறகு, அதிகமான ஏற்ற இறக்கங்களினால் மாற்று அங்காடிகளில் ஏற்படக்கூடிய தீமைகளும், குறிப்பாகப் போட்டியிட்டுக்கொண்டு நாடுகள் குறைமதிப்புச் (depreciation) செய்வதனால் ஏற்படக்கூடிய தீமைகளும் நன்றாக உணரப்பட்டன. மேற்குறிப்பிட்ட கால அளவின்போது, உள்நாட்டில் மீட்சியைக் கொண்டுவருவதற்கு, பொன் திட்டத்திற்கு திரும்பி வருவதைவிட, குறை மதிப்பு (depreciation) செய்வதே சிறந்ததென்னும் கருத்து பல நாடுகளிடையே உலவி வந்தது. ஏற்ற இறக்கங்களில் (fluctuations) எந்தவிதமான நன்மையும் இல்லையென்பது நன்றாக விளங்கியது—நிலைபேறான தன்மைக்கு (stability) மீண்டும் திரும்பி வராமலிருந்தமைக்கு ஒரே காரணம் மிகை மதிப்பு (over valuation) மீண்டும் செய்யப்படுமானால் அதனின்றும் தப்பித்துக்கொள்வதற்கு ஒரு வழியை ஏற்படுத்திக்கொள்ளும் நோக்கமாக இருந்தது. எனவே, 1936ஆம் ஆண்டு செப்டெம்பர் மாதம் பிரஞ்சு ஃபிரான்கானது (French franc) மிகவும் குறைமதிப்புச் செய்யப்பட்டபோது அதனுடைய மதிப்பிறக்கம் (Fall) ஐக்கிய அமெரிக்கா,

கிரேட் பிரிட்டன், பிரான்சு ஆகிய நாடுகளுக்கிடையே முக்கூட்டுப் பண ஒப்பந்தம் (Tripartite Monetary Agreement) என அழைக்கப் படுகிற ஓர் ஒப்பந்தம் ஏற்படக் காரணமாயிருந்தது. பின்னர், இந்த ஒப்பந்தத்தை பெரும்பாலான மேற்கு ஐரோப்பிய நாடுகள் பின்பற்றலாயின. இந்த ஒப்பந்தம் தெளிவற்ற ஒரு பத்திரமாக இருந்தபோதிலும் கீழ்க்கண்ட முக்கியக் கருத்துக்களைக் கொண்ட தாக இருந்தது. அதாவது இந்த மூன்று நாடுகளும் அதிகமான ஏற்ற இறக்கங்களைத் (excessive fluctuations) தடுப்பதற்குப் பாடுபட வேண்டும். தங்களது செலாவணிகளின் ஒப்பீடான மதிப்பில் (relative value) ஏதாவது முக்கிய மாறுதலை ஏற்படுத்துவதற்கு முன்னர் ஒன்றை ஒன்று கலந்து ஆலோசிக்கவேண்டும். எந்த சமயத்திலும் அவைகள் போட்டியிட்டுக் கொண்டு குறைமதிப்பு (competitive depreciation) செய்வதோ அல்லது அதிகமான அளவில் மிகை மதிப்பு செய்வதோ கூடாது. இந்த ஒப்பந்தம் நிரந்தரமான நிலை பேற்றினை (permanent stability) மீண்டும் கொண்டுவரும் ஒரு முயற்சியென சொல்வதற்கில்லை. அதற்கு மாறாக மாற்று வீதங்களில் (exchange rates) பல்வேறு மாற்றங்களைக் கொண்டு வருவதற்காகவே இது பயன்படுத்தப்பட்டது. ஆனால் இவ்வொப்பந்தம், மாற்றுவீதங்களில் நாளுக்கு நாள் கணிசமான அளவிற்கு நிலையான தன்மையைக் கொண்டுவருவதற்கான ஒரு வாக்குறுதி (assurance) யாக இருந்தது. பெரு மாற்றங்களை மேற் சொன்ன நாடுகள் ஒன்றையொன்று கலந்தாலோசித்தே செய்து வரும். ஒரு நாட்டின் செலாவணிக் கைக்கோள் (currency policy) பிறிதொன்றிற்கு ஊறு விளைவிப்பதாக இருத்தல் கூடாதென்றும் இவ்வொப்பந்தம் கூறியது.

## பிரிட்டன் உட்ஸ்
(Bretton woods)

முக்கூட்டுப் பண ஒப்பந்தம் 1939 ஆம் ஆண்டு, போர் ஆரம் பிக்கும் வரையில் நீடித்தது. அப்போதுகூட அவ்வொப்பந்தத்தை ஒரு முறைப்படியான முடிவுக்குக் கொண்டுவரவில்லை. பிரிட்டனும் பிரான்சும் நீண்டகால மாற்றுத் தடையைக் கொண்டுவரும் முறை களை விரைவில் ஏற்படுத்தின. பவுண்டு ஸ்டெர்லிங்கிற்கும் டாலருக்குமிடையேயுள்ள மாற்றுவீதம் ஏறத்தாழ $ 4·80 லிருந்து $ 4·03 ஆக மாற்றப்பட்டுவிட்டது. போரின்போது ஏற்பட்ட செலா வணி ஏற்பாடுகள் (currency agreements) முக்கூட்டு ஒப்பந்தத்தின் எந்தக் கட்டுப்பாட்டினையும் மறுக்காவிடினும் மேற்படி ஒப்பந்தம் தீட்டிய திட்டங்களுக்கு நிச்சயமாக வேறுபட்டனவைகளாகவே இருந்தன.

போரின்போது, அதிலும் குறிப்பாக போரின் பிற்பகுதி ஆண்டுகளில், கிரேட்பிரிட்டன், ஐக்கிய அமெரிக்கா, கானடா ஆகிய நாடுகளில், போருக்குப் பின்னர் ஒரு பன்னாட்டுச் செலாவணி முறை இருக்கவேண்டுமென்னும் எண்ணம் தீவிரமாக இருந்து வந்தது. இதற்கான ஒரு பொதுவான ஒப்புதலும் இருந்து வந்தது. முதலாவதாக, தன்முனைப்பாக அல்லாமல் (arbitrary) ஒப்பந்தத்தின் மூலம் நாடுகள் தங்களின் செலாவணிகளின் மாற்று மதிப்பை மாற்றிக்கொள்வதற்கு ஒரு சாதனம் (mechanism) இருக்க வேண்டும். இருக்கின்ற வீதம் (actual rate) சமநிலை வீதத்தினின்றும் (equilibrium) வேறுபடுகின்றது என்று தெளிவாகத் தெரியும்போது இத்தகைய சாதனம் இருக்கவேண்டியது அவசியமாயிற்று. இவ்வாறு திட்டமிடப்பட்டுச் செய்யப்படுகின்ற மறுமதிப்பு செயல்களுக்கிடையே (between acts of revaluation) ஒவ்வொரு நாட்டின் பண அதிகாரிகளும் (monetary authorities) மாற்றுவீதங்களின் நிலையான தன்மையை (stability of exchange rates) நியாயமான அளவிற்கு ஏற்படுத்தவேண்டும். ஆனால் இந்த நிலையான தன்மையை (stability), கூடியவரையிலும் விரைவாகவும், மாற்றுத் தடையைப் பயன்படுத்தாமல் (மூலதனப் பெயர்ச்சிகளைத் தடை செய்வதை இதற்கு விதிவிலக்காகக் கொள்ளலாம்) அடையவும் முடிவு செய்யப்பட்டது. இதனால், நிலையான தன்மையை நிலை நாட்டுவதற்கு நிரந்தரமான முக்கிய ஆயுதம், எட்டாவது அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ள தலையீடு (intervention) என்பது தெளிவாகிறது—அதாவது பண மேலாண்மையாளர், செலாவணியின் அங்காடி அளிப்பிற்கும் (market supply) தேவைக்கு மிடையே சமன்கேடு இருக்குமானால் அதனைச் சரிசெய்து சமநிலைக்குக் கொண்டுவர வேண்டும். அவ்வாறு சரிசெய்யும்போது, அங்காடியை நோக்கி வருகின்ற அளிப்பை அவ்வாறு வருவதனின்றும் துண்டிக்கும் வகையாலன்றி, தேவையை அதிகரிப்பதன் மூலமே சரிசெய்யவேண்டும். இவ்வாறு சரிசெய்வதற்கு, ஏற்கெனவே எட்டாம் அத்தியாயத்தில் விளக்கப்பட்டதைப் போல, அவர்களுக்கு அயல்நாட்டுச் செலாவணிகளின் அளிப்புத் தேவைப்படும். அடிப்படையில் பார்க்கப் போனால், போர் ஆண்டுகளில் நடைபெற்ற பேச்சுக்கள் (discussions), தலையீட்டை (intervention) நிலைபெறச் செய்யும் நோக்கங்களுக்குத் தேவையான இந்த அயல்நாட்டுச் செலாவணிகளின் அளிப்பை எவ்வாறு கொண்டுவருவது என்பது பற்றியே இருந்தன.

இந்த விவாதத்தை பிரிட்டிஷ் அரசாங்கமே முன்னின்று தொடங்கி வைத்தது. இதற்கு மூலகாரணமாக இருந்தவர்

கெய்ன்ஸ் பிரபு (Lord Keynes) ஆவார். இந்தத் திட்டம் கடைப் பிடிக்கப் படாமல் போய்விட்டபோதிலும், கோட்பாட்டளவில் இதன் தத்துவங்கள் போகிற போக்கில் குறிப்பிடப்படும்படியாக இல்லாமல், ஒரு சிறப்பான இடத்தைப் பெற்றுவிட்டன. கெய்ன்ஸ் திட்டம் (இவ்வாறுதான் அது அழைக்கப்பட்டது) உலக முழு மைக்கும் பொருந்தும், "ஓர் இன்றியமையாத பாங்குக் கோட் பாட்டினை (the essential principle of banking)", வகுத்தது. வரவையும் (credits) செலவையும் (debits) சமநிலையாக வைத்திருப் பதே அந்தக் கோட்பாடாகும். இதனையொட்டி ஆரம்பிக்கப் போகும் பன்னாட்டுத் தீர்வக ஒன்றிப்பில் (international clearing union) அங்கம் வகிக்கும் ஒவ்வொர் அங்கத்தினர் நாட்டிற்கும் (member state) 'அதிகப்பற்று வசதிகள் (overdraft facilities) வழங்கப்படுவதாக இருந்தது. எனவே ஒவ்வொரு நாட்டிற்கும், உலகத்தின் மற்ற நாடுகளுடன் அதற்குள்ள பொருளாதாரத் தொடர்புகளை ஒரு சமநிலைக்குக் கொண்டுவரும் நோக்கத்துடன், ஒரு குறிப்பிட்ட அளவு சாதனங்களும் (resources) ஒரு குறிப்பிட்ட இடை நேரமும் (interval of time) கொடுக்கப்படுகின்றன!

தற்போது தீர்க்கப்பட வேண்டிய பிரச்சினை யாதெனில், மாற்று அங்காடியில், எந்த சமயத்திலும் செலாவணியின் அளிப்பில் அதிகரிப்பு இருக்கலாம். இந்த அதிகரிப்பு எந்த மாற்றுவீதத்தில் கொண்டுவரப்படுகிறதோ, அதே வீதத்தில் செலாவணிக்கான தேவையை நிலையானதாக்கும் நோக்கத்துடன் கொண்டுவரப்படும் மாற்றுவீதத்தில் கொண்டுவரப்படுகிறது. அல்லது, இதை வேறு விதமாகக் கூறவேண்டுமெனில், மாற்று (conversion) செய்வதற் காக கொண்டுவந்து கொடுக்கப்படும் உள்நாட்டுச் செலாவணி களை மாற்றுவதற்கு ஒன்று அதிகமான அயல்நாட்டுச் செலா வணிகள் கிடைக்கலாம் அல்லது பற்றாக்குறையாகவு மிருக்கலாம். இதில் பிரச்சினை யென்னவெனில் இவ்வாறு உபரியாக அல்லது பற்றுக்குறையாகவுள்ள நிலுவைகளை (balances) வைத்துக்கொண்டு என்ன செய்வது என்பதே. தற்போது, உலக முழுவதிலும் உள்ள உபரிகளின் மொத்தமும் பற்றாக்குறைகளின் மொத்தமும் கண்டிப் பாக சமமாக இருக்கவேண்டும்—ஒவ்வொரு பேரமும், ஒரு செலா வணியை மற்றச் செலாவணிக்காக மாற்று செய்வதை ஏற்படுத்து வதிலிருந்து, இது இப்படித்தானிருக்க வேண்டும். உலக முழுவது மல்லாமல், பல நாடுகளைக் கொண்ட ஒரு தொகுதி (groups)யி லுள்ளும், அந்தத் தொகுதியைச் சார்ந்த அங்கத்தினர்களிடமுள்ள உபரிகளின் மொத்தம் (total of the surpluses) அந்தத் தொகுதியின் மற்ற அங்கத்தினர்களின் (other members of the group) பற்றுக் குறைக்குச் சமமாக இருக்கவேண்டும். கெய்ன்ஸ் திட்டத்தில்

இரண்டு கருத்துக்கள் அடிப்படையானவைகளாக இருக்கின்றன. முதலாவது, இவ்விதமான நிலுவைகள் அங்கத்தினர் நாடுகளிடை.யே (between member states), ஒரு நாட்டினுள் அங்கத்தினர் பாங்குகளுக்கிடையே இருக்கும் நிலுவைகள் (balances) எவ்வாறு தீர்த்துக்கொள்ளப் படுகின்றனவோ, அவ்வாறே தீர்த்துக்கொள்ளப் படவேண்டும் (cleared up) என்று கூறப்பட்டது. அதாவது ஒவ்வோர் அங்கத்தினரும் எவ்வளவு கொடுக்கவேண்டிய தென்பதையும் அவருக்குச் சேரவேண்டியது எவ்வளவு என்பதையும் கணக்கிட்டு பாக்கியுள்ள தொகையை கடனாளிகள், தங்களின் கடன் ஈவோருக்கு (creditors) அவர்களது பெயருக்கு செக்குகளை எழுதித்தந்து, பணத்தை ஒரு மைய நிலையத்தினின்றும் (central institution) பெறும்படி செய்வர். இந்த மைய நிலையம் மைய பாங்குகளின் மையபாங்காக (central bank of central banks) அல்லது பாங்கர்களுக்கெல்லாம், ஒரு பாங்கர்களின் பாங்காக (bankers' bankers' bank) இருக்கும்.

இந்தத் தீர்வு செக்குகளுக்கான (clearing cheques) பணம் எந்தச் செலாவணியில் பெறப்படுகிறது? அச் செலாவணிகள் டாலர்களாகவோ அல்லது பொன்னாகவோ இருக்க முடியாது. ஏனெனில் இவை யிரண்டிலும் எதையேனும் அளிப்பதற்குக் கடனாளிகளின் கையில் ஒன்று மில்லாமல் இருக்கலாம். கெய்ன்ஸ் திட்டத்தில் இது இரண்டாவது அம்சமாகும். மையநிலையம் (central institution) அல்லது பன்னாட்டுத் தீர்வு ஒன்றிப்பு (international clearing union) தனக்கெனச் சொந்தமாக ஒரு செலாவணியை வைத்துக்கொள்ள வேண்டும். தீர்வுச் செக்குகளில் இந்தச் செலாவணிதான் குறிக்கப்பட வேண்டும். இத் தனிப்பட்ட செலாவணியை 'பாங்கோர்' (bancor) என்று அழைக்கலாமென்றும் கூறப்பட்டது. இந்த 'பாங்கோர்' என்றும் செலாவணி, தீர்வு ஒன்றிப்பின் (clearing union) கணக்குப் புத்தகங்களில் இடம் பெறுவதைத் தவிர வேறு எங்கும் காணப்படமாட்டாது. தீர்வுச் செக்குகளைப் (clearing cheques) பெற விழையும் நாடுகளுக்காகத் தீர்வு ஒன்றிப்புச் (clearing union) சிருட்டி செய்யும் அதிகப் பற்றுகள் (over drafts) மூலம் இந்தச் செலாவணி ஏற்பட்டுள்ளது.[1] இந்தச் செலாவணி, உபரி நிலுவைகளை (surplus balances) வைத்திருக்கும் நாடுகளின் வைப்புக் கணக்குகளுக்கு (deposit accounts) செலுத்தப்படும் செல்லு

[1] நாடுகள், பொன்னைக் கொடுத்து இந்த பாங்கோர் (bancor) செலாவணிகளை அடைய வழிசெய்ய வேண்டுமென்றும் குறிப்பிடப்பட்டது. ஆனால் இது ஒரு சிறிய நிபந்தனை (provision) ஆதலால் ஈண்டு மிக எளிதாகக் கூறப்பட்டுள்ள இவ்விளக்கத்தை அவ்வளவாகப் பாதிப்பதில்லை.

களுக்கு மாத்திரமே பயன்படுத்தப்படக் கூடும். 'பாங்கோரின்' (bancor) ஓர் அலகின் மதிப்பு (value of one unit) இத்தனை அவுன்சுகள் பொன் என்று கூறப்பட்டது. ஆனால், பொன்னுக்கும் பாங்கோருக்கும் உள்ள இந்தத் தொடர்பு நிரந்தரமானதாக (permanent) இருக்க வேண்டுமென்றுசிந்திக்கப்படவில்லை.

பாங்கு முறையோடு ஒப்புமை செய்து குறைபாடற்று விளங்கியது. ஒரு தனிப்பட்ட நபருக்குத் தமது சொந்தக் கணக்கில் பற்றுக்குறை ஏற்படும்போது அவர் பாங்கிற்குச் சென்று அதிகப் பற்றிற்கு (over draft) ஏற்பாடு செய்கிறார்—அதாவது பாங்கு அவருக்குக் கொஞ்சம் பணத்தைச் சிருட்டித்துத் தருகிறது. அவர் பணம் பெறும் செக்குகள், அவருக்குக் கடன் கொடுத்தவர்களின் கணக்கில் (வரவாக) வைப்புகளாக மீண்டும் தோன்றுகின்றன. கெய்ன்ஸ் திட்டம் (Keynes plan) கூறுவதும் இதனையொத்தே உள்ளது. ஒரு நாடு தனக்கு ஏற்பட்டுள்ள பற்றுக்குறை (deficit) யைச் சமாளிக்க வேண்டிய நிலையிலிருந்தால், 'பாங்கோர்' (bancor) சிருட்டிக்கப்படும். கடன் கொடுத்தவர்கள் இந்த 'பாங்கோரை'ப் பெற்றுக்கொள்வதால், கடன் வாங்கியவர்கள் தங்கள் கடனை எளிதில் அடைத்துவிட முடிகிறது. அதாவது, கடன் கொடுத்தவர்கள் பாங்கோருக்கு மாற்றாக தங்களது சொந்த செலாவணிகளைத் தருகின்றனரென்பது இதனால் விளங்குகிறது. பன்னாட்டுத் தீர்வு ஒன்றிப்பிற்கும் (international clearing union) சாதாரண பாங்கிற்கும் உள்ள முக்கியமான வேறுபாடு என்னவெனில், பன்னாட்டுத் தீர்வு ஒன்றிப்பு தன்னிடமுள்ள வைப்புகள் எதற்கும் 'ரொக்கம்' கொடுக்க வேண்டியதில்லை. பன்னாட்டுத் தீர்வு நிலுவைகளுக்குப் பணம் கொடுப்பதற்கு மட்டுமே ரொக்கம் தேவைப்படும். ஒன்றிப்பின், பற்று வரவுகள் எப்போதுமே சமமாக இருக்கவேண்டுமென்று விளக்கத்தில் கூறப்பட்டுள்ளது.

எனினும், பற்றுக்குறையை உடைய நாடுகள் காலவரையின்றி தங்களது அதிகப் பற்றுகளை (overdrafts) அதிகரித்துக் கொண்டே செல்லலாமென எதிர்பார்க்கப் படவில்லை. ஆரம்பத்தில், ஐ.ஸி.யூ. (பன்னாட்டுத் தீர்வு ஒன்றுப்பு) வினிடம் கடன் வாங்கியவர்கள் (debtors) தாங்கள் வாங்கியுள்ள அதிகப் பற்றுகளுக்கு ஆண்டொன்றுக்கு ஒரு சதவீதம் கட்டணம் செலுத்த வேண்டியவர்களாக இருந்தனர். அதேபோன்று கடன் கொடுத்தவர்கள்—அதாவது ஐ. ஸி. யூவின் வைப்பாளர்கள்—தங்களது வைப்புகளின் தொகைகளுக்கும் அதே அளவு கட்டணத்தைச் செலுத்தவேண்டியவர்களாக இருந்தனர். இத்தகைய யொழுக்கமற்ற (unorthodox) நோக்கத்தின் குறிக்கோள் என்னவெனில்,

செலாவணிகளின் சமன்கேடுகளுக்கு 'கடனாளி நாடுகளைப் போன்றே 'கடன்கொடுக்கும்' நாடு என்றழைக்கப்படும் நாடும் பொறுப்புடையது என்பதை வலியுறுத்துவதற்காகவே யாகும். (அதாவது செலாவணியை குறைமதிப்புச் செய்வது எவ்வாறு இயலுமோ அவ்வாறே மிகை மதிப்புச் செய்வதும் சாத்தியமாகும்). எனவே இச்சமன்கேடுகளை, சரியான வீலைக்குக் கொண்டுவர வேண்டிய பொறுப்பு இரு நாடுகளுக்குமே உண்டு. மேலும், ஒவ்வொரு நாட்டின் அதிகப் பற்றும் மொத்த அளவில் (total amount) குறைக்கப்பட வேண்டியதா யுள்ளது. ஒவ்வொரு நாட்டிற்கும், நாட்டின் இறக்குமதி ஏற்றுமதி அளவில் 75 சதவீதம் பங்களவு (Quota) கொடுக்கப்பட வேண்டுமென்று கூறப்பட்டது. இந்த ஏற்றுமதி இறக்குமதி அளவு, போருக்கு முன்னுலுள்ள மூன்றாண்டுகளில் அந்த நாட்டின் ஏற்றுமதி இறக்குமதி அளவுகளின் சராசரியைக் கணக்கிட்டு நிர்ணயிக்கப்பட்டது. ஒரு நாடு எந்த ஓர் ஆண்டிலும் தனது பங்களவில் கால்பங்கிற்குமேல் அதிகப் பற்றுப் பெறக்கூடாது.[1] அதனுடைய அதிகப்பற்று (overdraft) அதனுடைய பங்களவில் (quota) பாதியை அடையுமானுல், ஐ. சி. யு அதனுடைய செலாவணியை மதிப்புக் குறைப்புச் (devalue) செய்யவும் அல்லது, அதன் மூலதன பேரங்களின்மீது மாற்றுக் கட்டுப்பாட்டை (exchange control) விதிக்கவும் (அப்படியில்லையெனில், ஏற்கெனவே இத்தகைய கட்டுப்பாடு விதிக்கப்பட்டிருக்க வேண்டும்) கோரும். நாட்டின் அதிகப்பற்று (overdraft) இன்னும் அதிகமானுல், 'நிலைமையைச் சீர்படுத்த நடவடிக்கைகளை எடுக்கும்படி அது அழைக்கப்படலாம். இரண்டாண்டு காலத்திற்குள் அது மிகுபற்றைக் (debit balance) குறைத்துக் கொள்ளத் தவறினுல், ஐ.சி.யுவின் ஆளுங்குழு (Governing body) அதைப் பணம் செலுத்தத் தவறிய நாடாகக் (defaulter country) கருதி அதன் கணக்கிலிருந்து பணம் பெறுவதற்கு இனிமேல் அது தகுதியற்றதென அறிவித்து விடலாம். இதைப்போலவே நாட்டின் வரவு இருப்பு (credit balance) அதனுடைய பங்களவில் (quota) பாதிக்கு மேல் அதிகரிக்குமானுல் ஆளுங்குழுவினிடம் (Governing body), தான் என்ன பொருத்தமான நடவடிக்கைகளை எடுக்கவேண்டுமென்று (அதாவது உள்நாட்டுச் செலாவணிப் பெருக்கத்தை உண்டுபண்ணுதல், அதனுடைய செலாவணியை மேல்நோக்கி மறுமதிப்புச் செய்வது, சுங்கவரிகளைக் குறைத்தல் அல்லது மற்ற நாடுகளுக்கு நெடுந்தவணைக் கடன்களைக் கொடுத்தல் ஆகியவை

[1] பன்னுட்டுப் பணநிதிக்காக கடைசியாக ஒப்புக்கொள்ளப்பட்ட புள்ளி விவரங்களுடன் ஒப்பிடும்போது, நாட்டின ஏற்றுமதிகளிலும (exports) இறக்குமதிகளிலும் (imports) (போருக்கு முந்திய சராசரி ஆண்டில்) 75 சதவீதத்தில் கால் பங்கு என்று குறிப்பிடப்பட வேண்டும். கிரேட்பிரிட்டனுக்கு இந்தத் தொகை ரூ300 மில்லியன் அளவில் கிடைக்கும்படி இருந்தது.

களை உள்ளிட்ட நடவடிக்கைகள்) விவாதிக்கலாம். (ஆனால் அதனுடைய முடிவான தீர்மானத்தை அதுவே முடிவு செய்து கொள்ளலாம்).

கெய்ன்ஸ் திட்டத்தின் (Keynes plan) அடிப்படையான இரண்டு கோட்பாடுகள் என்னவெனில் கொடுபடாமல் இருக்கும் நிலுவைகளை நேர் செய்யும் பிரச்சினையைத் (the problem of settling outstanding balances) தீர்ப்பதற்கு 'கூடுதலான' (additional) 'பன்னாட்டுப் பணத்தைச் (international money) சிருட்டி செய்யவேண்டு மென்பதும், கடனாளியும்' (debtor) 'கடன் ஈவோரும்' (creditor) சமநிலைக்கு (equilibrium) ஊறு செய்பவர்களாக (disturbers) அநேகமாக ஒன்றாகவே கருதப்படவேண்டு மென்பதுமாம். ஐக்கிய அமெரிக்காவில் இந்த இரு கோட்பாடுகளுமே செல்வாக்கைப் பெறவில்லை. போருக்குப் பின்னருள்ள உலகத்தில் (post-war world) ஐக்கிய அமெரிக்கா மிகப்பெரிய கடன் ஈவோனாக (creditor) இருக்கப்போவதும், கிரேட்பிரிட்டன் மிகப் பெரிய கடனாளியாக இருக்கப்போவதும்[1] ஏற்கெனவே நன்றாகத் தெரிந்திருந்தபடியால் கடனாளி—கடன் ஈவோன் உறவு முறைகளில் (debtor-creditor relationships) புதுமையாக உள்ள இந்த சமத்துவமாக நடத்தப்படும் கோட்பாட்டை (principle of equality treatment) ஏற்பதற்கு அமெரிக்கா தயங்கியது. மேலும், கடன் ஈவோர்கள் எப்போதுமே கடனாளிகளின் பளுவைக் குறைப்பதற்காகப் புதிய பண அளிப்புக்களைச் சிருட்டி செய்யும் திட்டங்களை ஐயுறுகின்றனர். இவ்வாறு சிருட்டி செய்த பணத்தில் கடனாளிகள் வாங்க இயலும் உண்மைச் செல்வத்தை (real wealth) யார் அளிப்பது என்னும் வினாவினை அவர்கள் கேட்பது பொருத்த முடையதாகும். கடன் ஈவோர்களே (creditors) இதனை அளிக்கின்றார்களென்னும் விடையினை அவர்கள் ஐயுறுகின்றனர். (அவ்வாறு ஐயுறுவது தவறாக இருந்தபோதிலும்) கெய்ன்ஸ் கீழ்க்கண்ட வாதத்தை நிகழ்த்துகிறார்: நடைபெறவிருக்கும் திட்டத்தில் எந்த ஒரு நாடும், தற்சமயம் தான் பயன்படுத்தத் தேர்ந்தெடுக்காத, தனது ஆளுகையின் கீழுள்ள சாதனங்கள் (resources), எதுவும் பயன்படுத்தப் படுவதினின்றும் (பிறநாடுகளிலிருந்து பண்டங்களை வாங்குவதற்கு) பயன்படுவதனின்றும் திரும்பப் பெறப்படவில்லை என்னும் நிகழ்ச்சியால், தீங்கிழைக்கப் படுவதில்லை......

1 'கடனாளி' (crediton) 'கடன் ஈவோன்' (debtor) என்று பரந்த கருத்தில் குறிப்பிடுவது தங்களுடைய பன்னாட்டுச் செல்லுகளில (international payments) உபரி (surplus) அல்லது பற்றாககுறையை உடைய நாடுகளையாகும். பத்தாவது அத்தியாயத்தில அத்தகைய நாடுகளைக் குறிப்பிடுவதற்கு இச்சொற்கள் அவ்வளவு சிறந்தனவல்ல; ஆயினும் இத்தகைய ஓர் எச்சரிக்கையுடன் இசசொற்களைத் தற்சமயம் கையாளுவதில தவறில்லை.

தான் எவ்விதத்திலும் பயன்படுத்தாது வைத்திருக்கும் தனது பாங்கு இருப்புகள், வேறு யாருடைய தொழில் நிறுவனத்திற்காவது பயன்படுத்தப்படுவதனுல் உள்ளூரிலிருக்கும் பாங்கின் எந்த வைப்பாளியும் (depositor) தீமை அடைவதில்லே. தற்கால தொழில் வளர்ச்சியை தேசீய பாங்கு முறைகளின் வளர்ச்சி (development of national banking systems) எவ்வாறு பணவாட்டத்தின் அமுக்கத்தைச் (deflationary pressure) சரிக்கட்ட (offset) பயன்பட்டதோ-இத்தகைய பணவாட்டத்தின் அமுக்கம் தற்காலத் தொழில் வளர்ச்சியையே தடுத்திருக்கக்கூடும்—அதுபோல, இத்தகைய் கோட்பாட்டை பன்னுட்டுத் துறையில் (international field) கடைப்பிடித்தால் சுருக்கத்தின் அமுக்கத்தை (contractionist pressure) சரிக்கட்டலாமென நாம் நம்பலாம். இந்தச் சுருக்கத்தின் அமுக்கம் சரிக்கட்டப்பட வில்லேயென்ருல், சமுதாய அமைப்பில் கேடும் (social disorder) நவீன உலகத்தின் எதிர் கால நம்பிக்கைகளில் பெருத்த ஏமாற்றத்தையும் (disappointment) இது அதிகரிக்கக்கூடும். பணக்குவிப்பு (hoarding) இருக்குமிடத்தில் அதற்குப் பதிலாகக் கடன் சாதனத்தைக் (credit mechanism) கொண்டுவருதல், பன்னுட்டுத் துறையில், உள்நாட்டுத் துறையில் ஏற்கெனவே நடத்திய, கல்லிலிருந்து நார் உரிக்கும் விநோதம் மறுமுறையும் செய்யப்பட்டிருந்திருக்கும். ஆனுல் கெயின்சின் வாதங்கள் வாஷிங்டனில் ஏற்றுக்கொள்ளப் படவில்லே. இந்த நூலின் கெயின்சின் வாதம் சரியானது என்பது இதை எழுதும் ஆசிரியரின் நம்பிக்கை. கெயின்சின் வாதங்களே மறுத்தமைக்கு உலகம் மிகவும் வருந்தப்போகிறதென்று இந்நூலின் ஆசிரியர் கருதுகிருர்.

ஆனுல், கெயின்சின் வாதங்கள் முழுமையும் மறுக்கப்பட வில்லே. ஐக்கிய அமெரிக்கா, கானடா அரசாங்கங்கள் தங்களின் வேறுவிதமான திட்டங்களே சமர்ப்பித்த பிறகு, 1944ம் ஆண்டு ஜுலே மாதத்தில் பிரெட்டன் உட்ஸில் நியூ ஹாம்ஷையரில் நடைபெற்றதொரு பன்னுட்டு மாநாட்டில் (an international conference) கெயின்சின் வாதங்கள் செல்வாக்குப் பெற்றன. இந்த மாநாட்டின் விளேவாக, பன்னுட்டுப் பணநிதி (International Monetary Fund), புனரமைப்பும் வளர்ச்சிக்குமான பன்னுட்டுப் பாங்கு (International Bank for Reconstruction and Development) ஆகிய இரு நிறுவனங்கள் (institutions) தோன்றின. இந்தப் பாங்கின் நோக்கம், தங்களின் சொந்த வருவாயைக் கொண்டு தங்களின் புனரமைப்பு (reconstruction) அல்லது வளர்ச்சி (development) இவற்றிற்கான பணத்தைப் போட இயலாத நாடுகளுக்கு நெடுந்தவணேக் கடன் களேக் கொடுக்க உதவுவதே. இந்த பாங்கைப்பற்றி மேலும்

சிலவற்றை அடுத்த அத்தியாயத்தில் கூறுவோம். தற்போது நாம் பன்னாட்டுப் பணநிதியைப் பற்றியே அதிகமாக ஈடுபட்டிருக்கிறோம்.

பன்னாட்டுப் பண நிதியின் முக்கிய நோக்கம், கெயின்ஸ் அளித்த ஐ. சி. யு. திட்டத்தின் நோக்கத்தைப்போன்று, பற்றுக் குறையாக (deficit) உள்ள நாடுகளுக்கு அவைகள் அப்பற்றுக் குறையை ஈடுசெய்து கொள்ளும் பொருட்டு அயல்நாட்டுச் செலாவணிகளை அளிப்பதே. ஆனால், 'பன்னாட்டுப் பணம்' (International money) எதுவும் 'சிருட்டிக்கப்'படவில்லை. இதில் பங்கு பெறும் ஒவ்வொரு நாட்டிற்கும் ஒரு பங்களவு (quota) ஒதுக்கப் பட்டது. இந்தப் பங்களவுகளின் அளவுகள் ஒவ்வொரு நாட்டிற்கும் ஒவ்வொரு விதமாக இருந்தது: ஐக்கிய அமெரிக்காவிற்கு \$ 2,750 மில்லியனாகவும், ஐக்கிய அரசாங்கத்திற்கு (United Kingdom) \$ 1,300 மில்லியனாகவும், லிபெரியாவிற்கும் (Liberia) பனாமாவிற்கும் (Panama) \$ 500,000 ஆகவும் இருந்தது (ஐக்கிய சோவியட் சோஷலிச குடியரசுக்கு \$ 1,200 மில்லியன் பங்களவு ஒதுக்கப்பட்டது; ஆனால் அது நிதியிலோ அல்லது பாங்கியிலோ அப்போது சேரவில்லை). இவைகளின் கணக்குகள் யாவும் டாலர் களில்தான் வைக்கப்பட்டன; புதியதாக ஒரு பன்னாட்டுக் கணக் கலகு (international unit of account) ஒன்றும் ஏற்படுத்தப்படவு மில்லை. இந்த நிதி ஏற்படுத்தப்பட்ட தொடக்கத்தில் ஒவ்வொரு நாடும் தனது பங்களவை (quota) ஒரு பகுதி பொன்னாகவும் ஆனால் பெரும்பகுதி தனது சொந்தச் செலாவணியிலும் செலுத்திவந்தன. எனவே இந்த நிதி (Fund) பவுண்டுகள் (pounds), டாலர்கள், ஃபிரான்குகள் (France), கில்டர்கள்(guilders) முதலிய செலாவணி களின் இருப்பை கணிசமான அளவிற்குப் பெறலாயிற்று—அதாவது பல்வேறு நாடுகளில் மைய பாங்குகளில் (Central Banks) அதன் வரவுக் கணக்கில் தொகைகளைப் பெற்றிருந்தது.[1] தேவைப்படும் நாடுகளுக்கு இந்த நிதிகளிலிருந்தே பணம் வழங்கப்பட்டது. ஆனால், இந்நிதி தனது வருவாய்களிலிருந்து (resources) பணத்தைக் கடன் கொடுப்பதில்லை யென்பது இங்கு முக்கியமாகக் கவனிக்கவேண்டிய தொன்றாகும். ஒருநாடு தனது கணக்கைச் சரிசெய்து கொள்ளுவதற்கு அயல்நாட்டுச் செலாவணிகள் தேவைப்படும்போது, அது 'நிதி'யினிடம் (Fund) சென்று தேவைப்படும் செலாவணிகளை வாங்குகின்றது. தனது சொந்த செலாவணியைத் (அதாவது ஏற்கெனவே செலுத்தியுள்ள செலா

1 அல்லது தற்காலிகமாக அந்த நாட்டின் அரசாங்கத்திற்கு, எந்தச் சமயத்திலும் பணத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்ளும் ஒப்பந்தப்படி பணத்தை மீண்டும் கடன் கொடுத்தது.

வணிக்குக் கூடுதலாக) தான் பெறும் செலாவணிகளுக்கு மாற்றாக அளிக்கிறது. இந்த நிதிக்கும் (Fund) விண்ணப்பித்துக்கொள்ளும் நாட்டிற்குமிடையே நடக்கும் இந்த பேரம் (transaction) ஒரு செலாவணியைக் கொடுத்துவிட்டு மற்றொரு செலாவணியைப் பெறும் ஒரு மாற்றாகவே (exchange) உள்ளது. எடுத்த எடுப்பில், அங்காடியில் உள்ள தேவை, அளிப்பு ஆகியவற்றிற்கு இப்பேரம் சமமான கூடுதலை (equal addition) உண்டுபண்ணுவதைப் போன்றும், எனவே விண்ணப்பத்திற்குக்(application) காரணமான சமன்கேட்டைத் (disequilibrium) திருத்த முடியாது போன்றும் தோன்றும். ஆனால் உண்மையில் அப்படியில்லை. உதாரணமாக டாலர்களை வேண்டி நிற்கும் பிரிட்டன் பவுண்டுகளை மாற்றாகக் கொடுத்துவிட்டு டாலர்களை நிதியிலிடமிருந்து பெறுகிறதென வைத்துக்கொள்வோம். மாற்று அங்காடியில் அப்போது டாலர்கள் பயன்படுத்தப்படும். இவ்வாறு டாலர்களின் பயன் படுத்தப்படுதலானது, அவ்வங்காடியில் தேவை அளிப்பு ஆகிய இவ்விரண்டிற்கு மிடையே சமன்பாட்டை ஏற்படுத்துகிறது. ஆனல், அதே நேரத்தில் பவுண்டுகள் (pounds)—அவைகள் தேவைப்படும் வரையில்—இங்கிலாந்து பாங்கில் நிதியின் கணக்கில் (Fund's account) பயன்படுத்தப்படாது தேங்கியிருக்கும்.

எனினும், கடன் தொகையை ஒரு நாடு பெறுதுபோனலும், நிதியின் வாய்ப்பு நலன்களைப் பயன்படுத்துமானல், அதற்காக அதனிடம் கட்டணம் வசூலிக்கப்படுகிறது. இந்தக்கட்டணம் கடன் தொகையின் அளவைப் பொறுத்தும் (அதற்காக ஒதுக்கப் பட்ட பங்களவைப் பொறுத்தும்), அதன் கால அளவினைப் பொறுத்தும் படிப்படியாக மாறுகின்றன. மேலும், இவ்'வட்டிக்' கட்டணங்கள் (interest charges) பொன்னல் செலுத்தப்பட வேண்டும். சுருக்கமாகச் சொல்லப்போனல், கடன் பெறும் நாடுகள்' (debtor countries) நிதியை மிகக் குறைந்த அளவிற்கும் மிகக் குறுகிய காலத்திற்கும் பயன்படுத்தவேண்டு மென்பதற் காகவே இத்தகைய தூண்டுதல் (incentive) ஏற்படுத்தப்பட் டிருக்கிறதென்று கூறவேண்டும். இப்படி யிருந்தும், ஒரு நாடு நிதியிலிருந்து (Fund) அயல்நாட்டுச் செலாவணிகளை விடாப் பிடியாக அதிக அளவில் கடன் வாங்கி, அவற்றை நீண்ட காலத் திற்கு வைத்துக்கொள்ளுமானல், அந் நாட்டிற்குத் தண்டனை விதிக்கும் பொருட்டு அதிக வட்டி வீதங்களை நிதி வசூல் செய்யும். இதற்கு எதிரிடையாக, நிதியானது ஒரு நாட்டின் செலாவணியை வைத்திருத்தலானது குறைந்து மறைய ஆரம்பிக்கும்போது, அந்நாட்டிற்குக் கட்டணம் விதிக்க எந்தவித சட்டமும் இடந்தருவ தாக இல்லை; ஆனல் அந்நாடும் நிதியும் இது சம்பந்தமாக கலந்

தாலோசிக்கும்படி சட்டம் பணிக்கிறது. நிலைமையைச் சரிசெய்ய எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்கப்படாவிட்டால், சம்பந்தப் பட்ட நாட்டின் செலாவணியை அரிதான செலாவணியென (scarce currency) நிதி முறைப்படி விளம்பரப்படுத்தலாம். நாம் இன்னும் சற்று நேரத்தில் குறிப்பிடப்போகிற சில குறிப்பிட்ட விளைவுகள் (certain consequences), இவ் விளம்பரத்தால் ஏற்படும். ஆனால், நிதியானது 'கடன் ஈவோன்' நாட்டின்மீது செலுத்தும் ஆதிக்கம் 'கடன் பெறும்' நாட்டின்மீது செலுத்தும் ஆதிக்கத்தை விட மிகவும் பலம் குறைந்ததாகவே யுள்ளது. பரந்து நோக்கு மிடத்து, நிலைமையைச் சரிசெய்ய, பின்னர்ச் சொல்லப்பட்ட நாடே பெரிதும் எதிர்பார்க்கப்படுகிறது. எனவே, பிரெட்டன்உட்ஸ் திட்டம் கெய்ன்ஸ் பிரபுவின் கோட்பாடுகளுள் ஒன்றினுக்கு முற் றிலும் வேறுபட்டதாக உள்ளது. வேறொரு கோட்பாடு ஒன்றி னுக்கும் இத்திட்டம் வேறுபட்டதாகவே உள்ளது. அதாவது நிதியின் 'பெருக்க நோக்கத்தின்' பொருட்டு (expansionism) கடனாளிகளின் தேவை கூடுதலான பணச் சிருட்டிப்பால் (additional creation of money) சமாளிக்கப் படுகிறது. பிரெட்டன் வுட்ஸ் திட்டப்படி நிதியினால் அளிக்கப்படும் அயல்நாட்டுச் செலா வணி (foreign currency provided by the Fund) மேற்படி நோக் கத்திற்காக, ஏற்கெனவே செலுத்தப்பட்ட செலாவணியினின்றும் கொடுக்கப்படுவதால், சிருட்டிக்கப் படுவதில்லை யென்பதோடு (நிதியின் கணக்கிலிருந்து, செலாவணியைத் தேவைப்படுகின்ற நாட்டின் கணக்கிற்கு மாற்றப்படும்போது முடங்கிய வைப்புகள் இயங்கும் வைப்புகளாக மாறுகின்றன என்பது உண்மையாக இருப்பினும்), 'கடன் பெறும்' நாடு ('borrowing' country) இதற் கிணையாக தனது சொந்தச் செலாவணியை அளிக்குமாறு கோரப் படுகிறது. பிரெட்டன்உட்ஸ் திட்டம் பெருக்கத்திற்கு (expansionism) எதிராகவே யுள்ளது.

நாடுகள் தங்களது செலாவணிகளின் மாற்றுமதிப்புகளை (exchange values) மாற்றிக்கொள்ள பிரெட்டன்உட்ஸ் திட்டத்தில் சட்டங்கள் இடமளிக்கின்றன. நிதி ஏற்படுத்தப்பட்ட தொடக் கத்தில் அங்கத்தினர்கள் தங்களது செலாவணிகளின் முகப்பு மதிப்பை (par value) ஒரு பொதுவான இனமாகிய (denominator) பொன் அல்லது ஐக்கிய அமெரிக்காவின் டாலரின் மதிப்பில் உணர்த்தின. எனவே, பொன்னானது இன்னும் செலாவணிகளின் ஒப்பு மதிப்புகளை நிர்ணயம் செய்யும் தனது வேலையைத் தொடர்ந்து தன்னகத்தே வைத்துக்கொண்டிருந்தது. ஆனால் அது மதிப்பின் அளவையாக (standard of value), ஒரு பூரண அதிகாரம் பெற்ற தொரு அரசனைப்போல், தற்போது இருக்கவில்லை. கணக்கிடு

வதற்குப் பயன்படும் ஒரு தேவையான சாதனமாகவே உள்ளது. தற்காலத்தில், ஒரு செலாவணியின் மதிப்பை அளவிடும் உண்மையான அளவுகோல், அச் செலாவணி எத்தனை டாலர்களை மாற்றாகப் பெறுகிறதென்பதே. செலாவணிகளின் முகப்பு மதிப்பில் ஏற்படுத்தப்படும் மாற்றங்கள் சம்பந்தமான ஒப்பந்த (agreement) விதிகளை கீழ்க்கண்டவாறு சுருக்கிக் கூறலாம்:

(1) 'அடிப்படையான சமன்கேட்டை'த் திருத்திச் சரி செய்வதற்கே யல்லாது ஒரு அங்கத்தினர் நாடு செலாவணியின் முகப்பு மதிப்பில் மாற்றத்தைக் கொண்டுவரக் கூடாது. நிதியைக் கலந்தாலோசித்த பிறகே அது அவ்வாறு செய்யலாம்.

(2) தொடக்கத்திலுள்ள முகப்பு மதிப்பில் பத்துச் சதவீதத்திற்கு மேற்படாது செய்யப்படும் மாற்றங்களுக்கு நிதி (Fund) மறுக்காது.

(3) 10 சதவீதத்திற்குமேல் ஆனால் 20 சதவீதத்திற்கு மேற்படாமல் தொடக்கத்திலுள்ள முகப்பு மதிப்பை (initial par value) மாற்றவேண்டுமென்று கொண்டுவரப்படும் ஏற்பாட்டினை நிதியானது ஒப்புக்கொள்ளலாம். அல்லது மறுக்கலாம். ஆனால் அதன் முடிவை ஏற்பாடு கொண்டுவரப்பட்ட 72 மணி நேரத்திற்குள் அறிவிக்கவேண்டும்.

(4) கொண்டுவரப்படும் மாற்றம் (proposed change) 20 சதவீதத்திற்கும் அதிகப்படியாக இருக்குமானால் ஒரு கால வரையறை ஏதுமின்றி ஒப்புக்கொள்ளலாம் அல்லது மறுக்கலாம்.

(5) 'அடிப்படையானதொரு சமன்கேட்டைத் திருத்தி அமைப்பது தனக்குத் திருப்தியளிப்பதா யிருப்பின்' நிதி அதற்குச் சம்மதிக்கவேண்டும். மேலும், எது அடிப்படையான சமன்கேடு (fundamental disequilibrium) என்பதைத் தீர்மானிக்கும்போது, நிதியானது மாற்றத்தைச் செய்ய விழையும் நாட்டின் உள்நாட்டு சமூக அல்லது அரசியல் கைக்கோளுக்கு (domestic and social or political policies) எந்த விதமான மறுப்பும் செய்தல் கூடாதென விதியில் கண்டுள்ளது—அதாவது அந்நாட்டில் கூலிகள் (wages) மிக விரைவாக உயர்த்தப்பட்டுள்ளன என்றோ, செலாவணியின் மதிப்புக் குறைப்பிற்கு (devaluation) அடுத்ததாக உள்ள வழியாக (alternative) அக் கூலிகள் குறைக்கப்பட வேண்டும் என்றோ, நிதி (Fund) கூறக்கூடாது.

இந்த விதிகள் யாவும், நாடுகள் தங்களின் செலாவணிகளின் மாற்று மதிப்பை (exchange values) மாற்றிக்கொள்வதற்குத் தாராளமாக இடமளிக்கின்றன என்பது ஈண்டு நோக்கத்தக்கது.

கடைசியாக, செலாவணிகளின் நற்பண்பு (good conduct) என்று அழைக்கப்படுவது சம்பந்தமாகவும் கூறுகின்ற பலவிதிகள் இவ்வுடன்படிக்கையில் இடம்பெற்றுள்ளன. நிதியில் அங்கம் வசிக்கும் ஒவ்வொரு நாடும் தனது எல்லையில் தனது செலாவணிக்கும் மற்றச் செலாவணிகளுக்கு மிடையே, அதிகார பூர்வமான மாற்றுவீதத்திற்கும் (அதாவது, இரு நாடுகளுக்கிடையுள்ளதும் நிதியினிடம் ஆரம்பத்தில் கூறப்பட்டதுமான முகப்பு மதிப்புகளின் விகிதம் அல்லது நிதியின் சம்மதத்தைப் பெற்றுப் பின்னர் மாற்றி அமைக்கப்பட்ட விகிதம்) ஒரு சதவீதத்திற்கு அதிகமான மாற்று வீதங்களில் நடைபெறும் மாற்றுகளைத் (exchanges) தடை செய்யும். இது, பல்வேறு வகையான பேரங்களுக்குப் பல்வேறு வகையான மாற்றுவீதங்களைக் கையாளுகின்ற நாடுகளின் தந்திரத்தை ஒடுக்கவல்லது. இதனுடன், போரையடுத்த இடை மாறுபாட்டுக் காலத்திற்குப் (post-war transitional period) பிறகு (இந்தக் கால அளவை இயன்ற அளவு அவைகள் குறைத்துக் கொள்வதாகச் சம்மதித்தன) நடைமுறைப் பன்னாட்டுப் பேரங்களுக்காகச் (current international transaction) செலுத்தப்படும் செல்லுகளின் மீது எந்தவிதமான தடையையும் விதிப்பதில்லை யெனவும் நிதியின் அங்கத்தினர் ஒப்புக்கொண்டனர். எனினும் இதற்கு முக்கியமான விதிவிலக்கு ஒன்று உள்ளது. நிதியினிடமுள்ள ஒரு குறிப்பிட்ட செலாவணி தீர்ந்துவிட்டபோதும், அச்செலாவணியை, நிதியானது அரிதான (scarce) செலாவணி என்று முறைப்படி விளம்பரம் செய்யும்போதும், மற்ற அங்கத்தினர் நாடுகள் அச்செலாவணியுடன் நடைபெறும் பேரங்களின் (transactions) மீது தடைகளை விதிக்கும். இதனை வேறு வழியில் விளக்கலாம். உதாரணமாக, ஐக்கிய அமெரிக்கா தொடர்ந்து தனது பேரங்களில் உபரியைக் (surplus) கொள்ளும் போதும், டாலர்கள் அரியனவாக ஆகிவிட்டன என்று அறிவிக்கப்படும்போதும், பிரிட்டிஷ் அரசாங்கம், பிரிட்டிஷ் குடிமக்கள் (British residents) நடைமுறைப் பேரங்களில் (current transactions) செல்லுகளைச் செலுத்துவதற்கு பிரஞ்சு ஃபிரான்குகளுக்கு மாற்றுக அல்லது அர்ஜென்டினா பீசோக்களுக்கு மாற்றுகப் பவுண்டுகளை தாராளமாகக் கொடுக்கலாம் என்று கூறும் அதே வேளையில் அவர்கள் டாலர்களுக்கு மாற்றுகப் பவுண்டுகளைக் கொடுக்க வேண்டியதில்லை யென்று சொல்லக்கூடும். இயல்பாக இது அமெரிக்க வாணிபத்திற்கு எதிராக செய்யப்படும் ஒரு மிகையான வேற்றுமை காட்டுதலே யாகும் (discrimination). இந்த அளவிற்கு அது 'கடன் ஈயும் நாட்டின்' மீது தனது ஆதிக்கத்தைச் செலுத்தி, அதனுடைய கணக்கை நேர் செய்யும்படி (balance its account) செய்கிறது. மூலதன பேரங்களின்மீது விதிக்கப்படும் தடைகளுக்

கான உடன்படிக்கையின்மீது எந்தவிதத் தடையுமில்லை. நிதியானது, ஓர் அங்கத்தினரின் செலாவணி வலுவிழந்துள்ளதெனக் கருதினால் அந்த அங்கத்தினரை அத்தகைய தடைகளை விதிக்கும்படி கோரலாம்.

எனவே இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் கூறப்பட்ட ஒரு பன்னாட்டுச் செலாவணி முறையின் (an international currency system) தேவைகளைப் பூர்த்தி செய்யும் திறமை மிக்க முயற்சியே பன்னாட்டுப் பணநிதி (International Monetary Fund) யாகும். நாடுகள் எல்லாச் சமயங்களிலும் (at all times) தங்களது செலாவணிகளின் மாற்றுமதிப்பை முற்றிலும் உறுதியாக வைத்துக் கொள்ளாமலேயே 'நிலைப்படுத்தும் குறுக்கீட்டை' (stabilizing intervention) கடைப்பிடிக்க இயலுமாறு இது துணை செய்கிறது. சிலவகை மாற்றுத் தடைகளுக்கான தேவையை இது ஒப்புக் கொள்கிறது. இவற்றுள் கிரமமான (legitimate) வகைகளை, தவறான வகைகளினின்றும் வேறுபடுத்திக் காட்டுவதற்கு ஒரு காரணத்தையும் அது அளிக்கின்றது. இவற்றையெல்லாம் எழுதுவதற்கு ஒரு சில மாதங்களுக்கு முன்புதான் இந்நிதி செயல்படுத்தப் பட்ட காரணத்தால், நடைமுறையில் அது எப்படி இயங்கிவரும் என்பதைத் தீர்மானிக்கச் சிறிதும் வாய்ப்பில்லாமல் போய்விட்டது. எனினும் இதன்மீது இருவகையான ஐயங்கள் (doubts) மிகக் குறுகிய காலத்திற்குள்ளாக எழுப்பப் படுகின்றன என்றும் கூற முடியாது. இதனைப்பற்றிய ஒரு ஐயம் ஏற்கெனவே யூகித்தறியப் பட்டது: அதாவது பற்றுக்குறையினால் சமன்கேட்டைக் கொண்டுள்ள நாடுகள் அச்சமன்கேடுகளைக் களையவேண்டுமென்று அவைகளின் மீது பொறுப்பைச் சுமத்துதல் சரியானதா அல்லது செயல் முறைக்கு உகந்ததா என்பது ஓர் ஐயப்பாடாகும். மற்றோர் ஐயப்பாடு நிதி நிகழ்த்தக் கூடிய பேரங்களின் (transactions) அளவு சம்பந்தப்பட்டதாகும். ஓர் அங்கத்தினர் நாடு நிதியிலிருந்து அயல் நாட்டுச் செலாவணி தனது பங்களவாகிய (quota) 25 சத வீதத்திற்குமேல் ஓராண்டில் பெறுதல் கூடாது. இதன்படி ஐக்கிய அரசாங்கம் எந்த ஒரு ஆண்டிலும் £ 81 மில்லியன் மதிப்புள்ள அயல்நாட்டுச் செலாவணிகளைப் பெறுதற்கு அனுமதிக்கப்படும். ஐக்கிய அரசாங்கம் (United Kingdom) 1946ஆம் ஆண்டு நடைமுறைக் கணக்கிற்குச் (current account) செலுத்திய தொகை £ 1,662 மில்லியனாகும். மேலும் நிதியானது தொகைக்கு ஏற்பவும் காலத்திற்கு ஏற்பவும் வளர்வீத அளவில் (progressive scale) கட்டணங்களை வசூல் செய்வதால், ஒரு நாடு, குறுகிய காலத்திற்கு (short period) மேல் நிதியின் வசதிகளைப் பெறுவதை இது தடுக்கிறது. நிதியானது, சமநிலைக்கு (equilibrium) நேரும் சிறிய

குறுங்காலக் கேடுகளைக் களையவே உதவி செய்யக் கூடுமென்பது இதனால் தெளிவாகிறது. அது, செலாவணிகளுக்கிடையே உள்ள நிதியத் தொடர்புகள் அநேகமாக சமன்பாடாகவும், ஒரு செலாவணி தனது சமநிலை வீதத்திலிருந்து (equilibrium rate) வெகு தொலைவாகவும் அல்லது மிக நீண்டும் செல்லாதவாறும் குறுகிய கால தேவைகளுக்குச் சிறிதளவு குறுங்கால உதவி அல்லது சிறு சரிசெய்தல் (a slight adjustment) போன்றவைகள் தேவைப்படும் போதும், பணிபுரிவதற்காக இது ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. பெரியதொரு இடர்ப்பாடு நேரும்போது நிதியானது ஒன்று திறனற்று ஒதுங்கி வாளாயிருக்கும், இல்லாவிடில் அது மூழ்கிப் போக வேண்டிவரும். எனவே நிதியினுடைய பயன்பாட்டைப் பற்றிய முடிவு போருக்குப் பிந்திய இடை மாறுபாட்டுக் காலம் முடிவடைந்த (post-war transition) பிறகுள்ள உலகம் எத்தகையதாக இருக்குமென்பதைப் பொறுத்தே யிருக்கும். இதனை அறிவதற்கு, பன்னாட்டுப் பணச் சமநிலை (equilibrium) அல்லது சமன் கேடு (disturbance) இவைகளுக்கான காரணங்களை ஆராய்தல் வேண்டும். இவற்றை அடுத்த அத்தியாயத்தில் ஆராய்வோம்.

# 10. பன்னாட்டுச் சமநிலை
## (International Equilibrium)

### சமநிலைப் பிரச்சினை
### (The Problems of Balance)

பிரட்டன் உட்ஸ் ஒப்பந்தங்களால் அமைக்கப்பட்ட பன்னாட்டு பணமுறை (international monetary system) அது நிறைவேற்றப் படப்போகும் உலகத்தில் உள்ள ஒவ்வொரு செலாவணியின் தேவையும் அளிப்பும் மற்றச் செலாவணியின் தேவை, அளிப் புடன் ஏறக்குறைய சமமாக இருந்தாலொழிய (அப்படி ஏதாவது ஒரு செலாவணிக்குச் சற்று அதிகமான தேவையேதானும் ஏற் படும்போது மட்டும் உதவுவதற்காக இது ஏற்படுத்தப்பட்டது), இயங்க முடியாதென்னும் முடிவை சென்ற அத்தியாயத்தில் கண் டோம். இம்முடிவு பிரட்டன் உட்ஸ் முறைக்கே சிறப்புரிமை யுடையதல்ல. எந்த ஒரு பன்னாட்டு முறைக்கும் இம் முறை பொருந்தும். சரிக்கட்டப்பட வேண்டிய மிகுதிகள் (தேவையில் அல்லது அளிப்பில்) மிக அதிகமானவையாகவும் தொடர்ந்து நீடித் தும் இருக்குமானால், எத்தகைய அமைப்பும் அந்நிலைக்குப் பயன் தராது. நிலுவைகள் (balances) பொன் போன்ற ஏதாவதொரு 'பொதுவாகவுள்ள' (neutral) பன்னாட்டு மதிப்புப் பொருள் ஒன்றி னால் தீர்க்கப்படுமானால், எந்தெந்த நாடுகளில் செலாவணிகள் தேவைக்கும் குறைவாக இருக்கின்றனவோ அங்கெல்லாம் பொன் விரைவில் தீர்ந்து போகும். கடன்கார நாடுகள் அளிக்கும் செலா வணிகளை வைத்துக்கொண்டு அவற்றிற்கேற்ப அதிகப்படியான செலாவணிகளைக் கடனளிக்கும் நாடுகள் வெளியிட்டு இப்பிரச் சினைகளுக்குத் தீர்வு காண இம்முறை வழி வகுக்குமாயின், அதற் கும் ஓர் எல்லை விரைவில் ஏற்பட்டு விடும். இவ்வாறு தீர்வு காணு வதற்கு எந்த ஒரு சாதனமும் (means) இல்லையெனில், உலகத்தில்

எப்போதும் தளர்த்தப்படாத மாற்றுத் தடைகள் (Exchange Restrictions) அல்லது அதனை விட்டால் செலாவணிகளின் எல்லை யற்ற ஏற்றத்தாழ்வுகளுமே எப்போதும் இருந்துகொண்டேயிருக்கும். நாடுகளிடையேயுள்ள பொருளாதாரத் தொடர்பு எந்த ஒரு வழியிலாவது ஏறக்குறைய சமன்பாடான நிலைக்குக் கொண்டு வரப்படவில்லையெனில், பிறகு எந்தவித நிதிய ஏற்பாடுகளினாலும் (financial arrangements) உலகத்தை வறுமையின் குழப்பங்களி னின்றும் விடுவிக்க முடியாது. உலகம் சமநிலையிலிருக்குமானால் எந்த ஒரு பன்னாட்டு முறையும் (international system) அது சரியாக மாற்றியமைக்கப்பட்ட பிறகாவது நன்ருகப் பணிபுரியும்.

தற்போது உலகத்தின் நிலை எவ்வாறு உள்ளதெனில் அது இது வரையிலும் வைத்துக்கொண்டிருந்த ஒரே பன்னாட்டுப் பண முறையான பொன்திட்டத்தை இழந்துவிட்ட பிறகு வேறு எந்த ஒரு முறையையும் கண்டு பிடிக்க இயலாத நிலையிலுள்ளது. பொன் திட்டமானது, உண்மையில், மிகவும் கண்டிப்பாக நிறைவேற்றப் பட்ட தொன்ருகும். நாடுகளின் உள்நாட்டுக் கைக்கோள்களத் தனையையும் (domestic policies of the nations) அத்திட்டம் தன்னிச்சைப்படி பன்னாட்டு முறையின் தேவைக்கு ஏற்ப அடக்கி ஆண்டு வந்தது. இதனால் எந்த ஒரு பன்னாட்டு முறையின் புனரமைப்பையும் (reconstructions), சாரமற்ற நெகிழ்ச்சியுடைய ஒரு முறையைத் தவிர்த்து, மற்ற முறைகளை ஏற்றுக் கொள்ளப் பல வட்டாரங்கள் தயங்கின. பெரும்பாலான நாடுகளில் இருவகைக் கருத்தினர் (schools of thought) இருந்து வருகின்றனர். உலகத்தின் பொருளாதார இக்கட்டுகளைப் போக்குவதற்கு, பெருமளவு பல திறப்பட்ட ஏராளமான பன்னாட்டு வாணிபமே சிறந்த வழியென ஒரு கருத்தினர் (schools of thought) கூறுகின்றனர். இவர்களின் கருத்துப்படி, ஒவ்வொரு நாடும் மற்ற நாடுகளின் பற்றக்குறைகளைப் போக்குவதற்கு வழி செய்யவேண்டும்; ஒவ்வொரு நாட்டின் பொருளாதார நிலையின்மையையும் போக்குவதற்கு உலக முழுமையும் உள்ள அதிக அளவு நிலையான தன்மை (greater stability) உதவும்படி இருக்க வேண்டும். இந்தவகைக் கருத்தினர் மாற்று வீதங்களின் நிலையான தன்மையில் நம்பிக்கை கொண்டுள்ளதோடு பொன்திட்டத்திற்கு மிக அருகில் மீண்டும் திரும்பி வருவதில் நம்பிக்கை கொண்டுள்ளனர். (பிரெட்டன் உட்ஸ் ஒப்பந்தத்தை உருவாக்கிய வாதங்களில் முதலாவதாக அமெரிக்கத் திட்டம், எந்த நாடும் அதன் செலாவணியின் மாற்று மதிப்பை மாற்றிக் கொள்வது கூடாதென்றும் அப்படி மாற்றுவதென்ருல் இப்பன்னாட்டு நிலையத்தின் 80 சதவீத உறுப்பினர்களின் சம்மதத்தைப் பெற்றே மாற்றலாமென்றும் கூறியது. நடைமுறையில் இவ்

வாறு சம்மதத்தைப் பெற்று மாற்றுவதென்பது இயலாததாகவே யிருந்தது). ஒவ்வொரு நாட்டிலும் உள்ள விலைகளின் நிலையற்ற தன்மையை (instability of prices) ஒரு தீமை (evil) என இக்கருத்தினர் கருதினர். ஆனால், இத்தீமையைக் களைவதற்கு பன்னாட்டு ரீதியில் எடுக்கப்படும் நடவடிக்கையின் மூலமேயல்லாது செலாவணிகளின் மதிப்பில் செப்பிடுவித்தை செய்வதால் இயலாதென்றும் அவர்கள் கருதினர். இதற்கு நேர்மாறான கருத்தை மற்றொரு கருத்தினர் கொண்டிருந்தனர். உலகத்திற்கெனப் பொதுவாக இயங்கும் ஒரு பொருளாதார முறையில் பங்கெடுத்துக் கொள்வதன் மூலம் அதிகமாக நிலையானதொரு தன்மையை ஏற்படுத்தி விடலாமென்னும் கருத்தை இக்கருத்தினர் மறுத்தனர், எல்லாநாடுகளுமே, அவற்றிற் கேற்பட்டுள்ள பொருளாதார இடர்ப்பாடுகளனைத்தும் (economic troubles), வெளிநாடுகளால் ஏற்பட்டவை யென்றும், அவைகள் அவ்வாறான தீய வெளி சக்திகளினின்றும் விடுவித்துக்கொண்டு தனியாக இருந்தால்தான் நிலைபேற்றைப் (stability) பெற முடியுமென்றும் கருதுகின்றன. எனவே இக்கருத்தினர், சுயேச்சையானதொரு நாட்டுச் செலாவணிக் கைக்கோளை (national credit policy) ஆதரித்தனர். இவ்விதமானதொரு முறையில் நிலைபேறு (stability) இல்லாமலிருக்குமானாலும் அல்லது பன்னாட்டு வாணிபம் மிகக் குறைந்த அளவில் சுருக்கப்பட்டு அதன்மூலம் நிலைபேறு நிலைநிறுத்தப்படுமானாலும்—இவைகள் யாவையும் சுயேச்சையாக இருப்பதற்கு அவசியமாகக் கொடுக்கப்பட வேண்டிய விலைகளெனக் கருதுதல் வேண்டும்.

இவ்வாறான இருவேறு கருத்துக்களையும் சீர்தூக்கிப் பார்த்து முடிவு காண்பது இந்த அத்தியாயத்தின் நோக்கமல்ல. ஆனால், எந்த ஒரு கருத்தினரும் முற்றிலும் சரியான கருத்தினைக் கொள்ளவில்லை என்பதனைத் தெளிவு படுத்துவது இந்த அத்தியாயத்தின் நோக்கமாகும். வரலாறு வாயிலாகப் பார்க்கும்போது, ஒரு நாட்டின் அயல்நாட்டு வாணிபம் (foreign trade) அதனுடைய உள்நாட்டுத் தொழில்களின் வளர்ச்சிக்கு ஊறுவிளைப்பதாக இருக்கும் என்ற கருத்திற்கு எந்தவிதமான ஆதாரமுமில்லை. இங்கிலாந்தின் செல்வம் முழுவதுமே அதனுடைய வாணிபத்தின் மூலமே ஈட்டப்பட்டது. அது உலகத்தின் தொழிற்கூடமாகத் (workshop of the world) தன்னைத் தயார்படுத்திக் கொள்ளவில்லையெனில் அதனுடைய உள்நாட்டுத் தொழில்களும் (domestic industries) இப்போது இருக்குமளவிற்கு வளர்ச்சியடைந்திருக்க மாட்டா. அதுபோலவே இறக்குமதிகளை வாங்குவதற்கு செல்வம் படைத்த மக்கள் தொகை (prosperous population) இல்லையென்றாலும், ஏற்றுமதிகளுக்குத் தேவையான பண்டங்களை அளிப்பதற்கு

செம்மையாக இயங்கிவரும் பலதிறப்பட்ட தொழில்கள் இல்லை யெனினும், அயல்நாட்டு வாணிபம் நடைபெற இயலாது. குறிப் பாகச் சில தொழில்கள் வேண்டுமானால், இறக்குமதி செய்யப்படும் பண்டங்களின் போட்டியினால் பாதிக்கப்படுவதாக நினைக்க இட முண்டு. ஆனால் வரலாற்றுக் கண்கொண்டு பார்க்குமிடத்து—மிக எளிதாக ஆராய்ந்து பார்த்த போதிலுங்கூட—அயல்நாட்டு வாணி பமும், உள்நாட்டுத் தொழிலும் எதிரிடையானவைகளாக இருப்ப தில்லை. கூட்டாளிகளாகவே (Partners) இருக்கின்றன என்பது தெரியவரும்.

ஓர் உவமையின் மூலம் இதனை மேலும் தெளிவுபடுத்தலாம். மந்தத்தின் (depression) ஆரம்ப காலத்தில் விவசாயமும் (agriculture) தொழிலும் (industry) பல வழிகளில் எதிரிடையாக இயங்குகின்றனவென்னும் உண்மையை இந்நூலில் பல இடங் களில் கண்டுள்ளோம். தனது உற்பத்திப் பொருள்களுக்கான தேவை குறையும்போது, விவசாயி அப்பொருள்களின்மீது தான் விதித்துள்ள விலையைக் குறைத்துவிடுகிறான்; ஆனால் தனது உற் பத்தியைக் குறைத்துவிடுவதில்லை. செய்பொருள் உற்பத்தியாளர் (manufacturer) தனது விலைகளை ஓரளவிற்குக் குறைத்துக்கொள் ளக்கூடும்; ஆனால் தனது விலைகளை, பெரும்பான்மையும் நிலை யாகவே (steady) வைத்துக்கொண்டு தனது உற்பத்தியின் அள வைக் குறைத்துக்கொள்வர். விவசாயி தனது உற்பத்திப்பொருள் களத்தனையும் விற்பான்; ஆனால் அவ்விற்பனையோ இலாபமற்ற விலைகளில் இருக்கும். ஆனால் செய்பொருள் உற்பத்தியாளரோ, தமது விற்பனையின் அளவு (volume of sales) போதுமானதாக இருக்குமெனில், இலாபமான விலைகளையே (remunerative prices) நிர்ணயிக்கின்றனர். ஆனால் அவரிடம் பண்டங்களை வாங்குவோர் எவருமே தாம் உற்பத்தி செய்யும் திறனுக்கு (capacity to produce) மேல் சிறிதளவு அதிகமாகக்கூட வாங்குவதில்லை என்பதைக் காண் பர். இவ்வாறான நிலை ஏற்படும்போது, இருவேறு பிரிவினரின் நாட்டங்களும் (interests) முற்றிலும் வேறுபட்டவைகளாகக் காணப்படுகின்றன. விவசாயி, அவசியம் நேரும்போது தனது உற்பத்தியின் அளவைக் குறைத்துக்கொண்டேனும், அதிகமான விலைகளைத் தன் பொருள்களுக்கு வேண்டுகின்றான். தொழிலதிபர் (industrialist), அப்போது நிலவும் விலைகளின் மட்டத்திலேயே (at the prevailing level of prices) அதிகமான தேவை அளவை விழைகின்றனர்.

ஆனால், நீண்டகால அடைவில் மேற்சொல்லப்பட்ட ஒவ் வொரு பிரிவினரின் சுபிட்சமும் (prosperity) மற்றப் பிரிவினரது

சுபிட்சத்தைப் பொறுத்தேயுள்ள தென்பதை ஒரு பொருளாதார நிபுணர் நன்குணரக்கூடும். விவசாயி சுபிட்சத்தைத் திரும்பவும் அடையும்போது, பொருள் உற்பத்தியாளர் விலையின்மூலம் அதிக இலாபத்தை வேண்டுமானல் அடையமுடியாதவராக இருக்கலாம்; ஆனல் அதிகமான அளவு பொருள்களை விற்பதன் வாயிலாக அவர் இலாபத்தை அடைவார். அதே போன்று பொருள் உற்பத்தியாளர் சுபிட்சத்தை மீண்டும் அடையும்போது, விவசாயி அதிகமான பொருள்களை விற்காமலிருக்கலாம்; ஆனல் அப் பொருள்களுக்கு அதிக விலைகளைப் பெறுவதன்வாயிலாக அவர் இலாபமடைவர்.

இந்த உவமையை (analogy) அயல்நாட்டு வாணிபம் (foreign trade) உள்நாட்டுத் தொழில் ஆகிய இரண்டிற்குமிடையே நன்ருக எடுத்தாளலாம். மேற்சொன்ன இரண்டும் நன்கு இயங்கிக்கொண்டிருக்கும்போது ஒன்று மற்றதன் சுபிட்சத்தை ஏற்படுத்தும். ஒன்றை எது சுபிட்சப்படுத்துகின்றதோ அதுவே மற்றதனையும் முடிவில் சுபிட்சப்படுத்துகின்றது. ஆனல் இரண்டுமே சுபிட்சமற்று தேக்கநிலையில் (doldrum) உள்ளபோது ஒன்று மற்றதன் அவலநிலையை அதிகப்படுத்தும். உள்நாட்டுத் தொழில் (domestic industry) மந்த நிலையில் இருக்கும்போது, இறக்குமதிகளுக்குச் செலவிடும் பணம் இல்லாமல் போகும் நிலையும், உள்நாட்டுப் பண்டங்களின் பாதுகாப்பிற்கான தேவையும் (demand for protection) சேர்ந்து அயல்நாட்டுச் செலாவணிகளின் இருப்பு நிலையை நிலைகுலையச்செய்து, பொன் திட்டத்தையும் (gold standard) நிர்மூலமாக்கும். இதனல் பன்னுட்டு வாணிபமும் (international trade) குறையும். இப்பன்னுட்டு வாணிபம் தேக்க நிலைக்கு கொண்டு வரப்படுமானல், அதனல் வாழ்ந்துவரும் மக்களின் வறுமையானது அவர்கள் வாழும் நாடுகளின் உள்நாட்டுத் தொழில்களைப் பாதிக்கச்செய்யும். செலாவணிகளில் அதிகமான நிலைபேறின்மை (instability) உள்நாட்டுச் செலாவணியிலும் நிலைபேறு ஏற்படுவதை இயலாததாக்குகின்றது. நாடுகளின் எல்லைக்குள்ளிருக்கும் அதிகமான பண வீக்கம் அல்லது பண வாட்டம் (excessive inflation or deflation), அந்நாடுகள் தங்களிடையே செலாவணிகளில் நிலைபேறு ஏற்படுத்திக்கொள்வதை வன்மையாகத் தடுக்கும். நாடுகளுக்கிடையே செலாவணிகளில் மிக அதிகமாக நிலைபேறு உள்ள காலம் உள்நாட்டுச் செலாவணிகளில் மிக அதிகமாக நிலைபேற்றைக் கொண்ட காலமாகவும் அதனுடன் மிக அதிகமான அளவு பன்னுட்டு வாணிபத்தைக் கொண்ட காலமாகவும் உள்ளது. ஒத்த நிகழ்ச்சிக்கு மேலான நிலையாகும். இதேபோன்று, போர் நடந்துகொண்டிருந்த ஆண்டு

களில் (war years) ஏற்பட்ட பெரிய பண வீக்கத்தின் (great inflation) போதும், 1929-ம் ஆண்டில் ஏற்பட்ட பெரிய பண வாட்டத்தின்போதும், பொன் திட்டமானது இயங்குவது இயலாத தாக இருந்தது.

எனவே, நாட்டின் உள்ளும் புறமும் இயன்ற அளவிற்கு அதிக சமன்பாட்டை ஏற்படுத்துவதே சீரிய கைக்கோளின் (ideal policy) நோக்கமாக இருத்தல் வேண்டும். எனினும் இவ்வாறான சமன்பாட்டிற்கான நிபந்தனையை விவரிப்பது எளிதல்ல என்பதனை ஆரம்பத்திலேயே நாம் தெரிந்துகொள்ள வேண்டும். இச்சமன்பாட்டை ஓர் அறுதியிடப்பட்ட விதிமுறையின்கீழ் விளக்குவதும் இயலாததாகும். உள்நாட்டுச் சமன்பாட்டுப் பிரச்சினையை ஐந்தாவது, ஆறாவது அத்தியாயங்களில் நாம் ஆராய்ந்தோம்; அவற்றில் சமன்பாடு என்பது, உலகத்தில் தற்காலத்தில் இருக்கும் விலைகளின் நிலைபேற்றை விட அதிகமான நிலைபேற்றைக் குறிப்பது என்ற எடுகோளை (assumption) நாம் கொண்டபோதிலும், ஒரு குறிப்பிட்ட விலை அல்லது விலைகளின் முழு நிலைபேற்றை (absolute stability) குறிப்பது என்று நாம் விவரிப்பதியலாதென்பதனைக் கண்டோம். இதைப்போன்றே, நாட்டின் வெளியே (in the external sphere) உள்ள சமன்பாடு (balance) பல்வேறு நாடுகளின் செலாவணிகளுக்கிடையேயுள்ள அறுதியிடப்பட்ட எந்த ஒரு முழுமையான வீதத்தையும் (absolute ratio) குறிக்க வேண்டுமென்பதல்ல; ஆனால் அது கடந்த சில ஆண்டுகளில் இருந்ததைக்காட்டிலும் அதிக செலாவணிகளின் நிலைபேற்றை உணர்த்துகிறது. இந்த அத்தியாயத்தில் பன்னாட்டுச் சமநிலை (international equilibrium) இயல்பைச் சற்று ஆழமாக ஆராய்வோம்.

விவசாயி (farmer) பொருள் உற்பத்தியாளர் ஆகிய இருவருக்குமிடையேயுள்ள தொடர்பாகிய இந்த உவமை நாடுகளுக்கிடையேயுள்ள நிதியத் தொடர்புகளை (financial relations) விளக்கவே எடுத்தாளப்பட்டுள்ளது. உலகத்திலுள்ள நாடுகள், 'மூலப் பொருள்களை உற்பத்தி செய்யும் நாடுகள்' (primary producers), 'கைத்தொழில் நாடுகள்' என இருவகைப்படும். ஆனால், எந்த ஒரு நாடும் கருப்பொருள்களைமட்டுமே (raw materials) ஏற்றுமதி செய்வதில்லை; அதைப்போலவே செய்பொருள்களைமட்டிலுமே ஒரு நாடு ஏற்றுமதி செய்துகொண்டிருப்பதில்லை. ஆனால் பெரும்பான்மையான நாடுகள் இவைகள் இரண்டில் ஏதாவதொன்றினை அதிகமாக ஏற்றுமதி செய்கின்றன. உதாரணமாக, 1929ஆம் ஆண்டில் (போரின் இடையீட்டு ஆண்டுகளில் மிக சுபிட்சமான ஆண்டு

களில் இந்த ஆண்டும் ஒன்ருகும்) நியூசிலாந்தும் (New Zealand) சிலி (Chile)யும் தங்களது ஏற்றுமதிகளின் மொத்த மதிப்பில் (total value of exports) முறையே 96.4 சதவீதம் 95.8 சதவீதம் உணவுப் பொருள்களையும் (foodstuffs) கச்சாப்பொருள்களையும் (raw materials) ஏற்றுமதி செய்தபோது ஐக்கிய அரசாங்கமும் (United Kingdom) பெல்ஜியமும் (Belgium) தங்களது ஏற்றுமதி களின் மொத்தமதிப்பில் முறையே 69 சதவீதம் 59.3 சதவீதம் 'முற்றிலும் அல்லது பெரும்பான்மையும் செய்யப்பட்ட பொருள் களாகவே' (wholly or mainly manufactured) ஏற்றுமதி செய்தன. இந்த உவமை இதனுடன் நின்றுவிடவில்லை. ஏனெனில் பெரிதும் விவசாய நாடுகளாக உள்ள நாடுகள் மந்தத்தின்போது தனிப் பட்டவிவசாயி எவ்விதமாகநடந்துகொள்கிருனே அதைப்போலவே நடந்துகொள்கின்றனர்: அதாவது அவைகள் அயல்நாடுகளுக்கு விற்கும் பண்டங்களின் விலைகள் மிக அதிகமாகக் குறையும், அதே நேரத்தில் ஏற்றுமதியாகும் பண்டங்களின் அளவு, அதாவது அவற்றின் நிறை (weight), ஏறக்குறைய எவ்வித மாற்றமுமின்றி அப்படியே இருக்கும். ஆனுல், மற்றெருபுறம், கைத்தொழில் நாடு களில் (industrial nations) நிலைமை வேறுவிதமாக உள்ளது. அவைகளின் ஏற்றுமதிப் பொருள்களின் விலைகளும் உண்மையில் குறையவே செய்கின்றன; அவற்றில், மூலப்பொருள்களின்விலைகள் குறைவதைக் காட்டிலும் குறைவாகவே விலைகள் குறைகின்றன. ஆனுல் அவைகளின் ஏற்றுமதி அளவு கணிசமான அளவிற்குக் குறைகின்றது[1]. விவசாய நாடுகளில் மக்கள் பெரும்பான்மையும் தொடர்ந்து வேலைக்கமர்த்திக்கொள்ளப்படுகின்றனர்; ஆனுல் அவர்கள் பெறும் ஊதியமோ மிக அவலமாக உள்ளது. அதே நேரத்தில் கைத்தொழில் நாடுகளில் கூலிவீதங்கள் (wage-rates) விவசாயநாடுகளைக் காட்டிலும் அதிகமான அளவில் உள்ளன; ஆனுல் அங்கு வேலையின்மையும் அதிகமாகக் காணப்படுகிறது.

இந்த இருவகையான நாடுகளும் மற்றெரு முக்கியவகையிலும் வேறுபடுகின்றன. பொதுவாகச் சொல்லப்போனுல், மூலப்பொருள் களை உற்பத்திசெய்யும் நாடுகள் (primary producers) கடந்தகாலங் களிலெல்லாம் கைத்தொழில் நாடுகளிலிருந்து கடன் பெறும் நாடு களாகவே இருந்துவந்தன. அவைகள் அவ்வாறு பெற்ற கடன்

1. உதாரணமாக, 1929, 1931 ஆகிய இரு ஆண்டுகளுக்குமிடையேயுள்ள ஆண்டுகளில் ஆஸ்திரேலியாவின் ஏற்றுமதிப் பொருள்களின் சராசரி 'விலையில்' (average price) 41 சதவீதம் குறைந்தது. ஆனுல் அந்த ஏற்றுமதிகளின் 'அளவில்' (volume) உண்மையில் 10 சதவீதம் அதிகரித்தது. அதேசமயத்தில் ஐக்கிய அரசாங்கத்தில் (United kingdom) ஏற்றுமதிகளின் சராசரி 'விலை'யில 14½ சதவீதமே குறைந்தது, ஆனுல் அதன் ஏற்றுமதிகளின் 'அளவில்' (Volume) 37 சதவீதம் அதிகரித்தது.

களுக்கு வட்டியும் செலுத்திக்கொண்டு வந்தன. கைத்தொழில் நாடுகள், அதேசமயத்தில் மூலதனத்தைக் கடன் கொடுத்து வட்டி வாங்கி வந்தன. இவ்வாருன ஒரு நிலை வரம்பற்றதொரு விதியாக (absolute rule) இருக்கவில்லை—குறைந்தது, 1939–45 ஆண்டுகளில் நடைபெற்ற போரானது, நாடுகளுக்கிடையே யிருந்து வந்த நிதியத் தொடர்புகளை நிலைகுலையச் செய்வதற்கு முன்னர் இருந்த நிகழ்ச்சிகள் ஏறக்குறைய இந்த நிலையினையே உணர்த்துகின்றன.

ஆகவே, மூலதனத்தை உண்டாக்கல் (Capital-Creation) என்னும் பிரச்சினைகளில் முன்னர் மீண்டும் நாம் நிறுத்தப்படுகிருேம். பன்னுட்டுத் துறையிலும் உள்நாட்டுத் துறையிலுமுள்ள பணக் கோட்பாடுகளை (monetary principles) அறிந்துகொள்ளுதல் எவ்வளவு முக்கியமானதோ அவ்வளவு முக்கியமானவைகள் இப் பிரச்சினைகள் என்பதையும் நாம் காண்போம். இந்த வாதத்தை (argument) இன்னும் நீட்டித்துச் செல்வதற்குமுன்னர், ஒரு நாடு கடன் கொடுக்கிறது, கடன் வாங்குகிறதென்ருல் என்ன என்பது பற்றி நுணுக்கமாக ஆராய்தல் நலம்.

## அயல்நாட்டுக் கொடுப்பல்நிலை.
## (Balance of Payments)

ஏழாம் அத்தியாயத்தில் அயல்நாட்டு மாற்று அங்காடியின் இயங்கு முறைகளை விவரிக்கும்போது, அவ்வாருன அங்காடியின் ஒவ்வொரு நடவடிக்கைக்கும் (transactions) இருபுறங்கள் (two sides) உண்டு என்பது முதலிலேயே வலியுறுத்தப்பட்டது. பவுண்டுகள் (pounds) ஏதாவதொரு அயல்நாட்டுச் செலாவணிக்குப் பரிவர்த்தனை செய்துகொள்ளப்படும்போது, அதே பேரத்தில் (transactions) ஏதாவதொரு அயல்நாட்டுச் செலாவணியும்பவுண்டுகளுக்குப் பரிவர்த்தனை செய்து கொள்ளப்படுகிறது. அயல்நாட்டு மாற்றுஅங்காடியில்விற்கப்படுகிற பவுண்டுகளின் மொத்த விற்பனையில்அடங்குகின்ற பலவற்றைக் கொண்ட ஒரு பட்டியலைத்தயாரித்து அயல்நாட்டு மாற்று அங்காடியில் (foreign exchange market) வாங்கப்படுகிற பவுண்டுகளின் மொத்தக் கொள்முதலில் (purchases of pounds) அடங்குகின்ற பலவற்றைக்கொண்ட ஒரு பட்டியலையும் தயாரித்தால் இரு பட்டியல்களின் மொத்த எண்ணிக்கையும் ஒன்ருக இருக்குமென்பது இதனல் விளங்குகிறது. பவுண்டுகள் வாங்கப்படவில்லையானுல் விற்கப்படவியலா என்னும் உண்மையும் இதனல் விளங்குகிறது. பொன்திட்டமானது அமலில் இருக்கும் போது சில செல்லுகள், அயல்நாட்டு மாற்று அங்காடிக்குச்

செல்லாமலேயே பொன்னை ஏற்றுமதி செய்வதன்மூலம் செலுத்தப் படுகின்றன. ஆனால் நாம் ஒரு பட்டியலில் இவ்விதமாகச் செலுத்தப்படும் மொத்தச் தொகையைக் குறித்துவைத்துக் கொண்டு ஏற்றுமதி அல்லது இறக்குமதி செய்யப்பட்ட பொன்னின் மதிப்பை மற்றொரு பட்டியலில் குறித்துவைத்துப் பார்த்தால், இவ்விருபட்டியல்களின் மொத்தமும் ஒன்றாகவேயிருக்கும். இந்தப் பட்டியல்கள் தொகுக்கப்படும்போது ஒரு பெயரேட்டுக் கணக்காக (ledger) அமையும். இப் பெயரேட்டில் எந்த நோக்கத்திற்காகவும் செலுத்தப்பட்ட செல்லுகள் யாவும் குறிக்கப்பட்டிருக்கும். உதாரணமாக ஐக்கிய அரசாங்கத்தின் (United Kingdom) மக்களால் மற்ற நாடுகளுக்குச் செலுத்தப்படும் எல்லாச் செல்லுகளும், அதேபோல மற்றநாடுகளின் மக்களால் ஐக்கிய அரசாங்கத்தின் மக்களுக்குச் செலுத்தப்படும் எல்லாச் செல்லுகளும் இதில் இடம் பெறும்.

இதைப்போன்றதொரு பெயரேடே அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை என்பது. ஒருநாட்டின் வாணிபக் கொடுப்பல்நிலை எப்போதும் சரிநிகராகச் சமனப்படுத்தப்படுமென்பது இங்கு முக்கியமாகக் கவனத்தில் கொள்ளத்தக்கதாகும். இது அதி முக்கியமாகக் கவனிக்கப்படவேண்டியதாக இருப்பதற்குக் காரணம் ‘சமன்பாடு’ (balance) என்னும் சொல் தெளிவற்றதாக (ambiguous) இருக்கிறது. அயல்நாட்டுக் கொடுப்பல்நிலை என்றும் வாணிபக் கொடுப்பல்நிலை என்றும் அடிக்கடி பயன்படுத்தப்படுவதால் அது குழப்பத்தை விளைவிக்கின்றது. வாணிபக் கொடுப்பல்நிலை என்பது இறக்குமதி, ஏற்றுமதியாகும் பொருள்களது மதிப்பின் ஒரு பட்டியலாகும். வாணிபக் கொடுப்பல்நிலை, ஏதோ தற்செயலாகச் சமனமாக இருக்குமே தவிர, மற்றப்படி சமனமாக இருக்காது. ஒவ்வொரு நாட்டிலும் அதன் இறக்குமதிகள் அல்லது ஏற்றுமதிகளில் நிகர அதிகரிப்பு இருந்துகொண்டேயிருக்கும். இறக்குமதிகளில் நிகர அதிகரிப்பு இருக்குமானால் அது ‘பாதக வாணிபக் கொடுப்பல்நிலையை’ (adverse balance of trade) அதாவது இறக்குமதிகளின் நிகர அதிகரிப்பு நிலையைக் (a net excess of imports) குறிக்கும். ‘சாதக வாணி’பக் கொடுப்பல்நிலை என்பது (favourable balance of trade) ஏற்றுமதிகளின் நிகர அதிகரிப்பு (a net excess of exports) சாதக வாணிபக் கொடுப்பல்நிலையைக் குறிக்கும். எனவே, ‘கொடுப்பல்நிலை’ (balance) என்னும் சொல் இரு பொருள்களை உணர்த்தும் என்பதை முக்கியமாக மனத்தில் கொள்ளவேண்டும்; முதலாவதாக ஒரு நிகரமான அதிகரிப்பைக் (a net excess) குறிக்கும்; இரண்டாவதாக சமனநிலையைக் குறிக்கும். ‘அயல்நாட்டுக் கொடுப்பல்நிலை’ (Balance of Payments)

என்னும் சொற்றொடரில் அது எப்போதுமே, பின்னர்க் குறிப்பிட்ட பொருளையே குறிக்கும்.

உண்மையில், அயல்நாட்டுக் கொடுப்பல்நிலைப் பேரேட்டில் வாணிபக் கொடுப்பல்நிலையே மிக முக்கியமான இனமாகும். ஏனெனில் செலுத்திய அல்லது பெற்றுக்கொண்ட செல்லுகள் (payments) அடங்கிய ஒரு பட்டியலைத் (bit) தயாரிக்கும்போது, வாங்கிய பொருள்களுக்கு அல்லது விற்ற பொருள்களுக்கு முறையே செலுத்தவேண்டிய அல்லது பெறவேண்டிய செல்லுகளையே முதலில் குறிக்கவேண்டும். எனவே, வாங்கிய பொருள்களுக்குச் செலுத்திய செல்லுகளை (payments) செலவினப்பகுதியிலும் (debit side), விற்ற பொருள்களுக்குப் பெற்ற செல்லுகளை (payments) வரவினப்பகுதியிலும் (credit side) எழுதுகின்றோம். நடைமுறையில், மேற்சொல்லப்பட்ட ஒன்று அல்லது மற்றொன்றின் நிகர அதிகரிப்பை மட்டுமே குறிப்பது எளிதானதாக இருக்கும்.

மற்றுமொரு குழப்பம். வாணிபக் கொடுப்பல் நிலையில் (Balance of trade) எப்போதும் புலனாகக் கூடியதும், நிறுக்கக் கூடியதும், எண்ணக் கூடியதுமான பொருள்களே இடம் பெறும். உண்மையான கருத்துப்படி, இது புலனாகும் வாணிபச் செலுத்து நிலையேயாகும். (Balance of visible trade). ஆனால், நாடுகள் பண்டங்களை விற்பது அல்லது வாங்குவதன்மூலம் மட்டுமேயல்லாது தங்களது பணிகளைக் (Services) கொடுப்பதன்மூலம் அல்லது பிறநாடுகள் செய்த பணிகளுக்குச் செலுத்துவதன் மூலம் தங்களது சாதனங்களை (resources) ஈட்டவோ அல்லது செலவழிக்கவோ கூடும். உதாரணமாக அமெரிக்காவைச் சார்ந்த ஒருவர் தாம் அட்லான்டிக் பெருங்கடலைக் கடந்து இங்கிலாந்து போய்ச் சேருவதற்குக் கப்பற் கட்டணமாக ஒரு பிரிட்டிஷ் கப்பலுக்கு £ 56-ம், தாம் இங்கிலாந்து வந்தடைந்த பிறகு உணவகத்திற்கும் (hotel) வழிச்செலவிற்குமாக (travelling expenses) மேலும் £ 50-ம் செலவழிக்கிறாரென்றால் டாலர்களுக்கு மாற்றாக (in exchange for dollars) பவுண்டுகளைத் தேவைப்படுவதில் £ 100 அதிகரித்திருக்கிறதென்று பொருள். அவர் தமது தாயகத்திலே இருந்துகொண்டு £ 100 பெறுமான இங்கிலாந்துப் பொருள்களை வாங்கியிருந்தால் எவ்வாறு டாலர்களுக்கு மாற்றாகப் பவுண்டுகளுக்கான தேவை அதிகரித்திருக்குமோ அவ்வாறே மேற்சொன்ன பேரத்திலும் நிகழ்ந்துள்ளது. எனவே, நமது பட்டியலில் புலனாகா வாணிபக் கொடுப்பல்நிலை (Balance of Invisible Trade) இரண்டாவது இனமாக (second item) இருக்கவேண்டும். இந்த இனத்தில் கப்பற் கட்டணங்கள் (shipping freights) காப்

புறுதிக் கட்டணங்கள் (insurance premiums), பயணர்களின் செலவுகள் (tourists expenditures), சினிமாப் படங்களுக்குச் செலுத்தப்படும் ஆதாயப் பங்குகள் (royalties) ஒரு நாட்டின் குடிமக்கள் மற்றொரு நாட்டின் குடிமக்களுக்கு அளிக்கும் நன்கொடைகளையும் (gifts) மேற்சொன்ன இனத்தில் சேர்த்துக்கொள்ளுதல் நலமாகும். ஐக்கிய அமெரிக்காவைப் பொறுத்தமட்டில் இந்த இனம் சற்று முக்கியமானதாகும். ஏனெனில் அமெரிக்காவில் சமீபத்தில் குடியேறியுள்ள மக்களில் பெரும்பாலோர், இயல்பான காலங்களில் (normal times) தங்களின் தாயகத்திலுள்ள தம் மனிதர்களுக்கு தங்களின் வருமானத்தின் கணிசமான ஒரு பகுதியை அனுப்புகின்றனர். மேலும், அமெரிக்கர்கள் கடந்த ஆண்டுகளில் பிறநாடுகளில் சமயப் பரப்பு வேலைக்கும் (missionary work) இன்னும் மற்ற அற நிறுவனங்களுக்கும் (charities) தாராளமாக மனமுவந்து நன்கொடைகளை அளித்துள்ளனர். எவ்வித பயனையும் எதிர்பாராமல், தம்மிச்சையாக (voluntary) செலுத்தப்படும் இத்தகைய செல்லுகள் (payments) இந்த இனத்தில் சேர்க்கப்பட்டுள்ளன. இதைப்போன்றே யாதொரு பயனையும் எதிர்பாராமல் தம்மிச்சையற்று (involuntary) செலுத்தப்படும், போர் நஷ்டஈடுகளையும் (war indemnities), போர்க் கப்பங்களையும் (Reparations), கிரமப்படி இவ்வினத்தில் சேர்க்கவேண்டும். புலனாகும் இனங்களைக் காட்டிலும் புலனாகா இனங்களைக் (invisible items) கணக்கெடுத்தல் கடினமாகும். ஏனெனில் புலனாகா இனங்களை நாட்டைவிட்டு வெளியே சென்றதும், சுங்க ஆய்வாளர்கள் (customs inspectors) கணக்கெடுப்பதற்கும் மதிப்பீடு செய்வதற்கும் ஏற்றவாறு பண்டகசாலைகளில் சென்று குவிவதில்லை. பெரும்பாலான அயல்நாட்டுச் செல்லுகளில் இவைகள் தனியாகக் கணக்கிடப்படுவதற்கு ஒரே காரணம் இதுவாகவே இருக்கும். இவ்வாறு கணக்கிடப்படுவதன் அவசியம் யாதெனில், புலனாகும் வாணிபத்தின் பொருளாதார விளைவுகளையே (economic effects) இப் புலனாகா இனங்களும் (invisible items) அளிக்கின்றன.

அயல்நாட்டுச் செல்லுநிலைப் பட்டியலில் மூன்றாவதாக இடம் பெறும் இனம் வட்டி வரவுகள் (interest receipts) அல்லது செலுத்தவேண்டிய வட்டித் தொகைகளாகும். இந்த இனம் புரிந்து கொள்வதற்கு எளிதேயொழிய கணக்கீடு (estimate) செய்வது கடினம். இதற்கு, நாட்டின் எல்லையைவிட்டு வெளிச்செல்லும் இலாபஈவுகள் (dividents) அல்லது வட்டி சம்பந்தப்பட்ட ஒவ்வொரு செல்லையும் சேர்த்துக்கொண்டு கணக்கிடவேண்டும். இதில், தனிப்பட்ட மக்களுக்கு அல்லது மக்களால் செலுத்தப்படும்

செல்லுகளும், அரசாங்கங்களுக்கு அல்லது அரசாங்கங்களால் செலுத்தப்படும் செல்லுகளும் அடங்கும்[1].

இந்த மூன்று இனங்களும் சேர்ந்துதான் அயல்நாட்டுக் கொடுப்பல்நிலையில் (Balance of payments) வருமானக் கணக்கை (income account) ஏற்படுத்துகின்றன. (இவற்றை நாட்டு வருமானமென்று தவருகக் கொள்ளுதல்கூடாது. ஏனெனில் நாட்டுவருமானமென்பது நாட்டிலுள்ள குடிமக்களின் மொத்த வருமானங்களாகும்). நாடு தான் வெளிநாடுகளிலிருந்து பெறுகின்ற ஒவ்வொரு தொகையும் மேற்சொல்லப்பட்ட மூன்றினுள் அடங்கும். அதன் கடன்பட்டுள்ள நிலையை (indebtedness) அதிகரிக்காமலோ அல்லது அதன் மூலதனத்தைக் குறையச் செய்யாமலோ உதவுகின்ற வரவுகளும் இதில் இடம்பெறும். அதைப் போன்றே அதன் மூலதனத்தை அதிகரிக்காமலோ அல்லது கடன்பட்டுள்ள நிலையைக் குறையச் செய்யாமலோ உதவுகின்ற, அது செலுத்தும் ஒவ்வொரு செல்லும், இதில் இடம்பெறும். புலனுகும் வாணிபக் கொடுப்பல்நிலை (Balance of Visible Trade) புலனுகா வாணிபக் கொடுப்பல்நிலை (Balance of Invisible Trade), வட்டி வரவுகள் அல்லது செல்லுகள் (Interest Reciepts or Payments) ஆகிய இம் மூன்று இனங்கள் மட்டும் (இம் மூன்று இனங்களையும் வரம்பின்றி இன்னும் பகுத்துக் கூறிக்கொண்டே செல்லலாம்) அயல்நாட்டுக் கொடுப்பல்நிலை முழுவதையும் ஆக்குகின்றன

1. வாணிபக் கொடுப்பலைப் பற்றிக் கூறும் சில நூல்களில் வட்டிச் செல்லு (interest payments) புலனுகா வாணிபக் கொடுப்பலின் (Balance of Invisible Trade) ஒரு பகுதியாகக் கூறப்பட்டுள்ளது. உதாரணமாக ஒரு நாடு, அயல்நாட்டுக் கடனாளிகளிடமிருந்து ஆண்டொன்றுக்கு £ 100 மில்லியன் வட்டியாகப் பெறுகிறதென்று வைத்துக்கொண்டால், அந்நாடு அத்தொகையினளவிற்கு புலனுகா வாணிபப் பொருள்களை ஏற்றுமதி செய்து பொருள் ஈட்டியதையொக்கும் என்பது கூறப்படுகிறது. ஆனல் இந்நூலாசிரியருக்கு அவ்வாறு கருதுவது தவறெனவே தோன்றுகிறது. பணிகளின் ஏற்றுமதிகளும் (உதாரணமாக அயல்நாட்டினருக்குக் கப்பல்களின் மூலம் அவர்களின் பண்டங்களை ஏற்றுமதி இறக்குமதி செய்தல்) வட்டி வரவுகளும் (receipt of interest), அயல்நாட்டுக் கொடுப்பல்நிலைப் பட்டியலில் வரவுப் பகுதிகளில் இடம்பெறுகின்றமையால், ஒன்றுபோலவே தோன்றுகின்றன. ஆனல் வேறு எவ்விதத்திலும் அவை ஒத்தனவாக இல்லை. உண்மையில் அவை மிக முக்கியமானதொரு வகையில் வேறுபடுகின்றன. புலனுகா ஏற்றுமதிகளுக்கு, அவைகளை ஏற்றுமதி செய்யும் நாடுகளின் நடைமுறையான உழைப்புத் தேவைப்படும். உதாரணமாகக் கப்பல்களின் மூலம் செய்யப்படும் பணிகளைப் பிறநாடுகளுக்கு அளிப்பதற்குக் கப்பல்கள் கட்டப்படவேண்டும்; அக் கப்பல்களைச் செலுத்துவதற்கான கப்பற் பணியாளர்களை நியமிக்கவேண்டும்; பின்னர் பண்டங்களையும் கப்பலில் சேர்க்கவேண்டும். ஆனல் வட்டி வரவுகளுக்கு (interest reciepts) இவைகளெல்லாம் தேவையில்லை. ஓராண்டில் வட்டி வரவு என்பது ஒரு நாட்டின் வருமான சாதனங்களின் நிகரமான கூடுதலாகும் (net addition). இந்நூலில் பணிகளின் ஏற்றுமதிகள் அல்லது இறக்குமதிகளும் (exports or imports of services) வட்டி வரவுகள் அல்லது செல்லுகளும் வெவ்வேறு என்று தான் சொல்லப்பட்டுள்ளது. அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையைப்பற்றி ஆரம்பத்தில் படிப்பவர்களுக்கு, மேற்படி பணிகளின் ஏற்றுமதிகளும் வட்டி வரவுகளும் பல நூல்களில் ஒன்றுகவே வைத்துக் கூறப்பட்டுள்ளன.

என்று கூறிவிடமுடியாது. ஏனெனில் செலுத்தப்படும் பல செல்லுகளி லிருந்து வரும் வருமானங்கள் மேற்படி இனங்களில் அடங்காமலு மிருக்கின்றன. எனவே, வருமானக் கணக்கின் (income account) வரவு செலவுப் பகுதிகள் (credit and debit sides) சரிசமமாக இருக்கவேண்டுமென்பது தேவையில்லை. இதனை ஓர் உதாரணத் தால் விளக்கலாம். 1928ஆம் ஆண்டில் ஐக்கிய அரசாங்கம் (United Kingdom) தனது ஏற்றுமதிகளின் மதிப்பைவிட அதிக மான அளவிற்கு வெளிநாடுகளிலிருந்து பண்டங்களை வாங்கியது. அப் பண்டங்களின் மதிப்பு £ 353,000,000[1]. எனவே புலனுகும் வாணிபக் கொடுப்பல் நிலையில் மேற்படி தொகையை நிகரச் செல்லாக (அதாவது நிகர வெளிச்செல்லாக) அயல்நாட்டினருக்குச் செலுத்தும்படி உள்ளது. ஆயினும், புலனுகா வாணிபக் கொடுப்பல் நிலையில் பிறநாட்டினர் இங்கிலாந்திற்குச் செலுத்தவேண்டிய நிகரச் செல்லாக £ 225,000,000 ஆக, இருந்தது. வட்டி வரவு களின் மூலம் வந்த வருமானம் அச்செல்லுகளைவிட £ 150,000,000 அதிகமாக இருந்தது. எனவே ஐக்கிய அரசாங்கத்தின் அந்த ஆண்டின் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையின் வரவுக்கணக்கை கீழ்க்கண்டவாறு காட்டலாம். வரவுச் செல் (in-payment) கூட்டல் (+) குறியினாலும், செலவுச் செல் (out-payment) கழித்தல் (−) குறியினாலும் உணர்த்தப்பட்டிருக்கிறது:

| | |
|---|---|
| புலனுகும் வாணிபத்தில் செல்லவேண்டிய நிரைச் செல்லுகள் (Net Balance of visible Trade) | — £ 353,000,000 |
| புலனுகா வாணிபத்தில் நிகரச் செல்லுகள் (Net) | + £ 225,000,000 |
| (Balance of Invisible Trade) வட்டி (நிகர வட்டி) | + £ 250,000,000 |
| வருமானக் கணக்கின் நிகர மொத்தம் (Net Total of Income Account) | + 122,000,000 |

1. இந்த அத்தியாயத்தில் தரப்பட்டுள்ள புள்ளி விபரங்கள் யாவும் ஐக்கிய நாடுகளின சங்கத்தின் (League of Nations) பொருளாதார, நிதியத் துறை 'அயல் நாட்டுக் கொடுப்பலநிலை' என்ற தலைப்பில் வெளியிட்ட தொடர் அறிக்கைகளி னின்றும் (Series of memoranda) பிரிட்டிஷ் வர்த்தகப் போர்டார் (British Board of Trade) வெளியிட்டுள்ள புள்ளிவிபரங்களிலிருந்தும், ஐக்கிய அமெரிக்கா வின் வர்த்தகத்துறை (United States Department of Commerce) வெளியிட்டுள்ள புள்ளிவிபரங்களிலிருந்தும் எடுக்கப்பட்டனவே. வேறு மூலங்களிலிருந்து எடுக்கப் பட்ட புள்ளிவிபரங்கள் இவ்வத்தியாயத்தில் தனியாகக் கூறப்பட்டுள்ளன.

இத்தொகை, £ 122,000,000 ஒரு கருத்துப்படி, நாட்டின் ‘சேமிப்பு’ (savings) எனக் கொள்ளலாம். ஆனால் ஒன்று. சொற்களினால் வரும் குழப்பத்தினால் கருத்துக் குழப்பம் ஏற்படாமல் பார்த்துக்கொள்ளவேண்டும். கொடுப்பல்நிலைப் பட்டியலில் வரவுக் கணக்கு (income account) என்பதும் நாட்டு வருமானம் (National Income) என்பதும் ஒன்றாகாது. நாட்டு வருமானம் என்பது அந் நாட்டில் உள்ள தனிப்பட்ட ஆட்கள் உற்பத்தி செய்த பொருள்கள் அல்லது புரிந்த பணிகள் இவைகளின் மொத்தப் பணமதிப்பாகும். இப்பொருள்கள் அல்லது பணிகள் அல்லது அவைகளுக்காகச் செலுத்தப்படும் செல்லுகள் நாட்டின் எல்லைக்கு அப்பாற்பட்டோ அல்லது உட்பட்டோ இருக்கலாம். அயல்நாட்டுக் கொடுப்பல்நிலையின் வருமானக் கணக்கு என்பது (income account of the balance of payments) ஒரு நாட்டின் குடிமக்கள் (citizens of a nation) பிறநாடுகளின் குடிமக்களிடம் நிகழ்த்தும் பேரங்களின் (transaction) பதிவேடாகும் (record). இப்பதிவேட்டில் மேற்படி பேரங்களில் ஈடுபட்டுள்ள இருதரப்பினரில் எந்த ஒரு தரப்பினராவது கடனை ஏற்படுத்துவதோ அல்லது கடனை மீட்சி செய்வதோ இடம் பெறுவதில்லை. இதைப்போன்றே வரவுக் கணக்கின் (income account) நிகர மொத்தத்தை (net total), ஐந்தாம் அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ள நாட்டின் சேமிப்பு (saving of the nation) என்று குழப்ப முறுதல் கூடாது. சேமிப்பு என்பது நாட்டின் எல்லாக் குடிமக்களுடைய வருமானம், அவர்கள் நடப்புப் பொருள்களின் (current goods) மீது செலவழிக்கும் தொகைவிட அதிகமாக உள்ளதாகும். எனவே ‘சேமிப்பு’ என்னும் சொல்லை ஈண்டுக் கையாளாமலிருத்தல் நலம். ‘அயல்நாட்டுக் கொடுப்பல்நிலையின் வருமானக் கணக்கின் நிகர மொத்தம்’ என்று சுற்றி வளைத்துச் சொல்வதைவிட இதனை நாம் ‘வெளி உபரி’ (External Surplus) எனக் குறிப்பிடுவோம்.

வெளி உபரிக்கும் (External surplus) சேமிப்பிற்கும் (savings) இடையே பல ஒப்புமைகள் இருக்கின்றன. நாம் ஒவ்வொரு நாட்டையும் ஓர் அலகாக (unit) எடுத்துக்கொண்டு அதன் குடிமக்கள் சம்பந்தப்பட்ட எல்லா பேரங்களை மட்டும் (all transactions of its citizens alone) தனியாக ஒதுக்கிவிட்டால் அந்த நாட்டின் ‘வெளி உபரி’ (External surplus) தெரியவரும். இந்த ‘வெளி உபரி’ இக்கருத்துப்படி, ஒரு நாடு மற்ற, நாடுகளுக் கெதிராக வைத்துக் கொண்டிருக்கும் சேமிப்பாகும். ஒரு தனி ஆளின் சேமிப்பு என்பது இதுதான். ஒருவர் உற்பத்தி செய்யும் பொருள்கள் அல்லது புரியும் பணிகளுக்குப் பெறுகின்ற வருமானம், அல்லது அவர் பெறுகின்ற வட்டி வரவுகள் அல்லது நன்கொடைகள் ஓர்

புறம்; மற்ருெருபுறம் பிறரால் செய்யப்பட்ட பொருள்கள் அல்லது அளிக்கப்படும் பணிகள் இவைகளுக்கு அவர் செலவழிக்கும் செலவு அல்லது வட்டி செலுத்துதல் போன்ற செலவு இவை இரண்டுக்கும் உள்ள வேறுபாடுதான் சேமிப்பு என்பது. இக்கருத்துப்படியே, தனி ஆட்களுக்குப் பதிலாக அவ்விடத்தில் நாடுகளை வைத்து இவ்வாக்கியத்தை அமைத்தால், ஏறக்குறைய 'வெளிஉபரி'யின் சரியான விளக்கம் நமக்குக் கிடைக்கின்றது. மேலும் இந்த ஒப்புமை தொடர்ந்து செல்கிறது. ஒரு தனி ஆள் ஒரு குறிப்பிட்ட தொகையை சேமித்துவிட்டால் அவர் கீழ்க்கண்ட மூன்று செயல்களில் ஒன்றைச் செய்யமுடியும். அவர் தான் சேமித்தவற்றைப் பணமாக சேகரம் செய்து வைத்துக்கொள்ளலாம் அல்லது வேறு யாருக்காவது தான் சேமித்தவற்றைக் கடன் கொடுக்கலாம் (கடன் வாங்குபவர் அத்தொகையை முதலீடு செய்வதற்காக வாங்குகிருர் என்று எந்த விதமான உறுதியுமில்லை) அல்லது உருப்படியானதொரு முதலில் செலவு செய்யலாம். தனிப்பட்ட ஆளுக்கு, மேற்சொன்ன மூன்று வழிகளில் எந்த வழியைப் பின்பற்றினுலும் ஒன்றுதான். அவர் கடன் கொடுத்த தொகைக்கு வட்டியைப் பெறுவர் அல்லது தனது முதலீடு செய்த தொகைக்கு ஏதாவதொரு வகை வருமானத்தை, பணமாகவோ அல்லது நேரிடையானதொரு பயனையோ பெறுவர். ஆனுல் தான் சேகரம் செய்து வைத்திருக்கிற (hoarding) பணத்திலிருந்து மட்டும் எந்த விதமான வருமானமும் கிடைப்பதில்லை. ஆனுல் இம்மூன்று வழிகளில் ஒவ்வொன்றிலும் தனது முதலைப் (capital) பாதுகாக்கின்ருர். முதல் இரண்டு வழிகளும் எதிர்காலப் பொருள்களின் (future goods) மீது உரிமையை (claim) நல்குகின்றன. மூன்ருவது வழி சில உறுதிப் பொருள்களின் மீது நேரிடையான உடைமையை (ownership) நல்குகின்றது. ஆனுல், நாம் ஏற்கெனவே ஐந்தாம் அத்தியாயத்தில் பார்த்ததுபோல் சமூகத்திற்கு அவர் எந்த வழியை மேற்கொள்கின்ருர் என்பது மிக முக்கியமாக உள்ளது. சேமிப்புச் செய்யப்படும் ஒவ்வொரு அலகிற்கும் (units), கூடுதலோ அல்லது குறைவோ இன்றி, அதற்குச் சமமானதொரு முதலீட்டு அலகு (investment unit) இருக்கவேண்டும். அதுவே பொருளாதாரச் சமநிலையை உணர்த்தும்.

ஒருநாடு வெளி உபரியை (External surplus) சேர்த்து வைத்துள்ளது என வைத்துக்கொள்வோம். அதற்கும் அவற்றைக் கையாள சில குறிப்பிட்ட வழிகள் உள்ளன. அந்நாடு அவ்வுபரியைப் பொன்னுகச் சேர்த்து வைத்துக்கொள்ளலாம். ஆனுல் இவ்வழியில் அதற்கு எவ்வித வருமானமும் கிடைக்காது. ஆனுல் இவ்விதச் சேகரத்தின் மூலம் எதிர்காலத்தில் பிற நாடுகளின்

பொருள்களை உடைமையாக்கிக் கொள்ளலாம். அல்லது அவ்வுபரித் தொகையை மற்ற நாட்டிற்கு அல்லது நாடுகளுக்கு அந்நாடு கடன் கொடுக்கலாம். தனிப்பட்ட நாட்டைப் பொறுத்த வரையில் அது தனது உபரியை (surplus)ப் பொன்னாகச் சேகரம் செய்து வைத்துக்கொள்வதிலேயோ அல்லது கடன் கொடுப்பதிலேயோ முக்கியமான வேறுபாடு ஒன்றுமில்லை. இரு வழிகளிலுமே அது தனது மூலதனச் சொத்துக்களைப் (capital assets) பாதுகாத்துக்கொள்ளவியலும். ஆனால் ஐந்தாம் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள உவமையை வைத்து நோக்கின், கீழ்க்கண்ட கூற்றில் நமக்கு ஐயம் ஏற்பட வழியுள்ளது. அக்கூற்றாவது, ஒவ்வொரு நாடும் தனது வெளி உபரியை (External surplus) கடன் கொடுக்காமலும், சேகரம் செய்யாமலும் தனது முதலீட்டிற்கு ஒவ்வுமாறு தனது சேமிப்பைக் கடன் கொடுக்குமானால் அது உலக முழுமைக்குமே முக்கியத்துவம் வாய்ந்ததாகும் என்பதாம்.

பன்னாட்டு அரங்கில் உள்நாட்டு முதலீட்டிற்கு (domestic investment) ஒப்பாக இருக்கக்கூடியதெது? முதலீடென்பது, எதிர்கால ஆண்டுகளில் பகிர்வு செய்வதற்காக உள்ள பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் மொத்த அளிப்பை (total supply) அதிகரிக்கும் பொருட்டு செலவழிக்கப்படும் பணம் என்று விளக்கப்பட்டது. முதலீட்டிற்குப் பணம் போடுவதற்கு மூலதனம் (capital) கடன் வாங்கப்பட்டால், எதிர்காலத்தில் ஏற்படும் பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் அதிகரிப்பு கடன் பெறுபவரை (borrower) தனது நுகர்ச்சியைக் (consumption) குறைத்துக் கொள்ளாமலேயே தனது கடன் தொகைக்கு வட்டியைக் கொடுக்கத் துணை செய்யும். பன்னாட்டு அளவில் இதனைச் சொல்லும்போது, முதலீடு என்பது, தற்போது உள்ளதைவிட எதிர்காலத்தில் நாடுகளிடையே பரிவர்த்தனை செய்துகொள்ளுவதற்கு தற்போது உள்ளதைவிட எதிர்காலத்தில் அதிக அளவு பண்டங்களையும் பணிகளையும் உண்டுபண்ணுவதற்கு செலவழிக்கப்படும் வெளிஉபரி (External surplus) எனக் கூறலாம். தனி ஆள் ஒரு வீட்டின் மீது அல்லது தனது சொந்த நிருவாகத்தின் கீழுள்ள தொழிற்சாலையின் மீது முதலீடு (investment) செய்வதை நாடுகள் தங்களின் குடியேற்ற நாடுகளில் (colonies) முதலீடு செய்வதற்குச் சமமாகக் கூறலாம். சேமிப்பவர் முதலீடு செய்பவருக்குக் கடன் கொடுப்பதன் மூலம் ஏற்படுத்தும் மறைமுகமான முதலீட்டை ஒரு நாடு பிறிதொரு நாட்டிற்கு தன் ஏற்றுமதி வாணிபத்தைப் பெருக்கிக் கொள்ளும் பொருட்டு அளிக்கும் கடன்களுக்கு இணையாகக் கூறலாம். மேற்சொன்ன இரண்டு வழிகளிலும், வெளி உபரியைச் சேகரித்து வைத்துள்ள ஒரு நாடு தனது சேமிப்பின் மூலம் எதிர்காலத்தில்தான் அதிக

மான அளவு பண்டங்களையும் பணிகளையும் (முதலீடு நஷ்டத்தை உண்டுபண்ணுதவரையில்) இறக்குமதி செய்துகொள்ள வியலும். இந்த அதிகப்படியான இறக்குமதிக்குப் பதிலாக, தான் அதிக மான பண்டங்களையும் பணிகளையும் திருப்பித்தரவும் வேண்டிய தில்லை—அதாவது சேமிக்கும் நாடு அச்சேமிப்பினுல் வரும் முதலீடு அளிக்கும் உபரிப் பண்டங்களைக் கொண்டே (surplus goods) வாழ முடியும்.

இங்கே ஒரு ஐயம் எழுப்பப்படலாம். அதாவது எந்த நாடும் தனது தேவைக்கு அதிகமான அளவு இறக்குமதி செய்வதற்கு விரும்பாது என்பதே. குறிப்பாக வேலையின்மைக் காலங்களில் (periods of unemployment) எல்லா இறக்குமதிகளையும் தீமைக ளென மதிக்கும் மனப்பான்மை இருப்பது உண்மை. விலை கொடுக்காமல் பெறப்படும் இறக்குமதிகள் வரவேற்கத் தகுந்தன என்பதை உணருவதற்கு ஒரு நாடு தடையிலா வாணிபவாதி (Free trader) யாக இருக்கவேண்டு மென்பதில்லை. தன் கடந்த கால சேமிப்பினுல், தான் தற்போது உற்பத்தி செய்கின்ற பண்டங்களைக் காட்டிலும் அதிகமாகப் பெறுவதை எந்தத் தனி ஆளும் மறுக்கப்போவதில்லை. தான் கொடுப்பதைவிட அதிக மாகப் பெறுவதன்மூலம் எந்த நபரும் ஏழையாக்ப் போவதில்லை. தனி ஆள் பொறுத்தமட்டில் எது உண்மையோ அதுவேதான் நாட்டைப் பொறுத்தவரையிலும் உண்மையாக இருக்கின்றது. இறக்குமதிகளில் ஏற்படும் அதிகரிப்புக் குறிப்பிட்ட தொழில்களை தாற்காலிகமாக இடர்ப்படுத்தக் கூடும். ஆனுல், நாம் தற்போது விவாதித்துக் கொண்டிருக்கிற இத்தன்மையான இறக்குமதிகளால் நாடு முழுமைக்கும் தீங்கு ஏற்பட்டுவிடாது. இவ்விறக்குமதிகள், நாட்டின் குடிமக்கள் நுகருகின்ற பண்டங்கள், பணிகள் ஆகிய வற்றின் அதிகரிப்பையே உணர்த்துகின்றன. எந்த ஒரு நாடும் தனது கடந்த கால முதலீட்டிற்கு வட்டித்தொகையாக வருகின்ற இந்த இறக்குமதிகளைத் தடை செய்தால், அது தன்னைத்தானே ஏழ்மையாகச் செய்துகொள்கின்றது என்றுதான் பொருள்.

எனவே, பன்னுட்டு முதலீடு (International Investment) என்பதை நாம் கீழ்க்கண்டவாறு விளக்கலாம். பன்னுட்டு முதலீடு என்பது ஒரு நாடு மற்றொரு நாட்டில் (நேரிடையாகவோ அல்லது கடனளிப்பு மூலமோ) முதலீடு செய்வதாகும். இம்முதலீட்டால் பின்னர் சொல்லப்பட்ட நாட்டின் பண்டங்கள், பணிகள் ஆகிய வற்றின் ஏற்றுமதிகள் பின்னர்ச் சொல்லப்பட்ட நாட்டின் இறக்கு மதிகள் ஆகிய இரண்டுமே அதிகரிக்கும்படி இருக்கும். இவ் விளக்கத்தை ஏற்றுக்கொள்ளாதவர்கள் அயல்நாட்டுக் கடனையே

தீமையெனக் கூறுபவராவர். ஏனெனில் அயல்நாட்டுக் கடனில் நாடுகளுக்கிடையே பண்டங்கள், பணிகள் மூலமேயன்றி வேறு வழிகளில் வட்டியைச் செலுத்த முடியாது. அவ் வட்டியைப் பொன்னாகச் செலுத்த இயலாது. ஏனெனில் ஒரு நாட்டின் பொன்னின் அளிப்பு குறைவாகவே யிருக்கும். கடனை ஈந்த நாடு (creditor country) பண்டங்கள், பணிகள் மூலமாகத் தான் கொடுத்த கடனைத் திருப்பிப் பெற மறுத்தால், கடனாளி நாட்டிற்குக் கடனைத் திருப்பி அடைக்காமலிருக்கும் குற்றத்தை இழைப்பதை விட வேறு வழி இல்லை.

தற்போது, நாம் பன்னாட்டு எல்லைக்கான (International sphere) சேமிப்பு-முதலீட்டுக் கோட்பாட்டை அணுகிக் கொண்டிருக்கிறோம். இக்கோட்பாட்டினை மீண்டும் தொடர்ந்து ஆராய்வதற்கு முன்னர் நாம் அரைகுறையாக விட்டுச் சென்ற அயல் நாட்டுக் கொடுப்பல் நிலைக்கு மீண்டும் வருவோம். ஒரு நாடு தனது வெளிக் கொடுப்பல் நிலையை (External balance)ச் சரிக்கட்டுவதற்குக் கையாளும் பல முறைகளிடையே அயல்நாட்டு கொடுப்பல் நிலயே எவ்வாறு தனித்தன்மையதாகக் காணப்படுகிறதென்பதையும் ஆராய்வோம்.

வரவுக்கணக்கிற்குச் சரிநேராக உள்ளது (counterpart) மூலதனக்கணக்காகும் (capital account). அயல்நாட்டுச் செலுத்து நிலை (balance of payments) முழுவதுமே சரியாக சுன்னம் (zero) அளவிற்கு ஈடுசெய்யப்படுவதால், வரவுக்கணக்கின் நிகர மொத்தமும் (the net total of the income account) மூலதனக் கணக்கின் நிகர மொத்தமும் நேர் எதிரிடையாக இருக்கவேண்டுமென்பது தெளிவாகின்றது. எனவே வரவுக் கணக்கின் நிகர மொத்தம் +£122,000,000 ஆக இருந்தால் மூலதனக் கணக்கின் நிகர மொத்தம்—£122,000,000 ஆக இருக்கும்.

வரவுக் கணக்கின் அமைப்பு அதனுடைய நிகர மொத்தத்தை (net total) நிர்ணயிக்குமளவிற்கு, துரதிருஷ்டவசமாக அவ்வளவு எளிதான தொன்றாக இல்லை. ரொக்கத்தைச் சேகரம் செய்து வைக்கும் முறைகளில் கீழ்க்கண்ட மூன்று இனங்களைக் கொள்வதே சரியானதும் குறிக்கோளானதுமான (ideal) வழியாகும். அவ்வினங்களாவன, குடியேற்ற நாடுகளில் (colonies) நேரிடைப் பன்னாட்டு முதலீட்டைச் செய்தல்; அல்லது தாய்நாட்டிற்குச் சொந்தமான வெளிநாடுகளிலுள்ள தொழில் நிறுவனங்களில் (enterprises) பன்னாட்டு முதலீடு செய்தல்; மூன்றாவதாக பிறநாடுகளுக்குக் கடன் கொடுத்தல் ஆகியவையாம். இவற்றுள் முதலாவ

தாகச் சொல்லப்பட்ட இனம் எளிதாகக் கணக்கிடக் கூடியதாகும்; ஏனெனில் நாட்டின் பன்னாட்டுச் செலாவணியின் இருப்பு அதிகரித்துவிட்டதையோ அல்லது குறைந்துவிட்டதையோ அதன் நிகரப் பொன் இறக்குமதி அல்லது ஏற்றுமதி (net import or export of gold) உணர்த்தும்.[1] பொன்திட்டம் அமலில் இருந்தாலும் இல்லாவிட்டாலும் மேற்சொன்ன நிகழ்ச்சி உண்மையாக நிகழும். தங்களது நிகழ்கால அனுபவத்தைப் பின்பற்றி, மாற்றுத் தன்மைக்கான சட்டதிட்டங்கள் தாற்காலிகமாக நிறுத்திவைக்கப் பட்ட போதிலும் (suspended), மையபாங்குகள் பொன்னை வாங்கவும் விற்கவும் செய்யும். இதில் வேறுபாடு என்னவெனில் பொன் திட்டத்தின்கீழ், மையபாங்கு தன் தேவைக்கேற்ற அளவு பொன்னை வாங்குதலோ விற்றலோ இயலாது. நிர்ணயிக்கப்பட்ட விலைகளில் வரையறையற்ற அளவுகளில் பொன்னை வாங்கும்படி மையபாங்கு கட்டாயப்படுத்தப்படுகிறது. மாற்றுத் தன்மையற்ற செலாவணிகளின் ஆளுகையின் கீழ் (regime) தனது நோக்கப்படி பல்வேறு விலைகளில் பொன்னை வாங்கவும் விற்கவும் செய்யலாம். எனவே முதலாவதாக உள்ள இனம் பொன்.[1]

துரதிருஷ்ட வசமாக மற்ற இரண்டு இனங்களும் தனித்தனியாகக் குறிப்பிடும்படி இல்லை. உண்மையில், சில நாடுகள் தாங்கள் கடன் பெறுகின்ற அல்லது கடன் கொடுக்கிற நிகர அளவைக்

1 தொழில் முறைக்குப்பயன் படுத்துவதற்காக அது இறக்குமதி செய்யப்படுகின்ற அளவு நீங்கலாக, அல்லது நாட்டின் கனித் தொழில் பண்டங்களுள் ஒன்று என்கிற முறையில் மட்டும் ஏற்றுமதி செய்யப்படுவதைத் தவிர்த்து என இங்கே பொருள் கொள்ள வேண்டும். இறக்குமதிகளைப் பொறுத்த மட்டில் பணச் சார்பற்ற (non-monetary) இறக்குமதிகளை பணச்சார்புடைய இறக்குமதிகளினின்றும் வேறுபடுத்திக்கூற இயலாது. ஆனால் ஒரு வேறுபாடு. பெருவாரியான நாடுகளில் பணச்சார்பற்ற இறக்குமதிகள் (non-monetary imports) பெரும்பாலும் குறைந்த அளவேயிருப்பதால் அவற்றைப் பொருட்படுத்தாமல் விட்டு விடலாம். ஆனால் தென் ஆப்பிரிக்காவினின்றும் ஏற்றுமதியாகின்ற ஏராளமான அளவு பொன்னின் ஏற்றுமதி மூலதன ஏற்றுமதியாகக் கருதப்படுவதில்லை; ஆனால் அது இரும்பு அல்லது நிலக்கரி இவைகளின் ஏற்றுமதியைப் போலவேதான் கருதப் படுகின்றது. எனவே அது புலனாகும் வாணிபக் கொடுப்பல் நிலைப் பட்டியலில் இடம்பெற வேண்டும்.

1 அயல் நாட்டுக் கொடுப்பல் நிலைப்பட்டியலைத் தொகுக்கின்றவர்கள் இந்த இனத்தை அப்பட்டியலில் சேர்க்கும் போது பலவிதமாக வேறுபடுகின்றனர். சிலர் இதனை வரவுக் கணக்கில் சேர்ககின்றனர். சிலர் இதனை மூலதனக்கணக்கிலும் (Capital account) இன்னும் சிலர் தனியான இனமாகவும் எழுதுகின்றனர். இங்கே கையாளப்பட்டுள்ள முறை மிகவும் காரணகாரியத் தொடர்புடையதாகத் (logical) தோன்றுகிறது. ஆனால் இவ்வாறு அயல்நாட்டு கொடுப்பல் நிலைப் பட்டியலை அமைக்கும் வகையில் ஒரு சீரான முறை (uniformity of method) இல்லை. யென்பதை நாம் உணர வேண்டும். மேற்கொண்டு பயன்படுத்தப் போகும் பட்டியல் மற்றப் பல பட்டியல்களைக் காட்டிலும் மாறுபட்டதாகவுள்ளது. இத்தகைய பட்டியல்தான் மிகச் சிறந்த தென்பதற்கு இது கையாளப்படவில்லை. இந்த அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள வாதத்திற்கும் பொறுத்தமாக உள்ள தென்பதற்காகவே இவ்வகைப் பட்டியல் கையாளப்பட்டுள்ளது.

(net volume) கணக்கிட்டுப் பார்ப்பதுமில்லை. அவைகளின் வருமானக் கணக்கின் மூலம் தங்களின் மூலதனக் கணக்கின் (Capital account) நிகர மொத்தத்தை மட்டும் தெரிந்து வைத்துக் கொள்கின்றன. இந்தக் கணக்குடன் கடன் பெறுகின்ற அல்லது கடன் கொடுக்கின்ற தொகையின் அளவு, சரியான மொத்தத்தொகையை (correct total) அடைவதற்குத் தகுந்தாற்போல், இடையில் சேர்க்கப்படுகிறது (inserted) இந்த முறையில்தான் பிரிட்டிஷ் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலைப்பட்டியல் எல்லா ஆண்டுகளிலும் (சமீப, ஆண்டுகளில் தவிர) அமைக்கப்பட்டது. கீழே கொடுக்கப்பட்டிருப்பது 1928-ஆம் ஆண்டின் அயல்நாட்டுச் கொடுப்பல் நிலைப் புள்ளி விவரங்களாகும்:

| | |
|---|---|
| புலனாகும் வாணிபத்தின் நிகர இருப்பு | — £ 353,000,000 |
| புலனாகா வாணிபத்தின் நிகர இருப்பு | + £ 225,000,000 |
| வட்டி (நிகர வட்டி) | + £ 250,000,000 |
| வரவுக் கணக்கின் நிகர மொத்தம் | + £ 122,000,000 |
| பொன் (நிகரமான)[1] | — £ 5,000,000 |
| மூலதனப் போக்கு (நிகரமான) | — £ 117,000,000 |
| மூலதனக்கணக்கின் (capital account)[1] நிகரமொத்தம். | — £ 122,000,000 |

மேற்கண்ட புள்ளி விபரங்களுக்கு விளக்கம் இதுதான். 1928-ஆம் ஆண்டில் கிரேட் பிரிட்டன் தான் ஏற்றுமதி செய்த பண்டங்கள் பணிகளைக் (goods and services) காட்டிலும் அதிகமாக £ 128,000,000 மதிப்புடைய பண்டங்கள் பணிகளை இறக்குமதி செய்தது (அதாவது புலனாகும் கணக்கில்—visible account - £ 353 மில்லியன் செலவுத் தொகையில் புலனாகாக் கணக்கின் வரவுத் தொகை £ 225 மில்லியன் போக பாக்கித் தொகை). இவ்வாறு புலனாகும், புலனாகா வாணிபத்தால் செலவினத்தை (debit) அடைந்தபோதிலும் தனது வட்டி வருமானத்தின் (interest income) மூலம் பிரிட்டன் தனது மூலதனத்தை £122,000,000 அதிகரித்துக் கொள்ள முடிந்தது. மேற்படி தொகையை மூலதனத்தில்

[1] இந்த இரு இனங்களும் வெளிச் செல்லுக்கள் (out payments) — அதாவது கிரேட் பிரிட்டன் பிறநாடுகளுக்குச் செலுத்திய தொகை. ஆனால் கிரேட் பிரிட்டனுக்குள் பொன் வந்து குவிந்தது. £ 117,000,000 முதலீடு பிரிட்டனில் செய்யப்பட்டமையால் பிரிட்டிஷ் மூலதனச் சொத்துக்களின் (capital assets) மொத்தத் தொகை அதிகரித்தது.

சேர்த்துக்கொண்ட பிறகு, நாடு £ 5,000,000 ரொக்கமாக (அதாவது பொன்னாக) தனக்கு எடுத்துக் கொண்டது போக மீதி £ 117,000,000 த்தைக் கடன் கொடுத்தது.

மற்ற நாடுகளில், குறிப்பாக ஐக்கிய அமெரிக்காவில், மூலதனப் போக்கைக் (movement of capital) கணக்கிடுவதற்கு நேரடியான முயற்சி செய்யப்பட்டு வருகிறது. அவ்விதமான கணக்கு, குறுங்கால மூலதனம் (short-term capital) நெடுங்கால மூலதனம் (long-term capital) ஆகிய இரு முக்கியத் தலைப்புகளைக் கொண்டதாகவுள்ளது. குறுங்கால மூலதனம் (short-term capital) என்பதில் பாங்குநிதிகள் மாற்று உண்டியல்களை யொத்த வணிகக் கடன்கள் (commercial loans), வசூல் செய்யப்படாத கடன்கள் (uncollected debts) முதலியவை அடங்கும் நெடுங்கால மூலதனம் என்பது கடன் உறுதிப் பாத்திரங்களின் (securities) ஓர் அறுதியிட்ட (definite) வெளியீட்டின் மூலம் பெறப்படுவதாகும். இக்கடன் பத்திரங்களில் அவைகள் மீட்கப்படும் கடைசி தேதியும் குறிப்பிடப்பட்டிருக்கும், பன்னாட்டு முதலீட்டிற்கு (international investment) குறுங்காலக் கடன்களைப் பயன்படுத்துவதில்லை. ஒவ்வொரு நாட்டினுள்ளும் (within each nation) பொதுமக்கள் பாங்குகளுக்கு அளிக்கும் குறுங்காலக் கடன்கள் (அதாவது பாங்கு வைப்புக்கள்) சில சமயங்களில் குறிப்பிட்ட பாதுகாப்பு முறைகளுடன் முதலீட்டிற்குப் பயன்படுத்தப்படுகின்றன. பாங்கு வைப்புக்கள் அனைத்தும் ஒரே சமயத்தில் திரும்பப் பெறப்படுவதில்லை (withdrawn). ஆதலால், பாங்குகள் அவற்றை அவ்வாறு பயன்படுத்துகின்றன. ஆனால் பன்னாட்டுக் குறுங்கால நிதிகளைப் (international short term debts) பொறுத்த மட்டில் நிலை வேறாக உள்ளது. போர்க்கால ஆண்டுகளில் நிச்சயமாக அந்நிதிகள் முற்றிலுமே திருப்பப் பெறப்படும். இங்கு ஒன்றை முக்கியமாகக் கவனிக்க வேண்டும். குறுங்காலக் கடன்கள் பன்னாட்டு முதலீட்டிற்குப் (international investment) பயன்படுத்தப்படுவதில்லை என்று கூறுவதில் பிழையில்லை. ஆனால் எல்லா நெடுங்காலக் கடன்களும் பன்னாட்டு முதலீட்டிற்குப் பயன் படுத்தப்படுகின்றன என்று திடமாகக் கூற முடியாது. 1914-18-ஆம் ஆண்டுகளில் நடந்த போருக்கு முன்னால் வேண்டுமானால் அவ்வாறு கூறுவது கூடுமான வரையில் சரியானதாக இருந்திருக்கலாம். ஆனால் அப்போதும் கூட, பல நெடுங்காலக் கடன்கள் அரசாங்கத்திற்கு பணப் பற்றாக்குறை (deficit) ஏற்படும்போது ஈடு செய்வதற்கும், போர்ச் செலவுகளுக்கு நிதி அளிக்கவும் பயன் படுத்தப்பட்டன. அவ்வாறு பயன்படுத்தப்பட்ட கடன்தொகைகள் நாட்டின் எதிர்கால ஏற்றுமதிகளை அதிகரிப்பதற்குச் சற்றும் பயன் படுத்தப்படவில்லை.

போருக்கிடையேயுள்ள காலத்தில் (inter-war period) பின்னதாகச் சொல்லப்பட்ட கடன் வகை பன்னாட்டு முதலீடு முழுவதிலும் அநேகமாக இடம்பெற்றது. எனவே குறுங்காலக் கடன்களுக்கும் நெடுங்காலக் கடன்களுக்கும் உள்ள வேறுபாடு ஆக்கமற்ற கடன்களுக்கும் (unproductive loans) பன்னாட்டு முதலீட்டிற்கும் (international investment) உள்ள வேறுபாட்டினை யொத்ததே என்று கருத இயலாது. இந்த வேறுபாடு வசதியின் (convenience) பொருட்டே கொள்ளப்படுகிறது.

மூலதனப் போக்குகளை நேரடி மதிப்பீடு (direct estimate of capital movements) செய்யும் முறைக்கு எடுத்துக்காட்டாக ஐக்கிய அமெரிக்காவின் 1929ஆம் ஆண்டின் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையின் புள்ளி விபரங்களைக் காட்டலாம். இக் கணக்கில் வரும் இருவகை மொத்தத் தொகைகளும் (totals) ஒரேவிதமாக இல்லை என்பதையும் கடைசி இனமாக 'தவறுகளும், விட்டுப்போனவைகளும்' (errors and commissions) என்னும் இனம் சேர்க்கப்பட வேண்டுமென்பதையும் இங்குக் கவனிக்கவேண்டும். ஆனால் இம் முறையில் ஒரு குறை உண்டு. கணக்குச் செப்பமாக இருக்கும் போது இவ்வாறு 'தவறுகளும் விட்டுப்போனவைகளும்' என்னும் இனத்தைச் சேர்ப்பதன் மூலம் சிரமமாக அடைந்த இலாபத்தில் ஒரு பகுதியை இழக்க நேரிடுகிறது.

ஐக்கிய அமெரிக்காவின் (1929ஆம் ஆண்டின்) அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை:—

| | | |
|---|---|---|
| புலனாகும் வாணிபத்தின் நிகர இருப்பு | + | $ 382,000,000 |
| புலனாகா வாணிபத்தின் நிகர இருப்பு | — | 681,000,000 |
| வட்டி (நிகரம்) | + | 699,000,000 |
| வருமானக் கணக்கின் நிகர மொத்தம் (அயல்நாடுகளின்றும் கிடைத்த உபரித் தொகை) | + | $ 400,000,000 |
| பொன் (நிகரம்) | — | $ 120,000,000 |
| நெடுங்கால மூலதனப் போக்கின் நிகரத்தொகை | — | 94,000,000 |
| குறுங்கால மூலதனப் போக்கின் நிகரத்தொகை | — | 95,000,000 |
| மூலதனக் கணக்கின் நிகர மொத்தம் | — | $ 309,000,000 |
| தவறுகளும் விட்டுப்போனவைகளும் | — | $ 91,000,000 |

மேற்படி புள்ளி விபரங்களின் விளக்கம் பிரிட்டிஷ் மதிப்பீடுகளின் விளக்கத்தை ஒத்தாகவே யுள்ளது. புலனுகும், புலனுகா வாணிபம் ஆகிய இரண்டையும் சேர்த்துக் கணக்கிடும்போது, 1929ஆம் ஆண்டில் ஐக்கிய அமெரிக்கா தான் விற்றதைக் காட்டிலும் $ 299,000,000 பெறுமான பண்டங்களையும் பணிகளையும் அதிகமாக வாங்கியிருக்கிறது—பணிகளின் மூலம் வந்த செலவில் பெரும் பகுதி பண்டங்களின் மூலம் வந்த வரவினுல் ஓரளவு சரிக்கட்டப் பட்டு வருகிறது. எனவே தனது மூலதனத்தை அதிகரித்துக் கொள்வதற்கு தனது வட்டி வருமானமாகிய $ 699,000,000த்தில் $ 400,000,000 ஐப் பயன்படுத்துகிறது. இந்தத் தொகை $ 400,000,000 ல் $ 120,000,000 ஐ எடுத்துப் பொன்னுகமாற்றித் தனது நெடுங்காலக் கடன்களை $ 94,000,000 மாக அதிகப்படுத்திக் கொள்வதற்கும் ஏறக்குறைய அதே தொகையளவு தனது குறுங்காலக் கடன்களை அதிகப்படுத்திக்கொள்வதற்கு (to square the accounts) $ 91,000,000 தேவைப்பட்டது. ஐக்கிய அமெரிக்காவின் வர்த்தகத் துறையினரைப்பற்றி இங்கு ஒன்று கூற வேண்டும். அமெரிக்காவின் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையைப் பற்றிய தங்களது துறையின் புள்ளி விபரங்களை வர்த்தகத் துறையினர் மிக விரிவாகத் தந்துள்ளனர். மேலே சுருக்கமாக எழுதப் பட்டுள்ள இனங்களின் (sub-items) மொத்தத் தொகையேயாகும். இவ்வாருன துணை இனங்கள் நூற்றுக்கு மேலுள்ளன. இதுபோன்று ஏனைய அரசாங்கங்களும் விரிவான கணக்குகளைத் தருமானுல் இது சம்பந்தமான நமது அறிவு இன்னும் பெருகும்.

மேலே குறிப்பிடப்பட்டுள்ள பிரிட்டிஷ் அமெரிக்கா அயல் நாட்டுக் கொடுப்பல்நிலைப் பட்டியல்கள் இரண்டும் தங்களது வருமானக் கணக்கில் (income account) ஒரு நிகர மொத்தத்தைச் (a net total) சுட்டுகின்றன. இரு நாடுகளுமே அந்த சமயத்தில் கடன் கொடுக்கும் நாடுகளாக இருந்தன. எனவே ஒரு கடன் வாங்கும் நாட்டின் அயல்நாட்டுக் கொடுப்பல்நிலை பற்றியும் தெரிந்துகொள்வது நலமல்லவா? கீழே ஆஸ்திரேலியாவின் (1928ஆம் ஆண்டு ஜூலை மாதத்தில் ஆரம்பித்து 1929ஆம் ஆண்டு ஜூன் மாதத்துடன் முடிவடைந்த ஓராண்டின்) அயல் நாட்டுக் கொடுப்பல் நிலைப் பட்டியல் தரப்பட்டுள்ளது. அந்த ஆண்டில் ஆஸ்திரேலியா, ஒரு கடன் வாங்கும் நாடாக இருந்தது.[1]

1. இப்புள்ளி விவரங்கள் டாக்டர் ரோலண்டு வில்சன் அவர்களால் தரப் பட்டவை.

| | | |
|---|---|---|
| புலனாகும் வாணிபத்தில் நிகர இருப்பு | — | £ 8,385,000 |
| புலனாகா வாணிபத்தில் நிகர இருப்பு | + | 3,902,000 |
| வட்டி (நிகரம்) | — | 34,977,000 |
| வரவுக் கணக்கின் நிகர மொத்தம் | | — £ 39,460,000 |
| பொன் (நிகரம்) | + | £ 768,000 |
| மூலதனப் போக்கின் நிகரத் தொகை | + | 38,692,000 |
| மூலதனக் கணக்கின் நிகரத் தொகை | | + £ 39,460,000 |

இந்த ஆண்டில் ஆஸ்திரேலியா தனது அதிகமான இறக்குமதிகளுக்குப் (excessive imports) பணம் கொடுக்கும் தனது பழைய கடன்களுக்கு வட்டி செலுத்தவும் கடன் வாங்கியது. அந்த ஆண்டில் அதனுடைய இறக்குமதிகளின் (புலனாகும், புலனாகா இறக்குமதிகள் ஆகிய இரண்டும் சேர்ந்து) மதிப்பு £ 4,483,000 ஆகும். எனவே ஆஸ்திரேலியா அப்போது கிரேட் பிரிட்டனுக்கு எதிரிடையான நிலையிலிருந்தது எனக் கூறலாம். கிரேட்பிரிட்டன் தனது அதிகமான இறக்குமதிகளுக்கு தனது வட்டி வருமானங்களிலிருந்து பணம் கொடுத்ததோடல்லாமல் அவ் வருமானங்களால் £ 100 மில்லியன் அளவிற்கு மேற்கொண்டும் கடன் அளிப்பதற்கும் வேண்டிய தொகையைப் பெற்றிருந்தது.

## பன்னாட்டு முதலீடு
(International Investment)

உள்நாட்டு சேமிப்பு—முதலீடு கோட்பாட்டு ரீதியில் நாம் அமைத்துவரும் பன்னாட்டுச் சமநிலைக் கோட்பாட்டை மீண்டும் ஆராய்வோம்.

உள்நாட்டைப் பொறுத்தவரையில், ஐந்தாம் அத்தியாயத்தில் கூறியிருப்பது முதலீட்டிற்கும் அதிகமான அளவு சேமிப்பு இருக்குமானால் அது சமன்கேட்டை (disequilibrium) விளைவிக்கும். என்பதாகும். இதனால், தொழில்கள் உற்பத்திசெய்யும் பொருள்களை வாங்குவதற்கான வாங்குந்திறன் (purchasing power) குறைந்து விலைகள் குறையும்; வேலையின்மை (unemployment) ஏற்படும். இந்த விளைவுகள் எதனால் ஏற்படுகின்றன? பணம் அதிகமாகச் சேமித்துவைக்கப்படுவதால் தொழில்களால் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை வாங்குவதற்காக அங்காடியை நோக்கிவந்து கொண்டிருக்கும் பணம், அத்தொழிற் பொருள்களை

உற்பத்தி செய்வதற்கான உற்பத்திச் செலவுத் தொகையை விட குறைந்து போகின்றது—அதாவது அந்தப் பொருள்களை உற்பத்தி செய்வதற்காக செலுத்தப்பட்ட தொகைகளைக் காட்டிலும் குறைந்துவிடுகிறது. எதிர்காலத்திற்கான நிதியச் செலவினமாக சேமிப்புச் செய்யப்படுகிறது. ஆனால், நாட்டின் மூலதனச் செல்வத்தை (capital wealth) அதிகரிக்கும் இச்சேமிப்பு, எதிர் காலத்தில் இவ்விதமாகத்தான் செலவழிக்கப்பட வேண்டுமென்றும் நியமனம் எதுவுமின்றி, செய்யப்படுகிறது. பணமாகப் சேமிப்புச் செய்யப்படுவதாலும் அல்லது பாங்குகளில் முடங்கிக் கிடக்கும் வைப்புக்களாக (deposits) பணம் சேமித்துவைக்கப் படுவதானுலும் மேற்படி நிகழ்ச்சி உண்மையில் நடைபெறுகிறது. பணத்தைச் சேகரம் செய்துவைப்பதன் மூலம் செய்யப்படும் சேமிப்பில் அதிகப்படியான தீமை ஒன்று ஏற்படுகிறது. பணமாகச் சேமிக்கப்படுவதால் மற்ற நோக்கங்களுக்கு செலவழிப்பதற்குப் பணம் குறையும். பன்னுட்டு அரங்கிலும் (international sphere) இந்த ஒப்புமை இருந்தாகவேண்டும் என்று கூறுவதற்கிட மில்லை. ஆனல், உள்நாட்டு அரங்கிற்கும் (domestic sphere) பன்னுட்டு அரங்கிற்கும் பல குறிப்பிடத்தக்க ஒப்புமைகள் உண்டு. உதாரணமாக வெளி உபரியைச் (External surplus) சேகரித்து வைத்துள்ள நாடு ஒன்று அதனைக் கடன் கொடுக்க மறுத்து, அவ்வுபரி முழுவதையும் பொன்னுகத்தான் பெற்றுக்கொள்ள முடியும் என்ற நிபந்தனையையும் விதிக்குமானுல், மற்ற நாடுகளில் இதனுல் உடனடியாக பொன் தட்டுப்பாடு ஏற்பட்டுவிடும். இந்த நாடுகளில் பொன் திட்டம் அமுலில் இருக்குமானுல் அந்நாடுகள் தங்களின் செலாவணிகளைக் கட்டுப்படுத்தத் துவங்குவதுடன் வட்டிவீதங்களையும் அதிகரிக்கும். இதனுல் அந்த நாடுகளில் உள்நாட்டுச் சேமிப்பு (domestic saving) உள்நாட்டு முதலீட்டை (domestic investment) விட அதிகமாகும். இவ்விதமான இச் சமன்கேடு ஏற்கெனவே பன்னுட்டு அரங்கில் வெளி உபரிக்கும் பன்னுட்டு முதலீட்டிற்குமுள்ள வேறுபாட்டால் ஏற்படும் சமன் கேட்டுடன் (disequilibrium) சேர்ந்துகொண்டு சமன்கேட்டை அதிகப்படுத்தும். இவ்விதமாக நாடுகள் பொன்திட்டத்தில் (gold standard) இல்லை யெனினும் வெளிஉபரியைக் (External surplus) கொண்ட நாட்டிற்குத் தாங்கள் வைத்திருக்கும் அயல் நாட்டுச் செலாவணிகளின் காப்புகளினின்றும் (reserves of foreign currencies) பணம் செலுத்தும். தங்களது இறக்குமதிகளைக் குறைத்துக் கொள்வதன் மூலம் அவைகள் சமன்பாட்டைக் கொண்டுவர எத்தனிக்கும். இவ்வாறுக அவை பன்னுட்டு வாணிபத்தில் ஒரு பொதுவான கட்டு திட்டத்தை (a general restriction) ஏற்படுத்துகின்றன.

வெளி உபரியை வைத்திருக்கும் நாடு இரண்டாவது மாற்று வழியாக (second alternative) தனது வெளி உபரியைப் (External surplus) பொன்னாகப் பெற்றுக் கொள்ளாமல் அயல்நாடு களுக்குக் கடனாக அந்த உபரியைக் கொடுக்குமானால் (பன்னாட்டு மூதலீட்டிற்கு அதனைப் பயன்படுத்திக் கொள்ளாமல்), இதனால் விளையும் உடனடியான விளைவுகள் அவ்வளவு கெடுதலாக இருக்க மாட்டா. ஏனெனில், அயல் நாட்டினர் தங்களிடமுள்ள வெளி உபரியை (External surplus) கடனாக வாங்கியும் வைத்திருந்திருக்க லாம். இவ்வாறான எதிர் வெளி உபரி (negative external surplus) —அல்லது வெளிப்பற்றுக்குறை (External Deficit)—கடன் கொடுக் கும் நாடு தருகின்ற நேர்நிலை வெளி உபரியினால் (positive external surplus) சரிக்கட்டப்படும். இது உள் நாட்டில் ஒரு சாரார் செய்யும் சேமிப்பானது, மற்றொரு சாரார் செய்யும் சேமிப்பின்மையை (dis-saving) போக்கப்படுவதை ஒத்திருக்கின்றது. ஆனால் நாள டைவில் இதன் விளைவுகள் கேடு விளைவிப்பனவாக இருக்கும். ஏனெ னில் சேமிப்பவர்கள் (savers) சேமிப்பு செய்யாதவர்கள் (dissavers) பணத்தைப் பரிசாக அளிப்பதில்லை; கடனாகவே அளிக்கின்றனர். வாங்கும் கடனுக்குரிய வட்டியும் அவற்றை திருப்பித்தரும் சூழ்நிலை யும் கடன் வாங்கிய நாட்டின் செல்வத்தை, கடன் கொடுத்த நாட் டுக்குத் திரும்பிவிட வழி செய்யுமாகலானும் இந்த பேரமானது கடன் வாங்கும் நாட்டை, அதன் எதிர்கால ஏற்றுமதித் திறனை, பாதிக்கு மாதலாலும் இதைப் போன்ற செல்வமாற்றம் (transfer of wealth) முடிவில் ஒரு சுமையாகி விடும். வருவாய்க்கு வழி செய் யும் முதலை உற்பத்தி செய்யாமல் அதே சமயத்தில் கடனை மட்டும் உண்டாக்குதல் வறுமைக்கு வழி வகுப்பதாகும்.

வெளி உபரிக்கும் (External surplus) பன்னாட்டு முதலீட்டிற்கு முள்ள தொடர்புகள் (relationships) சேமிப்பிற்கும் முதலீட்டிற்கு முள்ள தொடர்புகளுக்குச் சரி நிகராக உள்ளன என்று கூற இய லாது. ஆனால் முடிவாகப் பார்க்குமிடத்து இவை யிரண்டுக்கு மிடையே வேற்றுமைகளை விட ஒப்புமைகளே அதிகமாக உள்ளன. மேற் சொல்லப்பட்ட இரண்டிலுமே, பணத்தை அதிகமாகக் குவித்தலின் மூலமோ அல்லது கடன் வாங்குவதன் மூலம் பணத் தைக் குவித்து வைத்துக்கொள்வதன் மூலமோ தனிப்பட்ட மனி தரோ அல்லது நாடோ செல்வராக முடியும்; ஆனால் சமுதாயம் இதனால் செல்வமுள்ளதாக ஆக முடியாது. எனவே நுகராமல் சேர்த்து வைக்கின்ற சேமிப்பு அல்லது வெளி உபரியினால் யாதொரு பயனுமில்லாமலிருப்பதுடன் அவ்வாறு சேர்த்து வைப்பது ஏமாற் றத்தைத் தருவதாகவே இருக்கும். இவ்வாறு செல்வம் ஈட்டும் முயற்சியானது கடன் வாங்குபவரின் எதிர்கால பொருள் நுகர்ச்சி

யைப் (consumption of goods) பாதிப்பதாகவே யிருக்கும். இவ் வழியில் செல்வம் ஈட்டப்படுமானல் உலகத்தில் கீழ்க்கண்ட இரு பிரச்சினைகளுள் ஏதாவதொன்று இருந்தே தீரும்; அவைகளுள் ஒன்று, கடன்களைத் திருப்பித் தராமை (default on debts) மற்றொன்று கடனாளி (debtor) அடிமைப்படுதல்.

எனவே அயல் நாட்டுக் கடனளிப்பிற்குக் கீழ்க்கண்ட இரு கோட்பாடுகள் இருக்க வேண்டும். வெளி உபரியை (external surplus)வைத்திருக்கும் கடனளிக்கும் நாடுகள் (creditor countries) தங்களிடமுள்ள வெளி உபரியின் அளவிற்கு ஆக்கமான நெடுந் தவணைக் கடன்களை (productive long – term loans) அயல் நாடுகளுக்குக் கொடுக்க வேண்டும். மேலும் இவ்வாறு கடன் கொடுக்கும் நாடுகள் கடன் வாங்கிய நாடுகளிடமிருந்து வட்டியை, பண்டங்கள் பணிகள் இவற்றை இறக்குமதி செய்வதன் மூலமாகத்தான் பெற வேண்டும். கடன் பெறும் நாடுகளும் தாங்கள் வாங்குகின்ற கடன்தொகைகளைத் தங்களின் ஏற்றுமதி வாணிபத்தைப் பெருக்கிக் கொள்வதற்குத் தகுந்தாற்போல் முதலீடு செய்ய வேண்டும். அவ்வாறு செய்தால் அவைகள் கூடுதலான ஏற்றுமதிகளைச் செய்து தங்கள் கடன் தொகைகளுக்கான வட்டியைச் செலுத்த இயலும். அவைகள் அவ்வாறு செய்யாமற் போனுல், வட்டியைச் செலுத்துவதற்கு, தங்களின் இறக்குமதிகளைக் குறைத்துக் கொண்டு, அதன் மூலம் செலுத்தும்படி நேரிடும். இதனுல் அந்நாடுகளின் மக்களுடைய மொத்த நிகழ்ச்சி (total consumption) குறையும்.

இத் திட்டங்களை செயற்படுத்துவதென்பது அவ்வளவு எளிதான தல்ல. நடைமுறையில் பன்னுட்டு முதலீட்டின் அளவும் வரையறுக்கப் பட்டேயுள்ளது. கடன் ஈந்த நாடுகள் (creditor countries), கடந்த முப்பது ஆண்டுகளாக, தாங்கள் கொடுத்த கடனுக்கான வட்டியை பண்டங்கள் பணிகளாகப் பெறுவதில் அவ்வளவு அக்கறை காட்டவில்லை. இந்த மனப்பான்மை, கடன் வாங்கிய நாடுகளை அவைகள் கடனை ஒழுங்காகத் திருப்பி அடைக்கத் தவறும்படி செய்ததுடன் பன்னுட்டு முதலீட்டு அளவையும் வெகுவாகக் குறைத்தது. அப்படியே இந்த விதமானதொரு இக்கட்டே இல்லாவிடினும், பிறிதொரு தடங்கலும் உண்டு. உலகத்தின் பின்னடைந்த நாடுகளின் ஏற்றுமதிகளை அதிகரிப்பதில் எல்லையின்றிப் பணத்தை முதலீடுசெய்வதும் இயலாதகாரியமாகும். இவ்விதமான இடர்ப்பாடுகள் இல்லாவிடினும் பன்னுட்டு வாணிபம் என்பது ஒரு மெதுவான வளர்ச்சியை, உடையதாகத்தான் இருக்க வேண்டும். இதன் தொடர் முடிவாக (corollary) மற்றொன்றையும் கூற வேண்டும். கடன் கொடுக்கும் நாடுகளின் வெளி உபரி

கள் (external surpluses), கடன் பெறும் நாடுகள் தங்களின் ஆக்க மான நோக்கங்களுக்கு (productive purposes) அவ் வுபரிகளைக் கடனாகப் பெறும் சக்திக்கும் மேற்பட்டு அதிகமாகப் பெருகினால், இம்முறை இயங்குதலே தடைப்பட்டுப் போகும்.

இதனை யொட்டிய மற்றொரு முடிவைக் காண்போம். கடன் கொடுக்கும் நாடுகள் தங்களுக்கு அக்கடன் கொடுத்தலின் மூலம் பொருளாதார வளர்ச்சி ஏற்படுமாறு பார்த்துக் கொள்ள வேண்டும் பிற நாடுகளிடமிருந்து, அக்கடன் கொடுத்தலின் மூலம், இறக்கு மதிகளை அடையும்படியாகவும் அவ்விறக்குமதிகளைப்பயன்படுத்தும் படியாகவும் பார்த்துக்கொள்ள வேண்டும். ஒரு நாடு கடன் கொடுக்கும் நாடாக (lender) இருக்க வேண்டுமா அல்லது கடன் வாங்கும் நாடாக இருக்க வேண்டுமா என்பது அதனுடைய விருப் பத்தைப் பொறுத்ததல்ல; உலகப் பொருளாதாரத்தில் அது வகிக் கும் இடத்தைப் பொறுத்தே யிருக்கும். 1914-ஆம் ஆண்டிற்கு முன்பாக உள்ள பத்தாண்டுகளில் (decades) இது நாடுகளில் நில வும் வட்டி வீதத்தைப் பொறுத்து இருந்தது. அர்ஜென்டினா (Argentina) போன்ற சில நாடுகளில் பொருளாதார வளர்ச்சிக்கான வாய்ப்புகள் நிறைய இருந்தன. ஆனால் மூலதன அளிப்பு (supply of capital) குறைவாக இருந்தது. இதனால் அங்கே அமலில் இருந்த வட்டி விகிதம் (rate of interest) அதிகமாக இருந்தது. இதற்கு முரணான காரணங்களால் கிரேட் பிரிட்டனில் வட்டி விகிதம் குறைவாக இருந்தது. அர்ஜென்டினாவில் முதலீடு செய்வது அதிக பலனைத் தருவதாக இருந்ததால், பிரிட்டிஷ் மூலதனம் அந்த நாட்டில் முதலீடு செய்யப்பட்டதைவிட அர்ஜென்டினாவில் அதிக மாக முதலீடு செய்யப்பட்டது. முதலீடு எந்த நாடுகளில் தேவைப் படுகிறது என்பதை அவைகளில் நிலவும் வட்டி வீதங்களைக் கொண்டு உத்தேசமாகத்தான் கூற இயலும். ஏனெனில் பத்தொன் பதாம் நூற்றாண்டின் அயல்நாட்டு முதலீட்டின் வரலாறு முழுவதும் நெருக்கடிகளும் (crises) தோல்விகளும் நிறைந்ததாகவேயுள்ளது. ஆனால் இத்தகைய குறைபாடுகளிடையேயும், போருக்கிடையே யுள்ள ஆண்டுகளின்போது நிலவிய குழப்பச் சூழ்நிலைகளுக்கு ஏற்றதான ஒரு முறையைக் கண்டு பிடிப்பதும் சாத்தியமான தாகவே யிருந்தது. பன்னாட்டுக் கடன்கள் ஆக்கமான முதலீடு களில் முதலீடு செய்யப்படாவிடினும் அதனால் உலகத்திற்கு பெருந் தீங்கு ஒன்றும் ஏற்பட்டு விடாது. ஏனெனில் பன்னாட்டுக் கடன் களில் (international loans) புழங்கும் தொகை சிறிதளவே யிருந் தமையால் அவைகள் ஆக்கமான முதலீடுகளில் முதலீடு செய்யப் படாமலிருந்தும் அவை உலகப் பண முறையை (world's monetary mechanism) நிலைகுலையச் செய்து விடவில்லை. கடன் கொடுக்கும்

நாடுகளாக அப்போது ஒரு சில நாடுகளே யிருந்தன. அவற்றுள் கிரேட் பிரிட்டனே மிகப்பெரியது. கடன் வாங்கிய நாடுகளோ பெரும்பாலும் புதிய நாடுகளாகவும், முதலீடுகளால் ஏற்றுமதித் தொழில்களை விரிவுபடுத்தி அதிக இலாபங் காணத் தக்கனவாயும் இருந்தன. அதே சமயத்தில் கடன் கொடுக்கும் நாடுகளில் மிகப் பெரியவைகளில் ஒன்றான கிரேட் பிரிட்டன் தடையிலா வாணிப நாடாக (free trade nation) இருந்தது. கடன் வாங்கிய நாடுகள் அதற்கு வட்டியாகச் செலுத்தும் பண்டங்களுக்கு எந்த விதமான தடையையும் கிரேட் பிரிட்டன் விதிக்க வில்லை. பெரும்பாலான நாடுகள் கடன் கொடுக்கும் நாடுகளாகவோ அல்லது கடன் வாங்கும் நாடுகளாகவோ இல்லை. அவைகள் பன்னாட்டு மூலதனப் போக்குகளை (international movements of capital) துணையாக நாடாமல் தங்களது வரவுசெலவுகளை கூடிய மட்டும் சரியீடு செய்து கொண்டன.

ஒவ்வொரு நாடும், அது உலகப் பொருளாதாரத்தில் பெற்றிருக்கும் இடத்திற்கு ஏற்பத் தனது பன்னாட்டுக் கடன் வாங்குதலை (international borrowing) அல்லது கடன் கொடுத்தலை நிறைவேற்றிக் கொள்ள வேண்டும்—சொல்லப்போனால், தனது பன்னாட்டு வணிகம்(international commerce) முழுவதையும் அதற்குப் பொருந்துமாறு செய்துகொள்ள வேண்டும். எந்த ஒரு பன்னாட்டுப் பண முறையின் அமைப்பிற்கும், அது இயங்குவதற்கும் இது மிகவும் முக்கியமான தொன்றாகும். நாடுகளுக்கும் தனி நபர்களுக்கும் சமமாகக் கூறப்படும் இந்த உவமையை மிகையானது என்று எளிதில் கூறி விடலாம். ஆனால் இந்த இடத்தில் அவ்வுவமை பொருத்தமானதாகவே இருக்கிறது. நாடுகளின் பல்வேறு வளர்ச்சி நிலைகளை மனிதர்களின் பல்வேறு வளர்ச்சி நிலைகளுக்கு (different stages of development) ஒப்பிடலாம். சில நாடுகள் வாணிபத்தில் சமீபத்தில் இறங்கிய முதிர்ச்சியற்ற புதிய நாடுகளாக இருக்கின்றன; மற்ற நாடுகள் முதிர்ச்சியை அடைந்து கொண்டிருக்கிற (approaching maturity) நாடுகளாக இருக்கின்றன; சில நாடுகள் தலைமுறை தலைமுறையாக அனுபவம் வாய்ந்தனவாக இருக்கின்றன. இதனை மேலும் விளக்குவதற்கு வளர்ச்சியின் தனித்தனியான ஆறு நிலைகளை (six separate stages of development) நாம் வேறுபடுத்திக் கூறலாம். கீழ்க்கண்ட பத்திகளில் இந்நிலைகள் கூறப்பட்டுள்ளன. ஒவ்வொரு நிலைக்கும் ஒரு பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. பெயர்கள் அவ்வளவு நேர்த்தியானவைகளாக இல்லாவிட்டாலும் அவைகள் ஒவ்வொருநிலை (stage) யின் பொருளாதார இயல்புகளை (economic characteristics) ஏறக்குறையச் சரியாக உணர்த்துகின்றன.

முதலாவது நிலையில் (First stage) உள்ள நாடுகளை முதிர்ச்சியடையா கடன் பெறு-கடனாளிகள் (Immature Debtor-Borrowers) என அழைக்கலாம். அவைகள் பன்னாட்டு வாணிபத்தில் முதன் முதலாக ஈடுபட்டிருக்கும் புதிய கன்னி நாடுகளாகும். அவைகளுக்கு முதலில் அளிக்கப்பட்ட கடன்கள் அவைகளின் ஏற்றுமதிகளுக்கும் அதிகமான இறக்குமதிகளைச் செய்து கொள்ள வழி செய்கின்றன. அவைகள் கடன் வாங்கிய காரணத்தால் அவைகள் பிற நாடுகளுக்கு விற்பதை விட அதிகமாக வாங்குவதற்கு முடிகிறது. எனவே கடன் வாங்குதல், அந்நாடுகளை, நாம் உற்பத்தி செய்வதைக்காட்டிலும் அதிகமானவற்றை நுகருவதற்குத் துணைபுரிகின்றது. எனவே இந்நாடுகள் எதிர்நிலை (அல்லது 'பாதக') வாணிபச் செலுத்துநிலை (Negative Balances of Trade) யில் இருக்கும். அவைகள் தங்களின் கடன் வாங்கிய தொகைகளுக்கு வட்டி செலுத்தியாக வேண்டும். ஆயினும் கடன் வாங்கியது முதல் ஒரு சில ஆண்டுகளுக்கு அவைகள் செலுத்தும் வட்டித் தொகை அவைகள் அந்த ஆண்டில் புதியதாக வாங்கும் கடன் தொகைகளை (fresh borrowings) விடக் குறைவாகவே யிருக்கும். எனவே இந்த நாடுகள் பண்டங்களையும் (பணிகள் உட்பட) மூலதனத்தையும் (Capital) இறக்குமதி செய்யும் நாடுகளாக உள்ளன. மூலதனத்தை இறக்குமதி செய்ய வேண்டுமெனில் பொன் வடிவில் தான் இறக்குமதி செய்து கொள்ள வேண்டும். அப்பொருள்களும், புகை வண்டித் தளவாடங்கள் (railway materials) தொழிற் பொறிகள் (industrial machinary) விவசாயக் கருவிகள் போன்ற, ஏற்றுமதித் தொழில்களைப் (export traders) பெருக்க உதவும் பொருள்களாக இருக்க வேண்டுமென்று கூறுவது முக்கியமாகும். இந்த வழியாகத்தான் பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளும் (British Dominions) தென் அமெரிக்க நாடுகளில் பலவும் பத்தொன்பதாம் நூற்றாண்டில் முன்னேற்றத்தை அடைய ஆரம்பித்தன.

இரண்டாவது நிலை, (Second stage) முதிர்ச்சியடைந்த கடன் பெறு-கடனாளிகளாக (Mature Debtor-Borrowers) இருக்கும் நிலையாகும். ஒரு புதியநாடு கடன் வாங்கிய ஒரு சில பத்தாண்டுகளுக்குள் அதன் அயல் நாட்டுச் செலுத்து நிலையில் (Balance of Payments) ஒரு மாற்றம் அவசியம் வந்தே ஆகவேண்டும். ஒரு புறம், ஏற்கெனவே வாங்கியிருந்த கடன் தொகைகளுக்கான வட்டி சீராக வளர்ந்து தற்போது வாங்கிய கடன் தொகைகளைக் காட்டிலும் அதிகமானதாக இருக்கவேண்டும். இந்தச் சூழ்நிலையில் நாடு புதியதாக எழுப்பும் கடன் தொகைகளைக் காட்டிலும் அதிகமான தொகைகளை வட்டியாகச் செலுத்திக்கொண்டிருக்கும். அதே சமயத்தில், ஏற்கெனவே எழுப்பிய கடன்கள் ஆக்கமான

வழிகளில் முதலீடு செய்யப்பட்டிருந்தால் அவை பலனளித்து ஏற்று மதிகளை அதிகரிக்கும். புதிதாகக் கடன் வாங்கும் தொகைகளைக் காட்டிலும் அதிகமாக வட்டி செலுத்தப்படுவது சாத்தியப்படுவதற் குக் காரணம் உபரியான ஏற்றுமதி (export surplus) யாகும். ஏற் கெனவே வாங்கியுள்ள கடன்களின் உதவியால்தான் இத்தகைய உபரியான ஏற்றுமதியே (export surplus)—அதாவது 'நேர்நிலை' அல்லது 'சாதக' வாணிபச் செலுத்து நிலை (Positive or Favourable Balance of Trade) உண்டாகின்றது. இந்த நாடுகள், அயல் நாடு களிலிருந்து இன்னும் கடன் வாங்கிக்கொண்டிருப்பினும், பொருள் களை ஏற்றுமதி செய்வதன் மூலம் அவைகள் செலுத்தவேண்டிய பழைய வட்டிச் சுமைகளில் சிலவற்றை ஏற்க ஆரம்பித்திருக் கின்றன. அவைகள் மூலதனத்தை (capital) இறக்குமதி செய் பவைகளாகவும், ஆனால் பொருள்களை (goods) ஏற்றுமதி செய் பவைகளாகவும் உள்ளன.

மூன்றுவது நிலையில்—கடன் கொடுக்கும்-கடனாளிகள் (Debtor-lenders) நிலையில்—நாடு அயல்நாடுகளினின்றும் கடன் வாங்கு வதே யில்லை. எனினும் ஏற்கெனவே கடன்பட்டிருந்த கடன் தொகைகளுக்கு வட்டி செலுத்தவேண்டிய கடமை இருந்துகொண் டிருக்கும். தற்போதைய நிலையில் நாடு அந்த வட்டியைச் செலுத்த இயலுவதுடன் தனது மூலதனக் கடனையும் (Capital indebtedness) சிறுகச் சிறுக அடைத்துக் குறைத்துக்கொள்ள முடியும். அந்நாடு தான் வாங்கிய கடனைக் குறைத்துக்கொள் கிறதா அல்லது பிறநாடுகளுக்குக் கடன் கொடுக்க ஆரம்பிக் கின்றதா என்பது இங்கு முக்கியமல்ல. ஏனெனில் இரண்டு முறை களுமே ஒரே பொருளாதார விளைவையே (Same economic effect) தருகின்றன. இம் முறைகள் இரண்டையுமே 'வசதியின் பொருட் டுக் கடனளித்தல்' (lending for convenience) என அழைக்கலாம். ஆனால், இத்தகைய 'வசதியின் பொருட்டுக் கடனளிக்கும்' நாடு களை திருப்பிச் செலுத்தும்—கடனாளிகள் (Debtor-Repayers) என வும் அழைக்கலாம். இதில் முக்கியமாகக் கவனிக்கத்தக்கது யாதெனில் அந்நாடுகள் தங்களுடைய பொருள்களின் நிகர ஏற்று மதிகள் (net export of goods) அவைகள் செலுத்தவேண்டிய வட்டிச் செல்லுகளை (Payments of interest) விட அதிகமாக இருந்த காரணத்தால் அவைகள் மூலதனத்தை ஏற்றுமதி செய்வதற்கு வழியேற்பட்டது.

நான்காவது நிலை (Fourth Stage) மூன்றுவது நிலையிலிருந்து இயற்கையாக வளர்ந்த நிலையாகும். முதிர்ச்சியடையா கடன் கொடுக்கும்-கடன் ஈவோர் (Immature Creditor-Lenders) நிலைதான்

இந்த நான்காவது நிலை. இந்நாடுகள் தங்களது பழைய கடன்களையெல்லாம் திருப்பிக் கொடுத்துவிட்டிருக்கும். அல்லது அவைகள் தங்களின் அயல்நாட்டுக் கடன்களைவிட அதிகமான அளவிற்கு அயல்நாட்டுச் சொத்துக்களை (Foreign assets) வைத்துக்கொண்டிருக்கும். அவ்வாறு அதிகமாக வைத்துக்கொண்டிருக்கும் நிகர அயல் நாட்டுச் சொத்துக்களுக்கு (net excess of foreign assets) அவைகள் வட்டி பெறும். ஆனால் அவைகளின் வட்டி வரவுகள் ஆரம்பத்தில் அவைகளின் கடன்களைவிடக் குறைவாகவேயிருக்கும். இதுவே வெளி உபரிக்கு (External surplus) முக்கியமான சாதனமாக இருக்கிறது. இதனையே வெளி உபரியை வைத்துக் கொண்டிருக்கும் நாடுகள் பிற நாடுகளுக்குக் கடன் கொடுக்கின்றன. இந்த வெளி உபரியே அதனை வைத்துக்கொண்டிருக்கும் நாடுகளுக்கு 'நேர் நிலை' (Positive) அல்லது 'சாதக' (Favourable) வாணிபச் செலுத்து நிலையை ஏற்படுத்தித் தருகின்றது. இந்த நாடுகள் ஒரு வகையில் மனிதர்களை ஒத்திருக்கின்றன. தங்களின் முதலீட்டு வருமானத்தைச் (Investment income) சேகரித்துக்கொண்டிருக்கும் மனிதர்கள் தங்களது பழைய முதலீடுகளிலிருந்து (past investments) கிடைக்கும் வட்டியை மேற்படி முதலீட்டு வருமானத்திற்கு எதிர்பார்ப்பதைவிட தங்களது தொழில்களில் கிடைக்கும் நடப்பு வருமானத்தையே (Current income) பெரிதும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர். இதைப் போலவே இந்த நாடுகளும் உள்ளன. இவைகளும் பொருள்களையும் (goods) மூலதனத்தையும் (capital) ஏற்றுமதி செய்வனவாக உள்ளன.

அடுத்தது, முதிர்ச்சியடைந்த 'கடன் கொடுக்கும்—கடன் ஈவோரின்' (Mature creditor - lenders) நிலையாகும். இவைகள் அதிக வட்டி வருமானத்தைப் (Interest income) பெறும் நாடுகள். இவ்வாறு அதிக வட்டி வருமானத்தை இந்நாடுகள் பெறுவதால், இவைகள் எதிர் நிலை வாணிபச் செலுத்து நிலையை (பாதக வாணிபச் செலுத்து நிலையை) வைத்துக்கொள்ளவும் தயாராக இருக்கக்கூடும். அதாவது அவைகள் விற்பதைக் காட்டிலும் அதிகமான பண்டங்கள் பணிகள் ஆகியவற்றை வாங்குதல் இயலும். இவ்வாறு அவைகள் செய்வதற்கு தயாராக இருக்கக்கூடுமென்பதுடன் அவைகள் அவ்வாறு செய்தே ஆகவேண்டும் (must do so) என்று கூற வேண்டும். ஏனெனில் அந்நாடுகள் தாங்கள் வாங்குவதைக் காட்டிலும் அதிகமாக விற்கவேண்டுமென்று முனைந்தால் கிடைக்கின்ற உபரியை அவைகள் பெறும் வட்டி வருமானங்களுடன் சேர்த்துப் பிற நாடுகளுக்கு கடன் கொடுக்க நேரிடும். இதனால் அவைகளின் வட்டி வருமானம் இன்னும் வேகமாக

அதிகரிக்கக்கூடும். ஒரு நாடோ அல்லது ஒரு மனிதனோ தொடர்ந்து கடன் கொடுத்துக்கொண்டே செல்லுமாயின், அது, தான் பெறுகின்ற தொழில் வருமானத்தைவிட (work income) அதிகமான வட்டி வருமானத்தைப் பெறும்படியான ஒரு நிலையில் கொண்டுபோய் விட்டுவிடும். இதனல் அந்த நாடு அல்லது அந்த மனிதன் தான் உற்பத்தி செய்வதைவிட அதிகமான அளவு நுகர்ந்தாக (must consume) வேண்டும். நாட்டிற்கும் மனிதனுக்கும் கூறப்பட்ட ஒப்புமை (anology) இங்குத் தடைபடுகிறது. மனிதனின் கடைசி நிலை (last stage) தளர்ச்சியையுடைய மூப்பு நிலை (senile decay). 'முதிர்ச்சியடைந்த கடன் கொடுக்கும்—கடன் ஈவோரின்' (Mature credit-lenders) நிலை அப்படிப்பட்டதல்ல; அவைகள் கடைசி காலத்தில் தளர்ச்சியடைந்த மூப்பு நிலையை அடைவதில்லை. அவைகள் இன்னும் கடன் கொடுத்துக்கொண்டும் செல்வத்தை அதிகரித்துக்கொண்டும் இருக்கும். தங்களது வருவாய்க்குள் அவைகள் அழகாகவே வாழ்ந்துவருகின்றன. சில மக்களுக்கு எதிர் வாணிபச் செலுத்து நிலையை (negative Balance of Trade) வைத்துக்கொண்டிருப்பது ஓர் இயல்பான வியாதியாகவே இருக்கிறது! அவர்கள் தங்களின் ஏற்றுமதிகளைக் காட்டிலும் அதிகமாக இறக்குமதி செய்கின்றனர். இந்த நிலை அத்தகைய நாடானது பழைய சேமிப்புகளிலிருந்து தான் நுகரும் அயல்நாட்டுப் பண்டங்களுக்குப் பணம் செலுத்துகிற தென்பதும் பொருளல்ல.

ஆருவது நிலையும் சற்றுத் தளர்ச்சியையுடைய நிலையாகத்தானுள்ளது. இது கடன் வாங்கும்—கடன் ஈவோர்களது (Credit-Borrowers) நிலையாகும். இவைகள் கடன் ஈயும் நாடுகளாகும்—இவைகள் தாங்கள் ஏற்கெனவே செய்துவைத்த முதலீடுகளினின்றும் (past invesments) வட்டி வருமானத்தைப் பெறுகின்றன. ஆனல் இவைகள் அதிகமான எதிர் (பாதக) வாணிபச் செலுத்து நிலையை உடையனவாக இருப்பதால், வட்டி வரவுகளின் மூலம் அந்நிலையைச் சரிக்கட்ட இயலாமலிருப்பதால் தங்கள் கணக்குகளை நேர் செய்ய (In order to square the accounts) கடன் வாங்க வேண்டியவைகளாக உள்ளன. இங்கு, கடன் வாங்குதல் (Borrow) என்னும் சொல் கடன் கொடுக்கும்—கடனாளிகளைப் (Debtor-Lenders) பற்றிக் கூறும்போது பயன்படுத்திய 'கடன் கொடுத்தல்' (Lendings) என்னும் சொல் எந்தக் கருத்தில் கையாளப்பட்டதோ அதற்கு இணையான கருத்தில் 'கடன் வாங்குதல்' (Borrow) என்னும் சொல் இங்குக் கையாளப்படுகிறது. கடன் வாங்கும்—கடன் ஈவோர் நாடுகள் (Creditor-Borrowers) சமாதான காலங்களில், மிக அரிதாகவே பிற நாடுகளுக்குப் புதிய கடன்களை

வழங்கும், அவைகள், தாம் ஏற்கெனவே கொடுத்திருந்த பழைய கடன்களில் சிலவற்றைத் திரும்பப் பெறும் அல்லது அவைகள் ஏற்கெனவே முதலீடு செய்துள்ள முதலீடுகள் சிலவற்றை விற்கும். இந்நாடுகளை, தனது வரவுக்குமேல் செலவு செய்து அதனால் தனது முதலையும் சிறுகச் சிறுக விற்கும் ஒரு முதலீடு செய்பவருக்கு (Investor) ஒப்பிடலாம். ஆனால் இந்த நிலை எல்லையின்றி நீடித்து விடாது. நெருக்கடி காலங்களில், முதிர்ச்சியடைந்த கடன் கொடுக்கும்—கடன் ஈவோர் (Creditor Lenders), கடன் வாங்கும்—கடன் ஈவோர் (Creditor-Borrowers) நிலைக்குக் கொண்டு செல்லப் படுகின்றனர். ஆனால் இந்த நிலையில் எந்த நாடும் நெடுங்காலம் நீடித்திருக்க இயலாது.

ஒவ்வொரு நாடும் தனது வளர்ச்சியின்போது கடந்து செல்ல வேண்டிய நிலைகளாக இந்த ஆறு நிலைகளும் இங்கே கூறப்பட்டுள்ளன. ஒரு மனிதன் தன் இளமையிலிருந்து முதிர்ச்சியடையும் பருவத்தை அடையும் வரை படிப்படியாக வளர்ந்து செல்லும் நிலைகளைப் போன்று இவை உள்ளன. ஆனால் இந்த நிலைகளையெல்லாம் ஒரு நாடு கடந்து சென்றுதான் ஆகவேண்டுமென்பதும் இல்லை. அயல்நாட்டுச் செலுத்து நிலைகளைக் கணக்கெடுப்பு செய்வதென்பது வெகு சமீபத்தில் ஏற்பட்ட பொருளாதார வளர்ச்சியே யென்றாலும் எந்த ஒரு நாட்டினது பொருளாதாரப் போக்கையும் ஆராயச் சரியான புள்ளி விவரங்கள் நம்மிடம் இல்லையெனினும், சில நாடுகள் உண்மையில் இந்த நிலைகளையெல்லாம் கடந்து செல்ல வேண்டியவைகளாகவே யிருக்கின்றன. இப்புள்ளி விபரங்களை சரி நுட்பமாக நாம் தெரிந்துகொள்ளுகிற அளவிற்கு இருக்கும் நாடு ஐக்கிய அமெரிக்காதான். 1870ஆம் ஆண்டை அடுத்த பத்தாண்டுகள் வரையிலும் அமெரிக்கா, பண்டங்களையும் (goods) மூலதனத்தையும் (capital) இறக்குமதி செய்யும் முதிர்ச்சியடையா கடன் வாங்கும்—கடனாளியாகவே (Immature Debtor-Borrower) யிருந்தது. எனினும் 1873 ஆம் ஆண்டிற்குப் பிறகு அது செலுத்த வேண்டிய வட்டித் தொகைகளின் மொத்தம் அதன் புதிய கடன் தொகைகளின் மொத்தத்தைக் காட்டிலும் அதிகமாகவேயிருந்தது. ஆனால், அது சமயம் அமெரிக்காவின் பொருளாதார வளர்ச்சி வெகுவாக முன்னேறிக்கொண்டிருந்தமையால் அதன் ஏற்றுமதி பெருகி, அதனால் கிடைத்த உபரித் தொகை வட்டித் தொகையைக் கட்டுவதற்குத் துணை செய்தது. இந்தக் காலம் முதல் 1914ஆம் ஆண்டு வரையில் ஒவ்வோர் ஆண்டிலும் தான் செலுத்தி வந்த வட்டித் தொகையில் ஒரு பகுதி அளவு புதிய கடனாகப்பெற்று வந்த போதிலும், அமெரிக்கா ஒரு முதிர்ச்சியடைந்த கடன் வாங்கும்—கடனாளியாகவும்(Mature Debtor-Borrower)பண்டங்களை ஏற்றுமதி

செய்யும் நிகர—ஏற்றுமதி நாடாகவும்(net exporter of goods)இருந்தது. 1914-18ஆம் ஆண்டுகளில் நடந்த போரின் போதிருந்த குறுகிய காலம், ஐக்கிய அமெரிக்கா அடுத்த இரண்டு நிலைகளையும் கடந்து செல்வதற்குத் துணை செய்தது. இந்த சமயத்தில் ஐக்கிய அமெரிக்கா போர்க் கருவிகளை ஏராளமாக ஏற்றுமதி செய்தமையால் தனது பழைய கடன்களையெல்லாம் மீட்டுக்கொள்ள இயன்றதுடன் அது ஒரு நிகரமான கடன் கொடுக்கும் நாடாகவும் (a net lender) ஆகியது. அதுமட்டுமல்ல. அதனுடைய வட்டி வருமானம், தான் ஏற்றுமதி செய்ததைக் காட்டிலும் பண்டங்களை அதிக அளவு இறக்குமதி செய்யும் அளவிற்கு அதாவது முதிர்ச்சியடைந்த கடன் கொடுக்கும்—கடன் ஈவோனுக (Mature creditor-Lender) ஆகும் அளவிற்கு—வெகு வேகமாக அதிகரித்தது. போருக்குப் பிறகுள்ள உடனடியான ஆண்டுகளில் அதன் மதிப்பு நிலை (status) மேற்சொல்லப்பட்ட பிரிவில் (group) அவ்வளவு புகழுடன் இல்லை. 1922ஆம் ஆண்டிலும் ஐக்கிய அமெரிக்கா நேர் நிலை வாணிபச் செலுத்து நிலையைப் (Positive Balance of Trade) புலனுகின்றதும் புலனுகாததுமான நேர் நிலை வாணிபச் செலுத்து நிலையைப்—பெற்றிருந்தது. ஆனல் மற்ற ஆண்டுகளில் நிலைமை தலைகீழாக மாறியது. இங்கே ஒன்றை வலியுறுத்திக் கூற வேண்டும். பெரும்பாலான இந்த ஆண்டுகளில் தான் விற்றவைகளைக் காட்டிலும் வாங்கியவையே அதிகம். ஐக்கிய அமெரிக்காவைப் பற்றிய பொதுவான எண்ணம் இதற்கு முரணுக இருப்பதால் தான் இதனை இங்கு வலியுறுத்திக் கூறவேண்டியிருக்கிறது. இந்தக் குழப்பத்திற்குக் காரணம் இதுதான். புலனுகும் வாணிபச் செலுத்து நிலைக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்தும் புலனுகா இனங்களைப் (Invisible items) பற்றியே எண்ணுமல் விட்டுவிடுவதுதான். ஐக்கிய அமெரிக்கா, தான் வாங்கிய பண்டங்களை விட அதிக பண்டங்களை விற்றது. ஆனல், தான் விற்பனை செய்ததைக் காட்டிலும் அதிக அளவு பணிகளை (services) வாங்கியது. அமெரிக்கர்கள், அயல் நாட்டுப் பயணங்களைச் செய்து அயல்நாட்டினருக்கு அதிக அளவு கப்பற் கட்டணங்கள் இன்னும் மற்ற வாகனக் கட்டணங்கள் காப்புப் பணிகளுக்கான (insurance services) கட்டணங்கள் ஆகியவற்றைச் செலுத்துவதையே விரும்பினர். இதனுல் பொருளாதார விளைவு என்னவோ ஒன்ருகத்தானிருந்தது. பண்டங்கள் பணிகள் ஆகிய இரண்டையும் சேர்த்துக் கணக்கிட்டால் அமெரிக்கா இந்த ஆண்டுகளில் செலுத்து நிலையில் உள்ள வாங்குவோர் (buyer on balance) நிலையில் இருந்தது. அதாவது ஒரு முதிர்ச்சியடைந்த கடன் கொடுக்கும்—கடன் ஈவோர் (Mature creditor-lender) என்ன நிலையில் இருக்கவேண்டுமோ அந்த நிலையிலிருந்தது.

எல்லா நிலைகளையும் அடைந்து மீண்ட ஒரு நாட்டிற்கு அமெரிக்காவை எடுத்துக் காட்டாகக் கூறலாம். சில நாடுகள் ஆரம்ப முதற் கொண்டே கடன் ஈயும் (creditors) நாடுகளாக உள்ளன. அத்தகைய நாடுகளில் ஒன்று கிரேட் பிரிட்டனாகும். நமது காலத்தில் நிகழ்ந்துள்ள இரு உலகப் போர்கள் வரையிலும் கிரேட் பிரிட்டனே வெளிநாடுகளிலிருந்து கடன் பெறாத நாடாக இருக்கிறது—அல்லது இருந்தது—எனக் கூறவேண்டும்[1]. இதற்குக் காரணம்,இத்தகைய நாடுகள் அதிவேகமாக வளர்ந்தமையே. முதலில் அவை, தங்களுடைய அதிகமான ஏற்றுமதிகளின் மூலம் பெற்ற அயல்நாட்டுநிலுவைகளைக்(Foreign Balance)கடன்கொடுக்கின்ற, முதிர்ச்சி யடையாக் கடன் கொடுக்கும்—கடன் ஈவோராக இருந்தன. பிறகு அவைகள் முதிர்ச்சியடைந்த கடன் கொடுக்கும்—கடன் ஈவோராக இருந்தன. இந்த நிலையில் அவை தாம் ஏற்றுமதி செய்ததை விட அதிகமாக இறக்குமதி செய்தன. அயல் நாடுகளிலிருந்து வந்த ஏராளமான அளவு வட்டித் தொகைகள் இவ்வாறு அதிக இறக்குமதிகளைச்செய்து கொள்வதற்குத் துணைசெய்தன. கிரேட் பிரிட்டன், 1850–ஆம் ஆண்டை அடுத்த பத்தாண்டுகளில் கடன் கொடுப்பவரின் நிலையில் முதிர்ச்சியடையா நிலையிலிருந்து முதிர்ச்சியடையும் நிலையை அடைந்தது. முதல் உலகப் போரின் துவக்கம் வரையிலும் (சென்ற கால் நூற்றாண்டில் குழப்பச் சூழ்நிலையிலிருந்து ஒரு சில விதி விலக்கான ஆண்டுகள் தவிர்த்து) அது ஒரு முதிர்ச்சி யடைந்த கடன் கொடுக்கும், கடன் ஈவோனாகவே (Mature creditor lender) இருந்தது.

## போருக்கிடையேயுள்ள ஆண்டுகளின் போதிருந்த சமன்கேடு
## (Inter-war Disequilibrium)

466-469-ம் பக்கங்களில் உள்ள அட்டவணையில் உலகத்தின் முக்கிய நாடுகளில் 1927-ஆம் ஆண்டிலிருந்து 1929-ஆம் ஆண்டு வரையிலுள்ள கால அளவிற்கு இத்தகைய வகைப்படுத்தல் (Classifications) செய்யப்பட்டுள்ளது. நேருக்கு நேர் ஒப்புமை செய்தல் பொருட்டு விபரங்கள் மில்லியன் டாலர்களில் தரப்பட்டுள்ளன. இப்புள்ளி விபரங்கள், சம்பந்தப்பட்ட மூன்று ஆண்டுகளின் சராசரியைக் குறிப்பதால், இந்த ஆண்டுகளில் எடுத்துக் காட்டான ஒரு (typical) ஆண்டின் நிலையைச் சுட்டுகின்றன. இப்புள்ளி விபரங்கள் ஐக்கிய நாட்டுச் சங்கத்தின்(League of Nations)

[1] ஒரு பாங்கர் தனது வாடிக்கைக் காரர்களின் வைப்புத் தொகைகளை (deposits) ஏற்கும் போது நிகழும் 'கடன் வாங்குதலை'ப் போன்றவற்றைத் தவிர்த்தது.

## நாடுகளின் அயல் நாட்டுச் செலுத்துக்கள் (1927 – 1929)

(National Balances of Payments 1927 - 1929)

புள்ளி விபரங்கள் 1927, 1928, 1929, ஆகிய மூன்று ஆண்டுகளின் சராசரி விபரங்கள்; மில்லியன் டாலர்களில்

| | புலனுவதும் புலனுகாதது மான வாணிபச் செலுத்து நிலை (1) | வட்டி வரவுகள் அல்லது செல்லுகள் (2) | வருமானக் கணக்கில் நிலுவை (Balance on income Account) [ (1) + (2) ] (3) | பொன் (Gold) (4) | கடன் கொடுத்தல் (—) அல்லது கடன் வாங்குதல் (+) (5) | மூலதனக் கணக்கில் நிலுவை (Balance on Capital Account) [(4) + (5)] (6) |
|---|---|---|---|---|---|---|
| I முதிர்ச்சியடையாத கடன் வாங்கும் - கடனாளி நாடுகள். (Immature Debtor-Borrowers : | | | | | | |
| ஜெர்மனி ... | —658 | —136 | —794 | — 53 | +847 | +794 |
| ஆஸ்திரேலியா (அ) ... | — 31 | —170 | —201 | + 13 | +188 | +201 |
| போலண்டு ... | — 41 | — 33 | — 74 | — 16 | + 90 | + 74 |
| ஹங்கேரி ... | — 47 | — 25 | — 72 | — 1. | + 73 | + 72 |
| ஜப்பான் ... | — 39 | — 7 | — 46 | + 6 | + 40 | + 46 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| நார்வே ... | − 3 | − 18 | − 21 | 0 | + 21 | + 21 |
| ஃபின்லாந்து ... | − 8 | − 9 | − 17 | 0 | + 17 | + 17 |
| பல்கேரியா ... | − 3 | − 7 | − 10 | 0 | + 10 | + 10 |
| II முதிர்ச்சி யடைந்த கடன் வாங்கும் - கடனுளி நாடுகள். (Mature Debtor-Borrowers): | | | | | | |
| சீனு (அ) ... | + 24 | −117 | − 93 | − 2 | + 95 | + 93 |
| அர்ஜென்டினு (ஆ) ... | +106 | −185 | − 79 | − 13 | + 92 | + 79 |
| தென் ஆப்பிரிக்கா (இ) ... | + 32 | − 78 | − 46 | (இ) | + 46 | + 46 |
| நியூசிலாந்து (ஈ) ... | + 21 | − 44 | − 23 | + 4 | + 19 | + 23 |
| யூகோஸ்லேவியா ... | + 8 | − 21 | − 13 | 0 | + 13 | + 13 |
| இந்தியா (ஈ) ... | +107 | −116 | − 9 | − 65 | + 74 | + 9 |
| கானடா (இ) ... | +162 | −169 | − 7 | (இ) | + 7 | + 7 |
| டென்மார்க் ... | + 13 | − 15 | − 2 | + 3 | − 1 | + 2 |

| | புலனுவதும் புலனுகாதது மான வாணிபச் செலுத்து நிலை (1) | வட்டி வரவுகள் அல்லது செல்லுகள் (2) | வருமானக் கணக்கில் நிலுவை (Balance on income Account) [(1) + (2)] (3) | பொன் (Gold) (4) | கடன் கொடுத்தல் (—) அல்லது கடன் வாங்குதல் (+) (5) | மூலதனக் கணக்கில் நிலுவை (Balance on Capital Account) [(4) + (5)] (6) |
|---|---|---|---|---|---|---|
| III கடன் கொடுக்கும் - கடனாளிநாடுகள் (Debtor-Lenders :) | | | | | | |
| டச்சுக் கிழக்கிந்தியத் தீவுகள் ... | +142 | —140 | + 2 | — 5 | + 3 | — 2 |
| இத்தாலி (உ) ... | + 33 | — 18 | + 15 | — 8 | — 7 | — 15 |
| செக்கோஸ்லாவேகியா ... | + 66 | — 16 | + 50 | 0 | — 50 | — 50 |
| IV முதிர்ச்சி யடையாக் கடன் கொடுக்கும் — கடன் ஈவோர் நாடுகள். (Immature Creditor - Lenders): | | | | | | |
| ஸ்வீடன் ... | + 47 | + 7 | + 54 | — 2 | — 52 | — 54 |
| பெல்ஜியம் (ஊ) ... | + 53 | + 53 | +106 | — 38 | — 68 | —106 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| V முதிர்ச்சி யடைந்த கடன் கொடுக்கும் — கடன் ஈவோர் நாடுகள் (Mature Creditor-Lenders): | | | | | | |
| நெதர்லாண்ட்ஸ் (எ) ... | (−144) | (+160) | (+ 16) | (+ 10) | (— 26) | (— 16) |
| ஃபிரான்சு (ஏ) ... | — (ஐ) | + (ஐ) | +430 | −190 | −240 | —430 |
| ஐக்கிய அரசாங்கம் ... | —719 | +1217 | +498 | + 11 | —509 | —498 |
| ஐக்கிய அமெரிக்கா ... | —186 | + 746 | +560 | +102 | —662 | —560 |
| VI கடன் வாங்கும் — கடன் ஈவோர் நாடுகள் (Creditor-Borrowers): | | | | | | |
| ஒருநாடும் இல்லை(None)... | ... | ... | ... | ... | ... | ... |

(அ) 1928-29 ஆம் ஆண்டு மட்டில்.
(ஆ) 1927 ஆம் ஆண்டு அக்டோபர் முதல் 1929 செப்டம்பர் வரை இரண்டாண்டுகள் மட்டில்.
(இ) தென் ஆப்பிரிக்காவிலிருந்தும் கானடாவிலிருந்தும் பொன் ஒரு பண்டமாக ஏற்றுமதி செய்யப்படுகிறதே தவிர பண விவகாரங்களுக்குப் பயன்படுத்த ஏற்றுமதி செய்யப்படுவதில்லை. எனவே அது முதல் பத்தியில் சேர்க்கப்பட்டுள்ளது.
(ஈ) 1927 ஆம் ஆண்டு ஏப்ரலில் இருந்து 1930 ஆம் ஆண்டு மார்ச் வரையிலுள்ள மூன்று ஆண்டுகளுக்கு.
(உ) 1927 ஆம் ஆண்டுக்கு மட்டில்.
(ஊ) பெல்ஜியன் காங்கோவையும் சேர்த்து; 1929 ஆம் ஆண்டுக்கு மட்டில்.
(எ) நெதர்லாண்ட்ஸின் புள்ளி விபரங்கள் வழக்கத்திற்கு மேற்பட்டே கிட்டத்தட்டச் சரியாக (more than usually aproximate) இருத்தலால் அவை பிறைக்கட்டுகளில் (Brackets) கொடுக்கப்பட்டுள்ளன.
(ஏ) இந்தோசீனு தவிர்த்த மற்ற பிரெஞ்சு குடியேற்ற நாடுகளுக்கும் சேர்த்து.
(ஐ) நடப்புக் கணக்கில் (current account) அடங்கியுள்ள இனங்களை தனித்தனியே வேறுபடுத்தி, பிரெஞ்சுப் புள்ளி விவரங்கள் காட்டுவதில்லை.

பொருளாதாரத் துறையால் (Economic section) தொகுப்பட்டவை. அவைகள் பெரும்பாலும் அரசாங்க இலாக்காக்களிடமிருந்து சேகரிக்கப்பட்டு வருபவை. புள்ளி விபரங்கள் சரியாக இருப்பதன் தரம் நாட்டிற்கு நாடு வேறுபடுகின்றது.

புள்ளி விபரங்கள் சரியானவையாக இருக்கக் கூடுமென்று கருதக் கூடிய இடங்களிலும் அவைகள் ஊகமாகக் கணக்கிடப் பட்டவைகளாகவே (guess work) உள்ளன. இந்த அட்டவணை எத்துணைக் குறைபாடுகளை உடையாதாயிருப்பினும், 1929-ஆம் ஆண்டு ஏற்பட்ட பெரிய மந்தத்திற்கு (great depression) முன்னதாக உடனடியாக உள்ள ஆண்டுகளில் பன்னாட்டு நிதிகளின் போக்கை (Movement of international funds) மனித சக்திக்குக் கிட்டிய வரையில் படம் பிடித்துக் காட்டுவதற்குச் சிறந்த சாதனமாகவே இருக்கிறது. புள்ளி விபரங்கள் கிடைக்கப் பெருமையால் பல முக்கிய நாடுகள் அட்டவணையில் இடம்பெருமல் போய் விட்டன.

அட்டவணையின் முதல்பத்தி (First column) வாணிபச் செலுத்து நிலையைக் (Balance of Trade) காட்டுகிறது. இதில் புலனுகும் (visible) புலனுகா (invisible) இனங்கள் ஆகிய இரண்டும் அடங்கியுள்ளன. கூட்டற்குறி (Plus sign) வாணிபச் செலுத்து நிலை 'நேர் நிலையில்' (Positive) அல்லது 'ஆக்கமான' (active) அல்லது 'சாதக நிலையில்' (Favourable) இருந்ததைக் காட்டுகின்றது. அதாவது சம்பந்தப்பட்ட நாடு தான் வாங்கியதை விட அதிகமான அளவு பண்டங்களையும் பணிகளையும் விற்றதென்பதைக் காட்டுகிறது. கழித்தற்குறி (Minus sign) வாணிபச் செலுத்து நிலை எதிர் நிலையில் (negative) அல்லது 'ஆக்கமற்ற நிலையில்' (Passive) அல்லது 'பாதக நிலையில்' (unfavoarable) இருந்ததைக் காட்டுகிறது. இந்தக் குறிகள் உணர்த்துகின்றவைகளை மிக எளிதாகப் புரிந்து கொள்ளுவதற்கு வழி ஒன்று உண்டு. அதாவது கூட்டல் குறி உட் செலுத்தையும் (in-payment), கழித்தல் குறி வெளிச் செலுத்தையும் (out-payment) உணர்த்துகிறதென்பதை மனத்தில் கொள்ள வேண்டும். எனவே அட்டவணையில் குறிப்பிட்டுள்ளபடி இந்த ஆண்டுகளில் ஜெர்மனி நிகழ்த்திய கொள் முதல் (purchases) விற்பனைகள் ஆகியவற்றின் நிகரமான விளைவு (net-result) யாதெனில் ஆண்டொன்றுக்கு அது செலுத்த வேண்டிய வெளிச் செலுத்து $ 658 மில்லியனுக இருந்ததென்பதே. மற்றெருபுறம், அர்ஜென்டினுவின் நிலையைப் பார்ப்போம். அர்ஜென்டினு ஆண்டொன்றுக்கு $ 106 மில்லியன் நிகர உட்-செலுத்தைப் (net in-payment) பெற்றது. அதாவது தான் வாங்கியதை விட $ 106

மில்லியன் மதிப்புள்ள பண்டங்களையும் பணிகளையும் அதிகமாக விற்பனை செய்தது.

இதைப் போன்றே இரண்டாவது பத்தி, செலுத்துக்களின் விளைவையும் (effect of payments) வட்டி வரவுகளையும் காட்டு கின்றது. இதிலும் கூட்டற்குறி (plus sign) நிகர வட்டி வரவினைக் காட்டுகிறது. கழித்தற்குறி நிகரச் செலுத்தைக் குறிக்கின்றது. ஒரு நாடு கடன் ஈயும் நாடாக உள்ளதா அல்லது கடனாளி நாடாக உள்ளதா என்பதை இந்தப் பத்தி சுட்டுகிறது. கடனாளி நாடுகள் வட்டிசெலுத்துகின்றன; எனவே கழித்தற்குறியைப் பெற்றுள்ளன. கடன் ஈந்த நாடுகள் வட்டியைப் பெறுகின்றன; எனவே கூட்டற் குறியைப் பெற்றுள்ளன.

ஒன்றாவது, இரண்டாவது பத்திகளில் உள்ளவற்றைக் கூட்டி வரும் தொகை மூன்றாவது பத்தியில் தரப்பட்டுள்ளது. இந்தப் பத்தி அயல் நாட்டுச் செலுத்துக்களினின்றும் கிடைக்கும் நிகர மொத்த வருமானம் அல்லது நடப்பு (current) வருமானத்தைக் காட்டுகின்றது—வேறு வழியாகக் கூறப்போனால் வெளி உபரியைக் காட்டுகின்றது. குறிப்பிட்ட நாடு கடன் வாங்கும் நாடா அல்லது கடன் கொடுக்கும் நாடா என்பதைக் குறிகள் காட்டுகின்றன. கழித்தற்குறியாயின் நாடு தனது வருமானக் கணக்கில் (income account) வெளிச் செலுத்துக்களின் நிகரமான அதிகரிப்பையுடைய தாக உள்ளதென்றும், தனது கணக்கை நேர் செய்து கொள்ள வேண்டுமாயின் (to square its accounts) கடன் வாங்கியே ஆக வேண்டுமென்பது பொருள். கூட்டற் குறியாயின் கடன் கொடுக் கும் நாடு (lender) என்று பொருள்படும்.

கடன் ஈவோர் (creditor) நாட்டிற்கும் கடன் கொடுக்கும் நாட் டிற்கும் (lender) உள்ள வேறுபாட்டையும் அல்லது கடனாளி (debtor) நாட்டிற்கும் கடன் வாங்கும் நாட்டிற்கும் (borrower) உள்ள வேறுபாட்டையும் தெளிவாக நாம் மனத்தில் கொள்ள வேண்டும். 'கடன் ஈவோர்' (creditor) என்ற சொல்லும் கடனாளி (debtor) என்ற சொல்லும் கடந்த கால நிகழ்ச்சியினைக் குறிக் கின்றன. கடன் ஈவோர் நாடு என்னும் சொல் ஏற்கெனவே கடன் வாங்கிய நாடு என்பதனைக் குறிக்கின்றது. கடன் கொடுத்தல் (lending) கடன் வாங்குதல் (borrowing) என்னும் சொற்கள் தற் போதைய நிகழ்ச்சிகளைக் குறிக்கும் சொற்களாகும். ஆனால் துர திருஷ்ட வசமாக இந்த வேறுபாடு எப்போதும் தெளிவாகக் காட் டப்படுவதில்லை. உண்மையில், சென்ற அத்தியாயத்தில் கடன் வாங்கும் நாடுகள் (borrowers) கடன் கொடுக்கும் நாடுகள்

கீழ்க்கண்ட அட்டவணையின் முதல் மூன்று பத்திகளில் காட்டப்பட்டுள்ள குறிகளினால் இந்த ஆறுவகை நாடுகளையும் வேறுபடுத்திக் காட்டலாம்.

| | புலனாகின்ற புலனாகாத வாணிபச் செலுத்து நிலை (1) | வட்டி வரவுகள் அல்லது செல்லுகள் (2) | வெளி உபரி (3) |
|---|---|---|---|
| முதிர்ச்சியடையாக் கடன் வாங்கும்—கடனாளி நாடுகள் ... | — | — | — |
| முதிர்ச்சியடைந்த கடன் வாங்கும்—கடனாளி நாடுகள் ... | + | — | — |
| கடன் கொடுக்கும்—கடனாளி நாடுகள் ... ... | + | — | + |
| முதிர்ச்சியடையாக் கடன் கொடுக்கும் கடன் ஈவோர் நாடுகள் ... ... | + | + | + |
| முதிர்ச்சியடைந்த கடன் கொடுக்கும்—கடன் ஈவோர் நாடுகள் ... ... | — | + | + |
| கடன் வாங்கும்—கடன் ஈவோர் நாடுகள் ... ... | — | + | — |

(lender) என்பனவற்றை உணர்த்த நேரிடும் போதெல்லாம் 'கடனாளி நாடுகள்' (debtors) கடன் ஈவோர் நாடுகள் (creditor) என்னும் சொற்களைப் பயன்படுத்துவது (குழப்பம் நேரிடுமோ என்கிற எச்சரிக்கையுடன் பயன்படுத்தப்பட்ட போதிலும்) எளிதாகவே இருந்தது. இவ்வார்த்தைகளுக்கிடையே உண்மையான வேறுபாடு உள்ளது; வெறும் வார்த்தை யளவு வேறுபாட்டுடன் நின்று விடவில்லை. இத்தலைப்பைப்பற்றித் தெளிவாக ஆராயப் புகுந்தால் இந்த வேறுபாட்டை (distinction) அவசியம் கடைப்பிடித்தாக வேண்டும்.[1]

1 இவ்விதம் நேரக்கூடிய பிறிதொரு குழப்பத்தையும் தெளிவுபடுத்த இயலும். 'கடன் கொடுத்தல்' (Lending) என்னும் சொல் 'கடனைத் திருப்பி அடைத்தலை' (repaying of debt) யும் உணர்த்தும். இதுபோன்றே 'கடன் வாங்குதல்' (Borrowing) என்னும் சொல் மூலதனத்திலிருந்து பணம் எடுத்தலையும் (Drawing on capital) உணர்த்தும். 'கடனைத் திருப்பி அடைத்தல்' (repaying of debt) என்பது கடன் கொடுத்தல் (lending) என்பதனின்றும் வேறுபட்டதே. எனினும்

இரண்டாவது பிரிவு பத்திகள் (second groups of columns) மூலதனக் கணக்கைக் காட்டுகின்றன. ஆறுவது பத்தி மூலதனக் கணக்கின் நிகர இருப்பைக் காட்டுகிறது. இந்தத் தொகை மூன்றுவது பத்தியிலுள்ள தொகைக்குச் சமமாக இருக்க வேண்டுமெனினும் குறிகள் எதிரிடையாக உள்ளன. பொன்னை உணர்த்தும் பத்தி (column of gold) வாணிபப் புள்ளி விவரங்களிலுல் (trade statistics) எளிதாகத் தொகுக்கப்படுகிறது. இந்தப் பத்தியில் கூட்டற்குறி பொன் ஏற்றுமதியாவதைக் காட்டுகிறது (அதாவது ஏற்றுமதியாகும் பொன்னுக்குக் கிரயமாக வரும் உட்-செல்லுகளை (in-payment) அல்லது நிதிகளின் உள்-நுழைவை (inflow of funds உணர்த்துகிறது). கழித்தற்குறி பொன் இறக்குமதியைச் சுட்டுகிறது. ஐந்தாவது பத்தி (column (5) ) கடன் வாங்கிய அல்லது கடன் கொடுத்த மொத்தத் தொகையினைக் காட்டுகிறது. இந்தப் பத்தியில் காணப்படும் தொகை 4-ஆம் 6-ஆம் பத்திகளில் காணும் தொகைளின் இடைவெளியை (gap) நிரப்பும் தொகையாக இருக்கிறது. சில நாடுகளைப் பொறுத்த வரையில் (குறிப்பாக அமெரிக்கா) அவைகள் எவ்வளவு தொகை கடன் கொடுத்தன அல்லது கடன் வாங்கின என்பதற்கு நேரடியான கணக்கீடுகள் (direct estimates) நமக்குக் கிடைக்கின்றன. ஆனுல் பெரும்பாலான நாடுகளுக்குப் புள்ளி விபரங்கள் ஊகமாகவே (influence) கணக்கிடப்படுகின்றன. ஒவ்வொரு நாட்டிற்கும் இது போன்று ஊகமாகக் கணக்கிடுதலே சிறந்ததென இந்த அட்டவணையின் மூலம் விளங்குகிறது.

அட்டவணையில் காட்டப்பட்டுள்ள ஆண்டுகள், உலகம் இரு போர்களுக்கிடையே கிட்டத் தட்ட நிலைத்த தன்மையைப் பெற்றிருந்த ஆண்டுகளாகும். அட்டவணையில் காட்டியுள்ளவற்றில்,

---

இவையிரண்டையும் ஒரு தலைப்பின் கீழ்க் கொண்டுவருவதை இரு காரணங்களுக்காக ஏற்றுக் கொள்ளலாம். முதலாவதாக, இவையிரண்டும் அயல் நாட்டுச் செலுத்துக்களில் (Balance of payments) ஒரேவிதமான விளைவையே (effect) உண்டுபண்ணுகின்றன. இவையிரண்டுமே மூலதனம் வெளிச் செல்வதற்குக் (outflow of capital) காரணமாக இருக்கின்றன. இவையிரண்டும் பொறுப்புக்களை ஒப்பு நோக்க (relatively to liabilitis) இருப்புக்களை (assets) அதிகரிப்பதன் மூலமோ அல்லது பொறுப்புக்களை குறைத்துவிடுவதன் மூலமோ இருப்புக்களை அதிகரிக்கச் செய்கின்றன. இரண்டாவதாக நடைமுறையில் இவைகளை வேறுபடுத்திக் காண்பதும் (distinguish) இயலாததாகும். இதைப்போலவே, கடன் வாங்குதலும் (borrowing) மூலதனத்திலிருந்து பணம் எடுத்தலும் ஒரே விதமான விளைவைத் தருவதால் நடைமுறையில் இவைகளை வேறுபடுத்திக் காண்பதும் இயலாததாக இருக்கின்றது. கடன் கொடுக்கும் கடனுளிகளை (debtor-lenders) கிரமமாக கடனைத் திருப்பித்தரும் - கடனுளிகள் (debtor - repayees) என அழைக்கலாம் என்று ஏற்கெனவே கூறப்பட்டது. இதைப் போலவே கடன் வாங்கும் - கடன் ஈவோர்களை (creditor borrowers) முதலிலிருந்து பணம் எடுக்கும் - கடன் ஈவோர் (creditor drawers-on-capital) எனப் பல சமயங்களில் மிகப் பொருத்தமாகக் கூறுவதுண்டு.

ஒரு நாட்டைத் தவிர மற்ற நாடுகள் பொன் திட்டத்தின்கீழ் (gold standard) இருந்தன. விலைகள் நியாயமான அளவிற்கு நிலை பேறு உடையனவாக இருந்தன. பணமுறையும் (monetary mechanism) ஓரளவிற்கு சுமுகமாகவே இயங்கி வந்தது. எனினும் சமன் கேட்டிற்கான (disequilibrium) வித்துக்கள் எளிதில் காணும்படி இருந்தன.

மூன்ருவது பத்தியில் குறிக்கப்பட்டுள்ள எண்கள் பெரியன வாக இருப்பது முதலாவதாக கவனிக்கத்தக்க தொன்று. ஆறு கடன் கொடுக்கும் கடன் ஈவோர் நாடுகளும் (six creditor—lenders) அயல்நாட்டு நிலுவைகளைக் (foreign balances) குவித்துக் கொண்டே யிருந்தமையால் அந்நிலுவைகளின் ஒன்று சேர்ந்த மொத்தம் ஆண்டொன்றுக்கு $ 1,660 மில்லியனைக் குவிந்து கொண்டே வந்தது. இத்தனைக்கும், முக்கியமான கடன் கொடுக்கும்—கடன் ஈவோர் நாடுகளிலொன்ருன ஸ்விட்சர்லாந்து அட்டவணையில் இடம் பெறவில்லை. இவ்வாறுள்ள பெருந் தொகையானது ஓர் ஐயத்தை எழுப்புகிறது. பன்ஞட்டு முதலீடு (international investment) இடங் கொடுப்பதற்கு மேற் கொண்டும் கடன் கொடுத்தல், கடன் வாங்குதல் ஆகியவை நடை பெறுகின்றனவோ என்ற ஐயமே அது.

இரண்டாவதாக கவனிக்க வேண்டியது யாதெனில், நான்கா வது பத்தியிலுள்ள எண்கள் பெரிய எண்களாக இருப்பன. இந்தப் பத்தியிலுள்ள எண்களின் மொத்தத் தொகை (குறிகளைப் பொருட் படுத்தாது), மூன்ருவது பத்தியிலுள்ள எண்களின் மொத்தத் தொகையில் 17 சதவீதமாக இருக்கின்றது. அயல் நாட்டு உபரி களில் (foreign surpluses) 83 சதவீதமே கடன் கொடுத்தல் அல்லது கடன் வாங்குதல் ஆகியவற்ருல் கிடைத்தவை. எச்சமாக உள்ளவை பொன்னுகவே பிறநாடுகளிலிருந்து கப்பல் மூலம் கொண்டு வரப்பட்டவை. மேலும் இந்தப் பத்தியில் காணப்படும் புள்ளி விபரங்கள் நிகரமானவை என்பதுடன் அவைகள் மூன்று ஆண்டுகளின் சராசரிப் புள்ளி விவரங்களாகும். அந்த மூன்று ஆண்டுகளில், குறைந்தது இரண்டாண்டுகளின் புள்ளி விபரங்கள் தனித் தனியே காட்டப்படுமாயின், அவை, சராசரியைவிட அதிக மான அளவு பொன் போக்குகள் (gold movements) இருந்தமையை உணர்த்தும். ஆக, நமக்கு ஓர் உண்மை புலப்படுகிறது. இந்த ஆண்டுகளில் பன்ஞட்டுக் கடனளிப்பின் (international lending) அளவு, அப்போதிருந்த வெளி உபரிகளைக் (external surpluses) காட்டிலும் குறைவாகவே யிருந்தது.

மூன்றாவதாக கவனிக்கத் தக்கது யாதெனில், பட்டியலில் உள்ள பல நாடுகளின் நிலை திருப்திகரமானதாக இல்லையென்பதே. ஜெர்மனியை ஒரு முதிர்ச்சியடையா கடன் வாங்கும் கடனாளி (immature debtor-borrower) என்றழைப்பதற்கு எந்த விதமான ஆதாரமுமில்லை. அது ஒரு புதியதாகத் தோன்றிய நாடுமல்ல; அது போலவே அது ஏற்றுமதித் தொழிலுக்கான குறிப்பிட்ட வாய்ப்புக்களை (particular opportunities) அளிக்கும் நாடு என்று கூறுவதற்குமில்லை. பட்டியலின் தலைப்பில் ஜெர்மனி இடம் பெற்றிருப்பது பொருத்தமற்றதாகும். போர் நஷ்ட ஈடுகள் (reparations) பணவீக்கம் (inflation) இவைகளின் செயற்கையான (artificial), பின்விளைவே, ஜெர்மனி அவ்வாறு முதல் இடம் பெற்றதற்குக் காரணமாகும். ஜெர்மனிக்குக் கடனாகக் கொடுக்கப்பட்ட பணத்தை ஒரு பயன்தரும் பன்னாட்டு முதலீடு (international investment) என்று கருதுவதற்கே இடமில்லாமலிருந்தது. மிகவும் விதி விலக்கான சந்தர்ப்பங்களில் (most exceptional cases) மட்டுமே அவ்வாறு கருத முடிந்தது. ஆஸ்திரேலியாவின் நிலை அவ்வளவு பொருத்தமற்றதாகக் காணப்படவில்லை. ஆனால் அது, கடன் வாங்கும்—கடனாளி (debtor-borrower) நிலையிலிருந்து முதிர்ச்சியடைந்த கடன் வாங்கும்—கடனாளி நிலை என்ற முன்னேற்றத்தையாவது அடைந்திருக்க வேண்டுமென்று ஒருவர் நினைக்கக் கூடும். ஆனால், தென் ஆப்பிரிக்கா, நியூசிலாந்து, டச்சுக் கிழக்கிந்தியத் தீவுகள் இவைகளுடன் ஒப்பிடும்போது ஆஸ்திரேலியா அவ்வளவாக முன்னேற வில்லை. மேலும் அது அதிக அளவில் கடன் பட்டிருந்தது. முதல் வரிசையில் வைக்கப் பட்டுள்ள மற்ற நாடுகளின் எண்ணிக்கையைப் பார்க்கும்போது நமக்கு ஆச்சரியமே ஏற்படுகிறது. இத்தகைய பொருளாதார வளர்ச்சியை உத்தேசித்து அவைகள் அவ்வரிசையில் வைக்கப் பட வேண்டுமென்று இருக்குமானால் அவைகளில் ஒரு நாடாவது அதற்குத் தகுதியாக இருந்திருக்குமா என்பது ஐயமே! முதிர்ச்சியடையா கடன் வாங்கும் கடனாளிகள் (immature debtor-borrowers) என அழைக்கப்படத்தக்க புதியனவும் ஏழ்மையானவுமாகிய நாடுகள் இந்த அட்டவணையில் இடம் பெறவில்லையென்பது ஈண்டுக் கவனிக்கத்தக்கது. காரணம், அவைகளுடைய புள்ளி விபரங்கள் கிடைக்கவில்லை. அவ்வாறு புள்ளி விபரங்கள் கிடைத்திருக்குமாயின் தென் அமெரிக்க நாடுகள் (South American States) பலவும், பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகள் பலவும் இந்த வரிசையில் இடம் பெற்றிருக்கும்.

இவைகளே, அட்டவணையிலுள்ள குறைபாடுகள். இன்னும் சில ஆழமான குறைபாடுகளும் உண்டு. அவைகளைப் புள்ளி

விபரங்களைக் கொண்டு தெரிந்து கொள்ளுதல் இயலாதெனினும் பகுத்தறிவைக் கொண்டு புரிந்து கொள்ளுதல் இயலும். அட்டவணையைப் பார்த்தால், வெளி உபரிகள் ஏராள அளவில் இருப்பது நன்கு தெரியும். இவ்வெளி உபரிகளில் கணிசமான அளவு கடன் கொடுக்கப்பட வில்லை யென்பதையும் பொன்னுகச் சேகரம் செய்து வைக்கப்பட்டன என்பதையும் அட்டவணையின் மூலம் தெரிந்துகொள்ளலாம். கடன் வாங்கப்பட்டனவும் கடன் கொடுக்கப்பட்டனவுமான பெருந் தொகைகளில் ஒருசில கூட, பன்னுட்டு முதலீடு (international investment) என்று அழைப்பதற்குத் தகுந்தனவாக இல்லை. இதனை அட்டவணையின் மூலம் தெரிந்து கொள்ள இயலாது. உதாரணம் ஒன்றைப் பார்ப்போம். ஜெர்மனி தனது தொழில்களைச் செம்மைப்படுத்திக் கொள்ளவும் உலகச் சந்தைகளில் மற்ற நாடுகளுடன் திறமையாகப் போட்டி யிடுவதற்கும், தான் வாங்கிய கடன் தொகைகளை ஓரளவிற்குப் பயன்படுத்தியது. ஆனுல் அது, பாங்கு மூலதனத்தை அதிகரித்துக் கொள்ளுதல், நகர நீச்சல் குளங்களை அமைத்தல், அரசாங்கக் கட்டடங்களை அமைத்தல் போன்ற இன்னேரன்ன நோக்கங்களுக்காகவும் கடன் வாங்கியது. இவ்வாருன நலத் திட்டங்களுக்குக் கடன் வாங்குதல் பாராட்டப்படுவதற்குகந்ததாயினும், ஜெர்மனியின் எதிர்கால ஏற்றுமதித் திறனை அதிகரிக்க அது பயனளிக்க வில்லை. ஆஸ்திரேலியா வாங்கிய கடன்களில் பெரிதும், அதன் வரவு செலவுத் திட்டத்தில் பள்ளம் ஏற்படுவதை நிறைவு செய்யவும் (to cover budget deficits) பொது மராமத்துத் திட்டங்களுக்கு (public works schemes) நிதியளிக்கவுமே பயன்படுத்தப்பட்டன. இத்தகைய நோக்கங்களுக்காகக் கடன் வாங்குதல் எதிர்கால ஏற்றுமதிகளை அதிகரிப்பதற்கு மறைமுகமாகப் பயன் பட்டதென்று வேண்டுமானுல் ஓரளவிற்குக் கூறலாமே தவிர மற்றப்படி நேரடியான பயன் எதையும் தரவில்லை. ஆஸ்திரேலியாவைப் பற்றியும் ஜெர்மனியைப் பற்றியும் கூறப்பட்டவைகளனைத்தும் சற்றும் மாறுபடாமல் பட்டியலில் கூறப்பட்டுள்ள ஏனைய கடன் வாங்கும் நாடுகளுக்கும், குறிப்பாக முதிர்ச்சியடையா கடன் வாங்கும்—கடனுளி நாடுகளுக்கும் (immature debtor-borrowers) பொருந்துகின்றன.

கடன் வாங்கியவர்களிடம் மிகக் கடுமையாக நடந்து கொள்ளுவதைப் போன்ற பயனற்ற செயல் எதுவுமில்லை. கடன் கொடுத்த நாடுகள் இவ்வாறு நடந்துகொண்டு பல தீமைகளை இழைத்துக் கொண்டிருந்தன. முதல் உலகப் போருக்கு முன்பு கிரேட் பிரிட்டன் யாவராலும் மதிக்கத்தக்க சிறந்த கடன் கொடுக்கும் கடன் ஈவோராக (creditor-lender) இருந்தது. அயல்நாடுகளுக்கு நெடுந் தவணைக் கடன்களைக்—கடனுளி கொடுப்பதற்காக கிரேட்

பிரிட்டன் ஒரு பெரியதும் திறமை வாய்ந்ததுமான சாதனத்தை லண்டன் மாநகரத்தில் நிருவகித்து வந்தது. எனினும் 1918-ஆம் ஆண்டிற்குப் பிறகு கிரேட் பிரிட்டனின் வெளி-உபரி (external surplus) போருக்கு முன்னால் இருந்ததைவிட குறைவாகவே யிருந்தது. இதற்கு இரண்டு காரணங்கள் இருந்தன. இவை ஏற்கெனவே இந்நூலில் கூறப்பட்டுள்ளன. முதலாவது காரணம், போரின் போது ஏற்பட்ட மாறுதல்கள் வாணிபத்தின் போக்குகளில் மாற்றத்தை உண்டு பண்ணியதால் பிரிட்டிஷ் ஏற்றுமதித் தொழில்கள் பாதிக்கப்பட்டன. இரண்டாவது, பிரிட்டனின் பவுண்டு-ஸ்டெர்லிங் (pound sterling) 1925-ஆம் ஆண்டில், அதனை மிகை மதிப்பு செய்துவிட்ட ஒரு மாற்று வீதத்தில், நிலைபேறு செய்யப்பட்டது (stablized). போருக்குப் பின்னர், கிரேட் பிரிட்டன் தனது வெளி உபரி குறைந்து போனதற்குச் சமமாகத் தான் அயல் நாடுகளுக்குக் கடன் கொடுத்து வந்ததையும் குறைத்துக்கொண்டிருக்க வேண்டும். ஆனால் லண்டன் மாநகரமோ அயல் நாட்டு கடன் வெளியீடுகளை (foreign issues) வெளியிடுவதில் மிகவும் மும்மரமாக இருந்தது. உண்மையில், போருக்குப் பின்னாலுள்ள பல ஆண்டுகளில் பிரிட்டனின் அயல் நாட்டு நெடுந் தவணைக் கடனளிப்பு அதன் வெளி உபரியைக் காட்டிலும் அதிகமாக இருந்தது. அதே சமயத்தில் பவுண்டு ஸ்டெர்லிங்கை (pound sterling) மிகை மதிப்பு வீதத்தில் (over-valued rate) நிலைபேறு செய்யப்பட வேண்டியதாக இருந்ததால், இங்கிலாந்து பாங்கு உயர் வட்டி வீதக் கைக் கோளைக் (a policy of high interest rates) கடைப் பிடிக்க வேண்டியதாயிற்று. இந்த உயர் வட்டி வீதத்தால் குறுங்கால மூலதனம் (short-term capital) லண்டனை நோக்கி நிறைய வந்துகொண்டிருந்தது. இதனால் லண்டன் 'குறுகக் கடன் வாங்கி நெடுகக் கடன் கொடுக்கும்' (borrowing short and lending long) நிலையிலிருந்தது. ஆனால் 1931-ஆம் ஆண்டில் அதற்கு ஓர் இக்கட்டான நிலை ஏற்பட்டது. அதற்கு குறுந்தவணைக் கடன் கொடுத்தவர்கள் (short-term creditors) 1931-ஆம் ஆண்டில் கடனைத் திருப்பிக் கேட்க ஆரம்பித்தபோது, பிரிட்டன் தன்னுடைய ஏராளமான நிலையான அயல் நாட்டுச் சொத்துக்களினின்றும் (fixed foreign assets) பணம் பெற முடியாமல் போய்விட்டது. இங்கே, இங்கிலாந்தின் சிறந்த பண்பினைப் பாராட்ட வேண்டும். ஏனைய கடனாளி நாடுகளுக்கெல்லாம் இலக்கணமாக அது திகழ்ந்தது. தனக்குச் சேர வேண்டிய வட்டியை பண்டங்களாகவே அது பெற்று வந்தது. இத்தகைய அதன் கைக்கோளினால் பிறருக்கு நேர்ந்த இக்கட்டை விட கிரேட் பிரிட்டனுக்கு நேர்ந்த இக்கட்டே (ienconvenience) அதிகம்.

முதல் பெரிய போருக்கும் (First Great war) பெரிய மந்தத்திற்கும் (Great Depression) இடையேயுள்ள ஆண்டுகளில் ஐக்கிய அமெரிக்கா, உலகத்திலேயே பெரிய கடன் கொடுக்கும் நாடாக (உலகத்திலேயே பெரிய கடன் ஈவோர் நாடாக இல்லாவிட்டாலும்) இருந்தது. அமெரிக்காவின் வெளி உபரி (External Surphus) அதிகமாக இருந்தமையே இதற்குக் காரணம். இந்த அதிகமான வெளி உபரி பன்னாட்டு கடன் பெறுதல் (international borrowing) பன்னாட்டு கடன் கொடுத்தல் (international lending) ஆகிய இவைகளுக்கிடையே உள்ள விகிதங்களின் அளவை அதிகப்படுத்தியது. ஒரு சில ஆண்டுகள் ஏற்படுத்திய மாற்றத்தால் உலகத்தில் தன்னுடைய மதிப்பு நிலையில் (status) இவ்வளவு மாற்றம் ஏற்படும் என்று அமெரிக்காகூட எதிர்பார்க்கவில்லை. அதனுடைய வெளி உபரிகள் (External Surplus) அனுவசியமாக அதிகரித்துக்கொண்டிருந்தன. இதற்குக் காரணம், பண்டங்களின் ஏற்றுமதிகள், பண்டங்களின் இறக்குமதிகளைக் காட்டிலும் எப்போதும் அதிகமாகவே இருக்கவேண்டும் என்ற ஒரு நம்பிக்கையைக் கொண்டிருந்தமையே ஆகும். (போருக்கு முன்னுலுள்ள காலத்தில் அமெரிக்கா ஒரு கடனாளியாக இருந்தபோது வேண்டுமானால் இந்த நம்பிக்கை பொருத்தமானதாக இருந்திருக்கும்). இந்த நம்பிக்கை, அமெரிக்காவை உலகத்திலேயே மிக உயர்ந்த சுங்கச் சுவர்களை (highest tariff walls) எழுப்பும்படி செய்தது. அதிருஷ்டவசமாக புலனுகா வாணிபச் செலுத்து (Balance of Invisible Trade) (புலனுகா வாணிபத்தில் அமெரிக்கா தான் விற்றதை விட அதிகமாக வாங்கியது) தனது புலனுகாத் தன்மையினுல் அரசியல் வாதிகளின் கவனத்தினின்றும் தப்பியது. அமெரிக்காவின் இத்தகைய பெருமளவு வெளி உபரிகள் சரியான முறையால் கையாளப்பட்டிருக்குமேயானுல் இத்துணை எதிர்ப்புக்களுக்கு ஆளாகியிருக்க மாட்டா. ஆனுல் அவை அவ்வாறு சரியான முறையில் எடுத்தாளப்படவில்லை. கொடுத்த கடன்களின் அளவு (the volume of lending)—அக் கடன்கள் பன்னுட்டு முதலீடாக இருப்பினும் இல்லாவிட்டாலும்—அதிகமான ஏற்ற இறக்கங்களை (wide fluctuations) உடையதாக இருந்தன. இந்த ஏற்ற இறக்கங்களால் ஏற்படும் பெரிய இடைவெளியை (large gap) பொன்னை இறக்குமதி செய்வதன் மூலம் நிரப்ப வேண்டியிருந்தது. 1924 ஆம் ஆண்டில் $ 216 மில்லியன் இறக்குமதி செய்யப்பட்டு 1925 ஆம் ஆண்டில் $ 102 மில்லியன் ஏற்றுமதி செய்யப்பட்டது; 1928 ஆம் ஆண்டில் $ 272 மில்லியன் ஏற்றுமதி செய்யப்பட்டு, 1929 ஆம் ஆண்டில் $ 120 மில்லியன் இறக்குமதி செய்யப்பட்டது. மந்தத்தின் தொடக்கம் வரை, போருக்கு முந்திய இரு ஆண்டுகளில் மட்டுமே (1920 ஆம் ஆண்டிலும் 1921 ஆம் ஆண்டிலும்) ஐக்கிய அமெரிக்

காவிற்குள் நுழையும் அல்லது வெளிச்செல்லும் நிகரப் பொன் போக்குகள் (net gold movements) $ 100 மில்லியனுக்கும் குறைவாக இருந்தன. 715-716ஆம் பக்கங்களில் காட்டப்பட்டுள்ள அட்டவணையில் குறிப்பிட்டுள்ளபடி $ 102 மில்லியன் ஏற்றுமதியாகியதென்பது 1927, 1928, 1929 ஆகிய இம் மூன்றுண்டுகளின் சராசரித் தொகையாகும். அந்தச் சராசரி 1927ஆம் ஆண்டில் $ 154 மில்லியன் ஏற்றுமதி. 1928ல் $ 272 மில்லியன் ஏற்றுமதி 1929ல் $ 120 மில்லியன் இறக்குமதி என்றவற்றின் சராசரியாகும். மற்றுமொன்றைத் தெரிந்துகொள்ளவேண்டும். அமெரிக்கா அவ்வாறு கடன் கொடுத்து பன்னாட்டு முதலீடாக அமைவது வெகு அரிதாக இருந்தது. பன்னாட்டுக் கடனளிப்பு விவகாரத்தில் நியூயார்க்கிற்கு அவ்வளவு அனுபவம் போதாது. நியூயார்க்கிலுள்ள பாங்கர்கள் (bankers) உடனடியான இலாபங்களைக் கண்டு மயங்கிக் கடன் கொடுப்பதில் முனைந்தனரே தவிர அக்கடன் தொகைகள் எவ்விதமாகப் பயன்படுத்தப்படுகின்றன என்பதைக் கூட ஆராயவில்லை. அல்லது அக் கடன்கள் திருப்பி அடைக்கப்படுவதற்கான வாய்ப்புகள் இருக்கின்றனவா என்றும் ஆராயவில்லை. 1928 ஆம் ஆண்டில் தென் அமெரிக்காவிற்கு ஐக்கிய அமெரிக்கா அளித்த கடன்களில் சில ஒரு பன்னாட்டுக் கடன் எந்தவிதமாக இருக்கக் கூடாதோ அதற்கு ஓர் எடுத்துக்காட்டாக இருக்கிறது. இந்தக் காலம் முழுவதிலும், அமெரிக்காவின் நிதியக் கைக்கோள் (American Financial) அமெரிக்கக் கடனளிப்பினால் நேரிடும் விளைவுகளுக்கு எவ்விதமான உதவியையும் அளிக்க முயற்சி செய்யவில்லை. வட்டித் தொகை செலுத்துவதைப் பண்டங்களாகச் செலுத்தலாமென்பதைக் கடைப்பிடிக்கவில்லை. இது போதாதென்று 1930ஆம் ஆண்டில் அமெரிக்காவின் காப்பு வரிகள் வெகுவாக அதிகரிக்கப்பட்டன.

கடன் கொடுக்கும்—கடன் ஈவோர் நாடுகள் மூன்றனுள் ஒன்றாகிய பிரான்சு நாடும் இதைப் போன்ற ஒரு தீமையான கைக்கோளையே கடைப்பிடித்தது. பவுண்டு ஸ்டெர்லிங் மிகை மதிப்புச் செய்யப்பட்டது போலல்லாது ஃபிரான்க்கானது மிகவும் குறை மதிப்புச் செய்யப்பட்டு நிலைபேறு செய்யப்பட்டது. இதன் விளைவு என்னவெனில், பிரான்சின் வெளி உபரி (External surplus) அதிகரித்தது. பிரான்சின் முதலீடு செய்பவர் தமது பணத்தை வெளி நாடுகளில் முதலீடு செய்ய விழைவதற்கும் அதிகமாகவும், அல்லது அயல் நாட்டுக் கடன் வெளியீடுகளை (foreign issues) வெளியிடுவதில் பிரான்சு நாட்டின் பண அங்காடிக்குள்ள செயல்முறைத் (technical) திறனுக்கும் அதிகமாகவும் பிரான்சின் வெளி உபரி பெருகிக்கிடந்தது. இதனுடன், பிரெஞ்சு அரசாங்கமும் அயல்

நாட்டு நெடுந்தவணைக் கடன் வழங்குதலை மறைமுகமாகத் தடை செய்துகொண்டேயிருந்தது. இதனால் பிரான்சு நாட்டினிடம் பிரிட்டனிடமிருந்து வெளி உபரியின் அளவிற்குச் சமமான (1927-29 ஆம் ஆண்டுகளின் சராசரித் தொகை) வெளி உபரி இருந்தது. மேலும் கடன் கொடுக்கப்பட்டதாக கணக்கிடப்படும் தொகைகளும் லண்டன், நியூயார்க் இன்னும் மற்ற முக்கிய இடங்களிலுள்ள பாங்குகளில் வைப்புக்களாக வைக்கப்பட்டிருந்தன. எனவே, பன்னாட்டு முதலீடுகளில் (மேலே விளக்கப்பட்டுள்ளபடி) பிரான்சு இந்த ஆண்டுகளில் சற்றும் பங்கு கொள்ளவில்லை.

எனவே இந்த ஆண்டுகளில் பன்னாட்டு மூலதன அங்காடி (International Capital market) ஓர் இயல்பான பொருந்து நிலைக்கு (a normal adjustment) வெகுதூரத்திலிருந்தது. கடன் கொடுக்கும் பெரு நாடுகள் மூன்றனுள் இரண்டு நாடுகள் தங்களது வெளி உபரிகளை (external surpluses) செயற்கையான உயர் மட்டத்தில் (artificially high levels) வைத்திருந்தன. அமெரிக்கா தனது தடை செய் காப்பு வரிகளினாலும் (prohibitive tariffs), பிரான்சு தனது செலாவணியைக் குறை மதிப்பு (undervaluation) செய்வதன் மூலமும் வெளி உபரியை செயற்கையான உயர் மட்டத்தில் வைத்திருந்தன. கடன் கொடுப்பதில் அனுபவம் வாய்ந்த கிரேட் பிரிட்டன் தனது சொந்த வாக்குறுதிகளையும் நிறைவேற்ற இயலாத அளவிற்கு ஒரு நிலையை ஏற்படுத்திக்கொண்டிருந்தது. இந்த மூன்று நாடுகளும் ஆண்டொன்று $ 1,500 மில்லியன் வீதம் வெளி உபரிகளைக் (external surpluses) குவித்துக் கொண்டே யிருந்தன. இவ்வாறு குவிந்துகொண்டே வந்த வெளி உபரிகள் நாளடைவில் பெருந் தொகைகளாயின. இம் மூன்று நாடுகளில் இரண்டு நாடுகள், பொருளாதார நலனற்ற (uneconomic) கடன்களை கடனாளிகளுக்குக் கொடுப்பதைத் தவிர, வேறு எந்தவித பரிகாரத்தையும் இந்த நிலைக்குத் தேடவில்லை. இது போலவே, கடன் வாங்கிய நாடுகளும், நாளைக்குக் கடனை எவ்வாறு அடைக்கப் போகிறோம் என்ற கவலை சிறிதும் இல்லாமல் அதிக வட்டி வீதங்களில் கடனை வாங்கிக் கொண்டே இருந்தனர். கடனும் அதிகமாகக் கொடுக்கப்பட்டது; கடன் தவறான வழியில் கொடுக்கப் பட்டது போல அக்கடன்கள் தவறான நோக்கங்களுக்கே (wrong purpose) வாங்கப்பட்டன. இத்தகையதொரு நிலை நெடு நாளைக்கு நீடிக்க முடியாது. இந்த நிலை 1914-ஆம் ஆண்டிற்கு முன்புள்ள பல பத்தாண்டுகளில் பிரிட்டிஷ் குடியேற்ற உரிமை நாடுகளும், தென்னமெரிக்க நாடுகள் பலவும் எய்திய பொருளாதார நிலையுடன் ஒப்பிட முடியாது. ஏனெனில் அவைகளின் அப்போதைய வளர்ச்சி ஆக்கமான வளர்ச்சியாக இருந்தது. எனவே மேற்சொல்லப்பட்ட ஆக்கமற்ற நிலை சமன்

கேடான பகிர்வையுடையதொரு பன்னாட்டு வாங்குந்திறனை அடிப்படையாகக் கொண்ட கடுவட்டி (usury) முறையைக் கொண்டதாக இருந்ததே தவிர, பன்னாட்டு மூலதனத்தைச் (international capital) சேகரிக்கும் ஒரு செவ்வையான முறையாக இல்லை.

பன்னாட்டுப் பொன் திட்டம் (International Gold Standard) முறிந்ததற்கு பல்வேறு காரணங்கள் சென்ற அத்தியாத்தில் விவாதிக்கப்பட்டன. ஆனால் எந்த விதமான பன்னாட்டுப் பணமுறை அமலில் இருந்தபோதிலும் இத்தகைய கடன் கொடுக்கும், கடன் வாங்கும் கைக்கோள்கள் பன்னாட்டு நிதி முறையை நிர்மூலமாக ஆக்கியே இருக்கும். வெளி உபரிகளின் மொத்தம் (total of external surpluses) பன்னாட்டு முதலீட்டின் அளவை (international investment)விட அதிகமாக இருந்தமையால் சமன்கேடு (maladjustment) தவிர்க்க முடியாத தொன்றாக இருந்தது. இவ்விதமான நிலை கடன் வாங்குதலினால் (borrowing) சற்று சீர்ப்பட்டாற்போல் காணப்பட்டது. இது தனிப்பட்டவர்கள் கடன் வாங்குவதை ஒத்திருந்தது. தனிப்பட்டவர்கள் (individuals) தங்களின் வருமானங்களுக்குமேல் செலவு செய்து கடன் வாங்குகின்றனர். இவர்கள் கடன் வாங்குவதினால், மற்றொரு சாரார் தாங்கள் முதலீடு செய்வதற்கு அதிகமாகச் சேமிப்புச் செய்வதால் இவ்வாறு ஒரு சாரார் கடன் பெறுதல் சாத்தியமாகின்றது. அதாவது மற்றொரு சாராரின் சேமிப்பு எவ்வளவு உள்ளதோ அவ்வளவு வரை மேற்சொல்லப்பட்டவர்கள் கடன் வாங்க இயலும். ஆனால் நாடுகளைப் பொறுத்த வரை நிலைமை மோசமாக இருந்தது. ஏனெனில் இத்தகைய கடன் வாங்குதல் எவ்விதத்திலும் காலவரையறையின்றி நீடிக்க முடியாது. இந்த காலத்திற்குள்ளாகவோ அல்லது சற்றுக் காலங் கடந்தோ வட்டி செலுத்தியே ஆகவேண்டும். கடன்பெற்ற தொகைகள் புத்திசாலித்தனமாக முதலீடு செய்யப்படாது போனால் ஏற்றுமதியில் எந்தவித அதிகரிப்பும் ஏற்படாது. ஏற்றுமதியில் அதிகரிப்பு ஏற்படாமல் போகுமானால் அதனால் வட்டி செலுத்துவதும் இயலாமற் போகும். மேலும் நாடுகள் தங்களது மூலதன வளர்ச்சிக்கு (capital development) தங்களின் இறக்குமதிப் பண்டங்களுக்குப் பணம் கொடுப்பதற்கு அயல் நாடுகளிடமிருந்து கடன் பெறுவதையே எதிர்பார்த்துக் கொண்டிருக்குமானால், பன்னாட்டுக் கடனளிப்பு (international lending) தீடீரென்று நிறுத்தப்படுமேயானால் அந்த நாடுகளின் பொருளாதார அமைப்பே (economic structure) மிகச் சீர்குலையும். 1927-ஆம் ஆண்டிலும் 1928-ஆம் ஆண்டிலும் பன்னாட்டு கடன் அளிப்பு (international lending) அதிக அளவில் இருந்ததானது அப்போது மண்டிக்கிடந்த சமன்கேடுகளை மூடி மறைக்கும் (maladjust-

ments) ஒருதிரை (screen) போன்றிருந்தது—அதாவது பன்னாட்டு மூலதன அங்காடியின் (international capital market) அடிப்படையான குறைபாடுகளுக்கு (fundamental defects) ஒரு நிவாரணி (palliative) யாக இருந்தது.

1929ஆம் ஆண்டை அடுத்த ஆண்டுகளில் மேற்சொல்லப்பட்ட திரை கிழித்தெறியப்பட்டது. 1928ஆம் ஆண்டிற்குப்பிறகு நெடுந்தவணைக்கடன் கொடுப்பதை ஐக்கிய அமெரிக்கா நிறுத்திக் கொண்டது. நியூயார்க் பங்கு மாற்றுச் சந்தையில் (New York Stock Exchange) அப்போதிருந்த யூகபேரக்கிளர்ச்சி (speculative excitement)யும், அங்கு நிலவிய அதிகவட்டி வீதங்களும், பணத்தை இலாபகரமாகப் பயன்படுத்தும் வாய்ப்பினை ஏற்படுத்தின. அமெரிக்க முதலாளிகளுக்குமட்டுமல்லாமல் ஐரோப்பிய முதலாளிகளுக்கும்கூட கடன் கொடுக்கும் சிறந்ததொரு வாய்ப்பினை அவை நல்கின. 1929ஆம் ஆண்டு இலையுதிர்காலத்தில் ஏற்பட்ட முறிவுக்குப் (crash) பிறகு நம்பிக்கை மிகவும் அசைக்கப்படவே கடன்வெளியீடுகள் எதனையும் அமெரிக்கா வெளியிடவில்லை. 1929ஆம் ஆண்டிலும் 1930ஆம் ஆண்டின் பெரும்பகுதியிலும் அமெரிக்க பாங்குகள் அயல்நாடுகளுக்கு, குறிப்பாக ஜெர்மனிக்கு, குறுந்தவணைக் கடன்களை தொடர்ந்து அளித்து வந்தது. இச்சமயம், பிரிட்டனின் கடன் ஈதல் ஏறக்குறைய நன்றாகவே, இயங்கிவந்தது. லண்டன் அங்காடியில் (London Market) 1929ஆம் ஆண்டில் பொதுமக்களுக்கு வெளியிடப்பட்ட அயல்நாட்டுக்கடன்களுக்கான வெளியீடுகளின் மொத்த மதிப்பு £ 94,000,000 ஆக இருந்தது. 1930ஆம் ஆண்டில் அது £ 109,000,000 ஆக அதிகரித்தது. இந்தச் சமயத்தில், பிரான்சு வெளிநாடுகளுக்கு குறுங்காலக் கடன்களை அளிப்பதையும் நிறுத்திக் கொண்டதோடல்லாமல் ஏற்கனவே, தான் அளித்துள்ள குறுங்காலக் கடன்களை, திரும்பப்பெறுவதற்கு அழைப்பு விடுத்துக் கொண்டிருந்தது. இவ்விதமாக அயல்நாட்டுக்கடனளிப்பு வெகுவாகக் குறைக்கப்பட்டது. இவ்வாறான அயல்நாட்டுக் கடனளிப்பிலும் குறுங்காலக் கடன்களே, பெருமளவில் இடம் பெற்றிருந்தன. இக்குறுங்காலக் கடன்களை பன்னாட்டு முதலீட்டிற்குப் பயன்படுத்த முடியாது. இவ்விதமாக நிலை மோசமாகிக்கொண்டு வந்தது.

1931ஆம் ஆண்டில் மந்தம், (Depression) ஒரு நெருக்கடி நிலையாக (crisis), மாறியது. இத்தகையதொரு சுழற்சூறாவளி (revolving storm) ஒவ்வொரு நாட்டையும் தாக்கியது. அதன் போக்கையெல்லாம் விவரித்துக் கொண்டிருக்க இது இடமல்ல. இரண்டு ஆண்டுகளாக குறுங்காலக் கடன்கள் மட்டுமே கொடுக்

கப்பட்டு வந்தனவல்லவா? தற்போது அவைகள் நிறுத்தப்பட்டு ஏற்கெனவே கொடுக்கப்பட்ட குறுங்காலக் கடன்களையும் திருப்பித் தருமாறு கோரப்பட்டன. முதலாவதாக ஆஸ்டிரியாவும் (Austria) ஹங்கேரியும் (Hungary) பிறகு ஜெர்மனியும் அயல்நாட்டு மூல தனத்தைத் திருப்பிச் செலுத்துதலைத் தடைசெய்யுமாறு ஒரு கட்டாயத்திற்கு ஆளாயின. அவைகள் தங்கள் செலாவணிகளைக் குறைமதிப்புச் செய்தாக வேண்டும் என்ற நிலைமையிலிருந்ததால் அதைத் தவிர்க்கவேண்டுமெனில் மேற்சொன்னவாறு அயல்நாட்டு மூலதனத்தைத் திருப்பிச்செலுத்துதலைத் தடைசெய்வதே மறு வழியாக (alternative) இருந்தது. கிரேட் பிரிட்டன் தன்னுடைய குறுங்காலக் கடன் ஈவோர்களால் (short-term creditors) நிலைமையை ஓரளவிற்குச் சமாளித்ததென்றும் அதனுடைய நெடுந் தவணைச் சொத்துக்களை (long-term assets) திரும்பப்பெற முடியாதுபோகவே, அயல்நாட்டு மூலதனத்தைத் திருப்பிச் செலுத்துதலை, 'தடைசெய்வதைக்' (blocking) காட்டிலும் தன்னுடைய செலாவணியைக் குறைமதிப்பு செய்வதையே சிறந்ததென முடிவு செய்தது. இவ்வாறு தொடர்ந்து நேர்ந்த நெருக்கடிகள் (series of crisis) பன்னாட்டுக் கடனளிப்புக்கு ஒரு முற்றுப்புள்ளியை வைத்தன.

இதன் காரணமாக, கடன்வாங்கும் நாடுகளுக்கு (borrowing countries) இடர்ப்பாடு தோன்றியது. அவைகள், அயல்நாட்டுக் கடன்களின் உதவியின்றித் தங்களின் வரவு செலவை நேர்செய்ய (balancing their accounts) முடியாமலிருந்தன. அவைகளின் அயல்நாட்டுச் செலுத்துப்பட்டியல்களில் ஆக்கமான இனங்களில் (positive items) பெரிதாக இருந்த ஒரு இனம் (item)—அதாவது உட்செல்லு (in-payment) திடீரென மறைந்து விட்டது. கடன் வாங்கும் நாடுகளில், பலவற்றிற்கு குறிப்பாக ஐரோப்பாவிற்கு வெளியே உள்ள நாடுகள், மற்றும் ஒன்றினால் பாதிக்கப்பட்டன. அவைகளின் மூலப் பொருள் ஏற்றுமதிகளின் விலைகள், அவைகள் இறக்குமதி செய்யும் பொருள்களின் விலைகளைக் காட்டிலும், வெகு வேகமாகக் குறைந்தன. இந்த இரு காரணங்களாலும் அவைகளின் அயல்நாட்டுச் செல்லுகளின் பட்டியலில் உட்செல்லுப் பகுதியில் (in-payment sides) பெரியதொரு இடைவெளி (a large gap) இருந்தது. கீழ்க்கண்ட இரண்டுவழிகளில் ஏதாவது ஒன்றினால் சமன்பாட்டை (balance) அடையலாம். அவையாவன: ஏற்றுமதிகளை அதிகரித்தல் அல்லது இறக்குமதிகளைக் குறைத்துக் கொள்ளுதலாகும். உலக அங்காடிகள் (world's markets) சீர் குலைந்துள்ள ஒரு நிலையில் ஏற்றுமதிகளை அதிகரிப்பதென்பது இயலாத காரியம். இறக்குமதிகளைச் சுருக்கிக்கொள்ளுதல் (con-

traction of imports) ஒன்றுதான் பரிகாரமாக இருந்தது. இறக்குமதிகளைப் பலவழிகளால் குறைத்துக் கொள்ளமுடியும். அவை யாவன: சுங்கவரிகளை அதிகரித்தல்; இறக்குமதிப் பங்களவு முறையைக் (import quotas) கொணர்தல்; இறக்குமதிகளை அப்பட்டமாகத் தடைசெய்தல் (outright prohibition of imports) செலாவணி மாற்றுக்கட்டுப்பாடு செய்தல் (exchange control) [இறக்குமதிகளுக்குப் பணம் செலுத்தப் பயன்படும் அயல்நாட்டுச் செலாவணிகளின் அளிப்பைப் பங்கீடு செய்யும்முறை]; நாட்டின் செலாவணியை மதிப்பிறக்கம் (depreciation) செய்தல் (இதன் மூலம் இறக்குமதிகளை விலை உயரச் செய்து அவைகளுக்கான தேவையைக் குறையச் செய்யலாம்) ஆகியவைகளாம்.

கடனாளிநாடுகள் கையாண்ட இந்த முறைகள் கடன்ஈயும் நாடுகளின் ஏற்றுமதிகளை மிகவும் குறைத்ததுடன் அவைகளின் அயல்நாட்டுச் செல்லுகளில் துண்டுவிழுதல் ஏற்படும் என்றும் அச்சுறுத்தின. 1931ஆம் ஆண்டில் கிரேட் பிரிட்டன் தன்னுடைய பண்டங்கள், பணிகளின் விற்பனை குறைந்ததாலும், வெளிநாடுகளிலிருந்து வரும் வட்டி வருமானங்கள் குறைந்ததாலும், வெளி உபரியை (external surplus) எதிர்நிலையில் (negative) பெற்றிருந்தது. முதல்தடவையாக அது (1914-18 ஆண்டுகளில் நடந்த போர்க்காலம் தவிர்த்து) முதிர்ச்சியடைந்த கடன்கொடுக்கும்—கடன்ஈவோர் (mature creditor-lender) நிலையிலிருந்து கடன் வாங்கும்- கடன் ஈவோர் (creditor borrower) நிலையை அடையக் கட்டாயப்படுத்தப்பட்டது. இந்த நிலையைத் திருத்த கிரேட் பிரிட்டன் முயற்சிசெய்தது. முதலாவதாக பவுண்டைக் குறை மதிப்புச் செய்தது. இது பிரிட்டிஷ் ஏற்றுமதிகளை அதிகரிக்கச் செய்து பிரிட்டிஷ் இறக்குமதிகளைக் கட்டுப்படுத்தியது. இரண்டாவதாக, கிரேட் பிரிட்டன் தனது தடையிலா வாணிபக்கைக் கோள்களை (free trade policies) உதறித் தள்ளியதுடன் அயல் நாட்டு இறக்குமதிகளின்மீது பொதுவான ஒரு சுங்கவரியை விதித்தது. ஆனால், உலகத்திலேயே மிகப்பெரிய தடையிலா அங்காடியாகிய கிரேட் பிரிட்டனுக்குள் நுழையும் இறக்குமதிகளுக்கு ஏற்பட்டத்தடை, கடனாளிநாடுகள், கடன்ஈவோர் நாடுகளில் பல ஆகிய இவற்றின் பன்னாட்டு வரவுசெலவுக் கணக்குகளை (international accounts) சமன்கேடாக ஆக்கியது. 1932, 1933 ஆகிய இவ்விரு ஆண்டுகள் முழுதும் சுங்கவரிகள் பலவகைத் தடைகள் ஆகியவற்றின் வெறியாட்டம் இருந்துகொண்டேயிருந்தது. ஆக, நாடுகளின் ஒவ்வொரு கூட்டமும் தனது கணக்குகளைச் (accounts) சரிசெய்ய முயலும்போது மற்றொரு கூட்டத்தின் கணக்கை சமன்கேடாக்கியது. இதைப்போலவே

இறக்குமதிகளைக் குறைக்க மேற்கொண்ட பெரும்பான்மையான தீவிர நடவடிக்கை அதற்குச் சமமான, ஏற்றுமதிகளைத் தடை செய்யும், பொதுத்தடையை (general restriction) விளைவித்தது. 1933ஆம் ஆண்டில், பன்னாட்டு வாணிபத்தின் மதிப்பு 1929ஆம் ஆண்டில் இருந்த மதிப்பில் மூன்றில் ஒருபங்காகக் குறைக்கப் பட்டது. ஆனால் இத்தகைய தடைமுறைகள் யாருக்கும் நன்மை யளிக்கவில்லை.

பன்னாட்டுக்கடனளிப்பை நிறுத்திவைத்தல் என்பது உள் நாட்டு எல்லையில் (domestic sphere) முதலீட்டை நிறுத்திவைத்தல் (Suspension of investment) போன்று, பன்னாட்டுஅரங்கில் (International sphere) ஒரு பணவடிப்பு நச்சுச்சுழல் படியைக் (vicious spiral of deflation) கொண்டுவந்தது. இவையிரண்டும், உண்மையில், ஒன்றின் ஒன்று உறழ்வதால் விளைவையும் எதிர்விளைவையும் விளைவித்துக் கொண்டிருந்தன. மாற்றுக்கட்டுப்பாட்டின் கெடுபிடி (exchange stringency) உள்நாட்டு பணவடிப்பை (domestic deflation) உண்டாக்கியது. இந்த உள்நாட்டுப் பணவடிப்பு வெளிநாடுகளுக்கு மூலதனம் கடன்வழங்கும் விருப்பத்தைக் குறைத்தது.

இந்த நிலை 486-488ஆம் பக்கங்களில் காட்டியுள்ள அட்டவணையில் விளக்கப்பட்டுள்ளது. இந்த அட்டவணை 496-497ஆம் பக்கங்களில் உள்ள அட்டவணையில் தொகுக்கப்பட்டுள்ளது. அந்த அட்டவணைக்குண்டான அதே தகுதிகள் இதற்கும் கூறப்பட்டுள்ளன.

இந்த அட்டவணையானது பலநாடுகளில் மந்த ஆண்டுகளான (depression years) 1931, 1932, 1933, ஆகிய ஆண்டுகளின் சராசரி அயல்நாட்டுச் செல்லுநிலைகளை (balance of payments) உணர்த்துகிறது. அட்டவணையிலுள்ள எண்கள் இத்தனை மில்லியன் அமெரிக்கன் பொன்டாலர்கள்[1] என்பதைக் குறிக்கின்றன. இதனால் அவைகளின் ஒப்புமை வேற்றுமைகளைக் காட்டுவதும் எளிதாக இருக்கின்றது.

கீழ்க்கண்ட அட்டவணைக்கும் இதற்கு முன்னர்க்காட்டப் பட்ட அட்டவணைக்கும் வேற்றுமைகள் தெற்றென விளங்கு கின்றன. இதில், கடன் கொடுப்பவர்கள் பெரும்பாலும் இடம்

1 பொன் - டாலர்களென்பவை முன்பு அமலில் இருந்த பொன் டாலர்களைக் குறிக்கும். அதாவது 1933–34ஆம் ஆண்டில் டாலருக்கு நேர்ந்த மதிப்பிழப்பு (depreciation) குறைமதிப்பு (devaluation) இவைகளுக்கு முன்பு அமலில் இருந்த பொன்னை உட்கிடையாகக் கொண்ட (good content) டாலர்களைக் குறிக்கும்.

## 1931—33ஆம் ஆண்டுகளில் நாடுகளின் அயல்நாட்டுச் செல்லுகள்

(National Balances of Payments 1931—33)

**1931, 1932, 1933 ஆகிய மூன்றுண்டுகளின் சராசரிப் புள்ளி விவரங்கள் இவை:**

(எண்கள் இத்தனை மில்லியன் பொன் டாலர்கள் என்பதனைக் குறிக்கின்றன.)

| | புலனுவதும் புலனுகாதது மான வாணிபச் செலுத்துக்கள் (1) | வட்டி வரவுகள் அல்லது செல்லுகள் (2) | வருமானக் கணக்கில் நிலுவை (Balance on income Account) [ (1) + (2) ] (3) | பொன் (Gold) (4) | கடன் கொடுத்தல் (—) அல்லது கடன் வாங்குதல் (+) (5) | மூலதனக் கணக்கில் நிலுவை. (Balance on Capital Account) [(4) + (5)] (6) |
|---|---|---|---|---|---|---|
| I முதிர்ச்சியடையாக் கடன் வாங்கும்-கடனுளி நாடுகள் (immature debtor-borrowers): | | | | | | |
| அர்ஜென்டினு (அ) ... | — 60 | —138 | —198 | + 90 | +108 | +198 |
| இந்தியா (ஆ) ... | — 2 | — 94 | — 96 | +164 | — 68 | + 96 |
| ஹங்கேரி (இ) ... | — 1 | — 15 | — 16 | — 1 | + 17 | + 16 |
| II முதிர்ச்சியடைந்த கடன் வாங்கும்-கடனுளி நாடுகள் : (mature debtor-borrowers): | | | | | | |
| கானடா (எ) ... | + 82 | —170 | — 88 | (உ) | + 88 | + 88 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆஸ்திரேலியா (ஈ) ... | + 90 | —125 | — 35 | +50(உ) | — 15 | + 35 |
| டச்சுக் கிழக்கிந்தியத் தீவுகள் ... ... | + 22 | — 51 | — 29 | + 15 | + 14 | + 29 |
| நியூசிலாந்து (உ) ... | + 17 | — 36 | — 19 | + 5 | + 14 | + 19 |
| ஜப்பான் (இ) ... | + 5 | — 11 | — 6 | +111 | —105 | + 6 |
| நார்வே ... ... | + 11 | — 16 | — 5 | + 3 | + 2 | + 5 |
| டென்மார்க் ... ... | + 14 | — 14 | 0 (ஊ) | + 4 | — 4 | + 0 |
| III கடன் கொடுக்கும் - கடனாளி நாடுகள்: debtor-lenders): | | | | | | |
| செக்கோஸ்லோவேகியா | + 16 | — 10 | + 6 | — 2 | — 4 | — 6 |
| போலந்து(இ) ... ... | + 48 | — 40 | + 8 | — 4 | — 4 | — 8 |
| பின்லாந்து ... ... | + 30 | — 9 | + 21 | 0 | — 21 | — 21 |
| தென் ஆப்பிரிக்கா (இ)(எ) | + 93 | — 64 | + 29 | (எ) | — 29 | — 29 |
| ஜெர்மனி ... ... | +334 | —222 | +112 | +140 | —252 | —112 |
| IV முதிர்ச்சியடையா கடன் கொடுக்கும்-கடன்ஈவோர் நாடுகள் (immature creditor-lenders): ... | | | | | | |
| ஒரு நாடும் இல்லை (none) | ... | ... | ... | ... | ... | ... |

| | புலனுவதும் புலனுகாதது மான வாணி பச் செலுத் துக்கள் (1) | வட்டி வரவு கள் அல்லது செல்லுகள் (2) | வருமானக் கணக்கில் நிலுவை (Balance on income Account) [ (1) + (2) ] (3) | பொன் (Gold) (4) | கடன் கொடுத் தல் (—) அல் லது கடன் வாங்குதல் (+) (5) | மூலதனக் கணக்கில் நிலுவை (Balance on Capital Account) [(4) + (5)] (6) |
|---|---|---|---|---|---|---|
| V முதிர்ச்சியடைந்த கடன் கொடுக்கும்-கடன் ஈவோர் நாடுகள் (mature creditor lenders) : | | | | | | |
| ஸ்வீடன் ... ... | — 5 | + 12 | + 7 | + 1 | — 8 | — 7 |
| ஐக்கிய அமெரிக்கா ... | —327 | +466 | +139 | +101 | —240 | —139 |
| VI கடன்வாங்கும் - கடன் ஈவோர் நாடுகள் (creditor-borrowers) : | | | | | | |
| பிரான்சு (ஏ) ... | —210 | + 57 | —153 | —374 | +221 | +153 |
| ஐக்கிய அரசாங்கம் (United Kingdom) ... | —825 | +598 | —227 | —181 | +408 | +227 |

(அ) 1929ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் முதல் 1931ஆம் ஆண்டு செப்டம்பர் முடிய இரண்டாண்டுகளின் சராசரி.

(ஆ) 1931ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்திலிருந்து 1934ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் முடிய மூன்றுண்டுகளின் சராசரி.

(இ) 1931—1932 ஆகிய இரண்டாண்டுகளின் சராசரி.

(ஈ) 1930ஆம் ஆண்டு ஜூலை மாதம்முதல் 1933ஆம்ஆண்டு ஜூன் முடிய மூன்றுண்டுகளின் சராசரி.

(உ) 1930ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்திலிருந்து 1933ஆம் ஆண்டு மார்ச்சு முடிய மூன்றுண்டுகளின் சராசரி.

(ஊ) மிகக் குறைவான எதிர்நிலை இருப்பு (negligible negative balance).

(எ) தென் ஆப்பிரிக்காவிலிருந்தும் கானடாவிலிருந்தும் பொன் ஒரு பண்டமாக (commodity) ஏற்றுமதி செய்யப்படுகிறதே தவிர, பண விவகாரங்களுக்குப் பயன்படுத்த ஏற்றுமதி செய்யப்படுவதில்லை. எனவே அது 1ஆம் பத்தியில் சேர்க்கப்பட்டுள்ளது.

(ஏ) 1932—1933 ஆகிய ஈராண்டுகளின் சராசரி மட்டும்; இந்தோசீனு தவிர்த்த ஏனைய பிரஞ்சு குடியேற்ற நாடுகளுக்கும் சேர்த்து.

பெறவில்லை. மூன்று பெரிய முதிர்ச்சியடைந்த கடன் கொடுக்கும்-கடன் ஈவோர் நாடுகளில் (three great mature creditor-lenders) கிரேட் பிரிட்டனும் பிரான்சும் தங்களது மூலதனத்தை அதிகரிப்பதற்குப்பதில் மூலதனத்திலிருந்து பணத்தை எடுத்துச் செலவு செய்யும் நிர்ப்பந்தத்திலிருந்தன. ஐக்கிய அமெரிக்கா மட்டும் முதிர்ச்சியடைந்த கடன் கொடுக்கும்-கடன் ஈவோர் நிலையிலிருந்தது. ஆனால் 'கடன் கொடுக்கும்' (lending) என்னுஞ் சொல் அதன் நிலையைச் சரியாக உணர்த்துவதாக இல்லை. ஏனெனில் ஐக்கிய அமெரிக்காவைவிட்டு வெளிச்செல்லும் மூலதனம் (out flow of capital) தாயகங்களை நோக்கி மீட்சியடைந்து கொண்டிருக்கும் குறுந்தவணை நிலுவைகளாகவே (short-term balances) இருந்தன. இக்குறுந்தவணை நிலுவைகள் அயல்நாட்டினரால் நியூயார்க் நகரத்தில் வைக்கப்பட்டிருந்தவையாகும். எனவே, அமெரிக்கா கடன் கொடுத்துக் கொண்டிருக்கவில்லை. ஆனால் தனது பாங்குத் தொழிலில் பட்ட கடன்களையே (banking debts) திருப்பி அடைத்துக் கொண்டிருந்தது.[1] இதேநிலைதான் 'கடன் கொடுக்கும்—கடனாளிகளைப்' (debtor-lenders) பொறுத்த வரையிலும் இருந்தது. மந்தகாலத்தின்போது அவைகள் கடனைத் திருப்பி அளிக்கும்-கடனாளிகளாக (debtor-repayers) இருந்தன. அட்டவணையின் மூன்ருவது பத்தியில் (column 3) கூட்டல்

1 இந்த ஆண்டுகளில் ஐக்கிய அமெரிக்காவின் மூலதனக்கணக்கின் ஏற்ற இறக்கங்கள் (fluctuations) கீழ்க் கண்டவாறு இருந்தன. கீழ்க்கண்ட அட்டவணையிலும், பெரிய அட்டவணையில் உள்ளதுபோல, கூட்டற்குறி மூலதனத்தின் உள் நுழைவையும் (an inflow of capital) கழித்தற்குறி (minus sign) மூலதன வெளிச் செல்லுதலையும் (out folw of capital) குறிக்கின்றது.

| ஆண்டு | நெடுங்கால மூலதனம் | குறுங்கால மூலதனம் | மொத்தம் |
|---|---|---|---|
| 1930 | − 224 | − 465 | − 689 |
| 1931 | + 233 | − 719 | − 486 |
| 1932 | + 247 | − 489 | − 242 |
| 1933 | + 39 | − 383 | − 344 |
| 1934 | + 202 | + 184 | + 386 |

(இந்தப் புள்ளி விபரங்கள் நேரடியான மதிப்பீடு செய்து தொடுக்கப்பட்டன) ஆகவே பெரிய அட்டவணையில் காணப்படும் சராசரியுடன் ஒத்திருக்கவில்லை. ஈண்டு ஒன்றை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். ஐக்கிய அமெரிக்காவில் மூலதனம் இறக்குமதி ஆகின்றதென்ருல் (+), அது அயல் நாட்டினர் அமெரிக்காவில் மூலதனம் இடுவதை குறித்தாக வேண்டுமென்பதில்லை. அமெரிக்கர்கள், தாங்கள் வெளி நாடுகளில் வைத்திருந்த மூலதனத்தை திரும்பப் பெறுவதை அது உணர்த்தக்கூடும்,

குறிகள் இருப்பினும் உண்மையில் பன்னாட்டுக் கடன்கொடுத்தல் (international lending) ஒன்றும் நிகழவில்லை. இந்தக் கூற்று மிக அப்பட்டமாகக் கூறப்பட்டுள்ளது. ஆனால் உண்மையானதாக இல்லை. ஏனெனில், அட்டவணையில் கணிசமான அளவிற்கு கடன்வாங்கும் நாடுகள் பல இடம் பெற்றுள்ளன. 'கடன் கொடுத்தல்' (lending) என்னும் சொல் 'கடனைத் திருப்பி அடைத் தல்' (repaying debt) என்ற பொருளையும் உணர்த்தும் என்று கொள்ளுதல்போல, இந்த அட்டவணையிலும் 'கடன் வாங்குதல்' (borrowing) என்னும் சொல் ஓரளவிற்கு 'மூலதனத்தினல் உயிர் வாழ்தல்' (living on capital) என்னும் பொருளை உணர்த்துகிறது எனக் கொள்ளலாம். சற்று ஆழ்ந்து ஆராய்ந்தால், பிரிட்டிஷ் குடியேற்ற உரிமைநாடுகளே (British Dominions)—அர்ஜென்டினை வைத் தவிர்த்து—மிக அதிகமாகக் 'கடன் வாங்கும் நாடுகளாக' (largest borrowers) இருந்தன என்பது தெரியும். இந்தக் குடி யேற்ற உரிமை நாடுகள் (dominions) லண்டன் பண அங்காடி யிடம் ஓரளவு தொடர்ந்து தொடர்பை வைத்துக்கொண்டிருந்த வையாகும். பிரிட்டிஷ் குடியேற்ற உரிமை நாடுகளைப்போன்றே டச்சுக் கிழக்கிந்தியத் தீவுகளும் 'மிக அதிகமாகக் கடன் வாங் கும் நாடுகளாக' இருந்தன. இவைகள் ஆம்ஸ்டர்டாம் (Amster-dam) பண அங்காடியிடம் ஓரளவு தொடர்பை (some relationship) வைத்துக்கொண்டிருந்தன. ஆனல் இத்தகைய 'குடும்ப'க் கடன் வாங்குதல் (family borrowing) மிகச்சிறிதளவே இருந்தமையால் பொதுவிதிக்கு (general rule) இதனை ஒரு விதிவிலக்காகவே கொள்ளலாம்.

நான்காவது பத்தியில் (column 4) உள்ள எண்களின் அளவு கணிசமான அளவிற்குப் பெருகி இருப்பது இரண்டாவதாகக் கூறப்படத் தக்கதாகும்.

கடன் வாங்குதல் மூலம் கணக்கை நேர்செய்ய முடியாதென்ற (cannot be squared by borrowing) நிலை இருக்கும் போதும், இறக்கு மதிகள் தடைப்பட்டுள்ள இத்தகையதொரு இடைக்காலத்தின் (interim period) போதும், இடைவெளியை (gay) ஈடு செய்யப் பொன்னை ஏற்றுமதி செய்தாக வேண்டும். ஆஸ்திரிலேயா, அர்ஜென்டினு, கானடா, ஜப்பான் ஆகிய நாடுகள் தங்களிடமுள்ள பொன் காப்பு நிதிகளில் (gold resources) கணிசமான அளவைக் குறிப்பாக நெருக்கடியின் (crisis) ஆரம்பப் பகுதியில், இவ்வித மாகத் தான் பயன்படுத்தின. இந்தியாவில், ரூபாய் (rupee) மதிப் பிறக்கம் செய்யப்பட்ட பிறகு, அதனைத் தொடர்ந்து பொன் விலை யேறியது. சேமிக்கப்பட்டுக் குவித்து வைக்கப்பட்ட பொன்னை

வெளியில் கொண்டு வரும்படி இந்த அதிக விலைகள் தூண்டின. மூன்று ஆண்டுக் காலத்தில் இந்தியப் பொன் ஏற்றுமதி (Indian export of gold) அதன் சராசரி எதிர்நிலைய வெளி உபரியைச் சரிக் கட்டத் தேவைப்பட்டதைக் காட்டிலும் கணிசமான அளவு அதிக மாகவே இருந்தது. அதாவது எதிர்நிலை வெளிஉபரியைச் (negative external surplus) சரிக்கட்டிய பிறகும் ஒரு கணிசமான தொகை அப்பொன் ஏற்றுமதியால் மீதியாகியது. ஜெர்மனியானது, அதனி டம் வெளிஉபரி (external surplus) இருந்த போதிலும், பொன்னை ஏற்றுமதி செய்து, தான் இதுவரை திருப்பித்தர முடியாதிருந்த பெரும்பாலான பழைய கடன்களைத் திருப்பித் தந்தது. பிரான்சு நாடு, ஒரு பெரிய பொன் இறக்குமதி செய்யும் நாடாக இச்சமயம் இருந்தது. 1930-ஆம் ஆண்டில் அது $ 460 மில்லியனையும், 1931-ஆம் ஆண்டில் $ 727 மில்லியனையும், 1932-ல் $ 826 மில்லி யனையும் பொன் இறக்குமதியால் பெற்றது. ஆனால் 1933-ல் அது $ 78 மில்லியனை இழந்தது. இவ்வாறு வெள்ளம் போன்று பொன் உள் நுழைந்து கொண்டிருந்தமைக்குக் காரணமாக இருந்தது நெருக்கடிக்கு முன் ஆண்டுகளில் இருந்தாற் போல் இருந்தது போன்று, பெருமளவு வெளிஉபரி (large external surplus) அல்ல. பீதியையடைந்த பிரஞ்சு மூலதனம் தாயகத்தைநோக்கி பாரிசுக்கு (Paris) முண்டியடித்துக் கொண்டு திரும்ப ஓடிவந்து கொண்டி ருந்ததே இதற்குக் காரணமாகும். அட்டவணையின் நான்காவது பத்தியில் (column (4) ஐக்கிய அமெரிக்காவிற்குத் தரப்பட்டுள்ள எண், ஏமாற்றத்தை அளிப்பதாக இருக்கிறது. ஏனெனில் 1931ஆம் ஆண்டிலும் 1933ஆம் ஆண்டிலும் நிகழ்ந்த ஏராளமான பொன்னின் வெளியேற்றங்களின் (large out-flows) ஒரு பகுதியே 1932-ஆம் ஆண்டில் நிகழ்ந்த சிறிதளவு பொன் உள் நுழைவினுல் (inflow) சரிக்கட்டப்பட்டது. 1930-1935 ஆகிய இந்த ஐந்தாண்டு களில், பொன் வெளியேற்றங்களும் (out-flows) உள் நுழைவு களும் (inflows) ஒவ்வோர் ஆண்டிலும் மாறி மாறி நிகழ்ந்து கொண்டிருந்தன.

இவைகளத்தனையையும் கூறியபின்னர் இந்த அட்டவணையின் பட்டியலில் நாடுகளின் இடங்கள் பெரிதும் மாறுபட்டிருப்பதைக் கூறவேண்டியதில்லை. ஒரு சில மாதங்களில் ஜெர்மனி முதல் பிரிவிலிருந்து (class I) மூன்றும் பிரிவுக்குப் போகும்படி நேர்ந் துள்ளது. தனது பொருளாதார அமைப்பையும் (economic structure) அது மாற்றிக் கொள்ள வேண்டியதாயிற்று. ஏற்றுமதி களைவிட, கணிசமான அளவிற்கு அதிகமாக இறக்குமதிகளைப் பெற்றுக்கொண்டிருந்த அதன் வழக்கத்தை மாற்றித் தான் இறக்குமதி செய்ததைக் காட்டிலும் அதிகம் ஏற்றுமதி செய்யும்படி

யாயிற்று. ஐக்கிய அரசாங்கம் (United kingdom) தனது முதர்ச்சியடைந்த கடன் கொடுக்கும்—கடன் ஈவோர் (mature creditor-lender) நிலையை இழந்து கடன் வாங்கும்—கடன் ஈவோர் (creditor-borrower) நிலையை எய்தியுள்ளது. பன்னாட்டு மூலதன அங்காடியில் இது குறிப்பிடும்படியானதும் தீவிரமானதுமான விளைவுகளை ஏற்படுத்தியது. பன்னாட்டுக்கடன் (International credit) முழுவதும் சீர்குலைந்ததை எண்கள் பிரதிபலிக்கின்றன. கடனளித்தல் சொற்பமானதாக இருந்தது. அதைப்போல, பன்னாட்டு முதலீடே இல்லை என்று சொல்லுமளவுக்கு நிலைமை இருந்தது. வழக்கமாகக் கடன் வாங்கிக் கொண்டிருந்த நாடுகள் கடன் வாங்குதலை நிறுத்திக் கொள்வதற்கான வழி வகைகளைத் தேட வேண்டியதாயிற்று. இன்னும் மற்ற நாடுகள் தாம் அயல் நாடுகளின் முக்கிய நகரங்களில் முதலீடு செய்து வைத்திருந்த மூல தனத்தை, பயத்தினால் திரும்பப் பெறும்படி ஆயிற்று. நோக்கம் எத்தன்மையதாயினும், ஒவ்வொரு நாடும் ஆக்கமான வெளி உபரியைப் பெருமளவில் வைத்துக் கொள்ளும் இந்த வெறியாட்டப் போட்டியில் (the mad race) கலந்து கொண்டன. ஒவ்வொரு நாடும் தான் அதிகமாக வெளி உபரியை வைத்துக்கொள்ள வேண்டுமென்னும் நோக்குடைய இந்தப் போட்டியில் எந்த நாடும் வெற்றி பெறவில்லை. இறக்குமதிகளைத் தடை செய்யும் ஒரே வழியாக பன்னாட்டு நிதியக் கைக்கோள் (International financial policy) மாறியது. இதனால் பன்னாட்டு வாணிபம் (International trade) திணறடிக்கப்பட்டது. ஒவ்வொரு நாட்டிலும் தொழில் சீர்குலைவு (industrial dislocation) வேலையின்மை ஆகியவை ஏற்பட்டன—அதிலும் முக்கியமாக பெரிய வாணிப நாடுகளில் இவை ஏற்பட்டன. இவையத்தனையும் எந்த விதப் பயனும் இன்றி நடை பெற்றுக்கொண்டு வந்தன. இதன் விளைவாக பன்னாட்டு நிலையில் எந்த நாடுமே பிறநாடுகளைக் காட்டிலும் அதிக வலிமை பெற்றதாகவோ அல்லது அதிக சாதக நிலையிலிருந்ததாகவோ இல்லை. சீட்டாட்டத்தில் ஒருவகை ஆட்டம் உண்டு. ஆடுகின்றவர்களில் எவர் ஒருவர் எல்லோருடைய சீட்டுக்களையும் பெறுகிறாரோ அது வரை ஆட்டம் நடந்து கொண்டே யிருக்கும். இதற்கு 'அடுத்தவனை—ஆண்டியாக்கும் — ஆட்டம்' (Beggar-My-Neighbour) என்று பெயர். பன்னாட்டுக் கைக்கோளும் இத்தகைய அடுத்தவனை—ஆண்டியாக்கும்—ஆட்டமாகவே யிருந்தது.

இவ்வித முட்டாள் தனங்களைக் கண்டிக்க வார்த்தைகள் போதா. ஆனால் இவற்றைக் கண்டனம் செய்து விடுவதால் மட்டும் அதிகப் பயனைப் பெற்றுவிட முடியாது. பீதி (panic) எப்போது ஆரம்பமாகி விட்டதோ, அதில் கலந்து கொள்ளாமல்

எந்த நாடும் வாளா இருந்துவிடவும் முடியாது. ஒரு நாடகக் கொட்டகை (theatre) தீப்பற்றிக் கொள்ளும்போது நாடகம் பார்க்கின்றவர்கள், ஒழுங்கைக் கடைப் பிடித்தால் அது ஒவ்வொருவருமே தப்பித்து உயிர்பிழைக்க வாய்ப்பளிக்கும். அப்படியின்றி கொட்டகையின் கதவுகளை நோக்கி எப்போது கூட்டம் நெருக்கி அடித்துக் கொண்டு விரைந்து செல்ல ஆரம்பித்து விட்டதோ, உயிர் பிழைக்க வேண்டுமென்கிற ஆசையுள்ளவர்கள் அக்கூட்டத்தில் சேர்ந்து கொள்ளும் நிலை வந்து விடுகிறது. நாம் பீதியின் மீது மட்டுமே பழி சுமத்தக் கூடாது. நாடுகள் அமைதியாகப் பின் வாங்கி யிருந்தால் தீமையின் விளைவுகள் குறைவாக இருந்திருக்கும். ஆயினும் கடன் ஈவோர்களும் கடனாளிகளும் தாங்கள் அயல்நாடுகளுக்குக் கடனளித்தலைக் குறைத்துக் கொள்வதையும், தங்களின் அயல்நாட்டுச் செலுத்து நிலையை மீண்டும் சீர் செய்து கொள்ளுதலையும் தவிர்க்க முடியாது. 1927—1929–ஆம் ஆண்டுகளில் இருந்த முறைகளில் கடன் வாங்குவது எந்த வகையிலும் நீடித்திருந்திருக்க முடியாது. கடன் கொடுக்கப்பட்ட தொகைகள் மிகப் பெரியனவாக இருந்தன. அவை தவருகக் கடன் பெறுபவர்களுக்குக் (wrong borrowers) கொடுக்கப்பட்டதுடன் கடனைத் திருப்பித்தர இயலாத நோக்கங்களுக்குக் கொடுக்கப்பட்டன. கடைசியாகப் பார்க்கப்போனுல், நெருக்கடிக்கு முன்பு இருந்த உலகத்தைக் (pre-crisis) குறை கூறவேண்டும். அது கடன் வாங்குதலின் மூலம் சரிப்பட்டநிலை (adjustment) இல்லாததை மூடி மறைக்கவும், தேவையான சீர்திருத்தங்கள் செய்வதைத் தள்ளி வைக்கவும் நினைத்தது. அது, எதிர்காலத்திற்கு மூலதனச் செல்வத்தைத் (wealth of capital) தருவதைவிட கடன் சுமையைத் தருவதையே பெரிதும் விரும்பியது. பன்னாட்டுப் பொன் திட்டத்தை நாடுகளின் பொருளாதார முறைகளுக்கிடையே மீண்டும் கொணர அது முயற்சி செய்தது. இப்பொருளாதார முறைகளில் ஒன்றுகூட பன்னாட்டு நிலைபேற்றை (international stability) முதன்மையான நோக்காகக் கொண்டு இயக்கப்படவில்லை. இதன் விளைவாக, பன்னாட்டு மூலதன முறை முழுவதுமே (the whole system of international trade) கடைப் பிடிக்கப்பட்டிருப்பின் அது உலக முழுவதிலும் செல்வத்தை வளர்த்திருக்கும். ஆனல், மேற் கூறப்பட்டுள்ளவாறு, அது புறக்கணிக்கப்பட்டது. கடனாளிகள் (debtors) வட்டி தங்களை அடிமைப்படுத்துவதைப் பற்றிப் (interest slavery) பேசி வந்ததுடன், கடனைத் திருப்பித் தராமல் இருப்பதில் (default) பெருமையடைந்தனர். கடன் ஈந்தவர்களோ, எதிர்காலத்தில், பணத்தைக் கொடுக்கல் வாங்கல் செய்யாமல் தங்களிடமே வைத்துக்கொள்ள வேண்டும் என்று சபதம் செய்தனர். பணத்தைப் பயன்படுத்தாது வைத்திருந்தால்

அதனுல் யாதொருபயனுமில்லை என்பது அவர்களுக்குத் தெரியாது போலும். கடனுளிகளும் கடன் ஈவோர்களும் தங்களைச் சுற்றி தன்னிறைவுப் பொருளாதாரச் (self-sufficient economy) சுவர்களை எழுப்பிக் கொண்டு அவற்றுள் இருக்கத் தலைப்பட்டனர். இவ்வாருன அவர்களின் அழுக்காறு (jealousy) வளர்ந்து சென்று அவர்களுடைய வறுமையின் அளவுக்கு எட்டும் நிலை ஏற்பட்டது.

நாளடைவில் நிலைமை சரி செய்யப்பட்டது. ஆயினும், பன்னுட்டுக் கடனளிப்பு, நெருக்கடிக்கு முன்பிருந்த நிலைக்கு, மீண்டும் கொண்டு வரப்படவில்லை—உண்மையில், பன்னுட்டுக் கடன் திரும்பவும் மேற்கொள்ளப்படவேயில்லை. ஆனுல் நாளடைவில் நிலை மாறியது. நாடுகள், தங்களது இறக்குமதி வாணிபத்தை ஒவ்வோர் ஆண்டிலும் அதற்கு முந்திய ஆண்டினது இறக்குமதி வாணிபத்தைக் காட்டிலும், குறைத்துக் கொள்ளும் நிலைக்குச் சொல்லாமலேயே தங்கள் கணக்குகளைச் சமன் செய்து கொண்டன (balanced their accounts). வாணிபச் சகடத்தின் மேல் நோக்கியபகுதியை, (upward phase of the trade cycle) ஒவ்வொரு நாடும் ஒன்றன்பின் ஒன்ருக அடையத் தொடங்கியதால், இது, வேலையின்மைக்குக் (unemployment) காரணம் அயல்நாட்டினர் தாம் என்றும் குற்றச்சாட்டைக் குறையச் செய்தது. பன்னுட்டு வாணிபத்தின் மீது திணிக்கப்பட்ட தடைகளில் சில தளர்த்தப் பட்டன. கொஞ்சங் கொஞ்சமாக விலை மட்டமும் வாணிபமும் மீட்சியடைந்தன. 496-497-ம் பக்கங்களில் தரப்பட்டுள்ள அட்டவணை இத்தகைய புனர் சீரமைப்புக்களுக்குப் பிறகு உலகத்திலிருந்த பன்னுட்டுச் செல்லு நிலையைச் சித்தரிக்கிறது. இதற்கு முன்னர் உள்ள இரண்டு அட்டவணைகளைப் போல் இந்த அட்டவணை மூன்று ஆண்டுகளின் சராசரிப் புள்ளிவிபரங்களைகுறிக்காது. 1937-ஆம் ஆண்டின் புள்ளி விபரங்களை மட்டுமே குறிக்கின்றது. இந்த ஆண்டானது, இந்த மீட்சிக் காலத்திலேயே, மிகவும் சுபிட்சமான ஆண்டாகும்.

இந்த அட்டவணையில் மிகவும் கவனிக்கத்தக்கது யாதெனில், மிகப் பல நாடுகள் கடன் கொடுக்கும்—கடனுளிகள் இனத்தில் தான் [அல்லது இன்னும் சரிநுட்பமாகக் கூறப்போனுல் கடனைத் திருப்பி அளிக்கும்—கடனுளிகள் (debtor-repayers)] இடம் பெற்றிருக்கின்றன என்பதேயாம். கொடுக்கல், வாங்கல் ஏறத்தாழ நின்று போய் விட்டது. அட்டவணையில் காட்டப்பட்டுள்ள மூன்று கடன் பெறும் நாடுகளில் தென் ஆப்பிரிக்காவும், ஆஸ்திரேலியாவும் லண்டன் மூலதன அங்காடியின் சாதகமான தொடர்பைப் பெற்றிருந்தன. அதைப் போல் போலந்து (Poland) பாரிசினிடத்

தில் (Paris) பெற்றிருந்தது. மூன்று கடன் கொடுக்கும் - கடன் ஈவோர் நாடுகளில், ஐக்கிய அமெரிக்கா மட்டுமே அட்டவணையில் இடம் பெறவில்லை. ஏனெனில், செயல்முறைக் கருத்தில் மட்டுமே (technically) ஐக்கிய அமெரிக்கா கடன் கொடுக்கும் நாடாக (lender) இருந்தது. தனது அயல்நாட்டு உபரியின் (foreign surplus) அளவைப் போல் இருமடங்கு பொன்னை இறக்குமதி செய்து கொண்டிருந்தது. அமெரிக்காவினுல் மற்ற நாடுகளில் முதலீடு செய்யப்பட்டதைவிட, அதிகமான அளவு மூலதனம், அமெரிக்காவிற்கு வந்துகொண்டிருந்தது. வருமானக் கணக்கில் நேர்நிலைச் செலுத்து நிலையைப் (சாதக செலுத்து நிலை) பெறுவதற்கு மட்டுமேயல்லாது அட்லான்டிக் பெருங்கடலைத் தாண்டி மேற்குத் திசையை நோக்கி அதிக அளவு மூலதனம் சென்று கொண்டிருக்கும்படி செய்யவும் பொன் அனுப்பப்பட வேண்டியதாயிற்று. இதன் காரணத்தைச் சற்று விரித்துரைப்போம். ஐரோப்பாவில் இச்சமயம் போரின் பயமுறுத்தல் ஆரம்பித்து விட்டதால், ஐரோப்பாவின் பெரும்பாலான ரொக்கநிலை மூலதனம் (liquid capital) பாதுகாப்பை நோக்கி நியூயார்க்கில் வந்து தஞ்சம் புகுந்தது. புதியதாகக் கடன் வாங்குதலோ அல்லது கடன் கொடுத்தலோ அட்டவணையில் அதிகமாக இடம் பெறவில்லை. கடனுளி நாடுகளை, அவைகள் மூலதனத்தை ஏற்றுமதி செய்வதற்குப்பதில் இறக்குமதி செய்யும்படியும் அவைகளை கடன் வாங்கும்—கடன் ஈவோர் நாடுகளாகவும் (creditor-borrowers) ஆகச் செய்த கடனுளி நாடுகளின் (ஏற்கனவே கடன் வாங்கியவர்கள்) கடன் திருப்பி அடைத்தலும் (repayment) அட்டவணையில் ஓரளவிற்கே இடம் பெற்றுள்ளது. சுருக்கமாகக் கூறின், ஒரு முன்னேறிச் செல்லும் திறன் வாய்ந்த (dynamic) ஆக்கத்தைத் தரக் கூடிய முறையாகப் பன்னாட்டு நிதிய முறை (constructive system of international finance) இருக்கவில்லை; பணம் பெறுபவர்களின் (receiver) கையில் அகப்பட்ட ஒரு பாங்காகவே அது இருந்தது.

## பவுண்டும் டாலரும்
(Pound and dollar)

இருந்த சிறிதளவு நிலைபேறும் (stability) 1939-ம் ஆண்டு இலையுதிர் காலத்தில் போரின் துவக்கத்தால் தகர்த்தெறியப்பட்டது. ஆறு ஆண்டுகளுக்கு, போரில் பங்கு கொண்ட நாடுகளின் பொருளாதாரக் கைக்கோள்கள் பன்னாட்டுக் கூட்டுறவைத் திறமையாக ஏற்படுத்துவதைப் பற்றிச் சற்றேனும் அக்கறை கொள்ளவில்லை. போரில் பங்கு கொண்ட நாடுகள் (belligents) தங்களால் இயன்றமட்டும் தங்களின் நிறுத்தம்

## 1937ஆம் ஆண்டில் நாடுகளின் அயல் நாட்டுச் செலுத்துக்கள்

**புள்ளி விபரங்கள் பெரும்பாலும் 1937ஆம் ஆண்டின் புள்ளி விபரங்கள்:**

(எண்கள் [1933 ஆண்டிற்கு முன்பிருந்த பொன்னுக்குச் சமமான] இத்தனை மில்லியன் டாலர்கள் என்பதைக் குறிக்கின்றன)

| | புலனுவதும் புலனுகாதது மான வாணிபச் செலுத்து நிலை (1) | வட்டி வரவுகள் அல்லது செல்லுகள் (2) | வருமானக் கணக்கில் நிலுவை (Balance on income Account) [(1) + (2)] (3) | பொன் (Gold) (4) | கடன் கொடுத்தல் (—) அல்லது கடன் வாங்குதல் (+) (5) | மூலதனக் கணக்கில் நிலுவை (Balance on Capital Account) [(4) + (5)] (6) |
|---|---|---|---|---|---|---|
| I முதிர்ச்சியடையாக் கடன் வாங்கும்-கடனுளி நாடுகள் (immature debtor-borrowers) | | | | | | |
| ஒரு நாடுமில்லை (none) ... | ... | ... | ... | ... | ... | ... |
| II முதிர்ச்சியடைந்த கடன் வாங்கும் - கடனுளி நாடுகள் : (mature debtor borrowers) | | | | | | |
| தென் ஆப்பிரிக்கா (அ) ... | — 23 | — 62 | — 39 | (அ) | + 39 | + 39 |
| போலந்து ... ... | + 10 | — 20 | — 10 | — 14 | + 24 | + 10 |
| ஆஸ்திரிரேலியா (ஆ) ... | + 77 | — 87 | — 10 | + 27 | — 17 | + 10 |
| III கடன் கொடுக்கும் - கடனுளி நாடுகள்: (debtor-lenders) | | | | | | |
| நியூசிலாந்து (ஆ) ... | + 22 | — 21 | + 1 | + 3 | — 4 | — 1 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| செக்கோஸ்லோவாகியா | + 19 | — 11 | + 8 | — 1 | — 7 | — 8 |
| பின்லாந்து ... ... | + 13 | — 3 | + 10 | + 2 | — 12 | — 10 |
| இந்தியா (ஆ) ... | + 85 | — 72 | + 13 | + 62 | — 75 | — 13 |
| டென்மார்க் ... ... | + 25 | — 10 | + 15 | 0 | — 15 | — 15 |
| நார்வே ... ... | + 25 | — 10 | + 15 | + 5 | — 20 | — 15 |
| அர்ஜெண்டினு ... | +151 | — 90 | + 61 | 0 | — 61 | — 61 |
| டச்சு கிழக்கிந்தியத் தீவுகள் ... ... | +121 | — 48 | + 73 | + 2 | — 75 | — 73 |
| கானடா (அ) ... | +251 | —142 | +109 | (அ) | —109 | —109 |
| IV முதிர்ச்சியடையா கடன் கொடுக்கும் கடன் ஈவோர் நாடுகள் :(Immature creditor-lenders) | | | | | | |
| ஸ்வீடன் ... ... | + 12 | + 15 | + 27 | 0 | — 27 | — 27 |
| ஐக்கிய அமெரிக்கா ... | +277 | +197 | +474 | —968 | +494 | —474 |
| V முதிர்ச்சியடைந்த கடன் கொடுக்கும்-கடன் ஈவோர் நாடுகள் : ... ... | | | | | | |
| நெதர்லாண்ட்ஸ் ... | — 40 | + 52 | + 12 | —242 | +230 | — 12 |
| VI கடன்வாங்கும் - கடன் ஈவோர் நாடுகள்: (creditor-borrowers) | | | | | | |
| பிரான்சு ... ... | —313 | +154 | —157 | +255 | — 98 | +157 |
| ஐக்கிய அரசாங்கம் (United Kingdom) ... ... | —787 | +613 | —174 | —231 | +405 | +174 |

(அ) கானடாவும் தென் ஆப்பிரிக்காவும் பொன்னை உற்பத்தி செய்யும் நாடுகள் எனவே பொன் வாணிபப்பண்டங்களின்கீழ்ச் சேர்க்கப்பட்டுள்ளன.

(ஆ) 1936-7

செய்யும் திறனை (striking power) அதிகரிப்பதற்கான முயற்சிகளைச் செய்தன. பகை நாட்டைத் தாழ்த்துவதற்கு அவைகள் எல்லா முயற்சிகளையும் எடுத்துக் கொண்டன. இதனால் ஏற்பட்ட பொருட்செலவையோ எதிர்காலத்தில் நிகழப்போகும் சீர்குலைவைப் பற்றியோ அவைகள் கவலை கொள்ளவில்லை. போரில் ஈடுபடாத பொது நிலையான (neutral countries) நாடுகள் கூட தங்களின் நலனைப் பாதுகாத்துக் கொள்வதற்கும் தங்களுக்குத் தேவையான பொருள்களைப் பெற்றுக் கொள்வதற்கும் தேவையான பொருளாதாரக் கைக்கோள்களையே பெரிதும் கடைப்பிடித்து வந்தன.

பெரும்பாலான நாடுகளுடைய பன்னாட்டுப் பொருளாதாரச் செலுத்துக்களில் (International economic payments) போர் ஏற்படுத்திய விளைவுகளைச் சுட்டிக்காட்ட, புள்ளி விபரங்கள் கிடைக்கவில்லை. ஆனால் ஐக்கிய அரசாங்கத்திற்கும் (United Kingdom) ஐக்கிய அமெரிக்காவிற்கும் கிடைத்துள்ள புள்ளி விபரங்களைக் கொண்டு, சீர்குலைவைக் கூடியவரை சித்திரிக்க முடியும். 496-497ஆம் பக்கங்களில் உள்ள அட்டவணை, ஐக்கிய அரசாங்கம் போருக்கு முன்னரே, கடன் வாங்கும்—கடன் ஈவோர் நாடாக (creditor-borrower) இருந்ததைக் காட்டுகிறது. ஆனால், 1937ஆம் ஆண்டில் $ 174 மில்லியன் (1933ஆம் ஆண்டிற்கு முன்பிருந்த பொன்னுக்குச் சமமான மதிப்பை உடைய டாலர்களை) கடன் வாங்கியதாக (உண்மையில் அத்தொகைகள் மூலதனத்திலிருந்து பணம் பெறத்தக்க பேற்றுரிமைச் சீட்டுகளாகவே இருந்தன) அட்டவணையில் காட்டப்பட்டுள்ளது. 1938ஆம் ஆண்டில் அத்தொகை £ 70 மில்லியன் என அரசாங்கம் மதிப்பீடு செய்தது. எனவே பிரிட்டன் கடன் வாங்கும்—கடன் ஈவோர் (creditor-borrower) என்னும் தகுதியைப் பெறுவதற்கு உரிமையற்றதாக இருந்தது. ஆனால், கடன் வாங்கப்பட்ட தொகைகள் குறைவானவையே. எப்படியிருப்பினும், போரின்போது பிரிட்டன் பிரமாண்டமான அளவு கடன் வாங்கும் நாடாக இருந்தது (borrower on a gigantic scale). பிரிட்டனின் வெளிச் சொத்துகள் (external assets) (அரசாங்கத்திற்குச் சொந்தமானவையும் தனிப்பட்டவர்களுக்குச் சொந்தமானவையும்) வாங்குபவர்கள் யார் கிடைத்தாலும் அவர்களிடம் விற்கப்பட்டுவந்தன. இதுமட்டுமல்லாமல், தான் நேசநாடுகளிடமிருந்து நிறைய பண்டங்கள், பணிகள் ஆகியவற்றைக் கடனுக்கு வாங்கியதால், பிரிட்டன் ஏராளமான அளவிற்குக் கடன்பட்டிருந்தது. அதன் நடப்புக் கணக்கின் பாதக நிலை நிகர நிலுவைகள் (the net adverse balance on current account)—அதாவது அதன் வெளிப் பற்றுக்குறை (External Deficit)—கீழ்க்கண்டவாறு இருந்தது:

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1939ஆம் | ஆண்டில் | £ 350 | மில்லியன் | 1944ல் | £ 659 | மில்லியன் |
| 1940 | ,, | 804 | ,, | 1945 | ,, 875 | ,, |
| 1941 | ,, | 816 | ,, | 1946 | ,, 380 | ,, |
| 1942 | ,, | 663 | ,, | 1947 | ,, 675 | ,, |
| 1943 | ,, | 680 | | | | |

எனவே எட்டு ஆண்டுகளின் மொத்தம் £ 5,147 மில்லியனாக இருந்தது. இறுதி அமைதி ஆண்டாகிய 1938 முழுவதிலும் பிரிட்டனின் வட்டி வரவுகளும், இலாப ஈவுத் தொகைகளும் (Dividends) சேர்ந்து £ 205 மில்லியனாக இருந்தது. (ஆக மொத்தத்தில்—அதாவது பிரிட்டனால் செலுத்தப்பட்ட சிறு வட்டிச் செல்லுகள் இதில் கழிக்கப்படவில்லை). இந்த வரவுகளின் மூலதன மதிப்பை (capital value) இருபது ஆண்டுகளின் கொள்முதலுடன் (twenty years' purchase) வைத்துக் கணக்கிடுவது என வைத்துக்கொண்டால், 1938ஆம் ஆண்டில் பிரிட்டனின் வெளிச் சொத்துகளின் (external assets) மதிப்பு £ 4,100 மில்லியனாக விருக்கும். எனவே, இந்த போர்க்கால ஆண்டுகளில் 'கடன் வாங்குதல்' (borrowing) முதலில் இருந்து பணம் பெறத்தக்க பேற்றுரிமைச் சீட்டுகளைக் (drafts on capital) காட்டிலும் அதிகமாக இருந்ததென்பது தெற்றென விளங்குகிறது. புள்ளி விபரங்களை நோக்குமிடத்து பிரிட்டன் கடன் ஈவோர் (creditor) நிலையிலிருந்து கடனாளி (debtor) நிலையை அடைந்திருப்பது போலத் தோன்றும். ஆனால் முற்றிலும் நிலை அப்படி யிருக்கவில்லை. இந்த அத்தியாயத்தில் இதுவரை, கடன் ஈவோர் என்பவரை அவருக்குச் சேர வேண்டிய நிலுவைகளுக்கு (balance) வட்டி பெறுபவர் என்றும், கடனாளி என்பவரை அவர் கொடுக்க வேண்டிய நிலுவைகளுக்கு வட்டி செலுத்துபவர் என்றும் விளக்கி வந்தோம். முரண்பாடாகக் காணப்பட்ட போதிலும், பிரிட்டன் தன்னுடைய நிலுவைகளுக்கு இன்னும் வட்டி வாங்கிக் கொண்டே வருகிறது. 1947ஆம் ஆண்டில், அரசாங்க மதிப்பீட்டின்படி, அதன் வரவுகள் £ 145 மில்லியன், செல்லுகள் (payments) £ 94 மில்லியன். இதற்குக் காரணம் என்னவெனில், பிரிட்டன் தன்னிடம் வைத்திருந்த வெளிச் சொத்துக்கள் (external assets) வாணிபத்தில் நடைமுறையிலுள்ள வட்டி வீதத்தில் வட்டியை அல்லது இலாப ஈவுத் தொகைகளை (dividends at commercial rate of interest) இன்னும் அளித்துக்கொண்டே வந்தன. இத்தகைய வெளிச் சொத்துகளைக் கலைத்துவிட்டுக் கணக்குத் தீர்த்துக்கொள்ள (liquidate) முடியாமலிருந்தது. பிரிட்டனின் கடன்கள் எவ்வாறு இருந்தன வென்று பார்ப்போம். பிரிட்டனின் கடன்கள் பெரும்பாலும், கடன் கொடுத்த நாடுகளால் லண்டனில் வைக்கப்பட்டுள்ள பாங்கு வைப்புக்களாக (அல்லது தாற்காலிக

**மாக கருவூல உண்டியல்களில் முதலீடு செய்யப்பட்டவைகளா** கவோ) அல்லது 1945ஆம் ஆண்டில் அமெரிக்க அரசாங்கம் பிரிட்டனுக்குக் கொடுத்த கடன்களாகவோ இருந்தன. லண்டனில் பாங்கு வைப்புக்களாக வைக்கப்பட்ட தொகைகளுக்கு அல்லது கருவூல உண்டியல்களில் தாற்காலிகமாக முதலீடு செய்யப்பட்ட தொகைகளுக்கு மிகக் குறைந்த விதங்களில்தான் வட்டி செலுத்தப் பட்டு வருகிறது. இதேபோன்று, அமெரிக்க அரசாங்கம் கொடுத்த கடனுக்கு முதல் சில ஆண்டுகளுக்கு வட்டி செலுத்த வேண்டிய தில்லை. எனவே தற்போதைக்கு பிரிட்டனை ஒரு கடன் ஈயும் நாடெனவே கொள்ளலாம். ஆனால் எத்தனை காலம் வரை, கடனைக் கொடுத்தவர்கள் குறைந்த வீத வட்டிகளையே வாங்கிக் கொள்வர் என்பதை இனிமேல்தான் பார்க்க வேண்டும்.

அமெரிக்காவின் நிலையோ இதற்கு முற்றிலும் வேறுபட்டதாக இருந்தது. போர்க்காலம் முழுவதும் அமெரிக்கா, உணவுப் பொருள்கள், கச்சாப் பொருள்கள், போக்குவரத்துப் பணிகள் (transport services)செய்பொருள்கள் ஆகிய இன்னோரன்ன பண்டங் களையும் பணிகளையும் மிகப்பெரிய அளவில் அளிக்கும் நாடாக இருந்துவந்தது. அதன் ஏற்றுமதிகள் அதிகமாகவும் இறக்கு மதிகள் குறைவாகவுமிருந்தன. இதன் விளைவாக அதன் வெளி உபரி (External surplus) கீழ்க்கண்டவாறு பிரமாண்டமான அளவில் பெருகியது.[1]

| | | | |
|---|---|---|---|
| 1939 | $ 732 மில்லியன் | 1944 | $ 12,395 மில்லியன் |
| 1940 | 1,603 ,, | 1945 | 8,194 ,, |
| 1941 | 2,474 | 1946 | 8,133 ,, |
| 1942 | 6,564 | 1947 | 11,276 ,, |
| 1943 | 11,322 | | |

போரின் ஆரம்ப ஆண்டுகளில், அமெரிக்கா 'கையில் காசு கப்பலில் பண்டம்' (cash and carry) என்னும் கைக்கோளைப் பின்பற்றியது. இதன்படி அமெரிக்க அரசாங்கம், போரில் பங்கு கொண்ட நாடு களுக்கு கடன்களை வழங்கவில்லை. தனது குடிமக்களையும் அந் நாடுகளுக்குக் கடன் வழங்க அனுமதிக்க வில்லை. எனவே 1939, 1940 ஆகிய ஆண்டுகளிலும் 1941ஆம் ஆண்டின் பெரும் பகுதி யிலும் அமெரிக்காவின் வெளி உபரிகள் (External surpluses) பெருகி

1 வெளி உபரி என்பது, பண்டங்கள் பணிகளின் ஏற்றுமதி—இறக்குமதிகளி னின்றும் கிடைக்கக்கூடியதும் இலாப ஈவுத் தொகைகள், வட்டி ஆகியவற்றின் வரவுகள் செல்லுகளினின்றும் கிடைக்கக்கூடியதுமான நிலுவை (balance) என்று ஈண்டு விளக்கப்பட்டுள்ளது- இதில் 'ஒருபுற செல்லுகளான' (unilateral payments) கடன் கொடுத்தல்—குத்தகைக்கு விடுதல் (Lend Lease). உதவி மான்யங்கங்கள் (relief allocations) போன்றவை அடங்கமாட்டா.

அதன் நிகர வெளி மூலதனத்தைத் (net external capital) அதிகரிக்கச் செய்தன. இத்துணை வெளி மூலதனமும் எவ்வாறு கிடைத்தது? இதில் பெரும்பகுதியும் பிரிட்டனும், பிரான்சும் பொன்னை விற்பனை செய்ததன் மூலமும், அந்நாடுகள் ஏற்கெனவே செய்துள்ள முதலீடுகளின் பேரில் வெளியிட்டுள்ள கடன் பத்திரங்களின் (securities) விற்பனை மூலமும் கிடைத்தது. எனவே, திருப்பிக் கொடுக்கப்பட்ட கடன்களை இந்த ஆண்டுகளில் அமெரிக்கா பெறும் நிலையை ஏற்படுத்தியதற்கு அமெரிக்காவின் 'கடன் கொடுத்தல்' (Lending) ஓரளவிற்குக் காரணமாக இருந்தது. 1941ஆம் ஆண்டுக்குப் பிறகு அமெரிக்காவின் பெரும்பாலான ஏற்றுமதிகள் 'கடன் கொடுத்தல்-குத்தகைக்கு விடுதல்' (Lend-Lease) முறையில் இருந்தன. இம்முறை நாளடைவில் பண்டங்கள் பணிகள் ஆகியவைகளை முற்றிலும் நன்கொடையாகக் கொடுப்பதில் கொண்டுபோய் விட்டதென்பதை மட்டும் நாம் தெரிந்துகொள்ளுதல் ஈண்டுப் போதுமானது. எனினும், போர் ஆண்டுகளின்போது, கடன் கொடுத்தல்—குத்தகைக்கு விடுதல் முறையாலும் செலவழிக்கப்படாத கொஞ்சம் வெளி உபரி அமெரிக்காவிடம் இருந்தது. அமெரிக்காவின் நிகர வெளி மூலதனத்தை இது அதிகரிக்கச் செய்தது. 1945ஆம் ஆண்டு இடைப்பகுதியில் கடன் கொடுத்தல்—குத்தகைக்கு விடுதல் முறை நீக்கப்பட்டது. அமெரிக்கா, உதவிச் செல்லுகளை (relief payments) ஐக்கிய நாடுகளின் உதவி, மறுசீரமைப்புதவி செயலாட்சி (United Nations Relief and Rehabilitalion Administration) - Unrra—இன்னும் மற்ற நிறுவனங்களின் (other agencies) மூலம் சிறிது காலம் தொடர்ந்து அளித்து வந்த போதிலும், அமெரிக்கா தனது வெளி உபரிக்குச் சமமான மதிப்பையுடைய பொருள்களைக் கேட்டு வாங்க மீண்டும் தலைப்பட்டது. எனினும் அது, டாலர்களைத் தேவைப்படும் மற்ற அரசாங்கங்களுக்கு, ஒரு வரையறைக்குட்பட்ட கடன் தொகைகளை நல்க முன்வந்தது. உதாரணமாக 1946ஆம் ஆண்டு ஜுலை மாதம் ஐக்கிய அரசாங்கத்திற்கு (United Kingdom) $ 3,750 மில்லியன் கடன் கொடுத்தது.

நடப்புக் கணக்கில் இத்தகைய நிகர நிலுவைகள் (net balances) (பிரிட்டனுக்குப் பாதகமாயும் அமெரிக்காவிற்குச் சாதகமாகவும் இருந்தவை) இதற்கு முன்னர் எந்தக் காலத்திலுமே இல்லாத அளவிற்கு மிக அதிகமாக இருந்தன. 496-497ஆம் பக்கங்களில் உள்ள அட்டவணையைப் பார்த்தால் இவைகள் எவ்வளவு அதிகமாயுள்ளன வென்பது விளங்கும். அட்டவணையில் வெளி உபரிகளும் காணப்படுகிற (External surplus) பற்றுக் குறைகளும் (Deficits) எந்த பன்னாட்டு முறையாலும் நியாயமாகச்

சமாளிக்க முடிகின்ற அளவிற்கும் மிக அதிகமாக இருந்தன வென்று அட்டவணையில் கூறப்பட்டுள்ளது. போர்க்காலத்தின் போது பெருகிய நிலுவைகளைக் கையாளுவது இன்னும் இயலாத தாக இருந்தது. போர்க்காலத்தில் பெருக்கமடைந்த நிலுவை களைக் கையாளுவது கடினமான செயலாகும். மேலும் இப் போர்க் கால நிகழ்ச்சி அமைதிக்காலத்தில் தோன்ருது மறைந்துவிடும் என்று கூறிவிடவும் முடியாது. இத்தகைய இடர்ப்பாடுகள் நிரந்தர மான பல சீர்க்குலைவை உண்டுபண்ணும். பிரிட்டிஷ் அயல் நாட்டுச் செலுத்து நிலையோ அல்லது அமெரிக்க அயல்நாட்டுச் செலுத்து நிலையோ சுலபத்தில் அல்லது விரைவில் போருக்கு முந்திய நிலைக்குத் திரும்பவும் செல்லக்கூடும் என்று எதிர்பார்க் கவும் முடியாது. பிரிட்டிஷ் புள்ளி விபரங்கள் தொடர்ந்து பற்ருக் குறையைக் காட்டுவதாகவே இருக்கின்றன. அதனுடைய பெரு வாரியான வட்டி வருமானங்கள் மறைந்து போயின; போர்க் காலத்தின் போது புறக்கணிக்கப்பட்ட ஏற்றுமதி அங்காடிகளை (export markets) ஒரே நாளில் திரும்பவும் பெற முடியாது. அமெ ரிக்காவின் புள்ளி விபரங்களோ தொடர்ந்து உபரியைக் காட்டுவ தாக உள்ளன. அதன் வெளி மூலதனச் சொத்துகள் (external capital assets) அதிகரிக்கப்பட்டிருந்தன. மேலும், போரின்போது அதிகமாக வளர்ச்சியடைந்த அதன் ஏற்றுமதித் தொழில்கள் (அவைகள் பலவந்தமாகவும் செயற்கையாகவும் அதிகரிக்கப்பட்ட போதிலும்)புதிய நிரந்தர வாணிபமார்க்கங்களை(channnels of trade) ஏற்படுத்தியே இருக்க வேண்டும். எனவே பவுண்டின் பிரச்சினை யொன்றும் (a problem of the pound) டாலரின் பிரச்சினையொன் றும் (a problem of the dollar) எழுந்தன. எந்தப் பன்ஞட்டுப் பண முறையும் (international monetary system) சரளமாக இயங்கு வதற்கு வேண்டிய நிலைகளை மீண்டும் கொண்டுவருவதற்கு முன்னர், மேற்சொன்ன இரண்டு பிரச்சினைகளும் தீர்க்கப்பட வேண்டும்.

இப்பிரச்சினைகள் எவ்வளவு பெரியனவாக இருந்தன வென் பதை, 1947-ஆம் ஆண்டில் பிரிட்டிஷ் அயல்நாட்டுச் செலுத்து நிலையையும் அமெரிக்க அயல்நாட்டுச் செலுத்து நிலையையும் போருக்கு முன்னுள்ள ஆண்டுகளின் புள்ளி விபரங்களுடன் ஒப்பிட்டுக் காட்டுவதன் மூலம், சித்திரிக்க முடியும். கீழே உள்ள அட்டவணையில் பிரிட்டனின் புள்ளி விபரங்கள் கொடுக்கப்பட் டுள்ளன :

மேற்காணும் புள்ளி விபரங்களை நோக்குமிடத்து, இவ்விரு ஆண்டுகளுக்கிடையே பொதுவான விலைமட்டம் (general price

## ஐக்கிய அரசாங்கத்தின் அயல்நாட்டுச் செலுத்துநிலை

(மில்லியன் பவுண்டுகளில்)

| | செலவுகள் (payments) | | வரவுகள் (receipts) | | நிகர இருப்பு (net balance) | |
|---|---|---|---|---|---|---|
| | 1938 | 1947 | 1938 | 1947 | 1938 | 1947 |
| பண்டங்கள் ... | 835 | 1,574 | 533 | 1,125 | —302 | —449 |
| பணிகள் (அரசாங்கச் செலவையும் சேர்த்து) ... | 143 | 437 | 200 | 160 | +57 | —277 |
| வட்டியும் இலாப ஈவுத் தொகைகளும் (Interest and dividends) ... ... | 30 | 94 | 205 | 145 | +175 | +51 |
| வெளிப்பற்ருக்குறை (Cxternal deficit)... | | | | | —70 | —675 |

level) கணிசமான அளவிற்கு அதிகரித்தது என்பதை நன்ருகக் கவனத்தில் கொள்ளவேண்டும். 1947-ஆம் ஆண்டில் உள்ள வெளிப்பற்ருக்குறை (external deficit) ஒரு சிலவழிகளில், போர்க் காலத்தின் நிலைகளால் ஏற்பட்ட விளைவாகவே, இன்றும் இருந்து கொண்டிருந்ததெனவும் அந்நிலைகள் நாளடைவில் மாறக்கூடும் எனவும் கூறலாம். எனவே, அரசாங்கத்தின் வெளிநாட்டுச் செலவு (overseas expenditure) £ 211 மில்லியனுக்குக் குறையாமல் இருந்தது. மேலும், உணவுப் பொருள்கள் கச்சாப் பொருள்களின் விலைகளில் ஏற்பட்ட கூடுதலான விலை அதிகரிப்பானது செலவுகளுக்கும் வரவுகளுக்கும் உள்ள தொடர்பைச் சீர்குலையச் செய்தது. மேலும் சீர்குலைவை ஏற்படுத்தக்கூடிய இன்னும் சில காரணங்களும் உண்டு. உதாரணமாக 1947-ஆம் ஆண்டில் இறக்குமதிகளின் மட்டமானது (level of imports) இயல்பாகத் தேவைப்படும் மட்டத்திற்கும் (level) குறைவாக இருந்தது; உணவுப் பண்டங்கள் இன்றும் பங்கீடு செய்யப்பட்டும் மூலப் பொருள்கள் (raw materials) மிகவும் சிக்கனமாக ஒதுக்கப்பட்டும் வந்தன. மேலும், ஏற்கனவே குறிப்பிட்டுள்ளதைப் போன்று,

வட்டி, ஈவுத்தொகைகளின் தலைப்பின் கீழ்வரும் நிகர வரவாகிய (net reciept) £ 51 மில்லியனை வரும் ஆண்டுகளில் சேர்த்துக் கொள்ளலாமா என்பது ஐயமாகவே உள்ளது.

வெளிப்பற்றுக்குறையினை (external deficit) ஒன்றும் இல்லாமல் செய்யும் வேலை (வெளி உபரியை மீண்டும் கொண்டுவருவது பிறகு இருக்கட்டும்) பிரிட்டனுக்கு மிகவும் கடினமானதொரு பிரச்சினையாக இருந்து வருகிறது. இறக்குமதிகளை மேற்கொண்டும் குறைத்தலினால் இப்பிரச்சினைக்குத் தீர்வு காணமுடியாது. 1947-ஆம் ஆண்டில் இவ்விறக்குமதிகள் நாடு உயிர்பிழைத்திருத்தலுக்கும் இயங்கி வருவதற்கும் தேவையான அளவிற்கே இருந்தபடியால், இறக்குமதிகளை மேற்கொண்டும் குறைத்தல் என்பது இயலாது. பிரிட்டன், உள் நாட்டில் விவசாயத்தைப் பெருக்குவதன்மூலம், உணவுப் பொருள் இறக்குமதிகளை ஓரளவிற்குக் குறைத்துக் கொள்ள முடியும். ஆனால் இவ்வாறு உள்நாட்டு விவசாயத்தைப் பெருக்க உற்பத்திச் செலவு (high cost) அதிகமாகும். அதுவும் ஓரளவிற்கே விவசாய உற்பத்தியை அதிகரிக்க முடியும். இப்பிரச்சினைக்கு நிரந்தரமாகத் தீர்வு காண உள்ள ஒரேவழி பிரிட்டனின் ஏற்றுமதிகளைக் கணிசமான அளவிற்கு ஏற்றுமதி செய்வதே. அதன் ஏற்றுமதிகளை 20 சதவீதத்திலிருந்து 60 சதவீதம் வரை (அளவில்) அதிகரித்தாகவேண்டும். இவ்வாறு அதிகரித்தல் எதிர்காலத்தில் ஏற்றுமதி இறக்குமதி விலைகள் இருப்பதைப் பொறுத்தும், இறக்குமதிகள் எந்த அளவிற்கு நிறுத்தப்படக்கூடும் என்பதைப் பொறுத்தும் இருக்கும். ஏற்றுமதிகளை அதிகரிப்பதன்மூலம் இப்பிரச்சினைக்குத் 'தீர்வு' (solution) காணலாம் என்பது மிகைப்படுத்தப்பட்ட கூற்றாகும். ஏனெனில் அவ்வாறு ஏற்றுமதிகளை அதிகரிப்பதற்குமுன் இரு பிரச்சினைகளுக்கு விடை கண்டாகவேண்டும். முதலில் இவ்வாறு அதிகரித்த ஏற்றுமதிகளுக்கு அங்காடிகளைக் (market) கண்டாக வேண்டும். இது மற்றொரு கேள்வியை எழுப்பும். பவுண்டு ஸ்டெர்லிங் மிகை மதிப்பு செய்யப்பட்டுள்ளதா (over valued) அல்லது குறை மதிப்புச் செய்யப்பட்டுள்ளதா (under valued) என்ற கேள்வியே அது. உலகம் மீண்டும் 'வாங்குவோர்' அங்காடியாக (buyers' market) மாறி வரும்போது, விற்பனைகளை அதிகரிக்கவேண்டுமானால் மிகைமதிப்புச் செய்வதை (over valuations) பிளேக் நோயைப் (plague) போன்று தடுத்தாக வேண்டும். 'வாங்குவோர்' அங்காடி என்பதில் வாங்குவோர் அதிகம் செல்வாக்குப் பெற்றிருப்பர். போட்டியிட்டுக்கொண்டு விற்பவர்கள் (competeting sellers) நிறைய இருப்பதால் யார் மிகக் குறைந்த விலைக்குப் பண்டங்களை விற்கின்றனரோ அவரிடம் வாங்குவோர் கொள்முதல்

செய்துகொள்ளலாம். பன்னாட்டுப் பணநிதி என்னும் முறை இருப்பதால் அல்லது ஏனைய நாடுகள் இங்கிலாந்தின் நடவடிக்கைகளைக் கூர்ந்து கவனித்து வருவதால் இவ்வாறு ஏற்றுமதிகளைத் தூண்டுவதற்காக வேண்டுமென்றே ஸ்டெர்லிங்கைக் குறைமதிப்புச் செய்யும் முயற்சி பலிக்காது. இரண்டாவதுவகைப் பிரச்சினைகள் உள்நாட்டில் எழும் பிரச்சினைகளாகும். பிரிட்டனில் உற்பத்தியாகும் பொருள்களில் பெரும்பாலும் ஏற்றுமதி செய்யப்படின் உள்நாட்டு அங்காடியில் (home market) பொருள்கள் குறையும். எனவே, பிரிட்டிஷ் மக்கள், ஒன்று அவர்களது வாழ்க்கைத் தரத்தைக் (standard of living) குறைக்க வேண்டும் அல்லது தங்களது உற்பத்தியின் தரத்தை வெகுவாக உயர்த்தவேண்டும். இவையிரண்டில் ஒன்றை அவர்கள் செய்யும் அவசியத்திலிருந்தனர். இந்த இரண்டையும் அவர்கள் விரும்பவில்லை; இவற்றை நிறைவேற்றுவதும் அவர்களுக்குக் கடினமாக இருந்தது (இவ்வரிகளை எழுதும்போது இருந்த விலையை ஒட்டி மேற்படி நிகழ்ச்சிகள் எழுதப்பட்டுள்ளன). மேற்சொன்ன யாவும் பவுண்டின் பிரச்சினையை (problem of the pound) ஏற்படுத்துகின்றன.

டாலர் பிரச்சினையானது, பவுண்டு பிரச்சினை (problem of the pound) பிரிட்டிஷ் மக்களுக்கு ஏற்படுத்திய இடர்ப்பாட்டினைப் போன்று, அமெரிக்க மக்களுக்கு அத்துணை இடர்ப்பாட்டினை உடனடியாக ஏற்படுத்தவில்லை—இடர்ப்பாடு குறைவாகவேயிருந்தது. ஆனால் அமெரிக்கர்களுக்கு இப்பிரச்சினைக்கு தீர்வு காணுவதென்பதோ எளிதானதாக இல்லை. அமெரிக்காவின் 1947-ஆம் ஆண்டின் அயல் நாட்டுச் செலுத்து நிலையைப் போருக்கு முன்புள்ள நிலையோடு கீழ்க்கண்ட அட்டவணையில் ஒப்பிட்டுப் பார்ப்போம் :

அட்டவணையில் முதல் மூன்று வரிகளும் வழக்கமாக உள்ளபடி அமைந்துள்ளன. நான்காவது சமீப ஆண்டுகளில் அமெரிக்காவின் தனித்தன்மையானதொரு (peculiar) சூழ்நிலையில் 'ஒருபுற மாற்றங்கள்' (Unilateral Transfer) (1947-ஆம் ஆண்டின்) என்னும் இனத்தைச் (tem) சேர்க்கும்படியாக இருக்கிறது. மூலம் ரொக்கமாகவோ அல்லது பொருளாகவோ கடன் குத்தகை இதில் கிடைக்கும் வருமானங்களும், உதவிமான்யங்கள் போன்றவற்றிலிருந்து கிடைக்கும் உதவித்தொகைகளும் அடங்கும்.[1] இத்தகைய

[1] இதில் தனிப்பட்டவர்கள், அற நோக்கிற்காக (charitable) அளிக்கும் செலுத்துக்களும், இன்னும் மற்ற வாணிப சம்பந்த மற்றச் செலுத்துக்களும் (non-commercial remittances) அடங்கும். இவைகள் போர்க் காலத்திற்குமுன் ஆண்டுகளில் 'பணிகளின்' (services) கீழ்ச் சேர்க்கப்பட்டிருந்தன. இவ்வாறு சேர்த்தது அவ்வளவு கருத்தியலானதல்ல. இந்த அளவிற்கு, போருக்கு முன்னும் பின்னுமுள்ள எண்கள் முழுவதும் ஒப்பிட்டுப் பார்க்கக்கூடியவையல்ல. ஆனால் இத்தகைய இனங்கள் மற்றவைகளைப் போல் பெரிய இனங்களல்ல.

## ஐக்கியநாடுகளின் அயல்நாட்டுச் செலுத்துநிலை

(மில்லியன் டாலரில்)

| | செலவுகள் | | வரவுகள் | | நிகர இருப்பு | |
|---|---|---|---|---|---|---|
| | 1938 | 1947 | 1938 | 1947 | 1938 | 1947 |
| பண்டங்கள் ... | 2,452 | 6,047 | 3,125 | 16,022 | + 673 | +9,975 |
| பணிகள் ... | 880 | 2,054 | 586 | 2,555 | — 294 | +501 |
| வட்டியும் இலாப ஈவுத் தொகைகளும் ... | 216 | 226 | 550 | 1,026 | + 334 | +800 |
| வெளி உபரி (மேலே குறிப்பிட்டுள்ள இனங்களில்) ... | | | | | +713 | +11,276 |
| ஒருபுற மாற்றங்கள் (unilateral transfers) ... | ... | 3,029 | ... | 581 | ... | —2,448 |
| வெளிஉபரி (ஒருபுற மாற்றங்களையும் சேர்த்து) ... | | | | | | +8,828 |

செலுத்துக்கள் வாணிப பேரங்களின்கீழ் அடங்குவன அல்ல. இவைகள், திரு. வின்ஸ்டன் சர்ச்சில் அவர்கள் கூறியுள்ளது போல், 'வரலாற்றிலேயே மிகத் தாராள மனப்பன்மையை உணர்த்துவனவாக' உள்ளன. எனவே, இச்செலுத்துக்களை வழக்கம்போல் நடப்புக்கணக்கில் (current account) சேர்ப்பது பொருத்தமற்றதாக இருக்கும். மற்றொருபுறம் அவைகள் மூலதன பேரங்களாகவும் (capital transactions) இல்லை. ஏனெனில், அவைகள், ஐக்கிய அமெரிக்கா பிறநாடுகளினின்றும் பெறத்தக்க நிதிய உரிமைகளையும் (financial claims) அதிகரிப்பதாக இல்லை. இவைகளை வழக்கமான அயல்நாட்டு வாணிபச் செலுத்து நிலைப்

பட்டியலின்கீழ்க் கொண்டுவர ஒரே வழிதான் உண்டு; அதாவது வெளிஉபரியை இருவித எண்களால் பிரித்துக்காட்டி, அவைகளைத் தனித்தனியே குறிப்பிடவேண்டும்—அதாவது 'ஒரு புற மாற்றங்களை' (unilateral transfers) இதில் சேர்க்காமல் நடப்பு வாணிப பேரங்களின் விளைவாகிய வெளி உபரியைத் தனியாகக் காட்ட வேண்டும்; 'ஒருபுற மாற்றங்களை'ச் சேர்த்து அதன் மூலம் பொன் போக்குகள் (gold movements) அல்லது மூலதன பேரங்களால் சரிக்கட்டப்பட வேண்டிய மிச்சத்தைக் காட்டும் வெளி உபரியைத் தனியாகவும் காட்டவேண்டும்.[2]

பிரிட்டனின் வெளிப்பற்றுக்குறை (external deficit) குறைந்து வருவதற்கான காரணங்களை நாம் ஏற்கெனவே கண்டதுபோல், அமெரிக்காவிலும், போரின் பின்விளைவுகள் (after effects) மறையத் தொடங்கியதும், வெளிஉபரி (external surplus) குறைவதற்கான காரணங்கள் காணப்படுகின்றன. 1947ஆம் ஆண்டில் கூட அமெரிக்கா சில இன்றியமையாத பண்டங்களை அளிக்கும் ஒரே நாடாக இருந்துவந்தது. மற்றநாடுகளில், உற்பத்தி மறுமலர்ச்சியடைய ஆரம்பித்ததும் அமெரிக்காவின் ஏற்றுமதிகள் குறைந்து இறக்குமதிகள் பெருகும் என்று எதிர்பார்ப்பதும் நியாயமாகவே இருக்கிறது. இத்தகைய நிலை கேவலமாக ஆகலாமென்பதற்கும் சில காரணங்கள் உள. அமெரிக்காவின் பலவகைப்பட்ட உதவி, மறுசீரமைப்புஉதவி (relief and rehabilitation) நெடுக நீடிப்பவையாக இல்லை. அமெரிக்க ராணுவப் படைகளும் வெளிநாடுகளிலிருந்து, நாளடைவில் திரும்ப அழைக்கப்பட்டுவிடும்.

2 கீழ்க்கண்ட அட்டவணையில் குறிப்பிட்டுள்ள ஆண்டுகளின் வெளி உபரியில் ஒருபுற மாற்றங்கள் ஏற்படுத்தும் விளைவு காட்டப்பட்டுள்ளது. (மில்லியன் டாலர்களில்)

| | 1940 | 1941 | 1942 | 1943 | 1944 | 1945 |
|---|---|---|---|---|---|---|
| 'ஒருபுற மாற்றங்கள்' சேராதவெளி உபரி ... | +1,603 | +2,474 | +6,564 | +11,322 | +12,395 | +8,194 |
| ஒருபுற மாற்றங்கள் ... | 204 | 1,315 | 6,539 | 13,237 | 13,935 | 7,081 |
| ஒருபுற மாற்றங்களைச் சேர்த்தபின் இருந்த வெளி உபரி ... | +1,399 | +1,159 | +25 | —1,915 | —1,540 | +1,113 |

மேலும், அமெரிக்காவின் வட்டி வரவுகளும் அதிகரித்துச் செல்வ தாக உள்ளன.

பின், எவ்வாறு அமெரிக்காவின் வெளிஉபரியைக் கணிச மான வீதங்களில் குறைக்கக்கூடும்? முதலாவதாக உள்ள வழி, மற்ற நாடுகளிலிருந்து அமெரிக்காவிற்கு வரும் ஏராளமான இறக்கு மதிகளை அதிகரிப்பதாகும். அமெரிக்காவின் சுங்கவரிகள் 1930ஆம் ஆண்டில் உச்சநிலையில் இருந்தன. ஆனல் ஜனுதிபதி ரூஸ்வெல்ட் அவர்கள் பதவிவகிக்க ஆரம்பித்ததிலிருந்து ஐக்கிய அமெரிக்காவின் அரசாங்கம், அமெரிக்க சுங்கவரிகளைக் குறைப் பதற்கு பெருமுயற்சிகளை எடுத்தது. இப்படி நாளடைவில் சிறுகச் சிறுக சுங்கவரிகள் குறைக்கப்பட்டதன் விளைவு, 1947ஆம் ஆண்டில் அமெரிக்காவின் சுங்கச்சுவரின் (tariff wall) சராசரி உயரம் அது பதினைந்தாண்டுகட்கு முன்னர் இருந்ததில், பாதி யாகக் குறைந்தது. ஆனல் இம்முறை நிச்சயமான முன்னேற் றத்தை அளிக்கக்கூடியதென்று ஏற்றுக் கொள்வதை இரண்டு நிகழ்ச்சிகள் தடை செய்கின்றன. இவற்றில் ஒன்று, அமெரிக்கக் காங்கிரசின் வற்புறுத்தலின் பேரில், பிறநாடுகளிடம் பரிமாற்ற அடிப்படையில் (reciprocal basis) அமெரிக்கா சுங்கவரிகளைக் குறைத்துக்கொண்ட ஏற்பாடாகும். அதாவது, அமெரிக்கா ஒவ் வொரு பேரத்திலும், மற்றநாடுகள் அதன் சுங்கக் குறைப்பினுல் எத்துணை நன்மையடைகின்றனவோ (அமெரிக்கா அந்நாடுகளி லிருந்து அதிகமான இறக்குமதிகளைப் பெறுவதால்), அத்துணை நன்மையை அமெரிக்கா (பிறநாடுகளுக்கு அதிகமான ஏற்றுமதி களைச் செய்வதன்மூலம்) அடைகின்றதெனக் காட்டியாக வேண்டு மென அமெரிக்க காங்கிரஸ் வற்புறுத்தியது. பொருளாதாரக் கண்கொண்டு பொதுப்படையாகப் பார்க்கப்போனுல், அயல் நாட்டுச் செலுத்துநிலைக் கணக்கின் இரண்டு பகுதிகளிலுமே சம மான அதிகரிப்பு (equal increase) ஏற்படுவது மிகவும் நல்லது தான் என்ருலும், வெளிஉபரியைக் குறைப்பதற்கு இது சற்றேனும் பயன்படாது. அமெரிக்காவின் அயல்நாட்டுச் செலுத்துநிலையில் அதிகமான இறக்குமதிகளைச் செய்வதன்மூலமே, சமநிலையை ஏற்படுத்த முடியும் என்ருல் (இறக்குமதிகள் மிக அதிகமாகச் செய்யவேண்டியிருக்கும்) அமெரிக்க காங்கிரசின் போக்கில், இத்தகைய விவகாரங்களில், அவசியம் மாற்றம் தேவை. ஆனல் தற்போது அத்தகைய மாற்றத்திற்கான அறிகுறிகள் ஒன்றும் காணவில்லை.

இத்தகைய ஐயத்திற்கான இரண்டாவது காரணம் இதுதான். ஐக்கிய அமெரிக்காவின் வாணிப பலம் தற்போது மிகவளர்ந்து

இருக்கும் நிலையில், காப்புவரிகள் (protective tariff) முற்றிலுமே இல்லாதிருப்பினும், இறக்குமதிகள் வளர்ந்து வருவதைத் தடை செய்து விடமுடியுமா என்பதே, மேற்படி ஐயத்திற்கான காரண மாகும். போருக்குமுன்பு ஏற்கெனவே அமெரிக்காவின் நிலை வாணிபத்தில் பலம் பொருந்தியதாக இருந்தது. 1929-38 ஆகிய பத்தாண்டுகளில் சராசரியில் அமெரிக்காவின் பண்டங்களின் இறக்குமதி அதன் ஏற்றுமதிகளில் 84 சதவீதமே யிருந்தது. ஆனல், போர் இரட்டைவிளைவை (double effect) உண்டுபண்ணி யது. அது, அமெரிக்கா இதற்குமுன்பு இறக்குமதி செய்த பண் டங்களை அமெரிக்காவிலேயே உற்பத்தி செய்யும்படி தூண்டியது; அல்லது இறக்குமதிப் பண்டங்களின் பதிலிப் பொருள்களை (substitute) அமெரிக்கா உற்பத்திசெய்யும்படி தூண்டியது. இந்த ஆண்டுகளில் நெசவுப்பொருள் உற்பத்தியும் (textiles) செயற்கை ரப்பர் உற்பத்தியும் மிகவும் அதிகரிக்கப்பட்டன. அமெரிக்காவில் உற்பத்திப் பொருள்களுக்கு (manufactures) இது வரையில் அறிமுக மாகாத புதிய அங்காடிகளைப் (new markets) போர் அறிமுகப் படுத்தியது. போருக்கு முன்பு அமெரிக்காவின் புலனுகும் வாணி பத்தின் (visible trade) சாதகவாணிபச் செலுத்துநிலை (favourable balance) பெரும்பாலான ஆண்டுகளில் (எல்லா ஆண்டுகளிலும் அல்ல), அதன் புலனுகாவாணிபத்திலிருந்த பாதக வாணிபச் செலுத்துநிலையால் (adverse balance of trade) சரிக்கட்டப்பட்டு வந்தது. ஆனல் புலனுகாவாணிபக் கணக்கின் (invisible account) நிகரச்செலவு (net debit) எவ்வாறு அதிகரிக்கக் கூடுமென்பதைத் தெரிந்து கொள்வதுதான் கடினமாக இருக்கிறது. போரின்போது, மற்ற நாடுகளின் கப்பல்கள் மூழ்கடிக்கப்பட்டபோது அமெரிக்கா ஒரு பெரிய வாணிபக்கப்பற்படையையே (merchant navy) தயார் செய்தது. உலகத்திலேயே இவ்வாறு பெரிய கப்பற்படையை வைத்திருக்கும் நாடு, நிறைய அளவு வாணிபப் பண்டங்களைத் தன் கப்பலில் கொண்டு சென்று கப்பற் கட்டணத்தைப் பெறவேண்டு மென்று நினைப்பது இயல்பு. இது, அந்நாட்டின் நிகரவெளிச் செலுத்தை (net out-payment) அதிகரிக்கவொட்டாமல் குறையச் செய்யும். அமெரிக்கப் பிரயாணிகள் (American tourists) வெளி நாடுகளுக்குப் பயணம் செய்யும்போது அயல்நாடுகளில் பணத் தைச் செலவு செய்வதற்கும் ஓர் எல்லைஉண்டு. அப்பிரயாணிகள் விமானத்தில் பறந்து சென்று தங்கள் அயல்நாட்டுப் பயணத்தைச் செய்யும்போது அதிகமான பணத்தைத் தங்களின் தோழ-அமெரிக் கர்களுக்கே (fellow Americans) (கப்பல்மூலம் செல்வதைக் காட் டிலும்) அதிகமான பணத்தைக் கொடுப்பர். எனவே, அரசாங் கத்தின் தலையீட்டின் மூலம் (Government intervention) புலனுகும், புலனுகா பாதக வாணிபச்செலுத்துநிலை (adverse balance of trade)

ஏற்படுவதைத் தடுப்பது (சுங்கவரிகளின் மூலமாக) அவ்வளவாக இயலாதெனவே தோன்றுகிறது. அவ்வாறு தடுக்கும்நிலை எப்போது ஏற்படும்? அரசாங்கத்தின் பலவந்தமான தலையீட்டால் ஏற்படுவதைக் காட்டிலும், அங்காடிச் சக்திகளின் (forces) கடிவாளங்கள் இழுத்துப்பிடிக்கப்படாமல் தாராளமாக விடப்படும் போதே ஏற்படும். டாலருக்கு (dollar) சமநிலை மாற்றுவீதத்தைக் கொண்டுவருவதன்மூலமே மேற்சொன்ன பாதகவாணிபக் கொடுப்பல்நிலையைத் தடுக்க இயலும் எனவும் கோட்பாட்டளவில் (in theory) கூறப்படுகிறது. மேலும் டாலரின் மதிப்பு அதிகரிக்கப் பட்டு, மற்றச் செலாவணிகளின் (other currencies) மதிப்புக் குறைக்கப்படுவதனுல் எல்லையின்றிச் சமநிலை மாற்றுவீதத்தை நிலைநாட்டலாம், என்பதும், கோட்பாட்டளவில் உண்மையாக இருக்கலாம். ஆனுல், கோட்பாட்டளவிலும் இது அவ்வளவு உறுதியாக நிகழக் கூடியதாக இல்லை. நடைமுறையில், இது நிகழவேண்டுமாயின் செலாவணிகளின் போக்கு (large movements of exchanges) எல்லையில்லாமல் தேவைப்படுமாகலின், அமெரிக்க அரசாங்கமும் ஏனைய அரசாங்கங்களும் இம்முறையை அனுமதிப்பதில்லை.

ஆனுல், இங்கே ஒரு கேள்வி எழலாம். அமெரிக்காவின் வெளி உபரி எதற்காக நீக்கப்படவேண்டும், நெடுந்தவணைக் கடன்கள் அளிப்பதன் மூலமோ, பன்னுட்டு முதலீடு செய்வதன் (International Investment) மூலமோ, ஐக்கிய அமெரிக்கா இவ் வெளி உபரியைச் சரிக்கட்டக்கூடாதா என்பதே அக்கேள்வி. வெளிஉபரியில் சிலவற்றை இவ்வாறு சரிக்கட்டலாம்—சரிக்கட்டவும் வேண்டும். தங்களது வாணிபத்தைப் பெருக்க விழையும் நாடுகளுக்கு அவற்றிற்கான மூலதனத்தைப்பெறச் சில சாதனங்கள் இருந்தேயாகவேண்டும். பிரட்டன்வுட்சின் (Bretton woods) இரட்டைக்குழந்தைகளில் இரண்டாவது குழந்தையான, புனரமைப்புக்கும் வளர்ச்சிக்கும் உரிய பன்னுட்டுப் பாங்கு(International Bank of Reconstruction and Development) திட்டவட்டமாக இந்த நோக்கத்திற்காகவே ஏற்படுத்தப்பட்டது. இதற்கான நிதிகளை எந்த அரசாங்கத்திலிருந்தும் அல்லது எந்த தனிப்பட்ட மூலதன அங்காடியிடமிருந்தும் (private capital market) இப்பாங்கானது எழுப்பிக் கடனளிக்கலாம் என்று கோட்பாட்டளவில் இருந்த போதிலும், அது அமெரிக்க டாலர்களையே பெருவாரியான அளவில் கடன் வழங்குவதெனப் (உண்மையில் அப்படித்தான் வழங்குகிறது) பொதுவாக ஒப்புக் கொள்ளப்பட்டது. டாலர் பிரச்சினையை (Dollar problem) ஏன் இத்தகைய கடன் வழங்குதல் மூலம் தீர்த்துக் கொள்ள கூடாது என்பதற்குச் சில காரணங்கள்

உண்டு. இவ்வத்தியாயத்தில் 1928ஆம் ஆண்டில் அமெரிக்க வெளிநாட்டுக் கடன்களின் பூரிப்பு நிலையை (boons) விளக்கிய போது குறிப்பிட்டதுபோல, கடன்பெறுபவர்கள் (borrowers) தரமான பன்னுட்டு முதலீட்டுத் திட்டங்களில் (sound projects of international investment) தாம் கடன் வாங்கிய தொகைகளை முதலீடு செய்வதற்கும் ஓர் எல்லை உண்டு. இதற்கு ஒரு காரணம் இந்த எல்லையையும் மீறி அவைகளுக்குக் கடன் வழங்கப்பட்டால், அது கடனைத் திருப்பி அடைக்கத் தவறுவதை (default) பேரளவில் ஏற்படுத்துவதுடன், கடனளிப்புமுறையையும் (process of lending) உடனடியாக நிறுத்தச் செய்யும் என்பதாம். இவ்வாறு கடனளிப்பதற்கான எல்லை (limit) எது என்று கூறுவது கடினம் என்றாலும் ஆண்டொன்றுக்கு ஏறக்குறைய மில்லியன் $1000 என்று கூறுவது ($ 2000 மில்லியன் என்று கூறுவதைவிட) சரியானதாக இருக்கும். மற்றொருகாரணம், கடன்களினால் இப்பிரச்சினைக்கு நிரந்தரமான தீர்ப்பு காணமுடியாதென்பதாம். ஏனெனில், ஒவ்வொரு கடனும் வட்டிச் செலுத்துக்களை அளிக்கிறது. தவறுமல் (without default) இவ்வட்டிச் செலுத்துக்கள் கடன்வாங்கிய நாடுகளால் அளிக்கப்படுமானால், கடன் ஈவோர் (creditor) அத்தொகைகளை பண்டங்கள் அல்லது பணிகளாக ஏற்றுக்கொண்டாக வேண்டும். எனவே அமெரிக்க வெளிஉபரியைக் (American External Surplus) கடன்களால், (அது குறைந்த அளவில் இருந்தாலொழிய) சமாளிக்க முடியாது. அப்படியும், எதிர்நிலை வாணிபச்செலுத்து நிலை ஏற்படும் நாளைத் தள்ளிவைக்க முடிகிறது—இதைப்போலவே தேவைப்படுகின்ற எதிர்நிலை வாணிபச்செலுத்துநிலையை பெரிய அளவில் பெறவும் முடிகின்றது.

இப்பிரச்சினைகளுக்குத் தீர்வுகாணுவது இவ்வத்தியாயத்தின் நோக்கமல்ல. பிரச்சினைகளுக்குத் தீர்வுகாணுவது கடினமானது என்று எடுத்துக்காட்டுவதே இந்த அத்தியாயத்தின் நோக்கமாகும். இந்த அத்தியாயத்தில் ஆரம்பப்பகுதியில் கிரேட் பிரிட்டன் கடன்வாங்கும் - கடன்ஈவோர் (creditor - borrower) என்னும் தகுதியை ஏற்கனவே நீடித்துப் பெற்றிருந்ததென்பதைப் பார்த்தோம். கிரேட் பிரிட்டன் இந்த நிலையிலிருந்து, முதிர்ச்சியடையா கடன் வாங்கும்-கடனளி (Immature Debtor - Borrowers நிலையை அடையக்கூடிய ஆபத்தும் அதற்கு உள்ளதெனவும் பார்த்தோம். அந்த நிலை, இடர் விளைவிக்கும் நிலை என்பதோடு கேலிக்கூத்தானதொரு நிலையாகவும் இருக்கும்—ஏனெனில் இந்நிலையில் பிரிட்டன் தனக்கு யாராவது கடன் கொடுக்கமாட்டார்களா என்று எதிர்பார்த்துக்கொண்டிருக்க வேண்டிவரும். ஐக்கிய அமெரிக்காவிற்கு இதுபோன்ற விபத்து ஒன்றுண்டு.

ஐக்கிய அமெரிக்கா, எல்லாவகையாலும், முதிர்ச்சியடைந்த கடன்கொடுக்கும்-கடன் ஈவோர் நாடாக (mature creditor - lender) இருக்கவேண்டும். இது, முதிர்ச்சியடையாக் கடன் கொடுக்கும்-கடன் ஈவோர் நாடாக பின்னுக்கிய நிலையை அடையவும் நேரலாம். அமெரிக்காவினிடம் நேர்நிலை வாணிபச் செலுத்து இருப்பினும் இந்நிலை ஏற்படக் காரணத்தை ஆராய்வோம். இத்தகைய நேர்நிலை வாணிபச்செலுத்து(Positive Balance of Trade) உலகத்திலுள்ள பிறநாடுகளிடமும் இருந்தால் அமெரிக்கா அதனைக் கண்டு வாளா இருக்க முடியாது. அத்தகைய நிலையினின்றும் தன்னைக் காப்பாற்றிக்கொள்ள, அமெரிக்கா, டாலர்களைச் செலவிடுவதை நிரந்தரமாக கட்டுப்படுத்திக் கொள்கிறது. பன்னுட்டுச் சமநிலையை (International Equilibrium) அடைய முயலும்போதும் பன்னுட்டுப் பணமுறையை (International monetary system) அமலுக்குக் கொண்டுவர நினைக்கும்போதும், தீர்ப்பு காணக்கூடிய பிரச்சினைகள் இவை. மேற்சொன்ன ஒவ்வொரு பிரச்சினைக்கும் முடிவுகாண வேண்டுமாயின் சம்பந்தப்பட்ட நாட்டின் உள்நாட்டுப் பொருளாதாரக் கொள்கையில் (domestic economic policy)—சம்பந்தப்பட்ட செயல்முறைக் காரணிகளுக்கும் (technical factors involved) அப்பாற்பட்டு—மாற்றம் செய்யப்படவேண்டும். இவ்வாறுன உள்நாட்டுப் பொருளாதாரக் கொள்கையில் அவ்வப்போது மாற்றம் ஏற்படுத்துவதை பொதுமக்கள் விரும்பமாட்டார்கள். நாம் ஏற்கெனவே குறிப்பிட்டதுபோல பிரிட்டன் கீழ்க்காணும் இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் கட்டாய நிலையிலுள்ளது; ஒன்று அதிகமான உற்பத்தியைச் செய்தல் (higher output) மற்றென்று குறைந்த வாழ்க்கைத் தரத்தை (lower standard living) அடைதல். அமெரிக்காவின் நிலையைப் பார்ப்போம். அமெரிக்கக் காங்கிரசும் பொதுமக்களும், தங்கள் நாட்டின் அங்காடியில், தாங்கள் இதுவரையிலும் சம்மதிக்க விழையாத, அந்நியநாடுகளின் மலிவான இறக்குமதிப் பொருள்களைத் தங்கள் நாட்டுப் பொருள்களுடன் ஓரளவிற்கு போட்டியிட அனுமதிக்கவேண்டும். இதுமட்டும் போதாது. மற்ற நாடுகள் அமெரிக்கப் பண்டங்களை மிகக்குறைந்த அளவிற்கே வாங்கும்படி தங்களின் சுங்கச்சுவர்களை (tariff barriers) எழுப்புவதையும் கண்டு அமெரிக்கா வாளாஇருக்கும்படி நேரிட்டுள்ளது.

## பன்னுட்டு முறையொன்றில் நாட்டுக் கொள்கை
(National Policy in An International System)

எனவே, பன்னுட்டுப் பணமுறை நாட்டின் உள்நாட்டுப் பொருளாதாரக் கொள்கைகளின் தன்னுரிமையைக் (freedom)

கட்டுப்படுத்துகிறது. ஆனால் இவ்வரையறைகள் (limits) இம் முறையின் செயல்முறைகளால் (technicalities) ஏற்படுத்தப்பட வில்லை; அவைகள் இம்முறையின் அமைப்பிலேயே உள்ளன. நாடுகளுக்கிடையே பண்டங்கள், பணிகள், மூலதனம் இவைகள் சரளமாக இயங்கும்படி செய்வதே பன்னுட்டுப் பணமுறையின் ஒரே நோக்கமாகும். உள்நாட்டுப் பணமுறையைப் போன்றே (domestic monetary system), இதுவும் அதைக் கடைப் பிடிக்கின்றவர்களின் விருப்பங்களை நிறைவேற்றுவதாக இருப்ப தோடு சமன்பாடான ஒருநிலையில் நிலைபேறற்ற ஒருநிலையை (instability) ஏற்படுத்துவதாகவும் இருத்தல் கூடாது. ஆனால், உள்நாட்டுப் பணமுறையோ அல்லது பன்னுட்டுப் பணமுறையோ பொருத்தமற்ற பேராசைகளை நிறைவேற்றும் சாதனமாகப் பயன் படுத்தப்படுமானல், அது இயங்குவதே கடினமாகிவிடும். ஒரு நாட்டிலுள்ள ஒவ்வொரு தனி நபரும் பிறருடைய செல்வத்தைக் கைப்பற்றியே செல்வம் ஈட்ட முயன்ருல் (அதாவது முதலீடு இல் லாத சேமிப்பு), அல்லது உலகத்திலுள்ள ஒவ்வொரு நாடும் தன்னால் இயன்றவரை அதிகமாக விற்கவேண்டுமென்றும், மிகக் குறைவாக வாங்கவேண்டுமென்றும், கடனளிக்கவே கூடா தென்றும் கருதினல், பன்னுட்டுப் பணமுறை எவ்வளவுதான் திறமையாக அமைக்கப்பட்டபோதிலும் அல்லது நிருவகிக்கப்பட்ட போதிலும் யாதொரு பயனையும் தராது. மேற்குறிப்பிட்ட அறி வீனங்களால், சமன்கேடான நிலையே (disequilibrium) நீடிக்கும். பொன் திட்டத்தைப்போன்ற தீவிரமான பன்னுட்டு முறையைக் (rigid international system) கடைப்பிடித்தால் இத்தகைய பன் னுட்டு நிதியக் குழப்பத்தைத் (international financial chaos) தவிர்க்கலாமென கூறுவோரும், நாடுகளின் செலாவணிகளை மாற்று செய்துதரும் பொறுப்போ அல்லது நாடுகளுக்கிடையே மாற்று வீதங்களின் (exchange rates) நிலைபேற்றினை (stability) நிலைநாட்டும் பொறுப்போ இல்லாத பூரண சுதந்திரமும் அரசுரிமையும் (soveriegnty) நாட்டிற்கு வேண்டும் எனக் கூறு வோரும்—ஆகிய இருவருமே தவருன கருத்துடையவர்கள்.

இவ்வாறு தமது சுயநலத்தையே முதலாவதாகக் கருதும் பல் வேறு தனிப்பட்ட பொருளாதார நிலைகளையுடைய நாடுகளால் உலகம் பிளவுபட்டுள்ள வரையிலும், பொன் திட்டமோ (gold standard) அல்லது மாருத சமன் மதிப்புகளையுடைய வேறு எந்த முறையோ, நிச்சயமாக இயங்க முடியாது. சென்ற அத்தியா யத்தில் பொன்திட்டம் முறிவடைவதற்கான காரணங்களைப் பார்த் தோம். இக்காரணங்களெல்லாம் நீக்கப்பட்டுவிட்டன என்று நாம் நம்புவதற்கில்லை. அவைகளில் சில எப்போதும் இருப்பதைவிட

சக்திவாய்ந்தனவாகவே யிருக்கின்றன. இதில் மையமாக உள்ள உண்மை யென்னவெனில் உலகத்தின் பொதுவான சராசரி நிலை களால் (general average of the world conditions) தனது பொருளா தார நிலையானது, ஆதிக்கம் செலுத்தப்படுவதை அனுமதிக்க எந்த நாடும் விரும்புவதில்லை. ஒவ்வொரு நாடும் தன்னால் இயன்ற அளவு பொருளாதார அரசுரிமையையும் (economic soveriegnty) தன்னுடைய சொந்தக் கொள்கையைக் கடைப்பிடிக்கும் இன்றி யமையாத ஓர் உரிமையையும் (indefeasible right) தன்னிடமே வைத்துக்கொள்ளப் பாடுபடுகின்றது. இந்தவிதமான எண்ணம் நிலவுகின்றவரையிலும் பொன் திட்டமோ அல்லது மாற்றம் ஏதும் அடையாத மாற்று வீதங்களை (unvarying exchange rates) வலி யுறுத்தும் வேறு எந்தத் திட்டமும் (any standard) நடைபெற முடியாது. போர்க் காலம் முதல் சமாதான காலம் வரையிலுள்ள இடை மாறுபாட்டுக் காலம் (transition) முடிவடைந்த பின்னர் பொன் திட்டம் பழுதுபார்க்கப்பட்டு சீர்ப்படுத்தப்படலாம். போதிய அளவு பொன் காப்புகளால் (gold reserves) தாங்கப்பட்டால், பொன் திட்டம் சிலகாலத்திற்கு உயிர் வாழலாம். ஆனால், அது, உலகப் பொருளாதாரத்தின் பெயரால் தனிப்பட்ட ஒவ்வொரு நாட்டினுடைய நாட்டுப் பொருளாதாரத்தை (National Economy) செவ்வைப்படுத்தும் தொழிலைச் செய்யாதொழிவதன் மூலமே உயிர் பிழைத்திருக்கக் கூடும். ஆனால், நாட்டுப் பொருளாதார நிலை களிடையே இருக்கும் வேறுபாடுகள் மிக அதிகமாகி, அவைகள் பொன் போக்குகளால்கூட நீக்கப்படமுடியாத நிலை எப்போது ஏற் படுகிறதோ அப்போது பொன் திட்டம் மீண்டும் முறிவடையும்.

நாடுகளின் பொருளாதாரக் கொள்கைகளில் தீவிரமான மாற்றம் ஏதும் இல்லாமலிருக்கிற ஒரு நிலையில் பொன் திட்டத்தை வேலைக்குதவாத ஒரு திட்டமெனப் புறக்கணித்துவிடலாம். ஆனால், தடையில்லாத ஏற்ற இறக்கங்களை உடைய 'நிருவகிக்கப் பட்ட' செலாவணிகளால் (managed currencies) நன்மை ஏற்படும் என்று சொல்வதற்கும் இல்லை. மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் இவைகள் அவ்வாறு தோன்றுவதில்லை. பொன் திட்டத்தைப் போன்று நிருவகிக்கப்பட்ட செலாவணி முறிவடைவதில்லை. பொன் திட்டம் எதிர்பாராதவிதமாகத் திடீரென தாற்காலிகமாக நிறுத்திவைக்கப்படுவதைப் போன்று நிருவகிக்கப்பட்ட செலா வணி நிறுத்தி வைக்கப்படுவதில்லை. நாடுகளிடையே பொரு ளாதாரத் தொடர்பை ஊக்குவிக்கவும் செயற்படுத்தவுமான ஒரு பன்னாட்டுப் பணமுறையை (international monetary system) இவ் வாறு நிருவகிக்கப்பட்ட செலாவணி ஏற்படுத்துமா என்றால் 'இய லாது' என்றே விடையளிக்க வேண்டியிருக்கிறது. 1931ஆம்

ஆண்டிற்குப் பிறகு, நிருவகிக்கப்பட்ட செலாவணி முறையும் பொன் திட்டத்தைப் போன்றே முற்றிலும் தோல்வியடைந்தது. இம்முறையில், நாடுகள் தங்கள் தங்களுடைய உள்நாட்டுப் பொருளாதாரக் கைக்கோள்களைக் கடைபிடிப்பது உண்மையில், சாத்தியம் என்றாலும், அவைகளின் ஏற்றுமதித் தொழில்களில் இலட்சக்கணக்கானவர் வேலையிழப்பதன் மூலமே, அது சாத்தியமானது. உள்நாட்டுக் கைக்கோள் (internal policy) எவ்வளவுதான் திறமையாக அமைக்கப்பட்டு நிருவகிக்கப்பட்டு வந்தபோதிலும் அது செயற்படுவதற்கு வரையறைகள் உண்டு என்பதை மேற்சொன்ன நிகழ்ச்சிகள் உணர்த்துகின்றன. ஏற்ற இறக்கங்களைக் கொண்ட மாற்று வீதங்கள் (fluctuation of exchange rates) நாடுகளின் அயல்நாட்டுச் செலுத்து நிலைகளை சமநிலைக்கு மீண்டும் கொண்டு வரவேயில்லை. அயல்நாட்டு வாணிபத்தின்மீது சுமத்தப்பட்டிருந்த தடைகளும் (restrictions) நீக்கப்படாததற்கு இவைகளே காரணமாக இருந்தன.

1929ஆம் ஆண்டில் பன்னாட்டுக் கடனளிப்பு முற்றிலும் நின்றுவிட்டபோது, பொன் திட்டம் மட்டும் இல்லாமற் போயிருந்தால் என்ன விளைவுகள் ஏற்பட்டிருக்கும் என்பது ஈண்டுக் கருதற்பாலது. கடன்கள், கடன் வாங்கும் நாட்டினுடைய செலாவணியின் தேவையையும் (demand for the borrower's currency) கடன் கொடுக்கும் நாட்டின் செலாவணியின் அளிப்பையும் ஏற்படுத்துகின்றன. கடன்கள் நிறுத்தப்படுமாயின் அது கடன் வாங்கும் நாடுகளின் செலாவணிகளில் மதிப்பிறக்கத்தையும் (fall) கடன் கொடுக்கும் நாடுகளின் செலாவணிகளின் மாற்று மதிப்பில் அதிகரிப்பையும் ஏற்படுத்தியிருக்கும். கடன்ஈவோர் நாடுகள் (creditors) தமது செலாவணிகள் விலை அதிகமானவைகளாக இருக்கின்ற காரணத்தால் தமது பண்டங்களை வெளிநாடுகளில் விற்பனைசெய்ய இயலாதிருத்தலை உணர்ந்திருக்கும். அதேசமயத்தில் அந்நாடுகள் கடனாளி நாடுகளிலிருந்து வரும் மலிவான இறக்குமதிகளால் (cheap imports) நிரப்பப்பட்டிருக்கும். இதன் காரணமாக அக்கடன் ஈவோர் நாடுகள் அதிஉயர சுங்க வரிகளையும், கட்டுண்டபங்களவுகளையும் (prohibitive quotas) திணிக்கக் கூடுமாதலால், இது அவைகளின் செலாவணிகளின் மாற்று மதிப்பை இன்னும் அதிகரிக்கச் செய்து கடனாளிகளின் செலாவணிகளின் மாற்று மதிப்பைக் குறையச் செய்யும். ஏற்கெனவே இருந்த வேறுபாடு இதனால் இன்னும் அதிகரிக்கப்பட்டிருக்கும். சில கடனாளி நாடுகள் அவைகளின் செலாவணிகள் மந்த காலத்தின் (depression) ஆரம்பத்திலேயே மாற்று மதிப்பில் குறைவடைந்திருக்குமாயின், உதவியளிக்கப்பட்டிருக்கும். ஆனால் ஏனைய கடனாளி

நாடுகளின் நலன், மாற்று நிலேபேற்றைக் (exchange stability) கடைப்பிடித்தலின் மூலமே பாதுகாக்கப்பட்டிருக்கும். எப்படி யிருந்தபோதிலும், ஏற்ற இறக்கங்களேயுடைய மாற்று வீதங்கள் ஓர் உண்மையான சமநிலேயை (a real equilibrium) வெகு விரை வில் மீண்டும் நிலேநாட்டியிருக்கும் என்ருே அல்லது அவைகள், அதிகமான சுங்க வரிகள் என்னும் நச்சு வட்டத்திலிருந்தோ (vicious circle of higher tariffs) வாங்கிய கடனேத் திருப்பியடைக் காத குற்றத்திலிருந்தோ, இன்னும் மேற்கொண்டு விதிக்கப்படும் தடைகளிடமிருந்தோ தப்பித்துக்கொள்ளும் மார்க்கத்தை அளித் திருக்குமென்று நம்புவதற்கில்லே.

அதே சமயத்தில், போதுமான அளவு சமன்பாட்டை (reasonable balance) ஏற்படுத்துவதற்குரிய உட்கிடையான நிலேமைக ளிருக்குமாஞல் (underlying conditions) கீழ்க்கண்ட அதிதீவிர மான முறைகளில் இரு முறைகளில் எதுவுமே—ஒன்று முற்றிலும் உறுதியான மாற்று வீதங்களேக் (unlimited variation of exchange rates) கடைப்பிடித்தல்—கையாளத்தக்கதாக இருக்கும். இந்த இரு முறைகளில் ஒவ்வொன்றும் குறைபாடுகள், நலன்கள் ஆகிய இரண்டையும் உடையதாக வுளது. இவ்விரு முறைகளிலும் உள்ள நலன்களேச் சீர்தூக்கிப் பார்த்தே எந்த முறை உகந்ததென முடிவு செய்ய வேண்டும். பொன் திட்டம் நாட்டுப் பணக் கைக்கோள் களின் (National Monetary Policies) தன்னுரிமையைக் (freedom) கட்டுப்படுத்துவதாக உளது. மேலும் அது மிகத் தவருக நிருவகிக் கப்பட்ட (badly mismanaged) மாற்ற இயலாத செலாவணிகளால் (inconvertible currencies) ஏற்படத்தக்க வெகுவான நிலேபேறற்ற நிலேயினின்றும் (excess instability) காப்பாற்றுகிறது. பொன் திட் டத்தின் மிகப்பெரிய நன்மை யாதெனில் பன்ஞட்டு மூலதனப் போக்கிற்கும் (movement of international capital) பன்ஞட்டு வாணிபத்திற்கும் (international trade) அது துணைசெய்கிறது. உலக முழுமையுமுள்ள மனித சக்திகளேயும் (resources of man) இயற்கைச் சாதனங்களேயும் ஒன்று திரட்டி அதன்மூலம் விரை வான செல்வ வளர்ச்சிக்குத் (rapid increase of wealth) தனது உதவியை நல்குகிறது. நிருவகிக்கப்பட்ட செலாவணியை ஆராய் வோம். அது நாடுகளுக்கிடையே நடக்கும் வாணிபத்தையும் கடனளிப்பையும் பாதிப்பதாக இருப்பதன்மூலம் பன்ஞட்டுத் தொழிற் பகுப்பை (international divisions of labour) நிறைவேற்று வதைக் கட்டுப்படுத்தியபோதிலும் ஒருவகையில் நாடுகளுக்கு நலம்பயப்பதாகவே யிருக்கிறது. நிருவகிக்கப்பட்ட செலாவணி யைக் கொண்ட நாடு உலகத்தின் மாற்றத்திற்கேற்பத் தான் பெருமாற்றங்களேச் செய்து கொண்டிருக்கத் தேவையில்லே; உலக

வாணிபத்தில் அதனுடைய நிலையின் ஏற்ற இறக்கங்களுக்குத் தக்கவாறு (ebbing and flowing tides) சிறுமாற்றங்களைச் செய்து கொண்டாலே போதுமானதாக உள்ளது. எனவே இது, ஒவ்வொருநாட்டையும் அதனுடைய உள்நாட்டுத் தொழில்களை நீடிக்கச் செய்யும் நோக்கமுடையதொரு கைக்கோளை, பின்பற்றத் துணை செய்கிறது. மேற்சொன்ன இரண்டு முறைகளிலும் எது சிறந்ததென ஒருவரியில் கூறவேண்டுமானால், பொன்திட்டமானது பல ஒழுங்கீனங்களைக் கொண்டதாக இருந்தபோதிலும் தனிப்பட்ட நாடுகளின்மீது இடர்ப்பாடான மாற்றங்களைத் திணித்த போதிலும் (imposition of painful changes), உலகமுழுமைக்கும் விரைவானதொரு முன்னேற்றத்தை அளிப்பதாக உள்ளதென்றும், 'நிருவகிக்கப்பட்ட' செலாவணிகள்முறை (managed currencies) இவ்வொழுங்கீனங்களைத் தவிர்க்கக்கூடியதாக இருப்பினும் எல்லா முன்னேற்றத்தையும் சற்று நிதானமாகவே அளிப்பதாக உள்ளதென்றும் கூறலாம்.

இந்த இரு தீவிரமான மாற்றுவழிகளில் (two extreme alternatives) எது சிறந்த வழி என்று தேர்ந்தெடுக்கத் தேவையில்லை. சிறந்த வழி எதுவெனில் இவ்விரு முறைகளையும் இணைத்து ஒரு நடுநிலையான முறையை ஏற்படுத்துவதாகும். இவ்விரு முறைகளையும் சேர்த்து சிருட்டி செய்யப்படும் அப் புதிய முறையைச் சிறந்த முறையென உலக முழுவதுமே ஏற்றுக்கொள்ளுகிறது. மாற்று வீதங்களின் அன்றாட (day-to-day) நிலைபேற்றைப் (ஒவ்வோர் ஆண்டின் நிலைபேற்றையும் கூட) பாதுகாக்கும் முறையுடன் அடிப்படையான சமன்கேடு (fundamental disequilibrium) ஏற்படும் போது சமன் மதிப்பில் (parity) மாறுதல்களைச் (changes of parity) செய்யும் முறையையும் இணைத்து சிருட்டிப்பதே அந் நடுநிலை முறையாகும்.

இம்முறை ஒரு புதிய பன்னுட்டு முறையின் அடித்தளத்தை (Foundation) நாட்டுவதற்கான ஒரு நன்னம்பிக்கையை நல்குகின்றது. ஆனால், இந்நூலில் நாம் ஏற்கெனவே கண்டவாறு, புதிய பன்னுட்டு முறை என்னும் கட்டடத்தைக் கட்டி முடிக்குமுன் சந்திக்க வேண்டிய இடர்ப்பாடுகள் ஏராளமாக உள்ளன. நெருங்கிய சமநிலை (near-equilibrium) என்னும் நிலையை அடைவதற்கு முன்னர் கிரேட் பிரிட்டன், ஐக்கிய அமெரிக்கா, இன்னும் மற்ற நாடுகள் ஆகிய இந் நாடுகளின் அயல் நாட்டுச் செலுத்து நிலைகளால் (balances of payments) ஏற்படுத்தப்பட்ட பிரச்சினைகள் தீர்க்கப்பட வேண்டும். சமநிலையை நெருங்கிய இந்நிலையில் தான், எந்த ஒரு செயல் நுட்ப முறையும் (any technical system)

வெற்றியளிப்பதாக இருக்கும். நாம் ஏற்கெனவே இந் நூலில் பார்த்தது போல இம்முறை அரசாங்கங்களின் பொருளாதாரக் கைக்கோள்களிலும் ஏற்கெனவே அவைகள் அடைந்துள்ள சொத்துகளிலும் (prepossessions) பெருமளவு சரிப்படுத்துதலை வேண்டுகிறது. மேலும், இத்தகைய அடிப்படையான சரிப்படுத்துதல்களைச் (initial adjustments) செய்த பிறகும் இம் முறையில் பங்கு பெறும் நாடுகள் (participating countries) தங்களது செயல் உரிமையின் மீது (freedom of action) சுமத்தப்படும் சில வரையறைகளை (limits) ஏற்கவேண்டிய நிலையில் இருக்கின்றன. உதாரணமாக அவைகள் விரும்பியபோதெல்லாம், அவைகளுடைய செலாவணிகளின் முகப்பு மதிப்புகளை (parvalues) மாற்றி யமைக்கக்கூடாது. சமன் மதிப்பில் மாறுதல்களைச் (changes in parity) செய்யவேண்டுமாயின் பொதுவாக எல்லா நாடுகளின் சம்மதத்தையும் பெற வேண்டும். அவ்வாறு செய்யப்படும் மாற்றம் பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்ட நியதிகளுக்கு (agreed principles) உட்பட்டதாக இருக்க வேண்டும். உதாரணமாக, ஒரு நாடானது அதனிடம் ஏற்கெனவே உள்ள உள்நாட்டு விலை மட்டத்தின் போக்கிற்கு உகந்தவாறு தனது செலாவணியின் பொன் சமன்மதிப்பை (gold parity of its currency) அல்லது அதன் மாற்றுச் சமன் மதிப்பை (exchange parity) மாற்றி அமைத்துக்கொள்ளலாமே தவிர, உகந்தது எனக் கருதப்படுகிற விலைகளின் போக்கினைத் (a movement of prices considered desirable) தூண்டுவதற்காக அதன் செலாவணியின் பொன் சமன் மதிப்பை அல்லது மாற்றுச் சமன் மதிப்பை மாற்றியமைக்க முயலுதல் கூடாது என்று முடிவு செய்ய வேண்டியிருந்தது. வேறு வழியில் சொல்ல வேண்டுமானால், செலாவணியின் மாற்று வீதம் (exchange rate of the currency) விலை மட்டத்தால் ஏற்படுத்தப்பட்ட சமநிலை வீதத்தை நோக்கிச் (towards the equilibrium rate) செல்லும்படி சமன் மதிப்பில் மாறுதல்கள் செய்யப்பட வேண்டும். புதிய சமநிலை வீதத்தை உருவாக்கலாம் என்ற நம்பிக்கையில் இருக்கின்ற சமநிலை வீதத்தை விட்டு விலகிச் செல்லும்படி (away from the existing equilibrium) சமன் மதிப்பில் மாறுதல்களைச் செய்தல் கூடாது. மேலும் ஒரு நாடு, அதன் வெளி உபரியும் (external surplus) அது பிற நாடுகளுக்குக் கடன் கொடுக்க உத்தேசிக்கும் அயல்நாட்டுக் கடனளிப்பும் (அல்லது அதன் கடன் வாங்குதலும்) சமமாக இருக்கும்படி, மாற்றங்களைச் செய்தல் வேண்டும். அதிகமான வெளி உபரியை, தான் வைத்திருப்பதன் விளைவாக அதற்கு ஏற்றுமதி செய்யும் நாடுகளுக்குத் தாற்காலிகமான நலனை (temporary advantage) அளிப்பதற்காக மாற்றங்களைச் (changes) செய்தல் கூடாது. சுருக்கமாகச் சொல்லப் போனால், இத்தகைய தொரு முறை, ஒரு குறிப்பிட்ட அளவு

ஒன்றுக்கொன்று நம்பிக்கையைக் (mutual trust) கொண்ட ஒரு வகைப் பன்னாட்டு கூட்டுறவினால்தான் இயங்க முடியும். பாகுபாடு செய்து முடிவு செய்தலையும் (discriminating judgement) இம்முறையில் கையாளப்பட வேண்டும். இத்தகைய பண்புகள் யாவற்றையும் பன்னாட்டுப் பண நிலையில் பதவி வகிக்கும் ஆட்சியாளர்களும் (Governors) செயல்துறை இயக்குநர்களும் (Executive Directors) பெற்றிருப்பார்களென்று நம்பப்படுகிறது. அதுமட்டுமல்ல; அப் பண்புகளைச் செயற்படுத்த அவர்களின் அரசாங்கங்கள் (governments) அனுமதிக்கும் என்பதும் எதிர்பார்க்கப் படுகிறது.

எனவே, பன்னாட்டுச் சமநிலைக்குத் (international equilibrium) தேவையானவைகள் (requirements) வெறும் பணக் கைக்கோளின் (purely monetary policy) எல்லைக்கு அப்பாற்பட்டதாகவே யிருக்கின்றன. இவைகளை அளிக்க அரசாங்கங்களின் பொருளாதாரக் கைக்கோள்களால்தான் (economic policies of governments) முடியுமே தவிர மைய பாங்குகளின் நிதி சாதனங்களால் (financial devices of Central Banks) இயலாது. பன்னாட்டுச் சம நிலைக்குரிய அடிப்படையான நிபந்தனை என்ன வென்பதை மிக எளிதாகச் சொல்லிவிடலாம்; அதாவது, வெளி உபரியின் அளவு (size of the external surplus) பன்னாட்டு முதலீட்டின் அளவுக்குச் சமமாக இருக்க வேண்டும். இத்தகையதொரு கோட்பாட்டினால் பெறப்படும் விளைவு இடர்ப்பாட்டினைத் தருவதாக உள்ளது. உதாரணமாக, அரசாங்கங்கள் தங்களது பொருளாதாரக் கைக்கோளின் வெற்றியைத் தங்களது அயல்நாட்டு செலுத்து நிலைப்பட்டியல்களின் வருமானக் கணக்கில் (income account of the Balance of Payments) 'சாதகச் செலுத்து நிலை' (favourable balance) என அழைக்கப்படுகிற வெளி உபரியின் அளவைக் கொண்டு நிர்ணயித்தல் கூடாதென்பதை உணர வேண்டும். இதற்கு மாறாக ஒரு நிகழ்ச்சியைக் குறிப்பிடுவோம்; 1930ஆம் ஆண்டை யடுத்த பத்தாண்டுகளில் விளைந்த இடர்ப்பாடுகளில் ஒரு பங்கு, 1920ஆம் ஆண்டை அடுத்த பத்தாண்டுகளில் இருந்த மிக அதிகமான வெளி உபரிகளால் தான் ஏற்பட்டது.

பன்னாட்டுச் சமநிலையைக் கடைப்பிடித்தலானது அதனைக் கடைப்பிடிக்கும் அரசாங்கங்களின் மீது விருப்பம் போலவும் இடைஞ்சலாகவும் உள்ள ஏவல்களைத் (arbitrary) திணிக்கவில்லை—அவைகளின் முடிவுகள் தருக்க ரீதியாகப் பொருத்தமானவையாக இருக்க வேண்டுமென்றுதான் அது பணிக்கிறது.

மிக அதிகமான வெளி உபரியை பெருக்கிக்கொள்ள முயன்று (அல்லது) வெளி உபரியை ஏற்படுத்த முயன்று அதன் பிறகு அயல்நாடுகளுக்குக் கடனளிக்க மறுப்பது வெறும் முட்டாள் தனம் (sheer nonsense) என்பதை உணர வேண்டும். ஒரு நாடு 'பிற நாடுகளுக்குக் கடனளிக்கமாட்டேன்' எனக் கூற உரிமை யுண்டு. ஆனால், அது அப்படி மறுக்குமானல் அதனுடைய மறுப்பை அது சரியானதா எனச் சீர்தூக்கிப் பார்த்துப் பிறகு வெளி உபரி சரியாக, சுன்னமாக (zero) இருக்கும் நிலையை அடைய முயலவேண்டும். (அத்தகைய தொரு கைக்கோள் கேலிக் கூத் தானதல்ல: புதிய கடனளிப்பு அல்லது கடன் வாங்குதல் இல்லாத உலகத்தில் சமன்பாடான உலக நிலையை (balanced world order) ஏற்படுத்துதல் சாத்தியமாகும்.) அத்தகையதொரு உலகத்தில் பொருளாதார முன்னேற்றத்தின் வளர்ச்சியின் வீதம், பன்னாட்டு மூலதனம் தடையின்றி ஒரு நாட்டிலிருந்து மற்ருெரு நாட்டிற்குச் சென்றுகொண்டிருக்கும் உலகத்தின் ஒரு பொருளாதார முன்னேற் றத்தை விட வேகத்தில் குறைந்ததாகவே இருக்கும்—ஒரு நாட்டின் உள்ளே நிகழும் பொருளாதார வளர்ச்சியின் வீதம், அந்த நாட்டில் கடனளிப்பும் கடன் வாங்குதலும் நிகழாமல், அந் நாட்டின் மூல தனச் சேர்ப்பு அந்நாட்டின் சேமிப்பவர்கள் தங்களின் சேமிப்பி லிருந்து முதலீடு செய்யப்படுவதாகவே இருக்குமானல், மிகக் குறைவானதாக இருப்பதைப் போன்று இது குறைவாக இருக்கும். இத்தகையதொரு பொருளாதார வளர்ச்சி, சமன்பாடான பொருளா தார வளர்ச்சியாக இருக்கும். அதாவது 1929-31 ஆகிய ஆண்டு களில் நடந்த நெருக்கடியைத் தொடர்ந்து ஏற்பட்ட பண வடிப்பு விரயங்களெதுவும் இல்லாததொரு சமன்பாடான வளர்ச்சியாக இருக்கும். அரசாங்கங்கள் அதிகமான வெளி உபரியை வைத்துக் கொள்ள விரும்பும் பட்சத்தில் அவ்வெளிஉபரியை அயல்நாடுகளுக் குக் கடனளித்துவிட்டால் மட்டும் போதாது; அக்கடனளிப்புப் பன் னுட்டு மூலதனமாக அமையும்படியும் பார்த்துக் கடனளிக்க வேண்டும். அவைகள் செய்யக்கூடாததொன்று எதுவெனில், அதிகமான வெளி உபரியை வைத்துக்கொண்டு வெளிநாடுகளுக் குக் கடனளிக்க மறுப்பதாகும் (both to have a large External Surplus and to refuse to lend abroad).

பன்னுட்டுச் சம நிலைக்கு (international equilibrium) முழுமை யான தொரு தடையிலா வாணிபம் இருந்தாக வேண்டுமென்ப தில்லை. அதற்கு வேண்டுவதெல்லாம் சில சரிசெய்தல்களை (some adjustments) அனுமதித்தலும், நடைபெறு நிலை (status quo) ஒவ்வொருதரமும் மாறுவதைத் தடுத்தாக வேண்டுமென்பதற்காக சுங்க வரிகளைத் திணிப்பது கூடாதென்பதுமாகும். பன்னுட்டு சம

நிலைக் கைக்கோள் (policy of international equilibrium) கோருவதெல்லாம் இதுதான்: நாடுகள் ஒன்றுசேர்ந்து செய்ய இயலாததொன்றை தனித்தனியாகவும் செய்ய முயலுதல் கூடாது.

இந்தப் பொதுவான கருத்துரைகள் யாவும் (general remarks) கடன் கொடுப்போர் கடன் வாங்குவோர் ஆகிய இரு தரத்தினருக்கும் பொருந்துவனவாகும். அவைகள், பொன் திட்டமாக இருந்தாலும் அல்லது 'நிருவகிக்கப்பட்ட' செலாவணிகள் முறையாக (managed currency system) இருந்தாலும், அல்லது பிரெட்டன் வுட்ஸ் மாநாடு தந்த இவை யிரண்டும் கலந்த ஒரு திட்டமாக (compromise between the two) இருந்தாலும்—இம் மூன்று முறைகளுக்குமே—பொருந்துவனவாகும். காரணம், இம் மூன்று முறைகளிலும் அவைகளைச் செயற்படுத்தும் வகையிலுள்ள கோட்பாட்டில் தான் வேறுபாடுகள் இருக்கின்றனவே தவிர கோட்பாட்டில் வேறுபாடுகள் ஒன்றுமில்லை. பொன் திட்டமாக இருந்தால் அதனை நிருவகிக்கும் அரசாங்கம் செய்யவேண்டியது ஒன்றுண்டு. உலக விலை மட்டத்திற் கொப்பாக உள்நாட்டு விலையின் அமைப்பு (domestic price structure) இருப்பதற்கு வேண்டிய சரி செய்தவைகளை (adjustments) இயன்ற அளவு விரைவில் அது செய்தாக வேண்டும். அயல்நாட்டுச் செலாவணிகள் (exchange) தடையேதுமின்றி ஏற்ற இறக்கங்களை உடையனவாக (free to fluctuate) இருக்கும்போது, அரசாங்கம் மாற்று வீதத்தை கூடியவரையில் அதன் செலாவணியின் உண்மையான 'சமநிலை வீதத்திற்கு'ச் (equilibrium rate) சமமாக இருக்கும்படி பார்த்துக்கொள்ள வேண்டும். இந்த இரு முறைகளும் கலந்த ஒருமுறை இருக்கும் போது அரசாங்கத்தினுடைய கடமையானது மேற்சொன்ன கடமைகள் இரண்டும் கலந்த தொன்றாக இருக்கும். எந்த ஒரு முறையிலும், அதன் செலாவணியின் அகமதிப்பும் புறமதிப்பும் (internal and external values) ஒன்றாக இருக்கும்படி பார்த்துக்கொள்ள வேண்டும்.

இக்கடமைகள் (duties) ஆறும் அத்தியாயத்தில் விளக்கப்பட்ட உள்நாட்டு நிலைபேற்றுக் கைக்கோளிற்கு (policy of domestic stabilization) வரையறைகளை (limits) ஏற்படுத்துகின்றன. வெளி உலகத்தின் பொருளாதார நிலையானது நிலைபேறற்று (unstable) இருப்பதால் நாட்டுக் கைக்கோளிற்கும் (national policy) பன்னாட்டுக் கைக்கோளிற்கும் இடையே மாறுபாடு இருந்துகொண்டே யிருக்கிறது. இது ஒரு வருந்தத்தக்க உண்மையாகும்; வருந்துவதால் மட்டும் இதனை நீக்கிவிட முடியாது. நிலைபேறற்ற வெளி உலகத்தினிடம் ஒரு நாடானது பொருளாதாரத் தொடர்புகளை வைத்துக்கொண்டிருக்கின்ற வரையிலும், அதன்

உள்நாட்டில் குறைவற்ற நிலைபேற்றினைக் (perfect stability) காண முடியாது. அதனுடைய கைக்கோள் கீழ்க்கண்ட இரு கைக் கோள்களும் கலந்த ஒரு கைக்கோளாக இருக்க வேண்டும். அது மற்ற நாடுகளிடம் தொடர்பு கொள்ளாமல் தனி நாடாக இருக்கு மானால் அப்போது கடைப்பிடிக்கும் அதனுடைய குறிக்கோளான கைக்கோள் (ideal policy) வெளி உலகத்தினோடு கொண்டுள்ள தொடர்பின் நிலைபேறு ஒன்றையே கருதி கடைப்பிடிக்கப்படும் கைக்கோள்—ஆகிய இரு கைக்கோள்களின் அம்சங்களும் கலந்த தொரு கைக்கோளாக இருக்க வேண்டும். ஏற்ற இறக்கங்களைக் கொண்ட (fluctuating) செலாவணிகளால் இந்த இருதலை இடர் பாட்டிற்கு (dilemma) முடிவு காண முடியாது; இதற்குமாறாக இரு தலையான இடர்ப்பாட்டை இவை ஏற்படுத்தும் என்றே கூறப்படு கிறது. கிரேட் பிரிட்டனின் உள்நாட்டு விலைகளின் ஏற்ற இறக் கங்கள் (fluctuations of prices inside Great Britain) பவுண்டு ஸ்டெர்லிங்கின் (pound sterling) மாற்று மதிப்பில் (exchange value) உள்ள ஏற்ற இறக்கங்களைப் பிரதிபலிப்பதாக உள்ளன. அதே சம யத்தில், மற்றச் செலாவணிகளின் மாற்று மதிப்புகளில் ஏற்படும் ஏற்ற இறக்கங்கள் (fluctuations of the exchange values of other currencies) பிரிட்டிஷ் வாணிபத்தின் போக்கில் கடுமையான விளைவுகளை ஏற்படுத்தக் கூடுமாதலால் நாட்டின் உள்நாட்டுப் பொருளாதார நிலையும் கடுமையாகப் பாதிக்கப்படுவதாக இருக்கும். செலாவணிகளில் ஏற்ற இறக்கங்கள் (fluctuations) அவை பன்னாட்டு நிலையின் தன்மையைவிட நாட்டின் நிலையின் தன்மை களைப் பிரதிபலிப்பதாக இருக்கும். அதே சமயத்தில் செலாவணி களில் மாற்றம் எதுவுமற்ற உறுதியான ஒரு முறையானது உள் நாட்டு நோக்கங்களைவிட (domestic objectives) பன்னாட்டு நோக் கங்களை (International objectives) நிறைவேற்றுவதில் தான் அதிக கவனம் செலுத்துவதாக இருக்கும். ஆனால் இவ்விருமுறைகளுக்கும் உள்ள வேறுபாடு, வகையின் பாற்பட்டதல்ல (not of kind) அள வின்பாற் பட்டதே (of degree) யாகும். பொன் திட்டமானது, மாற்ற முடியாத செலாவணிகளைக் கொண்ட (inconvertible system) முறையைக் காட்டிலும், குறைவான வரையறைகளையே (narrower limits) நாட்டின் கைக்கோளிற்கு (national policy) ஏற் படுத்துகிறது. ஆனால் இருமுறைகளும் வரையறைகளை ஏற் படுத்தவே செய்கின்றன. கீழ்க்கண்ட இரண்டு வழிகளில் ஒன்றே தேர்ந்தெடுக்கப்படுதற் குரியதாகும். உலக முழுவதிலும் நெருங்கிய தொடர்பு வைத்துக்கொண்டு அதன் விரைவான செல்வ வளர்ச்சி யில் பங்கு கொண்டு நீண்டகால-நலன்களைப் பெறுவது ஒரு வழி நிலையற்ற உலகத்தின் ஏற்ற இறக்கங்களில் உறுதியற்ற தொடர் பையே கொண்டு அதன் காரணமாக குறுங்கால—நலன்களைப்

பெறுவது மற்றொரு வழி. தொழில் மயமாக்கப்பட்டிருக்கும் நவீன நாடுகளுக்கு (modern industrialised nations) நெகிழ்வற்ற சமூக அமைப்பைக் கொண்டனவும் அயல்நாட்டு வாணிபத்தை எதிர் நோக்கிக் கொண்டிருப்பனவுமாகிய நவீன தொழில்மய நாடுகளுக்கு இந்த இரு அதி தீவிரமான முறைகளுமே—நிலையானதும் தன்னியக்கமுடையதுமான பொன் திட்ட முறையும், அயல்நாட்டு வாணிபத்தை அசட்டை செய்யும், மாற்ற இயலாத செலாவணி முறையும் (inconvertible currency system) — கொள்ளுதற்குரியன வல்ல.

எதிர்காலத்தில் முன்னேற்றமானது கீழ்க்கண்ட மூன்று முறைகளுள் அடங்கியுள்ளது. முதலாவது முறை பிரெட்டன்வுட்ஸ் மாநாட்டால் கொண்டுவரப்பட்டதும் பன்னாட்டுப் பண முறையில் புகுத்தப்பட்டதுமான இருமுறைகளும் கலந்ததொரு முறையாகும். (compromise) இரண்டாவது, நாடுகள் தங்களுக்கிடையே நிகழ்த்தும் பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் பரிவர்த்தனைகளில் ஓரளவு நிலைபேற்றை (some stability) ஏற்படுத்தும்பொருட்டு ஒற்றுமையாக இயங்குவதற்கான வழி முறைகளை ஆராய்தலாம். உள்நாட்டில் நிலைபேற்றை நிலைநாட்ட முயன்றுகொண்டிருப்பதும் ஏற்ற இறக்கங்களைக் கொண்ட அயல்நாட்டு வாணிபத்தில் தொல்லைகள் உண்டென்பதை உணர்ந்திருப்பதுமான ஒரு நாடு தனித்து நின்று செயல்புரியும்போது அதற்கு ஒரே ஒரு நிவாரண மார்க்கந்தான் உண்டு; அதாவது, இன்றியமையாத மிகக்குறைந்த அளவிற்கு (இதன் மூலம் நிலைபெற்ற அளவிற்கு) அதன் அயல் நாட்டு வாணிபத்தை அமைத்துக் கொள்ளுதலாகும். நாடுகள் ஒரு மித்துச் செயல் புரியும்போது, அவைகள், பரிமாற்றமான (reciprocal) நெடுங்கால ஒப்பந்தங்கள் (long-term agreements) அல்லது குறுங்கால ஒப்பந்தங்கள் ஆகியவற்றின் மூலம், தங்களின் வாணிபத்தை, குறைந்த மட்டத்திலன்றி உயர்மட்டத்திலேயே நிலைபெற்று (stable) விளங்கச் செய்யலாம். மூன்றாவது வழி, உள் நாட்டுச் சமநிலையையும் பன்னாட்டுச் சமநிலையையும் ஏற்படுத்தக் கூடிய கைக்கோள்களை (policies) ஒவ்வொரு நாடும் கடைப் பிடித்தலாகும். (ஈண்டு, உள்நாட்டுச் சமநிலை (domestic equilibriums) பன்னாட்டுச் சமநிலை (international equilibrium) என்னும் சொற்கள் இந்நூலில் இதுகாறும் என்ன பொருளை உணர்த்தினவோ அப்பொருளை உணர்த்துவனவாகவே கொள்ளுதல் வேண்டும்.) வெளியுலகம் (outer world) நிலைபேறற்று இருக்கும் நிலையொழியுமானல் இவ்விருதலை இடர்ப்பாடும் (dilemma) நீங்கும். கடைசியாக ஆராய்ந்து பார்க்குமிடத்து, இதுவே பன்னாட்டுப் பணமுறையாக (International monetary system) இருக்க வேண்டுமென்

பத்ற்குத் தலையாய காரணமாக இருக்கிறது. ஏனெனில் நிலை பேறற்றதொரு உலகத்தில், தனிப்பட்ட நாடுகளும் உள்நாட்டு நிலை பேற்றினைக் கடைப்பிடித்தலரிது.

பண சாம்ராச்சியத்தில் நாம் இதுகாறும் செய்து வந்த ஆய்வு (survey) பன்னாட்டு அரங்கிலும் நாட்டு அரங்கிலும் (International sphere as in the national) நிறைவேற்றப்பட வேண்டியதொரு உயர் உள்ளலுடன் (aspiration) முடிவடைகிறது. தனிப்பட்டவர் களிடையேயும், நாடுகளிடையேயும் பணமானது மதம் பிடித்து அலைவதையும் ஏற்கெனவேயுள்ள நிலைபேறற்ற நிலையுடன் இன்னும் நிலைபேறற்ற நிலைகளைச் சேர்த்தலையும் தவிர்ப்பதற்கான பரந்த வழிமுறைகளுண்டென்பதை நாம் பார்த்தோம். ஆனால் இந்த இரு எல்லைகளுக்கும் இரு வரம்புகளைக் கூறவேண்டும். முதலாவதாக, பொருளாதார முட்டாள் தனத்தினின்றும் பண மானது உகந்ததொரு கருத்தினை (sense) வரவழைத்துவிட முடி யாது; விவேகமற்ற உலகத்தின் செயலால் ஏற்படும் விபரீத விளைவு களைத் தடுத்து நிறுத்துவதும் எளிதான செயலல்ல. இரண்டா வதாக அப்படியே உலகமானது விவேகமுடையதாகவும் கருத்தான தாகவும் இருப்பினும், அதற்கும் ஒரு சுமுகமானதும் விரைவானது மான பணக் கட்டுப்பாட்டுச் (monetary control) செயல் முறையை (technique) இன்னும் நாம் உருவாக்கி விடவில்லை. ஓர் எல்லையின் சிறந்த கைக்கோள் (the best policy in one sphere) மற்றோர் எல்லையின் சிறந்த கைக்கோளாக அமையாது என்னும் கருத்தைத் தரவல்ல ஓர் உண்மையினைக் கடந்த சில பக்கங்களில் பார்த் தோம்.

நிவாரணங்களைக் (panacea) கூறுமலேயே நாம் இந்நூலை முடிக்கிறோம்: இந்நூல் எதிர்காலத்திற்கானதொரு திட்டமல்ல; பயணம் செய்யவேண்டிய பாதைக்கு இது ஒரு வழிகாட்டியல்ல; ஏற்கெனவே பயணம் செய்த பாதையின் விளக்கமேயாகும். திருப்தி அளிக்காததும் முடிபற்றவையுமான பல கருத்துக்களுடன் இந் நூலினின்றும் நாம் விடைபெறுகிறோமென்றால் அதற்குக் காரணம், பணமுறையைப் பற்றிய நமது செயல்நுட்ப அறிவு (knowledge of monetary mechanism) அரைகுறையானதென் பதும், பணத்தை நாம் கையாளும் வகை முடம்பட்ட தென்பது மாகும்.

மனிதனின் சமூகக் கண்டுபிடிப்புகளுள் (social inventions) பணம் என்ற ஒன்று மிகவும் வியப்பானது. ஆனால், அப் பணத்தை மனிதனே கண்டுபிடித்தான்; அது அவனுடைய

படைப்பே யாகும்; அதற்குத் தலைவனும் அவனேயாகு மென்பதை மறத்தலாகாது. இதுவரை நாம் செய்த ஆராய்ச்சியின் மிக முக்கிய மான பயன் இதுவே யாகும். என்று பணத்தைச் சுற்றி ஏதோ மூடுமந்திரம் இருக்கிறதென்ற எண்ணத்தை விடுகின்றோமோ, என்று வாழ்க்கையின் மகிழ்ச்சியும் முன்னேற்றமும் பணத்தை மட்டுமே அடிப்படையாகக் கொண்டுள்ளன என்ற எண்ணத்தி லிருந்து விடுபடுகின்றோமோ, என்று பணம் என்பது அவனுடைய அறிவாற்றலின் மூலமாக நடைபெறும் முயற்சிகளைத் தடையின்றி நடத்தும் ஒரு மசகு எண்ணெய் என்று அறிந்துகொண்டு அதற் குரிய இடத்தில் பணத்திற்குத் தரும் மதிப்பை வைக்கின்றோமோ அன்று நம்முடைய பொருளாதாரச் சூழ்நிலையைக் கட்டுப்படுத்தும் வகையை நன்கு அறிந்து பண முறை (monetary system) என்ப தையும் ஓரளவு விளங்கிக்கொண்டு, பொருளாதாரச் சூழ்நிலையைக் கட்டுப்படுத்தும் பாதையில் மிகவும் முன்னேறி விடுவோம்.

# பின்னிணைப்பு
(APPENDIX)

## முன்னேக்கிய அயல்நாட்டுச் செலாவணி
(Forward Exchange)

• இப்பகுதி இந்நூலின் முதற்பதிப்பில் ஏழாம் அத்தியாயத்தின் பகுதியாக இருந்தது. போருக்குப் பின்னருள்ள உலகத்தில் (Post-war world) இதற்குச் சரித்திர முக்கியத்துவத்தைத் தவிர வேறு முக்கியத்துவம் காணப்பட வில்லையாதலால் 'இப்பகுதி பின்னிணைப்பிற்கு மாற்றப்பட்டுளது.

பல்வேறு செலாவணிகளுக்கிடையேயுள்ள மாற்று வீதங்கள் (rates of exchange between different currencies) அவைகளின் தேவைக்கும் (demand) அளிப்பிற்கும் (supply) ஏற்றவாறு, தாராளமாக ஏறி இறங்குவனவாக உள்ளனவென்று ஏழாம் அத்தியாயத்தில் கருதப்பட்டது. உண்மையில் இதுவே, இயல்பானதும் இயற்கையானதுமான நிலை (normal and natural state of affairs) என விவாதிக்கப்பட்டது.

எட்டாவது அத்தியாயத்திலும் ஒன்பதாவது அத்தியாயத்திலும் கூறப்பட்ட வழிகளில், எந்த ஒரு வழியினுலும், மாற்றுகளின் (exchanges) ஏற்ற இறக்கங்கள் (fluctuations) கட்டுபடுத்தப்பட வில்லை யாயினும், அயல்நாட்டு மாற்று அங்காடி (அதற்குக் கட்டுப்பாடு எதுவும் இல்லாமலிருந்த காலத்தில்), அவ்வேற்ற இறக்கங்களால் ஏற்படும் எதிர்பாராத நஷ்டங்களைத் (unexpected loses) தவிர்க்கும் ஒரு சுவையான (interesting) மதிநுட்ப (ingenious) முறையை நல்கியது. 'முன்னேக்கிய அயல்நாட்டுச் செலாவணி' அங்காடியின் மூலமே (by the means of the market in forward exchange) அம்முறை கையாளப்பட்டது.

அயல்நாட்டுச் செலாவணியில் வாணிபம் செய்பவர்கள் (dealers in foreign exchange) தங்களின் உடனடி ஒப்பந்தங்களுக்கு (immediate settlements) அயல் நாட்டுச் செலாவணியை—அயல் நாட்டு நகரங்களில் வைக்கப்பட்டுள்ள பாங்கு வைப்புக்களை—வாங்குவதும் விற்பதுமாக இருப்பர். இத்தகைய பரிவர்த்தனைகள் (exchanges) 'உடனடியாக'ச் (on the spot) செய்யப்பட்டு, பேரம் செய்யப்படும் அதே நாளில் (the day of the bargain) அல்லது அதற்கு அடுத்த நாளிற்குள்ளாவது, முடிவு செய்யப்படும் (concluded). இதன் காரணமாக, இத்தகைய பேரங்கள் (dealings) 'உடனடி மாற்று'ப் (spot exchange) பேரங்களென அழைக்கப்படுகின்றன. முக்கியமாக, இத்தகைய பேரங்களே இத்தலைப்பில் ஆராயப்பட்டுள்ளன. தடையிலா அங்காடியில், (Free market) உள்ள வணிகர்களும் 'முன்னேக்கிய அயல்நாட்டுச் செலாவணியை' (forward exchange) வாங்குவதற்கும் விற்பதற்கும் தயாராக இருக்கின்றனர். அதாவது அவர்கள் ஒரு குறிப்பிட்ட அளவு அயல் நாட்டுச் செலாவணியை இன்றைய 'உடனடி மாற்று' வீதத்தில் (at to-day's spot rate of exchange) ஒரு மாதத்திற்குள், இரண்டு மாதங்களுக்குள் அல்லது மூன்று மாதங்களுக்குள் வாங்கவோ அல்லது விற்கவோ ஒப்பந்தம் செய்துகொள்ளச் சம்மதிக்கின்றனர். ஒப்பந்தம் முன்பாகவே செய்யப்பட்டு விடுவதால் மேற்குறிப்பிட்ட காலங்களில் 'உடனடி' வீதம் (spot-rate) எப்படியிருப்பினும் அதைப்பற்றி அக்கறையில்லை. 'முன்னேக்கிய வீதமானது' (Forward rate) 'இன்றைய உடனடி வீதத்தினின்றும்' (to-day's spot rate) ஒரு சிறிதளவு தொகையில் வேறு பட்டதாக இருக்கும். லண்டனுக்கும் நியூயார்க்கிற்கும் இடையேயுள்ள 'இன்றைய உடனடி வீதம்' (to-day's spot rate) \$ 5 = £ 1 ஆக இருக்கிறதென்றால், ஒரு மாதத்திய முன்னேக்கிய வீதம் (one month's forward rate) \$ 5·02 = £ 1 ஆகவோ அல்லது \$ 4·98 = £ 1 ஆகவோ, இரண்டு மாத முன்னேக்கிய வீதம் \$ 5·04 ஆகவோ அல்லது \$ 4·96 ஆகவோ, மூன்று மாத வீதம் \$ 5·06 ஆகவோ அல்லது \$ 4·94 ஆகவோ இருக்கும். சாதாரணமாக இந்த வீதங்களை உடனடி வீதத்திற்கு (spot rate) இத்தனை சென்டுகள் (cents) வட்டம் (premium) அல்லது கழிவு (discount) எனக் குறிப்பிடுவர். உடனடி வீதம் (spot rate) \$ 5·00 ஆக இருக்கும்போது மூன்று மாத முன்னேக்கிய டாலர்களுக்கான (forward dollars) வீதத்தை, ஆறு சென்டுகள் கழிவையுடைய (six cents discount) மூன்று மாத முன்னேக்கிய டாலர்கள் (three month's forward dollars) எனக் குறிப்பிடுவது வழக்கம்.[1]

1 வாசகர்கள் இங்கே ஒன்றைக் கவனிக்க வேண்டும். அதிகமாக உள்ள எண் (higher figure) கழிவைக் (discount) குறிக்கிறது என்று கருதல் கூடாது. ஏனெ

இம்முறை வணிகருக்கு மிகவும் நலம் பயப்பதாக உள்ளது. ஏழாம் அத்தியாயத்தில் கொடுக்கப்பட்டுள்ள எளிதான ஓர் உதாரணத்தை இங்கே மீண்டும் நினைவு கொள்ளுவதன் மூலம் எவ்வாறு நலம் பயப்பதாக உள்ள தென்பதைத் தெரிந்துகொள்ளலாம். திரு. பிரௌன் (Mr. Brown) என்னும் நியூயார்க் வணிகர் ஒருவர் வணிக ஒப்பந்தமொன்றை பவுண்டுகளின் கணக்கில் (in terms of pounds) செய்துகொள்கிறாரென வைத்துக்கொள்வோம். மூன்று மாதங்கள் கழித்து தான் இன்ன வீதத்தில் டாலர்களைக் கொடுத்தால் இத்தனை பவுண்டுகளைப் பெறலாமென்பது அவருக்குத் தற்போதே தெரியுமானால், அவர் தமது ஒப்பந்தத்தைப் பவுண்டுகளின் கணக்கில் பத்திரமாகச் செய்துகொள்ள இயலும். ஜனவரி முதல் தேதியன்று திரு. பிரௌனுக்கு 1 கெஜம் 1 ஷில்லிங் வீதம் 10,000 கெஜம் லினன் துணி விற்பதாக ஒப்பந்தம் செய்யப்படுகிறது எனக் கொள்வோம். அப்போது உடனடி வீதம் (spot rate) \$ 5=£ 1 ஆக உள்ளதெனவும் கொள்வோம். இந்நிலையில் திரு. பிரௌன் '3 மாதத்திற்குப் பிறகு £ 500 அவருடைய பாங்கிலிருந்து வாங்க முடியும்' (அதாவது ஏப்ரல் 1-ம் தேதி டாலர்கட்கு பதிலாக அவருடைய பாங்கு £ 500 தர ஏற்றுக்கொள்கிறது. திருவாளர் பிரௌன் \$ 5·5 என்னும் வீதத்தில் (முன்னேக்கிய டாலர்கள் கழிவு செய்யத்தக்கதாக இருக்கும்போது) அல்லது \$ 4·95 என்னும் வீதத்தில் (முன்னேக்கிய டாலர்கள் வட்டம் உடையனவாக இருக்கும்போது), தனது பாங்கிலிருந்து மூன்று மாதம் முன்னேக்கிய £ 500 ஐ வாங்க (able to buy £500 three months forward) இயலும். அதாவது ஏப்ரல் 1ந் தேதியன்று பாங்கானது £ 500 ஐ, டாலர்களைப் பரிவர்த்தனையாகப் பெற்றுக்கொண்டு, அவருக்குக் கொடுக்க வாக்குறுதியளிக்கிறது. மேற்சொன்ன இரண்டு நிலைகளிலும் ஏப்ரல் மாதம் 1ந் தேதியன்று சரியாக எத்தனை டாலர்களைச் செலுத்த வேண்டுமென்று திரு. பிரௌனுக்குத் தெரியும்; முதலில் சொல்லப்பட்ட நிலை இருக்குமாயின், அவர் பவுண்டொன்றுக்கு \$ 2·525-ம், இரண்டாவதாகக் கூறப்பட்டுள்ள நிலை இருக்குமானால் பவுண்டொன்றுக்கு \$ 2·475ம் கொடுக்கும்படியாக இருக்கும். இதைப்போலவே, ஆங்கிலேய வணிகர் ஒருவர் மூன்று மாதங்கள் கழித்து டாலர்களில் பணம் செலுத்த வேண்டுமென்று வைத்துக் கொள்வோம். அவர், 'மூன்று மாத முன்னேக்கிய டாலர்களை வாங்குவதன் மூலம்' (buying three month's forward

---

னில் குறிப்பிடப்பட்டுள்ள எண் டாலர்களின் விலையைக் குறிக்கவில்லை, பவுண்டுகளின் விலையையே குறிக்கின்றது. \$ 5·06 வீதம் என்பது ஒரு பவுண்டிற்கு (one pound) அதிகமான டாலர்களைக் கொடுக்க வேண்டுமென்பதை உணர்த்துகிறது. எனவே, முன்னேக்கிய பவுண்டுகள் வட்டம் (premium) உடையனவாகவும், முன்னேக்கிய டாலர்கள் (forward dollars) கழிவு (discount) உடையனவாகவும் உள்ளன.

dollars), தான் மூன்று மாதங்கள் கழித்து பவுண்டுகளில் எவ்வளவு செலுத்தவேண்டியிருக்குமென்பதைத் தற்போதே உறுதிப்படுத்திக் கொள்ள முடியும். வணிகர், தான் ஒப்பந்தத்தைச் செய்துகொண்டாகிவிட்ட பிறகு, உடனடி வீதத்தில் (spot rate) எவ்வளவு ஏற்ற இறக்கங்கள் (fluctuations) ஏற்படினும் அதனைப் பற்றி எள்ளளவும் கவலைப்பட வேண்டிய தேவையில்லை.

முன்னோக்கிய செலாவணிகளுக்கான (forward exchanges) முறை, அதனைப் பயன்படுத்தும் வணிகர்கள் இன்னும் மற்றவர்களுக்கு (merchants and others) மாற்று பேரத்தால் ஏற்படும் நஷ்டங்கள் என்னும் சுமையை (மாற்று பேரத்தால் கிட்டக்கூடிய இலாபத்தையும்) போக்குவதாகக் கூறப்படுகிறது. உண்மையில் இவ்வாறு ஏற்படும் நஷ்டங்களும் இலாபங்களும் ஒருவரிடமிருந்து மற்றவருக்கு மாற்றப்படுகின்றனவே (transferred) தவிர, அழிக்கப் படவில்லை. இத்தகைய வசதிகளை பாங்குகள் எவ்வாறு அளிக்கின்றன? முன்னோக்கிய வீதங்களின் (forward rates) வட்டம் (premiums) அல்லது கழிவை (discount) எவ்வாறு அவை நிர்ணயிக்கின்றன?

பாங்குகள், தங்களுடைய பல்வேறு வாடிக்கைக்காரர்கள் (different customers) எதிரிடையாகச் செய்துகொள்ளும் பேரங்களை (opposite transactions) ஓரளவு சரிக்கட்டுகின்றன (offset). உதாரணமாக ஸ்மித் (smith) என்பவர் தாம் மூன்று மாத முன்னோக்கிய £ 10,000 ஐ வாங்குவதற்கு பாங்கினிடம் வேண்டுகிறார் என வைத்துக்கொள்வோம். அதே சமயத்தில் ஜோன்ஸ் (Jones) என்பவர் மூன்று மாத முன்னோக்கிய $ 10,000 ஐ விற்பதற்கு வேண்டுகிறார் என்றால், இந்த இரு பேரங்களையும் பாங்கானது ஒன்றை மற்றொன்று சரிக்கட்டிக் கொள்ளும்படி செய்துவிடும்—இன்னும் அங்காடியில் வழங்குகிற கவர்ச்சியான சொற்றொடரால் சொல்ல வேண்டுமாயின் அவை ஒன்றையொன்று மணந்து கொள்ளும்படி (they can be married) செய்யப்படும் எனக் கூறலாம். இப்பேரங்களின் (transactions) உடனடி வீதம் (spot rate) எப்படியிருந்த போதிலும், மூன்று மாத கால அளவில் (in three months time) ஒரு பேரத்திலிருந்து கிடைக்கக்கூடிய இலாபம் மற்றொரு பேரத்திலிருந்து கிடைக்கும் நஷ்டத்தை ஈடு செய்வதாகவேயிருக்கும்.[1] ஆனால் இவ்வாறு பொது மக்களின் முன்னோக்கிய கொள்முதலும் (forward purchases), முன்னோக்கிய விற்பனையும்

1 பாங்கானது அதன் செலவுகளைச் சமாளிக்கும் பொருட்டு இவ்விரு வாடிக்கைக்காரர்களுக்கும் சற்று வேறுபாடுடைய வெவ்வேறு வீதங்களை (different rates) விதிக்கும். உதாரணமாக ஸ்மித்திற்கு $ $5 \cdot 05\frac{1}{4}$ என்னும் வீதத்தையும், ஜோன்சுக்கு $ $5 \cdot 05\frac{3}{8}$ என்னும் வீதத்தைம்ம் அறிவிக்கும் (quote)-

(forward sales) ஒன்றுக்கொன்று சமமாக அமைவது ஏதோ எதிர் பாராதவிதமாகத்தானிருக்கும். எந்தச் சமயத்திலும் ஒன்று மற்ற தைக் காட்டிலும் அதிகமானதாகவே இருக்கும். ஆனல், இவ்வாறு செலாவணிகளின் ஏற்ற இறக்கங்களால் ஏற்படும் விபத்தை (risk) யெல்லாம் தாங்குவது பாங்கினுடைய தொழிலல்ல. பாங்கானது இன்றைய வீதத்தில் தான் வாங்கியதைவிட அதிகமான அளவு முன்னேக்கிய டாலர்களை விற்றிருக்குமாயின், டாலரின் மாற்று மதிப்பு உயரும் பட்சத்தில் (a rise in the exchange value of the dollar) அதற்கு நஷ்டம் ஏற்படும். இதைப்போலவே பாங்கு நிறைய அளவு முன்னேக்கிய டாலர்களை வாங்கி வைத்திருக்குமாயின், டாலரின் மாற்று மதிப்பில் குறைவு (a fall in the dollar) ஏற்படும் பட்சத்தில் அதற்கு நஷ்டம் ஏற்படும். இவ்வாறு நேர்ந்தால், தன் 'நிலைமையைச் சீர்செய்ய' (to cover its position) பாங்கானது நடவடிக்கைகளை எடுக்கும். உதாரணமாக, அதன் இருப்புக் கணக்கின்படி, அது 1,000,000 மூன்று மாத முன்னேக்கிய டாலர்களை விற்பதற்கு ஒப்பந்தம் செய்திருந்தால், உடனடியாக அது $ 1,000,000 ஐ 'உடனடி' அங்காடியில் (spot market) வாங்கி, ஒப்பந்தம் முதிரும் வரையிலும் (till the contract matures) அந்த டாலர்களை நியூயார்க்கில் வைப்பாக (deposit) வைத்திருக்கும். இத்தொகையை நியூயார்க்கில் வைப்பாக வைத்தால், இதற்குச் சமமான தொகை லண்டனில் பயன்படுத்தப்பட்டால் (employed) என்ன வட்டி கிடைக்குமோ அதைவிடக் குறைவான வட்டியே அதற்குக் கிடைக்கு மாதலால், வட்டி நஷ்டம் ஏற்படலாம். அப்படி ஏற்படுமாயின், முன்னேக்கிய டாலர்களை விற்பனை செய்யும்போது அத்துடன் ஒரு கட்டணத்தையும் சேர்த்து வசூலிக்கும்—அதாவது முன்னேக்கிய டாலர்கள் வட்டம் உடையனவாக இருக்கும். ஆனல், வட்டி வீதங்கள் (interest rates) லண்டனைக் காட்டிலும் நியூயார்க்கில் அதிகமாக இருக்குமானல், அதிகமான வட்டியை பாங்கு ஈட்டும். இந்த அதிக வட்டியைப் பாங்கு பெறுவதால் அது முன்னேக்கிய டாலர்களை உடனடி டாலர்களைக் காட்டிலும் (spot dollars) மலிவாக விற்க முடிகிறது.

எனவே, உடனடி வீதங்களுக்கும் (spot rates) முன்னேக்கிய வீதங்களுக்கும் (forward rates) இடையேயுள்ள வேறுபாடு (divergence) இரு நாடுகளுக்கிடையேயுள்ள ஒப்பீடான வட்டி வீதங்களின் மட்டத்தைப் (relative level of interest rates) பொறுத்துள்ளது. அதிக வட்டி வீதங்களை யுடைய நாட்டின் செலாவணி உடனடி அங்காடியைக் காட்டிலும் (spot market) முன்னேக்கிய அங்காடியில்தான் (forward market) கழிவு உடையதாக இருக்கும் (will stand at a credit).

முன்னோக்கிய அயல்நாட்டுச் செலாவணி அங்காடி (forward exchange market) உண்மையான வாணிபம் (genuine trade) நிதிய பேரங்களில் ஏற்படும் விபத்தைச் (risk) 'சமாளிப்பதற்காகவே' பயன்படுத்தப்பட்டிருக்குமானால்—முன்னோக்கிய செலாவணி அங்காடியில் அத்தகைய எல்லா பேரங்களின் விபத்தும் சமாளிக்கப்பட்டதெனில் — முன்னோக்கிய செலாவணிகளின் மீதுள்ள வட்டம் (premiums) அல்லது கழிவு (discount) ஆகியவற்றின் தொகைகள், வெவ்வேறு பண அங்காடிகளுக்கிடையேயுள்ள வட்டி வேறுபாடுகளின் அளவிற்கே இருந்திருக்கும்; இந்த அளவிற்கு மேற்பட்டு இருந்திருக்க மாட்டா. ஆனால் உண்மையில் அவை அப்படி யிருக்கவில்லை. 1920-ஆம் ஆண்டை அடுத்த பத்தாண்டுகளிலும் (nineteen twenties) 1930-ஆம் ஆண்டை அடுத்த பத்தாண்டுகளிலும் (nineteen thirties) முன்னோக்கிய செலாவணிகள் பெரும்பாலும் யூகபேர வணிகர்களின் (speculators) கைகளில் பலியாயின. ஒரு செலாவணியின் மதிப்பிறக்கத்தில் யூக பேரம் நிகழ்த்துவதற்கு அச் செலாவணியை முன்னோக்கி விற்பது தான் மிக எளிதான முறையாகும். ஏனெனில், இத்தகையதொரு யூக பேரத்தில் யூகபேர வணிகர் தமது ஒப்பந்தம் முதிரும்வரையில் பணம் எதுவும் போட வேண்டியதில்லை—அவருடைய வேலையெல்லாம் பந்தயம் கட்டுவதாகத்தான் (bet) உள்ளது. இதற்கு மாறாக, மதிப்பு உயரக்கூடும் என்று எதிர்பார்க்கப்படுகிற ஒரு செலாவணி முன்னோக்கி வாங்கப்படும் (will be bought forward) இத்தகைய முன்னோக்கிய கொள்முதல் ஒரு தலைப்பட்ட தேவையை அல்லது அளிப்பை (இத்தகைய முன்னோக்கிய கொள்முதல் இல்லையெனில் இவைகள் ஏறக்குறைய சமமாகவே யிருக்கும்) ஏற்படுத்தும். மேலும், உண்மையான 'நஷ்டத் தடை' (hedge) ஒப்பந்தங்களைப் (genuine contracts) பெற்றுள்ளவர்களும், உடனடி வீதங்கள் (spot rates) தங்களுக்குச் சாதகமாக எதிர்காலத்தில் இருக்கும் என்று கருதினால், அத்தகைய நஷ்டத் தடை ஒப்பந்தங்களைச் செய்துகொள்ளமாட்டார்கள். வணிகர்களின் இத்தகைய செயலும் யூக பேரத்தினையே (speculations) யொக்கும். ஏனெனில் இவ்வாறு ஒப்பந்தங்களைச் செய்து கொள்வதினின்றும் விலகி நிற்கும் வணிகரின் செயலும் மாற்று வீதத்தின் மீது பந்தயம் கட்டும் யூக பேரத்தினையே ஒத்துள்ளது. அவ்வணிகரின் வாணிபம் யூகபேரத்தைச் சாராததாக இருக்கலாம்; அவ்வாணிபத்தில் உள்ள விபத்து அவ்வணிகருக்குச் சாதகமானதாகத் தோன்றினாலும் அல்லது பாதகமானதாகக் காணப்பட்டாலும், வணிகர் தாண்டக்கூடிய அவ்விபத்தைத் தாண்ட அவர் மறுப்பதே ஒரு யூக பேர நடவடிக்கையாகும்.

செலாவணிகள் (exchanges) இடர்ப்பாடான சூழ்நிலையில் இருக்கும்போதும் அவற்றில் யூகபேரம் அதிகமாக நடத்தப்படும் போதும், முன்னேக்கிய அயல்நாட்டுச் செலாவணி வீதங்கள் (forward exchange rates) உடனடி வீதங்களினின்றும் (spot rates) பெரிதும் வேறுபடுகின்றன. 1933-ஆம் ஆண்டின் இலையுதிர் காலத்தின்போது (autumn) உலகெங்கிலும் டாலரினது மதிப்புக் குறையும் என எதிர்பார்க்கப்பட்டபோது, மூன்றுமாத முன்னேக்கிய டாலர்கள் (three months forward dollars) பன்னிரெண்டு சதவீதம் கழிவு உடையனவாக இருந்தன; அப்போது அவைகளின் உடனடி வீதம் $ 5.05 க்கு 1 பவுண்டு என்ற வீதத்தில் இருந்தது. யூகபேர வணிகர்களின் குறுக்கீட்டால் (owing to the intervention of the speculators), டாலர்களைக் கழிவு வீதத்தில் பரிவர்த்தனை செய்ய வேண்டியுள்ளது. உதாரணமாக ஒருவர் டாலர்களைக் கொடுத்துவிட்டு மாற்றுகப் பவுண்டுகளைப் (ஐக்கிய அமெரிக்காவிற்கு கிரேட் பிரிட்டன் பண்டங்களை அனுப்பியதால் அல்லது ஐக்கிய அமெரிக்காவில் பிரிட்டன் செய்துள்ள முதலீடுகளினின்றும் கிடைக்கும் வட்டியை பிரிட்டனுக்குச் செலுத்த வேண்டியிருப்பதால் பவுண்டுகள் தேவைப்படுகின்றன) பெற விழையும் ஒருவர் அத்தகையதொரு பேரத்தில் நஷ்டத் தடை முறையைக் (hedge) கைக்கொள்ள விழைந்தால் தமது டாலர்களை ஆண்டொன்றுக்கு 9½ சதவீதத்திற்குச் சமமானதொரு கழிவு (discount) செய்து விற்பதன் மூலமே விழைவை நிறைவேற்றிக்கொள்ள முடியும்—இத்தகைய 9½ சதவீதம் கழிவு அதிகமானதொரு காப்புவட்டத்தை (insurance premium) அளிப்பதை யொத்து இருக்கிறது. இதன் காரணத்தால்தான், முன்னேக்கிய செலாவணி அங்காடி (forward exchange market) அளிக்கும் காப்பு முறையானது (insurance method) அது எப்போது மிகவும் அதிகமாகத் தேவைப்பட்டதோ அப்போதெல்லாம் செயற்படத் தவறியது. உண்மையில், போருக்கிடையேயுள்ள ஆண்டுகளில், இந்த முன்னேக்கிய அயல்நாட்டுச் செலாவணிகள் (forward exchanges) இன்னும் பிற வரையறைகளைக் கொண்டனவாகவும் இருந்தன. மேலும் இந்த அங்காடி எப்போதுமே 'குறுகலாக' (narrow) இருந்தது—அதாவது ஆறு அதி முக்கிய செலாவணிகளுக்கே சம்மதவிலை அறிவிப்புகள் (quotations) கிடைக்கக் கூடியவையாக இருந்தன. இச்செலாவணிகளில் பேரங்களை எப்போதும் நடத்திக்கொண்டிருப்பதும் சாத்தியப்படவில்லை. ஆகவே, பொதுவாக நோக்குமிடத்து, முன்னேக்கிய அயல்நாட்டுச் செலாவணிகள், ஏற்ற இறக்கங்களைக் கொண்ட மாற்று வீதங்களால் ஏற்படும் (fluctuating exchange rates) விபத்தை ஓரளவிற்கே குறைக்கக் கூடிய

சாதனமாகவும், சில சமயங்களில் விலை மிகுந்த சாதனமாகவும் இருந்தன வென்றே கூறவேண்டும்.

எனினும், இக்குறைபாடுகளை (deficiencies) முடிவானவைகளென நாம் கொள்ளக் கூடாது. அயல்நாட்டுச் செலாவணிகளில் மிக அதிகமான நிலைபேறற்ற நிலை (extreme instability) இல்லாத மற்ற காலங்களில் முன்னோக்கிய அயல்நாட்டுச் செலாவணிகள் அங்காடி வணிகர்களுக்குக் குறைந்த செலவில் கணிசமான பயனை அளிப்பதாகவே உள்ளன. மேலே குறிப்பிட்டுள்ள அதிகமான வட்டங்களும் (premiums) கழிவுகளும் (discounts) இயல்பான காலங்களில் இருப்பனவல்ல. இயல்பான காலங்களில் செலாவணிகளின் ஏற்ற இறக்கங்களின் விபத்திலிருந்து பாதுகாத்துக் கொள்ளும் காப்புறுதிச் செலவு (cost of insurance) ஆண்டொன்றுக்கு 1 சதவீதம் அல்லது 2 சதவீதம்தான் இருக்கும்.

# கலைச்சொல் அகராதி

## தமிழ் - ஆங்கிலம்

| | |
|---|---|
| அரசுரிமை | Sovereignty |
| அறப்பணி | Charity |
| அதிகவட்டி வாங்குபவன் (அ) கடுவட்டி வாங்குபவன் | Usurer |
| அழைப்புக் கடன் | Money at call |
| அங்கத்தினர் பாங்குகள் | Member Banks |
| அளிப்புக் கூற்று | Offer |
| அங்காடி மதிப்பு | Market value |
| அங்காடியைத் தவறாக நடத்திச் செல்லுதல் | Improperly rigging the market |
| அறிவியல் | Science |
| அலகு | Unit |
| அமித·உற்பத்தி | Over-production |
| அனுமதி உத்திரவுகள் | Licensing orders |
| அயல்நாட்டுச் செலாவணிகள் | Foreign currencies |
| அயல்நாட்டு மாற்றுகள் | Foreign exchanges |
| அயல்நாட்டு மாற்று பேரம் | Foreign exchange transaction |
| அயல்நாட்டு மாற்று அங்காடி | Foreign exchange market |
| அயல்நாட்டு விலைப்பட்டியல் | Foreign exchange quotation |
| அரும்பணம்(அ)சுடும் பணம் | Hot money |
| அகமதிப்பு | Internal value |
| அர்சாங்கக் கொடைகள் | bounties |
| அடையாளங்கள் | Earmarks |
| அரசாங்க வீதம் | Official rate |
| அயன் ரொக்கம் | Hard cash |
| அதிகப்பற்று | Over draft |
| அசேமிப்பவர்கள் | Dissavers |

| | |
|---|---|
| அளவு ஆய்வு | Survey |
| ஆயுள் காப்புறுதிச் சீட்டுகள் | Life Insurance Policies |
| ஆண்டுத்தொகை | Annuity |
| ஆக்கக்கடன் | Living Debt |
| ஆலை | Factory |
| ஆண்டு வருவாய்தரும் மொத்த உடமைகள்(அ)கான்சல்கள் | Consolidated annuities (or) consols |
| ஆய்ந்துணர்தல் | Diagnosis |
| ஆயுள் காப்புறுதி வட்டங்கள் | Life Insurance Premiums |
| ஆட்குறைப்பு | Retrenchment |
| ஆளுநர்கள் | Governors |
| இரட்டைமாற்று முறை | Double exchange |
| இனங்கள் | Denominations |
| இருப்பறை | Vault |
| இங்கிலாந்து பாங்கு | Bank of England |
| இரசவாதிகள் | Alchemists |
| இருப்புநிலைக் குறிப்பு | Balance Sheet |
| இலாப ஈவு (அ) இலாப ஈவுத் தொகை (அ) ஈவு | Dividend |
| இணக்கமான | Flexible |
| இறுதிக்கடன் ஈவோன் | Lender of the last resort |
| இடையாள் | Intermediary |
| இயக்கி | Motor |
| இடைவெளி | Gap |
| இருஉலோகமுறை | Bimetallism |
| உறுபொருள் | Substance |
| உணர்த்துதல் | Represent |
| உள்ளியல்புகள் | Potentialities |
| உணவு விடுதி | Hotel |
| உள்மதிப்பு | Internal value |
| உட்கிடை | Content |
| உயர்ந்தபட்சம் | Maximums |
| உண்மைச் செல்வம் | Real wealth |
| உத்திரவாதமானவை | Gilt-edged |
| உபரித்தொகை | Surplus amount |
| உள்நாட்டுத் தொழில் | Domestic Industry |
| உயரம் உணர்த்தும் கோடு | Datum line |
| உற்பத்தியாளர் | Producer |
| உள்ளாட்சி மன்றங்கள் | Local authorities |
| உள்நாட்டுப் பொன்திட்டம் | Domestic Gold Standard |

| | |
|---|---|
| உபரி நிலுவைகள் | Surplus balances |
| உடனடி பேரங்கள் | 'On the spot' transactions |
| உடனடி மாற்றங்காடி | Spot exchange market |
| உடனடி மாற்று வீதம் | Spot rate of exchange |
| ஊதியம் | Reward |
| ஊசலி | Pendulum |
| ஊக்கி | Stimulus (or) incentive |
| ஊசலாட்டங்கள் | Oscillations |
| எடுகோள்கள் | Assumptions |
| எதிர் நிலை | Negative |
| எதிர்விளைவுகள் | Reactions |
| எதிர்பாராமல் வரக்கூடிய இலாபங்கள் | Wind falls |
| எவ்வித மாற்றமும் அற்றநிலை | Static |
| எதிர் நடவடிக்கைகள் | County measures |
| எழுதப்பெற்றவர் | Drawer |
| எதிர்நிலை வாணிபச் செலுத்து நிலை | Negative balance of trade |
| ஏற்றுக்கொள்ளுதல் | Honouring |
| ஏற்பு அகம் | Acceptance-house |
| ஏற்ற இறக்கங்கள் | Fluctuations |
| ஏறுமுகம் | Rising phase |
| ஐ. ஓ. யூ. | I O U |
| ஐக்கிய ரிசர்வு பாங்கு | Federal Reserve Bank |
| ஐக்கியநாடுகளின் உதவி மறு சீரமைப்புதவி செயலாட்சி | United Nations Relief and Rehabilitation Administration |
| ஒற்றைமாற்று முறை | Single exchange |
| ஒத்திவைப்பு | Deference |
| ஒப்பந்தம் | Contract |
| ஒத்தியங்கும் நிகழ்ச்சி | Coincidence |
| ஒழுங்குபடுத்தும் கருவி | Governor |
| ஒழுங்குபடுத்தி | Governing factor |
| ஒப்பீட்டு மதிப்பு | Relative value |
| ஒரேவிதமான வாங்குவோர் அங்காடிகள் | Universal buyers' market |
| ஒருபுறச் செலுத்துகள் | Unilateral payments |
| ஒருபுற மாற்றங்கள் | Unilateral transfers |
| ஓய்வுச் சம்பளம் | Pension |
| ஃபிரெஞ்சு | French |
| ஃபிராங்கு | Franc |

| | |
|---|---|
| கணக்களவு | Unit of account |
| கடன்கடிதம் | Letter of credit |
| கட்டுப்பாட்டு அதிகாரி | Comptroller |
| கடன்வாக்குறுதி | I O U |
| கழிவுகள் | Discounts |
| கழிவு அங்காடி | Discount market |
| கருவூல உண்டியல்கள் | Treasury bills |
| கடன் அதிகரிப்பு | Expansion of credit |
| கடன் நிருவாகக் கட்டுப்பாடு | Credit control system |
| கழிவகம் | Discount house |
| கடன் அளவு | Volume of credit |
| கருவூல வேந்தர் | Chancellor of the Exchequer |
| கணிதச்சூனியங்கள் | Arithmetical ciphers |
| கண்டிப்பான விலைக்கட்டுப்பாடு | Rigid price control |
| கருப்பொருள்கள் | Essential elements |
| கருவூல வைப்பு வரவுகள் | Treasury deposit receipts |
| கடன்ஈவோன் (அ) பற்றுளர் | Creditor |
| கடுவட்டி | Usury |
| கணியக்கோட்பாடு | Quantity theory |
| கடன்வழிப்பிறந்த பணம் | Debt loan money |
| கடைசல் பொறி | Lathe |
| கட்டாயசேமிப்பு | Forced saving |
| கட்டாய விலக்கம் | Forced abstention |
| கட்டாய ஆட்சேர்ப்பு | Conscription |
| கருவூலம் | Treasury |
| கலவை உலோகமுறை | Symetallism |
| கடனைத் திருப்பித்தரும் கடனாளிகள் | Debtor-repayers |
| கணக்கை நேர் செய்தல் | Balancing the account |
| காகிதப்பணம் | Paper money |
| காவல்துறை | Police |
| காப்புகள் | Reserves |
| காப்புவாயில் | Safety valve |
| காப்புறுதிச் செலவு | Cost of insurance |
| கிடைப்பருமை | Scarcity |
| கினி | Guinea |
| குறிநாணயங்கள் | Token coins |
| குறைந்தபட்சம் | Minimum |
| குறுங்காலக்கடன் | Money at short notice |
| குறுந்தவணைப்பத்திரங்கள் | Short bonds |

| | |
|---|---|
| குறியீட்டெண்கள் | Index numbers |
| குத்துயரங்கள் | Altitudes |
| குத்தகை | Rent |
| குறுக்கீடு | Intervention |
| குவிதல் முறை | Cumulative process |
| குறை-நுகர்ச்சியாளர் | Under-consumptionist |
| குறிவார்த்தை | Code word |
| குறுக்குவீதம் | Cross rate |
| குறைமதிப்பு | Under-valuation |
| கூட்டுப்பங்கு பாங்குகள் | Joint Stock Banks |
| கூலி | Wage |
| கொணர்பவன் | Bearer |
| கோட்பாடு | Theory |
| கையில் காசு, கப்பலில் பண்டம் | Cash and carry terms |
| சமூகநீதி | Social Justice |
| சக்திவாய்ந்த காரணி | Dominant factor |
| சரிசமனமான | Balanced |
| சம்மதம் | Concurrence |
| சமநிலைமாற்றுவீதம் | Equilibrium rate of exchange |
| சபை | Board |
| சமன்கேடான | Unequal |
| சந்ததி | Descent |
| சதவீதம் | Per cent |
| சரிநுட்பம் | Precision |
| சாத்தியமானவைகள் | Possibilities |
| சிருஷ்டித்தல் | Create |
| சிறிய உறுப்புப்பகுதி | Fraction |
| சிறுங்காலக் கடன் | Floating debt |
| சிக்கனம் | Thrift |
| சித்தாந்தம் | Dogma |
| சீர்குலைவு | Dislocation |
| சுபிட்சம் | Prosperity |
| சுருள்வில் | Spring |
| செய்பொருள் உற்பத்தியாளர்கள் | Manufacturers |
| செலவு | Cost |
| செலாவணி | Currency |
| செலாவணியின் கணியம் | Quantity of currency |
| செயல்துறை இயக்குநர்கள் | Executive Directors |
| செலுத்தும் வாக்குறுதி | 'Promise to pay' |
| செக்கு | Cheque |

| | |
|---|---|
| செக்குத் தீர்வகம் | Clearing house |
| செலுத்துகள் | Payments |
| செல்வத்தைக் குடிப்பவர் | Liquifier of wealth |
| செயல் வகையான | Practical |
| செங்குத்தான அச்சு | Vertical axis |
| செலாவணிகளின் மதிப்பு | Value of currencies |
| செலவு ஒடுக்கம் | Stinting |
| சேமிப்பு | Saving |
| சேமிப்பு நாட்டம் | Propensity to save |
| சொத்துகள் | Assets |
| தட்டைப் பணம் | Flat money |
| தவணை வைப்புக்கள் | Time deposits |
| தன்னாட்சி உரிமையுள்ள | Autonomous |
| தரகர்கள் | Brokers |
| தரப்படுத்தப்பட்ட மதிப்புகள் | Standard values |
| தன் முனைப்பாக | Arbitrarily |
| தனிப்பட்டியல்கள் | Special lists |
| தத்துவம் | Doctrine |
| தன்னிச்சையாக | Voluntary |
| தந்தி மாற்றங்கள் | Telegraphic transfers |
| தடையற்ற அயல்நாட்டு மாற்றங்காடி | Free foreign exchange market |
| தடை | Restriction |
| தலையீடு | Intervention |
| தடைசெய்யப்பட்ட | Blocked |
| தவணைக்கொள்முறை | Lend-lease |
| தவணைகடந்த | Over due |
| தன்னியக்கமான | Automatic |
| தடையிலாவாணிபநாடு | Free trade nation |
| தாள்பணம் | Paper money |
| தாங்கப்பட்ட | Backed |
| தீர்வுபாக்கிகள் | Clearing differences |
| தீர்வைகள் | Customs |
| தூயவாடகை | Pure rent |
| தொழிற்பகுப்பு | Division of labour |
| தொகுப்புப்பங்குகள் | Stocks |
| தொழில்நிதியக் கார்ப்பரேஷன் | The Finance Corporatlon for Industries |
| தொழில்வாணிபக் கார்ப்பரேஷன் | The Industrial and Commercial Financial Corporation |

| | |
|---|---|
| **தொழில்வினைஞன்** | Craftsman |
| தொடர் முடிவு | Corollary |
| தொழிற்சங்க இயக்கம் | Trade Union Movement |
| தொழில்வரிக் கட்டணங்கள் | Professional fees |
| தொழிற்பயன் சிறப்பு | Technical excellence |
| தோராயமாக | Approximate |
| நடப்புக் கணக்கு | Current account |
| நச்சுச் சுருள் | Vicious spiral |
| நம்பிக்கை வெளியீடு | Fiduciary issue |
| நாணய முறை | Coinage |
| நாட்டுரிமையாக்குதல் | Nationalization |
| நாட்டம் | Propensity |
| நாட்டு வருமானம் | National income |
| நாணயச்சாலை சமன்பாடு | Mint parity |
| நாள் தவணைக்கடன் | Day-to-day loan |
| நிறைவான | Sound |
| நிதியக் கொள்கைகள் | Financial practices |
| நிலைக்களன் | Store |
| நிகர நிலுவை | Net balance |
| நிதிய நடவடிக்கைகள் | Financial operations |
| நிறைவுப்பணம் | Full money |
| நிலையான விலை | Standard price |
| நிலைப்படுத்தல் | Pegging |
| நிலைபேறு | Stability |
| நீர்மை | Liquidity |
| நீண்டகாலப்போக்குகள் | Long term movements |
| நுகர்ச்சி | Consumption |
| நெருக்கடி | Crisis |
| நெருங்கியபணம் | Near-money |
| நெடுவாழ்வுப் பண்டங்கள் | Durable goods |
| நெகிழ்வற்ற | Inelastic |
| நேரடியான பணவீக்கம் | Outright inflation |
| நேர்நிலை | Positive |
| நேர்நிலை சாதகவாணிபச் செலுத்துநிலை | Positive balancc of trade |
| நோட்டுரிமை பாங்கு | Bank of issue |
| பணத்தின் தன்மை | Nature of money |
| பணத் தோற்றம் | The invention of money |
| பணக் கணியம் | Quantity of money |
| பவுண்டு | Pound |

| | |
|---|---|
| பயணர் செக்கு | **Traveller's cheque** |
| பண நிலையின்மை | Monetary instability |
| பங்குமாற்றச் சந்தையின் பத்திரங்கள் | Stock exchange securities |
| பரிசுக் கூப்பன்கள் | Gift Coupons |
| பண அங்காடி | Money market |
| பகிர்வு | Distribution |
| பங்குகள் | Shares |
| பங்கு–வர்த்தகர் | Stock-jobber |
| பணமுடை | Tight money |
| பணத்தின் மதிப்பு | Value of money |
| பணப் பொருளாதாரம் | Monetary economics |
| பணவீக்கம் | Inflation |
| பரிவர்த்தனைச் சமன்பாடு | Equation of exchange |
| பதிலாண்மையாளர் | Agent |
| பதக்கம் | Medal |
| பங்குசெலுத்தும் ஓய்வு சம்பளத் திட்டம் | Contributory pension plans |
| பயணர்கள் | Travellers |
| பங்களவுகள் | Quotas |
| பணநெருக்கடி | Currency crisis |
| பருப்பொருளியலான கட்டுப்பாடுகள் | Physical controls |
| பணப்பெருக்கக் கைக்கோள் | Policy of extension |
| பன்னாட்டுப்பணநிதி | International Monetary Fund |
| பன்னாட்டு வாணிப நிறுவனம் | International Trade Organization |
| பணவாட்டம்,(அ)பணவடிப்பு | Deflation |
| பணவீக்க நீக்கம் | Disinflation |
| பற்றுக்குறை | Deficit |
| பன்னாட்டுப் பொன்திட்டம் | International Gold Standard |
| பன்னாட்டு நிதியத் தொகுப்பு | International consortium |
| பன்னாட்டுத் தீர்வக ஒன்றிப்பு | International Clearance Union |
| பன்னாட்டுப் பொருளாதாரச் செலுத்துகள் | International economic payments |
| பாளம் | Bar |
| பாங்குச் சட்டம் | Bank act |
| பாங்குப் பணம் | Bank money |
| பாதுகாப்பு வைப்பு | Safe deposit |
| பாங்கர்களின் பாங்கு | Banker's bank |
| பாரக் கடன் | Dead weight debt |

| | |
|---|---|
| பாங்குப் பீதி | Bank Panic |
| பிரதிப்பணம் | Substitute money |
| பிரிட்டிஷ் அரசாங்கக் கான்சல்கள் | British Government consols |
| பிரெட்டன் உட்ஸ் மாநாடு | Bretton woods |
| பின்னிணைப்பு | Appendix |
| பீதி | Panic |
| புனிதச்சட்டம் | Canon law |
| புழக்கத்திலிருக்கும் பணம் | Circulating money |
| புறக்கட்டுப்பாடு | External limit |
| புழக்கவேகம் | Velocity of circulation |
| புனர் அமைப்பும் வளர்ச்சிக்குமான பன்னாட்டு பாங்கு | International Bank for Reconstruction and development |
| பூரணவேலை | Full employment |
| பூரிப்புக் காலங்கள் | Boom periods |
| பெருக்கி | Multiplier |
| பேற்றுரிமைச் சீட்டு(அ)டிராஃப்டு | Draft |
| பேரம் | Transaction |
| பேருரிமை | Privilege |
| பொது அளவை | Standard measure |
| பொறித்துறை இயல்பு | Mechanics |
| பொற்சான்றிதழ்கள் | Gold certificates |
| பொதுவசதிக்கான நிறுவனங்கள் | Public utilities |
| பொருளியல் அறிஞர்கள் | Economists |
| பொதுநலப் பணிகள் | Social services |
| பொருளாதார நலன்கள் | Economic advantages |
| பொற்சமன் திட்டம் | Gold parity standard |
| பொன் ஏற்றுமதிநிலை | Gold export point |
| பொன் இறக்குமதிநிலை | Gold import point |
| பொருளாதாரக் கட்டுப்பாடு | Economics control |
| பொறுப்புக்கள் | Liabilities |
| போர்ப் பொருளாதாரம் | Economics of war |
| போக்கு | Tendency |
| போர் நஷ்டஈடு | Reparations |
| போர்வழிக்காரணங்கள் | Strategic reasons |
| போரில் ஈடுபட்ட நாடுகள் | Belligerent countries |
| மதிப்பு | Value |
| மரபு வழக்கம் | Convention |
| மதிப்பு நிலைக்களன் | Store of value |

| | |
|---|---|
| மந்தம் | Depression |
| மரபுநெறியைப் பின்பற்றும் பொருளாதார நிபுணர்கள் | Orthodox economists |
| மறு பகிர்வு | Redistribution |
| மலிவுப்பணம் | Cheap money |
| மாற்றுமத்திமம் | Medium of exchange |
| மாற்று | Exchange |
| மாற்றுவழி | Alternative |
| மாற்றுவீதம் | Rate of exchange |
| மாற்றுகளின் நிலைபேறு | Exchange stability |
| மாற்றுநிருவாகமும் கட்டுப்பாடும் | Exchange management and control |
| மாற்றுத் தீர்வுகள் | Exchange clearings |
| மாற்றுக் கட்டுப்பாடு | Exchange control |
| மாற்றுசெலுத்து ஒப்பந்தம் | Exchange payment agreement |
| மாற்றுச்சமன்கணக்கு | Exchange equilibrium account |
| மிகைமதிப்பு | Over-valuation |
| மீட்சி | Redumption |
| மீட்சிவருவாய் | Redumption yield |
| மீட்சிப்பணவீக்கம் | Reflation |
| முற்றுருப்பெற்ற | Full-fledged |
| முன்பணம் | Advance |
| முதல்தர உண்டியல்கள் | Prime bills |
| முடுக்கி | Accelerator |
| முட்டுக்கட்டை | Brake |
| முன்னோக்கிய அயல்நாட்டுச் செலாவணி | Forward exchange |
| முன்னறிவிப்பாளர் | Harbinger |
| முதிர்ச்சியடையா கடன் பெறு கடனாளிகள் | Immature debtor-borrowers |
| முதிர்ச்சியடையா கடன் கொடுக்கும் கடன் ஈவோர் | Immature creditor-lenders |
| முதிர்ச்சியடைந்த கடன் கொடுக்கும் கடன் ஈவோர் | Mature creditor–lenders |
| முதலீடுகள் | Investments |
| முழுமையான | Full-grown |
| முகப்பு மதிப்பு | Par value |
| மூலதனச் சாதனங்கள் | Capital resources |
| மூன்றும் மூலம் | Cube root |
| மூலதனம் | Capital |
| மூலப்பொருள்கள் | Materials |

